# தமிழ் இலக்கிய வரலாறு

## பத்தாம் நூற்றாண்டு

மு. அருணாசலம்

**The PARKAR**

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்

இராயப்பேட்டை நெடுஞ்சாலை

இராயப்பேட்டை

சென்னை - 14.

தமிழ் இலக்கிய வரலாறு

பத்தாம் நூற்றாண்டு

மு. அருணாசலம்



முதற் பதிப்பு : பங்குனி 1972.
திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.
பக்கம் : xliv + 484 = 528.

பதிப்பு :
தி பார்க்கர்
293, அகமது வணிக வளாகம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

விலை : 383. 00

வடிவமைப்பு :
வே. கருணாநிதி

அச்சிட்டோர்:
தி பார்க்கர்
293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.

# முகவுரை

திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கையைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னையில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர்களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர்பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.

'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன்றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதிகள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர்களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன்னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.

திருச்சிற்றம்பலம். **அ. சிதம்பரநாதன்**
15. 11. 2004.

## நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவனத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ. சரவணன், ஜெயகுமார், தனசேகர், பால சுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல் விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையதுஅலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

## பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படையிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், இந்நூல் 10ஆம் நூற்றாண்டு வரலாறு.

இதன் முதல் பதிப்பு 1972ஆம் ஆண்டில் வெளிவந்தது. இற்றைக்கு முப்பத்து மூன்று ஆண்டுகள் கழித்து திருத்தப்பட்ட இவ்விரண்டாம் பதிப்பு இப்போது வெளிவருகிறது. ஆசிரியர் வெளியிட்ட தமிழ் இலக்கிய வரலாற்றுத் தொகுதிகளில் ஐந்தாவது தொகுதியாக இந்நூல் வெளிவந்தது. 1940ஆம் ஆண்டில் ஆசிரியரிடம் கருக்கொண்ட இவ்வரலாற்றுத் தொகுப்புநூல் உருவாக்கச் சிந்தனை, 1969ஆம் ஆண்டில் 14ஆம் நூற்றாண்டு வரலாற்றை வெளியிட்டதோடு தொடங்கி, 1977ஆம் ஆண்டில் 16ஆம் நூற்றாண்டு வரலாறு, பாகம் - 1 வெளியிட்டதோடு நின்று போனது. அதுவரை பதினொரு தொகுதிகள் வெளிவந்தன.

மேற்படி தொகுதிகளில் 1969ஆம் ஆண்டில் 14ஆம் நூற்றாண்டு, 15ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதிகளும், 1970ஆம் ஆண்டில் 13ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1971ஆம் ஆண்டில் 11ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1972ஆம் ஆண்டில் 10ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1973ஆம் ஆண்டில் 12ஆம் நூற்றாண்டு பாகம்-1, பாகம்-2 ஆகிய வரலாற்றுத் தொகுதிகளும், 1975ஆம் ஆண்டில் 9ஆம் நூற்றாண்டு பாகம்-1, 16ஆம் நூற்றாண்டு பாகம்-2 ஆகிய வரலாற்றுத் தொகுதிகளும், 1976ஆம் ஆண்டில் 16ஆம் நூற்றாண்டு பாகம்-3 வரலாற்றுத் தொகுதியும், 1977ஆம் ஆண்டில் 16ஆம் நூற்றாண்டு பாகம்-1 வரலாற்றுத் தொகுதியும் காந்தி வித்தியாலயம் பதிப்பாக வெளிவந்தன.

1990ஆம் ஆண்டில் 'நம்மாழ்வார்' என்ற பெயரில் ஒரு நூலும் 'ஸ்ரீ குமர குருபர சுவாமிகள்' என்ற பெயரில் ஒரு நூலும் ஆசிரியரால் வெளியிடப்பட்டன. இவை இரண்டின் முன்னுரையிலும் இவை முறையே 9ஆம் நூற்றாண்டு வரலாற்றின் இரண்டாம் பாகத்தின் ஒரு பகுதி என்றும் 17ஆம் நூற்றாண்டு வரலாற்

றின் முதல் பாகத்தின் ஒரு பகுதி என்றும் ஆசிரியர் குறித்துள்ளார். இதன் அடிப்படையில் இவற்றை இத்திருத்தப்பட்ட வெளி யீட்டுத் தொகுப்பில் 'நம்மாழ்வார்' 9ஆம் நூற்றாண்டின் இரண் டாம் பாகமாகவும் 'ஸ்ரீ குமர குருபரர்' 17ஆம் நூற்றாண்டின் முதல் பாகமாகவும் சேர்க்கப்பட்டுள்ளது.

இவ்வரலாற்றுத் தொகுதிகள் மொத்தம் 14 நூல்களாக வெளிவருகின்றன. ஆசிரியர் வெளியிட்டவை 11. நாம் புதிதாகச் சேர்த்தவை 3. இவற்றுள் 14வது தொகுதியானது மேற்படி நூல் களில் உள்ள வரலாற்று அட்டவணைகள் முன்னுரைகளுடன் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன.

அவரால் எழுதி வெளியிடப்பட்ட இலக்கிய வரலாற்றுத் தொகுதிகள் அனைத்தும் பக்கத்துக்குப் பக்கம் வெள்ளைத் தாள் இடையிட்டுக் கட்டமைப்புச் செய்யப்பட்ட ஒரு தொகுப்பு அவரது நூலகத்தில் காணப்பட்டது. இத்தொகுதிகளில் பல புதிய செய்திகளும் ஆங்காங்கே திருத்தங்களும் ஆசிரியரால் குறித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றை ஒவ்வொரு தொகுதி யிலும் சேர்த்தும் திருத்தியும் முறைப்படுத்தியுள்ளோம்.

இத்தொகுதியில் பிற்சேர்க்கையாக இடம்பெற்ற செய்தி கள் உரிய இடங்களில் சேர்த்து முறைப்படுத்தப்பட்டுள்ளன.

தன் தந்தையாரின் இவ்விலக்கியப் பணியை மீண்டும் தமிழ் மக்கள் மத்தியில் வெளிக்கொணர எமக்கு அனுமதியளித்து, தனது வீட்டில் தங்கவைத்து எம்மை ஊக்கப்படுத்தியவர் அவர் மகனார்; உணவளித்து எம்மை உபசரித்தவர் அவர் மருமகளார்; இவர்கள் மிகுந்த போற்றுதலுக்கு உரியவர்கள்.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செல விட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடு கொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக் குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படை யில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

சென்னை
25. 12. 2005.

வே. கருணாநிதி

# முகவுரை

திருவும்மெய்ப் பொருளும் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்கள்என் றெண்ணி,
ஒருவரை மதியாது உறாமைகள் செய்து
ஊடியும் உறைப்பனாய்த் திரிவேன்:
முருகலர் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய்! வாயினால் உன்னைப்
பரவிடும் அடியார் படுதுயர் களையாய்,
பாசுபதா! பரஞ்சுடரே!

—சுந்தரர்

இப்பத்தாம் நூற்றாண்டின் தமிழ் இலக்கிய வரலாறானது கி. பி. 901 – 1000க்குள் தோன்றிய தமிழ் நூல்களை ஆராய்கிறது. இது எமது வரலாற்று நூல்களில் ஐந்தாவது புத்தகமாகும். முன்னமே 11, 13, 14, 15 நூற்றாண்டு வரலாறுகள் வெளியாகியுள்ளன. இதை அடுத்து 12ஆம் நூற்றாண்டின் வரலாறு உடன் வெளியாகும். இவ்வரலாற்று நூல்களின் அமைப்பைக் குறித்த ஒரு விளக்கம் எமது 11ஆம் நூற்றாண்டு வரலாற்று முகவுரையின் தொடக்கத்தில் காணப் பெறும்.

## இந்நூற்றாண்டு வரலாறு

இந்த நூலும் முன்பு வெளியாகிய நான்கு நூல்களின் அமைப்பையே உடையது. நூலாசிரியர் பற்றிய இலக்கிய வழக்காறுகள், அவருடைய வாழ்க்கைச் சரித்திரம், நூல் ஆராய்ச்சி, காலவரையறை என்ற பொருள்களை இயன்ற வரை கூறுவதாய் அமைந்துள்ளது. காலத்தில் பின் நோக்கிச் செல்லச் செல்ல, நூலின் காலத்தை

அறிவதற்கான சான்றுகள் கிடைப்பதில்லை. எந்த வளர்ச்சியை அளப்பதாயிருந்தாலும்–மொழியோ, சமயமோ, வாழ்க்கைத் தத்துவமோ, இலக்கண அறிவோ, எதுவாயினும் – கால உணர்வோடு செய்தால்தான் அது உண்மைக்குப் பொருந்துவதாயிருக்கும்; ஆதலால், காலவரையறை இந் நூல்களில் முக்கியமான ஓர் ஆராய்ச்சிப் பொருளாய் இருக்கும்.

நூற் பிரிவுகளும் தலைப்புக்களும் முன் வெளிவந்த நூல்களை ஒத்தே அமைத்திருக்கிறோம். இந்த அத்தியாயப் பாகுபாடு, ஏழாம் நூற்றுண்டு தொடங்கிப் பதினைந்தாம் நூற்றுண்டு முடிய உள்ள எல்லா வரலாறுகளுக்கும் இயல்பான பொருத்தமுடையதாய்த் தெரிகிறது. இலக்கியம், இலக்கணம், உரை, சைவம், வைணவம், சைனம், பிரபந்தம், பிறவகை என்ற தலைப்புக்களில் நூல் அமைந் திருக்கும். வரலாறு ஆராயப் பெறுகிற ஆசிரியர்களின் தொகை இங்கு 35க்கு மேல் உள்ளது. இவர்களில், வரலாறு அறிந்த பெயர்கள் மிகவும் குறைவு. சூளாமணி, பிங்கல நிகண்டு முதலிய நூல்களின் பெயரும் ஆசிரியர் பெயரும் நன்கு தெரிந்திருந்த போதிலும், வ்ரலாற்று விளக்கம்இல்லை. அதேபோலத்தான் இங்குக் குறிப்பிடுகின்ற திருமுறை ஆசிரியர் பத்துப் பேருடைய நூல்கள் விளக்கமாகத் தெரிந்திருந்த போதிலும்கூட, அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகள் தெரியவில்லை; தெரிந்தாலும் மிகவும் குழப்பமாகவே உள்ளன. இயன்ற வரையில் இங்கு அவற்றை எல்லாம் தெளிவுபடுத்தியிருக்கிறோம்; முரண்பாடுகளையும், போலிகளையும் செப்பம் செய்ய முயன் றிருக்கிறோம்.

அத்தியாயப் பாகுபாடு இந்த நூலில் உள்ளபடி தான் இருக்க வேண்டும் என்பது இல்லை. வேறு பல வகையாலும்

பாகுபாடு செய்ய முடியும். இருப்பினும், யாம் கொண்ட பாகுபாடு பலவிதத்தில் பயனுடையதாய் இருந்திருக்கிறது. ஆகவே, தொடர்ந்து அவற்றையே இங்கும் கொள்கிறோம். இலக்கியம் என்று பிறர் கருதத் தயங்கும் நூல்களைப் பிற வகை இலக்கியம் என்ற அத்தியாயத்தில் கூறுகிறோம். இந்நூற்றாண்டு தொடங்கிப் பதினெட்டாம் நூற்றாண்டு முடிய இவ்வகை இலக்கியத் தோற்றம் பற்றிய ஓர் அட்டவணையையும் அதன் இறுதியில் தந்திருக்கிறோம். 11ஆம் நூற்றாண்டு போலவே இங்கும் இக்காலத்து உரை நடைக்கு எடுத்துக்காட்டுக்களை உரைகளிலிருந்தும், கல் வெட்டுக்களிலிருந்தும் எடுத்து ஒரு தனி அத்தியாயத்தில் தந்திருக்கிறோம்.

## இலக்கிய விமரிசனம் (திறனாய்வு)

இங்கு நாம் இலக்கிய ஆராய்ச்சி செய்கிறோம். சமயத் துறையில் தோத்திர சாத்திரம் செய்தோர் வரலாற்றையும், அவர் பாடலையும் சீர்தூக்கிப் பார்க்கிறோம். விருப்பு வெறுப்போடு எதையும் பார்க்கவில்லை. கவிதையின் இயல்புகளை, எல்லோரும் பொதுவாகக் கருத்தில் கொண் டுள்ள நூலமைதி என்ற ஒரு துலாக்கோலை வைத்து அதில் எடை போட்டுப் பார்க்கிறோம்; குறை காணும்போது குறை நிகழ்வதற்கான சூழ்நிலைகளையும், வரலாறுகளையும் குறிப்பிட முயல்கிறோம்; அவ்வளவே. பாடல் பற்றிய உயர்வு தாழ்வு சொல்லுகிறோமென்றால், ஒரு சமயத்தை உயர்த்தினோம் அல்லது மற்றொன்றைத் தாழ்த்தினோம் என்பது பொரு ளாகாது; அது எமது நோக்கமும் அன்று. நாம் இங்கு சமய ஆராய்ச்சி செய்யவில்லை.

இலக்கிய வரலாறு என்பது வெறும் நூல்களின் பட்டியல் அல்லது ஆசிரியர் பட்டியல் என்பதாக மட்டும் இருந்தால் பயனில்லை. திறனாய்வு என்று இக்காலத்தார்

சொல்கின்ற இலக்கிய விமரிசனமும் ஏற்ற பெற்றி செய்தால் தான் வரலாற்றறிவு பூர்த்தியாகும், அதற்குப் பொருளும் உண்டு. பொதுவாக நூல்களைப் பற்றிக் கற்ருேரிடை நிலவும் கருத்து ஒன்று, நுணுகி ஆராயும் போது அது வேருதலும் கூடும். வேருதலுக்கு அடிப்படைச் சான்றுகள் ஆங்காங்குச் சொல்லப்படுகின்றன. அவற்றை அச்சான்றுகள் கொண்டு மதிப்பிட வேண்டுமேயன்றி, விருப்பு வெறுப்பு என்று மட்டும் எண்ணுவது பொருந்தாது.

திறஞய்வு என்பது எழுத்து வடிவத்தில் தமிழ் இலக்கிய உலகில் மிகவும் புதியது. இதுவும் பலதிறப்பட்டது. காலம் சென்ற டி.கே.சிதம்பரநாத முதலியார் அவர்கள் அருங்கலை அனுபவம் என்ற ஒப்பற்ற ஒரே துலாக்கோல் கொண்டு அனைத்தையும் அளந்தார். சுவையொன்றே அவர் நோக்கு. அவர் இத்தகைய சுவையனுபவமே கவிதையின் பெரும்பயன் என்ற கொள்கையுடையவர்; கவிதை மட்டுமல்ல; இசையின் பயனும் அதுவே என்பது அவர் கருத்து. கேட்போருக்கும் இச்சுவையனுபவத்தை அவர் ஊட்டி வந்தார். அவர் காலத்தில் அவர் பெரிதும் போற்றிய பேரறிஞரும் பலர், போற்ருதோரும் பலர். இலக்கிய உணர்வுக்கு அவர் ஒப்பற்ற தொண்டு செய்தார் என்பது மறுக்க முடியாத உண்மை. கவிதையல்ல என்று சிலவற்றை அவர் ஒதுக்கிய காரணத்தால் அவர் இலக்கியத்துக்குப் பாதகம் செய்தார் என்று கூறிஞேரும் உளர். கருத்து வேற்றுமை எப்படி இருக்கக் கூடும் என்பதற்காகவே இதை எடுத்துக் காட்டிஞேம், இவ்விதமே இந்நூலுள்ளும் பொதுவாக வழங்கும் கருத்துக்களுக்கு மாருன கருத்துக்களும் சில இடங்களில் காணப்படும். அவை ஆராய்ச்சியிஞல் கண்ட கருத்துக்கள் என்று மட்டும் கொள்ளுதலே அறிவுடைமை; சமயம் பற்றிய பேச்சுக்கு இங்கு இடமே இல்லை என்பதை மீண்டும் குறிப்பிட விரும்புகிருேம்.

## மேற்கோள்

இந்தநூல் ஒரு வகையில் வரலாற்று ஆதார நூலாகவும் விளங்க வேண்டும் என்ற நோக்குடன், இயன்ற வரை ஆங்காங்கு நூல் ஆசிரியர் காலம் முதலான பொருள்கள் பற்றி, வரலாற்று ஆதாரங்களையும், பாடல்களையும் உடன் தந்திருக்கிறோம். ஆதாரமாய்க் கருதும் பல நூல்கள் இன்று கற்போருக்குக் கிடைக்கமாட்டா. ஆகவே, பின் வந்து பயில்வோருடைய ஆராய்ச்சிக்கு உதவும் பொருட்டு, இவ் வாதாரங்களைச் சுட்டிச் செல்வதோடு நிறுத்தாமல், ஏற்ற பெற்றி விரிவாகவும் எடுத்துத் தந்திருக்கிறோம்.

மேற்கோளாகப் பாடல்களைக் கொடுக்கும் இடங்களில், பெரும்பான்மை கருத்து விளக்கத்துக்கு வேண்டிய அளவு மட்டும் பாடல்கள் தரப்பட்டுள்ளன. நூலின் விரிவஞ்சி முழுமையும் இங்குக் கொடுக்கவில்லை.

நூலில் தோய்வு இருந்தால்தான் சுவை அதிகமாகும்: ஆழ்ந்து ஆராய ஆராயப் புதுப் பொருள்கள் புலனாகிக் கொண்டுவரும். அன்றியும் நூலிடை எடுத்துக்காட்டாக யாம் அறிந்தவரை சில சிறப்புக்களையும், நயங்களையும் தொகுத்துக் கூறினோம். எல்லாவற்றையும் கூறியதாக ஆகாது. அவரவர் அனுபவத்திற்கும், பக்குவத்திற்கும் நோக்குக்கும் ஏற்ப, சிறப்பான இலக்கியங்களில் பின்னும் பல செய்திகளும் நயங்களும் புலப்படுதல் உறுதி.

நூலைப் பற்றிய பலவகைச் செய்திகள் ஆங்காங்கு அதிகமாகவே சொல்லப் பெற்றிருக்கும். இவை மிகை என்று கூடச் சிலர் கருதலாம். ஆயினும், இங்குள்ள குறிப்புக்கள் யாவும் ஓரிடத்தில் திரண்டு காண்பது அரிது. சில குறிப்புக்கள் வேறு எவ்விடத்தும் காண்பதற்கரியன. ஆதலால், பிறர் முயன்று தேடவேண்டாம் என்பதற்காகவே எமது நூல்கள் யாவற்றிலும் குறிப்புக்கள் அனைத்தையும்

தொகுத்துத் தந்திருக்கிறேம். திறனுய்வு வெறும் வறட்சி அன்று என்று உணர்த்தவே சுவை மிக்க பாடல்கள் பல வற்றை ஆங்காங்குத் தவருது தந்திருக்கிறேம்.

## அட்டவணைகள்

இலக்கிய வளர்ச்சியைப் பளிங்கில் வைத்துக் காட்டுவதுபோல் தெளிவாய்ப் பார்த்தமாத்திரத்திலேயே உணர்த்துபவை, பொருள் பற்றிய அட்டவணைகள். எமது வரலாற்று நூல்கள் அனைத்திலும் இவ்வகை அட்டவணைகளைக் காணலாம். பத்தாம் நூற்ருண்டு வரலாருகிய இந்தப் புத்தகத்தில் இவை விரிவாகக் காட்டப்பட்டுள்ளன. பல சொற்களால் பலமுறை விளக்கிச் சொல்லவேண்டிய பொருளை, தெளிவுபடத் தயாரித்த அட்டவணையானது, பார்த்தமாத்திரத்தில் திட்டமாக உணர்த்துகிறது. இத்தகைய சிறந்த பயன் கருதியே இங்கு முன்னூல்களிலும் அதிகமான அட்டவணைகளைக் காட்டியிருக்கிறேம். இது வரையில் யாருமே இவ்வகை அட்டவணைகளைத் தம் ஆராய்ச்சியுரைகளில் காட்டியதில்லை. யாம் தந்துள்ள அட்டவணைகளைக் காணும்போது, இவற்றை அமைத்தல் எவ்வளவு கடினம் என்பதையும், ஆனல் இவை எத்துணைச் சிறந்த பயனுடையன என்பதையும் நன்குணரலாம். உதாரணம்: தமிழ்க் காப்பிய அட்டவணை, பக்கம் 96 – 97. அட்டவணைகளின் பட்டியலொன்று 5ஆம் பக்கத்தில் தரப்பட்டுள்ளது. எமது வரலாற்று நூல்கள் அனைத்திலும் காணும் அட்டவணைகள் எல்லாவற்றையும் ஒருங்கு தொகுத்துத் தந்தால், அதுவே இலக்கிய வரலாற்றைச் சுருக்கியுணர்த்த வல்ல ஒரு கருவி நூலாக அமையும் இயல்பு வாய்ந்தது.

நிகண்டுகளைக் குறித்த பல அட்டவணைகள் இந்நூலில் உள்ளன. அவை பற்றிய ஒரு கருத்து, எல்லா நிகண்டு

களுக்கும் திருத்தமான ஆராய்ச்சிப் பதிப்பு இன்னும் வரவில்லை என்பது, நூலில் சொல்லப்பட்டுள்ளது (பக்கம் 208). சொல்லாராய்ச்சிக்கும், சொற்பொருள் வளர்ச்சி அறிவுக்கும், கருவி நூல்கள் திருத்தமாக அச்சிடப் பெறுதல் வேண்டும். திருத்தமான நூல் இல்லாதபோது, ஆராய்ச்சி செம்மைபெற இயலாது. திவாகரத்தையும் பிங்கலத்தையும் சில அறிஞர் சென்ற நூற்றுண்டில் அச்சிட்டுக் கொடுத்தனர். இது தமிழுக்குப் பேருபகாரம். ஆனுல் அவற்றைப் பின்னும் ஆராய்ந்து, கிடைக்கும் ஏட்டுப் பிரதிகளின் துணைகொண்டு நன்கு செப்பம் செய்து அச்சிட வேண்டுவது முக்கியமானது. வையாபுரிப் பிள்ளை நான்கு நிகண்டுகளைத் திருத்தமாக அச்சிட்டார்; அனவரத விநாயகம் பிள்ளை ஒரு நிகண்டை நன்கு பரிசோதித்து அச்சிட்டார்; மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் பின்னும் இரு நிகண்டுகளை நன்கு அச்சிட்டிருக்கிருர்கள். இவைபோல் மற்றவை செப்பம் செய்யப் பெறவில்லை. சூடாமணி நிகண்டு ஒன்றுதான் நாவலர் பரம்பரையில் தொடர்ந்து அச்சிடப் பெற்று வருகிறது. திவாகரம், பிங்கலத்தைச் சமீப காலத்தில் அச்சிட்டார் உளர்; ஆனுல் பொருள் திரட்டு வதற்காக அச்சிடுகிருர்களே யன்றி, தமிழ் வளர்ச்சிக் காகவோ, ஆராய்ச்சி முன்னேற்றத்துக்காகவோ அல்ல. அவை ஆராய்ச்சிப் பதிப்புக்கள் அல்ல. வையாபுரிப் பிள்ளை நிகண்டு ஆராய்ந்த காலத்தில், இதனுல் என்ன பயன் என்று பழித்தோரும் உளர். காலம் மாறிவிட்டது. பிற நாட்டாரும் தமிழை ஆராயும்போது, சொற்களின் வடிவமும் பொருளும் திருத்தமடைய வண்டும் என்ற உணர்வு இன்று ஓங்கி இருக்கிறது. இந்த நிலையில் நிகண்டுகள் திருத்தமாக வெளிவருதல் மிகவும் அவசியம்.

கண்டராதித்தர் வரலாற்றிலும் பிறவற்றிலும் வரும் சோழமன்னர் வரலாறுகளைத் தெளிவாக்கும் பொருட்டு

9 – 10 நூற்றாண்டுகளுக்குரிய சோழர் வமிசாவளி சேர்க்கப் பட்டுள்ளது. இந்தப் புத்தகத்தில் ஆராய்ந்த நூல்களின் பட்டியலொன்றும், வழக்கமாயுள்ள பிற அட்டவணைகளும், அகராதிகளும் இறுதியில் உள்ளன.

திருமுறை ஏட்டு பிரதிகள் முதலியனவும் இவ் வாராய்ச்சிக்குப் பயன் பட்டுள்ளன.

**விளக்கங்கள்**

இந்த நூலில் தரப்பட்ட விளக்கங்களில், கண்டராதித்தர் வரலாறும் காலமும், அவர் திருவிசைப்பா எழுதுவதற்குக் காரணமாயிருந்தமையும் சொல்லப் பெறுவது, தமிழ் வரலாற்றில் ஒரு புதிய விளக்கம். பதினோராந் திருமுறை பற்றிய விளக்கமும், அதனுள் நூல் செய்த பட்டினத்தார் வரலாறு, வரகுண பாண்டியன் வரலாறு என்பனவும் சிறப்பானவை. வைணவ ஆசாரியர் பற்றிய ஆராய்ச்சி, தமிழ் இலக்கிய வரலாறு கூறுவோர் பொதுவாகச் சொல்வதில்லை. இருப்பினும், 5 – 6 நூற்றாண்டுகளில் அந்தாதிகள் பாடிய முதலாழ்வார் தொடங்கி, பல வைணவ இதிகாசங்கள் எழுந்த 16ஆம் நூற்றாண்டு வரையில், வளர்ந்த வைணவ இலக்கியத் தொடர்பை இவ்வரலாற்று நூல்களில் ஆசாரியர் வரலாற்று மூலம் விளக்கியிருக்கிறோம். இம்மரபில் நூல் எழுந்த காலமும் உண்டு, எழாத காலமும் உண்டு; தொடர்புக்காகவே இவ்வாசாரியரைத் தவறாமல் குறிப்பிடுகிறோம்.

நூல்பற்றி இவ்வரலாறு தரும் விளக்கங்களில் பிங்கல நிகண்டு, பன்னிரு பாட்டியல், பெரும் பொருள் விளக்கம் என்பன முக்கியமானவை; சூளாமணிக் காப்பிய ஆராய்ச்சி அதிகம் சிறப்புடையது; கல்வெட்டில் கண்ட திரிசிராமலை யந்தாதியும் சிறப்புடையது. காலம் பற்றிய விளக்கங்களில்,

நக்கீரதேவர், பரணதேவர், பட்டினத்தார், கண்டராதித்தர், சினேந்திரமாலை என்பன குறிப்பிடத்தக்கவை. தொட்ட இடமெல்லாம் இங்குக் கருத்துப் பற்றிய விளக்கம் காணலாம். பிங்கல நிகண்டு ஆராய்ச்சி இப்பகுதியில் சிறப்பானது. வரலாறு விளங்காத பல சைன நூல்களை ஒரு தொகுப்பாய் இங்கு ஆராய்ந்திருப்பதும் குறிப்பிடத்தக்கது.

உரைநடை வளர்ச்சியை ஆராய்வதற்குத் துணையாக இந் நூலில் இரு உரைகளிலிருந்தும், பல சோழர் சாசனங்களிலிருந்தும் எடுத்துக்காட்டுக்கள் தரப்பட்டு உள்ளன.

இவ்வரலாற்று நூல்களின் தன்மையையும் கால வரையறையையும், விளக்கங்களையும் குறித்த பல பொது வான கருத்துக்கள், முன் வெளியான நான்கு நூல்களின் முகவுரையிலும், முன்னுரையிலும் அவ்வப்போது தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன. முன் சொன்ன கருத்துக்களையெல்லாம் மீண்டும் இங்கு எடுத்தெழுதவில்லை. ஆதலால், நூலினுட் புகுமுன் அவற்றை ஒரு தொகுப்பாய்ப் படித்தறிவது மிகவும் பயன்தருவதாயிருக்கும்.

## பிற்சேர்க்கை

இந்த நூல், எழுதிச் சில காலம் ஆனபிறகே அச்சிடப் பெறுகிறது. அச்சிடும்போது புதிது புதிதாகத் தோன்றும் கருத்துக்கள் உரிய இடங்களில் சேர்க்க இயலாமல் 'சில குறிப்புக்கள்' என்பன முதல் பிற்சேர்க்கையாகச் சேர்க்கப் படுகின்றன: பக்கம் 582. நூலைப் படிப்பவர் இக் குறிப்புக்களையும் உரிய இடங்களில் சேர்த்து வாசித்துக் கொள்வது நல்லது.

போலியைப் போலி என்று சொல்வது அவசியமாகிறது. முற்காலத்தில் புது நூல் எழுதிப் பழைய நூல் என்று தோன்றும்படி செய்தவரும் உளர்; இந்த இருபதாம் நூற்றுண்டிலும் அவ்வாறு செய்தோருளர். இன்னிலை பற்றிய பிற்சேர்க்கையாக உள்ள குறிப்பு இதை நன்கு எடுத்துக் காட்டும். பதினெண்கீழ்க் கணக்கினுள் ஒன்று என்று தோன்றும்படியாக ஒருவர் இதைச் சோடித்துக் கொடுத்தார்; ஆராய்ச்சி நிறைந்த ஒரு பெரியவர் அப்படியே இதைக் கருதி ஏமாந்தும் போனூர்.

## ஆதார நூல்கள்

ஒவ்வோர் அத்தியாயத்தின் இறுதியிலும், நூற் பதிப்புக்களைப் பற்றிய விளக்கமான குறிப்பு உள்ளது. வேறு தனிப்பட்டியல் ஒன்றும் பிற்சேர்க்கையாக உள்ளது. பிற ஆதார நூல்களில் சிறப்பாகச் சொல்லத்தக்கவை. சதாசிவ பண்டாரத்தார் எழுதிய சோழர் வரலாறு முதல் பாகம், க. வெள்ளைவாரணனூர் எழுதிய பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பகுதி, காசிமடத்துத் திருக்குறள் உரைக்கொத்து என்பன. நூல்களை இவ்வாறு பெயர் குறிப்பிட்டதனல் அவற்றின் கருத்துக்களை அப்படியே யாம் கொண்டதாகப் பொருளாகாது. இங்குக் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் யாவும் யாமே ஆராய்ந்து காண்கின்ற சொந்தக் கருத்தாகவே சொல்கின்ருேம்.

வழக்கமாக, தமிழ் நாவலர் சரிதையும், புலவர் புராணமும், சில மண்டல சதகங்களும் புலவர் வரலாற்று ஆராய்ச்சிக்கு ஆதார நூல்களாகச் சொல்லப் பெறுதல் உண்டு. இவற்றுள் இந்த நூற்றுண்டு வரலாற்றுக்குத் தமிழ் நாவலர் சரிதை பயன்படவில்லை. ஆராய்ச்சியாளர் பலர் இந்நூலை ஒரு முக்கிய மேற்கோள் நூலாக எடுத்துக் காட்டுகிருர்கள். இது பொருந்தாது என்பது எமது கருத்து.

இச்சிறு நூல் முறையாக எழுதப்பட்ட ஒரு வரலாற்று நூல் அன்று, 17ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த, கவிதையில் பற்று உடைய ஓர் அன்பர் தமக்குப் பிடித்த பாடல்களை எல்லாம் எழுதித் தாம் படிப்பதற்கு என்று தொகுத்து வைத்துக் கொண்டார். என்ன சந்தர்ப்பத்தில் பாடல் பாடப் பெற்றது என்பதையும் குறித்து வைத்தார்.[1] இப்படி குறித்தபோது காதில் விழுந்தவாறே பாடல்கள் குறிக்கப்பட்டன; ஆராய்ந்து குறிக்கப்பட்டன அல்ல. ஆதலால் இவற்றை நம்பி ஆராய்ச்சியில் இறங்கக் கூடாது.

புலவர் புராணம் என்பதும் வெறும் கட்டுக் கதைகளே கொண்டது. கம்பர் பற்றியும் காளமேகம் பற்றியும், ஒட்டக்கூத்தர் புகழேந்தி பற்றியும் அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார் பல கதைகளைப் புனைந்து விநோத ரச மஞ்சரி என்று பெயர் வைத்தார்; நல்ல பெயர். அக் கதைகளின் சிறப்பான சுவை விநோத ரசம்; மெய்ச்சுவை அல்ல. அவர் மீது பிழை இல்லை: அவற்றை உண்மை என்று நம்பி ஆராய்ச்சிக்குத் துணையாக அவற்றைக் கொள்ளுகின்ற ஆராய்ச்சியாளர் மீதே குற்றம் சாரும். அதுபோலப் புலவர் புராணமும் பழங்கதை; கட்டுக்கதை; புனைந்துரைகளால் ஆனது; உண்மையுரை அல்ல. ஆராய்ச்சிக்கு அவற்றை மேற்கொள்வது நம்முடைய பிழை. இப்புராணத்தில் சேந்த நாயனர், கல்லாடனர், நக்கீர தேவர், திருவெண்காடர் ஆகியோர் புராணங்கள் உள்ளன. வேறுவழியில் அறியாத விநோதக் கதைகளும் அவற்றில் உள்ளன. அவற்றை எந் நூல்களும் சொல்லவில்லை. புராணக்காரரே தம் நூலுக்கு ஆதாரம், 'முன்னோர் நவில் மொழியும், கலைவாணி நடம் புரியும் நாவும், வேற்பிடித்து மலைதொறும்போய்த் திருவருட் பேராடல் விளக்கும் முழுதுணர் புலவன் விரைமலர்த்

1 இது பற்றிய விளக்கத்தை எமது 17ஆம் நூற்றுண்டு தமிழ் இலக்கிய வரலாற்றில் விளங்கக் காணலாம்.

தாள்களுமே" என்று கூறுகின்றார். இவை ஆராய்ச்சிக்கு ஆதாரமாகா.

மண்டல சதகங்களும் இந்த நிலையில் உள்ளன. பழமையான மண்டல சதகங்கள், தொண்டை மண்டலம், சோழ மண்டலம், கொங்கு மண்டலம், பாண்டி மண்டலம் என்பன. (கார் மண்டல சதகம், நந்த மண்டல சதகம், மிழலைச் சதகம் என்பனவற்றை இங்குக் கருதவில்லை.) இவற்றுள் பெரும் பகுதி தங்கள் நாட்டு அபிமானத்தால் எழுதிய கதைகள். தொண்டை மண்டல சதகத்தில் நக்கீரர் பட்டினத்தடிகள் பற்றிக் காணப்படும் குறிப்பு இந்த நூலில் சொல்லப்பட்டுள்ளது. ஏனைய சதகங்கள் பத்தாம் நூற்றாண்டுக்குரிய செய்திகள் கூறவில்லை. பொதுவாக, சதகத்து வரும் குறிப்புக்களை ஆராய்ச்சிக்குரிய பொருளாய்க் கருதக்கூடாது.

### சமயமும் வடமொழியும்

இருபதாம் நூற்றாண்டின் பலர் மனத்தை அலைக்கின்ற ஒரு கருத்து, ஆராய்ச்சியில் சமயம் நுழையக் கூடாது, மொழியில் வடசொல் வரக்கூடாது என்பது. இக்கருத்தை அதிகம் பேச இங்கு இடமில்லை. தமிழ் தோன்றிய நாளாக அதில் சமயம் இடம் பெற்றிருக்கிறது. வேதம் என்று இவர்கள் சொல்லுகின்ற திருக்குறளின் முகப்பில் ஒரு கடவுள் வாழ்த்து அதிகாரம் பெய்யப் பெற்றுள்ளது. எட்டுத் தொகைக்கெல்லாம் கடவுள் வாழ்த்து தனியாகச் செய்து அமைக்கப் பெற்றுள்ளது. தொல்காப்பியம் சொல்லுகின்ற பொருளிலக்கண ஐந்திலக்கணப் பாகுபாட்டைக் கருதினால், கருப்பொருள், தெய்வம் என்றே தொடங்குகிறது. இவ்வாறு இலக்கியம் எங்கும் சர்வ வியாபகமாயுள்ள தெய்வத்தைக் கண்டு ஏன் அஞ்சி ஓட வேண்டும் என்பது விளங்கவில்லை. அது எந்தத் தெய்வம் ஆயினும், ஒரு தெய்வத்தைச்

சொல்லாத இலக்கியம் இல்லை. ஆகவே தெய்வத்தைக் குறிப்பிடும் சமயம் என்ற மாத்திரத்திலேயே வெருட்சி அடைய வேண்டிய அவசியம் இல்லை. உள்ள ஒரு நிலையை ஒப்புக்கொண்டு மேற்செல்வதுதான் அறிவுக்குப் பொருத்தம். உள்ளதெல்லாவற்றையும் மறுத்துக் கொண்டே போவது, அறிவை வளர்க்காது. மேலும், நாம் பழைய இலக்கியத்தை ஆராய்கிறோம். அங்கு உள்ள நிலைமையைச் சொல்ல முடியுமே தவிர, உள்ளதை விடுவதோ இல்லாததை வருவிப்பதோ இயலாத ஒன்று; அது ஆராய்ச்சியாகாது. ஆகவேதான், சமய இலக்கிய ஆராய்ச்சியும் இங்கு முக்கிய இடம் பெறுகிறது.

அது போலவே, தொல்காப்பியம், திருக்குறள் முதல் வடசொற்கள் கலந்து காணப்படுகின்றன. சொற்களைக் கண்டு ஒதுங்கிவிட வேண்டியதில்லை. சொற்கள் கருவிகளே; சொற்களே முடிவான பொருளல்ல. சொற்கள் நமக்கு ஏவல் செய்வன; நாம் சொற்களுக்கு அடிமையல்ல. இந்த இரு வகை உணர்வோடுதான் எமது இலக்கிய வரலாற்று நூல்கள் எழுதப் பெற்றிருக்கின்றன.

## நன்றியுரை

சென்னையில் அமைந்தகரை மாணிக்கம் அச்சகத்தில் நல்ல எழுத்தில் எமது இலக்கிய வரலாற்று நூல்களில் நான்கு தொகுதிகள் 1969 – 71 ஆண்டுகளில் அழகாக அச்சிட்டு வெளி வந்தன. அச்சகத்தைச் சென்ற ஆண்டின் இடைப் பகுதியில் அந்நிறுவனத்தார் மூடிவிட்ட காரணத்தால் அடுத்த நூல்கள் அச்சிட்டு வெளிவரத் தாமதமாயின. கும்பகோணம் ஜெமினி அச்சகத்தார் அதே எழுத்தை விலைக்குப் பெற்று முன் வெளிவந்த விதமாகவே ஏனைய நூல்களையும் அச்சிட்டுத்தர முன்வந்து, இப்போது இந்த நூலை அச்சிட்டுத் தந்திருக்கிறார்கள். இவர்களுக்கு

எமது நன்றி உரியது. 12ஆம் நூற்றாண்டு வரலாறு அச்சாகிறது. தொடர்ந்து 9, 16 நூற்றாண்டு வரலாறுகள் அச்சாகி வரும். மற்றவை பின்னர்த் தொடரும்.

எவ்வளவுதான் கவனமாகப் பார்த்தபோதிலும் அச்சுப் பிழைகள் நேர்ந்துவிட்டன. அன்பர்கள் நூலிறுதியில் காட்டியுள்ள பிழைகளைத் திருத்திக்கொண்டு படிப்பார்களாக.

11ஆம் நூற்றாண்டு வரலாற்றில், இலக்கிய வரலாற்றைப் பாகுபடுத்தி எழுதுவது பற்றியும், காலவரையறையின் அவசியம் பற்றியும், தமிழ் அச்சுப் பற்றியும் சொல்லியுள்ள கருத்துக்கள் இங்கு மீண்டும் நினைவு படுத்திக் கொள்ளத் தக்கவை. அவற்றிற்கு மேல் சொல்வதற்கில்லை.

முந்திய பதிப்பாசிரியர்களுக்கும், ஆராய்ச்சியாளருக்கும் எமது நன்றி உரியது. இப்புத்தகம் எழுதி வந்த காலத்தில் எமது மாணாக்கர் பலர், சொல்வதெழுதியும் பிரதி செய்தும் உதவியிருக்கிறார்கள். அவர்களுக்கு இறைவன் எல்லா நலங்களும் அருள்வானாக.

எம்மை இத்துறையில் ஈடுபடுத்தி நடத்தி வருகின்ற இறைவன் திருவருளை எந்த நேரமும் சிந்திக்கின்றோம்.

என்னி லாரும் எனக்கினி யாரில்லை;
என்னி லும்இனி யானொரு வன்னுளன்:
என்று ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்கு
என்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே.

திருச்சிற்றம்பலம்
1–3–72. மு. அருணாசலம்

# பொருள் அடக்கம்

# அட்டவணைகளின் பட்டியல்

**பயன்கருதி இந்நூலகத்தும் இறுதியிலும் பல்வேறு அட்டவணைகள் தொகுத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலைக் கீழே காண்க.**

# இவ்வரலாற்றில் ஆராய்ந்த நூல்கள்

# முன்னுரை

பத்தாம் நூற்றாண்டின் தமிழ் இலக்கிய வரலாற்றைத் தொடக்கத்தில் ஒரு தொகுப்பாய்க் கருதும்போது, இங்கு 'சென்ற காலத்தின் பழுதிலாத் திறனும் இனி எதிர் காலத்தின் சிறப்பும்' நன்கு சுட்டிக் காட்டும் விளக்கமுடைய ஒரு நிலையைக் காண்கிறோம். சோழர் பேரரசு வளர்ந்து ஓங்கி வருகிறது; பிற அரசுகள் எல்லாம் அதற்குப் பணிந்து விட்டன. இடையறாத நூல் வளர்ச்சியை இங்கு நாம் பார்க்க முடிகிறது. காப்பியம் இலக்கணம் சமயம் முதலான பல துறைகளில் முந்தைய நூற்றாண்டுகள் மிக விரிந்த வளர்ச்சி பெற்றிருந்தன. அவற்றின் தொடர்பை இங்குக் காண்கிறோம். இத் தொடர்பே பிந்திய நூற்றாண்டுகளில் இத்துறைகள் மேலும் விரிவு பெறுவதற்கு வித்தாயிருக்கிறது. இலக்கிய இலக்கண உரைகள் இக்காலத்தில் முதன் முதல் எழத் தொடங்குகின்றன. இசைத் தமிழ் வளர்ச்சியிலும் இந் நூற்றாண்டு உரிய பங்கு பெறுகிறது. கல் வெட்டுக்களும் அவற்றின் தமிழ் நடையும் அவற்றுக்குரிய மெய்க்கீர்த்திப் பகுதியும் இக்காலத்தில் மிக்க விரிவடைகின்றன. இவ்வாறு ஒரு தொகுப்பாய்ப் பார்க்கும்போது, தமிழ் நாட்டின் பொற் காலம் என்று அறிஞர் கூறிவரும் 12ஆம் நூற்றாண்டின் சிறப்புக்கள் பலவற்றில் இலக்கியச் சிறப்புக்கு, இந் நூற்றாண்டின் வரலாறு ஒரு நுழைவாயிலாய் அமைந்து இருப்பது நன்கு புலப்படும்.

## அரசியல் – சோழர் பேரரசு

தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒவ்வொரு நூற்றாண்டுக்கும் ஒரு சிறப்புண்டு. அதுபோல இந்தப் பத்தாம் நூற்றாண்டுக்கும், நாட்டு வரலாற்றைப் பார்த்தால் அரசியல்

துறையில் ஒரு சிறப்பு இருப்பது தெரியவரும். சென்ற நூற்றுண்டின் இறுதியில் கி. பி. 880 இல் திருப்புறம்பயம் என்ற இடத்தில் நடந்த பெரும் போரில் பாண்டி நாட்டுப் பெரு வீரனயிருந்த இரண்டாம் வரகுண பாண்டியன் என்ற மன்னன், நிருபதுங்கவர்மன் என்ற பல்லவ மன்னன் புதல்வனுகிய அபராசிதவர்மன் தலைமையில் வந்த படையினிடம் தோற்று அடங்கிவிட்டான். சுமார் 845 இல் தஞ்சையில் சோழப் பேரரசை நிறுவிய விசயாலயனுடைய புதல்வனுகிய ஆதித்தன் அப்போரில் பெரும் பங்கு கொண்டு அபராசிதனுக்குத் துணையாக இருந்து வரகுணனை வெற்றி கொண்டான். அக்காலத்தில் சோழர் ஓரளவுக்குப் பல்லவர்களிடம் அடங்கி வாழ்ந்தனர். இப்போரில் பல்லவர் வெற்றி பெற்றுலும், ஆதித்தன் தலைமையில் சோழர் ஆதிக்கம் வளர்ந் தோங்கவே, பல்லவர் ஆதிக்கம் வலி குன்றி ஒடுங்கியது. தோல்வி காரணமாக பாண்டியர் ஆட்சியும் வலி குன்றியது. ஆதித்தன் தலைமையில் சோழர் அரசு மிக்க வேகமாக முன்னேறியது. இவனுடைய மகனுகிய முதல் பராந்தக சோழன் 907 இல் பட்டமேற்று 953 வரையில் அரசாண்டான். இவன் காலத்தில் சோழர் ஆதிக்கம் பல திசைகளிலும் விரிந்தது. ஏறக்குறைய அரை நூற்றுண்டுக் காலம் ஆட்சி செய்த இம் மன்னனுக்கு எத்திசையிலும் வெற்றி கிடைத்து வந்தது. பராந்தகன் சிறந்த சிவ பக்தன். தில்லை யம்பலத்தைப் பொன் வேய்ந்தவன். இவனுக்கு வீர நாராயணன் என்ற ஒரு பெயருண்டு. நாதமுனிகள் பிறந்த ஊராகிய காட்டு மன்னர் கோயில் என்னும் வீர நாராயண புரத்தில் இவன் ஒரு சதுர்வேதிமங்கலம் (பார்ப்பனக் குடியிருப்பு) அமைத்தான். இன்று பிரசித்தமாயுள்ள வீராணத்து ஏரி என்னும் வீர நாராயணபுரத்து ஏரி இவனல் அமைக்கப் பட்டது ஆகும். புலவர்களை ஆதரித்தமையால் இவன் பண்டித பக்தன் என்றும் பெயர் பெற்றிருந்தான். இவனுடைய புதல்வர் மூவர். மூத்தவனுகிய இராசாதித்தன்

பெருவீரன். தந்தையின் காலத்தில் சோழ நாட்டின் வட பகுதியில், திருமுனைப்பாடி நாட்டிலுள்ள திருநாவலூரில் தங்கி, வட எல்லையைக் காத்து வந்தான்; பட்டத்துக்கு வராமலே, இளவரசனாக இருந்தபோது 949 இல் தக்கோலம் என்ற ஊரில் இராஷ்டிர கூட மன்னனான மூன்றாம் கிருஷ்ண தேவன் கங்க மன்னனான இரண்டாம் பூதுகன் ஆகியோருடன் நடந்த ஒரு போரில் இவன் உயிர் துறந்தான். இரண்டாம் புதல்வராகிய கண்டராதித்தர் என்பவரே கண்டராதித்தர் என்ற பெயர் பெற்ற சிவபக்தர்; தில்லைக்கு ஒரு திருவிசைப்பாப் பதிகம் பாடியவர். மூன்றாம் புதல்வனாகிய அரிஞ்சய சோழன் சில மாதங்களே ( ஆண்டு 957 ) அரச பதவியில் இருந்தான்.

கண்டராதித்தர் சில ஆண்டுகளே அரசு புரிந்தார். அவருடைய சிறப்பு, தம் தந்தை தில்லையைப் பொன் வேய்ந்த காலத்துத் தாம் தில்லையில் தங்கியிருந்து, அந்தப் பணியை நிறைவேற்றி வைத்ததோடு, அங்கு வந்த சிவபக்தர் பலரை நடராசப் பெருமானிடத்து ஆற்றுப்படுத்தித் திருவிசைப்பாப் பதிகம் பாடச் செய்தமையாகும். அவருடைய மனைவியாகிய செம்பியன் மாதேவியும் அவரும் செய்த சைவத் திருப்பணிக்குத் தமிழக முழுமையிலுமுள்ள கோயில்களே சிறந்த சான்றாகும்.

அரிஞ்சயனுக்குப் பின் அவனுடைய மகனாகிய சுந்தர சோழன் என்ற சிறப்புப்பெயர்பெற்ற இரண்டாம் பராந்தகன் (957 – 970) ஆட்சி புரிந்தான். புலவர்களுக்கு அவன் பேராதரவு அளித்தவன். அவனுடைய மகனாகிய இராச ராசன் 985இல் பட்டமேற்பதற்கு முன் உள்ள இடைக் காலத்தில் (970 – 985) கண்டராதித்தருடைய புதல்வனாகிய உத்தம சோழன் அரசு புரிந்தான். இவன் காலத்தில்தான் செம்பியன் மாதேவியின் திருப்பணிகள் யாவும் நடந்தன.

இந்த நூற்றுண்டின் இறுதிப் பதினைந்து ஆண்டுக் காலம் இராசராசனுடைய ஆட்சி நிகழ்ந்திருக்கிறது. இவனுடைய பெருஞ் சிறப்பு தமிழுலகம் நன்கு அறிந்தது. இந்த அரசியல் நிலையே நாம் ஆராய்கின்ற நூற்றுண்டின் அரசியல் வரலாறு ஆகும்.

இந்நூற்றுண்டிற்கு முன்னதாகவே சேர நாடு, கேரளம் என்ற பெயரில் வேறுமொழியுடையதாகப் பிரிந்துவிட்டது. முந்திய நூற்றுண்டில் பல்லவர் வலிகுன்றி ஒடுங்கிவிட்டனர். பாண்டியரும் ஒடுங்கிச் சிறப்பிழந்துவிட்டனர்.

### சைவ இலக்கியம்

இராசராசனுடைய பெருஞ்சிறப்பு, அவன் தேவாரப் பாடல்களை நம்பியாண்டார் நம்பியின் துணைகொண்டு வெளிப் படுத்திச் செப்பேட்டில் பொறித்து வைத்த சிறப்பாகும். (நம்பியாண்டார் நம்பியின் வரலாறு 11ஆம் நூற்றுண்டு வரலாற்றில் விரிவாக எழுதப்பட்டுள்ளது.) நம்பி தொகுத்த 11 திருமுறைகளில், ஒன்பதாம் திருமுறை திருவிசைப்பா என்ற பெயருள்ளது. இத்திருவிசைப்பாப் பாடினோர் ஒன்பது அடியவர். அவர்களுள் கண்டராதித்தர் என்ற மன்னரும் ஒருவர். ஒன்பதின்மருள் ஐவர் இக்காலப் பகுதிக்குரியவர். இவ்வைவர்களில், சேந்தனர் வரலாறு மிக்க சிறப்புடையது. அவருடைய வரலாற்றுக்குத் தனி விளக்கம் இந்நூலில் காணலாம். அன்றியும், 11ஆம் திருமுறையானது பிரபந்த மாலை என்ற பெயருடையது. அங்கு நாற்பது பிரபந்தங்கள் உள்ளன. அவற்றைப் பாடிய ஆசிரியர் பன்னிருவர். அவர்களுள் நக்கீர தேவர், கல்லாட தேவர், பரண தேவர், கபிலதேவர் என்ற நால்வரும் சங்க கால ஆசிரியர் பெயர்களையே கொண்டு அமைந்தவர்கள். வரகுண பாண்டியனை மிகவும் போற்றுகின்ற ஒரு பட்டினத்தார் இக்காலப் பகுதியில் வாழ்ந்தவர் ஆவார்.

இவர் பாடிய நூல்களை இத்திருமுறையில் காணலாம். இவருடைய வரலாறு, பின் வந்த பட்டினத்தார் வரலாற்றிலிருந்து தனிப்படுத்திச் சொல்லப்பட்டிருக்கும். இங்ஙனம் பார்க்கும் போது, இந்த நூற்றாண்டானது திருமூலர், காரைக்கால் அம்மையார், சம்பந்தர் தொடங்கி வளர்ந்து வந்த சைவ சமய எழுச்சியை நன்கு புலப்படுத்தி மேலும் வளர்த்தமை தெளியலாம்.

## வைணவ இலக்கியம்

இக்காலத்தில் வைணவரின் தமிழ் இலக்கியம் எதுவும் தோன்றவில்லை. நாதமுனிகளுக்குப் பின் சிறப்பான ஆசாரியரான ஆளவந்தார் இக்காலத்துத் தோன்றி வளர்ந்திருக்கிறார். அடுத்த நூற்றாண்டில் இராமானுசராகிய ஒரு பக்திப் பெருவெள்ளம் கரை புரண்டு ததும்பி ஓடுவதற்கு இந்த நூற்றாண்டு வழி வகுத்தது என்று சொல்லலாமே தவிர, இந்த நூற்றாண்டில் எந்த வைணவத் தமிழ் இலக்கியமும் எழவில்லை; உய்யக்கொண்டார் மணக்கால் நம்பி போன்ற ஆசாரியர் நாலாயிரத்தின் பகுதிகளுக்குச் சில தனியன் செய்ததாக வழக்கு உண்டு. வங்கிபுரத்தாய்ச்சி என்பவர் திருப்பதிக்கோவையொன்று பாடியதாக அறிகிறோம்; இந் நூலுக்கு விளக்கம் இல்லை.

## சைன இலக்கியம்

சிறப்பான சைன இலக்கியங்கள் தோன்றிய பல காலப் பகுதிகளுள் இதுவும் ஒன்றாகும். சைனர் பதினெண் கீழ்க்கணக்கில் சில நூல்கள் செய்திருந்தார்கள்; அவை போலவே பத்துக்கு முந்திய நூற்றாண்டுகளில் இலக்கண நூல்கள் பல செய்திருந்தார்கள் என்று யாப்பருங்கல விருத்தியுரை போன்றவற்றால் அறிகிறோம். ஆனால் அவற்றை இன்று பெயரளவில் அறிகின்றோமே ஒழிய, நூல்களாய் எதுவும் கிடைக்கவில்லை. அவர்கள் செய்த காப்பியங்கள்

சில இன்றுவரை நிலவுகின்றன. அவற்றுள் பெருஞ் சிறப்புடையது சீவக சிந்தாமணி. இதன் காலம் ஒன்பதாம் நூற்றுண்டு என்று கருதுதல் கூடும். அடுத்து இரண்டு சிறப்பான காவியங்கள் தோன்றியிருக்கின்றன. முதலாவதாகிய சூளாமணி பெருஞ்சிறப்புடைய காவியம். மற்றது நீலகேசி என்பது; இது சமய வாதமாகவே அமைந்து குண்டலகேசி என்னும் பௌத்த சமய நூல் கூறும் வாதத்தை மறுப்பது. இவ்விரண்டும் பத்தாம் நூற்றுண்டுக் குரியவை. பெண்ணுக்குச் சிறப்பில்லை என்று இழித்து உரைக்கும் சைன சமயம் நீலகேசி என்று, பெண்ணின் பெயரால் ஒரு காப்பியம் புனைந்திருப்பது சிந்தனைக்கு உரியது; இப்பெண் சாதாரணப் பெண்ணல்ல; நீலி என்ற பேய்! குண்டலகேசி என்ற பௌத்தப் பெண்ணின் வாதத்தை மறுக்க வேண்டி இங்கு ஒரு சைனப் பெண் நிறுத்தப்படுகிறுள். இவை போலவே, அமிர்தபதி நாரத சரிதை முதலான பல சைன காப்பியங்கள் இருந்திருந்தன: ஆனுல் அவை ஒன்றும் இன்று இல்லை. சைனக்காப்பியங்களை ஒரு தொகுப்பாய்ப் பார்க்கும்போது ஒரு கருத்து சொல்லத் தோன்றுகிறது. இவ்வாசிரியர்களான திருத்தக்க தேவர், தோலா மொழித் தேவர், உதீசித் தேவர், சமய திவாகர வாமன முனிவர் என்றெல்லாம் அமைந்துள்ள பெயர்களை நோக்குமிடத்து, சைனத்தில் இலக்கணம், நீதி நூல், காப்பியம் போன்ற எந்த நூலாயினும், நூல் செய்தார் அனைவருமே துறவிகள் என்று தெரிகிறது.

யாப்பருங்கல விருத்தியிலிருந்து, கேசி என்ற முடிவுடைய பெயரில் அமைந்த தருக்க நூல்கள் அனேகம் செய்யப்பட்டிருந்தன என்றும் தெரிகிறது. பிற்காலத்தில் நீலகேசி உரை செய்தவர் அனேக நூற்பாக்களையும், வெண்பாக்களையும் மேற்கோள் தருகிறுர். இவற்றைப் பார்க்கும்பொழுது இவ்வகைச் சமய விளக்க நூல்கள் சைன

சமயத்தில் அனேகம் இருந்தன, மறைந்து போயின என்று சொல்லத் தோன்றுகிறது.

**பௌத்தம்**

தமிழில் சைனம் நூல் வளர்ச்சி அடைந்த அளவில் ஒரு சிறு பகுதிகூட பௌத்தம் வளர்ச்சி பெறவில்லை. பௌத்த சமய நூலாக இன்று கிடைப்பது, மணிமேகலை ஒன்றே. இது காலத்தால் நாம் கருதும் காலப் பகுதிக்கு மிகவும் முற்பட்டது. பத்தாம் நூற்றுண்டில் எழுந்த நூல், குண்டலகேசி என்ற பெயருடைய மற்ருெரு காப்பியமாகும். இதுவும் மணிமேகலை போல, ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று என்பர். இது பௌத்த சமயவாதம் கூறுவது என்று நீலகேசி யுரையால் அறிகிருேமே அன்றி, நூல் இன்று இல்லை. தெரிகின்ற இரு பௌத்தக் காப்பியங்களும்—மணிமேகலை குண்டலகேசி – பெண்களின் பெயராலேயே அமைந்துள்ளன. குண்டலகேசி போல பிம்பிசார கதை, சித்தாந்தத் தொகை முதலான வேறு நூல்கள் இருந்தன என்று சாத்திர உரைகளால் அறிகிருேம். வீரசோழியம் என்ற இலக்கண நூல் பௌத்த சமயத்தாரால் செய்யப் பட்டது; முழுமையும் உள்ளது, காலம் 11ஆம் நூற்றுண்டு. சைனம் தமிழ் நாட்டில் பரவிப் பெருகியதற்கும் சைன நூல்கள் பல்கியதற்கும் காரணம் ஆட்சித் துறையில் சைனம் பெற்றிருந்த ஆதிக்கம். பௌத்தம் அவ்வாறு ஆட்சித் துறையில் ஆதிக்கம் பெறவில்லை; ஆதலால் பௌத்த சமயமும் மக்களிடையே பரவவில்லை, பௌத்த நூல்களும் பரவவில்லை.[1]

**இலக்கண வளர்ச்சி**

ஐந்திலக்கணத்தை முதன்முதலாகச் சொல்வது, வீரசோழியம்; காலம் 11ஆம் நூற்றுண்டு. எழுத்து சொல்

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றுண்டு பக்கம் 12 - 13 பார்க்க.

பொருள் மூன்றையுமே தொல்காப்பியர் சொன்னார். இறையனார் களவியலுரை, யாப்பதிகாரம் ஒன்றையும் குறிப்பிடுகிறது. அப்படி ஓர் இலக்கணப்பகுதி அதற்கு முந்திய காலத்ததாகக் கிடைக்கவில்லை. பத்தாம் நூற்றாண்டு வரையில் இருந்து இறந்துபோன எண்ணற்ற இலக்கண நூல்களில் ஐந்திலக்கணமும் இருந்ததா என்று அறிய வழியில்லை. தொல்காப்பியத்தின் பின், காலத்தால் வீரசோழியத்துக்கு முன் இருந்ததாக எழுத்து சொல் பற்றிய இலக்கண நூல்கள் எவையும் கிடைக்கவில்லை; அகம் பற்றிய இலக்கண நூல்கள் – தமிழ்நெறி விளக்கமும் இறையனார் களவியலும்; புறம் பற்றியது புறப்பொருள் வெண்பாமாலை - ஆகியவை கிடைக்கின்றன. யாப்பிலக்கண நூல்கள் பல இருந்தனவென்று யாப்பருங்கல விருத்தி உரையால் பெறுகிறோம். அணியிலக்கண நூலொன்றும் (அணியியல்) இருந்தது என்று சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரையால் அறிகிறோம்.

இவையன்றி, பத்தாம் நூற்றாண்டு வரையில் வேறு இரு பிரிவுகளில் இலக்கணம் வளர்ச்சி பெற்றிருக்கக் காண்கிறோம். ஒன்று நிகண்டு என்ற பிரிவு; இப்பிரிவில் திவாகரம் முதலில் தோன்றிய நூல்; காலம் 9ஆம் நூற்றாண்டு. இதை யடுத்துத் தோன்றியது, இதனினும் விரிவுடையது, பிங்கல முனிவர் செய்த பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு; காலம் 10ஆம் நூற்றாண்டு. இது இந்த நூலில் விரிவாக ஆராயப் பெறும். இவையன்றியும், வேறு நிகண்டுகள் இருந்தன என்று உரைக் குறிப்புக்களால் அறிகிறோம். நிகண்டு இலக்கணப் பிரிவு ஆகுமா என்ற கேள்வி எழுதல் கூடும். தொகுத்து ஆராய்வதன் சௌகரியத்தைக் கருதியே இவ்வாறு கூறுகிறோம்.

அடுத்த பிரிவு பாட்டியல் என்ற பிரிவு. தொல்காப்பியர் காலத்தில் இப்படியோர் இலக்கணப் பகுதியை யாரும் சிந்தித்துப் பார்த்ததில்லை. ஆனால் 8 – 9 நூற்றாண்டுகளில் இத்துறையில் கணக்கற்ற நூல்கள் எழுந்திருந்தன. அவற்றுள் ஒன்றுகூட இன்று கிடைக்காது போயினும், அவற்றிலிருந்து சில நூற்பாக்கள் திரட்டப்பட்டு, பன்னிரு பாட்டியல் என்ற பெயரால் பத்தாம் நூற்றாண்டில் உலவத் தொடங்கின. அவற்றை ஒரு தனி அத்தியாயத்தில் பார்க்கலாம். மேலும் பாட்டியல் முதலியன பெருகியிருந்தமை மேற்கோள் வாயிலாய் அறியும்போது, வேறு ஐந்திலக்கண நூல்களும் இருந்திருக்கலாம் என்று கருத வேண்டியிருக்கிறது. இத்தமிழ்ப் பிரிவுகளுள் பெரும்பகுதி களப்பிரர் ஆட்சிக் காலத்தில் அழிக்கப்பட்டுப் போயின.

## உரை நூல்கள்

தமிழ் இலக்கிய வரலாற்றிலேயே முதல் உரைகளைத் தோற்றுவித்த பெருமை இந்நூற்றாண்டுக்கு உரியது. இலக்கியத் துறையில் குறிப்பிட்டால், திருக்குறளுக்கு மணக்குடவர் செய்த உரையே எல்லா உரைகளிலும் காலத்தால் முந்தியது, இந்த நூற்றாண்டில் எழுதப்பட்டது. வேறெந்த நூலுக்கும் இதற்கு முந்திய காலத்தில் உரை எழவில்லை. முதல் உரை என்பதோடு, எளிமையான நேரான உரை என்ற ஒரு சிறப்பும் இதற்கு உண்டு. மணக்குடவர் சமயத்தால் சைனர் என்பது வழக்கு.

இனி, இலக்கணத் துறையில் குறிப்பிடத்தக்கது, இறையனார் களவியலுரையாகும். இந்நூலும் உரையும் ஒருகால் ஏழு, எட்டு நூற்றாண்டுகளில் செய்யப் பெற்றிருக்கலாம். ஆனால் பல தலைமுறைகள் இவ்வுரை வாய்மொழியாகவே கற்கப்பட்டு வந்து, பத்தாம் நூற்றாண்டில்தான் முசிறியாசிரியர் நீலகண்டனார்

என்பவரால் ஏட்டில் எழுதிவைக்கப்பட்டது. அதுபற்றியே இவ்வுரை இந்த நூற்ருண்டுக்குரியது என்று கூறிஞேம். தோன்றிய காலம் தொடங்கி இவ்வுரை தனது நடையின் சிறப்பால் தமிழ் அறிஞர் மனத்தைப் பெரிதும் கவர்ந்திருக் கிறது. எளிமையாயும் வருணனை செறிந்ததாயும் பெரும் பகுதி செய்யுளோசை பெற்றதாயும் உள்ளது இவ்வுரை. இருபதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் இவ்வுரையின் நடைபோலவே எழுதவேண்டும் என்று எண்ணி எழுதிப் பழகி இடர்ப்பட்ட தமிழ்ப் பண்டிதர் பலர்.

இறையனுர் களவியல் நூற்பாவால் ஆனது. யாப்பருங் கலத்துக்குக் காரிகைபோல, இந்நாலுக்கும் காரிகையாக ஒரு விளக்க நூல் 14ஆம் நூற்ருண்டில் எழுந்திருப்பது இதற்குரிய சிறப்பு; அந்நூல் களவியற்காரிகை என்ற பெயர் சூட்டப்பெற்றது. களவியலுரை நக்கீரர் செய்ததாக வழங்கும்; எழுதிவைத்தவர் நீலகண்டனுர். இருவரும் சைவர்.

## சிற்றிலக்கியம்

பிரபந்தங்களை இன்று சிற்றிலக்கியம் என்று சொல்லு கிரேம். இக்காலத்தில் இருந்தவரை இவற்றைப் பாகுபாடு செய்து இலக்கணம் கூறுவதையும் பன்னிரு பாட்டியலில் காண்கிரேம். அதனுள் சொல்லப்பட்டவை எழுபது வகையாயினும், அவற்றுள் அதிகமானவற்றுக்கு, அக் காலத்துக்கு முற்பட்ட இலக்கியம் கிடைக்கவில்லை; பலவற்றுக்கு என்றுமே இலக்கியம் எழுந்ததாகவும் தெரிய வில்லை. அப்படியிருந்தும், அப்பாட்டியல் எப்படி ஓர் இலக்கணம் வரையறுக்க வந்தது என்பது விளங்காத ஒரு கேள்வியாகவே இருக்கிறது.

இனி, இக்காலத்தும் முன்னும் இருந்த சிற்றிலக்கியங்கள் அந்தாதி, இரட்டை மணிமாலை, மும்மணிக் கோவை, நான்மணி மாலை, ஆற்றுப்படை, கலம்பகம், கோவை,

உலா, கலி வெண்பா, மறம், ஊசல், எழுகூற்றிருக்கை, ஒருபா ஒருபஃது, நாற்பது, பதிகம், மெய்க்கீர்த்தி, மடல் என்பன மட்டுமே. திரிசிராமலையந்தாதி என்பது இக் காலத்துக்குரிய தனிச் சிறப்புடைய ஓர் அந்தாதி. இதன் வரலாறே இலக்கியத்தில் வேறெங்குமில்லாத ஒரு தனித் தன்மையுடையது; இது நூலாக எங்கும் கிடைத்ததில்லை. கல்வெட்டாகவே திருச்சி மலைக் கோயிலில் கண்டு பிரதி செய்யப்பட்டது. எவ்வளவோ சிறப்புடைய பிரபந்தங்கள் இருக்க, இந்தத் துதிநூல் என்ன காரணத்தினுல் கல்வெட்டில் பொறிக்கும் தகுதிபெற்றது என்பது விளங்காத புதிராகவே உள்ளது.

இப்பிரபந்தம் அன்றி, சைவ இலக்கியம் என்ற மூன்று அத்தியாயங்களிலும் ஆராயப்பெற்ற நூல்கள் யாவுமே பிரபந்தங்களாகும். இங்கு இவ்வாறு ஆராயப் பெற்றவை நான்மணிமாலை, பதிகம், பல்லாண்டு, எழுபது, எழுகூற்றிருக்கை, ஒருபா ஒருபஃது, மும்மணிக் கோவை, மறம், கலிவெண்பா, கோவை, இரட்டை மணிமாலை என்பனவாகும். இவையும் நிற்க, இக்காலப் பகுதிக்கு முன்னதாக,ஆழ்வார் நாயன்மார் பாசுரங்களில் பலவகையான பிரபந்தங்களைக் காண்கிறேம். திருமங்கையாழ்வார் பாடிய மடற் பிரபந்தங்கள் இரண்டும் சிறப்பாய்க் குறிப்பிடத் தக்கன; ஏனையவை அந்தாதி, தாண்டகம், பல்லாண்டு, பள்ளி யெழுச்சி, பாவை, எழுகூற்றிருக்கை என்பனவாகும். அப்படியே சைவத்தில், இவ்வரலாற்றில் ஆராய்ந்த பிரபந்தங்களை யன்றி, கோவை, அங்கமாலை, எழுகூற் றிருக்கை, பாவை, பள்ளியெழுச்சி, தாண்டகம், உலா, அம்மானை, உந்தி, குயில், தும்பி, சாழல், தசாங்கம், தெள்ளேணம், தோள்நோக்கம், பூவல்லி, பொற் சுண்ணம் (வள்ளைப்பாட்டு), ஊசல், இரட்டை மணிமாலை, மும்மணிக் கோவை, நான்மணிமாலை, தல வெண்பா முதலாயின

எழுந்திருந்தன. கலம்பகமும் உண்டு. இவற்றுள், பன்னிரு பாட்டியல் குறிப்பிடுவனவும் உண்டு, குறிப்பிடாதனவும் உண்டு.

## பிறவகை இலக்கியம்

இந்த நூற்றூண்டுக்கு முற்பட்ட காலத்தில் எழுந்த பிறவகை இலக்கியங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. முதன் முதலாக, சிலப்பதிகார அரும்பதவுரைக் குறிப்பின்மூலமாய் இந்த நூற்றூண்டில் ஆருட சாத்திர நூல் ஒன்று தோன்றியது என்று அறிகிறேம். இது சினேந்திர மாலை என்ற பெயருடையது. பண்டைக் காலத்தில் வாழ்க்கையின் எத்துறையிலும் முக்கியமான பொருளை நினைவில் இருத்த வேண்டுமானல் அதைப் பாட்டாகவே எழுதி வைத்தார்கள். இலக்கியமெல்லாம் பாட்டா யிருத்தல் இயலாது. சொல் நயம், தொடை நயம், பொருள் நயம் ஆகியவை பொருந்தும் பொருட்டுப் பாட்டாகச் செய்தல் மரபு. இலக்கணமும் பாட்டாகவே செய்யப்பட்டிருக்கக் காண்கிறேம். நிகண்டுகள் முதலியன இன்றுவரை பாட்டாகவே இருப்பதை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். அதுபோலவே எல்லாத் துறை நூல்களும் பாட்டாகவே செய்யப்பெற்றிருந்தன. அந்தந்தத் துறையில் வல்லவர்களுக்குத் தங்கள் பொருள் சிறப்புடையது என்பது ஏற்கத்தக்கதே. ஆகவே, அவர்கள் எதையும் பாட்டிலேயே சொன்னுர்கள். இவ்வாறு சொல்லப்பட்டதே இங்குக் கூறிய சினேந்திர மாலை. இது போலவே பின்னும் பல நூல்கள் இருந்திருக்கலாம்; நமக்குக் கிடைக்கவில்லை. இந்த நூற்றூண்டிலிருந்து 20ஆம் நூற்றூண்டுவரையில் ஆருடம், சோதிடம், கனு, ஓவியம், நஞ்சு, கணக்கு, வைத்தியம், காமம், கட்டிடச் சிற்பம் முதலான எல்லாத் துறைகளையும் பற்றிய நூல்கள் பாட்டினுல் செய்யப்பெற்றிருப்பது தெரிகிறது.

**நால்வகைப் பாக்கள்**

பண்டைய காப்பியங்கள் – சிலப்பதிகாரம் மணிமேகலை பெருங்கதை – ஆசிரியப்பாவால் இயன்றிருப்பது போக, பிற்காலத்தில் சிந்தாமணி கம்பராமாயணம் சூளாமணி பெரிய புராணம் போன்றவற்றில் விருத்தப்பாவே வழங்கப் பட்டிருக்கின்றன. இந் நிலைபற்றி ஒரு கருத்து இங்குச் சிந்தித்தற்குரியது. பழந்தமிழில் நால்வகைப் பாக்களே இருந்தன-ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என. வஞ்சிப்பாவில் பாடல்கள் எழுந்தனவே யன்றி, நூல் எழவில்லை. கலிப்பாவில் தனி நூல், எட்டுத் தொகையுள் ஒன்ருன கலித்தொகை ஒன்றே. இவ்விரு பாக்களும் பிற் காலத்தில் வழக்கு வீழ்ந்தன. இந்தக் காலத்தில் இல்லவே இல்லை.

மற்ற இரண்டான ஆசிரியமும் வெண்பாவும் இப்படி யல்ல. எல்லா நூற்ருண்டுகளிலும் இவை சிறப்பான பாவகை களாகப் பயன்பட்டு வந்திருக்கின்றன. சிலப்பதிகாரம் பெருங்கதை மணிமேகலை என்பன பண்டைக் காலத்தில் ஆசிரியப்பாவில் தோன்றிய பேரிலக்கியங்கள்; இந்த இருபதாம் நூற்ருண்டிலும் இந்தப் பா சிறப்பாகப் பயன்பட்டு வருகிறது: மனோன்மணீயம் என்ற நாடகம் இக்காலத்தில் ஆசிரியப்பாவில்தான் இயற்றப்பட்டிருக்கிறது.

மற்றப் பாவாகிய வெண்பா பண்டைக் காலத்தில் எல்லா வகையான நூல்களுக்கும், ஆசிரியம் போல, சிறப் பாய்ப் பயன்பட்டு வந்திருக்கிறது. வெண்பாவில் குறட்பா முதலான பல இனங்களும் உள்ளன. நீதிநூல், அகப் பொருள், புறப்பொருள், இலக்கணம் முதலிய அனைத்துக்கும் வெண்பா பயன்பட்டு வந்திருக்கிறது. பெருந்தேவனர் செய்த பாரதம் வெண்பாவால் ஆனது. புராண சாகரமும் மற்ருேர் இராமாயணமும் பஃருெடை வெண்பாவால் ஆனவை என்று

அறிகிறோம். இருபதாம் நூற்றாண்டில்கூட இராமாயணத்தைப் பதினாயிரத்துக்கு மேற்பட்ட வெண்பாச் செய்யுட்களால் ஒருவர் பாடினார். இவ்வாறு ஒரு பொது நோக்காகப் பண்டைய நால்வகைப் பாக்களையும் பார்க்கலாம்.

ஆனால், அருட்பாசுரம் செய்த நாயன்மாரும் ஆழ்வாரும் பொதுவாக இந்த நால்வகைப் பாக்களையும் பயன்படுத்தவில்லை. முதல் திருவந்தாதி முதலான சில வெண்பா அந்தாதிகள் இருப்பினும், சில தனி ஆசிரியப்பாக்கள் இருப்பினும், பாசுரங்களில் நால்வகைப் பாக்களும் அதிகம் பயிலவில்லை : புதிதாக ஒரு விருத்தப்பா பயிலத் தொடங்குகிறது. இது பல பெயர்களைப் பெறுகிறது. காப்பியக் கலித்துறை என்ற ஒரு தெளிவில்லாத நிலையிலும் நிற்கிறது; கட்டளைக் கலித்துறையாகித் திருவிருத்தம் என்று பெயர் பெறுகிறது; அறுசீர் விருத்தமாகித் திருநேரிசை என்று பெயர் பெறுகிறது; எண்சீர் விருத்தமாகித் திருத்தாண்டகம் என்று பெயர்பெறுகிறது. இன்னும் பலவகை யாப்புக்களாகிப் பண்ணுகை வழங்குகிறது. இவை அனைத்துக்கும் பொதுவாக விருத்தப்பா என்ற பெயரைப் பாசுரங்களில் சூட்டுகிறோம். இது விருத்தப்பாவுக்குரிய இலக்கணம் தெளிவு பெறாத நிலை. இந்த நிலை 6, 7, 8, நூற்றாண்டுகளிலும் 9ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்திலும் நிலவுகிறது. பாசுரங்களைச் சொன்னபொழுது அவை இசைக்காகவே தோன்றியவை என்பதை நினைவுகூர வேண்டும். பண்டைய பரிபாடல்களும் இசைப்பாடல்களும் வழக்கிழந்து போனமையால், அடியவர்கள் புதிதாக ஓர் இசைநெறி வகுத்துக் கொண்டார்கள். அந்த நெறிக்குப் பண்டைய யாப்புக்கள் நன்கு பொருந்தி வரவில்லை. ஆகவே, இவர்கள் புதிய யாப்பைப் படைத்துக் கொண்டார்கள். இப்படி படைத்தோரில் தலையாயவர் திருஞானசம்பந்தர். ‘இசைத்தமிழ் வல்ல ஞானசம்பந்தன்’

என்று அவர் தம்மை எப்போதும் சொல்லிக் கொள்வார். இவரும் மற்றவர்களும் படைத்த பாக்கள் முழுமையும் புதிய பாவினங்கள்.

காப்பிய நூலாசிரியர் தோன்றியபோது, இந்த நிலைமையைக் கண்டார்கள். ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நான்கும், தங்களுடைய நெகிழ்ந்த கருத்தோட்டத்துக்குப் பொருந்தி வாரா என்று அவர்கள் உணர்ந்தமையால், அடியவர்கள் பாடிய திருப் பாசுரங்களில் பயின்ற பாவினங்களைத் தாங்கள் மேற் கொண்டார்கள். இவ்வாறு புதிதாய்க் காப்பியங்களில் அமைத்துக் கொள்ளப்பட்ட பாவகை பிற்காலத்தில் விருத்தப்பா என்று வளர்ந்தது. ஒன்பதாம் நூற்றுண்டில் எழுந்த சீவக சிந்தாமணி கம்பராமாயணம் தொடங்கி, பின் வந்த நூற்றுண்டுகள் அனைத்திலும், அளவால் விரிந்த நூலுக்கும் காப்பியத்துக்கும் ஏற்ற பாவகை விருத்தப்பாவே என்ற நிலை ஏற்பட்டு விட்டது. பத்தாம் நூற்றுண்டில் தோன்றிய சூளாமணி நீலகேசி போன்றனவும், கிடைக்காத பிற நூல்களான குண்டலகேசி போன்றனவும், விருத்த யாப்பிலேயே செய்யப்பட்டன. பன்னிரண்டாம் நூற்றுண்டு தொடங்கி எழுந்து விரிந்து சென்ற நீண்ட புராணங் களுக்கும் விருத்தப்பாவே உரியதாயிற்று.

தொல்காப்பியர் கருத்தின்படி, நால்வகைப் பாக்களின் ஆதி வரலாற்றினை ஆராய்ந்தால், அவை இரண்டினுள் அடங்கும் என்பது தெரிகிறது[1].

பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரி யப்பா வெண்பா என்றாங்கு
ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப. 413

1 மு. இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி பக்கம் 116.

ஆசிரிய நடைத்தே வஞ்சி, ஏனை
வெண்பா நடைத்தே கலிஎன மொழிப. 414

வஞ்சி ஆசிரிய நடையுள்ளும் கலிப்பா வெண்பா நடையுள்ளும் அடங்குமென்று அவர் கூறியிருப்பது காணத் தக்கது. இதைக் காணும்போது, பிற்காலத்தில் கலிப்பாவும் வஞ்சிப்பாவும் வழக்கு வீழ்ந்தமைக்கு ஒருவாறு அமைதி காணவும் முடிகிறது.

## முத்தமிழ்

சங்கத் தமிழ் மூன்று என்று பெயர் பெற்றிருந்த போதிலும் கூட, சிலப்பதிகாரம் ஒன்று தவிர, முத்தமிழ் நூல் வேறெதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. இயல் இசை நாடகம் என்ற தமிழ்ப் பகுதி மூன்றில், இயல் பகுதியே இடையருது நூற்றுண்டு தோறும் வளர்ந்து வருவதை நூல்கள் வாயிலாகக் காண்கிறோம். இசையும் நாடகமும் எந்த அளவு வளர்ந்தன என்று நாம் அறிய முடியவில்லை. பரிபாடலில் உள்ள ஒவ்வொரு பாடலுக்கும் இன்ன பண் இன்னர் இசை வகுத்தார் என்பது சொல்லப்பட்டிருக்கிறது. பாணரையும் அவர்களுடைய இசையையும் கூத்தையும் சங்க நூல்கள் எல்லாம் குறிப்பிடுகின்றன. இவை முற்காலத்தில் வளர்ச்சி பெற்றிருந்தது உண்மை என்பதைப் பிற்காலத்தில் (11–12ஆம் நூற்றுண்டுகளில்) சிலப்பதிகார உரைகாரர்களான அரும்பத உரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் எழுதியவற்றுல் விளக்கமாக அறிகிறோம். அவ்வாறு இவ்விரு பகுதிகள் பெற்றிருந்த வளர்ச்சி முழுமையும் சங்க காலத்தை அடுத்துப் பின்வந்த நூற்றுண்டுகளில் அழிந்து பட்டது. கி. பி. மூன்றும் நூற்றுண்டின் தொடக்கத்தில் களப்பிரர் பாண்டி நாட்டில் புகுந்து அரசைக் கைப்பற்றி அங்கு சுமார் கி. பி. 550 வரை ஆதிக்கம் வகித்தார்கள். அவர்கள் தமிழுக்கும் அதன்

இலக்கியம் கலை நாகரிகம் சமயம் முதலான அனைத்துக்கும் அன்னியர், சைனர்; திட்டமிட்டு இவற்றை அழித்தார்கள். இசையும் பெண்களும் மனிதனைத் தாழ்த்துபவை என்ற கொள்கையுடையவர்களாதலால்[1], அவர்கள் அகப் பொருளையும் இசைத் தமிழையும் அழித்தார்கள். களப்பிரர் ஆதிக்க காலத்தில் காரைக்காலம்மையார் திருவாலங்காட்டு இசைப் பதிகங்கள் இரண்டு பாடினார். (அவர் பேய் வடிவம் கொண்டதற்கும் களப்பிரர் போன்ற சைனர் பெண் பிறவியைத் தாழ்த்தியதற்கும் தொடர்புண்டா என்பது சிந்திக்கத் தக்கது. அம்மையார் மதுரைக்குச் சென்று அங்கேதான் பேய் வடிவம் கொண்டார் என்பது புராணம்.) பாண்டியன் கடுங்கோன் அவர்களை அடக்கிய பின், நூறாண்டு சென்று மதுரைக்கு வந்த ஞானசம்பந்தர் அங்கு அழிந்து போகும் நிலையிலிருந்த இசைத்தமிழைத் தம் இசைப் பாடல்களால் எடுத்து நிறுத்தினார். இசை ஞானசம்பந்தன், இன்னிசையால் உரைத்த பனுவல், சந்தமிசை தண்டமிழின் இன்னிசை எனப் பரவு பாடல். பண்ணோடிசை என்றெல்லாம் அவரே பாடுவதும், 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்று சுந்தரர் அவரைக் குறிப்பிடுவதும் மிக்க பொருளுடையவை. சம்பந்தர் இவ்வாறு இசையால் பரப்பிய தமிழ்தான் இன்றுவரை நின்று நிலவுகிறது என்பது சரித்திரக் கண்ணோடு பார்ப்பவர்களுக்கு நன்கு விளங்கும்.

நாடகத் தமிழைக் குறித்து இத்தகைய எழுச்சி தெரியவில்லை. பத்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினொன்றிலும், இராசராச மன்னன் ஆதரவில் இராச ராசேச்சுர விசயம், இராசராசேச்சுர நாடகம் முதலான நாடகங்கள் தோன்றியிருந்தன. ஆனால் அடுத்த காலங்களில்

1 பிற்காலத்தில், திகம்பர சைனமே பெண்களை இழிக்கும் கொள்கை உடையதென்றும், சுவேதாம்பர சைனம் இவ்வாறு இழிப்பதில்லை என்றும் சொல்வார்கள்.

நாடக வளர்ச்சி குன்றி 18ஆம் நூற்றுண்டில் அருணசலக் கவிராயருடைய இராம நாடகக் கீர்த்தனை தோன்றிய பிறகுதான் மீண்டும் தமிழ் நாடகம் தலையெடுக்கிறது.

இசைத்தமிழைப் பொறுத்த வரையில் நாம் இங்குக் கருதும் பத்தாம் நூற்றுண்டு ஒரு சிறப்பான இடம் பெறுகிறது. சம்பந்தர் இசைத் தமிழை எடுத்து நிறுத்துகிருர் என்று குறிப்பிட்டோம். சுமார் கி.பி. 700இல் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனரும் இசைப் பாசுரங்களைப் பண்ணேடு பாடி இசை வளர்த்தார். அதன்பின் நமக்கு இலக்கியத் துறையில் இசை வளர்ந்த சான்றுகள் கிடைக்க வில்லை. ஒன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் நாலாயிரப் பிரபந்தங்களைக் கண்டுபிடித்து வழங்கச் செய்த நாதமுனிகள் அப்பாசுரங்களுக்கு இசையமைத்துத் தம் மருமக்கள் இருவரைக்கொண்டு அவற்றைப் பண்ணேடு பாடச் செய்தார் என்று வைணவ குருபரம்பரை கூறுகிறது. இது குறிப்பிடத் தக்க ஒரு முக்கிய நிகழ்ச்சி. நாதமுனிகள் கி. பி. 918 வரை வாழ்ந்தார்.

இது ஒரு புறமிருக்க, சைவ சமயத்தில் பார்த்தால், ஒன்பதாம் திருமுறையின் பொதுவான காலம் கி.பி. 940–1040 என்று காண்கிறேம். இத்திருமுறையில் உள்ள பாசுரங்கள் திரு இசைப்பா என்றே பெயர் பெறுகின்றன. இப்பெயரே இவை இசைத் தமிழின்பால் தோன்றின என்பதைக் காட்டும். தமிழில் வேறு எந்தக் காலத்திலும் வேறு எந்த நூலுக்கும் இசைப்பா என்று பெயர் அமைந்ததில்லை. இந்த நிலை இந்த நூல்களுக்குள்ள தனிச்சிறப்பு. இங்குள்ள ஒவ்வொரு பதிகத்துக்கும் தனியாக இசை — இன்ன பண் என்பது — சொல்லப்பட்டிருக்கின்றது; அன்றியும், சாளரபாணி என்ற பெயரில் தேவார அடங்கன் முறை முழுமையிலும்

காணப்படாத ஒரு பண்ணை இவற்றில் காண்கிறோம். இச் சிறப்பு சோழர் ஆட்சியின் சிறப்புக்களில் ஒன்றாகும். ஆலயங்களைக் கற்றளிகளாக்கி அங்கெல்லாம் திருப் பதிகங்கள் ஓதும்படி நிபந்தங்கள் அமைத்து, சமயத்தையும் வழிபாட்டையும் தமிழையும் சோழ மன்னர் வளர்த்த காலத்தில், இசைத்தமிழும் பெரிய எழுச்சி பெற்றது என்று கருதுவது உண்மையாகும். இசையிலும் நாடகத்திலும், இந்த நூற்றாண்டிலும் இதற்குச் சிறிது முன்னரும் தோன்றி வளர்ந்து வந்த புதிய எழுச்சியை உணர்ந்த பிங்கலர், தமது நிகண்டில் இத்துறைகள் இரண்டையும் விரித்துக் கூறியிருப்பது நினைவு கூரத் தக்கது. இக்காலத்தில் ஏற்பட்ட இசையின் வளர்ச்சியானது, பின்னால் சில நூற்றாண்டுகள் கழித்து அருணகிரிநாதர் மூலமாக விரிந்து சென்று, 18ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் அருணாசலக் கவிராயர் முத்துத்தாண்டவர் மாரிமுத்தாப் பிள்ளை ஆகிய 'தமிழிசையின் திரிமூர்த்திகள்' மூலமாக, பதம் என்றும் கீர்த்தனம் என்றும் உருவம் கொண்டு, இன்றுள்ள கர்நாடக சங்கீதமாக வளர்ந்தது.

## நூல்களின் அழிவு

பல நூல்கள் கிடைக்கவில்லை என்று குறிப்பிட்டோம். நூல்கள் அழிந்தமைக்கும் கிடைக்காமற் போனமைக்கும் சில காரணங்களைக் குறிப்பிடுகிறோம். நூல்களின் அழிவுக்குக் காரணம் கடல்கோள் என்று இப் பேராசிரியர்களே ஒருமுகமாய்ச் சொல்கிறார்கள். உண்மையாயிருக்கலாம். எரிமலையால் பாம்பே நகரம் அழிந்ததுபோல, கடல் பொங்கியதால் தென் மதுரையும் கபாடபுரமும் அழிந்தன; புகார் நகரமும் அழிந்தது. அழிந்தபோது, மீட்க வகையின்றிப் பலதுறைத் தமிழ் நூல்களும் அழிந்தன.

அடுத்தபடி, களப்பிரர் ஆதிக்க காலத்தில் இசைத் தமிழ் நாடகத் தமிழ் நூல்களும் பொருள் இலக்கண

நூல்களும் சமய நூல்களும் திட்டமிட்டு அழிக்கப்பட்டன. அக்காலப் பகுதியில் தமிழுக்கு வளர்ப்பகமாக மதுரை இருந்து வந்தது; அன்றியும், கிறித்து அப்தத்தின் தொடக்க காலத்திலும் அதற்கு முன்னும் மதுரையில் பாண்டியர் தமிழ்ச் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்தார்கள் என்பது வரலாறு. நூற்றுக்கணக்கான புலவர் அக்காலத்து வாழ்ந்தார்கள் என்று எட்டுத் தொகையால் அறிகிறோம். எனவே, முன்னிருந்த சிறந்த நூல்கள் எல்லாம் சிறந்த பல புலவர்களால் மதுரையில் சேமித்து வைக்கப் பட்டிருந்தன. தமிழுக்கு அன்னியரான களப்பிரருடைய நாசவேலை நடந்தபோது, இவை யாவும் அழிவெய்தின.

வரலாற்றறிவின் முழுமைக்காக, நாம் கருதும் நூற்றுண்டின் கால எல்லையை விட்டுக் காலத்தால் இன்னும் முன்வந்து பார்த்தால், அங்கும் பல காலங்களில் திட்ட மிட்ட அழிவுவேலை நடந்திருப்பதை யூகிக்கமுடியும். சோழ பாண்டிய மன்னர் போர்களில், நூல்கள் அழிந்தன. இறுதிக்காலத்தில் ஆட்சிபுரிந்த மூன்றும் குலோத்துங்க சோழன், வரலாற்றுச் சிறப்புமிக்க பெருவீரன். இவன் சிறந்த பண்டிதனுய் விளங்கிப் புலவர்களுக்குப் பெருஞ் சிறப்பு வழங்கிய வள்ளலாய் இருந்தும்கூட, தன்னுடைய நீண்ட கால ஆட்சியில் எந்த நேரமும் நேரிட்ட போர்கள் காரணமாக, இவன் மனத்தில் கொடுமை மிகுந்திருந்தது. அதனல், பகையரசரோடு போரிட்டபோது இவன் சிறிதும் இரக்கம் காட்டியது இல்லை. 'மதுரையும், ஈழமும், கருவூரும், பாண்டியன் முடித்தலையும் கொண்டு வீராபிடேகமும் விசயாபிடேகமும் பண்ணியருளிய திரிபுவனச் சக்கரவர்த்தி வீரசோழதேவன்' என்பது இவனது மெய்க்கீர்த்தித் தொடர். இவனது 'புயல் வாய்த்து மண்வளர' என்ற மெய்க்கீர்த்தியானது, இவன் பாண்டியனை எவ்வளவு இழிவு படுத்தினுன் என்பதை

விளங்கக் கூறுகிறது. இவன் மதுரையில் ஆலவாய்ப் பெருமான் கோயில் நீங்க மற்ற இடங்களையெல்லாம் அழித்தபோது, கணக்கற்ற தமிழ் நூல்களும் அழிந்தன என்பதில் ஐயமில்லை. இவன் பேரன் மூன்றும் இராசேந்திரனோடு சோழர் ஆட்சி முடிந்தது. இக் குலோத்துங்கன் இறந்த உடனேயே (1218) அடுத்த ஆண்டில் (1219) வீரம் இல்லாதிருந்த இவன் புதல்வனை மூன்றும் இராசராசன் மீது மாறவர்மன் சுந்தரபாண்டியன் படையெடுத்து வந்து, அவனைத் தோல்வியுறச் செய்து, சோழர் பழைய தலைநகராகிய உறையூரையும் தஞ்சா வூரையும் அடியோடு இடித்துக் கொளுத்திவிட்டு, பழை யாறையில் சோழர் முடிசூடும் மண்டபத்தில் வீராபிடேகம் செய்துகொண்டான். அப்போது அவனால் இடிக்கப்படாமல் எஞ்சி நின்றது, முற்காலத்தில் சோழன் கரிகால் பெருவளத்தான் தன்மீது பட்டினப்பாலை பாடிய கடியலூர் உருத்திரங் கண்ணனாருக்குப் பரிசிலாக வழங்கியிருந்த பதினாறு கால்மண்டபம் ஒன்றுதான் என்று சுந்தர பாண்டியனுடைய திருவெள்ளறைக் கல்வெட்டுப் பாடல் கூறுகிறது :

**வெறியார் தளவத் தொடைச்செய மாறன் வெகுண்ட தொன்**
**அறியாத செம்பியன் காவிரி நாட்டில் அரமியத்துப் [றும்**
**பறியாத தூணில்லை, கண்ணன்செய் பட்டினப் பாலைக்கன்று**
**நெறியால் விடுந்தூண் பதினாறு மேஅங்கு நின்றனவே.**

தஞ்சையும், உறையூரும் அழிந்தன என்றால் அங்குள்ள தமிழ் நூல்கள் யாவும் அழிந்தன என்பதே பொருள்.

முன்பு பாண்டி நாட்டில் அழிந்தன, பின்பு சோழ நாட்டில் அழிந்தன. இதே பாண்டியனுடைய பின் வாரிசுகளை டில்லியிலிருந்து வந்த மாலிக் காபூரின் முகம்மதியப் படைகள் கி. பி. 1313இல் அழித்தன.

அழித்தபோது, மதுரைக்கு நேர்ந்த அழிவுக்கு ஈடானது பிற்காலத்தில் விசயநகரத் தலைநகரம் முகம்மதியர்களால் அழிக்கப்பட்ட தொன்றுமே என்று சரித்திர ஆராய்ச்சியாளர் கூறுவார்கள்.

இவ்வாறு தமிழ்நாட்டிலுள்ள போர்களாலும் அரசுகளின் வீழ்ச்சியாலும், இலக்கியங்கள் பலமுறை அழிந்தன. இன்றுள்ள அளவேனும் நமக்கு இவை கிடைப்பது நமது பாக்கியம் என்றே கருதவேண்டும்.

அக்கால நாட்டு நிலைமையையும் நினைவுகூர வேண்டும். அக்காலத்தில் நூல்கள் தமிழ் நாடெங்கும் பரவியிருக்கவில்லை. நாடெங்கும் ஆங்காங்குச் சில புலவர் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்கு விருப்பமும் பயிற்சியுமுள்ள நூல்கள் அவர்களைச் சூழ்ந்த இடங்களில் பிரசாரமெய்தி இருந்தன. எல்லா இடங்களிலும் எல்லா நூல்களும் வழங்கி வந்தன என்று சொல்ல முடியாது. இதற்குக் காரணங்கள் பல. போக்குவரவு – வசதியல்ல, மக்களுடைய சஞ்சாரம் – குறைவான காலம். ஆங்காங்கு இருந்த வள்ளல்கள் நிலை, புலவர்களின் வறுமை நிலை, சொந்த விருப்பு வெறுப்புக்கள், அரசியல் கொந்தளிப்புக்கள், சமூகப் பாகுபாடுகள் முதலிய தன்மைகள் நூல்களுக்கு விரிந்த பிரசாரம் இல்லாமல் செய்துவிட்டன. ஆகவே, ஓரிடத்தில் உள்ள நூல்கள் அழிந்தன என்றால், அவற்றை வேறு விதத்தில் பெறுவதற்கு வழியே இல்லை; பெயர் தானும் அறியமுடியாதபடி மறைந்து விடும். மிகவும் சமீப காலத்தில் நம்மிடையே வாழ்ந்தவர் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை. டாக்டர் சாமிநாதையரவர்கள் 1870இல் அவரிடம் மாணக்கரானார்; அவர் 1876இல் காலமாகிற வரையில் அவரிடமிருந்தார். பிள்ளையவர்கள் செய்த நூல்கள் பல, ஐயரவர்கள் கண்ணால் பார்த்துப் படித்தவை, பிறகு அவருக்கே கிடைக்காமல் இன்று இல்லா

மலே போய் விட்டன. இந்த நிலைமையை நன்கு சிந்தித்துப் பார்த்தால், பண்டை இலக்கியங்கள் எவ்வளவு அதிகமாய் அழிந்து போயிருக்கும் என்று நாம் யூகிக்க முடியும். ஓர் ஏடு மட்டும் இருந்து அதை வேறு பிரதி செய்து வைக்கா விட்டால், அந்த ஏட்டுக்குச் சிதைவு வரும்போது நூலே அழிந்து போகிறது.

மேலும் சென்ற நூற்றுண்டு வரையில் கல்வி வல்ல புலவர் குடும்பங்களில், புலவர்கள் தாங்களே ஏடுகளை மறுபடியும் பிரதி செய்து வைப்பார்கள்; மாணுக்கர் புதிதாகப் பயிலும்போது, மீண்டும் பிரதிசெய்து கொள்வார்கள். அன்றியும் அக்காலத்தில் செல்வராயுள்ளவர்கள், அழகாக எழுதவல்ல புலவர்களைக் கொண்டு, சிதிலமாகிவந்த நூல்களையெல்லாம் மறுபடியும் பிரதி செய்வித்துப் பாதுகாப்பதை ஒரு தருமமாகக் கொண்டிருந்தார்கள். இம் முறைகளால் ஏட்டுச் சுவடிகள் பல்கின. ஆனல், காகிதமும் அச்சுத் தொழிலும் வேகமாக முன்னேறி வந்த போது, ஏட்டுக்கிருந்த மதிப்புக் குறைய ஆரம்பித்தது. 19ஆம் நூற்றுண்டில் கையால் ஓலை ஏட்டில் எழுதுவதும் அதிகம் குறைந்துவிட்டது. நூல்கள் அச்சாகி விட்டனவே என்ற ஒரு பொதுவான எண்ணத்தால், ஏடு வைத்திருந்த குடும்பங்களில் வந்தோர், கல்வி இல்லாமையாலும், ஏடுகளைப் பாதுகாக்கும் அறிவும் பொறுமையும் இல்லாமையாலும், இடநெருக்கடியாலும், இந்த இருபதாம் நூற்றுண்டில் ஏடுகளைத் துறக்கலாயினர். இடம் அடைக்கிறது; இவற்றுல் என்ன பிரயோசனம் என்று காவேரியில் சேர்த்துவிட்டேன் என்று சொல்பவர்களையும் நாம் பார்த்திருக்கிறேம். ஆடிப் பதினெட்டில் காவேரிப் பெருக்கில் பழைய ஏடுகளை விடுவது ஒரு பழக்கம் என்ற தப்பான எண்ணமும் சேர்ந்து, மிச்சம் இருந்த ஏடுகள் யாவும் காவேரியோடு கடலில் சேர்ந்தன.

இறையனார் களவியல் உரைகாரர், யாப்பருங்கல விருத்தி உரைகாரர், அடியார்க்கு நல்லார் போன்ற பேராசிரியர் எப்படித்தான் அளவற்ற நூல்களைத் தெரிந்து பெயர் குறிப்பிட்டு எழுதினார்கள் என்றே நாம் இன்று அதிசயிக்க வேண்டியிருக்கிறது.

**ஏரணம் உருவம் யோகம் இசைகணக் கிரதம் சாலம்**
**தாரணம் மறமே சந்தம் தம்பம்நீர் நிலம்உ லோகம்**
**மாரணம் பொருள்என் றின்ன மானநூல் யாவும் வாரி**
**வாரணம் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரும் மாள.**

என்ற பாடல் கடல் கோளால் எத்தனை வகை இலக்கியங்கள் அழிந்தன என்று சொல்லி வருந்துகிறது. ஆனால் கடல் கோள் மட்டுமல்லாது, செயற்கையாகவும் எத்தனை வழிகளில் தமிழ் நூல்கள் அழிந்தன என்பதையும் இங்கு ஓரளவு சுட்டிக் காட்டினோம்.

தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சி நிலை இவ்வாறு இருக்க, இந்தப் பத்தாம் நூற்றாண்டு, இலக்கியத் துறையில் எல்லாச் சிறப்பும் உடையதாய் விளங்கக் காண்கிறோம். பிற்காலம் போல இங்குப் புராணங்கள் எழவில்லை. தனிச் சமய தத்துவம் கூறும் இலக்கியங்கள் எழவில்லை. காப்பியம், சைவப் பாசுரங்கள், புதிய இலக்கண நெறி, இலக்கிய இலக்கண உரை, பிரபந்தங்கள், பிறவகை இலக்கியம் என்ற பகுதிகள் நன்கு வளர்ச்சி பெற்று வருகின்றன. கல்வெட்டுத் துறையின் வளர்ச்சி தனித்த சிறப்புடையது. ஆதித்த சோழன் காலத்தில் ஒன்றிரண்டு வரி மட்டுமேயிருந்த சாசனம், அவன் மகன் முதல் பராந்தகன் தொடங்கி மிகவும் விரிவடைகிறது. இராசராசனது முதல் மெய்க்கீர்த்தி சில வரிகளோடு தொடங்கி, அவன் காலத்திலேயே மிகவும் வளர்ந்து பெருகி விடுகிறது. இதன் சிறந்த பயன், இது இச்சோழர் வரலாற்றைத் தெளிவாய் அறிவதற்குரிய சிறந்த ஒரு கருவி என்பதாகும்.

அத்தியாயம் 1

# இலக்கியம் - 1

## முன்னுரை

நூற்றூண்டு தோறும் வளர்ந்து வந்த தமிழ் இலக்கிய நெறியில் காப்பியம் என்ற பிரிவு மிகவும் சிறப்பு வாய்ந்தது. வடமொழியில் காவியம் என்று சொல்லப்படும் பேரிலக்கியத்தை இங்கு நாம் காப்பியம் என்று பேசுகிறோம். இத்துறையில் 10ஆம் நூற்றூண்டு மிகுந்த சிறப்புடையது. அறம், பொருள், இன்பம், வீடு என்ற உறுதிப் பொருள் நான்கையும் உணர்த்துவது பெருங்காப்பியம். 'சைவ வேடம் தான் நினைத்து ஐம்புலனும் - அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம், பொருள், இன்பம், வீடு-மொழிந்த வாயான் முக்கணாதி மேயது முதுகுன்றே' என்று திருஞானசம்பந்தர் உறுதிப் பொருள்கள் நான்கினையும் குறிப்பிடுவது காணத்தக்கது. மக்கள் மேல் நிலைக்கு வருவதற்குத் தூண்டுகோலாயிருக்கும்படி, தன்னிகரற்ற தலைவனொருவன் வரலாற்றை எல்லாக் கவிச் சுவையும் பொருந்துமாறு பாடுவது பெருங் காப்பியமாகும். வரலாறு நன்கறிந்த காலம் முழுமையும் நூற்றூண்டு தோறும், தமிழில் காவிய வளர்ச்சி இருந்து வந்திருக்கிறது. ஏழாம் நூற்றூண்டு முதல் இவ்வளர்ச்சியைத் தொடர்பாகக் காணலாம். ஒவ்வொரு நூற்றூண்டுக்குமுரிய இலக்கிய வரலாற்றைச் செவ்வனே ஆராய்ந்தால், இந்த வளர்ச்சியைக் காணமுடியும்.

---

1 நூற்றூண்டு தோறும் ஏற்பட்ட இந்த வளர்ச்சியை இவ்வத்தியாய முடிவில் உள்ள காப்பிய அட்டவணையில் காண்க

இந்த முறையில் பார்க்கும்போது, இப்பத்தாம் நூற்றாண்டில் சிறப்புடைய காப்பியங்கள் தோன்றியிருக்கின்றன. பெருங்காப்பியம் சிறு காப்பியம் என்று பேசுவதெல்லாம், காலத்தில் மிகவும் பின்வந்த ஒரு பேச்சு. இலக்கிய வரலாற்றில் இப்பாகுபாடு இல்லை. பாட்டியல் இலக்கணம் கூறிய பல நூல்கள் 8–9 நூற்றாண்டுகளில் தோன்றியிருந்து மறைந்து போயின என்று அறிகிறோம். கிடைக்கிற இலக்கண நூல்களில், பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய பன்னிரு பாட்டியலே முதன்முதலாகக் காப்பிய இலக்கணம் கூறுகிறது. இவ்விலக்கணங்கள் அமைந்ததாய் இப் பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய ஒரு சிறப்பான நூல், சூளாமணி என்ற சைன சமயக் காப்பியமாகும். இது மிக்வும் விரிவான நூல். பண்டைய உரையாசிரியர் பலர் சிந்தாமணியினும் சிறப்பாக இதை மேற்கோளாக எடுத்துத் தருவதால் இதன் உயர்வு புலப்படும். ஆனால் சிந்தாமணியளவு இதைத் தமிழர் அதிகம் விரும்பிப் பயின்றதாகத் தெரியவில்லை. அதற்கு ஒரு காரணம், அந்நூலுக்கு நச்சினார்க்கினியர் பேருரை எழுதிச் சிறப்பித்திருப்பதும், இக்காப்பியத்துக்கு அத்தகைய உரையொன்று இல்லாமையும் ஆகும். அன்றியும் இந்நூலை 1886இல் தாமோதரம் பிள்ளை பதிப்பித்த பிறகு, 1954 வரையில் வேறு பதிப்பே இல்லாமல், கற்போருக்கு நூலும் கிடைக்காமல் இருந்ததும் மற்றொரு காரணம். ஐயரவர்கள் தம் நூலுக்குக் குறிப்புரை, முன்னுரை, வரலாறுகள், அகராதிகள் எழுதிச் சேர்த்திருப்பது போல, தாமோதரம் பிள்ளை இந்நூலுக்குச் சேர்க்கவில்லை; சிந்தாமணியை ஐயரவர்கள் தொடர்ந்து பதிப்பித்துக் கொண்டிருந்தார்கள்.

'ஐம்பெருங் காப்பியம்' என்று 14ஆம் நூற்றாண்டில் மயிலைநாதர்[1] சொன்னார். அவை யாவை என்று அவர்

1 நன்னூல் மயிலைநாதர் உரை, 'எப்பொருள் எச்சொலின்' என்ற 387ஆம் சூத்திரம்.

சொல்லவில்லை. தணிகையுலா வரிகளை வைத்து இன்றுள்ள வழக்கு ஏற்பட்டிருக்கிறது – சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என. இவ்வைந்தையும் நீக்கி ஏனையவற்றை ஒரு பெயர் கொடுத்துச் சொல்வதற்காக, தாமோதரம் பிள்ளை சிறு காப்பியம் என்று என்று சொன்னார்.[1] "சீவகசிந்தாமணி முதலிய பெருங் காப்பியங்களொத்த சிறந்த தமிழிற் சமணர் எழுதிவைத்த யசோதர காவியம் உதயண குமார காவியம், நாக குமார காவியம், சூளாமணி, நீலகேசி எனும் பெயரிய சிறு காப்பியங்களும் உள"; ஐந்து என்று இவர் சொல்லவில்லை. சிறு காப்பியம் என்ற தொடரை வைத்துப் பின் வந்த இந்த நூற்றுண்டின் ஆராய்ச்சியாளர் அனைவரும், சூளாமணி ஒரு சிறு காப்பியம் என்று வழங்கத் தலைப்பட்டனர். இது சிறிதும் பொருத்தமில்லாத வழக்கு. இதைப் பின்னே சிறிது ஆராய்கிறேம். சிந்தாமணி எந்த அளவுக்கு ஒரு பெருங் காப்பியமோ, ஒரு சிறந்த நூலோ, அந்த அளவுக்குச் சூளாமணியும் பெருங்காப்பியமாகும், சிறந்த நூலாகும்.

குண்டலகேசி என்ற பௌத்த வாத நூல் இக்காலத்தே எழுந்தது என்று கருதுகிறேம்; நூல் இல்லை; இதிலும் கதையினமைப்பு உண்டு. சைன நூல்களில், சூளாமணி மட்டுமன்றி, நீலகேசி என்ற சைன சமய நூலும் இக்காலப் பகுதியில் எழுந்திருந்தது. இது, வெறுந் தர்க்க வாதம் செய்து பல சமயங்களையும் கதாநாயகி வென்றுள் என்று சொல்கின்ற நூல். சூளாமணி போலன்றி, இதற்குச் சிறப்பான பழைய உரையும் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளது. நாரத சரிதை என்ற புராணமும், அமிர்தபதி என்ற ஒரு காப்பிய நூலும் இக்காலத்து எழுந்தவை; இரண்டுமே சைன நூல்கள். ஆனல் இந்நூல்கள் இன்று இல்லை; நாரத சரிதையின் பாடல்கள் சிலவும், மற்றதன் பெயரும்

1 சூளாமணி, தாமோதரம் பிள்ளை பதிப்பு, பதிப்புரை பக்கம் 3.

மட்டுமே தெரிய வருகின்றன. குறிப்பிடத்தக்க மற்றொரு சிறந்த இலக்கியம் பெரும் பொருள் விளக்கம் என்பது. தமிழ் நெறி விளக்கம், அகப் பொருள் விளக்கம் என்ற அகப் பொருள் நூல்கள் போல, இது புறப் பொருளைக் குறித்த இலக்கணம் கூறி, உதாரணச் செய்யுட்களும் தரு கின்ற நூலாயிருந்தது. மேலும் இதன் பாடல்கள் 41 புறத் திரட்டாலும், இன்னும் பல நச்சினர்க்கினியர் தொல்காப்பிய உரையாலும் தெரிய வருகின்றன; ஆனல் நூல் இல்லை. இங்குக் கூறிய பிற நூல்கள் யாவும், பிந்திய அத்தியாயங் களில் உரிய இடத்தில் ஆராயப்படுகின்றன.

இந்த வரலாற்றின் இறுதியில் தரப்பட்டுள்ள தமிழ்க் காப்பிய அட்டவணையுள், சாசனங்களால் மட்டும் தெரியவந்த இராசராச விசயம், அருணிலை விசாகன் பாரதம் போன்ற நூல்களைச் சேர்க்கவில்லை. அதனுள் காட்டப்பட்ட கல் லாடம், காப்பியமன்று. 11ஆம் நூற்றுண்டுக்குரிய இடத்தை நிரப்புவதற்காக மட்டுமே இந்நூல் அங்குச் சொல்லப்பட்டது. பின்வரும் நூல்களில் சமயச் சார்புகள் சொல்லப்பட்டிருந் தும், அவை பொதுக் காப்பியங்களேயன்றி, சமயக் காப்பி யங்களல்ல. சைனம் – பெருங்கதை; வைணவம் – உத்தர ராமாயணம், வில்லி பாரதம். குறிப்பிட்ட சைவ நூல்கள் யாவும் சமயக் காப்பியங்களே. சமயத்தைச் சொல்வதே நோக்கமாய்க் கொள்ளாத காப்பியமென்று கருதத் தக்கவை சிலப்பதிகாரம், கம்ப ராமாயணம், பாரத வெண்பா, நள வெண்பா, காதம்பரி, அரிச்சந்திர புராணம், நைடதம், புரூரவா சரிதை என்பன மட்டுமே.

ஒரு பழம் பாடலை இங்குக் குறிப்பிடவேண்டும். சைன தோத்திரத் திரட்டு என்ற பெயரில் அச்சிடப்பட்ட (1912) பிற்காலத் தொகுப்பொன்றில் திருநறுங் கொண்டை (குன்றம்) அப்பாண்டைநாதர் பேரில் கட்டளைக் கலித்துறை என்ற தலைப்பில் ஐந்து பாடல்கள் அச்சிடப்பட்டுள்ளன. அதன்

பின் நான்கு பாடல்கள் அப்பாண்டை நாதரைப் பெயர் சொல்லித் துதிப்பன; கட்டளைக் கலித்துறையில் அமைந் தவை. பின்வரும் பாடல் மூன்றும் பாடல் :

**எப்பொழுதும் முனைமறவா திருக்கவென் நெஞ்சுதனில்**
**ஒப்பாரும் பிண்டியி னீழல் உறைந்திடும் சினேஸ்வரனே**
**மெப்பாக என்றன் வினைதனைத் தீர்த்துநான் வீடுசேரத்**
**தப்பா வரமருள் அப்பாண்டை நாத தயாபரனே.**

இது மிகவும் பிற்காலத்தது என்பது வெளிப்படை. ஆனால் முதல் பாடல் மட்டும், காப்பியக்கலித்துறை யாப்பில் அமைந்து, பழம் பாடல்களின் சொல்லமைதியைக் கொண்டு உள்ளது :

**குற்றங்க ளில்லான் குணத்தால்நிறைந் தான்கு ணத்தால்**
**மற்றிந்த வையம் அளந்தான்வையம் நின்ற பெற்றி**
**முற்றும் முரைத்தான் உரையீரொன்ப தாய தொன்றுன்**
**செற்றங்கள் தீர்ப்பான் விமலன்சரண் சென்னி வைத்தேன்.**

பார்த்த மாத்திரத்தில் இது பழம்பாடல் என்பது நன்கு தெரியும். தனிப்பாடலாய்க் கிடைத்து, அத்தோத்திரத் திரட்டினுள் சேர்க்கப்பெற்றிருக்கிறது. இது ஒரு சைன காப்பியத்தின் காப்புச் செய்யுள் போலும். எந்த நூல் என்பது தெரியவில்லை.

## சூளாமணி

### நூல்

இந்நூலை முதன் முதலில் அச்சிட்ட தாமோதரம் பிள்ளை, இது ஐஞ்சிறு காப்பியங்களுள் இரண்டாவது என்று ஏடு களில் எழுதப்பட்டுள்ளது என்றும், மற்ற நான்கும் நீலகேசி, யசோதர காவியம், உதயண குமார காவியம், நாக குமார காவியம் என்பன என்றும், இவற்றின் வரிசை எப்படி

என்பது விளங்கவில்லை என்றும் குறிப்பிட்டிருக்கிருர். இந் நான்கினுள் நாக குமார காவியம் தமிழில் இல்லை;[1] இது தமிழ்க் காப்பியம் என்று யார் சொன்ஞர் என்பது தெரிய வில்லை. வடமொழியில் இந்நூல் இருப்பதாகச் சொல்வர். தமிழில் இதன் கதைப் போக்குக்கூடத் தெரியாது. இது போல, சிறு காப்பியம் என்பது, உறுதிப் பொருள் நான்கில் வீட்டை நீக்கி மற்ற மூன்றையும் காப்பிய இலக்கணம் பொருந்த உரைப்பது என்பர். சூளாமணியோ, வீட்டையே பெரிதும் விரித்துக் கூறுகிறது. துறவுச் சருக்கம், முத்திச் சருக்கம் என்ற இரு சருக்கங்கள் (290 பாடல்) வீட்டுக் கென்றே ஒதுக்கியிருக்கிறது. இந்த நிலையில், இதைச் சிறு காப்பியமென்று கூறுவது பிழை. உண்மையில் இது சிந்தாமணி போன்ற பெருங்காப்பியமே.

சூளாமணி, பாயிரமும் 12 சருக்கங்களும் 2131 விருத்தப் பாக்களும் கொண்டது. பாயிரப் பகுதி 6 பாடல்; முதல் பாடல் அருகன் துதி. இரண்டாவது 'செங்கண் நெடியான் சரிதம் செப்ப லுற்றேன்' என்று நூல் நுதலிய பொருள். அடுத்தது அவை யடக்கம். நான்காம் பாடல் நெடுஞ்சேந்தன் என்னும் 'தூமாண் தமிழின் கிழவன் அவையுள்' அரங் கேற்றப்பட்டதென்று கூறுகிறது. அடுத்தது, 'திங்கள் மறுவும் சிலர் கைதொழச் செல்வது போல்வது, செங்கண் நெடியான் திறம் பேசிய இந்நூல்' என்பது. இறுதிப் பாடல், நூல் வழி கூறுவது; செஞ்சொற் புராணத் துரையின் வழி இது வந்தது என்கிருர்; இப்புராணம் சைன மகா புராணம் போலும். சிந்தாமணி முதலான நூல்களுக்குப் பதிகம் இருப்பது போல இந்நூலுக்குப் பதிகம் இல்லை.

---

1 நாககுமார காவியம் 120 பாடல் கொண்ட ஒரு சிறு நூல் என்றும் அதை ஒரு சைன அன்பர் அச்சிடும் பொருட்டுச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் கொடுத்திருக்கிருர் என்றும் தெரியவருகிறது.

**சூளாமணி என்ற பெயர்**

சூளாமணி என்பது மகுடத்தின் முடிமணி. இத் தொடரை 'கலினமா... சூளாமணி சிந்தித் திரியுமன்றே' என்றும், 'தொல் குலத்துச் சூளாமணியாய்ச் சூடாதிருந்தான்' என்றும் சிந்தாமணி கூறும்; முடியின் மணி என்றும் நாயக மணி என்றும் நச்சினார்க்கினியர் உரை கூறுகிறார். 'சூளாமணி உம்பர்க் காயவன்' என்பது திருக்கோவை; 'சூளாமணியொடு பொன்னரிமாலையும்... தாங்கி முடிமிசை' என்று ஒரு பழம் பாடலை அடியார்க்கு நல்லார் மேற்கோள் காட்டுகிறார். "வானோர் மகுட சூளாமணி" என்பது சிவஞான சித்தியார். 'மூவுலகத்துச் சூளாமணி விளக்கு' அருங்கலச் செப்பு (160). கம்பராமாயணத்தில், சுந்தர காண்டத்து ஒரு படலமே சூடாமணிப் படலமென்ற பெயர் உடையது. 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும் சுடர்த் திங்கட் சூளாமணியும்' (4·2·1), நறுங் கொன்றை திங்கட் சடைலப் பொடிச் சுண்ண மாசுணஞ் சூளாமணி கிடந்து படரச் சுடர் மகுடா' (4. 110. 6) என்பன அப்பர் தேவாரம்.

சூளாமணி என்பது சூடாமணி; வடமொழித் தொடர். டகர ளகரப் போலியால் இப்படி வந்தது; சூடா – முடி, தோலா மொழித் தேவர் தம் நூலுக்கு இப்படி பெயர் வைக்கவில்லை. 'செங்கண் நெடியான் சரிதம்' என்றுதான் சொல்லுகிறார் (2, 5). மயிலைநாதர் நன்னூல் உரையில், 'தன்மையால் பெயர் பெற்றன சிந்தாமணி சூளாமணி நன்னூல் முதலியன' என்று கூறுகிறார் (14ஆம் நூற்றாண்டு). ஆகவே, இந்நூல் தன் பொருட் சிறப்பாலும், கவிதைச் சிறப்பாலும் இப் பெயர் பெற்றது என்பது அவர் கருத்தாதல் தெரிகிறது. தோலா மொழித் தேவர் தம் நூலுள் நான்கு இடங்களில் சூளாமணி என்ற சொல்லை உபயோகிக்கிறார். இரத்தின பல்லவ நகரம் 'சூளாமணியின் ஒளிர்வது' (284); 'அருஞ்சயன் அவனை... மலைக்கோர் சூளாமணி எனக் கருது'

(329); திவிட்டன் குன்றேந்தி நின்ற கோலமானது 'முடிமேல் சூளாமணி முளைத்த சோதி போன்றது' (15–19); முத்திநிலை அடைந்த பயாபதி மன்னன் 'உயர்ந்து உலகின் முடிக்கோர் சூளாமணியானான்' (21–28). சூளாமணியானான் என்று சொல்வதை வைத்து நூற்பெயரும் அமைந்தது என்று சொல்வதுண்டு. காரணம் சொல்ல முடியவில்லை. வடமொழி மூலமான மகா புராணம் சைனருக்குச் சூளாமணியானதால், அதன் ஒரு பகுதிக்குத் தமிழ் மொழியில் எழுந்த புராண மாகிய இந்நூலும் அவ்வாறு கருதப்பெற்றது என்று கொள்வது பொருத்தமாகும். மேலும், இவ்வாசிரியர் அவனி சூளாமணி என்ற பாண்டியன் காலத்தே வாழ்ந்தார்; நூல் அவன் பெயரால் சூளாமணி என வழங்கப் பெற்றது என்று கருதுவோரும் உளர். இதற்கு ஆதாரம் இல்லை. (பின்னே காலம் என்ற தலைப்பைப் பார்க்க.)

சூளாமணி என்று பெயர் அமைந்த நூல்கள், சூடாமணி உள்ள முடையான் (சோதிட நூல் 12ஆம் நூற்றாண்டு), சூடாமணி நிகண்டு (16ஆம் நூற்றாண்டு) முதலாயின.

இனி, சூளாமணியிலும் மகாபுராணம் பற்றிய குறிப் புக்கள் இருப்பதாகப் பதிப்பாசிரியர் குறிப்பிடுகின்றனர். 'மன்னனுக்கு... ஆதிமா புராணம் ஓதினான்' (387; பிரத மானுயோகம் என்ற ஆகமம்.) திவிட்டன் 'புராண நூலக த்துத் தோன்றிய காளை' (405). புராண நன்னூல் உரைப்பக் கேட்டறிவன் (563); புராண நூற் புலவர் (1509).

நம் காலத்தவர், காப்பியங்களின் பெயர்கள் தமிழ் அன்னைக்கு அணி கலன்கள் என்று பொருத்திப் பார்ப்பதில் ஒரு மகிழ்ச்சி கொள்கின்றார்கள். இளங்கோ அடிகள் சிலப் பதிகாரத்தைச் சிலம்பு ஆகிய காலணியாகச் சூட்டினார் என்பர்; சாத்தனார் மணிமேகலை செய்து அவள் இடையில் பூட்டினார்; தேவர் சிந்தாமணி கோத்து நெஞ்சில் மணிமாலை

யாக அமைத்தார்; வளையாக ஒருவர் வளையாபதி செய்து கோத்தார்; குண்டலமாகக் குண்டலகேசி செய்து காதில் அணிந்தார்; நம் தோலாமொழித்தேவர், தாம் புனைந்த மணியைச் சூளாமணியாகத் திருமுடியில் சூட்டினுர் என்பர். இவ்வாறு பார்க்கும்போது காண்கிற ஓர் பெயர் ஒற்றுமை பெருங்காப்பியங்கள் ஐந்துக்கும் பொருந்துவதோடு, ஐஞ்சிறு காப்பியங்களில் சூளாமணி யொன்றுக்கே பொருந்துகிறது, ஏனைய நான்கிற்கும் பொருந்தவில்லை என்பது கருதத்தக்கது; இதனுல் இந்நூல் ஐம் பெருங் காப்பியங்களோடு ஒருங்கு எண்ணத் தக்கது, இது சிறு காப்பியம் அல்ல என்றும் கருதலாம்.

மேற் குறிப்பிட்டவாறு வழங்குவதற்கு அடியெடுத்துக் கொடுத்தார், கந்தப்பையர் என்ற 19ஆம் நூற்ருண்டுப் புலவர். தாம் பாடிய திருத்தணிகை யுலாவில் அவர் கூறுகிருர் :[1]

**சிந்தா மணியாம் சிலப்பதிகா ரம்படைத்தான்**
**கந்தா மணிமே கலைபுனைந்தான் - நந்தா**
**வளையா பதிதருவான் வாசவனுக் கீந்தான்**
**திளையாத குண்டலகே சிக்கும் ( 526-7 ).**

## ஆசிரியர்

தோலாமொழித் தேவர் என்று வழங்கப்படுகிருர். தமிழ் இலக்கிய வரலாற்றில் எத்தனையோ ஆசிரியர் பெயர் களும் வரலாறுகளும் விளக்கம் பெற்றிருக்க, இவர் வரலாறு ஒன்றுமே தெரியவில்லை. நூற்பெயர் சூளாமணி என்பதும் ஆசிரியர் பெயர் தோலாமொழித் தேவர் என்பதும், இரு பழம் பாடல்களால் தெரிய வருகின்றன.

1 இங்குள்ள ஐந்து நூல்களே ஐம்பெருங் காப்பியமென்பதற்கு ஆதார மில்லை. எப்படியோ கந்தப்பையர் சூளாமணியை விலக்கி விட்டார்; பின்னுல் இவர் அகத்தியம் தொல்காப்பியம் நன்னூல் ஆகிய இலக்கண நூல்களையும் இவ்வுலாவில் குறிப்பிடுகிருர்.

பொழிந்து பொருள்விளக்கும் போழ்ந்திருள்கால் சீக்கும்
இழிந்தவரை ஏற்றி நிறுத்தும் - செழுந்தரளத்
தோளா மணியைநகும் தோலா மொழிதொகுத்த
சூளா மணியகத்துச் சொல்.

திக்கெட்டும் புகழ்படைத்த திறல்விசயன்
புயலனைய கையன் தெவ்வைக்
கைக்கொட்டி நகைக்கும்இகல் கார்வெட்டி
அரையன்வள நாடற் கேற்பப்
பொக்கெட்டும் இல்லாதான் புகழ்த்தரும
தீர்த்தன்மலர்ப் பதம்பூ சிப்போன்
சொற்கெட்டா வரன்தோலா மொழிசூளா
மணியுணர்வோர் துறைகண் டோரே.

*இப் பாடல்கள் ஆசிரியர் பெயரையும் நூற்பெயரையும் தெளிவாக உரைக்கின்றன. தோலா மொழி என்று இவர் பெயர் இரு பாடல்களிலும் சொல்லப்பட்டிருந்த போதிலும், இது இவர் இயற் பெயரென்று தோன்றவில்லை; நூற் பாடல்களின் அருமை நோக்கி இப் பெயர் இவருக்கு வந்தது போலும். பொய்யா மொழி என்ற பெயரின் வடமொழி வடிவமான சத்தியவாக்கியன் என்ற பெயருடைய ஒரு கங்க அரசன் - சத்திய வாக்கிய கொங்குணி வர்ம பூதுகன் என்பவன் - கங்க நாட்டில் கி. பி. 908 முதல் 950 வரை ஆட்சி புரிந்தான். தோலா மொழி என்பதும் அத்தகைய ஒரு பெயராகவே இருக்கும் போலும். இவரது இயற்பெயர் ஸ்ரீ வர்த்த தேவர் என்று அமைந்திருக்கலாம் என து. அ. கோபிநாத ராவ் அருங்கலான்வயம் பற்றி எழுதிய ஒரு கட்டுரையில் குறிப்பிட்டார்.*[1]

*"சைனசாரியர் பற்பல சங்கத்தாராகப் பிரிக்கப் பட்டிருந்தார்கள். ஒவ்வொரு சங்கத்திலும் பல கணங்கள்*

1. செந்தமிழ் தொகுதி 5, பக்கம் 95-102; சீவக சிந்தாமணி மூலம், சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பு; முகவுரை பக்கம் 19–21

இருந்தன; இக்கணங்கள் ஒவ்வொன்றிலும் பல கச்சைகள் அடங்கியிருந்தன. தென் தேசத்துச் சங்கங்களில் மிகப் பிரபலமாயிருந்தது திரமிள சங்கம், இத் திரமிள சங்கத்தில் பிரசித்தியடைந்தது நந்திகணம், நந்தி கணத்தில் மிகச் சிறந்தது அருங்கலான்வயம். இந்த அன்வயத்தோர் முதன் முதல் தீபங்குடியிலுள்ளோரா யிருந்தனர். இவர்கள் தமிழரேயாயினும், தமிழ், கன்னடம், சம்ஸ்கிருதம் என்ற மொழிகளில் புலமை யுடையராய் விளங்கினர்கள்.

இங்குக் குறித்த திரமிள சங்கத்தைச் சார்ந்தவர் குணபத்திர முனிவர். இவர் தம் ஆசிரியராகிய ஜின சேனரால் தொடங்கப்பட்டுச் செம்பாதி முடிவுபெற்ற மகாபுராணத்தின் பிற்பாகமாகிய உத்தரபுராணத்தை இயற்றியவர். இவ்வுத்தர புராணம் இயற்றி முற்றியது கி. பி. 897."

குணபத்திர முனிக்குப் பின் குமரசேனரென் றொருவரும் அவருக்குப் பின் சிந்தாமணி யாசிரியரும், அவருக்குப் பின் ஸ்ரீ வர்த்த தேவரும் இருந்தார்கள் என்று கன்னட நாட்டில் சிரவண பெள்குளத்திலுள்ள கல்வெட்டொன்று விரிவாய்த் தெரிவிக்கிறது. அங்கு ஸ்ரீ வர்த்த தேவர் புகழைக் கூறும் வடமொழிப் பாடல் பின்வருவது :

**சூடாமணி : கவீநாம் சூடாமணி நாம**
**ஸேவ்ய காவ்ய கவி :**
**ஸ்ரீ வர்த்த தேவ ஏவஹி க்ருதபுண்ய :**
**கீர்த்திம் ஆஹர்த்தும்.**

"சூடாமணி என்பது காவியங்களுக்கெல்லாம் சூடாமணி என்று சொல்லப்பெற்ற ஒரு சிறந்த காவியமாகும். இதைக் கீர்த்தி பெறத் தக்க புண்ணியம் செய்தவராகிய ஸ்ரீ வர்த்த தேவர் என்பவர் செய்தார்" என்பது இதன் பொருள். இந்த வடமொழிப் பாடல் பிறந்த இடம் கன்னட நாடாயிருந்த

போதிலும் கூட, இது தமிழ்ச் சூளாமணியையே குறிப்பிடுகிறது என்று நாம் கருதலாம். வேறு மொழியில் இப்பெயருடைய காவியம் எதுவும் இல்லை. மேலும், தமிழ் நாட்டில் இருந்த அருங்கலான்வயத்தைச் சேர்ந்த சைன அறிஞர் அனைவரும் கன்னடம் வல்லுநர்.[1] (இது கொள்ளத் தக்கதே. பாண்டி நாட்டில் புகுந்து சைனத்தைப் பரப்பிய களப்பிரர் கன்னட நாட்டினர் என்பது இங்கு நினைவு கூரத் தக்கது.) எனவே, தமிழ் நாட்டில் செய்யப்பட்ட முடியணியாகக் கொள்ளத்தக்க சிறந்த காவியம் செய்த சைனப் புலவரை நன்கு பெயர்தெரிந்து கன்னட நாட்டில் ஸ்ரீ வர்த்த தேவர் என்று பெயர் குறிப்பிட்டார்கள் என்று கருதுவது பொருத்தமே. 24ஆம் தீர்த்தங்கரராகிய ஸ்ரீ வர்த்தமானர் பெயரைப் பின்வந்தோர் சூட்டிக்கொள்வது இயல்பு. ஸ்ரீ வர்த்ததேவர் என்பது ஸ்ரீ வர்த்தமான தேவர் என்பதன் சுருக்கம். இதுவே சூளாமணி ஆசிரியரின் பெயர் என்றும், இவருடைய வாக்கு பொய்யாத வாக்கு, தோலாத வாக்கு என்று அக்காலத்தோர் இவரைக் கருதியமையால் தோலா மொழித்தேவர் என்று இவரைச் சொல்லிவந்தனர் என்றும் அறியலாம். மேலும் இவர் தமது நூலில் இரண்டிடங்களில் தோலா நாவில் சுச்சுதன் (308) என்றும் ஆர்க்கும் தோலா தாய் (1473) என்றும் குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது.

இவர் தரும தீர்த்தன் என்ற ஆசாரியரின் மாணக்கர் என்று பாடல் கூறுகிறது. தருமதீர்த்தங்கரர் என்ற 15ஆம் தீர்த்தங்கரர் வரலாற்றில் ஈடுபாடுடையவராய் இருந்த ஓர் ஆசாரியர் இவருக்குக் குருவாவார்.

சுருங்கச் சொன்னல், சூளாமணியின் ஆசிரியரான தோலாமொழித்தேவர், ஸ்ரீவர்த்ததேவர் என்ற இயற் பெயருடையார்; இவர் தீபங்குடியில் நிடும்பறை தீர்த்தக் கரையிலிருந்த அருங்கலான்வயத்தைக் கொண்ட தமிழ்ச்

1. தோலாமொழித் தேவர் கன்னட மொழிக்குரியவரா என்பதும் சிந்திக்கத் தக்கது.

*சங்கத்தைச் சேர்ந்தவர். தருமதீர்த்தங்கரரிடத்து ஈடுபாடு மிக்கவர். குணபத்திரருக்குப் பின் வந்தவர். கார்வெட்டி அரையன் என்ற தலைவனால் ஆதரிக்கப்பட்டு, வடமொழி மகாபுராணத்திலுள்ள சிரேயாம்ச சுவாமியின் சரித்திரத்தின் பகுதியாயிருந்த பிரசாபதி என்ற அரசன் வரலாற்றைச் சூளாமணி என்ற அழகிய தமிழ்க் காவியமாகத் தமிழில் பாடினார்.*

*ஆசிரியர் எந்த நாட்டுக்குரியவர் என்பதுபற்றித் திட்டமாகத் தெரியவில்லை. கார்வெட்டிவிசயன் வரலாற்றினால் தொண்டை நாடு என்று சிலர் சொல்லுவர். சிலர் அவனி சூளாமணி என்ற பாண்டியனை மனத்திலிருத்திப் பாண்டி நாட்டினர் என்பர். இவற்றுக்கு, 'திக்கெட்டும்' என்ற தனிப் பாட்டும், நூற் பாயிரம் நான்காம் பாடலில் வரும் 'திருமால் நெடுஞ்சேந்தன் எனும் தூமாண் தமிழின் கிழவன்' என்ற தொடரும், முறையே ஆதாரங்களாகும். இவற்றை வேறிடங்களில் ஆராய்ந்திருக்கிறோம். இவற்றினும் பார்க்க நூலகத்துள் கிடைக்கும் மற்றொரு குறிப்பு, இவர் சோழ நாட்டினர் என்று கருதும்படி உள்ளது. சோதிமாலையின் சுயம்வரத்திற்கு வந்த மன்னர்களைக் கூறும் காலத்து இவர் கற்பனையான பல நாடுகளைக் குறிப்பிடுகிறார். அவர்களுள் தமிழ்நாட்டு மன்னர் மூவருமே உண்மையில் தெரிந்த நாடுகளுக்கு உரியவர். அவர்களாவார், மதுரைவள நாடன், சேரன், உறந்தைக் கோமான் என்போர். பாண்டியன் வெண்சங்கும் மணிமுத்தும் உடையவன் (1814); சேரன் யானையுடையவன் (1815); சோழன் முரசு முதலான பொருள்களை மும்மூன்றாக உடையவன் (1816) என்று கூறுகிறார்:*

வண்டறையும் அரவிந்த வனத்துலாய்
மலர்ந்தெழுந்த மழலை யன்னம்

உண்டுறைமுன் விளையாடி இளையவர்கள்
நடைபயிலும் உறந்தைக் கோமான்
கொண்டறையும் இடிமுரசும் கொடிமதிலும்
குளிர்புனலும் கொடியும் பூவும்
ஒண்துறையும் மும்மூன்றும் உடையகோன்
இவனிவன தெழிலும் காணாய்.

இங்கு முரசு மதில் புனல் கொடி பூ துறை ஆகியன இவனுக்கு மும்மூன்றாக உள்ளன என்று கூறுகிறார். இவ்வாறு சோழனுக்குரிய அடையாளப் பொருட்களை விரிவாகக் குறிப்பிடுகின்ற இவர், சோழ அரசை நன்கு தெரிந்தே குறிப்பிடுகிறார் என்று கொள்ளலாம். இதுபற்றி இவர் சோழ அரசரது பாராட்டுதலையும் பெற்றவர் என்று கருதலாம்.

காலம் என்ற தலைப்பில், சேந்தன் என்று பாயிரத்துள் வரும் பெயர் ஆராயப்பட்டுள்ளது. இச் சேந்தன் சோழ நாட்டினனாயிருக்கலாம் என்ற கருத்தும் அங்குச் சொல்லப் பட்டது. இவன் சபையில் தேவர் தம் நூலை அரங்கேற்றி யமை பாயிரம் கூறும். இதனாலும் இவர் சோழநாட்டினர் என்பது பெறப்படும்.

## மூல நூல்

வர்த்தமான மகாவீரர் கி. மு. 599-527 ஆகிய காலத்தில் வாழ்ந்தவர். அவருக்குப் பின்னரே சைன சமய சம்பிர தாயங்கள் புராணங்கள் தத்துவங்கள் தோன்றின. சைன சமய தீர்த்தங்கரர் இருபத்து நால்வர் என்பது அச்சமயத் தார் சொல்லும் வரலாறு. இவ்விருபத்து நால்வர் பெயரும் கதைகளும் பின்னரே எழுதல் இயல்பு. மகாவீரருக்குமுன், இந்திய நாட்டில், அதாவது அவருடைய சமயம் பரவிய பரதகண்டத்தில், வடமொழியில் இராமாயணம் மகா பாரதம் பாகவதம் ஆகிய இதிகாசக் கதைகள் வழங்கிவந்தன,

நூலாக எழுதப்பட்டிருந்தன. இவை யாவும் திருமாலின் அவதாரம் பற்றிய கதைகள். (சிவபெருமானுக்கு அவதாரம் சொல்லப்படுவது மரபன்று ஆதலால், இத்தகைய கதைகள் அவர்பற்றி எழவில்லை.) சைனப் புராணம் எழுதத் தொடங்கினோர் அவ்விதிகாசக் கதைகளைத் தங்கள் சமயத்து முன்னோருக்கு உரியனவாகச் சேர்த்துக்கொண்டார்கள். இது இயல்பே. இந்த மண்ணில் பிறந்து வாழ்ந்து நூல் செய்தோர் தங்கள் சமயாசாரியர் தோன்றுவதற்கு முன்னரே வழங்கிய இந்த நாட்டுக் கதைகளைத்தானே தங்கள் புராணமாகக் கொள்ளமுடியும்? இவ்வாறு வடமொழியில் மகா புராணம் என்பது ஏற்பட்டது. அது 24 தீர்த்தங்கரர் சரித்திரத்தையும் கூறுகிறது. தமிழ்க் காப்பியங்களான சீவக சிந்தாமணி, சூளாமணி என்பனவும், யசோதரகாவியமும், சைனத் தமிழ்ப்புராணமான மேருமந்தர புராணமும், இன்று இல்லாது மறைந்துபோன சாந்தி புராணம், நாரத சரிதை என்பனவும், அதிலிருந்து எடுத்து விரித்த சரித்திரங்களைக் கொண்டவை.

சிந்தாமணி, சூளாமணி ஆகிய நூல்கள் தோன்றி நெடுங்காலமான பின்னர், (15ஆம் நூற்றாண்டில்) தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடையில் மகா புராண சங்கிரகத்தின் மொழி பெயர்ப்பாக ஸ்ரீ புராணம் என்ற நூல் எழுதப்பெற்றது. இதனுள், சூளாமணியின் கதாநாயகனை திவிட்டன் சரித்திரம், 11ஆவது சிரேயாம்ச சுவாமி புராணம் என்ற பகுதியில் காணப்படுகிறது. பயாபதி (பிரசாபதி) மன்னன் பிள்ளைகளைப் பெற்றது முதல், அப்பிள்ளைகளான விசய திவிட்டர் வளர்ந்து, சிங்கத்தைக் கிழித்து மணம் செய்து கொண்டு அச்சுவக்கிரீவனைக் கொன்று, ஆட்சி செய்து, தாங்களும் பிள்ளைகளைப் பெற்று அவர்களுக்கும் மணமாகி, இறுதியில் பயாபதி துறவு மேற்கொண்டு

செல்வது வரையில் சூளாமணிக் கதை அப்படியே இங்கும் உள்ளது.

தோலாமொழித் தேவர், பாயிரத்தில் தம் நூலுக்கு நூல்வழி கூறுகிறார் (6):

**விஞ்சைக் கிறைவன் விரைசூழ்முடி வேந்தன் மங்கை**
**பஞ்சிக் கனுங்கும் சிலம்பாரடிப் பாவை பூவார்**
**வஞ்சிக் கொடிபோல் பவள்காரண மாக வந்த**
**செஞ்சொற் புராணத் துறையின்வழிச் சேறும் அன்றே.**

இங்கு, செஞ்சொற் புராணம் என்று சொல்லப்பட்டது, அருக தேவனே சொல்லியதாகக் கருதப்படும் மகாபுராணம் என்பர். இதிலுள்ள கதையை எடுத்தே தேவர் தம் காப்பியத்தைப் பாடினார். வேந்தன் மங்கை யாவாள் வித்தியாதர நாட்டு அரச குமாரியாகப் பிறந்து மானுடனை திவிட்டனை மணந்த சயம்பவை என்னும் சுயம்பிரபை. தமிழ் ஸ்ரீ புராணமானது தேவருக்கு 400 ஆண்டுகளுக்குப் பின் செய்யப்பட்ட நூல்.

**சூளாமணியின் கதை**

சூளாமணிக் கதை தமிழில் அதிகம் பிரசித்தமாக வழங்கவில்லை. அதுபற்றி, அதன் கதைப் போக்கை இங்குச் சுருக்கமாய்த் தருகிறோம். பரத கண்டத்தில் சுரமை நாட்டின் தலைநகர் போதனமா நகரம். அங்குப் பயாபதி மன்னன் ஆட்சி புரிந்தான். அவனுக்கு மிகாபதி, சசி என்ற இரண்டு மனைவியர். இருவருக்கும் பலராமன், கண்ணன் என்ற இருவருடைய அவதாரம் போல வெண்ணிறமான விசயனும், கருநிறமான திவிட்டனும் பிறந்தனர். ஒரு நிமித்திகன் வந்து திவிட்டன் வித்தியாதர நாட்டு அரச குமாரியை மணப்பான் என்று ஒரு கனவின் பயனைக் கூறினன். இதுவரை நாட்டுச் சருக்கம், நகரச் சருக்கம்.

குமார காலச்சருக்கம், இரதநூபுரச் சருக்கம், மந்திர சாலைச் சருக்கம், தூதுவிடு சருக்கம்: வித்தியாதரர் உலகில் சுவலனசடி என்ற அரசன் இரதநூபுரம் என்ற நகரில் ஆட்சிசெய்தான். அவனுக்கு அருக்க கீர்த்தி என்ற புதல்வனும், சுயம்பிரபை என்ற புதல்வியும் இருந்தனர். இவ்வரசன் தன் மகளுக்குச் சுயம்வரம் வைக்கும்போது ஒரு நிமித்திகன், அவளுக்கு ஏற்ற மணாளன் பூலோகத்தில் பிறந்த திவிட்டனே ஆவான் என்றும், இதற்குச் சான்று பின்னும் ஒரு மாதத்தில் அவன் ஒரு சிங்கத்தின் வாயைப் பிளப்பான் என்றும் கூறினான். அதன்மேல் அரசன் மருசி என்பவனை இதன்பொருட்டுப் பயாபதியிடம் தூது அனுப்பினான். அவனும் வந்து இவ்வரசனால் உபசரிக்கப்பட்டு, தான் வந்த காரியத்தைத் தெரிவித்தான். பயாபதி அதற்குச் சம்மதிக்கவே, மருசி தன் நகரம் திரும்பினான்.

சீயவதைச் சருக்கம்: பின்னர்த் திவிட்டன் சிங்கத்தின் வாயைப் பிளக்கிறான் என்பதை அறிய ஓர் ஒற்றனை அனுப்பிச் சுவலனசடி காத்திருக்கும் காலத்தில், வித்தியாதரர் உலகில் மற்றொருபால் உத்தரசேடியில் அரசாண்ட அச்சுவகண்டன் என்ற கொடுங்கோல் மன்னன், சுவலனசடி தன் பெண்ணைப் பூலோகத்தில் மணம் செய்து கொடுக்கப் போவதறிந்து கோபங்கொண்டு, பயாதிபதியிடம் தனக்குத் திறையனுப்பச் சொல்லித் தூதரை அனுப்பினான். திவிட்டன் அத்தூதரை வெருட்டித் துரத்திவிட்டான். அதன்மேல் அச்சுவகண்டன் மந்திரியானவன் ஒரு தூதனை மாயச் சிங்கமாகப் பயாபதியின் நாட்டில் புகுந்து அச்சுறுத்துமாறு அனுப்பினான். திவிட்டன் அச்சிங்கத்தைக் கண்டு துரத்தியபோது அப் போலிச் சிங்கம் அவனிடம் பயந்து, உண்மையான ஒரு சிங்கம் உறங்கும் குகையில் புகுந்து மறைந்தது. அங்கிருந்த உண்மையான சிங்கம் வெளிவர, திவிட்டன் அதன் வாயைப் பிளந்து கொன்றான்.

*கல்யாணச் சருக்கம் :* இதையறிந்த சுவலனசடி மகிழ்ந்து தன் பரிவாரங்களோடு போதனமாபுரம் வந்து திவிட்டனுக்குச் சுயம்பிரபையை மணம் செய்துகொடுத்தான். இதையறிந்த அச்சுவகண்டன் தன் படைகளோடு வந்து தாக்க, பெரும் போர் நடந்தது. போரினிடையில், திவிட்டன் கண்ணனுடைய அவதாரம் ஆகையால், அவன் கையில் பாஞ்ச சன்னியமும் சக்கரமும் தாமே வந்து பொருந்தின. கருடன் வந்து தோள்மீது தாங்கினன். திவிட்டன் அச்சுவ கண்டனைப் போரில் அழித்தான். திவிட்டனே வாசுதேவன் என்றும், விசயனைப் பலராமன் என்றும் முடிசூட்டினர். திவிட்டன், கண்ணன் கோவர்த்தனகிரி தூக்கியதுபோலக் கோடிமாசிலை என்ற மலையைத் தூக்கிக் காட்டினன்.

*சுயம்வரச் சருக்கம் :* உரிய காலத்தில் சுயம்பிரபைக்கு ஒரு மகனும் மகளும் பிறந்தனர். சுவலனசடியின் மைந்தனை அருக்க கீர்த்திக்கும் ஒரு மைந்தனும் மகளும் பிறந்தனர். இவர்கள் வளர்ந்துவந்தபின், முறையாகச் சுயம்வரம் நடத்தி மணம் செய்விக்கப்பட்டனர்.

*துறவு, முத்திச் சருக்கங்கள் :* பயாபதி மன்னன் சில நாள் சென்று தன் தேவியரோடு துறவு பூண்டான். விசய திவிட்டரும் நாட்டை நன்முறையில் ஆட்சிபுரிந்துவந்தனர்.

**காவியப் பண்பு**

தனிப் பாடல்களும், சில பாடல்களின் தொகுதியும், கவிதையாக அமையலாம். ஆனல் காவியத்தின் இயல்பு இன்னும் சிறப்பானது, விரிவானது, நுட்பமானது. கவிதைப் பண்பு அதில் அமைய வேண்டியது உண்மை. ஆனல் அதனினும் அதிகமாக, வேறு சில பண்புகள் அமைதல் வேண்டும். குலச் சிறப்புப் பெற்ற ஒரு தலைவனைக் கதாநாயகனைப் பெற்று வாழ்க்கையில் அவனுடைய வெற்றி தோல்விகளைக் கிளந்து கூறுதல் காவியத்தின் முதல்

இயல்பு. அடுத்து அதனுள் படைக்கப் பெற்றிருக்கும் பாத்திரங்கள் ஒவ்வொன்றும் தனிப் பண்புடையதாயிருத்தல் வேண்டும். நூற்பகுதி ஒவ்வொன்றும் ஒருமித்த இயல்பும், நிறைவும் அமைந்து, ஒருமைப்பாடு அல்லது முழுமையுடைய தாயிருக்க வேண்டும். அதனுள் வரும் காட்சிகள் நாடகப் பண்புடையனவாய், என்றும் உள்ளத்தை விட்டு அகலாத ஓவியங்களாய் நிலைபெற வேண்டும். கதைப் போக்கு, முறை யாக வளர்ந்து சென்று உச்ச நிலைக்கு வந்து, கற்போர் உள்ளத்தில் ஓர் எழுச்சியைத் தோற்றுவிப்பது மட்டுமல்ல, அமைதியையும் நிலவச் செய்ய வேண்டும். இந்த இயல்புகள் சூளாமணியுள் பொருந்தியுள்ளனவா என்று சிறிது ஆராயலாம்.

முதலாவது தன்மை: கதாநாயகன் வரலாறு. பயாபதி மன்னன் ஆட்சியோடு இந்நூல் தொடங்கி, இறுதியில் அவன் முடிவென்னும் (முத்தி) பெண்ணை மணந்து, உயர்ந்து உலகின் முடிக்கோர் சூளாமணியானுன் என்று நூல் சொல்லு கிறது. ஆனால் இதுவே இவர் நோக்கமாயிருந்துங் கூட, இந் நோக்கம் இதில் கைகூடவில்லை. பயாபதியின் இளைய புதல்வன் திவிட்டன் முதலிலிருந்து கடைசிவரை, நூல் கற்போர் மனத்தைக் கவர்பவனாகிறான். அவனது பிறப்பு, வீரம், போர், மணம் முதலான செயல்களை ஆசிரியர் சிறப் பித்துக் கூறியிருக்கிறார். திவிட்டனுடைய தந்தை என்ற முறையில் தான் நாம் பயாபதியை நூலில் கருகிறோமே யொழிய, கதாநாயகன் என்ற நிலையில் அவனை முதலிலிருந்து கடைசி வரையில் ஓரிடத்தும் நம்மால் கருத முடியவில்லை. ஆகவே, பயாபதியின் வரலாறுதான் இந்த நூல் என்றால், ஆசிரியர் கருத்துக்கு இங்குத் தோல்விதான்.

அடுத்து, காவியத்துள் படைக்கப்பட்டுள்ள பாத்திரங் களுக்குத் தனித்த பண்பு அல்லது குணச் சிறப்பு காணப்

படவில்லை. கிரேக்க காவியங்களில் ஒவ்வொரு பாத்திரமும் தனித்த குணச் சிறப்புடையதாயிருக்கும். 'காரெக்டரைசேஷன்' என்ற ஆங்கிலச் சொல்லால் இதை உணர்த்துவார்கள். ஹோமர் (கிரேக்கர்) காவியங்களிலும் ஷேக்ஸ்பியர் (ஆங்கிலம்) நாடகங்களிலும் இத்தன்மை விளங்கக் காணலாம். தமிழில் கம்ப ராமாயணத்தில் இதை மிகவும் விளக்கமாகவும் வளர்ச்சி பெற்றிருக்கவும் காணலாம். மேற் குறிப்பிட்ட மூவர் நூல்களிலும் பெயர் சொன்ன மாத்திரத்திலேயே ஒரு பாத்திரம் தனது எல்லாப் பண்புகளுடனும் தனி வடிவம் பெற்று, கற்றோர், கதையறிந்தோர் கண் முன்னே வந்து நிற்பதைக் காண்கிறோம். சைனருடைய சிறப்புக் காவியங்களான சிந்தாமணியிலும், சூளாமணியிலும் இப்பாத்திரப் படைப்பை அறவே காண முடியாது. ஆசிரியர் திவிட்டன் கதையை ஆடம்பரமாகச் சொல்கிறாரே அன்றி, திவிட்டனையோ அன்றி வேறு யாரையுமோ, உயிருள்ள பாத்திரமாக நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்தவில்லை. இக் காப்பிய முழுமையிலும், அவர் காட்டுகின்ற கதைக்குச் சம்பந்தமில்லாத கோமாளியை வேண்டுமானால் உயிருள்ள ஒரு பாத்திரமாகச் சொல்லலாம்!

இனி, நூலின் பகுதி எனப் பார்த்தால், ஒவ்வொரு பகுதிக்கும் இருக்கவேண்டிய ஒருமைப்பாடு இங்குக் காணப்படவில்லை. எப்படியோ, 'இதன் பகுதி ஒவ்வொன்றும் முழு முழு மணியாகத் திகழ்கின்றது' என்று ஒரு பேரறிஞர் குறிப்பிட்டுள்ளனர். எமக்கு அவ்வாறு புலப்படவில்லை என்பதைக் குறிப்பிட வேண்டும். சில எடுத்துக்காட்டுக்கள் தருவோம். கல்யாணச் சருக்கத்தில் கல்யாணம் முடிந்து திவிட்டனும், சயம்பவையும் பள்ளியறை சேர்ந்து காதல் வெள்ளத்துள் அழுந்துகிறார்கள். அப்போது திவிட்டன் சயம்பவையின் நலத்தைப் புலபடப் பாராட்டுகிறான்.[1]

1 இதை இவன் சிலப்பதிகாரத்துவரும் கோவலனிடம் கற்றான் போலும்.

8 பாடல்கள்(1115-1122), யாவும்படைத்தானே, கொண்டதே, நோற்றேனே என்பன போலச் சுவையற்று, கவிதைப் பண்பே யற்று ஏகாரத்தில் முடிவன. அடுத்து, திவிட்டன் அவளோடு சோலையை அடைகிறன். அங்குப் பாவையர் பாடலிசை கேட்டு மாடத்துக்குத் திரும்புகிறன். இப் பகுதியில் சுவையோ, பொருத்தமோ எதுவுமில்லை. இது இல்லாதிருந்தாலே சருக்கம் சுவையோடு முடிந்திருக்கும்.

அடுத்து, அரசியற் சருக்கத்தைப் பார்த்தால், இது இன்னும் நன்கு விளங்கும். இதில் அரசியல் என்ற பொருளே இல்லை. முழுமையும், முதலிலிருந்து கடைசி வரையும் போரே; அதற்கான காரணம், போர் நிகழ்ச்சிகள், பகைவன் மரணம், மகனது வெற்றி கண்ட பயாபதி மன்னன் அவனுக்கு முடி சூட்டுதல் ஆகிய இவ்வளவும் ஒரே சருக்கத்தில். இது கதைப் போக்கிற்கு ஒத்திருக்கலாம், ஆனல் காவியப் பண்புக்கு இவ்வாறு சருக்கம் அமைப்பது சிறிதும் ஒவ்வாதது.

இதுமட்டுமல்ல; சருக்க விசித்திரம் இதற்குமேல்தான். அச்சுவக்கிரீவனேடு செய்த போரில் திவிட்டன் வெற்றி பெற்றன். இவன் வாசுதேவனேயாதலால், சங்கமும் சக்கரமும் கருடனும் தாமே இவனிடம் வந்து பொருந்தின. போர் முடிந்து வெற்றிபெற்று மஞ்சனமாடியபின், பிற ஆயுதங்களும் இவனிடம் வந்து பொருந்தின. நிதிகளும் வந்து சேர்ந்தன. இந்த நிலையில் புராண வரலாறறிந்த புலவர் இவனிடம் வந்து, 'அரசே, ஆயுதங்களும் அருங்கலமும், நிதியும், கருடனும், சீதேவியும் பொருந்தப்பெற்றபின், குன்ற மொன்று எடுத்தல் வழக்கம்' என்று அறிவுறுத்தினர். உடனே திவிட்டன் அருகிலிருந்த கோடிக் குன்று என்ற குன்றைக் கைகளால் வேரோடு பிடுங்கித் தூக்கினன். பார்த்தவர் வெருவி, 'வாசுதேவனே, இந் நம்பி' என்று இவனை வணங்கினர். இவனும் குன்றைக் கீழே வைத்தான். இவ்வரலாறு அரசியற் சருக்கத்தின் இறுதிப் பகுதி.

இதுபற்றி இரு கருத்துக்கள் குறிப்பிடத் தக்கன. கண்ணன் கோவர்த்தன கிரியைத் தூக்கினான்: தன்மீது பகைமைகொண்ட இந்திரன் பெய்வித்த கல்மாரியினின்றும் தன் பாதுகாப்பிலுள்ள ஆயரையும், ஆநிரைகளையும் காக்கும் பொருட்டு. இது வரலாற்றின் முக்கியப் பகுதி. ஆனால் திவிட்டனோ, புலவர்களால் தூண்டப்பட்டுத் தன் புய வலிமையைக் காட்டவே குன்றை எடுக்கிறான். அவசிய மொன்றுமே இல்லை. மலையாள ராமாயணத்தில் ஒரு வரலாறு உண்டாம்.[1] காட்டுக்குச் செல்லப் புறப்பட்ட ராமன், சீதையை வரக்கூடாது என்று தடுத்து நிறுத்து கிறான்; உடன் அழைத்துப்போக இசையவில்லை. மலையாளச் சீதையும், தான் உடன் வருவதற்கு எத்தனையோ காரணங் களைக் கூறியும் மலையாள இராமன் கேட்கவில்லை; கடைசியில் அவள் ஒரு பாணத்தைப் பிரயோகிக்கிறாள்: "எந்த ராமா யணத்திலாவது இராமன் சீதையை உடன் அழைத்துச் செல்லாமல் விட்டுவிட்டுக் காட்டுக்குச் சென்றதுண்டா?" என்று கேட்கிறாள். என்ன செய்வான் ராமன், பாவம்! மறுமொழி பேசாமல் அழைத்துக்கொண்டு போகிறான். திவிட்டன் கோடிக்குன்றை எடுத்தது இதையொத்தது.

இந்நிகழ்ச்சியைப் பார்க்கும்போது, சூளாமணிக்கார ருக்குக் கதையோ, அதன் கட்டுக்கோப்போ, கட்டமோ, பாத்திர இலக்கணமோ சிறிதும் தெரியாது என்று முடிவுசெய்யத்தான் வேண்டியிருக்கிறது. தமிழ்க் காப்பியம் இப்படித்தான் இருக்கமுடியும் என்றால் தமிழுக்கு இது பெருமையாகாது.

அடுத்ததாகிய சுயம்வரச் சருக்கத்தில், காவியப்பகுதி களிடையே தனித்தனியாக அமையவேண்டிய ஒருமைப்பாடு என்பது பின்னும் குலைந்து போனதைக் காண்கிறோம்.

1 வையாபுரிப்பிள்ளை அவர்கள் கூறியது.

இங்கு, சம்பந்தமில்லாமல் ஒரு கோமாளியின் கூத்துக்கள்; பின் சயம்பவைக்கு உரிய காலத்தில் ஒரு புதல்வனும் ஒரு பெண்ணும் பிறத்தல்; நாட்கள் கழிய அவளுக்குச் சுயம் வரம்; காலத்தாலும், பொருளாலும் மிகவும் வேறுபட்ட இச் செய்திகள் ஒரே சருக்கத்தில் உணர்த்தப்படுகின்றன.

திவிட்டன் போர் வென்று வரும்போது நகர மாந்தர் வரவேற்கின்றனர். எதிர்கொள்ளும் மகளிர் நிலை சொல்லப் படுகிறது. ஆனால் அதேசமயத்தில் பெண்கள் சயம்பவையின் அழகைச் சுட்டிக்காட்டி, காண்மின் காண்மின் என்று சொல்லுகிறார்கள். அவளுடைய தோற்றம் கூந்தல், கண், அலங்காரம் முதலியவற்றையும் சுட்டிக் காண்மின் என்கி றார்கள். இது புதுமை[1]. காவியத்தில் தலைவன் கோலத்தை மகளிர் கூடிக்காண்பது சொல்லுதல் மரபேயன்றி, தலைவியின் கோலத்தைக் காண்மின் என்று பாடுவது முற்றும் பொருந் தாது. நாகரிகமும் அவருக்குக் குறைவுதான் என்பதைப் பின்வரும் உதாரணங்களால் நன்குணரலாம். கோபியர் வஸ்திராபகரணம் என்பது பாரதத்தில் குழந்தைக் கண்ண னுடைய விளையாட்டுக்களில் ஒன்று. நீராடிய கோபிய ருடைய வஸ்திரங்களையெல்லாம் கவர்ந்துகொண்டு கண்ணன் ஒரு மரத்திலேறி இருந்தான் என்பது வரலாறு; படங்களா கவும் இந்நிகழ்ச்சி வரையப்பட்டுப் பிரசித்தமாய் வழங்கும். இதன் உட் பொருள், 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் வ்ரஜ,' — அனைத்தும் விட்டு என்னையே பற்று என்பது; அனைத்துப் பற்றையும் விட்டு நிஷ்களங்கமாக உள்ள உயிரைப் பரமன் ஆட்கொள்ளுகிறான் என்பது இங்கு அடையாளமாக உணர்த்தப்படுகிறது என்று பெரியோர் சொல்வர்; இங்கு, கண்ணனும் பால்மணம் மாறாப் பாலகன். இந்த நிகழ்ச்சியைக் கண்ணனைத் திவிட்டனுக்கும் சொல்ல வேண்டும் என்று இந்த ஆசிரியர் நினைக்கிறார். சுயம்வரச்

1 இது சிநதாமணியிலிருந்து கற்றது.

சருக்கம் என்பது, திவிட்டன் மகனுடைய சுயம்வரம். இதன் தொடக்கத்தில் திவிட்டன், தேவியும் மகளிரும் புடைசூழ நீர் விளையாடலில் இறங்குகிறான். மகளிர் நீரில் விளையாடிக் கொண்டிருக்கும்போது, அவன் தன் உழையரைக்கொண்டு பொய்கையின் மதகைத் திறந்துவிடச் செய்கிறான். நீர் முழுதும் வற்றுகிறது. வற்றும் புனல் மகளிர் துகிலை வாரிச் செல்கிறது. அப்போது அவர்கள் நாணத்தோடு, தாழ்ச்சி யுற்றுத் திவிட்டன்முன் செல்கிறார்கள். இந்த நிலையையும் இதைப் பாடிய கவிஞரின் காவியத் திறனையும் விளக்கி யுரைக்க வேண்டியதில்லை.

சிகரமாக அமைந்தது துறவுச் சருக்கம். பயாபதி மன்னன் துறவு பூணத் துணிந்த செய்தி இங்குக் கூறப் பட்டுள்ளது. திவிட்டன் தன் மகனுக்கும், மகளுக்கும் மணம் செய்து முடிக்கிற வரையில், பாட்டனுக்குத் துறவில் மனம் செல்லவில்லை. திவிட்டனும் அவன் மக்களும் சென்று பயாபதியை வணங்க, அப்போது அவன், 'இத்தகைய சிறப் பமைந்த இல்வாழ்க்கையும் அரச வாழ்க்கையும் எனக்கு வாய்த்தது முன் நல்வினைப் பயனாலன்றோ? இவ்வாழ்க் கையும் அழியும் தன்மையது ஆதலால் யான் தவம் மேற் கொள்வேன்' என்று துணிகிறான். 'நிலைத்த செல்வம் பெற வேண்டும். கூற்றுவன் வராது காக்க வேண்டும். இதற்கு வழி என்ன?' என்று அமைச்சரை வினவுகிறான். பெருமை மிக்க சக்கரவர்த்தியாக வாழ்ந்த மன்னன் இவ்விடத்தில் அமைச்சரைக் கேட்கும் வினாக்கள், சிறு பிள்ளைகள்கூடக் கேட்காதனவாயிருப்பது பெரிதும் நகைக்கிடமாயிருக்கிறது. "கூற்ற அரசன் யாது கொள்ள வருகிறான்?" "உயிரைக் கொள்ள வருகிறான்". அடுத்த கேள்வி: "கூற்றுவனை எவ்வாறு வெல்லலாம்?

**சந்தினால் தவிர்க்க லாமோ, சார்பினால் ஒழிக்க லாமோ,**
**பந்தியா முன்னந் தாமே பகைத்திருந் துய்ய லாமோ,**

**வெந்திறற் காலன் தன்னை மேற்சென்று வெல்ல லாமோ,**
**உய்ந்துயிர் யாங்கள் வாழும் உபாயம் நீர்**
**[ உரைமின்என்ருன்.**

*இக் கேள்விக்கு அமைச்சர் கூறிய விடை சுவையாக உள்ளது; ஓரளவு அரசனைப் பழிப்பது போலவும் இருக்கிறது :*

**பீழைமை பலவுஞ் செய்து பிணிப்படை பரப்பி வந்து**
**வாழுயிர் வாரி வவ்வி வலிந்துயிர் வாங்கி உண்ணும்**
**கூழைமை பயின்ற கூற்ற அரசனைக் குதிக்குஞ் சூழ்ச்சி,**
**பாழியந் தடக்கை வேந்தே ! பயின்றிலம் யாங்கள் என்ருர்.**

*வாழ் உயிர் வாரி வவ்வி வலிந்து உயிர்வாங்கி என்னும் அடுக்கடுக்கான வினையெச்சங்கள் நோக்கத் தக்கன. பிறகு மற்றும் கேள்விகள், விடை, அரசன் தெளிவு, துறவு எல்லாம் நிகழ்கின்றன. இச் சருக்கத்திலும், அடுத்த சருக்கத்திலும் துறவு மேற்கொள்வது பற்றி 180 பாடல்கள் வருகின்றன. தசரத மன்னன், தலையில் நரைகண்டவுடனே, அதுவும் தன் புதல்வன் இராமன் மணம் செய்துகொண்டு வீடு வந்தவுடனே, அவனுக்கு முடிசூட்டி விட்டுத் தவம் மேற்கொள்ள முடிவு செய்கிருன். இங்கோ பயாபதி, பேரன், பேர்த்தி கல்யாணம் முடிந்தபின் கூட, கூற்றினை வெல்லும் உபாயம் யாது எனச் சிந்திக்கிருன் !*

*இனி, காவியத்துள் வரும் காட்சிகளின் நாடகப் பண்பு என்ற கருத்தோடு பார்க்கும்போது, போர் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளில்தான் ஓரளவு நாடகப் பண்பு அமைந்துள்ளது. மற்ற இடங்களில் கதைப்போக்கு முழுமையுமே சுவையற்றது. கதை அம்சமே இக் காப்பியத்தில் இல்லை, திவிட்டன் நடத்திய போர், அவன் மணம், மகளின் சுயம்வரம் — வேறெந்த நிகழ்ச்சியுமின்றிக் கதை முடிந்து விட்டது. சைன சமய தத்துவங்கள் இறுதியில் விளக்கப்படுகிறன. எனவே, இந்த நூலில் வாழ்க்கை முழுமையும் ஊடுருவி நின்று*

மனத்துக்கு எழுச்சியும் சாந்தியும் அளிப்பதற்கான இயல் புகள் அறவே இல்லை.

திவிட்டன் புதல்வி சோதிமாலை பந்தாடுகிறாள். இதை ஆசிரியர் எட்டுப் பாடல்களால் வருணிக்கிறார். நான்கு பாடல் அறு சீர்விருத்தம். நான்கு, எண்சீர் நெடிலடியாசிரிய விருத்தம். பந்தாடுகின்றவளை, ஆயத்தார் 'நறுமாலை வந்தலைப்ப நன்மேனி நோம் என்பார், நங்காய், இப்பந்தாடல் நன்றன்றாம் என்பார்'. ஆனால் அவள் கேட்கவில்லை. திவிட்டன் பார்த்தான்; இவள் வருந்தினாள் என்பது கண்டு, 'பந்தாடாது நிறுத்து' என்று சொல்லவும், அவள் நிறுத்தி விட்டாள். சோதிமாலை பந்தாடுதல், கதைப் போக்குக்கு எவ்விதத் தொடர்பும் உடையது அன்று. ஒருகால், தோலா மொழித்தேவர் பெருங்கதையையும் சிந்தாமணியையும் பார்த்துச் செய்திருக்கிறார் போலும். இவ்விரு நூல்களிலும் பந்தாடுதல் கதையின் முக்கிய உறுப்பு. பெருங் கதையில், மானனீகை பந்தாட உதயணன் கண்டு அவளைக் காமுறு கிறான். சிந்தாமணியில் விமலையின் பந்தை எடுத்துக் கொடுத்துச் சீவகன் அவளை மணம் புரிகிறான். சூளாமணி யிலோ பந்தாடலுக்குப் பொருளே இல்லை. ஆசிரியர் இதுவு மொரு காப்பிய இலக்கணம் என்று செய்தார் போலும் !

சிலப்பதிகாரத்தின் வாழ்த்துக் காதையில் மகளிர் பந்தடிக்கிறார்கள். கந்துக வரி என்ற பெயரில் இது மூன்று பாடல் கொண்டது; இறுதிப் பாடல் :

**துன்னிவந்து கைத்தலத் திருந்த தில்லை நீள்நிலம்**
**தன்னி னின்றும் அந்தரத் தெழுந்த தில்லை தானெனத்**
**தென்னன் வாழ்க வாழ்க என்று சென்று பந்தடித்துமே**
**தேவ ராரா மார்பன் வாழ்க என்று பந்த டித்துமே.**

*பெருங்கதையில் 'பந்தடி கண்டது' என்று ஒரு தனிக் காதை. வாசவதத்தையின் தோழியரும் பதுமாபதியின் தோழியரும் பந்தடிக்கிறார்கள்.*

*இக் காதை 270 அடிகள் கொண்ட ஆசிரியப்பா. ஐந்து பெண்களின் பந்தாடல் மிக அழகாகச் சொல்லப்பட்டுள்ளது. கோசலத்தரசன் மகள் மானனீகை பந்தடித்த வருணனை, இலக்கியத்திலேயே வேறெங்குமில்லாத சிறப்பு வாய்ந்தது. அடுத்து, சிந்தாமணி எட்டாம் இலம்பகத்தில் விமலை என்ற மங்கை பந்தாடியதை ஆசிரியர் ஏழு பாடல்களால் பாடுகிறார்; பாடலின் சந்தம் சிலப்பதிகாரப் பாடல் சந்தமே. பின் வருவது ஒரு பாடல் (1962) :*

**மாலையுட் கரந்த பந்து வந்துகைத் தலத்தவாம்**
**ஏலநா றிருங்குழற் புறத்தவாள் முகத்தவாம்**
**நூலின்நேர் நுசுப்பு நோவ உச்சிமாலை யுள்ளவாம்**
**மேலெழுந்த மீநிலத்த விரலசைய ஆகுமே.**

*இதே பொருளைத்தான் தோலாமொழித் தேவர் பாடுகிறார். எண்சீர் விருத்தத்தால் பாடுகிறார். பந்து எங்கெங்குச் சென்று ஓடுகிறது, பாய்கிறது, தீண்டுகிறது என்பதை அவரே சொல்கிறார் (1756) :*

**கந்துகங்கள் கைத்தலத்தால் ஏறுண்டு பொங்கிக்**
**கருங்கண்ணுந் தாமுமுறக் கலந்தெழுந்த போழ்தின்**
**வந்தனவுஞ் சென்றனவும் வானத்தின் மேலும்**
**மணிநிலத்து மீதுநெறி மறிகுவன வாகி**
**அந்துகிலி னிடைத்தோயும் அகலல்குல் தீண்டும்**
**அணிமருங்கு சூழுமணி யார்வடமுந் தாக்கும்**
**கொந்தவிழும் பூங்குழலும் கோதைகளும் மூழ்கும்**
**குவளைவாட் கண்ணிவரும் குறிப்பறிய மாட்டாள்.**

*இப்பாடலை நாம் விவரிப்பது அவசியமில்லை. இந்நூல் இவர் இளமையில் பாடி இருக்கலாமென்பதற்கும், பெண்*

களின் அங்க வருணனை பாடுவதில் இவர் இன்பம் காண்கிறார் என்பதற்கும், இப்பாடல் மற்றுமொரு சான்றாகும். சமணத் துறவிகளின் துறவு நிலையை யாம் குறைத்துப் பேசுகிறோம் என்பது பொருளல்ல. அவர்கள் உண்மைத் துறவு நிலையுடையவர்களே. ஆனால் இளம் பருவம் காரணமாக மனம் இப்படியெல்லாம் சேட்டை புரிகிறது.

காப்பியம் பாடுவோருக்குச் சில நியதிகள் உள்ளன. காப்பிய இலக்கணம், பிற்பட்ட நூலாகிய பன்னிரு பாட்டியலில்தான் சொல்லப்படுகிறது; என்றாலும், முன்னே நூல் செய்தோர், எழுதாத பல நியமங்களையும் மரபுகளையும் கடைப்பிடித்தே நூல் செய்தற்குரியர். தோலாமொழித் தேவருக்கு இந்நியமங்கள் பொதுவாகத் தெரியா என்றே சொல்லவேண்டி யிருக்கிறது.

சில எடுத்துக்காட்டுக்கள் தருவோம். ஜனநாயகப் பண்பு என்பது, இருபதாம் நூற்றாண்டு இலக்கியத்துக்குரியது. தோலாமொழித் தேவருக்கு இதில் சம்பந்தமில்லை. ஆனால், அவர் தம் விஞ்சையர் சக்கரவர்த்தியை ஒரு குடிமகன் வீடு நோக்கி நடக்க வைக்கிறார். தன் மகள் திருமணத்திற்காக மந்திரிகளைக் கலந்து ஆலோசித்தபோது, சுமந்திரி கூறிய ஆலோசனையின்படி, சுவலனசடி மன்னன் சதவிந்து என்ற நிமித்திகனைக் காணவேண்டி அவன் வீட்டுக்கு நடந்து செல்கிறான். "காலின் ஏகினான்" (374) என்கிறார். அரசன் ஒரு நிமித்திகன் வீட்டிற்குச் செல்வதும், அதுவும் நடந்து செல்வதும், இலக்கிய மரபன்று; உலக வழக்குமன்று.

சயம்பவை அருகனைத் தொழுது சேடத்தைக் கொண்டு வந்து தந்தை கையில் கொடுத்து வணங்குகிறாள். பெற்ற மன்னன் மகளைப் புகழ்கிறான்; "உன்னை மகளாகப் பெற்றதனால் அல்லவா எனக்கு எல்லாரும் வணங்கும் ஒரு நிலை வந்தது" என்கிறான்; ஐந்து பாடல்கள் இதைச் சொல்லும் :

கங்கைநீர் பாய்ந்துழிக் கடலும் தீர்த்தமாம்
அங்கணீர் உலகெலாம் அறியப் பட்டது
நங்கைநீ பிறந்ததற் பின்னை நம்குடி
வங்கநீர் வரம்பெலாம் வணங்கப் பட்டதே (222).

*இவ்வாறு ஒரு தந்தை தன் மகளை நோக்கிக் கூறுவது மர பன்று. இங்கும் ஒரு நிலை வெளிப்படுகிறது. பெண் பிறப்பே இழிவென்பது சைன சித்தாந்தம். அதை மறுப்பது போல இருக்கிறது, ஆசிரியர் இப்புகழ் மொழி கூறுவது.*

*திவிட்டன் மாயச் சிங்கத்தைத் துரத்திக் கொண்டு ஓடு கிறான். அச் சிங்கம் ஒரு குகையினுள் சென்று நுழைந்து மறைகிறது. அங்கு உறங்கியிருந்த ஓர் உண்மைச் சிங்கம் வெளி வருகிறது. திவிட்டன் அதன் வாயைப் பிளந்து அதை வதைக்கிறான். மாயமாக வந்த அரிகேது தப்பி ஓடிவிடு கிறான். திவிட்டனுக்கு இந்தச் செய்தி தெரியாது. ஆனால் காப்பியத்தை வாசிக்கும் நமக்கு இது தெரியும். ஆசிரியர் இங்குப் புலப்படுத்த எண்ணியது வீரச்சுவை; ஆனால் நாம் காண்பது இளிவரவு என்ற சுவைதான். இது காப்பியத் தன்மைக்கு இழுக்கு. மேலும் இங்கு அகிம்சை என்ன ஆயிற்று? தீது புரிந்த சிங்கத்தை வதைத்தால் கதையில் ஓர் பொருளமைதி இருக்கும். இங்கு நிமித்திகன் கூற்றை மெய்ப்பிப்பதற்காகவென்று ஒருபாவமுமறியாத சிங்க மல்லவா கொலையுண்கிறது !.*

**கவிதைப் பண்பு**

*தோலாமொழித் தேவருக்குக் காவியம் புனையத் தெரிய வில்லை என்றதனால், கவிதை தெரியாது, அல்லது இவர் காப்பியத்தில் கவிதைப் பண்பு இல்லை என்பது பொரு ளன்று. காவிய அமைப்பு இவருக்குக் கைவரவில்லையே தவிர, அழகாகப் பாடத் தெரிகிறது; சுவையுடைய பாடல்கள் பாடியுமிருக்கிறார். மேலும், ஆசிரியரே கவிதைப்*

பண்பைச் சிறப்பாகக் கருதியிருக்கிருர்போலும்: நீர்விளை யாட்டின்பின் மகளிர் அரசனைப் பாடுகின்றனர், படம் எழுதுகின்றனர், ஊசலாடுகின்றனர், குருத்தில் எழுது கின்றனர் என்று சொல்பவர், 'தேம்பொழி செய்யுளின்பம் செவிமுதல் சேர்த்துவாரும்' (1639) என்று சொல்கிருர்.

கவிதைச் சுவையில் சூளாமணி சிறப்புடையது என்பது ஆன்ருேர் கருத்து. 'சிந்தாமணியினும் சிறந்ததாக மதிக்கப் படும் சூளாமணி என்ற அரும்பெருங் காவியம்' என்று வையாபுரிப் பிள்ளை கூறுவார்.[1] சிறந்த கவிதைப்பண்பு பொருந்திய பாடல்கள் இதன்கண் நிரம்ப உள்ளன என்பது உண்மை. இப்பண்பை இவரிடம் மூன்றிடங்களில் சிறப்பாகக் காணலாம்: ஒன்று இயற்கை வருணனை; இரண்டு போர் வருணனை; மூன்று உலக நீதிகள். சில எடுத்துக்காட்டுக்கள் தருவோம்.

நாட்டுச் சருக்கம் 29 பாடல் கொண்டது. முதல் ஐந்து பாடல்களில் பொது வருணனை கூறி, அடுத்த பாடலில் நானில வளம் என்று குறிப்பிட்டு, அடுத்த 20 பாடல்களில் நானில வளத்தை விரித்துரைத்து, இறுதி மூன்று பாடல் களில் திணைமயக்கம் முதலியன கூறிச் சருக்கத்தை முடிக்கி ருர். இந்த இருபது பாடல்களிலும் வளத்தைக் கூறும் முறை சுவையுடையது. இவற்றுள் முதல் நான்கு பாடல்களில் அவ்வந்நிலத்தில் எழும் ஒலியைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற முறையில் குறிப்பிடுகிருர். அடுத்த நான்கில் இதே வரிசையில் அவ்வந்நிலத்திற்குரிய மலர்; பின் நான்கு புள்; பின் விலங்கு; பின் அவ்வந்நிலத்து விளையுள் - என்று இவ்வாறு வரிசையாகவும் ஒவ்வொரு பாடல் வீதமும் முறை பிறழாமலும் கூறுகிருர். இவற்றைப் பார்க்கும்போது, ஓர் இளம் பிள்ளை கட்டுரைப் பயிற்சிக்காக எழுதிப்

1 புறத்திரட்டு முகவுரை.

பயிலுவதுபோல் உள்ளன. ஆதலால் இப்பகுதியைத் தோலாமொழித் தேவர் இளமையில் எழுதியிருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

சீயவதை நிகழ்ந்தபின், விசயனும் திவிட்டனுமாக நகரம் நோக்கித் திரும்புகிறார்கள். மூத்தவனான விசயன் தம்பிக்கு இயற்கை வளங்களைக் காட்டிக்கொண்டு வருகிறான். நெய்தல் தவிர்ந்த நானில வளங்களையும் காட்டுகிறான். இவ்வாறுள்ள வருணனை 87 பாடல். இப்பகுதி கதைப் போக்குக்குத் தொடர்பில்லாதது. எனினும், ஆசிரியருக்கு இயற்கை யழகை வருணிப்பதிலுள்ள ஆர்வ மிகுதியால் இவ்வாறு இடம் வாய்த்தபோதெல்லாம் சொல்லிக்கொண்டு போகிறார். இவற்றைப் பார்க்கும்போது தேவர் தாவர நூற் புலமையும் உடையவரென்று கருதத்தோன்றுகிறது. பின்னும் பல குறிப் பிடலாம். மருசி வந்து தங்கிய சோலையின் அழகை ஒன்பது பாடல்களால் குறிப்பிடுகிறார்; இவை குறில் எழுத்துக்க ளாலேயே இயன்ற பாடல்கள் (431–9). ஒரு பாடலில், அச்சோலையே அவனை எதிர்கொண்டது என்று நயம்படப் பாடுகிறார். சோலை வருணனை இவரால் சொல்லி முடிய வில்லை போலும்; பின்னும் சொல்லுகிறார் (489–93).

மயில் ஆடுவதைக் கவிஞர் ஒரு நாடகமாகக் காட்டுகிறார்:

**தும்பிவாய் துளைக்கப் பட்ட கீசகம் வாயுத் தன்னால்**
**வம்பவாங் குழலி னேங்க மணியறை அரங்க மாக**
**உம்பர்வான் மேக சாலம் ஒலிமுழாக் கருவி யாக**
**நம்ப! தேன் பாட மஞ்ஞை நாடகம் நவில்வ காணாய் (766).**

மாயச் சிங்கத்தைத் தொடர்ந்து சென்று உண்மைச் சிங்கத் தைத் திவிட்டன் வதைத்த இடத்திலும், 424 பாடல் கொண்ட அரசியற் சருக்கம் முழுவதிலும், போர்ச் செய்திகளையே இவர் அதிகமாய்க் கூறுகிறார். அதுபோலவே சேனைகளைப் பற்றிய செய்திகளும் நூலினுள் சிறப்பித்துச் சொல்லப்படு

*கின்றன. திருமணத்துக்கு வருகின்ற நால்வகைப் படைகள், பட்டத்து யானையின் வருணனை முதலியன குறிப்பிடத் தக்கவை.*

*போரில் அச்சுவ கண்டன் இறந்தபோது ஆசிரியர் கவிக் கூற்ருகவும் கண்டோர் கூற்ருகவும் ஐந்து பாடல்கள் சொல்லு கிருர். இவை சிறந்த இலக்கிய நயம் பொருந்தியன. முதற் பாடல் பின் வருவது :*

**கொலையானை மேலோர் குளிர்வெண் குடைக்கீழ்ப்**
**பலயானை மன்னர் பலர்போற்ற வந்தான்**
**மலையாகம் போழாக மற்றவனே சாய்ந்தான்**
**நிலையாமை சால நிலைபெற்ற தன்றே. 1464**

*இறந்தவன் உடலைக் கண்ட அவன் பெருந்தேவி உடனே உயிர் துறந்தாள் :*

**வண்டார் மணிமுடியான் மார்பு துணிகிடப்பக்**
**கண்டாள் பெருந்தேவி, கண்டேதன் கைசோர்ந்து**
**வெண்தாரை வேல்நெடுங்கண் நீர்மூழ்கி மேற்பிறழ**
**விண்டா ளுயிர்பின்னும் வெற்றுடலம் ஆயினுள். 1470**

*பிற மகளிர் சொல்லும் அரற்றெல்லாம், இன்றும் பெண்கள் சொல்லும் அரற்றுப் போலவே உள்ளன :*

**மூரி முந்நீர் உலகங்கள் முழுதுங்காவல் முனிந்தாயோ,**
**ஆருமில்லா அடியோங்கள் வழிபாடாற்ற மாட்டாயோ,**
**சீரின்மன்னும் வளநாடும் தெய்வப்படையும் செல்வமும்இப்**
**பாரின்மன்னர் பிறர்கொள்ளப் பணித்த தென்னே படை**
**வேந்தே. 1481**

*வெற்றி வீரனுக வரும் திவிட்டனை நகர மாந்தர் எதிர் கொள்ளுகின்றனர். மகளிர் தங்கள் மாளிகைக் கதவைத் திறந்து பார்க்கும்போது, வீரனுடைய கோலம் அவர்கள் உள்ளக் கதவையும் திறந்து விட்டது என்று புலவர் பாடுகிருர் :*

கோபுரமும் அழிந்துகுளிர் நகரைவலங் கொடுவீதி
குடையோன் செல்ல,
நூபுரமும் மேகலையும் கலந்தொலிப்ப, நுண்மருங்குல்
நுடங்க வோடி,
மாபுரத்து மாளிகைதம் மணிக்கதவம் தாழ்திறந்து
மனத்தின் தாழும்
வேய்புரையும் மென்பணைத்தோள் மெல்லியலார் மெல்லவே
திறந்தார் அன்றே. 1529

போர் தொடங்குமுன் இன்னார் அகல்வீராக என்று அறிவிப்பது, பண்டைய போர்த் தருமங்களுள் ஒன்று. 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்கள் முதலியோரும் அகல்வீ ராக' என்று புறநானூறு அறிவிக்கிறது. இவ்வாசிரியரும் அந்த முறையில் ஒரு பாடல் பாடுகிறார் :

அச்சமுடை யாரகல்க, ஆற்றுபவர் ஏற்க,
எச்சமில் குடித்தலைவர் போக,என எங்கும்
கச்சையர் கருங்கழலர் காலனையும் நோனர்
வெச்செனு விழித்துவிறல் வீரர்திரி கின்றார். 1279

உலக நீதிகளையும் அரச நீதிகளையும் எடுத்துச் சொல்லும்போது, இவரது கவிதை மிகவும் சிறப்பாக உள்ளது. பிறர்க்குதவி செய்வதே மனித உடம்பு பெற்றதன் பயன் என்பது ஒரு பாட்டு :

கற்றவர் கடவுட் டானம் சேர்ந்தவர் களைகண் இல்லார்
அற்றவர் அந்தணாளர் அன்றியும் அனைய நீரார்க்கு
உற்றதோர் இடுக்கண் வந்தால் உதவுதற் குரித்தன்றாயிற்
பெற்ற இவ்வுடம்பு தன்னால் பெறும்பயன் இல்லை மன்னோ.

நிலையாமையை மனத்தில் படும்படி நன்கு எடுத்துக் காட்டு வதில் பொதுவாகச் சைனப் புலவர் வல்லவர். முன்னமே

1 'மாமன் மகளே மணிக்கதவம் தாழ்திறவாய்' என்பது ஆண்டாள் திருப்பாவை.

ஒரு பாடலைக் காட்டினோம். (கொலை யானை மேல், பக்கம்?) செல்வ நிலையாமை குறித்த இரு பாடல்கள் காணத்தக்கன :

வெற்றிவேல் மணிமுடி வேந்தன் தம்மொடும்
உற்றதோர் உரிமையள் அல்லள், யாரொடும்
பற்றிலள் பற்றினர் பாலள் அன்னதால்
முற்றுநீர்த் துகிலுடை முதுபெண் நீர்மையே.

புண்ணிய முலந்தபின் பொருளி லார்களைக்
கண்ணிலர் துறந்திடும் கணிகை மார்கள்போல்,
எண்ணிலள் இகழ்ந்திடும் யாவர் தம்மொடும்
நண்ணிய நண்பிலள் நங்கை வண்ணமே.

இங்கு, செல்வத்தைப் பெண்ணாக இவர் கூறி, செல்வ நிலையாமையைப் பெண்ணைப் பழிக்கவும் பயன்படுத்துவது காணத்தக்கது. அடுத்த பாடல் இதே பொருளை இன்னும் கடுமையாக உணர்த்துகிறது :

அடிமிசை அரசர்கள் வணங்க, ஆண்டவன்
பொடிமிசை அப்புறம் புரள, இப்புறம்
இடிமுர சதிரவொர் இளவல் தன்னொடும்
கடிபுகும் அவளது கற்பின் வண்ணமே.

ஆனை துரப்ப அரவுறை ஆழ்குழி
நானவிர்ப் பற்றுபு நாலும் ஒருவனோர்
தேனெய் இழிதுளி நக்கும் திறத்தது,
மானுட ரின்பம் மதித்தனை, கொள்நீ !

இங்குச் சொல்லப்பட்ட உவமையைப் பின்னும் பலவாகப் பெருக்கி வேறு நூல்களும் உரைக்கும்.

அரச நீதிகளை இவர் உரைப்பது மிகவும் சிறப்பாயுள்ளது. இறைமாட்சிபற்றிப் பல சுருக்கங்களில் இவர் கூறிய கருத்துக்கள் மிகச் சிறந்தவை, நயமானவை.

எண்ணினர் எண்ணகப் படாத செய்கையன்,
அண்ணினர் அகன்றவர் திறத்தும் ஆணையான்,
நண்ணினர் பகைவர்என் றிவர்க்கு நாளினும்
தண்ணியன் வெய்யன்நல் தானை வேந்தனே.

அடிநிழல் அரசரை அளிக்கும் ஆய்கதிர்
முடிநிழல் முனிவரர் சரணம் மூழ்குமே,
வடிநுனை வண்கதிர் எஃகின் மற்றவன்
குடைநிழல் உலகெலாம் குளிர நின்றதே.

எரியும் ஆணையால், குளிரும் ஈகையால்
பெரியன் மாண்பினால், சிறியன் அன்பினால்
அரியன் வேந்தர்கட்கு, எளியன் மாந்தர்கட்கு
உரியன் ஓங்குதற்கு, ஓடை யானையான்.

*அமைச்சர் இயல்பையும், தூதர் இயல்பையும் இவர் கூறுவது நூலின் சிறப்பான பகுதி :*

தன்னுணர் பொறிப்புலன் பிறர்கண் கூடென
இன்னணம் இருவகைத்து இறைவர் வாழ்க்கைதான்,
தன்னுணர் பொறிப்புலந் தன்னி னும்பிறிது
இன்னணம் இயற்றுகென்று அமைச்சர் ஏவுவார்.

வீங்குநீ ருலகங் காக்கும் விழுநுகம் ஒருவ னாலே
தாங்கலாந் தகைமைத் தன்று, தளையவிழ் தயங்கு தார்ச்சீர்ப்
பாங்கலார் பணியச் சூழும் நூல்வலார் பாக மாகப்
பூங்குலாம் அலங்கல் மாலைப் புரவலன் பொறுக்கு மன்றே.

சுற்றுநின் றெரியும் செம்பொன் மணிமுடி சுடரச் சூடி
வெற்றிவெண் குடையின் நீழல் வேந்தன்வீற் றிருக்கு மேனும்
மற்றவன் மனமுங் கண்ணும் வாழ்க்கையும் வலியும் சால்பும்
அற்றமில் புகழும் கோலும் ஆபவர் அமைச்சர் அன்றே.

*இந்த நூற்றாண்டில், சக்கரவர்த்திகள் சாதிக்க முடியாத காரியங்களைச் சாதித்த காந்தியடிகள், 'என் தோழரே எனது*

கண்ணும் காதுமாவார்' என்று அடிக்கடி கூறியிருப்பதும் இங்குக் கருதத் தக்கது.

தூதர் தன்மையைக் கூறுகின்ற ஒரு பாடல்:

**மந்திரக் கிழவர் கண்ணு மக்கள்தன் தாள்க ளாகச்**
**சுந்தர வயிரத் திண்தோள் தோழராச் செவிகள் ஒற்று**
**அந்தர வுணர்வு நூலா அரசெனும் உருவு கொண்ட**
**எந்திரம்: இதற்கு வாயாத் தூதுவர் இயற்றப் பட்டார்.**

பகைத்திறந் தெரிந்து எவ்வாறு காக்க வேண்டும் என்பதைக் கூறுமிடத்துப் பொருத்தமான உவமைகளைப் பெய்திருக்கிறார்:

**எரியும் தீத்திரள் எட்டுணை யாயினும்**
**கரியச் சுட்டிடும், காந்திக் கனலுமேல்;**
**தெரியில் தொல்பகை தான்சிறி தாயினும்,**
**விரியப் பெற்றிடின் வென்றிடு கிற்குமே.**

**முட்கொள் நச்சு மரமுளை யாயினும்**
**உட்க நீக்கின் உகிரினும் நீக்கலாம்;**
**வட்க நீண்டதற் பின்மழுத் தள்ளினும்**
**கட்கொடா, மன்ன! யார்களை கிற்பவே?**

இரத நூபுரம், மந்திரசாலை, தூது, சீயவதை, அரசியல் ஆகிய சருக்கங்களில் அமைச்சு சூது அரசு நீதி பற்றிய பல உண்மைகள் மிகவும் அழகு பெற வலியுறுத்தப்படுகின்றன. இவற்றை ஊன்றி நோக்கும்போது, இவ்வாசிரியர் இப்பொருள்களை வெறும் புலவர் என்ற நிலையில் மட்டும் கண்டு சொல்லவில்லை. இளமையில் தாமே ஒரு போர்வீரராகவோ, அரசரின் அணுக்கப் பணியாளராகவோ இருந்து, அரசியற் பணிகளை நெருங்கி யுணர்ந்ததனால் விளைந்த அனுபவத்தால் சொல்கிறார் என்று கருதவேண்டும். இந்தத் துறையில் இவருடைய பாடல்கள் சிறப்புடையவை.

முன் வந்த நூல்களை இவர் எடுத்து ஆளுதல் இயல்பு. புறநானூறு, திருக்குறள், சிலப்பதிகாரம், பெருங்கதை, சிந்தாமணி என்ற நூற் கருத்துக்களும் தொடர்களும் இங்கு வழங்கக் காணலாம்.

இவர் வழங்கும் சிறப்பான சில சொல்லாட்சிகளும் இங்குக் கருதற்குரியவை. அருங்கலம் என்ற சொல் அதிகமான ஆட்சிபெற்றுள்ளது. அருங்கலக்குன்று, அருங் கலப் பெயர்த் தேரோன் (இரத்தினரதன்), அருங்கலபீடம், அருங்கலப் பெருந்தெய்வம் என்பன சிறப்புப் பெயர்கள். எழுவகை அருங்கலம், அருங்கலக் குழாம், அருங்கல மகளிர், அருங்கலமார்ந்த அறை என்பன பிற ஆட்சிகளிற் சில. இவர் அருங்கலான்வயத்தைச் சேர்ந்தவர் என்று தொடக்கத்தில் குறிப்பிட்ட வரலாற்றுக்கு இது ஒருகால் ஆதரவுதருவதாயும் இருக்கும். மீனெறி தூண்டில் (1390) என்ற தொடர் இங்குப் பயில்கிறது; இது சங்கப் பாடல் பாடிய ஒரு புலவர் பெயருமாம். சுவலனசடி தன் நகருக்குக் காவலாகவைத்து விட்டுப் போதனமாபுரம் வந்தபோது, இருந்த எட்டுத் தலைவர்களுள் 'திவாகர தேவன்' என்ற பெயரும் காணப் படுகிறது. ஒருகால் இவ்வாசிரியருக்கு முன்னர் வாழ்ந்து நிகண்டு செய்த திவாகரன் நினைவால் இத் தொடர் எழுந்த தென்று நினைக்க இடமுண்டு. எல்லாச் சைனரும் குறிப் பிடுவதுபோல இவரும், இறுதி முத்தி நிலையைச் சிவகதி என்றே குறிப்பிடுகிறார் (355, 2075, 2626). ஆசிரியர், அருகபரனையே நேரில் தோன்றி, தீர்த்தங்கரர் சக்கரவர்த் திகள் பலதேவர் வாசுதேவர் தொகையைக் கூறவைக்கிறார்.

துறவுச் சருக்கத்தில் 110 பாடல்கள் (1914—2023) தொடர்ச்சியாக, நரக வேதனை, விலங்குகதித் துன்பம் புண்ணியவாயில் ஏழு முதலான பொருள்களை உணர்த்து கின்றன. இவை யாவும் திருமந்திரக் கலிவிருத்தம் போன்ற

ஒரே பாவில் பாடப்பெற்றுள்ளமை கருதத் தக்கது. திருஞானசம்பந்தருடைய திருப்பாசுரக் கருத்தையும் தொடர்களையும் எடுத்து இவர் ஒரு பாடலில் வைத்துள்ளார் (1765).

**வாழ்கநம் மன்னவன் வாழ்க வையகம்**
**ஆழ்கநம் அரும்பகை அலர்க நல்லறம்**
**வீழ்கதண் புனல்பயிர் விளைக மாநிலம்**
**தாழ்கமற் றருந்துயர் சாற்றக் கேண்மினே.**

வட சொற்களையெல்லாம் நயமாகத் தமிழ்ப்படுத்துகிறார். அச்சுவக்கிரீவன்–அச்சுவகண்டன். இட்சுவாகு–இக்குவாகு. சகஸ்ராரம் – சாசாரம். சுயம்வரம் – சயமரம். சுயம்பிரபை – சயம்பவை. திருப்பிருஷ்டன் – திவிட்டன். பிரசாபதி – பயாபதி. மிருகாவதி – மிகாபதி. விரதம் – வதம்; என்பன காண்க. பின்னும் பல. நாட்டின் பெயர், நகரப் பெயர், தலைவர் தலைவியர் பெயர் – எல்லாம் இவர் நூலில் புதுமையாகவே இருக்கும்; யாவும் வடமொழியே. ஆனால் ஒரே ஒரு சமயம் தமிழாகக் குறிப்பிடுகிறார்: ஒரு சோலைக்கும் ஒரு நகருக்கும் திரு நிலையகம் என்ற தமிழ்ப் பெயராக வைத்திருக்கிறார். இவர் குறிப்பிடும் நதிகள் கங்கையும் சிந்துவுமே.

இவ்வாறு சூளாமணி ஆசிரியருடைய கவிதையை நாம் சிறப்பித்துச் சொன்னபோதிலுங்கூட, பல இடங்களில் இவருடைய செய்யுள் சுவையற்று இருப்பதைக் காணலாம். அதிகமான இடங்களில் தேவருடைய பாடல்கள் சுவையற்றுப் பொலிவற்றுச் சப்பென்று நிற்கும். பாட்டை எப்படி முடிப்பது என்று தெரியாமல் அதிகமான பாடல்களை ஏகாரத்தில் முடிக்கிறார். முதல் நான்கு அதிகாரங்களில் மொத்தம் உள்ள 238 பாடல்களில் 108 பாடல்கள் வெறும் ஏகார முடிபு. 'என்பவே' என்பது இவருக்குப் பிடித்த மற்றொரு முடிவு: 7 பாடல்; அன்றே 16; எல்லாம் 17;

அனேகம், என்றூர், அதன் பரியாயச் சொற்கள், பின்னும் பல; போலுமே, மானுமே, ஒக்குமே, பல இடங்களில் கொச்சகக் கலிப்பாக்களில். ஒரே பாடலில், ஏகார முடிவு இருமுறை வருவதும் உண்டு– 169–171, 175–6 முதலியன காண்க. இத்தன்மைகள் கவிதைப் பண்பின்மைக்கு எடுத்துக்காட்டாகும்.

## துதியும் வரிப்பாடல்களும்

இந்நூலில் அருகன் துதியாகவுள்ள பாடல்கள் குறித்துச் சில சொற்கள் சொல்லலாம். முதற்பாட்டு வழக்கம்போல் அருக சரணம் கூறும் பாட்டு; யாப்பருங்கல விருத்தி, காரிகை யுரை முதலியவற்றில், வண்ணத்தால் வரும் பாட்டுக்கு எடுத்துக் காட்டாகத் தரப்படுவது :

**வென்ருன் வினையின் தொகையாய விரிந்து தன்கண்**
**ஒன்ருய்ப் பரந்த உணர்வின்ஒழி யாது முற்றும்**
**சென்ருன் திகழும் சுடர்சூழொளி மூர்த்தி யாகி**
**நின்ரு னடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்ருர்.**

இதுவன்றி வேறு ஐந்திடங்களில் துதிப் பாடல்கள் வருகின்றன. அவற்றுள் முதல் நான்கும் மும்மூன்று பாடல் களான வரிப்பாட்டாகும். சுவலனசடி துதித்தல் (182–4), சாரணர் துதித்தல் (187–9), சயம்பவை துதித்தல் (214–6), (1037–9) என்பனவாக இவை அமைந்துள்ளன. யாவும் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்த வரிப்பாட்டுக்களாய் அமைந்தன. நான்கு துதிகளிலும், இரண்டாமடி மூன்ருமடி யாக, முழுமையும் அல்லது இறுதிப் பகுதி மட்டும் மடக்கி ஒரு சொல் விகற்பத்தோடு அல்லது விகற்பமில்லாது வரக் காணலாம். பின் வரும் பாடல் காண்க :

**ஆதியங் கடவுளை அருமறை பயந்தனை**
**போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை**

**போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை**
**சேதியஞ் செல்வநின் திருவடி வணங்கினம்.**

**காமனைக் கடிந்தனை காலனைக் காய்ந்தனை**
**தேமலர் மாரியை திருமறு மார்பனை**
**தேமலர் மாரியை திருமறு மார்பனை**
**மாமலர் வணங்கிநின் மலரடி வணங்கினம்.**

**ஆரருள் பயந்தனை ஆழ்துய ரவித்தனை**
**ஓரரு ளாழியை உலகுடை ஒருவனை**
**ஓரரு ளாழியை உலகுடை ஒருவனை**
**சீரருண் மொழியைநின் திருவடி தொழுதனம்.**

*இம்மூன்று பாடல்களும் யாப்பருங்கல விருத்தியின் தொடக்கத்தில் வழிபடு தெய்வ வணக்கத்துக்கு எடுத்துக் காட்டாக வருகின்றன; அங்கு, பாடல் ஒவ்வொன்றும் இடை மடக்காக அன்றி, மூன்றே அடிகள் உடையதாக உள்ளது. மற்றோரிடத்தில் அதே விருத்தியில் முதல் பாடல் மட்டும் காட்டப்பட்டுள்ளது. அங்கு இது நாலடியாக வருகிறது. மூன்று பாடல்களும் முறையே பிரமன், சிவபிரான், திருமால் துதியாக அமைந்துள்ளன; போதியங் கிழவன் என்பது அருகனைக் குறிக்கும்; மூன்று பாடல்களிலும் முக்கடவுளரையும் அருகனாகவே ஏத்துகிறார்.*

*பொதுவான வரிப்பாடல்கள், நாற்சீர் கொண்ட கலி விருத்தப் பாடல்களாகவே உள்ளன. சயம்பவை துதித்தலாகிய (1037–9) மூன்று பாடல்களும் அறுசீர் விருத்தங்கள். சாரணர் துதிக்கின்ற பாடல்கள் (187–9) முதல் இரு வரிகள் ஓரெதுகையிலும், பின் இரு வரிகள் மற்றோரெதுகையிலும் அமைந்திருக்கின்றன. இவ்வாறு ஈரெதுகையில் அமைந்த பாடல்கள் சிந்தாமணியிலும், முன்வந்த சிலப்பதிகாரத்திலும் காணலாம்.*

*அவைபோலவே நமி என்ற காசி அரசகுமாரன் அரசாட்சியை விரும்பாது அருகதேவனைத் தியானித்து இசையோடு பாடும் பாடல்கள், ஈரெதுகையில் அமைந்தன (539–541):*

**அழல் நாறும் வெங்கதிரோன் நாண அலராது**
**நிழல் நாறும் மூர்த்தியாய் நின்றாயும் நீயே,**
**நின்றாயும் நீயே, நிறைபொருள் எல்லைக்கண்**
**சென்றாயும் வென்றாயும் நீயே, வாழி திருமாலே.**

*இவைபோக, துறவுச் சருக்கத்தில் மன்னன் அருகக் கடவுள் ஆலயம் அடைந்து வழிபட்டுத் துதித்தான் என்று பத்து எண் சீரடி விருத்தப் பாடல்கள் ஒரே தொடராக அமைந்துள்ளன. முதற் பாடல் பின் வருவது :*

**மூவடிவி னாலிரண்டு சூழ்சுடரும் நாண**
**முழுதுலகம் மூடிஎழில் முளைவயிரம் நாற்றித்**
**தூவடிவி னாலிலங்கு வெண்குடையின் நீழற்**
**சுடரோய்உன் அடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டால்:**
**சேவடிகள் தாமரையின் சேயிதழ்கள் தீண்டச்**
**சிவந்தனவோ, சேவடியின் செங்கதிர்கள் பாயப்**
**பூவடிவு கொண்டனவோ, பொங்கொளிகள் சூழ்ந்து**
**புலங்கொளா வால்எமக்கு, புண்ணியர்தம் கோவே!**

*இப்பாடல் அளவடித் தாண்டகத்துக்கு உதாரணமாக யாப்பருங்கல விருத்தியுரையில் காட்டப்பட்டுள்ளது. இப் பத்துப் பாடல்களும் இதுபோன்ற நீண்ட பாடல்கள்; முன் காட்டிய பாடல்போல இவை வரிப்பாடல்களுமல்ல. இத் தன்மையை ஆராயும்போது, இவை ஒரு தனிப்பதிகமா யிருந்து, தோலாமொழித் தேவர் தம் காப்பியத்துள் எடுத்து வைத்துக்கொண்டார், அல்லது தாமே தனிப் பதிகமாகச் செய்தார் என்று கருதத் தோன்றுகிறது. இறை வணக்கம், வரிப்பாடலாக மூன்று என்ற அளவில் வருவதைச்*

*சிந்தாமணியிலும், நீலகேசியிலும் பார்க்கிறேம்; சிலப்பதிகாரத்திலும் இப்படியுள்ளன. ஆனல் பத்துப் பாடல் எங்குமே வந்ததில்லே.*

*நூலகத்து வரிப்பாடல்கள் பல உள்ளன. மகளிர் வள்ளேப்பாட்டு பாடுகிருர்கள் என்று தேவர் சொல்லுவது, சிலப்பதிகாரத்தை நினைப்பிக்கிறது:*

**பைம்பொ னறைமேற் பவழம் உரலாக**
**வம்ப மணிபெய்து வான்கேழ் மருப்போச்சி**
**அம்பொன் மலேசிலம்ப அம்மனே வள்ளேயுடன்**
**கம்பம்செய் யானேக் கரியவனேப் பாடினர். 1660**

*அடுத்து, மேகவண்ணனுகிய திவிட்டனேப் புகழும் மூன்று வரிப்பாடல்கள் உள்ளன. அன்றியும் வேருேரிடத்தில், சோலேயிலுள்ள மகளிர் தேமாவையும் குருக்கத்தியையும் குரவையும் வாழ்த்தி மூன்று வரிப் பாட்டுப் பாடுகிருர்கள் (1126–8). பொதுவாக வரிப் பாட்டுக்களில் அடிமடக்காக வருவது அதிகம்.*

**அடிமருங்கின் அரசிறைஞ்ச ஆழியாள்வான் பெருந்தேவி**
**கொடிமருங்கின் எழில்கொண்டு குழையல்வாழி குருக்கத்தி**
**கொடிமருங்கின் எழில்கொண்டு குழைவாயாயிற் பலர்பறிப்பக்**
**கடிமருங்கிற் புக்கலரே காண்டிவாழி குருக்கத்தி. 1127**

*இத்தொடரிலுள்ள மூன்று பாடல்கஊயும் தோலாமொழித் தேவர், சிலப்பதிகாரத்தில் கானல்வரியில் 'மருங்கு வண்டு சிறந்தார்ப்ப' என்று தொடங்கும் பாடல்கள் போன்றவற்றைத் தழுவிச் செய்தார் என்பது நன்கு தெரிகிறது. இப்பாடலில் வரும் 'ஆழியாள்வான்' என்ற தொடரும், அங்குள்ள மூன்றும் பாடலில் அப்படியே வருவது காணத்தக்கது; அங்குள்ள வரிப் பாட்டில்*

இரண்டாம் அடியும் நான்காம் அடியும் 'வாழி காவேரி' என்றே முடியும்.

அங்ஙனமே மாலை வருணனையாக வரும் (1032–4) மூன்று பாடல்களும், கானல்வரியில் மாலை குறித்து இரங்கல் துறையில், 'வந்த இம்மருண் மாலை' என்ற பாடல்களையும், சிந்தாமணியில் இவைபோல மாலை என்றே முடியும் பாடல் களையும் பின்பற்றிச் செய்யப்பெற்றனவாகலாம்.

வரிப்பாடல்களில் காணப்படும் யாப்பு விசேடம்போல, மற்றொரு யாப்பு விசேடமும் குறிப்பிடத்தக்கது. திவிட்டன் சிங்கத்தை வதைத்துவிட்டு விசயனோடு கூட நகர் திரும்பும் போது, விசயன் அவனுக்கு இயற்கை வளங்கள் பல காட்டு கிறான். அவ்விடத்தில் ஆசிரியர் மூன்று பாடல்களின் சீர்களில் இறுதிமடக்கு முதல்மடக்கு இடைமடக்கு என்ற யாப்பிலக்கண விசேடங்களை அமைத்துப் பாடியிருக்கிறார்.

**வரைவாய் நிவந்த வடுமா வடுமா**
**விரைவாய் நிவந்து விரியா விரியா**
**புரைவா யசும்பு புலரா புலரா**
**இரவா இருள்பாய் இடமே இடமே.**

**இளையார் இளையார் உடனாய் முலையின்**
**வளையார் வளையார் மனம்வேண் டுருவம்**
**விளையார் விளையாட் டயரும் தொழில்தான்**
**தளையார் தளையார் பொழிலின் தடமே.**

**அளியாடு மமரங்கள் அமரங்கள் மகிழ்ந்தாறு**
**விளையாடும் விதமலர்ந்த விதமலர்ந்த மளிதூவும்**
**வளையார்கண் மகிழ்பவான் மகிழ்பவான் மலர்சோர்வ**
**இளையாரை யினையவே யினையவே இடமெல்லாம்.**

இவை, இவர் இளமையில் இந்நூலைப் பாடியிருக்கலாம் என்ற கருத்துக்கு ஆதரவு தருவன.

வரிப்பாடலென்றே கருதத்தக்க பாடல்கள் நூலகத்து எங்கும் காணப்படுகின்றன. இவை பெரும்பான்மை மூன்றடுக்கி வந்த கலிப்பாக்கள் : 1518–20, 1464–66, 1741–43, 2124–6 காண்க.

**காமச் சுவையும், நகைச் சுவையும்**

சைன சமயம் பெண்களைப் பழிப்பதே ஒரு பெருங் கொள்கையாய்க் கொண்டது என்பதைப் பாடல்களால் அறிகிறோம். சைனர் நூல்கள் யாவும் இறுதியில் துறவையும் முத்தியையும் கூறி முடியும். திருத்தக்க தேவர், தோலாமொழித் தேவர் முதலிய அனைவருமே சைன முனிவர் எனப்படுபவர்; துறவிகள்; இவர்கள் உலகத் தொடர்பின்றித் தங்கள் பள்ளிகளிலேயே புகுந்து கொண்டு சமய ஆராய்ச்சியிலும் அனுட்டானத்திலுமே நாள் கழித்தவர்கள். சைவத்திலும் வைணவத்திலும் துறவிகள் இருந்து, உலகை விட்டு ஒதுங்கிய வாழ்க்கை வாழ்ந்தார்கள் என்றால், அவ்வாறு அவர்கள் வாழ்ந்த வாழ்க்கையில் அவர்களுக்கு உறுதுணையாயிருந்தது பக்தி நெறி. ஞானத்தால் காணமுடியாத இறைவனை அன்பினால் காணமுடியும், அடையமுடியும் என்பது அவர்களது நம்பிக்கை. இவ்விரு சமயங்களிலும் இப்படி வாழ்ந்து இறைவனை அனுபவித்த அடியார் எண்ணற்றவர். அவர்கள் தாங்கள் கண்ட காட்சியையும் பெற்ற அனுபவத்தையும் பாடல்களால் பாடியிருப்பதை நூற்றாண்டுகள் தோறும் பார்க்கிறோம்.

சைனர் இந்த நிலைக்கு முற்றிலும் விலக்கு. அவர்கள் எப்போதுமே பக்திநெறியைப் பின்பற்றி ஒழுகியது இல்லை. பக்தியினால் வருகின்ற இதய நெகிழ்ச்சி அவர்களிடம் காணப்படவில்லை. புத்தியினாலும், தர்க்கத்தினாலும், சொல்லால் சொல்லுகிறார்களேயன்றி, அன்பு வசப்பட்டு தம் வசமிழந்து பாடுதல் காண்பதற்கு இல்லை. வைதிக சமயங்களில்

காணுகின்ற நாயக நாயகி பாவம் சைனத்தில் இல்லை. ஆகவே, துறவு பூண்டு பள்ளிகளுள் அடங்கிய சைன முனிவர் வாழ்க்கையில் அன்பு மலர்வதற்கு, இதய நிறைவு அமைவ தற்கு, இடம் கிடைக்கவில்லை.

பிற்காலத்தில் தோன்றிய திருநூற்றந்தாதி[1] ஒன்று மட்டும் இந்த நிலைக்கு விலக்கு என்று நாம் காண்கிறோம். இவ் அன்பு மலர இடம் இல்லாமையால், எதிர்மறையாக அகிம்சை என்று அவர்கள் சொல்ல நேரிட்டது. இதுவும், பிறவியே துன்பம் என்ற கொள்கையும், அவர்களுக்கு வாழ்க்கையே வறண்டு போகும்படி செய்துவிட்டன. பிற சமயத்திலும் துறந்தார் உளர். அவர்களிடையே உள்ள மானது பரம்பொருளைச் சென்று எல்லையற்ற அன்போடு பற்றியது. ஆனால் சைனர்களுக்கு உலகப் பற்றை விட்டு இறைவனைப் பக்தியினால் சென்று பற்றத் தெரியவில்லை. ஆதலால் அவர்களுடைய சைனப் பள்ளி வாழ்க்கை நிறைவு பெறவில்லை. முனிவர்களில் இளைஞர்களும் இருந்தார்கள். பள்ளி வாழ்க்கையினால் மட்டும் துறவுள்ளம் அமைந்து விடாது. மனிதப் பிறவிக்கு அன்பு என்பது இயல்பான ஒரு பண்பு. அகிம்சை என்று எதிர் மறையாகச் சொல்லிய தால் மட்டும் மனம் நிறைவு பெறாது; செயல் முறையில் உடன்பாடாக அன்பு செலுத்துவதற்கான இடமும் உண்டு. சமயத் துறையில் அவ்வன்பைச் செலுத்த இடம் பெறாத இளம் புலவர்கள் பள்ளிகளுள் புகுந்தபோது, அதை இலக்கியத்தில் வெளிப்படுத்தினார்கள். முற்றும் துறந்த முனிவர்கள் செய்த இலக்கியத்தில் சிற்றின்பச் சுவையே மிகுந்து காண்பதற்கும் இதுவே காரணம். அடக்கி வைத்திருந்த மன எழுச்சிகளையும் உள்ளத்துணர்வுகளையும் வெளிப்படுத்துவதற்கு இலக்கியம் அவர்களுக்கு ஒருவாய்ப்பு

1 எமது 14ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியவரலாறு, பக்கம் 301–2 பார்க்க.

அளித்தது. எத்தகைய பெருந்துறவியாய் இருந்த போதிலும், அவர்களால் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை. தங்கள் காவியங்களில் சிறப்பாக அவர்கள் பெண்களின் வருணனையை மிகவும் அதிகமாக அமைத்திருக்கிறுர்கள். இதற்குக் காரணம் உணர்ச்சியை அடக்க முடியாமையே. இலக்கியம் அவ்வுணர்ச்சி வெளிப்பாட்டுக்கு இடம் தந்தது. துறவு சொல்ல வந்த திருத்தக்க தேவர் தம்முடைய நூலை மண நூல் ஆகச் செய்திருக்கிறுர். மாதரைப் பழிக்கும் கடப்பாடுடைய அவர், தம் நூலில் பத்துக் கலியாணங்களைச் சொல்லுகிறுர். சீவகன் ஒருவனுக்கு எட்டுக் கலியாணம் என்பது, இலக்கியத்தில் கூட, ஒரு விசித்திரமான நிலைதான். இதனேடு அவர் பெண்களை வருணிக்கும் நிலையும், சிற்றின்பச் சுவை மலிந்ததாகவே காணப்படுகிறது. முலை என்றும், அல்குல் என்றும் வருணிக்காமல் அவரால் பாட முடியாது. தோலாமொழித் தேவரும் அவர் வகுத்த பாதையிலேயே சென்று பாடுகிறுர். இந்த அளவு இவ்வருணனைகள் பிற இலக்கியங்களில் காணமுடியாது. மேலே நாம் கூறிய நிலை உண்மையே என்பதை இவ்விலக்கியங்கள் நன்கு எடுத்துக் காட்டும்.

சோலையில் வந்து தங்கிய வித்தியாதரத் தூதனை வரவேற்று உபசரிக்கும்பொருட்டுப் பயாபதி மன்னன் நான்கு மங்கையரை அனுப்புகிறுன். அவர்களுடைய வருணனையும் அவர்கள் செய்யும் உபசாரமும் (20 பாடல்கள்) ஆசிரியரான ஒரு சைனத் துறவிக்குப் பொருந்துவன அல்ல. ஆசிரியர், தமக்குக் கூடாது என்று விலக்கிவைக்கப்பட்ட பெண்களின்பத்தையும் புலனின்பத்தையும் இப்படி எல்லா இடங்களிலும், முத்தியில்கூட, சொற்களால் சொல்லிச் சொல்லி மகிழ்கின்றுர். அடக்கிவைக்கப்பட்ட இயற்கையுணர்ச்சிகளுக்கு ஒரு தவறில்லாத வெளிப்பாடு என்று இதைக் கருதுவதுதான் இதற்குத் தக்க சமாதானமாகும்.

வேறு காப்பியத்துறையில் இதற்குச் சமாதானம் இல்லை. சயம்பவைக்குக் காப்பாளராகப் புடை வருபவர்கள், 'ஆணுடையர், கொங்கை வளராத குழலார்கள்' 'இறுதியில் பயாபதி மன்னன் துறவு மேற்கொண்டு கேவல ஞானம் எய்தினன், அமரர் திரண்டு அவனைப் போற்றினர் என்று கூறுமிடத்தும், ஆசிரியர் முத்தி என்பதை ஒரு பெண்ணைக் கூறுகின்றார்; அங்கும் புலன்களுக்கு அனுபவப் பொருளாகின்ற பொருள்களையே சொல்லுகின்றார். அகப்படுத்து ......... கடிவினை முடிவித்தான்; ஆகாய மெல்லாம் கடிகமழ் மலரும் சாந்தும் சுண்ணமும் கலந்த; பொன்னரி மாலை பூவின் பொழி மதுப் பிணையல், முத்தின் மின்னிவர் விளங்கும் தாமம் என இவை விரவி வீசி; பெருமான் முடிவென்னும் பெண்ணரசி தன்னை ஒருவா்மை வேட்டு; முடிவு என்னும் கன்னி; முடிவு என்னும் பூங்கொடியும் தானும் நிலவு சிவ கதியுள் நீங்காது நின்றார்.

இந்த நிலை பொருத்தம்தான் என்பதற்குச் சூளாமணி மற்றுமோர் உதாரணமும் தருகிறது. அடக்கி வைத்த உணர்ச்சி வெள்ளம் எந்த விதத்திலேனும் வெளிப்பட வேண்டும். பக்தி என்ற கால் வழியாக அது ஓட முடியா விட்டால், வேறு கால்கள் வழியாக ஓடுகிறது. சிருங்காரச் சுவைபற்றி மேலே குறிப்பிட்டோம். நகைச்சுவை என்பது மற்றொரு காலாக அமைகிறது. இதைத் தோலாமொழித் தேவர் நன்கு பயன்படுத்துகிறார்.

சுயம்வரச் சருக்கம் என்ற பகுதியில் இவர் ஒரு விதூடகனை அறிமுகப்படுத்துகிறார். இவன் ஓர் அந்தணன். மன்னன் ஆகிய திவிட்டனுடன் மலர்ப் பொழிலுக்கு வருகிறான். அரசன் முன்னிலையில் பல வேடிக்கைகள் செய்கிறான். பருத்த தொந்தி, சிறுத்த கைகள்; சரீரத்தை வளைக்கிறான், பாடுகிறான், விநோதக் கூத்து ஆடுகிறான்.

*உண்டிப் பெருக்கினல் வயிற்றுவலி என்று தரையில் புரளுகிருன். சோலையில் கனிகளைக் காணும்போது இவனுக்கு உண்டாகின்ற ஆசையையும், மரங்களைக் கண்டு பூதம் என்று எண்ணி இவனுக்கு உண்டாகின்ற அச்சத்தையும், வேறுபல சேட்டைகளையும் தேவர் அதிகம் விவரிக்கின்ருர். அரசி வந்தபின் கனிகளைக் கண்டு இவன் மனம் படுகின்ற பாடும், அரசன் அரசியரை மகிழ்வூட்ட வேண்டி இவன் பாடுகின்ற பாட்டும், இலக்கியத்தில் வேறு இடங்களில் காணப்படாதவை (1619–21) :*

**ஓடு மேமன மோடுமே**
**கூடு மேதணி கோதையாய்**
**காடு சேர்கனி காண்தொறும்**
**ஓடு மேமன மோடுமே.**

**ஊறு மேஎயி றூறுமே**
**வீறு சேர்வரி கோதையாய்**
**சேறு சேர்கனி காண்தொறும்**
**ஊறு மேஎயி றூறுமே.**

**வேண்டு மேமனம் வேண்டுமே**
**பூண்ட பொன்னணி மார்பினய்**
**நீண்ட மாங்கனி நேர்தோறும்**
**வேண்டு மேமனம் வேண்டுமே.**

*விதூடகனுக்குச் சூளாமணிக் காப்பியத்தில் இடம் இல்லை. ஆயினும் தேவர் பொழிலினிடைச் சென்ற தலைவனுக்கு இவனைத் தோழனைப்போல அனுப்பி, 57 பாடல்கள் (1565–1622) இவனுக்காகப் பாடுகிருர். இந்த விதூடகன் செயல்களும் பேச்சும் ஷேக்ஸ்பியர் எழுதிய நாலாம் ஹென்றி–முதல்பாகம் என்ற நாடகத்தில் வரும் பால்ஸ்டாப் என்ற பாத்திரத்தை நினைவூட்டாமலிருக்காது.*

இந்த நிலைகள், சைன முனிவர் வாழ்க்கை எவ்வளவு வறண்டுபோனது என்பதையும், பெண்களை வருணிப்பதிலும் இத்தகைய வேடிக்கைகளிலும் இவர்களுக்கு ஒரு சிறு மாற்றம் கிடைத்தது என்பதையும், நன்கு உணர்த்தவல்லன.

## சூளாமணியும் கம்பரும் ....

தமிழ் ஆராய்ச்சியில், சார்பின்றி எப்பொருளிலும் உண்மை காணுதல் என்பது மிகவும் அரிதாகத் தான் இருக்கிறது. ஆராய்ச்சித்துறை எழுபது ஆண்டுகளாக நன்கு வளர்ந்திருக்கிறது. பேரறிஞர் அனேகர் இந்த நூற்றுண்டின் முதல் பாதியில் நல்ல ஆராய்ச்சி முடிவுகளை வெளியிட்டிருக்கிறுர்கள். இவை யாவும் தமிழ் வளர்ச்சிக்கு மிகுதியும் உதவியிருக்கின்றன. எனினும், அறிஞர் தங்கள் சொந்த விருப்பு வெறுப்புக்களை ஆராய்ச்சி முடிவுகளில் காட்டாமல் இருக்க முடிவதில்லை. விருப்பு வெறுப்புக்களுக்கும் சார்புகளுக்கும் பல அடிப்படைகள் இருந்தன. சமயம் நெடுங்காலமாக இருந்த ஓர் அடிப்படை. இன்று அது வலி இழந்து இருக்கிறது. அரசியலும் அதனுல் விளையும் கட்சி உணர்வும் ஆராய்ச்சியாளருடைய போக்கையே பெரிதும் பாதித்திருக்கிறது. ஆரியம் திராவிடம், வடமொழி தென்மொழி, பிராமணர் அல்லாதவர் என்ற வேறுபாடுகளை 1972 வருடம் கூட இன்னும் கடந்துவிட வில்லை. இந்த நிலையில் நாம் இலக்கிய உலகினுள் புகுந்து கால வரையறை செய்ய வேண்டியிருக்கிறது.

மேற் குறிப்பிட்ட விருப்பு வெறுப்புக்களால் இலக்கிய உலகில் பல பொருள்களுக்கு இன்னும் உண்மை கண்டபாடு இல்லை. ஆதித் தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியத்தின் காலம் எல்லோரும் ஒப்புக்கொள்ளும் வகையில் இன்னும் நிறுவப்படவில்லை. சிலப்பதிகாரம், திருக்குறள், திருவாசகம் போன்றவற்றின் காலம் எல்லோரும் ஒப்புக்கொள்ளுமாறு

இன்னும் முடிவு செய்தாகவில்லை. கால வரையறை திருத்த மாக ஏற்படாவிட்டால் சொற் பொருள் உணர்வு திருத்தமாக அமையாது. அந்த நிலையில் இலக்கிய உணர்வும் கவிதை அனுபவமும் எங்ஙனம் ஏற்படுதல் கூடும்? தமிழ் நாட்டில் மிகப் பழங்காலம் முதலே, அதாவது சரித்திரம் கண்ட நாளாக, தமிழ் வடமொழிக் கலப்பு ஏற்பட்டிருக்கிறது. அக் காலம் முதல் தமிழர் சமயமும் வைதிகக் கலப்புடையதாகவே இருந்திருக்கிறது. புரட்சி, காலத்தின் போக்கு; அது இயல்பும் கூட. அறிவோடு கூடியதாய் வளர்ச்சிக்கு உதவு கின்ற புரட்சி எதையும் அறிவுடையவர் வரவேற்க வேண்டும். எப்படியோ தமிழ் இலக்கிய உலகில் புரட்சி என்பது வைதிகத்துக்கு முரண் என்று ஒரு காலத்தில் கருதப்பட்டது. வைதிகத்துக்குப் பகையானது எல்லாம் புரட்சிக்கு உகந்தது என்று பெரியோர் கூடக் கருதினுர்கள். இது ஒரு பெரிய விந்தை. சைன மதம் வைதிகத்துக்கு மாறு ஆனபடியால், அதில் உள்ளதெல்லாம் சிறப்பு என்று தக்க பெரியோரும் கருதியிருக்கிறுர்கள். இது எவ்வாறு முடியும் என்பது விளங்கவில்லை. 3–6 ஆகிய நூற்றுண்டுகளில் தமிழ் நாட்டில் களப்பிரர் என்ற சைன சமயத்தவருடைய ஆட்சி புகுந்தது. பாண்டிநாடு, பல்லவ நாடு, சோழ நாடு ஆகிய எங்கும் புகுந்தது. அவ்வளவு பழங் காலத்திலேயே இது தமிழர் சமயம், வழிபாடு, தத்துவக் கொள்கை, கலை, நாகரிகம், மொழி, நூல் அனைத்தையும் வீழ்த்திற்று. இந்த வீழ்ச்சி யைத் தடுத்து மீண்டும் தூக்கி நிறுத்தினவர்கள் திருஞான சம்பந்தர் ஆதியரும், சோழ மன்னரும் ஆவர். கால ஆராய்ச் சியில் இந்த உணர்வு எப்போதும் முன்னிற்க வேண்டும். இந்த வரலாற்றுண்மை கண் முன் னே இல்லாவிட்டால் ஆராய்ச்சியில் உண்மை காணமுடியாது.

மற்றென்றும் இங்கு சொல்லத் தகுந்தது. வடநாட்டில் இந்தி வெறி தாண்டவமாடுகிறது. மறுபுறம் வடமொழி

வாணர், எல்லாம் வடமொழியில்தான் இருந்தது, வடமொழியிலிருந்துதான் தமிழுக்கு வந்தது என்று கூறுவது இந்த இருபதாம் நூற்றாண்டின் பிற்பாதியிலும் நிகழ்கிறது. இதைப் பார்க்கும் போது, நிதானிக்கும் பக்குவமுடைய தமிழறிஞரும் பொறுமையிழந்து விடுகிறார்கள். பக்குவமில்லாதோர், தமிழில் எல்லாம் அநாதிகாலமாக இருந்தது, வடமொழிக்கு முன்னேயும் இருந்தது என்று சொல்லத் தலைப்படுகிறார்கள். எவ்வளவுக்கெவ்வளவு தமிழுக்கும் தமிழ் நூல்களுக்கும் பழமை சொல்ல முடியுமோ அவ்வளவுக்குத் தமிழுக்கு பெருமை என்று கருதுகிறார்கள். வடமொழி வாணர் மீதுள்ள சீற்றம் இவ்வாறு வளர்ந்தபின், எதற்கும் பழமை சொல்ல வேண்டுமென்ற உணர்வும் வளர்ந்து விடுகிறது. இது காரணமாக, சீர்தூக்கிப் பார்க்கும் அறிவும் மங்கிப் போகிறது.

மற்றொருபுறம், பெரியோர் சொன்ன சில கருத்துக்கள் நம்மை ஆட்கொண்டு, அவற்றின் பிடியிலிருந்து எவ்வளவு முயன்றாலும் தப்ப முடிவதில்லை. செல்வ கேசவராய முதலியாரவர்கள் சிந்தாமணியிலிருந்து கம்பர் ஓர் அகப்பை முகந்துகொண்டார் என்று சென்ற நூற்றாண்டில் எழுதினார். இதை ஒருவரும் ஆராய்ந்ததில்லை. கம்பர் சிந்தாமணிக்குப் பிற்பட்டு வாழ்ந்தார் என்று எல்லோரும் சொல்லத் தலைப்பட்டனர். விருத்தப்பாவில் செய்த முதல் காவியம் சிந்தாமணியே என்று எல்லோரும் ஒருமுகமாய்ச் சொல்லினர். அதனோடு, விருத்தப்பா என்ற முறையில் அதில் காணப்பட்ட குறைபாடுகளுக்குக் காரணம் அது அந்த யாப்பில் தோன்றிய பேரிலக்கியம் என்பதே; கம்பராமாயணத்தில் யாப்பு செப்பமுடையதா யிருக்கிறதே யென்றால், இது அதைப்பார்த்துச் செய்த நூல் என்றும் சொன்னார்கள். இதையொட்டி, ஒன்பதாம் நூற்றாண்டில் செய்யப்பெற்றது என்ற சிறப்புப் பாயிரம் பெற்றிருந்த

இராமாயணத்தைக் காலத்தில் இன்னும் மூன்று நூற்றாண்டுகள் பின்னே தள்ளும் முயற்சியும் ஒருபக்கம் நடைபெற்றது. சூளாமணி சிந்தாமணிக்குப்பின் வந்தது என்பதில் கருத்து வேற்றுமை யில்லை. ஆனால் கம்பர் சிந்தாமணியையும், சூளாமணியையும் பார்த்தே இராமாயணத்தைச் செய்தார் என்று பெரும் புலவர்கள்கூடச் சொல்கிறார்கள். ஆனால் உண்மைநிலை வேறு என்று யாம் கருதுகிறோம். இவ்விரண்டு சைன காப்பியங்களும், உலகத் தொடர்பை விட்டு விலகிக் கொண்ட சைன முனிவர்களால் செய்யப்பெற்றவை. காலப் போக்கு அவர்களுக்குத் தெரியாது. காப்பிய கதியோ இலக்கணமோ அவர்கள் சிறுபிள்ளைப் பருவத்தில் பயின்ற மட்டில்தான், ஆகவே தாங்கள் செவ்வனே அறியாத விருத்த யாப்பில் தங்கள் காவியங்களைச் செய்தார்கள்.

ஆனால் கம்பர் நிலைமை வேறு. தமக்குமுன் தோன்றிய எல்லா இலக்கியங்களிலும் தோய்ந்தெழுந்தவர். தேவாரப் பாசுரங்களும், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களும் எழுந்த மொழியில் விருத்தப்பா இல்லை என்று யாரே சொல்வர்? கம்பர் இவற்றில் மூழ்கி எழுந்தவர். திருத்தக்கதேவரும் தோலாமொழித் தேவரும் சைன நூல்களை அறிந்தார்களே யன்றி, வேறு இந்தப் பாசுரங்களை, வைதிக சமய வழிபாட்டுப் பாடல் என்று பெயர்சூட்டி, தொட்டுக்கூடப் பார்த்திருக்க மாட்டார்கள். சைனத்தில், அவர்கள் செய்த பாக்கள் ஆதி விருத்தப் பாக்கள். கம்பர் ஆழ்வார் வழியிலும் தேவார வழியிலும் சென்றவர். ஆதலால் இந்த முன்மாதிரிகள் அவருடைய விருத்தத்தைச் செப்பம் செய்து தந்தன. செப்பமுடைமையால் இராமாயணம் பிற்பட்டது என்று சொல்வோர் கூற்று கொள்ளத்தக்கதன்று என்று காட்டுவதற்காகவே இதை இவ்வளவு தூரம் விவரித்தோம். மற்றப்படி, சிந்தாமணியையும் இராமாயணத்தையும் ஒன்பதாம் நூற்றாண்டு வரலாற்றில் விளங்கக் காண்போம்.

இங்கு சூளாமணிக்கும் கம்ப ராமாயணத்துக்குமுள்ள இரண்டோர் ஒற்றுமைகளைமட்டும் சொல்ல எண்ணுகிறோம். பத்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் சூளாமணி பாடிய தோலாமொழித் தேவர் தமக்குமுன் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் எழுதப்பட்டிருந்த கம்ப ராமாயணத்தை சிறிதளவேனும் அறிந்திருந்தார் என்பது எமது கருத்து. இதன்பொருட்டு மேலெழுந்தவாரியாகத் தோன்றிய சில ஒற்றுமைகளைமட்டும் இங்குக் குறிப்பிடுகிறோம்.

இராமனுக்கு முடிசூடப்போகும் செய்தி அறிந்து மங்கையர் நால்வர் அச் செய்தியைக் கோசலைக்குச் சொல்வதற்காக ஓடுகிறார்கள். சூளாமணியில் வித்தியாதர மன்னனுடைய தூதனாக வந்த மருசியை உபசரிப்பதற்காக பயாபதி மன்னன் அனுப்பிய அணங்கனையாரும் நால்வர் (448). அனுமன் சுக்கிரீவனிடத்து, இராமனை வருணிக்கிறான்: "சங்கு சக்கரக் குறிஉள, தடக்கையில் தாளில் எங்கும் இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை. செங்கண் விற் கரத்து இராமன் அத்திரு நெடுமாலே. இங்கு உதித்தனன் ஈண்டு அறம் நிறுத்துதற்கு" என்று கூறுகிறான். வீரருக்கு உத்தம இலக்கணம், தாளிலும் கையிலும் சங்கு சக்கர ரேகைகள் அமைதல். இவ்விரு உறுப்புக்களையும் அப்படியே கொண்டு, மேலும் மீனரேகையும் அமைந்துள்ளது என்று திவிட்டனை வருணிக்குமிடத்துச் சூளாமணி கூறும் (78):

**செங்கயல் வலம்புரி திகிரி என்றிவை**
**தங்கிய அங்கையன் அடித்தண் போதினன்.**

ஒரு தன்மையை இங்குக் குறிப்பிடலாம். இராமன் திருமாலே என்பதால், சங்க ரேகையும், சக்கர ரேகையும், அவனுக்கு இயல்பாகவே உரியன. திவிட்டன் கண்ணனே என்று நெடுகிலும் தேவர் சொல்லி வருகிறபடியால், அந்த ரேகைகளை இவனுக்கும் அதே வரிசையில் சொல்வதோடு,

பெருக்கியும் சொல்கிறார். யாரைப் பார்த்து யார் பாடினார் என்பதை விவரிக்க அவசியமில்லை.

இராமனைக் கண்ட மிதிலை நகரத்தார் அவன் வடிவப் பொலிவில் ஈடுபட்டுச் சொல்லுகிறார்கள். "நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும்; கொம்பினைக் காணும் தோறும் குரிசிற்கும் அன்னதேயாம்" ஆனால் இப்பாடலின் முதல் அடியில் உள்ள கருத்து மட்டும், கவி கூற்றாக, சூளாமணியுள் வருகிறது. சுவலனசடி மன்னன் தன் மகளை அழைத்து, மணமகனின் தந்தையாகிய பயாபதி மன்னனுக்குக் காட்டுகிற இடத்தில், கவிஞர் கூறுகிறார்: "ஆயிரங் கண்ணிலாதார்க்கு அழகு காண்பரிய நங்கை..." வணங்கி நின்றாள். கம்பர் பாடலில் காணும் பொருட் சுவை இங்குக் காணப்படவில்லை. இவை போலவே பின்னும் பல இடங்களைக் காட்ட முடியும். சொல்லொற்றுமையும் கருத்தொற்றுமையும் உள்ள சில இடங்களை மட்டும் கீழே தருகிறோம்.

'ஆசை நோய்க்கு மருந்து முண்டாம் கொலோ' – கம்பர் (2–10–80)[1] 'ஆதலால் காம நோய்க்கோர் அருமருந்தில்லையன்றே' – சூளாமணி 99. இலக்குவன் பர்ணசாலை அமைத்ததைப் பார்த்து வியந்த இராமன், 'சிறு குன்று போலக் குவவிய தோளினாய்' என்று அவனை விளித்துப் பேசுகிறான்–கம்பர் (2–10–50). 'திவிட்டனோடு செய்த போர் அழிந்தது' என்று கேட்டுச் சிரித்த அச்சுவ கண்டனை, 'நக்கனன்-குன்று போற் பெருகிய குவவுத் தோளினன்' (1255) என்று சூளாமணிக் கவிஞர் கூறுகிறார். 'சேதாம்பல் போதனைய செங்கனிவாய்'–கம்பர் (2–4–97); 'சேதாம்பல் வீழ்ந்தனைய செவ்வாயும்' – சூளாமணி (1533). 'கவரி வெண்குடையெனும் நுரைய' – கம்பர் (3–6–120); 'திலக வெண்குடை நுரையென நிவந்தன' – சூளாமணி (1396). இவ்வாறு காட்டக் கூடிய தனி எடுத்துக் காட்டுகள் இன்னும் பல.

1 எண்கள் முறையே காண்டம், படலம், பாட்டு எண்கள், மர்ரே கம்பெனிப் பதிப்புக் குரியவை.

மற்றுமோரிடம் சிறப்பாய்க் கருதத் தக்கது. விசுவா மித்திர முனிவர்பின் இராமன் மிதிலை நகர் வீதி வழியாகச் செல்கிறான். மாளிகை மாடத்தின் மீது நின்ற சீதை இவனைக் காண்கிறாள், இவனும் சீதையைக் காண்கிறான். இருவரும் ஒருவர் மீது ஒருவர் காதல்கொண்டு, இதயம் மாறிப் புக்கனர். கம்பராமாயணத்தில் இந்தக் கட்டம் இலக்கிய உலகில் மிக்க பிரசித்தி பெற்றது.

**பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்து**
**ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்**
**வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்**
**இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்.**

**மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்**
**ஒருங்கிய இரண்டுடற்கு உயிரொன் றாயினார்.**

இவர்கள் நிலை இப்படி இருப்பது இலக்கிய உலகில் ஒரு புதுமை. வான்மீகி இராமாயணத்தில் இராமன் சனகன் வில்லை ஒடிக்கவும், திருமணம் நிறைவேறுகிறது. மணத்துக்கு முன் இராமனும் சீதையும் ஒருவரையொருவர் பார்த்தலோ காமுறுதலோ இல்லை. காதல் என்ற தமிழ்ப் பண்பு அமையவும், அகப் பொருள் செய்திகளையெல்லாம் மனத்துள் அடக்கியும், இணையற்ற நாடகப் பண்பு பொருந்தவும், கம்பர் இப்படியொரு கட்டத்தைத் திட்டமிட்டு வெற்றிகரமாக வகுத்து, அக்கட்டத்தை ஒப்பற்ற இலக்கிய மாகவும் ஆக்கியிருக்கிறார்.

இந்தப் பண்பும் நிலையும் சூளாமணியில் இல்லை. இங்கு சயம்பவை விசயனையும் திவிட்டனையும் தன் தோழி காட்டக் காண்கிறாள். கண்டு திவிட்டன் மீது காதல் கொள்ளுகிறாள். ஆனால் திவிட்டன் இவளைக் காணவில்லை. மாதவசேனை என்பவள் சயம்பவையின் மீது திவிட்டன் காதல்

கொள்ளுமாறு செய்யும் நோக்கத்துடன் அவள் படத்தை எழுதித் திவிட்டன் தாயிடம் காட்ட, அவள் மகனிடம் காட்டச்சொல்லத் திவிட்டன் கண்டு, இன்னுரென்று தெரியாமல் அவளை விசாரித்துத் தெரிந்து கொண்டு, பிறகு காதல்கொள்ளுகிறுன். இது மிகவும் விசித்திரமான ஒரு நிலைமை; காதல் என்பது பார்த்த மாத்திரத்தில் வருவது, ஆராய்ந்து முடிவு செய்து வருகிறது!

சூளாமணிக்காரர் தாமாகவே நூல் செய்திருந்தாராளுல் எத்தனையோ காப்பியங்களில் கூறினதுபோல பிள்ளைக்கும் பெண்ணுக்கும் தந்தையர் முடிக்கும் கல்யாணமாக நடத்தியிருப்பார். ஆனுல் அவர் கம்பர் நிகழ்த்தும் காதல் நாடகத்தைக் கண்டார். இதைச் சொல்லவேண்டும் என்ற ஆசையினுல் சிறிது மாற்றி, தமக்குத் தெரிந்த அளவு இப்படிச் சொல்லியிருக்கிறுர். கம்பருடைய காதல் நாடகத்திற்கு மூலம் தமிழ் மரபும் அவருடைய கவிதையுள்ளமுமே.

கம்பரது இராமாயணத்தில் உள்ள அரக்கர், இராம லட்சுமணரை மனிதர் என்று இழிவாகப் பேசுகிறுர்கள். சூளாமணியில் அதேபோல விஞ்சையர் திவிட்டன் முதலியோரை இழிவாகக் குறிப்பிடுவதைப் பல இடங்களில் காணலாம்.

இவற்றை ஊன்றி நோக்கினுல் கம்பர் சூளாமணியிலிருந்து பல பொருள்களைக் கற்றுர் என்பது எத்தனை பொருத்தமற்ற கூற்று என்பது விளங்குவதோடு, கம்பர் சூளாமணிக் காலத்திற்கு முற்பட்டவர் என்பதும் தெளிவாய்ப் புலப்படும்.

### மேற்கோள்

சிறந்த உரையாசிரியர் சூளாமணியை மேற்கோளாய் எடுத்துத் தருவதில் வியப்பில்லை. யாப்பருங்கலவிருத்திகாரர், குணசாகரர், இளம்பூரணர், நேமிநாத உரைகாரர்

பெருந்தேவனார் ஆகிய இலக்கண உரையாசிரியரும் அடியார்க்கு நல்லார் நச்சினார்க்கினியர் போன்ற இலக்கிய உரை ஆசிரியரும் இந்நூலை எடுத்து ஆளுகின்றார்கள். விருத்தி காரர் சிந்தாமணியினும் பார்க்க இந்நூலில் அதிக ஈடுபாடு கொண்டவராய்த் தெரிகிறார்.

காலத்தில் இன்னும் முன்வந்து 15ஆம் நூற்றாண்டில் பார்த்தால் இலக்கியச்சுவை நிரம்பிய 1500 பாடல்களைத் தொகுத்த புறத்திரட்டாசிரியர் இதிலிருந்து 79 பாடல்களைத் தருவது தெரிகிறது. அதிகமான பாடல்களை அமைச்சு ஆள்வினை போன்ற பகுதிகளில் தருகிறார். வழக்கமாய் இவர் முதலில் சிந்தாமணியைக் கூறும் நியதியுடையவர்; இது கால முறை கருதிப் போலும். ஆனால் சிறப்புமிக்க கருத்துடைய சூளாமணிப் பாடல்களை அதிகமாய்த் தரும் போது, இதை முதலில் வைத்துப் பின் சிந்தாமணியைக் கூறுகிறார். சூளாமணி மிகைச் செய்யுள் என்று மூன்று பாடல்களை வையாபுரிப் பிள்ளை புறத்திரட்டுப் பதிப்பில் குறிப்பிட்டிருக்கிறார். (முதல் பதிப்பு, முன்னுரை பக்கம் ix). இப் பாடல்களின் பொருள், கொல்லாமை, புலால் மறுத்தல். இவை சூளாமணிக்குரியனவல்ல; தொடர்பு நோக்கி, முதல் பாட்டு சாந்தி புராணத்திற்கும் மற்ற இரண்டும் வளையா பதிக்கும் உரியன என்று கூறமுடியும்.

**காலம்**

ஆன்றோர் பலர், சம்பந்தர் சமணரைக் கருவறுத்தார்; அவருக்குப்பின் சமணர் தலையெடுக்கவில்லை; சூளாமணி ஒரு சிறப்பான காப்பியம்; எனவே இது அவர் காலத்தின் பின் தோன்றியிருக்காது; ஆக்வே, சிந்தாமணி சூளாமணியின் காலங்கள், சம்பந்தர் காலமாகிய ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலம் என்ற பொருள்பட எழுதியிருக்கிறார்கள். இது பொருந்தாத கூற்று என்பதை விளக்கவேண்டியதில்லை.

*அப்பராலும் சம்பந்தராலும் அழிந்தவை, பல்லவ நாட்டிலும் சோழ பாண்டிய நாடுகளிலும் சமணர் பெற்றிருந்த அரசிய லாதிக்கம்; அவர்களுடைய இலக்கியச் செல்வத்தை யாரும் ஏதுவும் செய்யவில்லை. பல இடங்களிலும் யாம் விளக்கி யுள்ளபடி அவர்கள் சமயம், ஒரு வறண்ட வாழ்க்கையைக் காட்டுகிறது. அழகும் இன்பமும் ஆக்கமும் ஆள்வினையும் நிறைந்த ஓர் அரசியலும், சமூக வாழ்க்கையும், ஆழ்வார் நாயன்மாருக்குப் பின் தமிழ் நாட்டில் இடம்பெற்றன. இதில் பங்குகொள்ள இயலாத சைனர், தங்கள் வறட்டு வாழ்க்கை யின் விளைவாகத் தங்களைத் தாங்களே ஒடுக்கிக்கொண்டார் கள். அவர்கள் செய்த நூல்கள் யாவும் அவ்வொடுக்கத்தில் விளைந்தவை. எனவே, அவை ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை என்று கூறுதல் ஏற்கமுடியாத ஒரு கூற்று.*

*இத்தகைய கூற்றுக்களை ஒதுக்கிப் பார்க்கும்போது, காலம்பற்றி இங்கு ஆராயத்தக்க குறிப்புக்கள் நான்கு கிடைக்கின்றன. 11ஆம் நூற்றாண்டில் யாப்பருங்கல விருத்தியுரை செய்த ஆசிரியர் இதன் பாடல்கள் 22 எடுத்துத் தருகிறார். ஆகவே இக் காப்பியம் அந்நூற்றாண் டுக்கு முற்பட்டதென்பது தெளிவு. இரண்டாவது குறிப்பு நூலரங்கேற்றம் பற்றிய 4ஆம் பாடல்:*

**நாமாண் புரைக்கும் குறைஎன்னினும் நாமவென்வேல்**
**தேமாண் அலங்கல் திருமால்நெடுஞ் சேந்தன் என்னும்**
**தூமாண் தமிழின் கிழவன்சுட ராரர மார்பிற்**
**கோமான் அவையுள் தெருண்டார்கொளப் பட்ட தன்றே.**

*‘சேந்தன் என்னும் தூமாண் தமிழின் கிழவன்’ என்ற மையால், தமிழின் கிழவன் பாண்டியன், பாண்டியருள் சேந்தன் என்ற பெயருடையவன் ஏழாம் நூற்றாண்டில் சம்பந்தரால் ஆட்கொள்ளப் பெற்ற அரிகேசரி நெடுமாறன் தந்தையாகிய சடையவர்மன் செழியன் சேந்தன் (620–640)*

என்பவனே, இவனே மாறவர்மன், அவனிசூளாமணி என்பவன்,[1] இவன் காலத்தேதான் சூளாமணி இயற்றப் பெற்றது, இவ்வரசனுக்கும் நூலுக்குமுள்ள பெயர் ஒற்றுமையும் இக் கருத்தை ஆதரிக்கும் என்போர் சிலர். இது பொருந்துவதாகத் தெரியவில்லை. நூலிலுள்ள சொல்லாட்சி, தொடர்கள், கருத்துக்கள், செய்யுளமைப்பு முதலிய யாவும் இன்னும் பிற்காலத்தையே காட்டுகின்றன. மேலும், தமிழின் கிழவன் என்றமையாலேயே பாண்டியன் என்று கருதிவிடுவது பொருந்தாது. தம்தம் அபிமானம்பற்றிச் சோழ நாடே செந்தமிழ் நாடு என்று எழுதிய பண்டை உரையாசிரியரும் உளர்.

இனி மூன்றுவது கருத்து, திக்கெட்டும் என்ற பாடலில் குறிப்பிடப்பட்ட 'விசயன் கார்வெட்டி அரையன்' பற்றியது. விசயன் என்ற சொல் வெற்றியுடையவன் என்று மட்டுமே பொருள்படுவதாகலாம். கார் வெட்டி என்பது காடு வெட்டி என்பதன் திரிபு; இப் பெயர் பல்லவர் பட்டங்களுள் ஒன்று. காடவர், காடவர்கோன், காடு வெட்டி என்ற பெயர்கள் தொடர்புடையன. இவர்கள் ஆட்சிபுரிந்த தொண்டைநாடு, நீர்வளம் குறைந்த, சமநில மற்ற பகுதியாதலால், எங்குமே காடழித்து நீர்வளம் பெருக்கி ஏரியமைக்கும் வேலையைப் பல்லவர் மேற்கொண்டிருந்தார்கள்; ஆதலால் இப்பெயர்கள் இவர்களுக்கு அமைந்தன. இப் பாடலில் கார்வெட்டி அரையன் வளநாடன் என்று மட்டுமே சொல்லப்பட்டமையால், இவன் பல்லவர் கீழிருந்து ஒரு சிறு நிலப் பகுதியைத் தனக்கு உரிமையாக்கிக் கொண்ட குறுநிலத் தலைவர் வழியில் வந்தான் என்று கருதவேண்டும்.

---

1 சதாசிவ பண்டாரத்தார் கருத்து இதற்கு வேறுயுள்ளது; அவனி சூளாமணியும் சேந்தனும் ஒருவரல்லர், அவனிசூளாமணி (600–625), செழியன் சேந்தன் (625–640), அரிகேசரி நெடுமாறன் (640–670) என்று அவர் காலவரையறை செய்துள்ளார், பாண்டியர் வரலாறு 1966, பக்கம் 37–42 பார்க்க.

இவன் காலத்தில் பல்லவ மன்னர் யாரும் இல்லை என்பது தெரிகிறது. ஒன்பதாம் நூற்றுண்டின் இறுதியோடு பல்லவ மரபு முடிவடைகின்றது. இப்பாடல் பல்லவ மன்னரைக் குறிப்பிடாமையால், இம்மரபு இல்லாது போனபின் வாழ்ந்த ஒரு தலைவன் ஆதரவு சூளாமணியாசிரியருக்குக் கிடைத்து நூல் செய்தாரென்று நாம் கருதலாம்.

இனி நான்காவது, குணபத்திரர் மரபு பற்றியது. குணபத்திர முனிவர் உத்தர மகா புராணம் செய்தது கி. பி. 897இல். அதன் பின்பு குமரசேன முனிவரும், அவருக்குப் பின் சிந்தாமணியாசிரியரும், அவருக்குப் பின் ஸ்ரீவர்த்த தேவரும் இருந்தார்கள் என்பர். ஸ்ரீ வர்த்ததேவர் செய்தது, சூடாமணி. இச் சூடாமணி தமிழ்ச் சூளாமணியே என்றும், தோலாமொழித் தேவருடைய இயற்பெயர் ஸ்ரீ வர்த்ததேவர் என்று இருந்திருக்கலாம் என்றும், முன்னர்க் காட்டினேம். இவற்றுல், இவர் சூளாமணி என்ற காவியம் செய்த காலம், 897க்குச் சிறிது காலம் பிற்பட்டு, அதாவது கி. பி. 925–950 ஆக இருத்தல் கூடும் என்று அறியலாம்.

சூளாமணியானது சிந்தாமணிக்கும் பிற்பட்ட காப்பியம் என்பது அனைவரும் கூறும் கருத்தாகும். இதற்கு ஒரு சான்றும் அதனுள் காணப்படுகிறது. ஏமாங்கத நாடு என்பது திருத்தக்க தேவருடைய படைப்பு; சிந்தாமணிக் கதா நாயகனை சீவகன் தந்தை சச்சந்தனது நாடு, ‘ ஏமாங் கத மென்று இசையால்திசை போயதுண்டே’ என்று திருத் தக்க தேவர் தொடங்குகிறுர். சூளாமணியில் திவிட்டன் புதல்வி சோதிமாலையின் சுயம்வரத்துக்கு வந்த அரசர்களில் ஏமாங்கத நாடன் என்பவனும் ஒருவன். இதனுல் இந்நூல் சிந்தாமணிக்குப் பின் இயற்றப்பட்டதாகும் என்பது தெளிவு. இலக்கியச் சுவை கொண்ட பாடல்களைத் தொகுத்த புறத் திரட்டாசிரியர், பொதுவாக எங்கும் சிந்தாமணிப் பாடல்

களுக்குப் பின்னரே சூளாமணிப் பாடலைப் பெய்திருத்தலும் குறிப்பிடத்தக்கது.

சேந்தன் என்னும் பெயரோடு பலர் வாழ்ந்திருக்கிறார்கள். ஒரு பாண்டியன் இப் பெயருடையவன் என்று முன்னமே குறிப்பிட்டோம். சேந்தன் என்பது முருகனுக்கு ஒரு பெயர். பத்தாம் நூற்றாண்டில் ஒரு சேந்தனார் வாழ்ந்து முருகனாகிய சேந்தனுக்கே ஒரு திருவிசைப்பா பாடினார். பத்துக்கு முந்திய ஒன்பதாம் நூற்றாண்டில் அம்பர் கிழான் சேந்தன் என்பவன் வாழ்ந்து திவாகரரைக் கொண்டு நிகண்டு பாடுவித்தான். சங்ககாலத்தில் அம்பர் கிழான் அருவந்தையைப் பரணர் பாடியிருக்கிறார். இவன் ஒரு சேந்தன் தந்தை. மிகவும் பிற்காலத்தில் நாங்கூர்ச் சேந்தர் என்பவர் ஒரு பட்டினத்தாரிடம் அமைச்சராய் இருந்திருக்கிறார். இத்தனைப் பேரும் அல்லாது பத்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் தூமாண் தமிழின் கிழவனாக ஒரு சேந்தன் இருந்தான். அவன் சிறந்த வீரனாயும், தலைவனாயும் வாழ்ந்தான். அவனது அவையில் தோலா மொழித் தேவர் சூளாமணியை அரங்கேற்றினார் என்று பாடல் சொல்கிறது. அவன் தமிழின் கிழவன் என்று சொல்லியதற்கும் ஒரு பொருத்தம் காணலாம். அம்பர் கிழான் அருவந்தை சங்க இலக்கியத்தில் சொல்லப் பட்டுள்ளான். பல நூற்றாண்டுகள் கழித்து மற்றோர் அம்பர் கிழான் அருவந்தைச் சேந்தன் திவாகரரைக் கொண்டு திவாகரம் பாடுவித்தான். இந்த அம்பர் சோழநாட்டில் உள்ளது. தோலாமொழித் தேவரும் சோழநாட்டைச் சிறப்பித்துக் கூறுகிறார் என்பதை முன்னமே குறிப்பிட்டோம். ஆதலால் தேவர் கூறும் சேந்தன் முற்கூறிய இரு அம்பர் கிழான் அருவந்தைச்சேந்தர் பரம்பரையில் பின்னால் வந்த மற்றொரு சேந்தன் என்று கொள்ளலாம் என்று தோன்றுகிறது. சேந்தனைக்குறித்த பாடல், ஆசிரியரே பாடி நூலின் அகத்தே அமைக்கப்பட்ட பாடல். இவ் வரலாறு கொள்ளத்

தக்கதே. மற்று, திக்கெட்டும் என்ற பாடல் தனிப் பாடல். அது அத்துணை வலியுடையதன்று. எனினும், இரண்டையும் ஒற்றுமைப் படுத்தி, கார் வெட்டி அரையனுடைய விருப் பத்துக் கிணங்க, தரும தீர்த்தங்கரர் திருவடி வணங்கிய தோலா மொழித் தேவர் தாம் செய்த சூளாமணி என்னும் நூலைச் சேந்தனுடைய அவையில் அரங்கேற்றினர் என்று சொல்லலாம். ஆசிரியர் மந்திரசாலைச் சுருக்கத்தில் குறிப்பிடும் ஓர் அரசன், இந்திர சஞ்சயத்துக்குரியவனை அருஞ்சயன் என்பான்; "தரணியெல்லாம் அஞ்சுநீர் அருஞ் சயன் அருங்கால வேலான், மஞ்சுசூழ் மலைக்கோர் சூளாமணி எனக் கருதுமன்ன" என்று கூறுகிறார். உண்மையில் இப் பெயருடைய சோழ மன்னனொருவன் கி. பி. 957இல் சில மாதங்களே அரசாண்டான். இவன் முதற் பராந்தக சோழனது மூன்றும் புதல்வன்; கண்டராதித்தருக்குப் பிறகு சில மாதம் அரசனாயிருந்தான்; இவன் முதலாம் இராசராச சோழனுக்குப் பாட்டன்; சிறந்த வீரனாயும் இருந்தான். ஆசிரியர் உண்மையிலேயே இவனைக் குறிப்பிட்டிருத்தலும் கூடும் என்றும் சிலர் கருதுவதுண்டு. இதற்குப் பொருத்த மாக, வேறு சான்றுகளால் காணும் சூளாமணியின் காலம் பத்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியாகவே தெரிகிறது.

1889இல் சூளாமணி பதிப்பித்த தாமோதரம் பிள்ளை காலத்தில் தமிழில் காலம் பற்றிய எந்த ஆராய்ச்சியும் இல்லை; சொன்ன கருத்துக்கள் யாவுமே உத்தேசமாய்ச் சொன்ன வையேயன்றி, ஆதார பூர்வமானவையல்ல. இந்நூலின் காலத்தைக் குறித்து அவர் கூறும்போது, இது காலத்தால் சிந்தாமணிக்கு முற்பட்டதென்று கூறி, சில கருத்துக்கள் சொல்கிறார். குணசாகரர் சகாப்தம் 200–300 அளவில் (கி. பி. 278–378) யாப்பருங் கலக்காரிகைக்கு உரை எழுதினர்; கார்வெட்டி விசயன் காலம் உறந்தைக்கு முந்தியது; சூளாமணியின் காலம் (1889க்கு) 1500 வருஷத்துக்கு

முந்தியது – இக் கருத்துக்கள் மெய்யல்ல என்று இன்று நாம் அறிவோம். மேலும் அவர் சொல்வதன் கருத்து: குணசாகரர் சூளாமணியை அதிகம் காட்டுகிருரேயன்றிச் சிந்தாமணியைக் காட்டவில்லை; ஆகவே, அவர் காலத்தில் சிந்தாமணி இல்லை; யகர ஆசெதுகையில் 'காய் மாண்ட' என்ற சிந்தாமணிப் பாடல் அவ்வுரையுள் இருக்கிறதே என்ருல், பிற்காலத்தோர் ஏடுகளில் காணப்பட்ட 'வேய்காயு மென்பணைத்தோள்' என்ற பாடலின் இலக்கணம் உணராது, அது சவலை விருத்தம் என்பது தெரியாமல், ஒரு சீர் இரண்டாம் அடியில் குறைந்திருப்பதனுல், அப்பாடலை நீக்கிச் சிந்தாமணிப் பாடலைப் பின் வந்தோர் பெய்து கொண்டனர்; ரகர ழகர ஆசெதுகை முதலிய பலவற்றுக்குச் சூளாமணியைத் தருகின்ற குணசாகரர் யகர ஆசெதுகைக்கு மட்டும் சிந்தாமணியைத் தந்தார் என்பது பொருந்தாது – என்பதாகும். அவர் கூற்றைவிடக் கால வேறுபாடு மிகப் பெரிதாதலால், இக் கருத்துக்களை இங்கு ஆராயும் அவசியமில்லை. சூளாமணியின் காலம் தாமோதரம் பிள்ளை நினைத்த காலத்தை விட ஆறு நூற்ருண்டுகள் பிற்பட்டதாகுமாதலால், அவர் கருதுவதை ஆராய்ந்து கூறும் அவசியம் இப்போது இல்லை.

# தமிழ்க் காப்பிய அட்டவணை

* நூல் இல்லை. † அடிகள். § உத்தேசம்.

| எண் | நூற்றுண்டு | நூல் | யாப்பு | ஆசிரியர் | செய்யுள் தொகை | மூலமா தழுவலா | சமயம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | ? | சிலப்பதிகாரம் | ஆசிரியம் | இளங்கோ அடிகள் | 5270 † | மூலம் | பொது |
| 2 | 7 | மணிமேகலை | ,, | சீத்தலைச் சாத்தனுர் | 4835 † | மூலம் | பௌத்தம் |
| 3 | 8 | பெருங்கதை | ,, | கொங்கு வேளிர் | 16230 † | தழுவல் | சைனம் |
| 4 | 9 | சீவக சிந்தாமணி | விருத்தம் | திருத்தக்க தேவர் | 3154 | தழுவல் | சைனம் |
| 5 | 9 | இராமாயணம் | ,, | கம்பர் | 10480 | தழுவல் | பொது |
| 6 | 9 | வளையாபதி * | ,, | ? | — | ? | ? |
| 7 | 9 | பாரத வெண்பா | வெண்பா | பெருந் தேவனுர் | 1180 | மூலம் | பொது |
| 8 | 10 | சூளாமணி | விருத்தம் | தோலாமொழித் தேவர் | 2131 | தழுவல் | சைனம் |
| 9 | 10 | குண்டலகேசி * | ,, | நாதகுத்தனுர் | — | மூலம் | பௌத்தம் |
| 10 | 10 | நீலகேசி | ,, | ? | 894 | மூலம் | சைனம் |
| 11 | 11 | (கல்லாடம் | ஆசிரியம் | கல்லாடர் | 100 | மூலம் | சைவம்). |
| 12 | 12 | பெரியபுராணம் | விருத்தம் | சேக்கிழார் | 4286 | மூலம் | சைவம் |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 13 | 12 | உத்தர ராமாயணம் | விருத்தம் | ஒட்டக்கூத்தர் | 1510 | தழுவல் | வைணவம் |
| 14 | 13 | நள வெண்பா | வெண்பா | புகழேந்தி | 424 | மூலம் | பொது |
| 15 | 13 | யசோதர காவியம் | விருத்தம் | ? | 320 | தழுவல் | சைனம் |
| 16 | 13 | திருவிளையாடல் | ,, | பெரும்பற்றப்புலியூர் நம்பி | 1752 | தழுவல் | சைவம் |
| 17 | 14 | பாரதம் | ,, | வில்லிபுத்தூரார் | 4351 | தழுவல் | பொது |
| 18 | 14 | கந்தபுராணம் | ,, | கச்சியப்ப சிவாசாரியர் | 10345 | மூலம் | சைவம் |
| 19 | 15 | திருவாதவூரர் புராணம் | ,, | கடவுள் மாமுனிவர் | 545 | மூலம் | சைவம் |
| 20 | 15 | ஸ்ரீபுராணம் | உரைநடை | ? | — | தழுவல் | சைனம் |
| 21 | 15 | உதயணகுமார காவியம் | விருத்தம் | ? | 369 | மூலம் | சைனம் |
| 22 | 15 | நாக தமார காவியம் * | ,, | ? | — | ? | ? |
| 23 | 15 | காதம்பரி | ,, | ஆதிவராககவி | 1232 | தழுவல் | பொது |
| 24 | 16 | அரிச்சந்திரபுராணம் | ,, | வீரைஆசுகவிராசர் | 1215 | மூலம் | பொது |
| 25 | 16 | புரூரவசரிதை | ,, | ஐயம்பெருமாள் | 1000 § | மூலம் | பொது |
| 26 | 16 | நைடதம் | ,, | அதிவீரராம பாண்டியன் | 1172 | தழுவல் | பொது |
| 27 | 16 | பாகவதம் | ,, | செவ்வைச்சூடுவார் | 4973 | தழுவல் | வைணவம் |
| 28 | 16 | பாகவதம் | ,, | அருளாளதாசர் | 9147 | தழுவல் | வைணவம் |
| 29 | 17 | பிரபோத சந்திரோதயம் | ,, | மாதை-திருவேங்கடநாதர் | 2019 | தழுவல் | வேதாந்தம் |

பதிப்பு

*1. 'இரண்டாவது காவியம் தோலா மொழித் தேவர் இயற்றியருளிய சூளாமணி' – சி. வை. தாமோதரம் பிள்ளை பதிப்பு, 1889. 'இக்கதையை வசன ரூபமாக யாழ்ப்பாணம் வித்துவான் ஸ்ரீ தாவடி அம்பிகைபாக உபாத்தியாயர் எழுதி வருகிருர். அன்றியும் இக்காலத்து மிகச் சிறந்த வித்துவான் ஒருவர் இந்நூற்கு உரை எழுதி அச்சிடுவிக்கக் கருதியிருப்பதாகவும் தெரிய வருகிறது' என்பது அவர் குறிப்பு; அப்படி எந்த வசனமோ உரையோ வெளி வந்ததாகத் தெரியவில்லை. 2. சூளாமணி பாட்டும் உரைநடையும்: தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர், திரு. வி. க. மணி விழாக் காணிக்கை, 25-8-1944; முதல் நான்கு படலம் 238 பாடல் மட்டும். மூலம் 54 பக்கம்; பாட்டுத் தோறும் உரைநடையும் விரிந்த விளக்கமும், 200 பக்கம். 3. அடையாறு சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பு 2 தொகுதி, 1954. குறிப்புரையும் அரும்பத அகராதியும் கொண்டது. அரசியற் சருக்கத்தில் தாமோதரம் பிள்ளை பதிப்பில் கண்ட 1296 – 1307 பாடல்கள் (166 – 177) ஏடுகள் பலவற்றில் இல்லை என்பதும், 904 இன் பின் (கல்யாணச் சருக்கம் 78) மங்கல மண்ணுநீர் என்ற ஒரு பாடலும், சுயம் வரச் சருக்கத்தில் 1748ஆம் பாடலின் பின் (194) பத்துப் பாடல்களும், ஓரேட்டில் மிகையாகக் காணப்படுகின்றன என்பதும், இப்பதிப்பில் கண்ட குறிப்புக்கள். 4. கழகப் பதிப்பு, இரண்டு பாகம், இராமசாமிப் புலவர் – சோம சுந்தரனுர் உரையுடன் 1953.*

அத்தியாயம் 2

# இலக்கியம் - 2

## முன்னுரை

தமிழ் மொழியின் இலக்கிய வரலாற்றை ஒரு தொகுப்பாகப் பார்க்கும்போது சில நூற்றுண்டுகள் ஒரே வகையான இலக்கிய எழுச்சியுடையனவாய்த் தெரிகின்றன. சங்க இலக்கிய காலம் என்பது ஒன்று. அருட் பாசுர காலம் என்பது அடுத்தது. அதன்பின் காப்பிய காலம் என்பது ஒரு நீண்ட காலப் பகுதி. இது பற்றி மட்டும் இங்குச் சில சொற்கள் சொல்லுவோம். ஒரு வகைப் பெயரைச் சொன்ன மாத்திரத்திலே பிற வகையான நூல்கள் அக்காலத்தில் எழவில்லை என்பது பொருளாகாது. அக் காலப் பகுதியின் போக்கு அத்தகையது என்பது மட்டுமே பொருள்.

சிலப்பதிகார காலம் முதல் 16ஆம் நூற்றுண்டு வரையில் தோன்றிய பெருங்காப்பியங்கள், சிறு காப்பியங்கள் பற்றிய ஓர் அட்டவணையைப் பக்கம் 96-97 இல் கொடுத்திருக்கிறேம். அதைப் பார்க்கும்போது சில கருத்துக்கள் எழக்கூடும். சைவ வைணவ சமயங்களில் அருட் பாசுரங்கள் தோன்றினவேயன்றி, பேரிலக்கியம் எதுவும் தோன்றவில்லை. சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சிந்தாமணி என்ற வரிசையிலும், அதற்குப் பின்னரும், தோன்றியவை யாவும் சைன பௌத்த இலக்கியங்கள். மணிமேகலையும், குண்டலகேசியும் பௌத்த நூல்கள்; ஏனையவை யாவும் சைன நூல்கள். இந்த நியதிக்கு விலக்காக இருப்பது கம்பராமாயணம் ஒன்றே. வைணவர் இது சிறந்த சமய

நூல் என்று கருதுவார்கள். சைவர், கம்பர் சமய பேதம் கடந்த உத்தம சைவர் என்பார்கள். பிற்பட்டுத்தான் சைவ நூலாகிய பெரிய புராணம் தோன்றிற்று. இதில் குறைவு ஒன்றும் இல்லை. அகண்டமாய், அகன்றதாய், இடையீடு இல்லாததாய், எங்கும் நிலவிய சமயம் சைவ சமயம். நாடும் மக்களும் கோயிலும் மொழியும் எல்லாம் தங்களுடையதாகக் கொண்டிருந்தமையால் ஆரம்ப காலத்தில் பத்து நூற்றாண்டு களுக்கு மேலாகத் தங்கள் சமயப் பெருங் காப்பியங்கள் எவையும் செய்வதில் இவர்கள் கவனம் செலுத்தவில்லை. முன் சொல்லப்பட்ட காப்பியங்கள் யாவும் மனிதன் வரலாற் றைச் சொல்வன; யாவும் சைவத்துக்கு அன்னிய மாவன. சைவர், மனிதனை நாக்கொண்டு பாடுவது தகாது என்ற கருத்துடையவராயிருந்தார்கள். ஆகவே அவர்கள் மனிதனைப் புகழ்ந்து காவியம் செய்யவில்லை. ஆனால் சைன பௌத்தர் நிலை வேறு. இவர்கள் அன்னியர்; தங்கள் பிரசாரத்திலும் சமயத்தை வலியுறுத்தலிலுமே முழுக் கவனம் செலுத்தினார்கள். ஆகவேதான் இவர்கள் சமயத்துக்குரியன வான நூல்கள் இத்தனை காணப்படுகின்றன. ஆங்கிலத்தில், 'புதிதாக மதம் மாறினவனுடைய வெறி' என்ற ஒரு பழமொழி சொல்வார்கள். அது இவர்களுக்கு நன்கு பொருந்தும். சைனர் அரசியலையும் கைப்பற்றிக் கொண்டார் கள்; அதுபற்றி அவர்கள் ஆதிக்கம் பின்னும் பலமடைந்தது. ஆனால் பௌத்தர் அரசியலில் பிரவேசிக்கவில்லை. ஆகவே அவர்களுடைய நூல் விரிவும் அதிகம் இல்லை.

இறந்துபோன நூல்களையெல்லாம் கணக்கிட்டால் சைனர் காப்பியங்கள் இன்னும் எத்துணை அதிகம் என்பதை நன்கு உணரலாம். புராண சாகரம், சாந்தி புராணம், பிங்கல கேசி, அமிர்தபதி, நாரத சரிதை, கலியாணன் கதை முதலியனவும், பிம்பிசார கதை என்ற பௌத்த நூலும் இங்குக் கருதத்தக்கன.

இத்தகையதொரு மேலோட்டமான நோக்கோடு பார்த்து, இந்தப் பத்தாம் நூற்றுண்டுக்குரிய சில காப்பியங்களை இங்கு ஆராய்வோம்.

## குண்டலகேசி

### நூல்

தமிழில் இந்நூலுக்குள்ள சிறப்புக்கள் பல. ஒன்று, இது ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று என்று பெயர் பெற்றிருந்தமை. இரண்டாவது, இது பௌத்த நூல் என்பது. அடுத்தது, இன்று இந்நூல் இல்லாமலே இறந்து போயிற்று என்பது !

கேசி என்பது பெண்ணின் கேசத்தால் வந்த பெயர் — நீலகேசி என்பது போல. சுருண்ட கூந்தல் காரணமாகக் குண்டலகேசி என்று இக்காப்பியத் தலைவி பெயர் பெற்றுள். அவள் பெயரைக் கொண்டது இந்நூல். ஐம்பெருங் காப்பியம் என்ற பெயரை முதல் முதலில் மயிலை நாதர் நன்னூல் உரையில் சொல்லுகிறுர்; பஞ்ச மகா காவியம் என்றும் சொல்வதுண்டு. பிற்கால நூல்கள், ஐம்பெருங் காப்பியங் களின் பெயரையும் பாட்டில் அமைத்துச் சொல்கின்றன. குண்டலகேசியை யாப்பருங்கல விருத்தி நான்கிடங்களிற் குறிப்பிடுகிறது. வீரசோழிய உரை இரண்டிடங்களில் இதைப் பெயர் குறிப்பிடுகிறது;ஓரிடத்தில் இதன் பாடலைத் தருகிறது. நீலகேசியுரையே குண்டலகேசியின் வரலாற்றை விளங்கக் கூறி, குண்டலகேசியின் வாதத்தை மறுக்கு முகமாகப் பல பாடல்களின் முதற் குறிப்பைத் தருகிறது. புறத்திரட்டில் (14ஆம் நூற்றுண்டு) இதன் பாடல்கள் 19 எடுத்துக் கோக்கப் பட்டுள்ளன. சிவஞான சித்தியார் பரபக்கவுரையில், திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் (16ஆம் நூற்றுண்டு) இதன் பாடல் பல குறிப்பிடுகிறுர். வைசிய புராணம் குண்டலகேசி

என்ற பெயரால் ஒரு கதை சொல்லுகிறது. இவையே நாம் இன்று இந்நூலைப் பற்றி அறிவதற்கு ஆதாரங்கள். நூல் முழுமையும் 14ஆம் நூற்றாண்டு வரை (புறத் திரட்டின் காலம்) இருந்துங்கூட, இன்று இறந்து போயிற்று.

யாப்பருங்கல விருத்தி 'குண்டல கேசி, நீலகேசி, பிங்கல கேசி' என்று முதன் முதல் குறிப்பிடுகிறது. 'சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி, அமிர்தபதி என்றிவற்றின் முதற்பாட்டு வண்ணத்தான் வருவன; நேரசை முதலாய் வரின் ஓரடி பதினான்கெழுத்தாம்; நிரையசை முதலாய் வரின் பதினைந்தெழுத்தாம்' என்று சொல்லிப் பின் வரும் குண்டலகேசிக் கடவுள் வாழ்த்துப் பாடலையும் காட்டுகிறது :

**முன்றான் பெருமைக்கண் நின்றான்முடி வெய்து காறும்**
**நன்றே நினைந்தான் குணமேமொழிந் தான்த னக்கென்**
**றொன்றானும் உள்ளான் பிறர்க்கேஉறு திக்கு ழந்தான்**
**அன்றே இறைவன் அவன்தாள்சரண் நாங்கள் அன்றே.**

"தருக்க மாவன: ஏகாந்தவாதமும், அனேகாந்த வாதமும் என்பன. அவை குண்டலம் நீலம் பிங்கலம் அஞ்சனம் தத்துவ தரிசனம் காலகேசி முதலிய செய்யுட்களுள்ளும், சாங்கியம் முதலிய ஆறு தரிசனங்களுள்ளும் காண்க" என்று மற்றோரிடத்தில் கூறுகிறது; இதனால் குண்டலகேசியும், நீலகேசியும், தருக்க வாதம் குறித்த நூல்கள் என்று தெரிகிறோம். குண்டலகேசியின் கதையும், அவள் தருக்க வாதம் செய்து வந்தாள் என்று கூறுகிறது.

குண்டலகேசி விருத்தம் என்று இந்நூலை வீரசோழிய வுரைகாரரான பெருந்தேவனார் (12ஆம் நூற்றாண்டு) கூறுவர். அவரே மற்றோரிடத்தில், "குண்டலகேசியும் உதயணன் கதையும் முதலாக உள்ளவற்றில் தெரியாத சொல்லும் பொருளும் வந்தனவாலெனின், அகலக்கவி செய்வானுக்கு

அப்படியல்லதாகாது" என்கிறார். இதனால் இந்நூல் 'அகலக் கவி' – வித்தார கவியாகும். தருக்கமும் பௌத்த சமயமும் வந்தமையால், தெரியாத சொல்லும் பொருளும் வந்தனபோலும். பெயர் சொல்லாமல் இவர் பல குண்டல கேசிப் பாடல்களை எடுத்துத் தருகிறார். பின்வருவது ஒன்று (காரிகை 151, அலங்காரப் படலம்):

**வேரிக் கமழ்தா ரரசன்விடு கென்ற போதும்**
**கோரிக் கலத்தின் வகையாற்கொலை சூழ்ந்த போதும்**
**பூரித்தல் வாடல் இவற்றாற்பொலி யாது விட்டான்**
**பாரித்த வெல்லாம் வினையின்பயன் என்ன வல்லான்.**

இப்பாடல் புறத்திரட்டில் (724) பெயர் சொல்லப்பட்டமை யால் இந்நூலுக்குரியதென்று தெரிகிறது. காப்பியத் தன்மை பொருந்திய இருபது பாடல்களைப் பெருந்தேவனார் தம் வீரசோழிய உரையில் தருகிறார். இவற்றுள் பல குண்டல கேசிப் பாடலாயிருக்கும். பின்வரும் பாடல் ஓர் எடுத்துக்காட்டு:

**பேய்மை யாக்குமிப் பேதைமைக் கள்வனோ டுடனாய்க்**
**காமுற் றுமதன் பயத்தினிற் காமனைக் கடந்து**
**நாம றூஉம்புகழ் கொடுப்பதோர் நன்னெறி நண்ணும்**
**வாமன் வாய்மொழி மறிந்திட்டு மறந்தொழி கின்றாம்.**

தக்கயாகப்பரணி உரையாசிரியரும் இந்நூலிலிருந்து சில தொடர்களை எடுத்துக் காட்டுகிறார்.

நீலகேசி என்ற நூல் குண்டலகேசியை அடுத்துத் தோன்றியது; குண்டலகேசியானவள் சைன சமயத்தில் இருந்து, பிற சமயத்தார்களையும் வென்று முடிவில் புத்த தருமத்தைக் கடைப்பிடிக்கலானாள். இதுபற்றியே நீலகேசி சைன தருமத்தை நிலைநாட்டவென்று எழுந்து, புத்தசமயத் தாரின் நால்வகைக் கொள்கைகளை மறுத்து வெல்கிறாள்.

நீலகேசி என்ற நூலுள் இரண்டாவது குண்டலகேசி வாதச் சருக்கம். நீலகேசி குண்டலகேசியை வென்று, பின் அவளுக்கு உபதேசம் செய்த அருக்க சந்திரனையும் புத்தரையுமே வென்ருள் என்று அந்நூல் கூறும். இது வெறும் கதை என்பதைச் சொல்லவேண்டியதில்லை. வடமொழிக் குண்டலகேசி வரலாற்றில் அவளுக்கு உபதேசம் செய்தவர் சாரி புத்திரன் என்று சொல்லப்பட்டிருக்கும்.

குண்டலகேசியை மறுக்கவென்றே வந்த நீலகேசியானது, ஏறக்குறைய 100 குண்டலகேசிப் பாடல்களின் முதற்குறிப்பை எடுத்துத் தந்து மறுப்புக் கூறுகிறது; இவற்றுள் 4 பாடல்கள் முழுப் பாடல்களாக உள்ளன. மற்றும், நீலகேசியுரைதான் (15ஆம் நூற்றுண்டு) தமிழில் குண்டலகேசியின் வரலாற்றைக் கூறுகின்ற நூல்.

குண்டலகேசியும் வளையாபதியும் தமிழில் இறந்து போன காப்பியங்கள். புறத்திரட்டினுல்தான் குண்டலகேசிப் பாடல்கள் 19 இன்று கிடைக்கின்றன. இவற்றுள் கடவுள் வாழ்த்தும் மற்ருென்றும் (வேரிக்கமழ் தார் அரசன்) முன்னமே தரப்பட்டன.

அகலக்கவி என்று சொல்லியதற்கேற்ப, புறத்திரட்டில் வரும் பாடல்களை நோக்கும்போது, அவை சிறப்பான சொற்சுவையும் பொருட் சுவையும் கொண்டிருப்பதோடு, உலக நீதிகளையும் உணர்த்துவனவாயிருத்தல் நன்கு விளங்கும். இப்பாடல்கள் தீவினையச்சம், கூடாவொழுக்கம், புணர்ச்சி விழையாமை, யாக்கை நிலையாமை, தூயதன்மை, இறைமாட்சி, குற்றங்கடிதல், இடுக்கண் அழியாமை என்ற பொருள்களில் வந்துள்ளன. இவற்றுள் எடுத்துக்காட்டாகச் சில பாடல்களை இங்குக் காணலாம். யாக்கை நிலையாமை :

**பாளையாம் தன்மை செத்தும் பாலனும் தன்மை செத்தும்**
**காளையாம் தன்மை செத்தும் காமுறும் இளமை செத்தும்**

**மீளும்இவ் வியல்பும் இன்னே மேல்வரும் மூப்பு மாகி**
**நாளும்நாள் சாகின் ருமால் நமக்குநாம் அழாத தென்னே.**

*குற்றங் கடிதல் : சிவபிரான் கண்டத்துக் கறையும்,கறையே என்கிருர் :*

**மண்ணுளார் தம்மைப் போல்வார்**
**மாட்டதே யன்று வாய்மை**
**நண்ணினுர் திறத்துங் குற்றம்**
**குற்றமே நல்ல வாகா,**
**விண்ணுளார் புகழ்தற் கொத்த**
**விழுமியோன் நெற்றி போழ்ந்த**
**கண்ணுளான் கண்டந் தன்மேற்**
**கறையையார் கறையன் றென்பார் ? 551**

*இடுக்கண் அழியாமை :*

**மறிய மறியும் மலிர்ப மலிரும்**
**பெறுப பெறும்பெற் றிழப்ப இழக்கும்**
**அறிவ தறிவார் அழுங்கார் உவவார்**
**உறுவ துறுமென் றுரைப்பது நன்று. 723**

*வித்தார கவி என்று கூறியதற்கேற்ப இந்த நூல் சிறந்து விரிந்த பொருளைக் கொண்டது என்பதை மேற்காட்டிய பாடல்களால் அறியலாம். ஆனல் நீலகேசி போன்ற சமய வாதமே கொண்ட நூல்கள் இன்று இருக்க, இந்த நூல் இறந்து போனமை வருந்தத் தக்கது.*

*நீலகேசியுரையில் குண்டலகேசிப் பாடல்கள் முழு வடிவத்தோடு 24 உள்ளன; வேறு பல வரிகளையும், பல பாடல்களின் முதற் குறிப்பையும் அங்குக் காணலாம். அன்றியும், திருவொற்றியூர் ஞானப் பிரகாச ரென்பவர் சிவஞான சித்தியார் பரபக்கத்துக்கு உரைசெய்த பலருள் காலத்தால் முந்தியவர். இதன் தத்துவப் பிரகாசர் உரையை அச்சிட்ட*

*சண்முகசுந்தர முதலியார், ஞானப்பிரகாசர் உரையையும் ஆங்காங்கு எடுத்துத் தருகிறார். இதனுள் குண்டலகேசிப் பாடல்கள் பல வருகின்றன. சில நீலகேசி யுரையிலும் காணப்படும். பின் வருவன வேறெங்கும் காணப்படாதன; குண்டலகேசி வசனம் என்று பெயர் சொல்லிக் காட்டுகிறார்.*

**பழுதையா லராப்பூண்டு பாழுடம்பு புடைபுடைப்ப**
**வழுதையா வுறுகின்ற வத்துயி ரென்பாயேல்**
**இழுதையா வுரைத்தியேல் எருத்திறற் காலிற்றுக்கக்**
**கழுதையார் முடமாகக் கண்டதுமிங் குண்டாமோ.**

**ஒருவகையா லருவென்னில் ஒத்துடம்பி னகத்தடங்கா**
**ஒருவகையா லுருவென்னில் உடம்போடு கலப்பில்லை**
**இருவரையும் நேர்ந்ததெனில் எழுகின்ற தொழுநோயும்**
**பெருவயிறு மாயினான் பிணிதீர்ந்தா னல்லனே.**

*(முதல் பாடலின் முதற் குறிப்பு மட்டும் நீலகேசியில் தரப்பட்டுள்ளது.)*

**ஆசிரியர்**

*இக் காப்பியத்தை நாதகுப்தனார் செய்தார் என்பது நீலகேசியுரையினால் சொல்லப்பட்டது. வேறிடத்தில் இப் பெயர் சொல்லப்பட்டதில்லை. இப்பெயர் நாதகுத்தனார் என மருவி வழங்கும். குப்தர் என்பது ஒரு செட்டி மரபின் பெயர் போலும். இவரைக் குறித்த எந்த வரலாறும் விளங்க வில்லை. கிடைக்கின்ற பாடல்களைக் கொண்டு பார்க்கும் போது, இவர் இயல்பாகவே தம் சமய முதல்வராகிய புத்தரிடத்து பத்தி மிக்கவராயும், அவருடைய முற்பிறவி வரலாறுகளையெல்லாம் நன்குணர்ந்தவராயும், சிறந்த வாழ்க்கையுடையவராயும், உலக அறிவு பொருந்தியவராயும் காணப்படுகிறார். அரசவாழ்வில் தொடர்பு கொண்டவராயும் இருந்திருப்பார்.*

**குண்டலகேசியின் கதை**

நீலகேசி மொக்கல வாதச் சருக்கத்தில் (286) சமய திவாகர முனிவர் தம் உரையுள் குண்டலகேசி வரலாற்றைப் பின்வருமாறு கூறுகிறார்; தமிழில் இது ஒன்றே குண்டலகேசி வரலாற்றுக்கு ஆதாரம்; வேறு எந்தக் குறிப்பும் இல்லை. "குண்டலகேசி என்பாள் ஒரு வைசிய கன்னிகை. இவள் ஒரு நாள் பிரஸாதஸ்தலத்து விளையாடுகின்றாளாக, ஒரு இதபவ குற்றவாளியான வைசிய புத்ரன் காளனென்பான், இவன் பௌத்த தர்சனங்கொண்டு பல வழியுஞ் சோர விருத்தி பண்ணிச் செலவானை அரசன் வதிக்கவென்றேவச் சிறைப் பட்டுப் போகின்றானை, முன்சொன்ன குண்டலகேசி கண்டு காமபரவசையாக, அதனை யறிந்து அவளுடைய பிதா ராஜாவைக் கண்டு யாதானுமோருபாயத்தால் மீட்டு, இவனுக்குக் குண்டலகேசி யென்னும் கன்னிகையினை விவாஹ விதியாற் கொடுத்து இனிது செல்கின்ற காலத்து, ஒருநாள் ப்ரணயகலஹத்து நர்மோக்தி முகத்தால், 'நீ கள்வனன்றோ!' வென்று குண்டலகேசி சொல்ல, காளனுந் தன்னுள்ளத்தே சினங்கொண்டு பின்பொருநாள் வித்யா ஸாதன வ்யாஜத்தால் இவளைத் தனிக்கொண்டு ஒரு பர்வதத் தேறி, 'நீ என்னை இவ்வாறு சொல்லுதலில் யான் உன்னைக் கொல்லத் துணிந்தேன்' என்ன, குண்டலகேசியும், 'தற் கொல்லியை முற்கொல்லிய வென்பதன்றே, இவனை யான் கொல்வேன்' என நினைந்து, 'யான் சாகிறேனாகில் உம்மை வலங்கொண்டு சாவல்' என, அதற்கியைந்த காளனை வலங்கொள்கின்றாள் வரையினின்றும் வீழ நூக்கினள். நூக்கக் காளனும் புத்த ஸ்மரணத்தினால் மோக்ஷித்தனன். குண்டலகேசியும் பர்தருவிரஹ துக்கிதை யாகித் துறப்பனென நினைந்து, பரசமயங்களெல்லாம் நாவல் நட்டு ஜயித்து பௌத்த தர்சனங்கொண்டு முத்திபெற்றனள்."

குண்டலகேசி சரித்திரம் வடமொழியில் பல இடங்களில் சொல்லப்பெற்றுள்ளது. தேரீ கதை உரையில் தர்மபாலர்

இதைக் கூறுகிறார். தேரீ அவதானம் என்ற நூலும் இதைக் கூறும். இங்கு குண்டலகேசி காதல் கொண்ட கள்வன் பெயர் சத்துகன். இவன் ஒரு புரோகிதன் புதல்வன், ஊர் இராசகிருக நகரம். இங்கு அக் கள்வன் குண்டலகேசியின் மீது கோபம்கொண்ட காரணம் சொல்லப்படவில்லை. அவளுடைய நகையின் மீது கொண்ட ஆசையே காரணம் என்று சொல்லப்பட்டுள்ளது. அவள் சைன சமயத்தில் துறவுபெற்றுச் சமயவாதம் செய்திருந்து முடிவில் புத்த சமயத்திற்கு வந்தாள் என்பது இங்குள்ள வரலாறு. தென்னாட்டில் நிகண்ட வாதம் ஓங்கியிருந்த சமயத்தில் வடமொழி நூல் செய்யப்பட்டமையால், இவள் சைன சமயம் புகுந்தாள் என்று கதை ஏற்பட்டது.

மற்றொரு வடமொழி நூலும் உண்டு. புத்தகோஷர் என்பவர் தர்மபத உரையில் இக் கதையை விளக்கமாகச் சொல்லுகிறார். இவர் சிங்கள நாட்டில் நூல் செய்தார். அங்குச் சைன சமயம் இல்லாமையால் அம் மதத்தை இவர் குறிப்பிடவில்லை. இவர் நூல் பாலி மொழியில் எழுதப்பட்டுள்ளது. கள்வனாகிய ஓர் ஆடவனைக் கட்டி இழுத்துச் செல்லக்கண்டு குண்டலகேசி அவன்மீது காதல்கொள்கிறாள். அவள் தந்தை காவலருக்கு ஆயிரம் பொன்னளித்து அவனை மீட்டு மணம்புரிவிக்கின்றான். அவன் தன் தொழிலுக்கேற்ப அவளைக் கொன்று, அவள் ஆபரணங்களை அபகரிக்கச் சமயம் பார்த்திருந்தான். ஒருநாள் தன் விடுதலைக்காகத் தேவதைக்கு பலிகொடுக்கவேண்டுமென்று சொல்லி அவளை ஒரு மலை உச்சிக்கு அழைத்துச்சென்று அங்கு 'உன் ஆபரணங்களைக் கவர்வதற்காக உன்னைக் கொல்லப்போகிறேன்' என்றான். அவள் எவ்வளவு வேண்டியும் அவன் கேட்காது போகவே, அவனை வலம் வருவதாகச் சொல்லி உச்சியிலிருந்து கீழே தள்ளிவிட்டாள். வீடு சென்றால் உலகத்தார் தூற்றுவார்கள் என்று நினைத்துக் காட்டிலுள்ள

ஒரு துறவியை வணங்கி, 'உங்கள் துறவறத்தின் மேன்மை யாது?' என்று கேட்க, அவர் 'பத்து வகையால் தியானம் செய்தல் அல்லது ஆயிரம் சமயங்களைப் பயின்று வாதம்புரிதல்' என்று உரைத்தார். அவள் 'என்னால் தியானம் செய்தல் ஆகாது. வாதம் கற்பேன்' என்று துணிந்து ஆயிரம் சமயங்களையும் கற்றுப் புறப்பட்டாள். 'இந்தச் சம்புத்தீவிலே (சம்பு-நாவல்) உன்னை எவரேனும் வென்றால் அவருக்கு நீ அடிமையாகுக. அவர் துறவியானால் நீயும் அவரிடம் துறவு பெறுக' என்று உபதேசித்து அனுப்பினர். அவ்வாறே அவள் சென்று 'சம்புத்தீவின் துறவி' என்று பெயர்பெற்று வாதம்புரிந்து அனைவரையும் வென்று வந்தாள். கையில் உள்ள நாவல் கிளையை நட்டு வைத்து வாதம் செய்வாள். நாவல் வாடிவிட்டால் வேறு நாவல் ஒடித்துக்கொள்வாள். ஒருசமயம் அவள் நட்டிருந்த நாவலைச் சாரிபுத்திரன் என்ற புத்த முனிவர் சொன்னபடி, சிறு பிள்ளைகள் பிடுங்கி எறிந்துவிட்டனர். அவள் வந்து சாரி புத்திரனோடு வாதம் செய்து தோற்றாள். அதன்மேல் அவரிடம் துறவுபெற்று 'உபசம்பதா' என்னும் நிலை அடைந்தாள்.'[1]

சைன சமயத்தில் சேர்ந்தபொழுது அவள் தலையை மொட்டையடித்தார்கள். மீண்டும் முடி வளர்ந்தபொழுது அது சுருண்டு வளர்ந்தமையால் அவள் குண்டலகேசி என்ற பெயர் பெற்றாள்.[2]

மிகவும் பிற்காலத்து நூலாகிய வைசிய புராணம் என்ற நூல் வைசியர்களின் கதைகளைப் புனைந்துரையாகக் கூறுவது. இது குண்டலகேசி வளையாபதி ஆகியோரின்

1. செந்தமிழ், தொகுதி 40, பக்கம் 93.

2. இவளுடைய இயற் பெயர் பத்திரை என்று சிலர் சொல்வர்; இது பிழை. பத்திரை என்பது வடமொழியில் ஒரு பெண்ணை அன்போடு விளிக்கும் சொல்; இயற்பெயர் அன்று.

கதைகளையும் சொந்தக் கற்பனையான வைசியக் கதையாகக் கூறுகிறது. இதன் குண்டலகேசிக் கதை வருமாறு : காவேரி என்ற வைசியன் சோழ மன்னனேடு நட்புப் பூண்டு வாழ்ந்த போது செண்டாடல் என்ற ஆட்டத்தில் போர்புரியுமாறு அறைகூவிய பாண்டி மன்னனேடு சோழன் சார்பாக இவன் போர்புரிந்து வெற்றிபெற்றுப் பாண்டியன் படைத்தலைவனுகிக் கொல்வித்தாயன் என்பவன் தலையைக் கொய்துவந்தபின், அவன் மனைவி வேண்டத் தலை அவளிடம் அளிக்கப்பட்டது. இக் கதைக்கும் குண்டலகேசிக்கும் எந்தத் தொடர்பும் காணப்படவில்லை.

16ஆம் நூற்றுண்டில் சித்தி பரபக்க உரை செய்த தத்துவப் பிரகாசர், சௌத்திராந்திகன் மத மறுதலையில், புத்த சமயத்தை நிலைநாட்டிய புத்தரும் தாயின் கொலைக்குக் காரணமானர், அம் மதத்தை நிலைநாட்ட வந்த குண்டல கேசியும் தன் கணவனைக் கொன்ருள்,) இது சிவபத்தர் வசனம் என்று சொல்லிப் பின்வரும் பாடலைத் தருகிருர் :

**முத்தராம் புத்தர் தோன்றித்**
**தாய்பழுவை முறித்தே யிட்டார்**
**கொத்துவாழ் குழலா ளாகும்**
**குண்டல கேசி தானும்**
**கத்திருவாங் கணவ னக்காளன்**
**தன்னையும் கொன்றிட்டார்**
**இத்துணையர் இருவரும் வந்**
**திங்ஙனே தவமுரைப்பார்.**

## காலம்

நீலகேசியின் காலம் பத்தாம் நூற்றுண்டு என்று தெரிகிறது. குண்டல கேசியின் காலம் தனித்து வரையறுப்ப தற்கு எந்த ஆதாரமும் கிடைக்கவில்லை.

*பொதுவாக ஐம்பெருங் காப்பியம் என்றமையால் இவை யாவும் சிறு காப்பியங்களுக்கு முற்பட்டவை; சிறு காப்பியங்களுள் ஒன்ருன சூளாமணி பத்தாம் நூற்ருண்டின் தொடக்கமாக இருக்கலாம்; ஆகவே குண்டலகேசி முதலாயின அதற்கு முற்பட்ட ஒன்பதாம் நூற்ருண்டு என்பது ஒரு பொதுவான கருத்து. பெருங்காப்பியம், சிறு காப்பியம் என்ற வரையறை மிகவும் பிற்காலத்தில் எழுந்தது. இதைக் குண்டலகேசி முதலான நூல்களுக்குப் பொருத்திப் பார்ப்பது இயலாது. ஆதலால் இதை மறந்து பார்க்கும் போது, குண்டலகேசியின் பாடலை எடுத்து ஒவ்வொன்ருக நீலகேசி மறுப்பதால், இது நீலகேசிக்கு முந்தியது என்பது விளங்கும். பொதுவாகக் கருத்தை மறுப்பது சமயவாத உலகில் இயல்பு. ஆனுல் ஒவ்வொரு பாடலாக எடுத்து மறுப்புச் சொல்லும்போது, பாடியவரும் மறுப்பவரும் ஏறக்குறைய ஒரே காலத்தில் இருந்தால்தான் அல்லது ஒருவரைத் தொடர்ந்து மற்ருெருவர் இருந்தால்தான் பொருள் சரியாக ஆகிறது. இவ்வாறு கருதும்போது, குண்டலகேசியாசிரியர் காலம் சுமார் 900 – 950, நீலகேசியாசிரியர் 950 – 1000 என்றும் கொள்ளலாம் என்று தெரிகிறது. வேறு வகையான ஆதாரம் எதுவும் புலப்பட்டிலது.*

## நீலகேசி

### முன்னுரை

*தமிழில் ஐஞ்சிறு காப்பியம் என்று ஒரு வழக்காறு மிகவும் பிற்காலத்தில் (19ம் நூற்ருண்டில்) எழுந்தது. முதல் முதல் இவ்வாறு கூறுபவர் சி. வை. தாமோதரம் பிள்ளை. இவ்வழக்காறு பொருத்தமற்றது, போலியானது என்பதைக் குறிப்பிட்டோம்.[1] காப்பியத்தன்மை சிறிதுமே பொருந்தாத*

---

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு, 13-ம் நூற்ருண்டு, பக்கம் 372-4 பார்க்க.

நீலகேசி, யசோதர காவியம் போன்றவற்றைக் காப்பியம் என்றமையும், பெருங்காப்பியத் தன்மை பொருந்திய சூளா மணியைச் சிறு காப்பியம் என்றமையும் பிழை என்று அங்கு எடுத்துக் காட்டினோம். இப்பிழைக்கும் ஒரு நியாயம் புலப் படுகிறது. தாமோதரம் பிள்ளை போன்றோர், பண்டைய நூல்களை ஒரு தொகுப்பாகச் சங்க நூல் என்று கருதினார்கள். சங்க நூல் கால விளக்கமோ, அக் கால நூல்களின் கால முறையோ, சிறிதும் அறியப் பெறாத காலம். எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, காப்பியம் எல்லாம் ஒரு தொகுப்பாகச் சங்க நூல் என்றே பெயர் சூட்டினார்கள். ஐம்பெரும் காப்பியம் என்று மயிலை நாதர் கூறிய பின், அத்தொகுப்பினுள் சேர்க்கப் பெறாது தனித்த தன்மை கொண்டு எழுந்திருந்த நூல்கள் அனைத் தையும் மற்றொரு தொகுப்பாகச் சேர்த்துக் கொண்டார்கள் போலும். சிறப்புடையது, இல்லாதது எல்லாம் இத் தொடரினுள் சேர்க்கப்பட்டது. இதுவே ஐஞ்சிறு காப்பியம் என்று பெயர் சூட்டுவதற்கான நியாயம். வேறெந்த நியாயமும் புலப்படவில்லை. இவ்வாறு கருதும்போது, சைவ வைணவ நூல்கள், இலக்கண நூல்கள் அல்லாதன யாவும் அத்தொகுப்புக்களுள் அடங்கி உள்ளமை நன்கு தெரியும். நாக குமார காவியம் என ஒன்று சேர்க்கப் பட்டதன் காரணம், இப்படியொன்று இருந்திருக்கலாம் என்ற நினைப்பும், ஐந்து சொல்லவேண்டும் என்ற எண்ணமும். ஐம்பெருங் காப்பியங்கள் ஆசிரியத்தாலும் விருத்தப் பாவாலும் இயன்றவை. ஆனால் ஐஞ்சிறுகாப்பியம் என்பவை ஐந்தும் விருத்தப்பா மட்டும்; ஆசிரியம் இல்லை. தாமோதரம் பிள்ளை இத் தொகுப்புச் சொல்லிய காலத்தில், பெருங்கதை கிடைக்கவில்லை. கிடைத்து வெளியாகியிருந்தால் ஒருகால் அவர் இப் பெயரை ஐஞ்சிறு காப்பிய வரிசையில் சேர்ந் திருப்பார்; எச் செய்தியும் இல்லாத நாக குமார காவியத்தை விலக்கியிருப்பார்.

நீலகேசி என்பது கேசி என்ற முடிபை உடைய பெண்பாற் பெயர்களுள் ஒன்று. கேசி – அழகிய கேச முடையவள். அழகிய கருங் கூந்தலுடையவள் நீலகேசி எனப் பெற்ருள். 'நீல நிறத்தனவாய் நெய் கனிந்து போத விழ்ந்து – கோலங் குயின்ற குழல் வாழி நெஞ்சே' என்ற வளையாபதிப் பாடல் காண்க. சமய வாதத்தில் இறங்கி, தர்க்க ரீதியாகப் பிற சமயத்தாரோடு வாதிட்டுத் தம் சமயத்தை நிலைநாட்டிய பின்னரே கூந்தலை முடிப்பது என்று தம் கூந்தலை, தர்க்கத்தில் இறங்கிய பெண்கள், அவிழ்த்து விட்டுக் கொண்டார்கள் போலும். மகாபாரதத்தில் திரௌபதி கூந்தலை அவிழ்த்துவிட்டுச் சூளுரைத்த கதை இதற்கு மூலமாக இருக்கலாம். கேசி என்ற முடிபுடைய நன்கு தெரிந்த பெயர்கள் குண்டலகேசி, நீலகேசி என்பன. இரண்டும் முறையே பௌத்த சமயத்தையும், சைன சமயத்தையும் கூறும். இவ்விரண்டை அன்றி, பிங்கலகேசி, அஞ்சனகேசி, காலகேசி ஆகிய நூல்களையும் யாப்பருங்கல விருத்தியுரை குறிப்பிடுகின்றது. அவற்றைக் குறித்து வேறு எச்செய்தியும் விளங்கவில்லை.

நீலகேசிச் செய்யுட்களைக் குறித்துச் சில சொற்கள் சொல்லலாம். இந்நூல் 894 செய்யுட்களைக் கொண்டது. சீவக சிந்தாமணி, சூளாமணி ஆகிய நூல்களுக்குப் பின் வந்தது என்பது தெளிவு. அப்படி இருப்பினும், இந் நூலின் பாடல்கள் செம்மையான ஓசை பெற்றவையல்ல. பல இடங்களில் ஓசை சுழன்று நிற்கிறது; 'சப்பென்று' முடிகிறது; இனிமை உடையதாக இல்லை. இவற்றைப் பார்க்கும் போது இவ் ஆசிரியர் செய்யுளியற்றுதலுக்குப் புதியவரென்று கருதத் தோன்றுகிறது. இவர் செய்யுள் விகற்பங்கள் பலவும் இதனுள் செய்து இருக்கிருர். 647 ஆம் பாடல் இரண்டே அடிகளால் முடிகிறது. இது பரணியொத்த

தாழிசை கொள்ளும் பிரபந்தங்களுக்குப் பொருந்துமேயன்றி, காப்பியத்திற்குப் பொருந்தாது.

**கண்போலக் கயலெனினும் காடன்றித் தூறெனினும்**
**பெண்பாலாற் பல்கியு மெல்லாம் பிறவேயாம்.**

இப் பாடலின் ஓசை இரண்டாம் அடிக்கும் முதலடிக்கும் அதிகம் வேறுபடுகிறது.

இடை மடக்காக வந்த பாடல்கள் சில (660-2, 663-5); பின் வருவது ஒரு பாடல்:

**பூர்ப்பம் பயந்தான் புகன்ற சுதக்கடலுள்**
**சார்த்திப் பிறவாத் தவநெறிகள் தாமுளவோ?**
**சார்த்திப் பிறவாத் தவநெறிகள் தம்மேபோல்**
**தீர்த்தன் திருநாமம் கொள்ளாத தேவுளவோ?**

ஈற்றடி நான்கடியின் மிக்கு மடக்காக வந்த கலித்தாழிசைப் பாடல்கள் மிகப் பல (257-8, 687-703). 16 பாடல்கள் தொடர்ந்து இவ்வாறு வந்துள்ள இடத்தில், பின்வருவது எடுத்துக்காட்டாகத் தரத் தக்கது:

**பால்தாம் பலவாகிப் பாலாகும், அப்பொருளே**
**வேறுதும்இல்லை எனவே விளம்புவாய்;**
**நீருக நின்ற நிலப்பால் பெறவேலா;**
**நாரு வகைஎனக்கு நன்குரைத்தல் வேண்டும்,**
**நலிந்தாற் பிறபொருட்கு நாட்டவே வேண்டும்.**

இவ்விடத்துள்ள எல்லாப் பாடல்களும், ஆசீவக வாதத்தை மறுத்துரைப்பன. இறுதிப் பாடலொன்று மட்டும் அடிமடக்காக வரவில்லை. அருக்கசந்திர வாதத்தில் சில துக்கங்களைக் கூறும் பாடல்கள் கருதத்தக்கன:

**பேனருக் கூறை பெருமுடுகு நாறுமேல், துக்கந்துக்கம்**
**மானருநோக்கி மணற்சுமையும் தான்பெரிதால், துக்கந்துக்கம்**

**கூனிருக் கண்டாலும் கொள்ள முடியாதேல், துக்கந்துக்கம்**
**தானருப் பல்தொழிலும் தான்துக்க மாதலாற் சருவ்வந்துக்கம்.**

*அருகனைத் துதிக்கும் பாடல்கள் பல உள்ளன. பின் வரும் பாடலைக் கருதுக (139) :*

**உடம்பின் மெய்ம்மை உணர்ந்தோய் நீ,**
**உறங்கல் ஆர்வம் அறுத்தோய் நீ,**
**இடங்கொள் இன்ன வினையெல்லாம்**
**எரிக்கும் வாயில் விதித்தோய் நீ,**
**அடங்க லில்லேற் கருளினல்**
**அறங்கூர் மாரி பொழிந்தோய்! நின்**
**தடங்கொள் செந்தா மரையடி என்**
**தலையவே, என் தலையவே.**

*இதையடுத்து, நீலகேசி அருகதேவனைச் சென்று ஆயிரத் தோடெட்டு நாம நல்லிசை தொடுத்து வழிபடுகிருள் என்று பல பாடல்கள் சொல்லப்பட்டுள்ளன. அவை வீரர்தம் வீரர்க்கும் வீரா, புலவர்தம் புலவர்க்கும் புலவா, பெரியவர்ப் பெரியவர்ப் பெரியாய், அறிவர்தம் அறிவிற்கும் அறிவா, தேவர்தம் தேவர்க்கும் தேவா, இறைவர்தம் இறைவர்க்கும் இறைவா, முனிவர்தம் முனிவர்க்கும் முனிவா, தலைவர்தம் தலைவர்க்கும் தலைவா — என்ற முடிபுகளை உடையனவாய் இருப்பது கருதத்தக்கது.*

*மேலும் சில பாடல்கள் (75 – 90) கட்டளைக் கலித்துறை யாகவே உள்ளன. இத்தகைய யாப்பமைதிகள் பொது வாய்ப் பிற காப்பியங்களில் காணற்கரியன.*

*எனினும், ஆசிரியர் ஆங்காங்கு சுவையான கருத்துக் களையும் தொடர்களையும் இயற்றியுள்ளமையும் குறிப்பிடத் தக்கது. நானில வருணனையாகச் செய்துள்ள நாட்டுச் சிறப்புப் பாட்டுக்கள் நன்கமைந்துள்ளன (12–16).*

வருபுனலன வளவயலிடை மறிவனவின வாளை
மருவினியன மகிழ்தகையன மலர்சிறையன நாரை
கருவரியன கடுநடையன கனைகுரலன கம்புள்
திருவுருவின தெரிகதிரின திசைதிசைதொறு செந்நெல்.

பணைநிலையன கமுகொடுபடு பழமுதிர்வன தெங்கம்
இணைநிலையன சுளைகனியிவை இனியன பல வாழை
மணனயர்வன மனையயலன மதுவிரிமணி நீலஞ்
திணிநிலையன திரளரையன தெரிமலரன மருதம்.

கரைதழுவிய கழிமடலின கடிகமழ்வன கைதை
புரைதழுவிய பொதியவிழ்வன பொன்மலர்வன புன்னை
விரைதழுவிய விழைதகையன வெறிமலர்விரி ஞாழல்
நிரைதழுவிய நெறிகழியிடை நிகரலரன நெய்தல்.

குருவுடையன கொடிமிடைவொடு குலைவிரிவன கோடல்
தருசுடரென தளவயலின தகைமலரன தோன்றி
அருகுடையன அணியுருவின அயலனவலர் காயா
முருகுடையன முகைவிரிவன முறியலர்வன முல்லை.

நனைசினையன நகுவிரையன நலனுடையன நாகம்
வினையுடையன பொழுதிவையென விரிவனகணி வேங்கை
கனைசுடர்விடு கதிர்மணியரை கனனயர்வன காந்தள்
இனியனபல சுனையலன இறுவரையன குறிஞ்சி.

*காளிகோட்டத்தின் வருணனை (32):*

கோளி யாலமுங் கோழரை மரங்களுங் குழுமித்
தூளி யார்த்தெழு சுடலையு முடலமுந் துவன்றி
மீளி யாக்கைய தாக்கியுண் பேய்க்கண மிகைசூழ்
கூளி தாய்க்கென வாக்கிய கோட்டமொன் றுளதே.

*நீலகேசி புத்த சமயத்தினரை வாதில் வெல்லத் துணிதல்:*

ஊன்றின்றல் இழுக்கென்றான் உயிரினையு முள்தென்றான்
நோன்றலையும் நோன்பென்றான் நோக்குடைய கணிகையரே

**போன்றிருந்து பொதியறுக்கும் புத்தன்தன் புன்னெறியை யான்சென்றஃ தடிப்படுப்பன் அறக்கரும மிதுவென்றாள்.**

*எலும்பு கடித்து உன்னுடம்பைத் தடிக்க வைக்கிறாய் என்கிறாள் :*

**பிடிப்பது பீலி பிறவுயி ரோம்பி**
**முடிப்ப தருளது போன்முடை தின்று**
**கடிப்ப தெலும்பதன் காரண மேனி**
**தடிப்பத லாலருள் தானுனக் குண்டோ ?**

*நீலகேசி என்ற நூலானது நீலகேசித் திரட்டு என்றும் நீலகேசித் தெருட்டு என்றும் வழங்குவதுண்டு. உரைகாரர் ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும், நீலகேசித் திரட்டு என்றே குறிப்பிடுகின்றார். முதற் சருக்க இறுதியிலும், இறுதியான பத்தாம் சருக்க இறுதியிலும் சில அடைகளைச் செய்யுளோசைப்படச் சேர்த்துச் சொல்லுகிறார். நீலகேசித் திரட்டில் நீலகேசி நெறிதலைப் பட்ட—சீலவானது தரும வுரைச் சருக்கம் முற்றும்; நீலகேசித் திரட்டில் ஐவகைப் பூதமும் சோதனை செய்த—வெவ்வழற் றுபதன் விசையச் சருக்கம் முற்றும் — என எழுதி உள்ளமை காண்க. திரட்டு என்ற பெயரினாலே ஒரு பெரு நூலிலிருந்து இது திரட்டப் பட்டது என்பது பொருளன்று. நீலகேசி செய்த வாதங் களின் திரட்டு என்ற அளவிலேயே இப்பெயர் கொள்ளத் தகுந்தது. அவ்விதமே, தெருட்டு என்பதும், நீலகேசி வாதம் செய்து அறிவைத் தெருட்டியது என்ற அளவில் பொருந்தக் கூடியதே. எப்படியும் நூற்பெயர், யாப்பருங்கல விருத்தி இரண்டிடங்களில் குறிப்பிட்டுள்ளமையாலே, நீலகேசி என்று கொள்ளற்குரியது.*

## ஆசிரியர்

*இவரைக் குறித்து யாதும் தெரியவில்லை; இவர் பெயரும் தெரியவில்லை. இவர் ஒரு கற்பனை உலகத்தில் தம்*

கதாநாயகியைக் கொண்டுவந்து நிறுத்தி நூலை நடத்திக் கொண்டு போகிறாரே தவிர, தம்மைப் பற்றியோ, தம் இடத்தைப் பற்றியோ, காலத்தைப் பற்றியோ எந்தக் குறிப்பும் தரவில்லை. நூலைப் பதிப்பித்த சக்கரவர்த்தி நாயனார் ஆசிரியரைப் பற்றிச் சொல்லியிருக்கும் யூகங்கள் பல. நீலகேசி ஆசிரியர் திருக்குறள் செய்த ஆசிரியரின் மாணாக்கராகலாம்; குறள் செய்தவர் ஏலாசாரியர் என்னும் குந்த குந்தாசாரியர்; காலம் கி. பி. முதல் நூற்றாண்டு. இவர் சங்கர ராமானுச மத்வ மதங்களைக் குறிப்பிடாமையால், அவர்கள் காலத்திற்கு முற்பட்டவர் என்றெல்லாம் எழுதியிருக்கிறார். இக் கூற்றுக்கள் எவையும் ஆராய்ச்சிக்குப் பொருந்துவன ஆகா. எனினும், ஆசிரியரைக் குறித்து எதுவும் அறிய முடியாவிட்டாலும், அவர் காலத்தை ஒருவகையாக வரையறை செய்துகொள்ள முடியும்.

16ஆம் நூற்றாண்டில் சிவஞான சித்தியார் பரபக்க உரை செய்த ஞானப் பிரகாசர் நீலகேசிப் பாடல்கள் பல எடுத்துத் தருகிறார். நீலகேசிக்கு உரை எழுதிய சமய திவாகர வாமன முனிவர் 14ஆம் நூற்றாண்டினர்.[1] யாப்பருங்கல விருத்தி உரை ஆசிரியரும் (11ஆம் நூற்றாண்டு) நீலகேசியைக் குறிப்பிடுகின்றார். ஆதலால் நீலகேசியானது இவ்வனைவருக்கும் காலத்தால் முற்பட்டதென்பது தெளிவு. நீலகேசி நூலுள் தொல்காப்பியம், திருக்குறள், நாலடி ஆகியவற்றின் தொடர்கள் அப்படியே பல இடங்களில் பயில்கின்றன. 'வினையின் நீங்கி விளங்கிய ஞானத்தோர் – முனைவனின்மையினுன் முதனூலில்லை' (862) என்ற வரிகள் 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் – முனைவன் கண்டது முதனூலாகும்' என்ற தொல்காப்பியத் தொடரைக் கொண்டவை (1594). 'வானிடுவில்லின் வரவறியாத வகையின் என்பாய்' என்பது, 'வானிடுவில்லின் வரவறியா வாய்மையால் — கானிலந் தோயாக்

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டு, பக்கம் 303-8.

கடவுள்' என்ற நாலடியார்ப் பாடலைக் கொண்டது. 'தான் கெடினும் தக்கார் கேடெண்ணற்க' என்ற நாலடியார்ப் பாடலை 181 ஆம் பாடல் எடுத்துப் பேசுகிறது. திருக்குறள் தொடர்களும் கருத்துக்களும் பல இடங்களில் வருகின்றன. இம் மூன்றனுள் நாலடியார் காலத்தால் பிற்பட்டது. ஏழாம் நூற்றுண்டு எனக் கருதக் கூடும். நீலகேசியின் காலம் இதற்குப் பிற்பட்டது என்பது தெளிவு.

ஆசிரியர் நகரச் சிறப்புக் கூறுமிடத்து புண்டவருத்தனம் என்ற நகரின் சிறப்பைப் பின்வரும் பாடலில் சொல்கிருர்.

**தீய தீரத் திருவிளை யாடிய**
**தேயங் காவல னுய்த்திசை யாவினும்**
**ஈய நீண்டகை ஏந்தல் நகர், திசை.**
**போய புண்ட வருத்தன மென்பதே.**

இப்பாடலில் காணும் இரு கருத்துக்கள் குறிப்பிடத் தக்கவை. ஒன்று, அரசனுடைய நகர் ' திசை போய் புண்ட வருத்தனம்' என்பது என்று சொல்லுகிருர். இத் தொடர் 'ஏமாங்கதம் என்று இசையால் திசை போயதுண்டே' என்ற சீவக சிந்தாமணித் தொடரை நினைவூட்டுவது வெளிப் படையாதலால், நீலகேசி ஆசிரியர் சிந்தாமணி ஆசிரியருக்குப் பின் வந்தவர் என்பது பெறப்படுகிறது. சிந்தாமணியின் காலம் 9ஆம் நூற்ருண்டின் இறுதி எனவே, நீலகேசி ஆசிரியர் காலம் இதற்கும், யாப்பருங்கல விருத்தியின் காலமாகிய 11ஆம் நூற்ருண்டுக்கும் இடைப்பட்ட காலமாகும். அதாவது 10 ஆம் நூற்ருண்டு என்று ஏற்படுகிறது. மற்ருெரு குறிப்பும் இதை வலியுறுத்துகின்றது. இங்குக் காட்டிய பாட்டில் " திசையாவினும் ஈய நீண்ட கை ஏந்தல்" என்ற தொடர் வருகிறது. கொடையினல் நீண்ட கை என்று சொல்வது பொதுவாக வழங்கும் ஓர் இலக்கிய மரபு. எனினும், இதைச் சிறப்பாகக் கம்பர் பலமுறை எடுத்து ஆளுகிருர். 'தருகை

நீண்ட தயரதன்' என்ற தொடரைப் பாலகாண்டத்தில் காண்கிறோம். (இது கம்பர் வாக்கு அன்று என்று விலக்குவோரும் உளர்.) பின்னர் வேள்விப் படலத்தில் மகாபலியிடம் மூவடி மண் இரக்க வந்த வாமன மூர்த்தி, 'வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி — நீண்ட கையாய்' என்று புகழ்கின்றான். நீலகேசியை நாம் பார்க்கும்போது கம்ப ராமாயணச் சொற்களை அப்படியே அங்கு எடுத்து வைத்திருப்பது நன்கு தெரிகிறது. எனவே, நீலகேசி ஆசிரியர் கம்ப ராமாயணத்தை நன்கு பயின்றார் என்று கருதுவது பொருந்தக் கூடியதே. கம்பர் காலம் 9 ஆம் நூற்றாண்டு ஆதலால், இதற்கு அடுத்த காலம் நீலகேசியாருக்கு உரியது. எனவே 10 ஆம் நூற்றாண்டு என்று முன் கூறியது முற்றும் பொருத்தமே.

சிறுபஞ்சமூலக் கருத்தொன்றும் இங்குக் குறிப்பிடத் தக்கது. பசுங்கன்றுக்குப் பால் விடாது கறந்து கொண்டு கன்று வாடும்படி செய்தல், இக்காலத்து நகர்ப்புறப் பால்காரருடைய அதர்மம். இது பொதுவாக எக்காலத்திலும் தருமமன்று என்று கண்டிக்கப்பட்டதே. சிறு பஞ்சமூலம் 47ஆம் பாடல் இக்கருத்தை 'கன்று சாவப் பால்கறவாமை' என்று குறிப்பிடுவது பெரிதும் வியப்பாய் உள்ளது. அக்காலத்திலும் இத்தகைய தருமவான்கள் இருந்தனர் போலும்! நீலகேசி, 'தன் கன்று சாக்கறப்பான் தயாப்பிறிதிற் குடையவனோ?' என்று (190) கேட்பது சிறு பஞ்சமூலத்தை எதிரொலிக்கிறது.

## நூற்பொருள்

நீலகேசி, பாயிரமும், பத்துச் சருக்கங்களும் 894 பாடல்களும் உடையது. முதல் பாடலாகிய, 'நல்லார் வணங்கப்படுவான்' என்ற அருகன் துதி, யாப்பருங்கல விருத்தியுள் கடவுள் வாழ்த்து வண்ணத்துடன் வந்தமைக்கு எடுத்துக்காட்டாக வேறு பல காப்பிய முதற்பாடல்களோடு

எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இப் பாடல் வினைமுற்றுப் பெருமல் வினைஎச்சமாகவே நின்று முடிகிறது. பாயிரம் 9 பாடல்களில் முதற் பாடல் அருகன் துதி; இரண்டாம் பாடல் அறவாரமிர்துண்டு நின்றுர் என்று, சித்தர், ஆசாரியர், உபாத்தியாயர், சாதுக்கள் என்ற நால்வர் துதி. அடுத்த 5 பாடல்கள் அவையடக்கம். இறுதி இரண்டு பாடல் பதிகம். அவையடக்க முதற் பாடலில் 'தண்டாமரை மேல்நடந்தாள் தடந்தாள் வணங்கி,' கனவின்கண் இந் நீலகேசி வரலாற்றைக் கண்டு பாடுவதாகச் சொல்கிறுர். அடுத்த பாடலில் 'பேய் நீலகேசி பெரியோனறங்' கொண்டாள் என்று கூறுகிறுர்; அப்படியே 44ஆம் பாடலில் 'தென்திசை நீலகேசி மாதெய்வம் தலைப்பட்டு உரைக்கும்' என்கிறுர். இரண்டிடங்களிலும் உரைகாரர், பழையனூர் நீலகேசி என்று உரை எழுதுகிறுர். இவளாவாள், பேய் வடிவோடு வந்து வணிகன் உயிரை உண்ட பழையனூர் நீலி. இவளே நீலகேசியாகத் தோன்றிச் சமய வாதம் நிகழ்த்துகிறுள் என்பது இக் கதை. இவள் வரலாற்றைப் பின்னே தனியே குறிப்பிடுவோம்.

முதலாவது தருமவுரைச் சருக்கம், 140 பாடல். நூன் முகப்பில் 'நாட்டுச் சிறப்பு, நகர்ச் சிறப்புச் சொல்ல வேண்டுமே அதனுல் சொல்லுகிறேன்' என்று 26 பாடல் அமைத்திருக்கிறுர். பாஞ்சால தேசத்தின் தலைநகரான புண்டவருத்தன நகரில் சமுத்திரசாரன் என்ற அரசன் ஆட்சிபுரிந்தான். நகர்ப்புறத்தே யிருந்த பலாலையம் என்ற சுடுகாட்டில் காளி கோயில் இருந்தது. அவ்விடத்து முனிச் சந்திரன் என்ற சமண முனிவன் தவஞ்செய்துவந்தான். ஒருநாள் நகர மக்கள் அரசிக்கு ஆண்மகவு பிறந்தமைக்கு நன்றி செலுத்தும் பொருட்டு, ஆடுகளைக் காளிக்குப் பலியிட வந்திருந்தனர். முனிவர் அவர்களுக்கு அகிம்சா தருமத்தைப் புகட்டிப் பலியை நிறுத்தினுர். கோபம்கொண்ட காளி

பழையனூர் நீலியிடம் சென்று முறையிட, அவள் வந்து முனிவரை அஞ்சுவிக்கமுடியாமல், அழகியபெண்ணுருவத்தில் மயக்க முயன்று அதிலும் தோற்றாள். அவரிடம் அகிம்சா தரும உபதேசம் பெற்று அவர் சொற்படி நாடெங்கும் அத் தருமத்தைப் பரப்பும் பணியை மேற்கொண்டாள்.

இரண்டாவது குண்டலகேசி வாதச் சருக்கம், 82 பாடல். குண்டலகேசி காம்பீலி நகரில் நாவல் நட்டுப் புத்த சமயத்தை நிலைநாட்டியிருந்தாள். நீலகேசி அங்குச் சென்று அரசன் முன்னிலையில் குண்டலகேசியின் கூற்றுக்கள் அனைத்தையும் முறியடித்து, வெற்றிபெற்றவளாய் அவளுடைய ஆசிரியனை அருக்கசந்திரனை வெல்வேனென்று அவ்விடத்தினின்றும் புறப்பட்டாள்.

மூன்றுவது அருக்கசந்திர வாதச் சருக்கம், 35 பாடல். உச்சைனி நகரில் ஒழுக்கமின்றி அகிம்சை என்பது இல்லை என்று நிலைநாட்டி அருக்க சந்திரனை வென்று சமணனாக்கி, அங்கிருந்து பதுமபுரம் சென்றாள். அடுத்து மொக்கல வாதச் சருக்கம், 196 பாடல். மொக்கலன் என்பவர் புத்தருடைய இரு பிரதான சீடர்களுள் ஒருவர். இவரோடு நீலகேசி புத்த சமய தத்துவங்கள் பற்றி விவாதித்து வென்றாள். பின் அவருக்குச் சமய தத்துவங்கள் போதித்த புத்தரையே வெல்ல எண்ணிக் கபிலபுரம் நோக்கிச் சென்றாள். ஐந்தாவது புத்தவாதச் சருக்கம், 196 பாடல். நீலகேசி புத்த மதத்தைக் கண்டிக்கும் பல காரணங்களில், அவர்கள் அகிம்சையை உடன்பட்டாலும், புலால் உண்கிறார்கள் என்பதும் ஒன்றாகும். கடற்கரை ஓரம் இருந்த கபிலபுரத்தில் அவள் கௌதம புத்தரையே சந்தித்து வாதம் செய்தாள். ஆன்மா என்று ஒன்று உண்டு என்பதை நிலைநாட்டிப் புத்தரை வென்றாள்.

இதன் பிறகு நீலகேசி ஆகாச மார்க்கமாகச் சென்று ஆசீவகம்[1], சாங்கியம், வைசேடிகம், வேதவாதம், பூதவாதம் ஆகிய ஐந்து சமய பேதங்களை வென்ற செய்தியை ஐந்து சருக்கங்கள் முறையே 71, 53, 41, 31, 41, பாடல்களால் சொல்லுகின்றன. வைசேடிக வாதம் அத்தினபுர நகரிலும், வேதவாதம் காகந்தி என்னும் காவிரிப்பூம்பட்டினத்திலும் நடைபெறுகின்றன. இவ்வாறு நீலகேசி பல சமயத்தாரையும் வென்ற பிறகு அரசனாலும் மக்களாலும் நன்கு மதிக்கப் பெற்று சைன தருமத்தை வளர்த்து வந்தாள் என்று நூல் முடிகிறது.

நூல் முழுவதும் கற்பனை ஆதலால் இதில் உள்ள பொருத்தக் குறைவுகைகளை ஆராய இது இடமில்லை. இந்த நூல் சமய வாதத்துறையில் பௌத்த மதத்தைத் தழுவி எழுந்த குண்டலகேசியைக் கண்டிக்க வந்தமையால் நீலகேசி முறையாகக் குண்டலகேசியையும், அவளுடைய குரு அருக்க சந்திரனையும், அவருடைய குரு மொக்கலரையும், அவருடைய குரு கௌதம புத்தரையும் வென்று கொண்டே போகிறாள். எவ்வளவோ பிற்காலதில் வந்த நீலகேசி என்ற கற்பனைப் பாத்திரம் தன் சமயத்திற்கு மூல ஆசிரியரான மகாவீரருக்குச் சமகாலத்தில் வாழ்ந்த கௌதம புத்தரையே தான் நேரில் சென்று பார்த்து வாதிட்டு வென்றாள் என்ற செய்தி சைனர்களுடைய கற்பனையில்தான் உதிக்கக் கூடியது. இந்த நூல் சைன தருமத்தை விளக்கவந்து பௌத்த சமயத்தைக் கண்டிக்கும் முகமாகப் பல செய்திகளைக் கூறுகின்றது என்ற அளவுக்கே கொள்ளத்தக்கது. குண்டலகேசி முழுமையும் மறைந்து போனபடியால் அதன் கருத்துக்களையும் பொருட்

1 நீலகேசி பதிப்பாசிரியர் ஆசீவகம் சமணத்தின் பிரிவல்ல என்று மிக முயன்று எழுதியிருக்கிறார். ஆனால் தமிழ் நாட்டுச் சமய உலகில் நிகண்ட வாதம் ஆசீவகம் இரண்டும் சமணத்தின் பிரிவுகளாகவே கொள்ளப்பட்டு வந்திருக்கின்றன. எனினும், சித்தி பரபக்கவுரையில் ஞானப்பிரகாசர் ஆசீவகத்தை மறுக்குமிடத்தில் நீலகேசிப் பாடல்களை எடுத்துத் தருகிறார் என்பதும் இங்குக் குறிப்பிடத் தககது.

போக்கையும் எடுத்து உணர்த்துகின்ற அளவிற்கு நீலகேசியும் அதன் உரையும் பாராட்டற்பாலன. குண்டலகேசியின் கதைப் போக்கையும் அதைச் செய்த நாதகுத்தனார் என்பவரையும் நீலகேசியினால் தான் நாம் அறிகிறோம்.

நீலகேசியின் போதனைகளுள் முக்கியமானது, புலால் உண்ணக்கூடாது என்பது. அக்காலத்திலிருந்த புத்த சமயத்தார் கொல்லலாகாது என்ற கொள்கையை மட்டும் உடன்பட்டு, புலால் உண்பதை ஏற்று வாழ்ந்தனர். இதுவே நீலகேசியின் கண்டனத்துக்கு முக்கிய இடமாயிற்று. நீலகேசிக்குப் பொதுவாக இலக்கியத்துறையில் ஆட்சி யில்லை. ஆனால் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் சிவஞான சித்தியார் பரபக்கவுரையில் சைனர் சமய வாதத்தை எடுத்து உணர்த்தி மறுக்குமிடத்தில் இதிலிருந்து ஆறு பாடல்களைப் பெயர் குறிப்பிட்டு எடுத்துத் தருகிறார். அன்றியும் இந்நூல் குண்டலகேசிக்கு மறுப்பு என்பதையும் குறிப்பிடுகிறார். பின்னுமொரு கருத்தும் சொல்லத் தக்கது. சம்பந்தராதியோர் பௌத்த சமயத்தைக் கண்டித்திருந்தபோதிலும், இச்சமயம் தமிழ் நாட்டில் எக்காலத்திலும் ஆதிக்கம் பெற்றிருந்ததாய்த் தெரியவில்லை. அதிலும் நீலகேசியின் காலமாகிய பத்தாம் நூற்றாண்டில் பௌத்தம் இல்லவே இல்லை. குண்டலகேசி என்ற ஒரு கற்பனையான நூலுக்கு எழுந்த மறுப்பான நீலகேசி, கற்பனையான பௌத்தத்தைக் கண்டிக்கிறது என்று சொல்ல வேண்டும். முந்தியதான ஒன்பதாம் நூற்றாண்டில், மாணிக்கவாசகர் வாதிடுவதற்குத் தமிழ் நாட்டில் பௌத்தர் இல்லாமல் சிங்கள நாட்டிலிருந்து வரவேண்டியிருந்தது என்பதும் இங்குக் கருதத் தக்கது. நீலகேசி பிற சமயத்தார் யாரிடமும் வாதத்துக்குப் போகவில்லை.

### பழையனூர் நீலி

நீலகேசியாசிரியர் ஏன் இந்தப் பழையனூர் நீலகேசியைத் தமது கதாநாயகியாகத் தேர்ந்து கொண்டார் என்பது

விளங்கவில்லை. முனிச்சந்திரரை ஒன்றும் செய்ய இயலாது ஓடிய காளி, இந்நீலகேசியைச் சரண் புகுந்தாள் என்பது கதை. இந்நூல் முழுமையும் கதையே. சரித்திரச் சான்று கொஞ்சமும் இதனுள் பிரவேசிக்க இடமில்லை. ஏனெனில், இந்நீலகேசி படிப்படியாகக் காலத்தில் பின்நோக்கிச் சென்று தனக்கு 1500 ஆண்டுகள் முற்பட்டு வாழ்ந்த கௌதம புத்தரிடமே வாதத்துக்குச் சென்று விடுகிறுளல்லவா ?

இனி இந்தப் பழையனூர் நீலகேசியின் வரலாற்றையும் சிறிது தெரிந்து கொள்ளலாம். பழையனூர் என்பது சென்னையிலிருந்து மேற்கே செல்லும் சாலையில் உள்ள திருவாலங்காடு என்ற ஊராகும். பழையனூர்த் திருவாலங்காடு என்று சம்பந்தராலும், சுந்தரராலும் தேவாரத்துள் பாடப் பெற்றுள்ளது. இத் தலம், நடராசர்க்குரிய பஞ்ச தலங்களில் ஒன்று. இங்குப் பெருமான் காளியை வெல்லும் பொருட்டு ஊர்த்துவதாண்டவம் ஆடினுர் என்பது வரலாறு.

பழையனூர் நீலி வரலாறு தமிழ் நாடு நன்கறிந்த ஒரு பழங்கதை. இக்கதையைத் திருஞான சம்பந்தர் திருவாலங்காட்டுப் பதிகத்தில் முதற் பாடலில் குறிப்பிட்டுப் பாடுகிறுர் :

**துஞ்ச வருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்**
**நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்**
**வஞ்சப்படுத் தொருத்தி வாணுள் கொள்ளும் வகைகேட்டு**
**அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டெம் மடிகளே.**

ஓர் அந்தணன் தாசி லோலன் ஆகித் தன் மனைவியைக் கொன்று அவளுடைய நகைகளை எடுத்துக் கொண்டான். இத் தீவினையின் பயனுக அடுத்த பிறவியில் அவன் ஒரு செட்டியாகப் பிறந்து தன் மனைவியை இல்லத்தில் விட்டுப் பழையனூர் வழியாக வந்த போது, நீலி என்ற பேயாக உலவிக் கொண்டு இருந்த அவனுடைய முற்பிறவி மனைவி அங்கு வந்து அவனைப் பிடித்து இழுக்க அவன் ' நீ எனது

மனைவி அல்ல' என்று கூறி ஓடினன். அவள் சென்று அவ் வூரில் எழுபது வேளாளர் கொண்ட சபையில் தான் அவனுடைய மனைவி என்பதை நிரூபித்து அவனைத் தன்னோடு அன்றிரவு இருக்கச் செய்தாள். அவ்வேளாளர், அவள் பேய் என்று அஞ்சிய அவ் வணிகனுக்குத் தாங்களே பிணை இருந்தனர். ஆனல் அப்பேய் அவனை இரவில் உண்டு விட்டது. விடிந்து நிலைமை அறிந்த வேளாளர் தங்கள் சொல் பிழைத்தமைக்கு வருந்தித் தீயில் உயிர் விட்டனர். இவ் வரலாறு சேக்கிழாராலும் விரிவாகச் சொல்லப் பட்டுள்ளது. இந்த நீலகேசியை எடுத்துச் சொல்லுகின்ற காப்பிய ஆசிரியர் எத்தகைய கொடுமை உடையவளைத் தம் கதா நாயகியாகக் கொண்டார் என்பது நன்கு விளங்கும்.

சைன நூல்களில் மற்ருெரு நீலியின் வரலாறு சொல்லப் படுகிறது. இவள் புத்த சமயத்தவனை கணவனை மணக்க நேர்ந்தது. அவர்கள் புலால் உண்பவர்கள். ஆதலால் புலால் சமைத்துப் புத்த பிட்சுக்களுக்கு உணவளிக்கும்படி அவன் கூறினன். அவள் இதற்கு மனமின்றி, ஒரு பிட்சுவின் தோல் செருப்பு ஒன்றை எடுத்து அதைப் பக்குவமாகச் சமைத்து உண்பித்தாள். செருப்பைக் காணுது அவன் தேடியபோது உண்மை தெரிய வந்தது. எல்லோரும் இவள் கற்பிழந்தவள் என்று குற்றம் சாட்டினர். இவளது இஷ்ட தெய்வமானது நகர வாயிலை அடைத்து, கற்புடையவள் வந்தால்தான் கதவு திறக்கும் என்று சொல்லிப் பிறர் யாரும் கதவைத் திறக்க முடியாதபடி செய்து, இவளைக்கொண்டு திறப்பித்தது. அரசனும், பிறரும் இவளுடைய கற்பைப் பெரிதும் போற்றினர். நீலி என்ற பெயர் ஒற்றுமையைத் தவிர வேறு எந்த ஒற்றுமையும் இங்கு நாம் காண்பதற்கில்லை.

இக்கதையும், புத்த சமயத்தைக் கண்டு அக்காலச்சைன சமயம் எவ்வளவு அஞ்சிற்று என்பதையே விளக்குகிறது.

ஆனால், உண்மையில் நாம் கருதுகின்ற இந்த 10ஆம் நூற்றாண்டில் தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் புத்த சமயம் முழு வீழ்ச்சி யடைந்து விட்டது. சைன சமயம் தலை எடுக்கவில்லை. அப்படி இருந்தும் ஓர் ஆசிரியர் ஏன் இவ்வாறு நூல் எழுதுகிறார் என்பது வியப்பாகவே இருக்கிறது.

மற்றொரு கருத்தையும் இங்குச் சொல்லுதல் பொருத்த முடையது. இந்நூலின் தலைவி ஒரு பெண். நீலகேசி மறுக்கிற நூல் குண்டலகேசி. அதன் தலைவியும் ஒரு பெண்; அவளும் தொடக்கத்தில் தலையை மழித்துக்கொண்டு, சைனத் துறவியாக ஆனவள். ஆயிரம் சமய வாதங்களை நன்கு கற்று, எல்லாச் சமயங்களையும் முறியடித்து, முடிவில் தான் சாரிபுத்தன் கேள்விக்கு விடை சொல்ல அறியாது, அவனைச் சரணடைந்து, புத்த பிக்குணியானாள். இப்படி இவ்விரு 'காப்பியங்களில்' பேசப்படுவோர் பெண்களே. இது எப்படிச் சைனதருமத்திற்குப் பொருந்தும் என்பது விளங்கவில்லை. சைனர் கொள்கை பெண் பிறவி பாவ முடையது, மோட்சத்திற்குத் தகுதியற்றது என்பது. அப்படி இருக்க, இவ்விரு பெண்களுக்கும் தந்திருக்கும் சிறப்பு எவ்வாறு பொருந்தும்?

குண்டலகேசி, நீலகேசி கதைகளும், பின்னால் வந்த யசோதர காவியக் கதைகளும், கதைகள் என்ற அளவில் மட்டதரமான கதைகள். குண்டலகேசி ஒரு பெரிய பிசாசாவாள்; காரணம் தன் புருஷனைத் தானே மலையுச்சியி லிருந்து கீழே தள்ளிக் கொன்றமையால். ஆகையால் முனிச் சந்திர முனிவனை வெருட்ட முயன்று தோல்வியுற்ற காளிக்கு வலிமை தருபவளாயும், குண்டலகேசியை வெல்லக்கூடிய வளாயும் இருக்கத்தக்க ஒரு 'பெரிய பிசாசு' தேவைப்பட்டது; ஆகவே கதையானது புண்டவர்த்தன நகரிலிருந்து பழையனூர் நீலியைத் தேடி நெடுந்தூரம் செல்கிறது!

## பதிப்பு

பேராசிரியராய் இருந்த அ. சக்கரவர்த்தி நாயனர் நீலகேசி சமயதிவாகர வாமன முனிவருடைய விருத்தியுரையோடு 1936இல் அழகிய பெரு நூலாகப் பதிப்பித்தார். இதன் ஆங்கில முன்னுரைப் பகுதி 360 பக்கம். பின், அஷ்ட பதார்த்த சாரம் என்ற சைன நூலின் பகுதிகள் 59 பக்கம். மஹாபாரதத்தின் அகிம்சையைக் கூறும் பகுதி 11 பக்கம். சிவஞான சித்தியார் பரபக்கத்தில் நிகண்டவாதி மதம் கூறுகின்ற 8 பாடல்களும், அதற்கு ஞானப்பிரகாசர் செய்த உரையும், சேர்க்கப்பட்டுள்ளன. ஞானப்பிரகாசர் தம்முடைய உரையில் நிகண்டவாதி மதத்தை கூறுமிடத்து ‘இவை விரிக்கிற் பெருகும். பார்க்க வேண்டுகில் நீலகேசியில் கண்டுகொள்க’ என்று எழுதி, பல நீலகேசிப் பாடல்களையும் எடுத்துக் காட்டியிருக்கிருர். நீலகேசி குண்டலகேசியோடு வாதம் செய்தாள் என்ற செய்தியை, ஞானப்பிரகாசர் பின் வரும் சொற்களால் சௌத்திராந்திகன் மதமறுதலைமுகமாகச் சொல்கிருர்: “நீலகேசியில் உன்னையவன் பரீட்சிக்கும் வசனங் கேட்டறியாயோ வென நிந்தித்ததெனக் கொள்க.” ஞானப்பிரகாசர் காலம் 16ஆம் நூற்ருண்டு. அக்காலத்துத் தன் கோள் நிறுவ விரும்பினேர் பிற மதங்களையும் நன்கு அறிந்திருக்க வேண்டும் என்ற நிலை இருந்தமை இவர் உரையால் விளங்குகிறது.

## உரை

இந்நூலுக்குச் சமயதிவாகர வாமன முனிவர் 14ஆம் நூற்ருண்டில் உரை எழுதினர் என்பது முன்னமே சொல்லப்பட்டது. இவ்வுரைகாரர் தத்துவக் கருத்துக்களை மட்டுமே விளக்கிச் செல்கிருர். பொருள் வெளிப்படையான இடங்களிலும் கதைப் போக்காக உள்ள இடங்களிலும் இவர் உரை எழுதவில்லை. வடநூல்களில் உபநிடதங்கள், கீதை, மனுஸ்மிருதி என்பவற்றை இவர் எடுத்துக்காட்டுகிருர்.

புத்த நூல்களில் மாஞவூர்ப் பதிகம், சித்தாந்தத் தொகை, பிம்பிசார கதை, குண்டலகேசி என்பன இவர் காட்டும் நூல்கள். சைன நூல்களில் குறிப்பிடத்தக்கவை அருங்கலச் செப்பு, மேருமந்தர புராணம், அறநெறிச் சாரம் என்பன. குறளையும் மேருமந்தர புராணத்தையும் இவர் எம்மோத்து என்பார்.

## பெரும்பொருள்விளக்கம்

### நூல்

பண்டைத் தமிழிலக்கியங்களுள் கால கதியில் எத்தனையோ இறந்து போயின; ஏன் இவ்வாறு பல இறந்தன என்பதற்கு ஏற்கத்தக்க காரணங்கள் புலப்பட வில்லை. காப்பியங்கள் என்று கருதப்பெறும் குண்டலகேசி வளையாபதி என்பனவல்லாமல், சிறப்புடைய பல்வேறு இலக்கியங்களும் இவற்றுள் உள்ளன. இவைகளில் பொரு ளிலக்கண அமைதியைப் புலப்படுத்துவதற்கென்றே எழுந்த இலக்கியங்களும் பல இருந்தன. எட்டாம் நூற்றுண்டில் தோன்றி இன்று இல்லாமற்போன சிற்றட்டகம் என்ற சிறு நூல், ஆசிரியப் பாடலால் இயன்ற ஒரு சிறு அகப்பொருள் இலக்கியம் ஆகும். அது போலப் புறப்பொருளுக்கு இலக்கியமாய்ச் செய்யப்பெற்று நன்கு வழங்கி வந்து இன்று கிடைக்காமற் போன பெரும்பொருள்விளக்கம் என்பது மற்றோர் அழகிய நூல்.

இந்நூலின் பல பாடல்கள் தொல்காப்பியப் புறத்திணை யுரையில் காணப்படினும், இதன் பெயரை நமக்கு உணர்த்து கின்ற நூல் 15 ஆம் நூற்றுண்டில் தொகுக்கப் பெற்ற **புறத்திரட்டு** என்ற புறப்பொருள் தொகைநூலாகும். இது, பெரும்பொருள்விளக்கத்தில் 41 பாடல்களை எடுத்துத் தொகுத்து, ஒவ்வோரிடத்திலும் நூற் பெயரைக்

கூறுகிறது. எல்லாப் பாடல்களும் வெண்பாப் பாடல்கள், புறத்துறைகளா யமைந்தவை. இதுபற்றியே இது தனித்த புறப் பொருள் இலக்கியம் என்று கருதுகிறோம்.

புறத்திரட்டில் காட்டப் பெற்ற அதிகாரங்களும் இந் நூற்பாடல்களும் பின் வருவன: ஈகை, அறிவுடைமை, தானை மறம், களம், வாழ்த்து – ஒரு பாடல்; குடி மரபு, பாசறை, அமர், யானைமறம் 3 பாடல்; பகை வயிற் சேறல் 2; நிரை கோடல், எயில் காத்தல் 5; நிரைமீட்சி, எயில் கோடல் 6. நச்சினார்க்கினியர் சிந்தாமணி (பாடல் 187) உரையில், 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே என்பதனால், ஒப்பும் பெருந்திணைப்பாற்படும் கந்தருவமாமாறு பெரும் பொருளான் உணர்க' என்றெழுதுகிறார்; பெரும் பொருள் என்பது, பெரும் பொருள் விளக்க மென்னும் நூலா யிருத்தல் கூடுமோ என்று யூகிக்கப்படுகின்றது என்பது ஐயரவர்கள் குறிப்பு. இது பொருந்தக் கூடியதே. இதை எடுத்துக் காட்டுகின்ற வையாபுரிப் பிள்ளையவர்கள், 'இவ் வாக்கியத்தை நோக்கிய அளவில், பெரும்பொருள் என்பது ஒரு பொருளிலக்கண நூலாக இருத்தல் கூடுமென ஊகிக்கலாம். இவ்வூகம் பொருத்தமுடைத்தாயின், இவ் விலக்கண நூலினை மேற்கோளுடன் விளக்கியவொரு நூலாகப் பெரும் பொருள் விளக்கம் இயற்றப் பெற்ற தாகலாம்'[1] என எழுதுகிறார். இது பொருந்தாது என்று சொல்வதற்கில்லை. இருப்பினும், புறத் துறைகளின் விளக்க மாக முறையாக எழுதப்பட்ட வெண்பாக்களைக் கொண்ட ஒரு நூலே பெரும் பொருள் விளக்கம் எனக் கருதுவது நேரியதாகும்.

இலக்கண நூல்களின் வளர்ச்சியை நாம் கருதும்போது, ஒன்பதாம் நூற்றாண்டில் அகப் பொருளிலக்கண மொன்றும்

1 புறத்திரட்டு 1938 முகவுரை பக்கம் 114.

புறப் பொருளிலக்கண மொன்றும் எழுதப்பட்டிருக்கக் காண்கிறோம். அகப் பொருள் நூல் தமிழ் நெறி விளக்கம்; சூத்திரமும் உரையும் மேற்கோள் பாடல்களும் ஒரே ஆசிரியராற் செய்யப் பெற்றன. புறப் பொருள் வெண்பா மாலைச் சூத்திரங்களும் மேற்கோள் பாடல்களும் ஐயன் ஆரிதனாரால் செய்யப் பெற்றன; பிற்காலத்தில் இந் நூலுக்குச் சாமுண்டிதேவ நாயகர் உரை செய்தார். அடுத்ததாகிய பத்தாம் நூற்றாண்டில் இறையனார் அகப் பொருள் உரை எழுத்து வடிவில் முதன்முதல் எழுதி வைக்கப்பட்டதென்பது வழக்கு. அதே போல, புறப் பொருள் கொண்ட பெரும் பொருள் விளக்கம் புதிதாய் எழுதப்பட்டதென்று கருதுகிறோம். முந்திய நூற்றாண்டில் அகப்பொருள் நூல் செய்த ஆசிரியர் தம் நூலைத் தமிழ் நெறி விளக்கம் என்றார். தமிழுக்குச் சிறப்பான நெறி அகப் பொருள் நெறி யாதலால், அதைக் கூறுகின்ற நூல் தமிழ் நெறி விளக்கம் என்று பெயர் பெற்றது பொருத்தமென்றே தோன்றுகிறது. அதுபோலவே, அக்காலத்து வாழ்ந்த மற்றோர் ஆசிரியர், அகம் புறம் என்ற இரு பொருள்களில், ஈகை வீரம் போன்ற புறப் பொருள்களை விரித்துக் கூறி, ஒரு வகையில் இலக்கணத்தை யொட்டிப் புது நூல் செய்யப் புகுந்தபோது, புறப் பொருளைப் பெரும் பொருள் என்று கொண்டு, அதை வெண்பாக்களால் விளக்கியுரைக்கும் தம் நூலுக்குப் பெரும் பொருள் விளக்கம் என்று பெயரிட்டார் எனக் கருதுகிறோம்.

புறத்திரட்டைத் தவிர வேறெந்த நூலும் பெரும் பொருள் விளக்கத்தின் பெயரைக் குறிப்பிடவில்லை. எனினும், பண்டை உரைகளுள் இந் நூற்குரியனவான பாடல்கள் உளவா என்பது ஆராயத் தகுந்தது. இந்நூல் புறத்திணைக்கு மட்டும் உரிய நூல், வெண்பா நூல், ஆதலால் இந்த இயல்புடைய வேறு பாடல்கள் உரைகளுள் உளவா

என்று பார்க்கலாம். தொல்காப்பியப் புறத்திணை யியலுக்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர் என்ற இருவர் உரைகளே கிடைத்துள்ளன. ஆகவே இவ் வியலுக்குரிய இவ் விருவர் உரைகளை மட்டும் ஆராய்வது இங்குப் பொருத்தமாகும். குறள்வெண்பாப் பாடல்கள் இரண்டிலும் அதிகமாய்ப் பயில்கின்றன; அவற்றை விலக்கி விடலாம். இளம் பூரணரும் நச்சினார்க்கினியரும் காட்டுகின்ற ஏனைய வெண்பா நூல்களும் அவற்றில் எடுத்த பாடல் தொகையும் பின் வருமாறு:

| நூல் | இளம்பூரணர் | நச்சினார்க்கினியர் |
|---|---|---|
| களவழி நாற்பது | 1 | 1 |
| தகடூர் யாத்திரை | — | 8 |
| திரிகடுகம் | 1 | 1 |
| நாலடியார் | 6 | 4 |
| பழமொழி நானூறு | 1 | 1 |
| பாரதம் | — | 6 |
| புறப்பொருள் வெண்பா மாலை | 78 | 20 |
| பெரும்பொருள் விளக்கம் | — | 33 |
| பெரும் பொருள் விளக்கம் என ஊகிக்கத் தக்கவை | — | 79 |
| முத்தொள்ளாயிரம் | 3 | 6 |
| முத்தொள்ளாயிரம் என ஊகிக்கத் தக்கவை | — | 14 |
| வேறு மூலம் விளங்காதவை | 1 | 3 |
| | 91 | 176 |

உரையாசிரியர் இருவருமே பொதுவாக மூலநூற் பெயரைக் குறிப்பிடவில்லை; அபூர்வமாகச் சில இடங்களில் மட்டும், களவழி, பாரதம், தகடூர் யாத்திரை, முத்தொள்ளாயிரம்

என்று பெயர் குறிப்பிட்டுள்ளார்கள். திரிகடுகம், நாலடி, பழமொழி, புறப்பொருள் வெண்பா மாலை முதலான நூல்கள், முழுமையும் கிடைத்துள்ளமையால், பாடல்கள் இவற்றில் உள்ளன என்று தெரிய முடிகிறது. ஏனைய தகடூர் யாத்திரை, பெரும் பொருள் விளக்கம், முத்தொள்ளாயிரம் ஆகிய மூன்றிலும் கண்ட பாடல்கள் அவ்வப் பெயரோடு புறத் திரட்டில் காணப்படுகின்றமையால் நூல் தெரிந்து சொல்ல முடிகிறது. முத்தொள்ளாயிரம் என்று ஊகிக்கத் தக்கவை என நச்சினார்க்கினியர் உரைப் பகுதியில் காணப்படுபவை, சேர சோழ பாண்டியருள் ஒருவரைக் குறிப்பிடுகின்ற மையால், இந்நூலைச் சேர்ந்தவை என்று குறிப்பிட்டோம். மிக அதிகமான பாடல்களைக் காட்டுபவர் நச்சினார்க்கினியர். பெரும் பொருள் விளக்கத்திற்குரியனவாகப் புறத்திரட்டில் கண்டவற்றுள் இவர் 33 பாடல்களைத் தருகிறார்; இளம் பூரணர் ஒன்று கூடக் காட்டவில்லை. நச்சினார்க்கினியர் மேலும் 79 பாடல்களைக் காட்டுகிறார். பாட்டின் பொருள் அமைதியாலும், வெண்பாவின் தன்மையாலும், இவை பெரும் பொருள் விளக்கமென்றே முடிவு செய்கிறோம். பெரும் பொருள் விளக்கமானது, தொல்காப்பியம் கூறும் புறத் துறைக்கு விளக்கமாக எழுந்த ஓர் இலக்கியமென்று நச்சினார்க்கினியர் மேற்கோள்களால் நன்கு புலப்படுகின்றது. அன்றியும் ஒரே துறைக்கு இரண்டு வெவ்வேறான விளக்கப் பாடல்களும் தரப்பட்டுள்ளன. போர்த் துறைகளுள் இவ் விரண்டில் ஒன்று அகத்தோனுக்கும் ஒன்று புறத்தோனுக்கும் உரியனவாய்க் காட்டப்பட்டுள்ளன. குடை நாட்கோள், வாணாட்கோள், ஏணி மயக்கம், முதிர்வு, நொச்சி, புதுமை, பாசிமறம், அகமிசைக்கிவர்தல், மண்ணுமங்கலம், வாண் மங்கலம், தொகை நிலை முதலான துறைகளைக் காண்க.

இனித் தகடூர் யாத்திரை என்ற நூற்பாடல்கள் பல புறத் திரட்டுள் உள்ளன. அவை ஆசிரியப்பாவும் வெண்பாவு

மாக உள்ளன. வெண்பாக்கள் மிகச் சிலவே நேரிசை வெண்பாக்கள்; ஏனையவை பல விகற்பங்கள்; பஃறொடை வெண்பாவும் கலிவெண்பாவும் கூட வருகின்றன. நச்சினார்க்கினியர் புறத்திணையியலுரையில் காட்டப்பெற்றவை 8 என முன்னுள்ள அட்டவணையால் காண்கிறோம். இவற்றுள்ளும் கலிவெண்பாவும் பஃறொடையும் காணப்படுகின்றன. ஆனால் இங்கு, பெரும்பொருள் விளக்கமாக நாம் ஊகிக்கின்ற 79 பாடல்களில் கலிவெண்பாவோ பஃறொடை வெண்பாவோ இல்லை. ஒரு பாடல் மட்டுமே (கடிமனைச் சீறூர் என்று தொடங்குவது) தனிச் சீர் பெறுது, மூன்றடி ஓர் எதுகையிலும் நான்காமடி வேறாயும் வருவது. இவ் யாப்பியல்புகளால், இப்பாடல்கள் யாவும் தகடூர் யாத்திரைக் குரியனவாகா, பெரும்பொருள் விளக்கத்துக்கே உரியன என்று கருதுகிறோம். இவ்வாறு கிடைக்கின்ற 120 பாடல்களையும் ஒரு சேரக் கருதி அவற்றில் காணப்படும் சிறப்புக்களைக் குறித்துச் சில சொற்கள் கூறுகிறோம்.

அடியார்க்கு நல்லார், கொற்றவைக்குப் பரவுக்கடம் பூண்டலுக்கு உதாரணமாக, 'வந்த நிரையினிருப்புடன்' (புறத்திரட்டு 1238) என்ற பாடலைக் காட்டுகிறார்; தெய்வத்துக்குப் பராயது என்பது நச்சினார்க்கினியர் இதற்குக் காட்டும் துறை. பெரும் பொருள் விளக்கமாக நாம் குறித்த பாடல்களுள் ஒன்றான 'மண்டமரட்ட மறவர்' என்ற பாடல் அடியார்க்கு நல்லாராலும், நச்சினார்க்கினியராலும் வள்ளிக் கூத்துக்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது.

பெரும்பொருள் விளக்கத்துள் எந்தப் பாட்டுடைத் தலைவன் பெயரும் இல்லை. சென்னியையும் புகாரையும் காவிரியையும் இவர் குறிப்பிட்டபோதிலும், இவை எடுத்துக் காட்டாக வந்தனவேயன்றி, நூலின் தலைவனைக் குறிப்பிடுவன ஆகா.

புறத்திணையைப் பயில்வார்க்கு இந்நூல் மிக்க சுவை தருவதாகும். ஏணி மறம் என்ற துறையில் மதில்வாய்ச் சாத்திய ஏணி, விண்ணுக்குச் சாத்திய ஏணியுமாகும் என்று இவர் அவலமும் நகையும் கலந்த சுவையோடு கூறுகிறார் :

**பொருவரு மூதூரிற் போர்வேட் டொருவர்க்கு**
**ஒருவர் உடன்றெழுந்தா ராகில் - இருவரும்**
**மண்ணொடு சார்த்தி மதில்சார்த் தியவேணி**
**விண்ணொடு சார்த்தி விடும்.**

போரில் சிறுவன் இறந்துபட்டான் எனக் கேட்ட தாய் மகிழ்ந்தாள்; ஆனால் இவனது வாள்வாய்ப் பட்ட மறவர் தாயரே அழுதார் என்று இவர் சொல்வது அவல நிலையின் உச்சநிலை அடைகிறது :

**ஆடும் பொழுதின் அறுகயிற்றுப் பாவைபோல்**
**வீடுஞ் சிறுவன்தாய் மெய்ம்மகிழ்ந்தாள் - வீடுவோன்**
**வாள்வாயின் வீழ்ந்த மறவர்தம் தாயரே**
**கேளா அழுதார் கிடந்து.**

சந்தனு மன்னன் சத்தியவதியை மணம் புரிவதற்காகப் புதல்வனான காங்கேயன் பிரமசரிய விரதமேற்றுப் பீஷ்மன் என்று பெயர் பெற்றான் என்பது நாடறிந்த பாரத வரலாறு. இதை இவர் அறிவின் சிறப்பை உணர்த்துவதற்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைத்துப் பாடுகிறார் :

**இளையர் முதியர் எனவிருபால் பற்றி**
**விளையும் அறிவென்ன வேண்டா - இளையனைத்**
**தன்தாதை காமம் நுகர்தற்குத் தான்காமம்**
**ஒன்றுது நீத்தான் உளன்.**

வீரத்தை எத்தனையோ கோணங்களிலிருந்து பார்த்தும் சிறப்பித்தும் பண்டைப் புலவர் பாடுகிறார்கள். ஓரரசன், அன்று பகற்பொழுதினுள் மாற்றான் எயிலினுக்குள் புகுந்தன்றி உணவு கொள்வதில்லை என்று வஞ்சினம் கூறியிருக்கிறான் :

**இற்றைப் பகலுள் எயிலகம் புக்கன்றிப்**
**பொற்றேரான் போனகம்கைக் கொள்ளானேல் - எற்றுங்கொல்**
**ஆறாத வெம்பசித்தீ ஆற உயிர்பருகி**
**மாறா மறலி வயிறு.**

## காலம்

*இதுவரை கூறியவற்றில் பல இடங்களில் இந்நூலின் காலத்தை ஆங்காங்குச் சுட்டி வந்திருக்கிறோம். இன்று கிடைக்கும் பெரும்பொருள் விளக்கப் பாடல்கள் முழுமையும் புறத்திரட்டுத் தொகுப்பிலிருந்தும், நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் புறத்திணையியல் உரை மேற்கோளி லிருந்துமே யாகும். புறத்திரட்டின் காலமும் நச்சினார்க் கினியர் காலமும் 14 ஆம் நூற்றாண்டு என்பது நன்கு நிறுவப்பட்டுள்ளது.*[1] *அடுத்து அடியார்க்கு நல்லார் இந்நூற் பாடல்கள் இரண்டை எடுத்துத் தருகிறார் என்றும் குறிப் பிட்டோம். அவர் காலம் 12ஆம் நூற்றாண்டாகும்.*[2] *இவற்றால் பெரும் பொருள் விளக்கத்தின் காலம் 12ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பது தெளிவு.*

*இனி, 9 ஆம் நூற்றாண்டில் அகத் துறையில் தமிழ் நெறி விளக்கமும் புறத்துறையில் புறப்பொருள் வெண்பா மாலையும் இலக்கணங்களாக எழுந்தன வென்றும், அடுத்த 10 ஆம் நூற்றாண்டில், அகத் துறையில் வாய் மொழியாக வந்த இறையனார் அகப்பொருள் உரையானது எழுத்து வடிவத்தில் எழுதி வைக்கப்பட்டது என்றும், புறத்துறையில் பெரும் பொருள் விளக்கம் ஓர் இலக்கிய விளக்க நூலாகச் செய்யப்பட்டதென்றும் முன்னர்க் கூறினோம். கால இயல்பு கருதியும் இலக்கண நூல் வளர்ச்சி நெறி பற்றியும் நாம் இவ்வாறு ஊகித்தெழுதினோம். இதற்குப் பின்னுமொரு*

---

1 எமது 14ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு பார்க்க.

2 எமது 12ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு பார்க்க.

சான்றும் கிடைக்கிறது. தமிழிலக்கண இலக்கிய நூற் கருவூலமான யாப்பருங்கல விருத்தியானது ஒரு மருட்பா வகைக்கு உதாரணமாகப் பெயர் தெரிந்த பின் வரும் பெரும் பொருள் விளக்கப் பாடலைக் காட்டுகிறது.

**கண்ணுதலோன் காக்க, கடிநேமி யோன்காக்க,**
**எண்ணிருதோள் ஏந்திழையாள் தான்காக்க - பண்ணியநூற்**
**சென்னியர்க் களிக்குஞ் செல்வன்நீ**
**மன்னுக நாளுமிம் மண்மிசை யானே!**

மருட்பா எட்டு வகைத்தாம் எனவும், அவற்றுள் இப்பாடல் புறநிலை வாழ்த்துச் சமநிலை மருட்பா எனவும் அவ்வுரை கூறுகிறது. பின்னும் மருட்பா கங்கா யமுனைச் சங்கமம் போலவும், சங்கர நாராயணச் சட்டகம் போலவும் வழங்கப் படுமென்றும் அது மிகவும் அழகுபடக் கூறுகிறது. யாப்பருங் கலம் அதன் விருத்தியுரை இரண்டுமே, 11ஆம் நூற்றாண்டில் செய்யப் பெற்றவை என்று நிறுவப் பெற்றுள்ளது.[1] ஆகவே, அவ்விருத்தியுரை காட்டுகின்ற இப்பாடலையுடைய நூல் அவ்வுரையின் காலத்துக்கு (11ஆம் நூற்றாண்டுக்கு) முற் பட்டதென்பது தெளிவு. ஆதலால் பெரும்பொருள் விளக்கத் தின் காலம் 10 ஆம் நூற்றாண்டென்பது எல்லா வகையாலும் பொருத்த முடையது.

### ஆசிரியர்

நூலே கிடைக்காதபோது ஆசிரியரைக் குறித்து நாம் என்ன சொல்வதற்கு இருக்கிறது? எனினும், கிடைக்கும் 120 பாடல்களையும் ஆய்ந்து சில சொற்கள் கூற முடியும். புறத்திணை குறித்து இவ்வளவு விரிவாகவும், அழகாகவும் நூல் இயற்றிய இவர், சிறந்த போர்ப் பயிற்சியுடைய வீரர் என்று கருதுவதும் ஓரளவு பொருந்தும்.

1 எமது 11ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு பக்கம் 188-192.

**யானை நிரையுடைய தேரோ ரினுஞ்சிறந்தார்
ஏனை நிரையுடைய ஏர்வாழ்நர் - யானைப்
படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டேர்
உடையோர்க் கரசரோ ஒப்பு**

*என்ற பாடல் காணத் தக்கது.*

**போர்வாகை வாய்த்த புரவலரின் மேதக்கார்
ஏர்வாழ்நர் என்பதற் கேதுவாம் - சீர்சால்
உரைகாக்கு மன்னர்க் கொளிபெருகத் தாந்தம்
நிரைகாத்துத் தந்த நிதி**

*என்ற பாடலும் இதே கருத்தை உரைக்கிறது. 'வேளாளர் நிரை காத்தது' என்பது இதன் கீழுள்ள குறிப்பு. ஏர் வாழ்நர்க்கு அரசரோ ஒப்பு என்று இவர் கூறும் கருத்து பிற்காலத்தில் உழவைச் சிறப்பிக்க வந்த ஒரு புலவரால் ஏரெழுபது என்ற நூலாக விரிக்கப் பெற்றது எனக் கருத லாம். பாதீடு என்ற துறையில், வென்று மீட்டு வந்த ஆனிரையைப் பகிர்ந்து கொள்ளுதல் என்ற துறையை விளக்குமிடத்து, 'நாம் மீட்டுவந்த ஆக்களைப் பகுக்கவேண்டிய அவசியமில்லை; அவை தாமே தமக்குரியாரை அறிந்து, அவர் தொழுவுக்குள் சென்று விடும்' என்று எழுதுவது மிக்க சுவை யுடையது:*

**யாமே பகர்ந்திட வேண்டா, இனநிரை
தாமே தமரை யறிந்தனகொல், - ஏமமுற்று
அன்றீன்ற தம்மை யறிந்துகொள் கன்றேய்ப்பச்
சென்றீயும் ஆங்கவர்பாற் சேர்ந்து**

*இப்பாடலும், இவ்வாசிரியர் சிறந்த ஆனிரைச் செல்வம் பெற்று வாழ்ந்த வேளாளர் என்பதை வலியுறுத்தும். ஆவையும் கன்றையுள்ளி ஆவின் மடி சுரப்பதையும் பல பாடல்களில் பாடுகிறுர்.*

*முன் காட்டிய வாழ்த்துப் பாடலில், சிவபெருமான் திருமால் கொற்றவை ஆகியோர் காக்க என்ற முறைவைப் பால் இவர் சைவர் எனக் கருதுதல் கூடும். கொற்றவை யைப் பரவுதல் புறத்திணையில் பாடப் பெறுகின்ற ஒரு துறை. ஆசிரியர் இந்நூலில் பத்து இடங்களில் கொற்றவை யைக் குறிப்பிடுகிறார். முருகனையும் வள்ளியையும் ஒரு பாடலில் குறிப்பிடுகிறார். இவர் சோழ நாட்டினர், இவர் வாழ்ந்த காலத்தில் சிறப்பான சோழர் ஆட்சி நடைபெற்றது என்பதை இவர் பாட்டில் காணும் குறிப்புக்களால் ஊகிக்கலாம்.*

ஈட்டிய வெல்லாம் இதன்பொருட் டென்பது
காட்டியகை வண்மை காட்டினார் - வேட்டொறுங்
காமருதார்ச் சென்னி கடல்சூழ் புகார்வணிகர்
தாமரையுஞ் சங்கும்போற் றந்து

*என்பதனால் சென்னியையும், புகாரையும் குறிப்பிட்டார். ‘காவிரி நாட்டு ஓவாத ஓத்தின் ஒலி’ என வேறோர் இடத் துக்காணும் தொடரால் நாட்டையும், ‘வேந்தன் புலி பொறித்த விற்கோட் டிமயம்’ என்றதனால் சோழரையும் குறிப்பிடுவன காண்க. தாம் வைதிக நெறியினர் என்பதைப் பல பாடல் களில் புலப்படுத்துகிறார்.*

ஓத்த முயற்சியா னொத்து வெளிப்படினும்
நித்திய மாக நிரம்பிற்றே - எத்திசையுந்
தாவாத அந்தணர் தாம்பயிற்றிக் காவிரிநாட்டு
ஓவாத ஓத்தின் ஒலி.

*போரில் சிறந்த வீரனுக்கு நடுகல் நட்டுப் பூசை செய்வதைக் கூறுமிடத்து, நடுகல்லுக்குக் கால்கோள் பற்றிக் காட்டப்பட்ட பாடல் இங்குக் குறிப்பிடத் தக்கது :*

காப்புநூல் யாத்துக் கடிகமழ் நீராட்டிப்
பூப்பலி பெய்து புகைகொளீஇ - மீப்படர்ந்த

**காளை நடுகற் சிறப்பயர்ந்து கால்கொள்மின்**
**நாளை வரக்கடவ நாள்.**

இங்குக் காப்புக் கட்டுதல், வாச நீராட்டுதல், பூவால் அருச்சித்தல், நறும் புகை யூட்டுதல் முதலான வைதிகச் சடங்குகள் சொல்லப்பட்டுள்ளமை கருதத் தக்கது.

'குலம் பெறு தீங்கு அந்தணர் கொள்ளார்', 'தீவாய் அவி சொரியத் தீ விளங்கு மாறு போல, ஒளி முடி மேல் மந்திரத்தால் அந்தணர் வாக்கிய நீர் அம்மலை மேல் அந்தரத்தின் கங்கை யனைத்து' என்பன காண்க. 'கடல் புக்கு மண்ணெடுத்த காரேனக் கோட்டின் — மிடல் பெரிது எய்தின... நிரை மீட்ட தோள்' என்ற விடத்துத் திருமாலின் வராகாவதாரத்தைக் குறிப்பிடுகிறார்.

கந்தழி வாழ்த்தென்று நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டுகின்ற பாடல் தனிச் சிறப்புடையது; சுடரே (சூரியனே) பரம் பொருள் என்ற கருத்துடையது. பரம் பொருளின் தனித்த இலக்கணத்தை நன்கு எடுத்துக் காட்டுகிறது. 'பரம் பொருளானது தான் எப்பொருளிடத்தும் சார்பில்லாததாய் அருவமாய், எப்பொருளுக்கும் தான் சார்பானதாய், என்றும் இன்பம் செய்வதாய், மனம் மொழி மெய் என்ற முக்கரணங்களுக்கும் ஆன்ம அறிவுக்கும் அப்பாற்பட்ட சுத்த நிலையிலுள்ள பொருள்' என்கிறார்:

**சார்பினல் தோன்றுது தானருவாய் எப்பொருட்கும்**
**சார்பெனநின் றெஞ்ஞான்றும் இன்பம் தகைத்தரோ**
**வாய்மொழியான் மெய்யான் மனத்தான் அறிவிறந்த**
**தூய்மையதா மைதீர் சுடர்.**

அத்தியாயம் 3

# இலக்கிய உரை

## முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒவ்வொரு நூற்ருண்டு ஒவ்வொரு வகையில் சிறப்புக்குரியதாய் இருக்கிறது. பத்தாம் நூற்ருண்டானது பிற சிறப்புக்கள் ஒரு புறம் இருந்தபோதிலும் கூட, இலக்கண இலக்கிய **உரைகள்** தோன்றிய முதல் காலம் என்ற முறையில் தனிச் சிறப்புக் குரியதாய் இருக்கிறது. கடைச் சங்க காலம் தொடங்கி நாம் கருதுகின்ற இந்த நூற்ருண்டு வரையில் தமிழில் பல வகை இலக்கணங்கள், காப்பியங்கள், பிறவகை இலக்கி யங்கள், நீதி நூல்கள், சைவ வைணவ அருட்பாசுரங்கள் என்பன போன்ற நூல்கள் எண்ணற்றன தோன்றியிருக் கின்றன. அக் காலத்தில் ஒவ்வொரு நூலும், அதற்கான தொரு சூழ்நிலையில் ஓர் ஆசிரியரிடம் பல மாணக்கர் உடன் உறை வாழ்க்கையை மேற்கொண்ட நிலையில் பயிலப்பட்டு வந்தது. அகத்தியர் மாணக்கர் பன்னிருவர், தொல் காப்பியர் மாணக்கர் பன்னிருவர் என்ற கதைகளெல்லாம், இந்த உண்மையையே உணர்த்துகின்றன.

கற்றலில் கேட்டலே நன்று என்ற உரையின்படி, அக் காலத்துக் கல்வி வல்லார், நூலைக் கேட்டே பயின்ருர்கள். இதற்கு இரண்டு காரணங்கள். திருவள்ளுவர் உபதேசப்படி, கற்றல் எல்லாம் நிற்பதற்கு ஆனமையால், கற்ருேர் ஒழுக்கத் துக்காக வேண்டி, தேர்ந்தெடுத்த சில நூல்களையே கற்ருர்கள், ஓர் ஆசிரியர் கற்பித்தார். இக்கல்வி உபதேச

மாகவே இருந்தது. கேட்டதெல்லாம் அப்படியே மனத்தில் நின்றது. ஆகவே, சுவடி தேடி எடுத்துப் படிக்கும் வேலை குறைவு. மற்றொரு காரணம், முன் குறிப்பிட்டது போன்ற குருகுல வாசம். குரு எந்த நூல்களில் நிபுணரோ அந்த நூல்களையே மாணாக்கர் தாமும் கற்றார். ஆகவே, தானே நூலை எடுத்துக் கற்பது என்பது குறைவு. இது தொடக்க நிலை.

இதற்கு ஒரு காரணமும் உண்டு. நூல்கள் ஆங்காங்கு சில பகுதிகளில் மட்டுமே வழங்கின. தமிழ் நாடு சேர, சோழ, பாண்டிய நாடு எனப் பல பகுதிகளாகப் பிளவுபட்டிருந்தது. மிக்க சிறப்புடைய சிலர் நீங்கலாக ஏனைய புலவர் அயல் பகுதிகளுக்குச் சென்றது அருமை. அவ்வாறு சென்ற இளந்தத்தன் என்ற புலவன் ஒற்றன் என்று கருதப் பட்டு, அவன் உயிருக்கே ஆபத்து விளைந்தது என்று சங்க நூல் கூறுகிறது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பது சுவையாகத்தான் இருக்கிறது; ஆனால் அன்றிருந்த சாமானிய நிலையில் கற்றோருக்குப் பொருந்தவில்லை. புகழேந்தியை ஒட்டக்கூத்தன் துன்புறுத்தினான் என்ற பொய்க் கதை எழுந்ததற்கும் ஒரு காரணம் உண்டல்லவா?

ஒருவகையில் இந்த நிலை ஏழாம் நூற்றாண்டு தொடங்கி மாறலாயிற்று. அப்பர், சம்பந்தர் போன்ற சைவ நாயன்மார் தங்கள் பக்திப் பெருக்கினால் சமயப் பயிர் வளர்க்கும் காரணமாகத் தல யாத்திரை செய்தபோது, அவர்களுடைய அடியார் குழாங்கள் ஊர் ஊராகச் சுற்றினார்கள்; பெருந் தொகுதியினராக மக்கள் ஒவ்வொரு நாடாகப் புடை பெயர்ந்து சென்றார்கள். இந்தப் புடை பெயர்ச்சி, பக்தியை அடிப்படையாகக் கொண்டிருந்த போதிலும், கூடவே தமிழ் நூல்களை அறியும் ஆர்வத்தையும் வளர்த்தது என்று நாம் யூகிக்க முடியும். இக்காலம் முதலே இலக்கண இலக்கிய

நூல்கள் அதிகமாக இடம் விட்டு இடம் பெயர்ந்து பரவலாயின. சூழ்நிலை மாறுபட்டமையால், புதிதாக நூலைப் படித்தோர், தாமே முழுமையும் உணர்ந்து கொள்வதற்கான வாய்ப்புக்கள் இல்லை.

இந்த நிலை பல நூற்றாண்டுகள் நிலவிற்று. பொருளதிகாரம் வல்லாரைத் தலைப்படவில்லையே என்று பாண்டிய மன்னன் கவன்றதும், இசை உணர்ந்தாரைக் காணவில்லையே என்று நம்பியாண்டார் நம்பியும் சோழ மன்னனும் கவன்றதும் ஆகிய வரலாற்றுச் செய்திகள் இப்படிப்பட்ட இலக்கிய விளக்கம் குறைவான ஒரு பொது நிலையை நமக்கு உணர்த்துகின்றன. இந்த நிலையில்தான் உரைகள் தோன்ற ஆரம்பிக்கின்றன. தெளிவான அறிவு படைத்த பேராசிரியர்களிடம் கேட்டவற்றை மாணக்கர் எழுதி வைத்திருக்கலாம், அல்லது அவர்களே எழுதியும் தந்திருக்கலாம். மூல ஆசிரியர் நூல் எழுதி நெடுங்காலத்துக்குப் பின்னேதான் உரைகள் தோன்றின என்பது நினைவிருக்க வேண்டும். யாப்பருங்கலம் வீர சோழியம் போன்ற மிகச் சில நூல்களுக்கு நூல் செய்த ஆசிரியருடைய நேர் மாணக்கர் உரை எழுதி இருக்கின்றனர். மற்றப்படி தோன்றிய இலக்கிய இலக்கண உரைகள் நீண்ட கால இடையீடு கொண்டவை. தொல்காப்பிய உரைகள், பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு, சிலப்பதிகாரம், சிந்தாமணி முதலிய நூல்களின் உரைகள் இத்தகையனவே. கிடைக்கின்ற எல்லா உரைகளுமே மிகவும் பிற்காலத்தவை. மிகப் பழங்கால நூலாகிய தொல்காப்பியத்திற்குப் பதினோராம் நூற்றாண்டில் இளம் பூரணர் செய்த உரைதான் இன்று கிடைக்கின்ற உரைகளில் பழமையானது. நூலுக்கும் உரைக்கும் உள்ள கால இடையீடு சுமார் ஆயிரம் ஆண்டுகள் : இவ்வளவு நீண்ட காலத்துக்கு முற்பட்டு வாழ்ந்திருந்த தொல்காப்பியர் கால

நிலையையும், வாழ்க்கை முறையையும், நோக்கங்களையும், மரபுகளையும், சமூகப் பண்பாட்டையும், மொழியையும், இலக்கணத்தையும் ஒருவர் நன்குணர்ந்து உரை எழுதுவது முடியாது என்றே சொல்லத் தக்கது. எனினும், இவ்வாசிரியர்கள் மொழியினிடத்துக்கொண்ட பற்றுதல்காரணமாகவும், மூல ஆசிரியர்களிடம் கொண்ட ஈடுபாடு காரணமாகவும், நூலினிடத்து வைத்துள்ள பேரார்வம் காரணமாகவும், தங்களுடைய பெரும் புலமையினாலும், உரை எழுதினார்கள். இது தமிழ் நாட்டின் பெறற்கரிய பேறு என்றே கருத வேண்டும். வடமொழி நூல்களுக்கு இப்படிப்பட்ட பண்டை வியாக்கியானங்கள் எழுந்துள்ளன. மேலை நாட்டு மொழிகள் எதிலும், புராதன நூல்களுக்கு இவ்வித உரைகள் எழுந்திருப்பதாகத் தெரியவில்லை.

தமிழ் நாகரிகம் எவ்வளவோ பழமையானது, அதன் சின்னமான கலைகள் எவ்வளவோ பழமையானவை. அந் நாகரிகத்தின் இடைக்காலச் சின்னங்களாகச் சில ஓவியங்களையும் மிகப் பல சிற்பங்களையும் காண்கிறோம். இசைக்கலை நுட்பங்களும், நாடகக் கலை நுட்பங்களும் முந்திய இரண்டும் போல் கண்ணால் மட்டும் கண்டு உணர்வன அல்லாமல், காதாலும் கேட்டுணர்ந்து அனுபவிக்கத் தக்கன. அவற்றின் தொடர்பு, உரைகள் தோன்றிய அன்று போய்விட்டது. ஓரளவு அத்தொடர்பைச் சுட்டிச் சென்ற பேருபகாரிகள் சிலப்பதிகார அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் ஆவர் – காலம் 11, 12 நூற்றாண்டுகள். ஆனால் இவற்றுக்கு மேலாக உள்ள கவிதை என்ற அருங்கலையானது, உரையாசிரியர் இல்லையானால் கை நெகிழ்ந்து போயிருக்கும். கிரேக்க நாடு முதலியவற்றில் பண்டை மொழி வேறு; தற்கால மொழி வேறு; இரண்டுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. அப்படியே நாகரிகமும். பண்டை நாகரிகம் வேறு, அதாவது கிறிஸ்து பிறந்த

பின்னர் 14-15 ஆம் நூற்றாண்டுகளில் எழுந்து ஓங்கி இன்று வரையில் அந்த நாடுகளில் வந்துள்ள மொழியும் நாகரிகமும் வேறு. இவ்வாறு இரண்டும், அந் நாடுகளின் நாகரிகத்திலும் மொழியிலும் தனித் தனியாகத் துண்டிக்கப் பட்டு விட்டன.

இப்படிப்பட்ட ஒரு நிலைமை தமிழ் நாட்டிலும் விளைந் திருக்க வேண்டும். மொழியைப் பொறுத்த வரையில் தமிழ் நாட்டில் இத்தகைய தொரு துண்டிப்பு ஏற்படாதவாறு காப்பாற்றினோர் உரையாசிரியர். இத்துண்டிப்பு ஏற்படாமல் காத்துப் பின் வரும் சந்ததியாருக்கு அந்த மூல நூல்களை எடுத்து வழங்கியவர்கள் இந்த உபகாரிகளே.

பத்தாம் நூற்றாண்டுக்கு நாம் வருவோமானால் இங்கு இலக்கிய இலக்கண உரைகாராக உள்ள ஆசிரியர் இருவர். ஒருவர் மணக்குடவர். இவர் திருக்குறளுக்கு முதல் உரை செய்தார். இவருக்கு முன்னும் குறள் உரைகள் இருந்தன போலும்; அவை நமக்குக் கிடைக்கவில்லை. குறளின் காலத்துக்கும் மணக்குடவர் காலத்துக்கும் இடையில் ஆயிரம் ஆண்டுகள் (800 ஆண்டுகளுக்குக் குறைவில்லை). இவரே குறளை எடுத்து நமக்கு அறிவிக்கின்ற முதல் உபகாரி. இதே போல இலக்கணத் துறையில் இறையனார் களவியல் என்ற பெயருள்ள அகப்பொருள் இலக்கணத்துக்குத் தலைமுறை தலைமுறையாக வாய்மொழியாக வழங்கி வந்த நக்கீரர் உரை என்ற உரையானது பத்தாம் நூற்றாண்டில் நூலாக ஏட்டில் எழுதப்பட்டது என்பது அறிஞர் கருத்து. இந்த அதிகாரத்தில் மணக்குடவர் குறள் உரையையும் பின் ஓர் அத்தியாயத்தில் களவியல் உரையையும் ஆராய்வோம். இவ்விரண்டு உரைகளல்லாமல், இவற்றிலும் பழைய உரை எதுவும் இன்று கிடைக்கவில்லை.

கிடைக்கவில்லை என்று தெரிந்துதான் சொல்லுகிறோம். தமிழ் நாட்டில் பிற்காலத்தில் எவ்வளவோ அழிவு வேலைகள் நடந்திருக்கின்றன. 13ஆம் நூற்றாண்டில் பாண்டி மன்னன் சுந்தர பாண்டியன் சோழ நாட்டின் மீது படையெடுத்து அப்போது அரசாண்டிருந்த மூன்றாம் இராச ராச சோழனைத் தோற்கடித்து, தஞ்சையையும் உறையூரையும் தீயிட்டுக் கொளுத்தினான். அவனால் இடிபடாத கோயிலோ, மாளிகையோ இல்லை. பட்டினப் பாலை பாடியதற்காக உருத்திரங் கண்ணனாருக்குப் பரிசிலாக அளித்த மண்டபம் ஒன்றே அவனால் இடிபடாமல் எஞ்சி நின்றது — என்று சாசனப் பாடல் கூறுகிறது. 14ஆம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் முகம்மதியப் படை மதுரையில் புகுந்து மீனாட்சி கோயிலைத் தரை மட்டமாக்கித் தமிழ் மக்களின் நாகரிகச் சின்னங்களாக இருந்த எல்லாப் பொருள்களையும் தீயிட்டுக் கொளுத்தி விட்டன. கடைச் சங்கம் இருந்தது என்ற பெயராலும் பெருமையாலும் மரபினாலும் மதுரை நகரில் எல்லாத் தமிழ் நூல்களும் இருந்தன: அவை யாவும் தீயில் அழிந்தன. இன்று நமக்குக் கிடைக்கின்ற பண்டைத் தமிழ் நூல்கள் யாவும் நாட்டின் பிற பாகங்களில் இருந்த நூல்களே. பண்டைத் தமிழ் நூல்களும், உரைகளும், முகம்மதியர் படையெடுப்பால் எவ்வளவுதான் அழிந்தன என்பதற்கு வரையறையே இல்லை. அகத்தியம், தொல்காப்பியம், அவிநயம், குறள், சிலப்பதிகாரம், குறுந்தொகை, எட்டுத்தொகை முதலியவற்றின் உரைகள் எத்தனையோ அங்கு அழிந்தன என்று நாம் கருதுவது பொருந்துவதாகலாம்.

## மணக்குடவர்

### ஆசிரியர்

திருக்குறள் உரை செய்த ஆசிரியர் பதின்மர் பெயரைக் குறிப்பிடுகின்ற 'தருமர் மணக்குடவர்' என்ற பழம் பாடல்

இவர் பெயரை இரண்டாவது பெயராகக் கூறுகின்றது. பாடலில் பெயர்கள் கால முறைப்படி அமைக்கப்படவில்லை. இவரது பெயர் மணக்குடையார் என்றும், மணக்குடியார் என்றும் வழங்குவதாகச் சொல்வர். அதுகொண்டு இவர் பிறந்த ஊர் மணக்குடி என்றும், எந்த மணக்குடி என்பது விளங்கவில்லை என்றும், ஆராய்ச்சிகள் நிகழ்ந்துகொண்டே செல்லுகின்றன. இவற்றுக்கு ஆதாரமாக, 'தண்கடல் அசைவளி' என்ற தொடக்கமுடைய ஓர் அகவற்பா மதுரை செந்தமிழ்ப் பத்திரிகையில் 1922, 1945 ஆகிய ஆண்டுகளில் 'இளம்பூரணர் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம்' என்ற பெயரில் வெளியாயிற்று. இப் பாடலுள் இளம்பூதியின் புதல்வர் இளம்பூரணர், இவர் செல்லூர் மணக்குடிபுரியார், அந்தணர், கொங்கு வேள் மாக்கதைக்குக் குறிப்புரை எழுதியவர், தேவர் குறட்பாவிற்கு நல்லுரை பகர்ந்தவர் என்றெல்லாம் சொல்லப்பட்டுள்ளது. இது போலிப் பாடல் என்பதை அச் செந்தமிழ்ப் பத்திரிகையிலேயே உதவி யாசிரியர் தி. கி. இராமானுச ஐயங்கார் மறுத்து எழுதி யிருந்தார். இச் செய்திகளை எமது 11ஆம் நூற்றாண்டின் இலக்கிய வரலாற்றில் விளங்கக் காணலாம் (பக்கம் 212–4).

இங்ஙனமாக, மணக்குடவர் என்ற பெயருக்கு எவ்வித விளக்கமும் கிடைக்கவில்லை. இவர் உரைக்குச் சிறப்புப் பாயிரம் எதுவும் இல்லாமையால் இவர் வரலாறு எதுவும் விளங்கவில்லை. இவர் செய்த நூலாக இவ்வுரை ஒன்றுமே கிடைப்பது. இவர் உரை தேவருரை எனவும் வழங்கும்.

இவர் சமயம் சைனம் என்பது சிலர் கருத்து. அதற்கும் இவர் நூலில் ஆதாரம் விளங்கவில்லை. திருக்குறள் முதல் அதிகாரத்தில் கடவுளைப் பற்றிக் குறிப்பிடும் இடங்களில் தமது சமயக் குறிப்பு இல்லாமலே இவர் எழுதியிருக்கிறார். வினைபற்றியும், உயிர் பற்றியும் இவர் கூறும் கருத்துக்கள்

எவ்விடத்திலும் இவர் சைனர் என்று கருதுவதற்கு ஆதரவு தரவில்லை. ஆதலால், இவர் சமயம் இன்னது என்பது விளங்கவில்லை என்பது மட்டுமே சொல்லத் தக்கது. தேவர், வழிபாடு என்று சொல்கிருரேயன்றி, அருகன் வழிபாடு என்று சொல்லவில்லை. இதனுல் இவர் சைனர் அல்லர் என்பது தெளிவு. பெண்ணிற் பெருந்தக்க யாவுள என்ற குறளுக்கு, பெண்பிறப்புப்போல மேம்பட்டன யாவையுள என்று எழுதுகின்ற இவர், பெண் பிறப்பே கீழானது என்ற கோட்பாட்டை யுடைய சைன சமயத்த ராதல் எங்ஙனம் பொருந்தும்?

ஏரினும் நன்ருல் எரு விடுதல் என்ற குறள் உரையில் இவர் எழுதுவது கருதத் தக்கது.

"இது பல்கால் உழவு வேண்டுமென்பதூஉம், எருவிட வேண்டுமென்பதூஉம், களை பறிக்க வேண்டுமென்பதூஉம், பசுப் புகுதாமற் காக்க வேண்டுமென்பதூஉம் கூறிற்று" (1033). ஏர் எரு களை என்ற மூன்றே மூலத்தில் சொல்லப் பட்டன. மணக்குடவர் இவற்ருேடு 'பசுப் புகுதாமல் காக்க வேண்டும்' என்பதையும் சேர்த்துக் கொண்டார். உழவுத் தொழில் செய்தோருக்கே ஆடு மாடுகளால் பயிருக்குச் சேதம் விளையாதபடி காத்தல் எத்துணை முக்கியம் என்பது அனுப வத்தால் தெரியும். இதை உணர்ந்து கூறுகின்ற உரை யாசிரியர் உழவுத் தொழிலினர், வேளாளர் என்று கருதுவது பொருந்தும்.

பின் வரும் கருத்துக்களை நோக்குக. 'கேட்பினும் சொல்லாவிடல்' என்ற தொடருக்கு (692), "சொல்லா விடலாவது தூதனை அரசருக்குப் படை எவ்வளவு உண்டு என்று பகையரசன் வினவினுல், நீ அறியாதது ஒன்ருே என்று அளவு கூருமை" என்று எழுதுகிருர். பொச்சாவாமை என்ற அதிகாரத்தில், 'இகழ்ச்சியிற் கெட்டாரை எண்ணுக'

(532) என்பதன் உரையில், 'கெடாதிருக்கும் பொருட்டு அரசராவார் உண்பவை உடுப்பவை பூசுபவை சோதித்துக் கொள்க' என்றெழுதுகிறார். படைத்தகை என்ற தொடருக்கு (768) 'தேர் யானை குதிரைகளின் அலங்காரமும் கொடியும் குடையும் முரசும் காகளமும் முதலாயினவற்றால் அழகு பெறுதல்; இஃது அரசன் படையழகு அமைக்கவேண்டும் என்றது' என்று விளக்கம் எழுதுகிறார். ஒருகால் இவர் அரச வாழ்க்கையை நெருங்கி உணர்ந்திருந்தாரோ என்று எண்ண இது இடங்கொடுக்கிறது.

**காலம்**

மணக்குடவர் காலத்தைக் குறிப்பிடுவதற்கான திட்டமான சான்றுகள் இல்லை. திருக்குறள் உரை செய்த பதின்மரில், பரிப்பெருமாள் உரை, கிடைத்த ஐந்து உரைகளில் ஒன்று. இவ்வுரையின் காலம் 11ஆம் நூற்றாண்டு என்று நிறுவப்பட்டுள்ளது.[1] பரிப்பெருமாள், மணக்குடவர் உரையைத் தழுவியே தம் உரையைச் செய்தார் என்று குறிப்பிட்டோம். அவர் உண்மையில் புதிய உரை செய்யவில்லை; மணக்குடவர் உரையை அப்படியே எடுத்து எழுதிக்கொண்டார்;[2] அபூர்வமாய் இரண்டொரு சொற்களை மாற்றினார்; சில விளக்கங்களும் சேர்த்தார்; சில இடங்களில் பாட்டின் முறைவைப்பையும் மாற்றினார்; இதுவே இவர் பெயரில் புதியதோர் உரை என்ற பெயர்பெற்றது. இதனால், மணக்குடவர் உரை பரிப்பெருமாளுக்கு முந்தியதென்பது தெளிவு. இதன் காலம் 950 - 1000ஆக இருத்தல் கூடும். ஒருகால் பரிப்பெருமாள் இவருடைய நேர் மாணாக்கராயிருந்திருக்கலாம்; அல்லது மாணாக்கர் பரம்பரையில் நெருங்கின காலத்தில் பின்வந்தவராயுமிருக்கலாம்.

---

1 எமது 11ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு, பக்கம் 88-90 பார்க்க.

2 காசிமடம் உரைக் கொத்துப்பதிப்பில் இதை விளங்கக் காணலாம்.

## குறள் உரை

மணக்குடவர் உரை முதன்முதலில் 1925இல் அச்சாயிற்று. அதுவரை பரிமேலழகர் உரை ஒன்றே ஆட்சியிலிருந்தது. பரிமேலழகர் ஓரளவு குறளின் பெருஞ் சிறப்பை மிக நன்ருக எடுத்துக்காட்டுபவராயினும், ஓரளவு வடநூலார் மரபைத் தழுவியே எழுதுபவர். ஆனல் மணக் குடவர் வடநூலார் மரபைச் சொல்பவர் அல்லர். எளிமை யாகவும், தெளிவாகவும் குறளின் சொற்களைமட்டும் நேரே விளக்கிச் செல்வது இவர் இயல்பு. எல்லா இடங்களிலும், குறளின் சொல்லை ஒட்டி, ஒரு சொல் விடாமல் உரை எழுதிக்கொண்டுபோகிருர். சில இடங்களில் பரிமேலழகர் இவரினும் வேறு பாடம் கொண்டுள்ளார். இவர் உரையைப் பார்க்கும்போது நன்கு கற்று முதிர்ந்த பிராயத்தில் இவர் உரை எழுதியிருக்கவேண்டுமென்று தோற்றுகின்றது. சில சமயம் சில சொற்களுக்குத் தனி உரையும், சில கருத்து விளக்கங்களும் சொல்லுகிருர்.

உரையில் சில முறைகளை மேற்கொண்டிருக்கிருர். ஒவ்வோர் அதிகாரத்தின் தலைப்பிலும் அவ்வதிகாரப்பெயரின் பொருளைச் சில சொற்களால் விளக்குகிருர். பெரும்பான்மை யான அதிகாரங்களில், அதிகாரத் தலைப்பு குறிப்பிடுகிற பண்பு பொருந்தவேண்டும் என்று அவ்வதிகார முதல் பாடலின் உரையில் கருத்துரையாகத் தவருமல் எழுதி வருகிருர். அருளுடைமைவேண்டும், நடுவு நிலைமைவேண்டும், விடுதல் (துறவு)–வேண்டும், புலால் மறுத்தல்வேண்டும், அறிவுடைமைவேண்டும், தவம்பண்ணவேண்டும், கேள்வி வேண்டும், குற்றம் கடியவேண்டும் என்பன போன்ற தொடர்களைக் காண்க. இதுபோல, பல அதிகாரங்களில் பெரும்பான்மையான குறட்பாக்களின் இறுதியில் கருத்துரை கூறிச்செல்வதும் இவர் இயல்பு. அவ்வுரையும்கூட இயன்ற வரை ஓர் அதிகாரத்தின் பாடல்கள் யாவிலும் ஒரே தொடர்பு

உடைய சுருங்கிய சொற்களாய் இருக்கும். எடுத்துக் காட்டாகக் கயமை என்ற அதிகாரத்தைக் குறிப்பிடலாம். இதன் பத்துப் பாடல்களின் கருத்துரைகளும் முறையே பின்வருவன. உறுப்பொத்துக்குணம் ஒவ்வாமையால் கயவர் மக்களல்லர் ஆயினர், வேண்டியன செய்வார், தாம் அறியார், இயல்பான ஒழுக்கம் இலர், நிறை இலர், அடக்கம் இலர், அழுக்காறுடையர், இரப்பார்க்குக் கொடார், ஒறுப்பார்க்குக் கொடுப்பர், நிலையிலர்—இவற்றை நோக்கும் போது, இவர்ஒவ்வொரு குறளின் கருத்தையும் இரண்டே சொற்களால் உணர்த்த எண்ணுவது தெரிகிறது. சிறந்த இலக்கியப் பண்பாகிய கருத்தொருமையில் இவர் அதிகக் கவனம் செலுத்துகிறார்.

காமத்துப் பாலில் மட்டும் கூற்றுக்களைக் கருத்துரையாகச் சற்றே விளக்கிக் கூறுகிறார். துறை விளக்கங்களில் பரிமேலழகர் இவரினும் பெரிதும் வேறுபடுகிறார். எடுத்துக் காட்டாக, 'மடல் ஏறாப் பெண்ணில் பெருந் தக்கது இல்' என்ற பாடலைப் பரிமேலழகரும் பிறரும் தலைவன் கூற்றாக உரைத்திருக்க, இவர் அதைத் தோழி கூற்றாக ஆக்கி, "நும்மால் காதலிக்கப்பட்டாள் தனக்கும் இவ் வருத்தம் ஒக்கும். பெண்டிர்க்கு இப் பெண்மையான மடல் ஏறாததே குறை என்று தலைமகன் ஆற்றாமை நீங்குதற் பொருட்டுத் தோழி கூறியது" என்று இவர் எழுதியிருப்பது சுவையாக உள்ளது.

மணக்குடவர் சில சமயம் தொடர்ந்த சில பாடல்களுக்குக் கருத்தமைதியை முடித்துக் காட்டுகிறார். எடுத்துக் காட்டாக ஒற்றாடல் என்ற அதிகாரத்தைக் குறிப்பிடலாம். "இஃது ஒற்று வேண்டும் என்றது; இவை மூன்றும் ஒற்றிலக்கணம் கூறின; இவை இரண்டும் ஒற்று வேண்டுமிடம் கூறின, இவை இரண்டும் ஒற்றரை ஆளுந் திறன்

கூறின; இது பிறர் அறியாமல் சிறப்புச் செய்ய வேண்டும் என்பது; இது ஒற்றின்மையால் வரும் குற்றம் கூறியது" என்று பத்துப் பாடல்களுக்கும் தொகுப்பு அமைத்திருக்கிருர். சில அதிகாரங்களுக்கே இவ்வாறு சொல்லுகிருர்; எல்லா அதிகாரங்களுக்கும் சொல்லவில்லை. பரிமேலழகர் இந்த இயல்பை நன்கு மனத்துள் வாங்கி, பொருள் அமைதியை ஒவ்வோர் அதிகாரத்திலும் இவ்வாறு அழகாகத் தொகுத்து முடிக்கிருர். இவ்வியல்பை அவர் மணக்குடவரிடம் கற்ருர் என்று கொள்வதில் இழுக்கில்லை. நல்ல தமிழில் மணக்குடவர் எழுதுகிருர்; எனினும் இவர் வடசொல்லை விலக்கவில்லை. இவர் ஆளும் சில சொற்களும் தொடர்களும் பின் வருவன: இராஜபுத்திரர், கன்ம சண்டாளர், கால புருடர், சந்தான நாசம், சந்நியாசம், சுவர்க்கம், சேனுபதி, தியான சமாதி, முத்தி ஸ்தானம், வன்னுச்சிரம தன்மம், வாசனை, வாத மண்டலம். ஓரிடத்தில் இது பராசரர் மதம் என்கிருர்.[1]

எளிமை யொன்றே இவர் உரையின் குறிக்கோள் என்று தோன்றினும், இவர் ஆங்காங்கு தம் காலத்து வழக்காறுகள் சிலவற்றைப் புலப்படுத்திச் செல்வதும் தெரிகிறது. சில பின் வருவன. நெய்யும் தேனும் இனியவாயினும் தம்மில் அளவு ஒக்குமாயின் கொல்லும் (943). (பரிமேலழகரும் இதை அப்படியே எடுத்துத் தருவது குறிப்பிடத்தக்கது.) பலாப் பழம் தின்று பின் சுக்குத் தின்ருல் தன்னுயிர்க்கு வரும் இடையூறு இல்லை (944). மருந்து என்ற அதிகாரத்தில், கற்ருன்–ஆயுள் வேதம் கற்றவன் என்கிருர். தெண்ணீர் அடுபுற்கை என்ற தொடருக்கு, செறிவின்றித் தெண்ணீர் போன்ற கூழ் என்றும், பசை பெருப் புற்கையன்றி வெறும் தெளிநீர்ப் புற்கை என்றும், பின் வந்தோர் உரை எழுதி

1 பரிப்பெருமாள் உரையில்தான் பராசரர் முதலான பலர் மதங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

யிருக்க, இவர் மோரிலும் காடியினும் அடப் பெருது தெளிந்த நீரிலே அட்டபுற்கை என்று உரை எழுதியிருப்பது மிக நன்ருய் இருப்பதோடு, புளிக்கச் செய்வதற்குக் காடிசேர்த்தல் என்ற இக்கால வழக்கை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் மணக்குடவர் கண்டு சொல்வதும் வியப்பாகவே உள்ளது.

புராணக் கதைகள் சிலவற்றையும் சொல்கிருர். அருச்சுனன் தவமறந்து அல்லவை செய்தான்; நீத்தார் வெகுளியால் நகுஷன் பெரும் பாம்பு ஆயினன்; நோற்றலால் மார்க்கண்டேயன் கூற்றத்தைத் தப்பினன்; ஐந்தவித்தா ன்ற்றல் – இவ்வளவின் கண் மிக்க தவம் செய்வாருளராகில் இந்திரன் தன் பதம் இழக்கின்ருஞக நடுங்கும்.

இவருடைய உரை எளிமையாயிருந்த போதிலும் கூட, இதில் அருஞ் சொற்கள் மிகவும் குறைவு; அட்டாலகம் (அட்டாலை மண்டபம்), நெத்தம் (கவருடு பலகை), வீக்கம் தாக்கம் என்பன குறிப்பிடத்தக்கன.

சில சொற்களுக்கும், தொடர்களுக்கும் இவர் கூறும் பொருள் மிக்க சிறப்புடையது. வான் சிறப்பு என்ற அதிகாரத்தில் மழை பெய்யாக்கால் நான்கு வகைப்பட்ட அறங்கள் கெடும் என்று குறிப்பிட்டு, இவை பூசனை, தானம், தவம், ஆசாரம் என்று காட்டுகிருர். இல்லறவியல் அவதாரி கையில் இல்லறப் பகுதியினர் நல் கூர்ந்தார், நல்குரவு நீங்கி ஞர், செல்வர், வள்ளியோர் என்னும் நால்வர்; அன்புடைமை முதலாக ஒழுக்க முடைமை ஈருக நல்கூர்ந்தாரால் செய்யப் படுவன ஏழு, பிறனில் விழையாமை முதலாகத் தீவினையச்சம் ஈருகத் தவிரப் படுவன ஏழு; ஒப்புரவு அறிதல் நல்குரவின் நீங்கினரால் செய்யப்படும்; ஈதல் செல்வரால் செய்யப்படும்; புகழ் வள்ளியோரால் செய்யப்படும் என்பார். துறந்தார் – வருண நாமங்களைத் துறந்தார். ஒருவனைக் கடிந்து சொல்ல

வேண்டுமிடத்தும் இன் சொல்லாலே கடிய வேண்டும் (98), அறிவறிந்து ஆற்றின் அடங்கப் பெறின் (122) என்ற குறளில், அறியப்படுவன — மெய் வாய் கண் மூக்குச் செவி; நிறை என்பது காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம். துறவறம் ஊழினுல் வரும். இறை மாட்சி என்ற அதிகாரத் தில், வேந்தர்க்கு ஒளியாவன நான்கு என்ற குறள் உரையில், பின் வரும் விளக்கம் தருகிறூர் :

"கொடுத்தல் – தளர்ந்த குடிக்கு விதை ஏர் முதலியன கொடுத்தல்; அளித்தல் – அவரிடத்துக் கொள்ளுங் கடமை யைத் தளர்ச்சி பார்த்து விட்டுவைத்துப் பின்பு கோடல்; செங் கோன்மை – கொள்ளும் முறையைக் கொள்ளாமை; குடி யோம்பல் – தளர்ந்த குடிக்கு இறை கழித்தல். இது குடிக்கு அரசன் செய்யுந் திறங் கூறிற்று." காமக்கலன் – தன்னைக் காதலித்து ஏறினரை நடுக் கடலுள் தள்ளும் மரக் கலம் போல. முதுவர் – தவத்தாலும் குலத்தாலும் கல்வி யாலும் பிற யாதாலும் முதிர்ந்தவர் (715). நூல் கற்றல் – மெய் ஆராய்ச்சியாகிய நூலைக் கற்றல், வேதமும் ஆகமமும் கற்றல், உழவும் வாணிகமும் கற்றல், படை வழங்கல் மனு நீதி முதலியன கற்றல் என நான்கு வகைப்படும் (729), உழவும் வாணிகமும் கற்கவேண்டுமென்று அக்காலத்திலேயே இவர் குறிப்பிட்டிருப்பது ஒரு சிறந்த கருத்து. கனியும் கருக்காயும் என்பதற்கு, உணராது நீட்டிக்கின்ற துனியும் உணர மீள்கின்ற புலவியும் இல்லையாயின், காமம் அழுகிய பழம் போலப் புளிக்கும், காய் போலத் துவர்க்கும் ஆதலால் என்பர் (1306).

ஒரு பாவி – நிகரில்லாத பாவி. செல்வம் மிக்க காலத்து நட்புக் கொண்டு அஃது அற்ற காலத்து நீங்குகின்றவர் – கால புருடர். சொல்லேர் உழவர் – அமைச்சர். சிறியார் – சூதர், வேட்டைக்காரர், பெண்டிர் போல்வார்.

திருக்குறளில் பால் தோறும் உள்ள இயல் பாகுபாடு பரிமேலழகர் அமைப்பை ஒட்டியே இன்று பொதுவாக வழங்கப்படுகிறது. ஆனால் மணக்குடவர் அமைப்பு, பொருட்பாலைப் பொறுத்த வரையில் சற்று விரிவாகவே யுள்ளது. இவர் பொருட்பால் எழுபது அதிகாரங்களையும், அரசியல், அமைச்சியல், பொருளியல், நட்பியல், துன்பவியல், குடியியல் என ஆறு இயல்களாகப் பிரித்தார். பரிமேலழகர் இவர் பாகுபாட்டில் முதல் இயலை அப்படியே வைத்து, இறுதியில் உள்ள குடியியலுக்கு ஒழிபியல் என்று பெயரிட்டு இடையில் உள்ள நான்கையும் ஒன்றாய்த் தொகுத்து அங்கவியல் என்று பெயர் இட்டார். எனினும், பின்னர் 79 நட்பு என்ற அதிகாரத்தின் தொடக்கத்தில், 'நட்பினை ஐந்து அதிகாரம் விதி முகத்தானும், பன்னிரண்டு அதிகாரம் எதிர்மறை முகத்தானும், கூறுவான் தொடங்கி' என்று எழுதுகிறார். மணக்குடவர் கூறும் நட்பியல், துன்பவியல் என்பவற்றையே அவர் இவ்வாறு கூறுகிறார் என்பது இங்கு அறியத் தக்கது. மணக்குடவர், 'குடியியலாவது அரசரும், அமைச்சரும் அல்லாத மக்கள் தமது இயல்பு' என்று கூற, பரிமேலழகர் 'அரசியலினும் அங்கவியலினும் அடங்காது ஒழிந்தவற்றது இயல்பு' என்று கூறுகிறார். இருவருக்கும் வேறுபாடு இவ்வளவே.

மணக்குடவருக்குப் பின்னும் பரிமேலழகருக்கு முன்னும் செய்யப்பெற்ற திருவள்ளுவ மாலையானது[1] பொருட்பாலை வேறு விதமாய் அமைக்கிறது. இதன் 26 ஆம் பாடல் பின் வருவது.

**அரசியல் ஐயைந்து, அமைச்சியல் ஈரைந்து,**
**உருவல் அரணிரண்டு, ஒன்றுஒண் கூழ், - இருவியல்**

1 திருவள்ளுவ மாலையைக் குறித்த ஆராய்ச்சி யொன்றை எமது 11 ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு பக்கம் 34-59 இல் காணலாம்.

**திண்படை, நட்புப் பதினேழு, குடிபதின்மூன்று,**
**எண்பொருள் ஏழாம் இவை.**

*இதன்படி பொருட்பால் இயல்கள் ஏழு. அவை அரசியல் 25 அதிகாரம், அமைச்சியல் 10, அறன் 2, பொருளியல் (கூழ்) 1, படை 2, நட்பியல் 17, குடியியல் 13 ஆகும். இங்கு மணக்குடவர் பகுப்பின்படி அரசியலும் – குடியியலும் அப்படியே இருக்க, ஏனைய தலைப்புக்களில் மாற்றம் உண்டு. அவரது பொருளியல் இங்கு அறன், பொருளியல், படை இயல் எனவும் அவரது நட்பியல், துன்பவியல் இரண்டும் சேர்ந்து நட்பியல் என ஒன்றாகவும் அமைக்கப்பட்டிருப்பது தெரியும். மேலும் திருவள்ளுவ மாலை காமத்துப் பாலை மூன்றாகப் பிரித்து ஆண்பால் 7, பெண்பால் 12, இருபால் 6 எனவும் கூறுகிறது.*

*இம் மூன்று நூல்களிலும் காணப்படும் பால் இயல் பாகுபாட்டை ஓர் அட்டவணையாகப் பின்னே தந்திருக்கிறோம்.*

**மணக்குடவரும் பிறரும்**

*மணக்குடவர் குறளாசிரியருக்கு மிக நீண்ட காலம் பிற்பட்டு வாழ்ந்தவர். ஆதலால் குறளில் கூறிய கருத்துக்களை உணர்ந்து பொருள்கொள்வது எளிதன்று. தவிர, உரை மரபைப் புலப்படுத்துவதற்கான நூல்களும் இல்லை. இவரே முதல் உரை எழுதி உரை மரபைத் தோற்றுவிக்கிறார். இவ்வாறு தாமே முதல் முதலாக உரை சொல்லுவதில் உண்டாகும் தயக்கம் இவ் உரையுள் சில இடங்களில் காணப்படும்.*

*மேலும், எளிதாக உரை எழுதிக்கொண்டுபோகும் இயல்பினால், இவர் உரையுள் மேற்கோள் காட்டுதல் என்பது மிகவும் குறைவு. மூல ஆசிரியர் கருத்தைக் காட்ட*

இவர் எண்ணுகின்றரேயன்றி, தம் புலமையையோ, வாதத் திறனையோ காட்ட எண்ணவில்லை. பின் வந்த உரை யாசிரியர்கள், இலக்கியத்திலும் இலக்கணத்திலும், மிகவும் அதிகமான மேற்கோள் பாடல்களைத் தந்திருக்கிறார்கள். முதல் உரையாசிரியராகிய இவருக்கு அந்த நெறி பழக்க மில்லை. அபூர்வமாய் ஒரு நான்மணிக்கடிகை வரியையும் ஒரு நாலடி வரியையும் எடுத்துச் சொல்லுகிறார். அன்றி, 'உப்பொடு பல் காயம் பெய்தடினும் – கைப்பறு பேய்ச் சுரையின் காய்' என்ற நாலடிப் பாடலின் கருத்தை உரை நடையாக எழுதிக்கொண்டுபோகிறார் (802). மேலும், மற்றோரிடத்தில், 'கேடாவது, விட்டில் கிளி நால்வாய் பெரும் பெயல் என்று இவற்றான் வரும் நட்டம்' என்று இவர் எழுதுவது,

**விட்டில் கிளிநால்வாய் வேற்றரசு தன்னரசு**
**நட்டம் பெரும்பெயல்காற் றெட்டு.**

என்ற ஒரு பழைய மேற்கோட் பாடலைக் கொண்டது [1]

இவருக்கு முன்னும் குறள் உரைகள் இருந்தன என்பதை; 'தடிந்தென்பதற்குக் கூறுபடுத்து என்று பொருளுரைப்பாருமுளர்' (16), 'சொற்பொறுக்கும் என்ப தற்குப் புரோகிதர் தன்னிடத்துச் சொல்லும் சொற்களைப் பொறுக்கவல்ல என்பாருமுளர்' (390) என்றும் ஈரிடங்களில் இவர் கூறியவற்றால் அறியலாம். ஆனல் அப்படி உரை யிருந்ததாக எந்த வரலாறும் இல்லை, எந்த உரையும் கிடைக்கவும் இல்லை. எழுதப்பட்ட உரை இல்லாதுபோ யினும், உரை சொல்லும் (கற்பிக்கும்) மரபு இருந்தது போலும்.

1 இப்பாடலைச் சிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியரும், புறப் பொருள் வெண்பாமாலையுரையில் சாமுண்டிதேவ நாயகரும் எடுத்துத் தருகின்றனர். மணக்குடவர் உரைப் பதிப்புக்களில் பெரும்புயல் என்று காணப்படுவது, பெரும் பெயல் என்று திருத்திக்கொள்ளுதற்குரியது.

# திருக்குறள் - பால் இயல் அட்டவணை

| எண் | மணக்குடவர், பரிப்பெருமாள் இயல் | அதிகாரம் | எண் | திருவள்ளுவமாலை, காலிங்கர் இயல் | அதிகாரம் | எண் | பரிமேலழகர் இயல் | அதிகாரம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | அறத்துப்பால் 38 | | | | |
| 1 | பாயிரம் | 4 | 1 | பாயிரம் | 4 | 1 | பாயிரம் | 4 |
| 2 | இல்லறவியல் | 20 | 2 | இல்லறவியல் | 20 | 2 | இல்லறவியல் | 20 |
| 3 | துறவறவியல் | 13 | 3 | துறவறவியல் | 13 | 3 | துறவறவியல் | 13 |
| 4 | ஊழியல் | 1 | 4 | ஊழியல் | 1 | 4 | ஊழியல் | 1 |
| | | 38 | | | 38 | | | 38 |
| | | | | பொருட்பால் 70 | | | | |
| 5 | அரசியல் | 25 | 5 | அரசியல் | 25 | 5 | அரசியல் | 25 |
| 6 | அமைச்சியல் | 10 } | 6 | { அமைச்சியல் | 10 } | | | |
| 7 | பொருளியல் | 5 } | 7 | { அரண் | } | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | கூழ் (பொருள்) | 1 | 6 | அங்கவியல் | 32 |
| | | | | படை | 2 | | | |
| 8 | நட்பியல் | 5 | 10 | நட்பியல் | 17 | | | |
| 9 | துன்பவியல் | 12 | | | | | | |
| 10 | குடியியல் | 13 | 11 | குடியியல் | 13 | 7 | ஒழிபியல் | 13 |
| | | 70 | | | 70 | | | 70 |
| | | | | காமத்துப்பால் | 25 | | | |
| 11 | களவியல் | 7 | 12 | ஆண்பால் | 7 | 8 | களவியல் | 7 |
| 12 | கற்பியல் | 18 | 13 | பெண்பால் | 12 | 9 | கற்பியல் | 18 |
| | | | 14 | இருபால் | 6 | | | |
| | | 25 | | | 25 | | | 25 |
| | | 133 | | | 133 | | | 133 |

மணக்குடவர் திருக்குறட் பாடல்களை மிகவும் அரும் பாடுபட்டுப் பாகுபடுத்தி, மனத்துள் தெளிவு பண்ணிக் கொண்டு பின்னர்த் தொடர்புறுத்தி உரை எழுதியிருக்கிறார் என்றே நாம் கருதவேண்டும். இவருக்கு முன்னர் இயல் அதிகாரப் பாகுபாடுகள் இருந்தனவா, இந்த முறையில் இருந்தனவா என்பது பெரிதும் ஐயத்துக்கு இடமானது. திருவள்ளுவரே இவ்வாறு பாகுபடுத்தினார் என்று துணிந்து சொல்ல இயலவில்லை; இதற்குத் திருவள்ளுவமாலையை நம்பியும் பயனில்லை; அது பிற்கால நூல் (11ஆம் நூற்றாண்டு) என்று முன்னர்க் குறிப்பிட்டோம். இந்த நிலையில் ஆசிரியரின் உள்ளக் கருத்தை விளக்கிக்கொள்வ தற்கு இவர் செய்துள்ள முயற்சி, சொற்கள் கிடந்தபடியே இவர் எழுதியிருக்கிற எளிய உரையை ஒருமுறை பயின்றாலே நன்கு விளங்கும். மூலத்தின் கருத்தை முதன்முதலாகச் சொல்ல வருபவருக்குத்தான் கஷ்டமேயன்றி, பின்னால் அதை மேலும் விளக்குவதோ, அன்றி மறுப்பதோ, அத்துணைக் கஷ்டமாகாது. பரிமேலழகர் இவருக்கு மூன்று நூற்றாண்டுகள் பின்வந்து உரை எழுதுகிறார். எவ்வளவுதான் அவர் கற்றவராயிருந்தாலும், மூலத்தைமட்டும் தாமாகக் கற்றுக் கருத்தையுணர்ந்து தெளிவுறுதற்குப் பெரிதும் சிரமப் பட்டிருக்கவேண்டும். மணக்குடவர் உரை எழுதிவைத்த மையால், அவருக்கு இந்தச் சிரமம் இல்லாமற்போயிற்று. மூலத்தோடுகூட மணக்குடவர் உரையையும் அவர் பயின்ற காரணத்தால், கருத்தையும் தொடர்பையும் உணர்வது அவருக்கு எளிதாயிற்று. அதுபற்றியேதான் அவருக்கு வேறு கருத்துக்களும் தோன்றியுள்ளன. இது இயல்பே.

இனி, பரிப்பெருமாள் மணக்குடவர் உரையைப் புதுப்பித்துத் தமது உரையை அமைத்துக் கொண்டார் என்று குறிப்பிட்டோம். திருப்பனந்தாள் காசி மடத்து உரைக் கொத்துப் பதிப்பைப் பார்த்தால் இது நன்கு

விளங்கும். ஒரு சுவையான பகுதி குறிப்பிடத்தக்கது. காமத்துப்பாலில் தகையணங்குறுத்தல் என்ற முதல் அதிகாரத்தின் அவதாரிகையில் மணக்குடவர் கூறியுள்ள வாக்கியங்களைப் பரிப்பெருமாள் அப்படியே எடுத்துத் தமது காமத்துப்பால் அவதாரிகையாகப் பெய்து கொண்டார். அப்பகுதி மிக்க சுவையுடையது: "ஒருவனுக்கு இன்பம் கலத்தற்கிடம் கன்னியரும் கணிகையரும் பிறர் தாரமுமென மூவகையல்லதில்லை; அவற்றுள், பிறர் மனைக் கூட்டம் பாவம் தரும் என்று அறத்துப் பாலில் கூறிக் கணிகையர் கூட்டம் பொருட் கேடு தரும் என்று பொருட்பாலில் கூறினர். ஆதலின், அறனும் பொருளும் இன்பமும் வழுவாமல் வருவது கன்னியர் கூட்டம் என்றார்". எனவே கன்னியர் கூட்டமே காமத்துப் பாலில் பேசப்படுவது.

மணக்குடவருக்குப் பின்னர் பரிப்பெருமாளும் பின் காலிங்கரும் பின் பரிமேலழகரும் குறளுக்கு உரை செய்தார்கள். இவர்களுள், பரிப்பெருமாள் உரை மணக் குடவர் உரையே ஆதலின், அதுபற்றித் தனியே பேச வேண்டியதில்லை. பரிமேலழகர் உரை எழுதும்போது, ஏனைய இருவர் உரைகளையும் பல இடங்களில் மறுத் தெழுதுகிறார். ஆயினும், அவர் முதலில் மணக்குடவர் உரையை நன்கு பயின்று பின்னரே தம் உரையை எழுதினர் என்பது, இரண்டு உரைகளையும் வைத்து ஒப்பு நோக்கு மிடத்து நன்கு விளங்கும். பொருள் கருவி காலம் வினை இடன் ஆகிய ஐந்தையும் மயக்கந் தீர எண்ணிப் பின் வினை தொடங்குக என்ற இடத்தில் (671) மணக்குடவர் "ஒவ் வொன்றும் இரண்டிரண்டு வகைப்படும்: பொருளாவது கெடும் பொருளும் பெறும் பொருளும், கருவியாவது தனக்கு உள்ள படையும் மாற்றரசர்க்கு உள்ள படையும், காலமாவது தனக்காம் காலமும் மாற்றரசர்க்காம் காலமும், வினையாவது தான் செய்யும் வினையும் பகைவர் செய்யும்

வினையும், இடமாவது தனக்காம் இடமும் பகைவர்க்காம் இடமும் ஆம்" என்று எழுதியிருப்பதை அப்படியே பெயர்த்தெழுதிக் கொண்டிருக்கிறார். நாடு என்ற அதிகாரத்தில் இரு புனல் – கீழ் நீர் மேல் நீர் எனப்பட்ட நீர் 731; அணி நிழற் காடு – செறிவுடைய காடு 742; நகை வகையர் – காமுகர் வேழம்பர் முதலாயினர் 815; தொடிப் புழுதி கஃசா உணக்கில் 1032; புனை பூணும் – சிறைப்படும், தளை பூணும் 836; ஊடியவரை உணராமை – காமக் கிழத்தியரை ஊடல் தீராமை தீது, ஆண்டுப் போம் (1307) என்பன வாதிய இடங்களில் பரிமேலழகர் அப்படியே மணக்குடவர் சொற்களையும் கருத்தையும் எடுத்தெழுதிக்கொண்டிருக்கிறார். இவை போல்வன அதிகமான இடங்கள். மணக்குடவர் கூறும் கருத்து பரிமேலழகருக்கு மேலும் பல கருத்துக்களைத் தோற்றுவிக்கிறது. செவிக் குணவு இல்லாத போழ்து என்ற குறள் உரையில், பெருக உண்ணின் கேள்வியை விரும்பாது காம நுகர்ச்சியை விரும்பும் என்று இவர் கூற, பரிமேலழகர் 'பெரிதாயவழித் தேடல் துன்பமேயன்றி, நோயும் காமமும் பெருகுதலால்' என்று எழுதுகிறார்.

வேலாழ் முகத்த களிறு (493), இகழ்ச்சியிற் கெட்டாரை எண்ணுக (532), கோலது கோடான் எனின் (548) – போன்ற இடங்களில் மணக்குடவர் பாடத்தைத் தந்து, சிலவற்றைப் பரிமேலழகர் மறுத்தெழுதுவதையும் காணலாம். மணக்குடவர் உரையை முதன் முதலில் அச்சிட்ட பொன்னுசாமி நாட்டார், 32 பாடல்களுக்கு உரை காணப் படவில்லை என்று எழுதியிருக்கிறார். 'நாண் வேலி கொள்ளாது மன்னோ' என்பது அவற்றுள் ஒன்று. இதற்கு உரை எழுதுமிடத்துப் பரிமேலழகர், 'நாண் ஆகிய வேலியைப் பெற்றல்லது ஞாலம் பெற விரும்பார் என்று உரைப்பாரும் உளர்' என்று எழுதியிருக்கிறார். இக்கருத்து அப்படியே பரிப்பெருமாள் உரையில் வந்துள்ளது. மணக்

குடவர் உரையிலிருந்தே அவர் இதை எடுத்து வைத்தார் ஆதலால், பரிமேலழகர் காட்டும் இவ்வாக்கியம் மணக்குடவர் உரை என்று கொள்ளத்தக்கது.

## பதிப்பு

முதலில் வ. உ. சிதம்பரம் பிள்ளை அறத்துப்பால் மணக் குடவருரையுடன் பதிப்பித்தார். குறள் முழுமையும் மணக் குடவருரையுடன், கா. பொன்னுசாமி நாட்டார் பதிப்பு 1925. தருமபுரம் திருக்குறள் உரைவளப் பதிப்பு, தண்டபாணி தேசிகர் 1952. திருப்பனந்தாள் காசி மடத்துப் பதிப்பு; திருக்குறள் உரைக் கொத்து 1957–59.

அத்தியாயம் 4

# இலக்கணம்-1: நிகண்டு

## முன்னுரை

தமிழிலக்கிய வரலாற்று மரபில் தமிழில் முதல் இலக்கணம் அகத்தியர் செய்தார் என்று சொல்லப்படும். ஆனால் அவர் செய்த நூலாகிய அகத்தியம் என்பது கடைச் சங்க காலத்துக்கு முன்னமேயே மறைந்து போயிற்று. கடைச் சங்க காலந் தொடங்கி இன்று வரை கிடைத்து, பல உரைகள் செய்யப்பட்டு ஆட்சியிலும் உள்ள இலக்கண நூல் தொல்காப்பியமாகும். இதன் பகுதிகள் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றும். ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து தொல்காப்பியப் பொருள் அதிகாரப் பகுதியைப் பல பிரிவு களிலும் விரிவாக்கும் முயற்சி வளர்ந்து வந்திருக்கிறது. யாப்பும் அணியும் சேர்த்துத் தமிழிலக்கணம், ஐந்திலக்கணம் என வழங்கலாயிற்று.[1]

இவ் வைந்திலக்கணப் பாகுபாட்டுள் அடங்காமல், வேறு தனியான சில பிரிவுகள் கிளைத்து வளர்ந்தன. அவை பாட்டியல், நிகண்டு, உவமானம் என்ற பிரிவுகளாகும். இம் மூன்றினுள் பாட்டியல் பற்றிய விளக்கத்தை அடுத்த அதிகாரத்தில் சுருங்கக் காணலாம்.[2] நிகண்டு பற்றிய குறிப்பை, பின்னே 170ஆம் பக்கத்தில் சுருங்கக் காணலாம்.

---

1 ஐந்திலக்கணம் எவ்வாறு வளர்ந்தது என்பதைக் காட்டும் விரிவான ஐந்திலக்கண நூல் அட்டவணையை எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு, பக்கம் 106 - 107இல் காணலாம்.

2 இதன் விளக்கத்தை மிகவும் விரிவாக எமது 9ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றிலும், சுருக்கமாக 12, 13ஆம் நூற்றாண்டு வரலாறுகளிலும் காணலாம்.

தொல்காப்பியத்தை வைத்தே எல்லா இலக்கண வளர்ச்சியையும் கணிப்பது மரபாதலால், நாமும் அந்த வழியிலே செல்லலாம். நிகண்டுக்குத் தோற்றுவாய், தொல் காப்பியச் சொல்லதிகாரத்தின் உரியியலாகும். இதன் கண் உள்ள 100 நூற்பாக்களும் நிகண்டின் பொருளையே கூறுவன. சிறுபகுதி, இதற்கு முந்திய இடையியலிலும் இன்னும் அதிக மான பகுதி பொருளதிகார மரபியலிலும் காணப்படும். இவ்விடங்களில், தொல்காப்பியர் தாம் விளக்க வேண்டும் என்று கருதிய சொற்களை மட்டுமே விளக்கி யுரைத்தார்; எல்லாச் சொற்களையும் சொல்ல அவர் எண்ணவில்லை.

இவர் உரியியலை, 'உரிச்சொற் கிளவி விரிக்கும் காலை' என்று தொடங்குகிறார். பின்னால் 16ஆம் நூற்றாண்டு வரை எழுந்த எல்லா நிகண்டுகளும் உரிச்சொல் என்றே சொல்லப் பட்டன; நிகண்டு என்ற ஆட்சி 16ஆம் நூற்றாண்டில்தான் வந்தது. 'கூட்டமெனினும் நிகண்டெனினும் ஒக்கும்' என்பது சங்கர நமசிவாயர் நன்னூலில் (சூத்திரம் 460 உரை) எழுதி யிருக்கும் குறிப்பு; 'இவ்விலக்கணம் அறிவதற்கு முன் நிகண்டறிக என்றும், அறியும் முறை அதுவாகலான்' என்றும் அவர் எழுதுகிறார். 'இலக்கணம் கூறும் நூலுள் நிகண்டினையும் உடன் கூறாது அதனை வேறொரு நூலாகக் கூறுதல் தமிழுள்ளேயன்றி ஆரியம் முதலியவற்றுள்ளும் காண்க'.

தமிழில் முதல் நிகண்டு திவாகரரால் செய்யப்பட்டது. அதைத் தழுவி, பெரிதும் விரித்து அவரையடுத்து வாழ்ந்த பிங்கலர் என்பவர் தம் பெயரால் பிங்கல நிகண்டு செய்தார். இறையனார் களவியலுரை (10ஆம் நூற்றாண்டு) ஒரு நிகண்டைக்குறிப்பிடுகிறது. யாப்பருங்கல விருத்தியுரைகாரர் ஒரு நிகண்டைக் குறிப்பிடுகிறார்; திவாகரத்துக்கு முந்திய நிகண்டு எதுவும் கிடைக்காமையால், மேற்காட்டிய இரு

குறிப்புக்களும் சுட்டும் நிகண்டு யாது, காலம் என்ன என்று எதுவும் திட்டமாய்ச் சொல்லமுடியவில்லை. எனினும், நிகண்டு செய்யும் முயற்சி இருந்து, முன்னமேயே நூல்கள் செய்யப்பெற்றன என்று அறிவதற்கு இவை சான்ருகும்.

சிறு குழந்தைகள் கணக்கு என்று உணர்வதற்கான மன வளர்ச்சி பெறுவதற்கு முன்னமேயே, வாய்பாடு – எண் சுவடி முழுமையும் நெட்டுருச் செய்யும் பழக்கம் நம் தமிழ் நாட்டில் இந்த இருபதாம் நூற்ருண்டின் முற்பாதி வரையில் இருந்தது.[1] அது போலவே, இந்த நூற்ருண்டின் முதல் இருபது ஆண்டுகள் வரை திண்ணைப் பள்ளிக் கூடங்களில் சிறு பிள்ளைகள் – ஏழு எட்டுக்கு உட்பட்ட வயதில்–நிகண்டு நெட்டுருச் செய்து வந்தார்கள். சங்கர நமசிவாயர் கூறுவதன் கருத்தும் இதுவே. எல்லோரும் மனப்பாடம் செய்தது பதிஞெராம் நிகண்டு எனப்படும். இது சூடாமணி நிகண்டின் பதிஞெராம் தொகுதியாகும். 'பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்' என்று சுமார் 55 ஆண்டுகளுக்கு முன் நெட்டுருச் செய்தது இன்றும் எமக்கு நினைவில் உள்ளது.

நிகண்டு பயிலுதலும் ஆராய்தலும் மிகவும் சுவை யுடையது. வாழ்க்கையில் இளம் பருவத்தைக் கடந்தவர்கள் பெற்றிருக்கும் அனுபவம் அதிகம். இவ்வனுபவத்தோடு சொல் ஆராய்ச்சியில் இறங்கும்போது பெறுகின்ற அனுபவம் மிக்க சுவையுடையது. சொற்கள், அவற்றின் வடிவ மாறுதல், பொருள், பொருளில் ஏற்படும் வளர்ச்சி, அவை உணர்த்தும் வாழ்க்கை முறைகள் ஆகியவை எந்தப் பருவத்தில்தான் மனத்துக்கு உவப்பு அளிக்கமாட்டா?

1 அமெரிக்க நாகரிகத் தாக்குதலின் முன் தமிழ்நாடு தலை கவிழ்ந்து இந்த நல்ல பழக்கத்தைக் கைவிட்டு விட்டது.

யாப்பருங்கல விருத்தியுரைகாரர், காலத்தால் பிங்கலத்துக்குப் பிற்பட்டவராயினும், சில கருத்துக்கள் சொல்வது கவனிக்கத்தக்கது (ப. 570): 'ஆடு எருது விடை ஏறு மோத்தை சேவல் ஒருத்தல் கலை களிறு ஏற்றை கடுவன் கூரன் பகடு என இவை ஆண்பெயர், மகடு ஆ பிடி குமரி கன்னி பிணவு முடுவல் என்றிவை பெண்பாற் பெயர்; குழவி மகவு மறி குருளை என்று இன்னவை இளமைக்கு எய்திய பெயர். இடைச் சொல்லும் உரிச் சொல்லும் தொல்காப்பியம் தக்காணியம் அவிநயம் நல்லாறன் மொழிவரி முதலியவற்றுட் காண்க.' இவற்றுட் சில கருத்துக்களை இக் கட்டுரையில் வேறிடத்திலும் கூறியிருக்கிறோம். அவிநயம் தக்காணியம் நல்லாறனார் நூலாகிய மொழிவரி என்பன, பிங்கலத்துக்கு முந்திய நூல்கள். அவற்றுள்ளும், தொல்காப்பியம்போல, உரிச்சொற்களும், மரபுச்சொற்களும், நிகண்டின் பொருளமைதிக்கு ஏற்ப இருந்தன என்று அறிகிறோம்.

## நிகண்டு என்ற பெயர்

15ஆம் நூற்றூண்டு முடிய நிகண்டு என்ற சொல் தமிழில் இத்தகைய பொருளில் வழக்கத்துக்கு வரவில்லை. முதலாவதாக, 16ஆம் நூற்றூண்டில்தான் மண்டலபுருடர், தம் நூலை, 'நிகண்டு சூடாமணி என ஒன்று சொல்வன்' என்று கூறுகிறார். இவருக்கு முன் நிகண்டு நூல்கள், உரிச்சொல் என்ற பெயராலேயே வழங்கின. பிங்கலச் சிறப்புப் பாயிரம், 'பிங்கல முனிவன் எனத் தன் பெயர் நிறீஇ – உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை' என்று கூறும். 'பிங்கலம் முதலா – நல்லோர் உரிச்சொலுள் நயந்தனர்' என்று நன்னூல் குறிப்பிடும்; முன்னிருந்த திவாகரத்தைவிட்டுப் பிங்கலத்தை இவர் குறிப்பிடுதல், இந் நூலிடம் இவர் கொண்டிருந்த நன்மதிப்பைப் புலப்படுத்தும்.

என்றே கருதவேண்டும்; திவாகரத்தையும் இவர் குறிப்பிட்டிருக்கிறார். உரிச்சொல் நிகண்டு, காங்கேயன் உரிச்சொல் எனப் பெறுகிறது. கயாதரம், 'கயாதரன் உரிச்சொற் பனுவல்' எனப்பெறுகிறது. வேதத்தின் பகுதிக்குச் சொற்பொருள் உணர்த்தும் நூல் நிகண்டு எனப் பட்டது; சிறப்பாக, நிருத்தத்துக்கு யாஸ்கர் என்பவர் செய்த அகராதிக்கு இப் பெயர் வழங்கிற்று.

நிகண்டு என்ற சொல்லை, இடுகுறியாற்பெயர் பெற்ற நூலுக்கு உதாரணமாக இறையனார் களவியலுரை எடுத்துக் காட்டுகிறது; ஆனால் பொருளைக் கூறவில்லை. திவாகரம், பிங்கலம் இரண்டும் அல்லாமல் வேறுமோர் நிகண்டு இருந்ததென்று, அவ்வுரையாலும் யாப்பருங்கல விருத்தியுரையாலும் அறிகிறோம். இவ்விருத்தியுரைகாரர் நேர் என்ற சொல்லுக்குப் பதினொரு பொருள்களைத் தருகிறார்: "நேர் என்பது மாறாதற் கண்ணும், ஒத்தற் கண்ணும், தனிமைக் கண்ணும், மிகுதிக் கண்ணும், நுட்பத்தின் கண்ணும், சமனாதற் கண்ணும், உடம்படுதற் கண்ணும், பாதிக் கண்ணும், தலைப்பாட்டின் கண்ணும், நிலைப்பாட்டின் கண்ணும், கொடைக் கண்ணும் நிகழும்" என்றெழுதி, பதினொன்றுக்கும் உதாரணம் தருகிறார்.[1] இவற்றைப் பார்க்கும்போது, இவர் இக் கருத்தை ஒரு நிகண்டு நூலிலிருந்து எடுத்தார் என்று கருதத் தோன்றுகிறது. அந் நிகண்டு இறையனார் களவியலுரை கூறும் நிகண்டேயாகலாம். ஆனால் அந் நிகண்டு இக்காலத்து இல்லை.

எனினும், சில நூற்றாண்டுகள் கழித்து, நிகண்டு என்ற சொல் இப்பொருளில் தமிழில் வழங்கி வரப்பட்டது என்றும் அறியலாம். சிவஞான சித்தியார் (13 நூ.) பரபக்கத்துக்கு

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு பக்கம் 171—3, 235 பார்க்க.

உரை செய்த ஞானப்பிரகாசர் (16 நூ.) நிகண்டைக் குறிப்பிடும் ஒரு மேற்கோள் பாடலைத் தருகிறார் (பாடல் 185 உரை):

**கணிதம் நிருத்தம் வியாகர்ணம் சந்தம்**
**கணநிகண்டு கற்பம்சங் கம்.**

இது வடமொழி நிகண்டாகும். (பரமத திமிரபானு என்ற நூலிலிருந்து பல குறட்பாக்களை அவர் மேற்கோளாய்த் தருகிறார். இப்பாடலும் அதற்குரியதாய் இருக்கலாம். 16 ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்த மறைஞான சம்பந்தரென்பார் செய்த அந்நூல் இன்று கிடைக்கவில்லை.)

"கூட்டமெனினும் நிகண்டெனினும் ஒக்கும். இலக்கணம் கூறும் நூலுள், நிகண்டினையும் உடன் கூறுது, அதனை வேறொரு நூலாகக் கூறுதல், தமிழுள்ளே யன்றி ஆரிய முதலியவற்றுள்ளும் காண்க" (சங்கர நமசிவாயர் நன்னூல் விருத்தியுரை சூ. 460). இங்கு, கூட்டமாவது சொற்கள், பொருள்களின் கூட்டம்.

## நிகண்டின் பொருட் பாகுபாடு

நிகண்டின் நூற் பாகுபாட்டையும், அதிலுள்ள மாறுபாடுகளையும் ஆராய்வது மிக்க சுவை பொருந்திய பயனுடைய ஓர் ஆராய்ச்சி. இது கருத்து வளர்ச்சியை மொழி மூலம் நன்குணரச் செய்யும் ஒரு சிறந்த முயற்சியுமாகும். தமிழ் கற்றவர்கள் இந்த ஆராய்ச்சியில் இறங்குவது மிகவும் அருமை. இலக்கிய வரலாற்றைக் கூறும் இந்த நூலில், சொல் பொருள் வளர்ச்சியை வளர்ச்சியை ஆராயும் வேலையில் அதிகம் தலைப்பட முடியாது. எனினும், இந் நிகண்டை நாம் ஆராயும்போது, முன்னும் பின்னும் உள்ள இரண்டொரு நூல்களையேனும் சிறிது நோக்கியே ஆகவேண்டும். இவ்வாறு நோக்கும்போது, திவாகர

நிகண்டு எழுதப்பட்ட காலமாகிய 9ஆம் நூற்றுண்டு முதல் 16ஆம் நூற்றுண்டுவரையிலுள்ள நிகண்டுகளைச் சுருங்கிய அளவில் இங்குஒப்பு நோக்கிப் பார்க்கலாம். (விரிவான அட்டவணை இவ்வத்தியாய முடிவில் உள்ளது.) ஆருவதாகிய அகராதி நிகண்டு, முழுமையும் அகராதி முறையில் அமைந்தது. ஆகவே, அதில் நூற் பாகுபாடு இல்லை; அதை நீக்கி ஏனைய ஐந்தைமட்டும் இங்குக் கருதுகிறோம்.

## நிகண்டுகளின் வளர்ச்சி

| எண் | நிகண்டு | ஆசிரியர் | யாப்பு | நூற்றாண்டு |
|---|---|---|---|---|
| 1 | திவாகரம் | திவாகரர் | நூற்பா | 9 |
| 2 | பிங்கலம் | பிங்கல முனிவர் | நூற்பா | 10 |
| 3 | உரிச்சொல் | காங்கேயர் | வெண்பா | 14 |
| 4 | கயாதரம் | கயாதரர் | கட்டளைக் கலித்துறை | 15 |
| 5 | சூடாமணி நிகண்டு | மண்டலபுருடர் | விருத்தம் | 16 |
| 6 | அகராதி நிகண்டு | ரேவணசித்தர் | நூற்பா | 16 |

நூற்பகுதிகளுக்குப் பெயர் இந் நூல்களில் வெவ்வேருய் வழங்கும். திவாகரம், உரிச்சொல், சூடாமணி மூன்றும் பெயர்த் தொகுதி; பிங்கலம்-வகை; கயாதரம்-பெயரியல்.

இனி, நூற் பிரிவுகளின் அமைப்பைப் பார்க்கும்போது பொதுவாக, பின் வந்த உரிச்சொல் சூடாமணி இரண்டும் முழுமையும் திவாகரத்தை அடியொற்றியே அமைந்துள்ளன. கயாதரத்தில் ஒரு மாறுதல்மட்டும் – ஓர் இயல் முன்பின்னாக உள்ளது; பொருள் அமைப்பு ஒன்றே; மற்ற மூன்றிலும் ஐந்தாம் பகுதியாகவுள்ள இடப் பெயர்த் தொகுதி இங்கு இரண்டாம் தொகுதியாகவுள்ளது; வேறு மாறுதல் இல்லை. ஆனால் பிங்கலம் முழுமையும் வேறாகவுள்ளது.

பொதுவாக, பத்துத் தொகுதிகளே நிகண்டின் பொருளாகும். இறுதியில் மேலும் இரு தொகுதிகள் உள்ளன. இவை முறையே ஒரு சொற் பல் பொருட் பெயர்த் தொகுதி என்றும், பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி என்றும் சொல்லப்பெறுகின்றன. ஒரு சொல் பல்பொருள் என்பது தான் இன்றைய அகராதி; அதாவது ஒரு சொல்லுக்குரிய பலவகைப் பொருளையும் ஒரே இடத்தில் தொகுத்துக் கூறுவது. இறுதியான பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி என்பது, பிற்காலத்தில் தொகையகராதி என வழங்கப்பெறுகிறது. அதாவது, ஒன்று இரண்டு மூன்று நான்கு ... பத்து ... இருபது என்ற முறையில் என்னென்ன பொருள்கள் எண்ணப்பட்டுக் கணக்கிடப்படுகின்றனவோ அவற்றை உரிய தலைப்பில் அவ்வெண்ணுக்கு நேரே வரிசைப்படுத்திச் சொல்வது. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் எழுந்த பொருள் தொகை நிகண்டு என்பது (சுப்பிரமணிய பாரதி என்பவர் செய்தது), இப் பன்னிரண்டாம் தொகுதிப் பொருளைச் சொல்வதற்கென்றே வந்தது. திவாகரம் முதலான மூன்றிலும் இத் தொகுதி பன்னிரண்டாவதாகவே உள்ளது; கயாதரத்தில் இத் தொகுதியில்லை.

சுமார் 50 ஆண்டுகளுக்குமுன், தமிழ் கற்ற இளம் பிள்ளைகள், வாய்பாடு ஆத்திசூடி மனப்பாடம் செய்தது போல, நிகண்டையும் மனப்பாடம் செய்தார்கள். நிகண்டு என்ருல், 'பதினொராவது நிகண்டு' என்றே சொல்வார்கள்; அதாவது இது சூடாமணி நிகண்டின் 11ஆம் பகுதி என்பது பொருள். இப்பகுதிமட்டும் 310 விருத்தங்களுடையது. இங்கு 'ககரமாதி னகர வீறெதுகையாக' மண்டல புருடர் சொற்பொருள்களைத் தொகுத்துச் சொல்லுகிறுர்.

ஆங்கிலத்தில் இரண்டு சொற்கள் வழங்கும்: ஒன்று **டிக்ஷனரி,** மற்றது **திஸாரஸ்.** டிக்ஷனரி என்பது அகராதி; திவாகரம் முதலான நிகண்டுகளின் பதினொராம் பகுதி என்று முன் விளக்கியது இந்த அகராதிப் பகுதியொன்றுமேயாகும். மற்றது, ஒத்த கருத்துடைய சொற்களைச் சேர்த்து ஓரிடத்தில் கொடுப்பதாகும். ஆங்கில மொழியில் ரோஜட் என்பவர் 19ஆம் நூற்றுண்டில் முதல் முதலாக இப்படி ஒரு தொகுதி செய்து அதற்குத் திஸாரஸ் என்று பெயர் சூட்டி, வெளியிட்டார். இது உடனே எங்கும் பிரசித்தமாகி எல்லோராலும் பயன்படுத்தப்பட்டது. இது அகராதி யன்று; பொதுவாக நிகண்டின் முதல் பத்துத் தொகுதிகளும் இந்தத் திஸாரஸ் பகுதியேயாகும். தமிழின் சிறப்பு, இந்தத் திஸாரஸ், ஒன்பதாம் நூற்றுண்டிலேயே செய்யுள் வடிவத்தில் திவாகரரால் செய்யப்பெற்றதாகும். அதைத் தழுவிப் பின்னர் இருபதாம் நூற்றுண்டுவரை, சுமார் இருபது நிகண்டுகள் எழுந்துள்ளன.

## நிகண்டின் யாப்பு

நிகண்டு எழுதுவதற்கு ஆசிரியம் வெண்பா கலித்துறை விருத்தம் ஆகிய யாப்புக்கள் முறையாகப் பயன்பட்டன என்பதை நிகண்டு அட்டவணையிலிருந்து நன்கு அறியலாம். ஏன் பின்வந்த ஆசிரியர்கள் திவாகரர் செய்த ஆசிரியத்தை விட்டு யாப்பு வேறாக மாற்றிக்கொண்டார்கள் என்பது ஒரு சுவையான கேள்வி. இதற்குப் பொருத்தமான பல விடைகள் உள்ளன. எளிதாகச் சொல்லத்தக்கது, நன்கு மனப்பாடம் செய்தல் முடியும் என்பது. ஆசிரியப்பா மனப்பாடத்திற்கு எளிதாகாது; ஆனால் விருத்தப்பா, முறையான எதுகை மோனையைக் கொண்டது; திட்டமான சீர்வரையறை உடையது; இசையோடு பொருந்தியது. இரண்டையும் ஒருமுறை படித்தாலே போதும்; இது நன்கு விளங்கும். மற்றொன்று, மாறுதல் உலகத்து இயற்கை. இலக்கியம் தோன்றிய தொடக்க காலத்தில் இருந்த ஆசிரியப் பாவானது காலஞ் செல்லச் செல்ல, வேறு வேறு யாப்பாக மாறிக் கொண்டு வந்தது. நிகண்டு நூலும் மாறிற்று. இது காலத்தின் போக்கு. சொற்செட்டும் செறிவும் உள்ள பழைய நடை மாறி, ஓட்டமும் எளிமையும் நெகிழ்ச்சியும் கொண்ட புதிய தமிழ் வளராலாயிற்று. இதுவே மண்டல புருடர் விருத்தப்பாவைக் கைக் கொண்டதற்குக் காரணம்.

மற்றும் ஒரு காரணம் சொல்லத் தக்கது. நிகண்டு செய்தார் அடிப்படையில் முன்னிருந்த நிகண்டுகளின் சொல் தொகுதிகளைப் பெயர்த்தெழுதிப் பின்னர் புதியவற்றைச் சேர்த்துக் கொண்டார்கள். அவ்வாறு சேர்த்த போது பழைய யாப்பையே பயன் படுத்தினால் பண்டைய பாடலை எழுதியதாகத் தோன்றுமே யன்றி, ஆசிரியர் புதிதாகச் செய்ததாகத் தெரியாது; ஆகவே யாப்பில் புதுமைக்காக மட்டுமின்றி, கருத்தில் புதுமையையும் காட்டுவதற்காகப்

*பின் வந்த ஆசிரியர் வேறு யாப்பில் பாடி யிருக்கிறார்கள். ஓர் உதாரணத்தால் இது நன்கு விளங்கும். உரிச்சொல் நிகண்டு (14 நூ.) பல் பொருட்கு ஒரு பெயர்த்தொகுதி தொடங்கும் போது (12ஆம் தொகுதி), பின் வருமாறு கூறுகிறார்.*

கூறியதே கூறினுங் குற்றமிலை நற்பொருள்
வேறுபெறி னென்றே விதித்தலால் – தேறுரைகொள்
ஏகமே வீடு மறுமையோ டிம்மையென்று
ஆகும் இருமை அறி.

*இதே கருத்தை 16 ஆம் நூற்றாண்டில் மண்டல புருடர் சொல்லும் போது விருத்த யாப்பில் சொல்லுகிறார்.*

கூறிய கூறினுலுங் குற்றமொன் றிலைஅ ருத்தம்
வேறுள தாயி னென்று விதித்தலின் விரித்து முன்னம்
ஊறி லாச் சிறப்புவர்க்கம் உரைத்திவட் பொதுவர்க் கத்தில்
ஏறிய வூழுஞ் சொல்வாம் ஏகமே வீடு பேறு.

*யாப்பு மாறுவதிலேயே ஒரு சுவை இருப்பதனால் ஒவ்வோர் ஆசிரியரும் யாப்பை மாற்றிக் கொண்டார்கள்; அம்மாறுதல் ஆசிரியம், வெண்பா, கலித்துறை, விருத்தம் என்ற முறையில் காலத்தில் இடம் பெற்றது.*

*இனி, பத்தாம் நூற்றாண்டுக்குரியது என்று யாம் கருதுகின்ற பிங்கல நிகண்டை ஆராய்வோம்.*

## பிங்கல நிகண்டு

### பிங்கலர்

*பிங்கல நிகண்டு செய்தார் பிங்கல முனிவர் என்பது வரலாறு. தமிழிலக்கிய வரலாற்றில் எத்துணையோ*

ஆசிரியர் பற்றிய எச் செய்தியும் விளங்கத் தெரியாதது போல, இவர் வரலாறும் ஒன்றும் புலப்படவில்லை. நூல் முகப்பில் அச்சிடப்பட்டுள்ள சிறப்புப் பாயிரமொன்றே இவர் பற்றிய சில செய்திகளையும் நூலின் பிரிவுகளையும் கூறுகிறது. நீண்ட பாடலாயினும், பயன் கருதி அப்பாடல் முழுமையும் இங்குத் தருகிறோம்.

இருங்கடல் உடுத்தஇம் மாநிலம் விளங்க
அரும்பொருள் தெரிந்த அகன்றமிழ் வரைப்பில்,
இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்று,
அனைத்தே செய்யுட்கு அணிகலன்; ஆதலிற்
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமல் இசைக்கும் இயற்சொல்;
ஒருபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி;
செந்தமிழ் சேர்ந்த திசைதொறும் திசைதொறும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி;
வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொற்ரு ளுகும்;
சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்;
அந்நாள் சொற்றிறம் அரில்தப முழுதும்
செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த
பிங்கல முனியெனத் தன்பெயர் நிறீஇ
உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை,
விரிப்புடன் நிலைஇய வீறுசால் சிறப்பின்

வாஅன் வகையும், வானவர் வகையும்,
வானினும் மண்ணினும் வழங்கல் வழாஅ
ஈனமில் ஐயர் இயல்புளி வகையும்,
அவனி வகையும், ஆடவர் வகையும்,
அவர்திறத் தமைந்த அனுபோக வகையும்,
அவயவத் தடைத்த ஆறு வியல்பிற்
பண்பிற் செயலிற் பகுதி வகையும்,
மாப்பெயர் வகையும், மரப்பெயர் வகையும்,
ஒருசொற் பல்பொருள் ஓங்கிய வகையும், என்று
இருளற ஈரைந் தாக்கி
மருளற வகுத்தனன் மதியினின் விரைந்தே.

*இப்பாயிரம் செய்தார் கூறுவது: தமிழ்ச்சொல், இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நான்கு வகை. அவற்றைச் செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த பிங்கல முனி என்பவர் தம் பெயரால் உரிச் சொற் கிளவி விரித் துரைத்தார். அதனுள் வான், வானவர், ஐயர், அவனி, ஆடவர், அனுபோகம், பண்பு - செயல், மா, மரம் என்னும் ஒன்பதும், ஒரு சொற்பல்பொருள் வகை யொன்றும், ஆகப் பத்து வகையும் வகுத்தார் என்பதாகும். திவாகர முனிவர் சூரியனது வரத்தால் பயந்தவர் பிங்கல முனி என்பது ஒரு முக்கியமான கூற்று. திவாகரர் காலம் இன்னும் வரையறை செய்யப் பெறாததொன்று. எனினும் ஒன்பதாம் நூற்றாண் டென்று திட்டமாய்ச் சொல்வோம்.[1] பயந்த என்ற சொல்லுக்குப் பெற்ற என்று பொருள்கொண்டு, திவாகரர் புதல்வர் பிங்கலர் என்றே இதுவரை அறிஞர் கருதி*

1 இது எமது 9 ஆம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வரலாற்றுள் ஆராயப்பெற்றுள்ளது.

வந்திருக்கின்றனர். இக்கருத்தை மாற்றுவதற்கு எந்த ஆதாரமும் இல்லை.[1] பிங்கலர் திவாகரருடைய மாணுக்கர் (பயந்த – ஞான புத்திரரான, மாணுக்கரான) என்றும் கருதலாம். 'செங்கதிர் வரத்தால் தோன்றும் திவாகரர் சிறப்பின் மிக்க – பிங்கலர் உரை நூற் பாவில் பேணினர் செய்தார்' என்ற சூடாமணி நிகண்டின் வரிகளை முன்னமே காட்டினேம். இவரும், திவாகரர் பிங்கலர் என்ற இரு பெயர்களையும் கூறிய போதிலும், இரண்டுக்கும் இடையே நிரம்ப வேறுபாடு உண்டு. சிறப்புப் பாயிரம் சொல்வது, 'செங்கதிர் வரத்தால் திவாகரர் பயந்த பிங்கலர்'; இதன் பொருள் தெளிவு, முன்னே சொல்லப்பட்டது. சூடாமணி சொல்வது, 'செங்கதிர் வரத்தால் தோன்றும் திவாகரர், சிறப்பின் மிக்க பிங்கலர்' என்று இருவருக்கும் தொடர்பில்லாமல் சொல்லுகிறது. இதன் உண்மைப் பொருளை அறிய வழியில்லை. ஒருகால், செங்கதிர் வரத்தால் தோன்றும் பிங்கலர், திவாகரர் (தம் புதல்வரான) சிறப்பு மிக்க பிங்கலர் என்று, இரு பெயரெச்சங்களையும் பிங்கலருக்கே அடையாக்கிச் சொன்னல், முற்கூறியதோடு இயையும்.

இனி, பிங்கல முனி என்ற தொடர். பொதுவாக, கல்விப் புலமை சான்ற முந்தையோரை முனிவர் என்பது ஒரு பண்டைய பரபு. முனிவர் என்றமையால் துறவி என்பது பொருளன்று. உலோபாமுத்திரையோடு இல்லறம் நடத்திய அகத்தியரும் முனிவர், திவாகரரும் முனிவர், அவர் பெற்ற பிங்கலரும் முனிவரே. இவர் தம் பெயரால் பிங்கலம் என்ற நூல் செய்தார். நூல் உரிச் சொல்லைக் கூறுவது. (நிகண்டு என்ற பெயர் அக்காலத்தில் வழங்கவில்லை.) இந்நூலுள் முற்கூறியவாறு பத்து வகைப் பெயர்கள் தொகுக்கப்பட்டன.

1 இது உண்மையாயினும் ஓர் ஐயம் எழுதல் கூடும். மூன்ரும் பிரிவாகிய ஐயர் வகை பிழையான பிரிவு என்று பின்னே காட்டுகிரேம். சிறப்புப் பாயிரம் பழமையானதாயிருந்தால் இப்பிழை வருமா என்பது ஐயம்.

வையாபுரிப் பிள்ளை போன்ருர் ஒரு கருத்தைச் சொல்லியுள்ளனர் : பிங்கலர் திவாகருடைய புதல்வர் என்பது உண்மையே; ஆனல் அத்திவாகரரே திவாகரம் என்ற நிகண்டு செய்தவர் என்று சொல்வதற்கு ஆதார மில்லை என்பர். இது பொருந்தாது. திவாகரர் நன்கு தெரியப்பட்ட ஒரு பெயராதலால், பிங்கலர் இவருடைய புதல்வர் என்று சிறப்புப்பாயிரம் தெரிந்து சொல்லிற்றே யன்றி, யாரோ ஒரு திவாகரருடைய புதல்வராயிருந்தால் பாயிரம் இவ்வளவு சிறப்பித்துச் சொல்லியிராது. ஆதலால் திவாகரர் புதல்வர் பிங்கலர் என்பதை ஒப்புக் கொண்டால், அவரே திவாகரம் செய்தவர் என்பதையும் ஒப்புக் கொள்ள வேண்டும்.

நூலாசிரியர் சிவப்பு நிறமாயிருந்தமையால் பிங்கலர் (பிங்கலம்–பொன்னிறம்) என்று பெயரிடப்பட்டார் போலும். தமிழிலக்கியப் பரப்பில், திவாகரரைப் போல, பிங்கலர் என்ற பெயர்கொண்டவர் வேறு எவரும் இலர். (கேசி என்ற முடிபுடைய நூற் பெயர்களுள் பிங்கல கேசியும் ஒன்று என்று யாப்பருங்கல விருத்தியால் அறிகிருேம். அது பற்றிய வேறு செய்தி தெரிந்திலது).

இவர் தம்மைக் குறித்த எச்செய்தியும் நூலில் புலப் படுத்தவில்லை. திவாகரர் தம்மை ஆதரித்த அம்பர்ச்சேந்தனை இயல்தோறும் சிறப்பாகப் போற்றியிருக்கிருர். இவர்கள் வாழ்ந்த காலத்தில் வள்ளல்கள் புலவரை ஆதரித்தல் ஒரு மரபாயிருந்து வந்தது. இவர் இயல் தமிழ் என்ற பகுதியில், ‘பாட்டுடைத் தலைவன் பாடிய புலவனுக்குச் சிறந்த பரிசுகள் அளித்துப் போற்றவேண்டும், போற்ருவிட்டால் கிளையோடு கெடுவான்’ என்று விரிவாக நான்கு சூத்திரம் செய்தி ருக்கிருர். அரங்கேற்று விழா எவ்வாறு நடத்த வேண்டும் என்பதையும் விளக்கமாய்க் கூறுகிருர். இதிலிருந்து இவர்

ஓர் வள்ளலைச் சார்ந்து வாழ்ந்தார் என்றும், அவன் தக்கபடி இவரைப் போற்றாமையால் மனம் நொந்து போயிருந்தார் என்றும் நாம் யூகிக்கலாம்.[1]

இவர் இளமையில் சிறந்த போர் வீரராக இருந்து அரசனிடத்து உயர்ந்த பதவியில் இருந்தார் என்றும், முதுமையில் புலமை மிகுந்தவராய் இந்த நிகண்டு செய்து அக்காலத்தில் தாம் போற்றிய வள்ளலுடைய ஆதரவைப் பெறாமையினால் மனம் வருந்தினார் என்றும் யூகிக்கலாம். தம்முடைய நிகண்டில் போர்ச் செய்திகளையும், யானை இலக்கணம், குதிரை இலக்கணம், போர்க் கருவிகள் முதலிய வற்றையும் இவர் அதிகம் விவரித்துச் சொல்வதால், இவரைப் போர் வீரர் என்று கருதுவது தகும்.

'இவர் ஆதி திவாகரம் செய்த திவாகர முனிவருடைய புத்திரர். சோழ வமிசத்தில் உதித்தவரேயாயினும், துறவு பூண்டு தமிழ் ஆராய்ச்சியிலேயே தமது காலத்தைப் போக்கியவர்' என்பது ரிப்பன் பிரஸ் குறிப்பு; 'இவர் ஆதி திவாகர முனிவருடைய புத்திரர். இந் நிகண்டு சூடாமணி நிகண்டு, சேந்தன் திவாகரம் முதலியவற்றுக்கு முந்திய நூல். பிங்கலந்தை இயற்றியவர் சைனர்' என்பது அபிதான சிந்தாமணியுடையார் குறிப்பு. இவையாவும் பிழைபட்ட கருத்துக்கள். இவற்றை எழுதியோர் காலத்தில் தமிழ் வரலாற்றறிவு இல்லாதபடியால், இவர்கள் தாங்கள் காதால் கேள்விப்பட்டதையெல்லாம் இப்படி எழுதிவைத்தார்கள். பிங்கலர் சோழவம்சத்தினரல்லர்; போர்வீரராயிருந்திருக்க லாம் என்று முன்னமே காட்டினோம். முனிவர் என்றதனால்

1 ஆங்கில இலக்கிய வரலாற்றில், ஜான்சன் என்ற பெரும் புலவர் தம்மைத் தக்கபடி போற்றாத செஸ்டர்பீல்டு பிரபுவுக்குப் புத்தி புகட்டி எழுதிய கடிதம் பிரசித்தி பெற்றது. அதே நிலையில், நிகண்டு செய்த பிங்கலர் தம் தலைவன் பெயரைச் சொல்லாமல் வள்ளல் இலக்கணத் துக்குச் சூத்திரங்கள் செய்தார் என்று கருதலாம்.

இவர் துறவியல்லர்; ஆதி திவாகரம் வேறு, சேந்தன் திவாகரம் வேறு என்ற கருத்துப் பிழை. இருந்ததும் இருப்பதும் ஒரே திவாகரந்தான். ஆதி நிகண்டு ஆனமையால் ஆதிதிவாகரம் என்ருர்கள்; இதுவேதான் சேந்தன் திவாகரம். திவாகரம் பிங்கலத்துக்குக் காலத்தால் முற்பட்டது; பிங்கலம் சேந்தன் திவாகரத்துக்கு முற்பட்டதென்பது பிழை. அப்படியே பிங்கலரும் திவாகரரும்[1] சைனர் என்பதும் பிழையே. இருவரும் சிறந்த சைவர்கள்.

16ஆம் நூற்ருண்டின் இறுதியில் அகராதி நிகண்டு செய்த ரேவணசித்தர்,

தெரிதரு பிங்கலம் திவாகரம் முதலாம்
பரவிய நிகண்டு பலஎடுத் தாராய்ந்து

என்று கூறுகிருர்; இதுகொண்டு, திவாகரம் பிங்கலத்துக்குப்பிற்பட்டதென்று கருதுவோர் உளர். நூல்களின் வரலாற்றறிவு பெரிதும் இன்மையால் அவர் இவ்வாறு கூறினரேயன்றி, இவ்வரிகள் கால முறையைக் கருதியவை என்று எண்ணுவது பொருந்தாது. இவருக்குப் பின்னுல் 17ஆம் நூற்ருண்டில் ஆசிரிய நிகண்டு செய்த ஆண்டிப் புலவர் தமது நூலில்,

முந்துள திவாகரம் பிங்கல நிகண்டுசீர்
முந்து காங்கயன் உரிச்சொல்
முறைபெறு கயாதரம் பகரும்அக ராதியிவை
முற்றும் ஒன்ருய்த் திரட்டி —

என்று எழுதும்போது, திவாகரம் பிங்கலம் உரிச்சொல் கயாதரம் அகராதி ஆகிய ஐந்து நிகண்டுகளைக் குறிப்பிடுகிருர். இவை ஐந்தும் கால முறைப்படி ஒழுங்காக அமைந்துள்ளன. (9, 10, 14, 15, 16 நூற்ருண்டுகள்.) ஆனுல்,

1 திவாகரர் வரலாற்றை எமது 9ஆம் நூற்ருண்டு தமிழ் இலக்கிய வரலாற்றில் விளங்கக் காணலாம்.

16ஆம் நூற்றுண்டின் முற்பகுதிக்கு உரியதாகிய சூடாமணி நிகண்டை இவர் சொல்லவில்லை. தம் நூல் வரலாறு சொல்லவந்த ஆசிரியர் முன்னுள்ள நூல்கள் எல்லாவற்றையும் குறிப்பிடவேண்டும், அவற்றைக் காலமுறை பிழையாமலும் குறிப்பிடவேண்டும் என்று நாம் எதிர்பார்ப்பதும் இயலாததொன்று.

பிங்கல நிகண்டை இவர் திவாகரர் சூத்திரத்தை யொட்டியே செய்துள்ளார். மாறுதல்களும் விரிவும் இருப்பினும், பெரும் பகுதி திவாகரத்தைத் தழுவியது என்பது இரண்டையும் ஒப்பு நோக்கிஞல் விளங்கும். வான்வகை என்ற முதல் இயலை இவர் சுவர்க்கம் என்று தொடங்குகிருர்; திவாகரத்தில் இடப்பெயர்த் தொகுதி மோக்கம் என்று தொடங்கும். தெய்வப் பெயர்த் தொகுதியில் அவர் சிவன் என்று தொடங்க, இவர் கணபதியைச் சொல்லிய பிறகு சிவனைக் கூறுகிருர்; வர வரக் கணபதி வழிபாடு பெருகி வருகிறது என்பதை இதிலிருந்து நாம் யூகிக்கலாம். மக்கட் பெயர்த் தொகுதியை அருந்தவர், சைவத் தவப்பாலோர், நாராயண சமயத்தோர், சமணர், புத்தர், சமண முனிவர், சடை முடியோர், பார்ப்பார் என்று திவாகரர் தொடங்குகிருர். இருடிகள், சத்த விருடிகள் அகத்தியன், சைவத் தவப்பாலோர், நாராயண சமயத்தோர், சமணர், சமணத்தவத்தோர், புத்தர், புத்ததவத்தோர், சடை முடியோர், பார்ப்பார் என்பது பிங்கலத்தின் தொடக்கம். (பத்து நூற் பாக்கள் முன் இயலின் தொடக்கத்தில் அச்சிட்டிருப்பது பதிப்பாளர் பிழை என்று வேறிடத்தில் குறிப்பிட்டுள்ளோம்.)

### நாடும் சமயமும்

இந் நிகண்டாசிரியர் சோழ நாட்டினர், சைவர் என்பதற்குப் பல சான்றுகள் கிடைக்கின்றன. அவனிவகை

என்ற இயலில் பல இடங்களின் பெயர்களைச் சொல்லுகிறர். அவை காசி, மிதிலை, அவந்தி, அரித்துவாரம் என்ற வட நாட்டிடங்கள்; கடாரம், சிங்களம் என்ற வெளி நாடுகள்; காஞ்சி — தொண்டைநாடு; சிதம்பரம், திருவாரூர், உறையூர், காவிரிப்பூம்பட்டினம் — சோழநாடு; மதுரை — பாண்டிநாடு; வஞ்சி — சேரநாடு. சோழ நாட்டூர்கள் பல சொல்லி யிருப்பதால் இவர் சோழ நாட்டினர் என்று கருதுகிறேம். மேலும் அம்பர்ச் சேந்தனுல் ஆதரிக்கப் பெற்று வாழ்ந்த திவாகரருக்கு இவர் மகனுயினும் மாணுக்கனுயினும், சோழ நாடு என்பது கொள்ளக் கூடியதே.

இவரது சமயம் சைவம் என்பது நன்கு தெரிந்தது. வானவர் வகை என்ற பகுதியைக் கணபதி பெயரை வைத்துத் தொடங்குகிறர். சிவபெருமானுக்கு 96 பெயர்கள் குறிப்பிடுகிறர்; அருகனுக்கு இவர் சொல்லும் பெயர்கள் 14. பின் வந்த சைன ஆசிரியர் செய்த சூடாமணி அருகனுக்கு 96 பெயர்களும் சிவனுக்கு 61 பெயர்களுமே குறிப்பிடும். (இலக்கணம் நிகண்டு எல்லாம் சைனர் செய்தார் என்று சிலர் நினைப்பதிலுள்ள தவற்றை எடுத்துக் காட்டவே இதை இங்குக் குறிப்பிட்டோம்.) சைவராய்த் திருநீற்றினிடமுள்ள பக்தி காரணமாக, சாணம் — புண்ணிய சாந்தம் என்று குறிப்பிடுகிறர். சிவன் இருப்பு முதலியன என்று இவர் ஒரு நூற்பா எழுதியிருப்பது சுவையாக உள்ளது:

**இருப்பது கைலை தரிப்பது கங்கை**
**முடிப்பது கொன்றை உடுப்பது சருமம்.** 100

மேலும் பக்தியோடு,

**இரவியும் எனையாள் ஈசன் பெயரும்**
**ஒருநாள் மீனும் ஒளியும் சேதி**

என்ற விடத்து, சிவபிரான் பெயரை 'எனையாள் ஈசன் பெயர்' என்று தெளிவாய்க் கூறியிருப்பது, இவரது சமய

*உணர்வை ஐயத்துக்கிடமில்லாமல் காட்டுகிறது. சிவன் எண் குணம் என்று ஒரு சூத்திரம் கூறுகிறார்.*

**பவமின்மை இறவின்மை பற்றின்மை பெயரின்மை**
**உவமை யின்மை ஒருவினை யின்மை**
**குறை விலறி வுடைமை கோத்திரம் இன்மைஎன்று**
**இறைவ னிடத்தில் எண்குணம் இவையே. 98**

(*விரிந்த மனப்பான்மைகொண்ட பரிமேலழகர், இக் கருத்துச் செம்மையாயில்லை என்று கருதிப் போலும், சைவாகமத்தில் கண்டது என்று, தன் வயத்தனுதல்; தூய உடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல், முற்றும் உணர்தல், இயல் பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவிலாற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை என்ற எட்டையும் குறிப்பிடுவது அறியத்தக்கது.*) *அன்றியும் இவர், அருகன் எண்குணம் என்று அனந்தஞானம் முதலான எட்டையும் தனியே குறிப்பிட்டிருக்கிறார்.*

*அட்டாங்க யோகத்தை இவர் விளக்கியிருப்பது குறிப்பிடத்தக்கது; இறுதி நான்கை மட்டும் இங்கே எடுத்துக்காட்டலாம் (423–6):*

**உரையா துபாதியை நீக்கி உபாதியைப்**
**பிரியாதுண் ணேக்கல் பிரத்தியா காரம்.**

**உற்றுயிர் பூதம் மனுதியில் ஒடுக்கித்**
**தற்பரம் நாடுதல் தாரணை யாகும்.**

**அவமாம் புலத்தை அடக்கி மனுதி**
**சிவ யோகஞ் செய்தல் தியான மாகும்.**

**இந்துவும் பானுவும் விந்துவும் நாதமும்**
**சந்தியில் நிற்றல் சமாதி யாகும்.**

*பிங்கலர் தம் நூலைச் சுவர்க்கத்தின் பெயர் என்று தொடங்கு கிறார். கடவுள் வாழ்த்துப் பாடவில்லை. ஒருகால்,*

கணபதியின் பெயரை முதலாகக் கொண்ட வானவர் வகை என்ற பகுதியோடு நூல் தொடங்கியிருத்தல்கூடும்.

ஏழு நதிகளைக் கூறுமிடத்து, இவர் சிந்துநதியை நீக்கிக் குமரியைச் சேர்த்துக் கூறுகிறூர்; ஆனால் இவர் காலத்தில் குமரிமுனை இருந்ததே தவிர, குமரியாறு இல்லை.

**நூல்**

பிங்கலம் என்ற பெயர் யாப்பருங்கல விருத்தியினுள் பிங்கலம் மாபிங்கலம் என்ற இடங்களிலும் வருகிறது. இப் பெயர்கள் வடமொழி நூலைக் குறிப்பிடும். நாம் கருதும் தமிழ்ப் பிங்கல நிகண்டு பிங்கலந்தை எனப்படும். இது மிக விரிந்த நூல். இதனுள் 14700 சொற்கள் சொல்லப் பட்டன. தொல்காப்பியம் குறிப்பிடும் இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்ற நால்வகைச் சொல்லையும் இது ஆராய்ந்து தொகுத்துச் சொல்கிறது. முழுவதும் நூற்பாவாலானது; ஆயினும், கீழ்க்கண்டவாறு இதனுள் வெண்பாக்களும் அமைந்துள்ளன.

பஃறொடைவெண்பா – சூ. 1474. புறத்திணை வெட்சி முதல் வாகைவரை எட்டையும் கூறுவது. (இது திவாகரத்தி லும் உள்ளது.)

வெண்பா – நன்கணம் தீக் கணம், தானப் பொருத்தம், நாட் பொருத்தம், புள் வகை. 1344, 1346, 1348 – 50, 1354.

மற்றும் இந்நூலுள் கடவுள் வாழ்த்து இல்லை. பகுதி யிறுதியில் முடித்துக் காட்டும் நூற்பா, திவாகரத்திலுள்ளது போல, இந்நூலாசிரியர் அமைக்கவில்லை. ஆசிரியர் கூற்றாக ஒரு சூத்திரம் காணப்படுகிறது. (சூ. 1662). திவாகரர் பொதுவாக ஒரே சூத்திரத்தில் தாம் கருதிய பொருள்களைச் சொல்லி முடித்து விடுகிறூர். இவர் அவ்வாறு செய்யாமல்,

அதிகமான இடங்களில் இரண்டாவது சூத்திரமொன்றைச் சொல்லி, இதுவும் அதுவாகும் என்கிறார். உண்மையில் இவரே பின் நினைவு வந்து அதிகமான சொற்களைச் சேர்த்திருக்கலாம்; அல்லது இப்படிப்பட்டவை பிற்காலத்தில் சேர்க்கப்பட்டனவோ என்ற ஐயமும் நமக்கு எழாமற் போகாது.

பொருளமைப்பில் பல மாறுபாடுகள் காணப்படுகின்றன. மூல ஏட்டில் இப்படியே இருந்ததா, பதிப்பாளர் செய்த மாற்றமா என்பது தெரியவில்லை. (இவர் ஆதிதிவாகரமே பிங்கலருக்கு முதல் நூல், அது வழக்கிழந்து போனதற்குப் பிங்கலம் நிலை பெற்றதே காரணம், இடையில் சேந்தன் திவாகரம் என மற்றொரு நூல் வந்தது என்றும் எழுதுகிறார். இது பிழைபட்ட கருத்து. இருந்ததும், இருப்பதும் ஒரே திவாகரந்தான். அது வழக்கு வீழ்ந்து பிங்கலத்துக்கு அதிக வழக்கு ஏற்பட்டதல்லை.) இனிப் பொருளமைப்பின் மாறுபாடுகள் சிலவற்றை மட்டும் இங்கு சுட்டிக் காட்டலாம்.

நூற்பிரிவுகளைக் கூறிய இடத்து, மூன்றாம் பகுதியில் காணும் ஐயர் வகை என்பது உண்மையில் பல பொருள் ஒரு சொல்லான தொகையகராதி என்று குறிப்பிட்டிருக்கிறோம். இது பொதுவாகப் பிற நிகண்டுகளில் இருப்பது போல நூல் இறுதிப் பிரிவாக இருத்தற்குரியது. இது போலவே வேறு சிறு தலைப்புக்கள், இத் தொகையகராதிக்குரியன, வெவ்வேறிடங்களில், பல சமயம் தொடர்பில்லாமலே, காணப்படுகின்றன; பதினெண்கணம் (92), முப்பத்திரண்டறம் போன்றவை காண்க. இவை மூல ஏட்டின் பிறழ்வினால் வந்திருக்கலாம்.

மாலை என்பது இரண்டிடங்களில் சொல்லப்பட்டுள்ளது: அனுபோக வகை என்ற பகுதியில் சூட்டுவகை என்ற உட்பிரிவில் 6 நூற்பாக்கள் உள்ளன; மாப் பெயர்ப் பிரிவின்

முடிவில் ஐந்து நூற்பாக்கள் மாலையைக் கூறுகின்றன. இரண்டும் ஒரே இடத்தில், கூட்டு வகை என்ற பகுதியில் இருத்தற்குரியன. அளவு வகையும் அப்படியே; இது 11ஆவது உட்பிரிவாக இங்கு உள்ளது; 18 – 19 ஆகிய உட்பிரிவுகள் சேனையின் அளவைக் குறிப்பன; இருவகையும் ஓரிடத்திலேயே அமைதல் பொருந்தும். தத்துவம் 25 என்பது, பல் பொருள் ஒரு சொல் பகுதியில் இருத்தற்குரியது (3); தொடர்பின்றி 1091ஆம் சூத்திரமாக உள்ளது. இத்தகையனவே சூத்திரங்கள் 1092– 1101; இவை யாவும் பல் பொருள் ஒரு சொல்.

சில இடங்களில் இவர் சுவையும் புதுமையும் கலந்த குறிப்புக்கள் தருகிறுர். தச வாயுக்களில் தனஞ்சயன் என்பது பத்தாவது. ஒவ்வொரு வாயுவுக்கும் செயல் இன்னது என்று நூல்கள் சொல்லும். தனஞ்சயன் :

ஒழிந்த தனஞ்சயன்பேர் ஓதில் உயிர்போய்க்
கழிந்தாலும் பின்னுடலைக் கட்டி - அழிந்தழிய
முந்நாள் உதிப்பித்து முன்னிய ஆன்மா வின்றிப்
பின்ஞ வெடித்து விடும் பேர்ந்து.

என்று இசை நுணுக்கமுடைய சிகண்டியார் கூறினர் என் அடியார்க்கு நல்லார் (சிலம்பு 3 : 26) உரைக்கிறுர்; "பிராணன் போன பின்னும் உடம்பை விடாதே நின்று மூன்று நாள் உதிப்பித்து உச்சந் தலையிற் பிற் கூற்றிலே மூன்று நெற்கிடை வெடித்துப் போம் என்றறிக" என்பது அவர் உரை. ஆனல் பிங்கலர், தனஞ்சய வாயு பற்றிக் கூறுவது :

ஓல்கா அன்பின் நல்லவர் கேண்மையின்
உயிர்உடல் விடினும் தானுடல் விடாஅது
ஒக்க நின்றங் குடலினை வீக்கித்
தலைகிழித் தகல்வது தனஞ்சய ஞகும். 42

உயிர் கழிந்த பின்னும் தனஞ்சய வாயு உடலைப் பற்றி யிருப்பது, அன்பின் நல்லவர் கேண்மை போல[1] என்று ஓர் உவமையும் காட்டுகிறார்.

உணவு பற்றிய ஆராய்ச்சி எப்போதுமே சுவையுடையதாயிருக்குமென்பதில் ஐயமில்லை. உணவு வகைகள் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த நிலையிலிருந்து இன்று எவ்வளவோ மாறிவிட்டன என்பது நன்கு தெரிந்தது. எனினும், சில இன்றைய பொருள்கள் பண்டைக் காலத்திலும் இருந்தன என்று அறிவதில் தனியான சுவை உண்டு. பல வகை லட்டுக்கள் நம் காலத்தே வழங்குகின்றன; இவை அன்று இலட்டுகம் என்று பெயர் பெற்றிருந்தன. இப்படியே தோசை பூரி என்ற உணவுப் பொருள்கள்.

திவாகரர் அப்ப வர்க்கத்தின் பெயராகப் பின் வரும் நூற்பா சொல்லுகிறார் :

**பூரிகம் நொலையல் கஞ்சம் தோசை**
**போத வகைப்பெயர் அப்ப மாகும்.**

இங்கு இவர் மாவினால் செய்கின்ற பணிகாரங்கள் யாவற்றையும் சேர்த்துப் பொதுவாக அப்பவர்க்கம் என்றார். பூரிகம் என்பது பிங்கலத்தில் பூரிகை என்று வருகிறது. இதுவே இன்றைய பூரி. தோசை ஒரு பழம் பெயர் என்று அறிய வியப்பாய் இருக்கிறது. ஆனால் பிங்கலர், கஞ்சம் தோசை, நொலையல் பூரிகை என்று இரண்டையும் தனித் தனியாக இரு சூத்திரங்களால் காட்டுகிறார். மேலும் இவர் அபூபம் என்று சொல்லுகிறார் : இச்சொல் ஆகமங்களில் அதிகம் பயிலுவது; நிவேதனத்துக்கு உபயோகப்படும் உணவுப் பொருளே அபூபம் எனப்படும். திவாகரத்தில் இல்லாத இச்சொல் பிங்கலத்தில் வருவதால் இருவர் காலத்துக்கு

1. உவமையைக் காரணமாக உரை காட்டுகிறது. இது பிழையாதல் வேண்டும்.

இடையிலும் ஏற்பட்ட சமூக மாறுதலை நாம் உணரலாம். சோழர் பேரரசு திவாகரர் காலத்தைவிட இவர் காலத்தில் அதிகம் வலிமை பெற்று, ஆலய பரிபாலனம் சிறப்புற நடந்த நிலையை இது காட்டுகிறது. திவாகரர் தேன் மட்டும் சொல்ல, இவர் தனியாக கோற்றேனும் சேர்த்துச் சொல்கிறார்.

மற்றொன்று குறிப்பிடத்தக்கது. திவாகரர் நூலில் புலாலைப் பற்றிய பேச்சே வரவில்லை. ஆனால் பிங்கலர் புலால், இறைச்சி, ஆவின் இறைச்சி, சூட்டிறைச்சி, மீன்முள் அரிந்திடும் கருவி முதலிய பொருள்களைக் குறிப்பிடுகிறார். இதிலிருந்து விளங்கும் கருத்து வெளிப்படை.

திருமாலின் மூவைந்து அவதாரம் என்று இவர் பின் வரும் 15 பெயர்களைக் குறிப்பிடுகிறார். – சனகன், சனந்தனன், சனாதன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கீரிவன், தத்தாத்திரேயன், மோகினி, வேள்வியின்பதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன்; பத்தவ தாரத்துள் பலராமனை நீக்கிப் புத்தனைப் புகல்வதுமுண்டு என்கிறார். கைலாயத்துக்கு நொடித்தான்மலை என்ற பெயரைத் திவாகரர் சொல்லவில்லை; இவர் சொல்லுகிறார். நவரசங்கள் நாடகத்துக்கே உரியன என்பது இவர் கூறும் ஒரு கருத்து. செட்டிகள் பெயரில் வைசியர் என்பது ஒன்று எனத் திவாகரம் கூறும். ஆனால் இவர் கோவைசியர், தனவைசியர், பூவைசியர் என்ற மூவரைக் கூறுகிறார். பெண்ணின் பருவம் ஏழு என்பதனோடு, நான்கு என்றும் இவர் ஒரு சூத்திரம் சொல்லுகிறார் :

**வாலை தருணி பிரவிடை விருத்தையென்று**
**ஆய மடந்தையர்க் காம்பருவம் நான்கே.**

பேடி இலக்கணத்தை மிகவும் விரிவாக 16 அடி கொண்ட ஒரு நூற்பாவால் (971) சொல்கிறார். இது பேடிகளின்

செயல்கள் அனைத்தையும் ஒருங்கு கூறுவது மிகவும் சிறப்பாய் உள்ளது. இன்றும் கூட பேடிகளாய் உள்ளோர் இங்குக் கூறியவாறே சேட்டைகள் செய்வது எல்லோரும் அறிந்தது. சிலப்பதிகாரம் கடலாடு காதை உரையில் பேடியை விளக்கி உரைக்கிறார். மணிமேகலையில் நீள் நிலம் அளந்தோன் ஆடிய பேடிக் கோலம் வருணிக்கப்பட்டுள்ளது. பேடி இலக்கணத்தைப் பிங்கலர் திவாகரத்திலிருந்து எடுத்துக் கொண்டார்.

இன்று போல அக்காலத்திலும் கொசு உபத்திரவம் அதிகம் இருந்தது போலும்; இதுபற்றி நான்கு சூத்திரங்கள் சொல்லுகிறார்.

இவர் பல இடங்களில் திவாகரச் சூத்திரத்தை அப்படியப்படியே, ஒரு சொல் அல்லது எழுத்தை மாற்றியோ மாற்றுமலோ எடுத்துவைத்து மேலும் சூத்திரம் செய்கிறார். இது இயல்பே. முந்தையோர் சொல்கிற பொருள் மட்டும் அன்றி அவர் மொழியும் பின்னோர் பொன்போற் போற்றுவது இலக்கிய இலக்கண உலகில் சாதாரணமாய் நாம் பார்த்து வருவது. இதற்கு எடுத்துக்காட்டு மிகை.

## முத்தமிழ்

இயற்றமிழ் என்ற பகுதியில் தசப் பொருத்தங்களில் எட்டைக் கூறி, முதல் மொழி, கதி என்ற இரண்டையும் விட்டு, புள் கன்னல் என இரு பொருத்தங்கள் கூறுகிறார். இவ்விரண்டும் பன்னிரு பாட்டியலொன்றில்தான் காணப் படுகின்றன. பிள்ளைத்தமிழ்ப் பிரபந்த இலக்கணத்தை விரிவாக மூன்று சூத்திரங்களில் கூறுகிறார். பிள்ளைத்தமிழ்ப் பிரபந்த இலக்கணம் நிகண்டுக்கும் பொருந்தும் என்று தோன்றவில்லை. அடுத்து, கவியரங்கேறிய பாட்டுடைத் தலைவன் செய்யத்தக்க வழிபாடு கூறுமிடத்து, 28 அணிகளைக் கூறுகிறார்.

பாட்டுடைத் தலைவன் பாடிய புலவருக்குச் சிறப்புச் செய்து பரிசில் தர வேண்டுமென்பதை அதிகம் வற்புறுத்துகிறுர். பரிசில் தராவிடில், புலவன் அத் தலைவன் பெயரை நீக்கி வேருெருவன் பெயரை அமைப்பாஞயின், முன்புள்ள தலைவனது செல்வம் அழியும், பரிசில் பெருதவன் தான் பாடிய நூலை நெருப்பில் கொளுத்திஞல், பன்னிரு மாதத்தில் தலைவன் சாவான் என்று அகத்தியர் சொன்ஞராம் :

**பரிசில் ஈயாப் பாவிதன் பனுவலைத்**
**தெரிதர எழுதிச் செம்பூச் சூடித்**
**தன்மனைப் புறத்திலும் சாமுண்டி முன்றிலும்**
**பன்னிலம் வாழும் பழம் பதி தன்னினும்**
**மயானத் திடத்திலும் மறுகு தன்னினும்**
**தியானித் திருந்து செந்தீக் கொளுத்த**
**ஈரறு திங்களின் இறுதியாம் என்பது**
**ஆதிப் புலவன் அறைந்த மொழியே.** 1372

அவையில் கேட்டிருந்த கிளைஞரும் கெடுவர் — என்பன இவர் கூறும் சில கருத்துக்கள்.

அடுத்து இசைத் தமிழ் என்ற பிரிவில் இவர் 70 நூற் பாக்கள் செய்துள்ளார். திவாகரத்தில் காண்பன 35 ஏழிசைக்கும் மாத்திரை ஓசை மணம் முதலியன திவாகரத் திலும் காணப்படுகின்றன; இவர் சுவை சொல்வது புதிது. யாழ்த்திறன் கூறுமிடத்து, திவாகரம் கூறும் பெயர்கள், நெய்தல் 1, குறிஞ்சி 8, முல்லை 4, பாலை 12, மருதம் 4ஆகும், பிங்கலர் சொல்வன பாலை 20, குறிஞ்சி 32, மருதம் 16, செவ்வழி முல்லை 16 ஆகும். சிலப்பதிகார உரைகளையும் மனத்துக் கொண்டு பிங்கலர் கூறுவனவற்றைச் சிந்திக்கும் போது, அக்கால நிலையைச் சற்று உணர முடியும். இயற் றமிழ் ஒன்று மட்டும் ஓங்கி வளர, இசைத்தமிழ் மங்கிக்

கொண்டு வந்தது. இந்த நிலைமையை இவர் நன்கு உணர்ந்து, முயன்று தம் நூலில் தாம் அறிந்த வரை இசைச் செய்திகளைத் தெரிந்து திரட்டி எழுதுகிறார். சிலப்பதிகார அரும்பதவுரை ஆசிரியரும் இங்ஙனமே செய்திகளை நன்கு குறிப்பிடுகின்றார். ஞான சம்பந்தர் போன்றோர் தெய்வ அருள்கொண்டு எவ்வளவு தான் தமிழ்ப் பண்ணையும் இசைக் கலையையும் பின்னர் உயர்த்தி நிறுத்திய போதிலும்கூட, இசையே கேவலம் என்ற சித்தாந்தம் உடைய சைனராலும் களப்பிரர் அடக்குமுறையாலும் இசைக் கலை பெரும் பகுதி வீழ்ந்து விட்டது போலும். பிங்கலருடைய முயற்சி இந்த நிலையைப் புலப்படுத்துகிறது.

அடுத்து வரும் நாடகத் தமிழ்ப் பகுதியில் பிங்கலர் இவ்வளவு விரிவாகக் காட்டவில்லை.

### பிங்கல நிகண்டின் பகுதிகள்

பிங்கல நிகண்டு 4181 சூத்திரங்களும் 10 பகுதிகளும் உடையது. நூற்பகுதி ஒவ்வொன்றும் இவர் வகை என்று பெயர் வைத்திருக்கிறார். முதல் நூலாகிய திவாகரத்தை யொட்டி இவரும் தம் நூலை நூற்பாவினாலேயே செய்திருக்கிறார். பின் வந்த சிறப்புடைய நிகண்டுகள் யாவும் திவாகர அமைப்பையும் பொருள் வரிசையையும் பின்பற்றியே நூல் செய்திருக்க, இவர் ஒருவர் மட்டும் நூற்பகுதிகளின் பொருள்களையும் மாற்றிவைத்திருக்கிறார்; பின் வந்த சிறப்பான எல்லா ஆசிரியர்களுமே திவாகர அமைப்பைப் பின்பற்றியிருப்பது, அதுவே பொருத்தமானது என்ற கருத்தைக் காட்டுகிறது; உடன் வைத்துள்ள அட்டவணையானது, பிங்கல நிகண்டின் பகுதிகளுக்கும் திவாகர நிகண்டின் பகுதிகளுக்குமுரிய ஒற்றுமையை விளக்கும். பகுதி எண் இரண்டிற்கும் தனியே தரப்பட்டுள்ளது. உரிச்சொல், சூடாமணி, கயாதரம் போன்ற பிற நிகண்டுகள்

# நிகண்டுகளின் பிரிவு - ஒப்புமை அட்டவணை

| பிரிவு எண் | திவாகரம் – 9 நூ. தொகுதிப்பெயர் | பிரிவு எண் | பிங்கலம் - 10 நூ. வகை | பிரிவு எண் | உரிச்சொல் - 14 நூ. சூடாமணி 16 | கயாதரம் 15 நூ. பிரிவு எண் |
|---|---|---|---|---|---|---|
| 1 | தெய்வப் பெயர் | 1 | வான் வகை | 1 | தேவப் பெயர் | 1 |
| | | 2 | வானவர் வகை | | | |
| 2 | மக்கட்பெயர் | 5 | ஆடவர் வகை | 2 | மக்கட்பெயர் | 3 |
| 3 | விலங்கின் பெயர் | 8 | மாப் பெயர் வகை | 3 | விலங்கின் பெயர் | 4 |
| 4 | மரப் பெயர் | 9 | மரப்பெயர் வகை | 4 | மரப் பெயர் | 5 |
| 5 | இடப் பெயர் | 4 | அவனி வகை | 5 | இடப் பெயர் | 2 |
| 6 | பல் பொருட் பெயர் | 6 | அனுபோக வகை | 6 | பல்பொருட் பெயர் | 6 |
| 7 | செயற்கை வடிவப் பெயர் | | | 7 | செயற்கை வடிவப் பெயர் | 7 |
| 8 | பண்பு பற்றிய பெயர் | 7 | பண்பிற் செயலிற் பகுதி வகை | 8 | பண்பு பற்றிய பெயர் | 8 |
| 9 | செயல் பற்றிய பெயர் | | | 9 | செயல் பற்றிய யெயர் | 9 |
| 10 | ஒலி பற்றிய பெயர் | 7 | ஷை ஷை உட்பிரிவு வாய் வகை செவி வகை | 10 | ஒலி பற்றிய பெயர் | 10 |
| 11 | ஒரு சொற் பல்பொருட் பெயர் | 10 | ஒரு சொற் பல்பொருள் வகை | 11 | ஒரு சொற் பல்பொருட் பெயர் | 11 |
| 12 | பல்பொருட் கூட்டத்தொரு பெயர் | 3 | ஐயர் வகை | 12 | பல்பெயர்க் கொருபெயர் | — |

ஏறக்குறைய முழுமையும் திவாகரத்தையே பின்பற்றுவது அட்டவணையிலிருந்து நன்கு புலப்படும்.

இனி, திவாகரம் பிங்கலம் இரண்டின் பொருள் அமைப்பைக் குறித்துச் சில சொற்கள் கூறலாம்.

1. **வான் வகை:** *இது ஒரு தனிப் பகுதியாகப் பிற நிகண்டுகளில் இல்லை. இப்பகுதியில் சுவர்க்கம், திக்கு, காற்று, அக்கினி, நீர் ஆகிய பொருள்கள், அவற்றின் அங்கங்களோடு சொல்லப்பட்டன. இவற்றுள் காற்று, அக்கினி, நீரின் ஒரு பகுதி சம்பந்தப்பட்ட பெயர்கள், திவாகரம் தொகுதி 1 – தெய்வப்பெயரில் அடங்கும். ஏனையவை தொகுதி 3 – இடப்பெயர் என்பதில் அடங்கும்.*

2. **வானவர் வகை:** *திவாகரம், 1.*

3. **ஐயர் வகை:** *சிவன் பிள்ளை இதைப் பதிப்பிக்கும் போது ஏடுகள் பிறழ்ந்து இருந்ததைக் கவனிக்காமல் அப்படியே அச்சிட்டார் என்று தெரிகிறது. ஏனெனில் இப்படி ஒரு நிகண்டுத் தொகுதி இல்லை. இதன் முதல் 10 நூற்பாக்கள் இதனுள் வரும் 5 - ஆடவர் வகை என்ற பகுதியில் இருத்தற்குரியன. ஏனைய நூற்பாக்கள் யாவும், ஒன்றிலிருந்து பதினெட்டுவரையில் உள்ள தொகை அகராதி; திவாகரத்தில் இது, தொகுதி 12 – பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி என உள்ளது. இதைப் பார்க்கும்போது சிறப்புப்பாயிரத்தில் ஐயர்வகை என்று மூன்றுவதாகக் குறிப்பிட்டிருப்பதும் ஐயத்துக்கிடமாக உள்ளது. ஒருகால் பொருள் பாகுபாடு நன்கு விளங்காமல், பிறழ்வை அப்படியே பார்த்துப் பிற்காலத்தில் செய்த ஒரு சிறப்புப்பாயிரமோ என்பது ஐயம்.*

4. **அவனி வகை:** *திவாகரம் 5 – இடப்பெயர்.*

**5. ஆடவர் வகை :** *திவாகரம் 2 – மக்கட்பெயர். ஆடவர் என்பது பொருத்தமற்ற பெயர் ; மக்கள் அனைவருமே சொல்லப்படுகின்றனர், ஆடவர் மட்டுமல்லர்.*

**6. அனுபோக வகை :** *திவாகரம் 6 – பல்பொருட் பெயர், 7 – செயற்கை வடிவப் பெயர் என்ற இரண்டும். பிங்கலம் இதை 20 உட்பிரிவுகளாக அமைத்துக் கொள்கிறது. இவை முறையே உணவு, பூண், இரத்தினம், உலோகம், ஆடை, பூச்சு, சூட்டு (மாலை) ; இயல் இசை நாடகம் ; மண்டிலம், படை, காலாள், தோற்கருவி, குடை, ஆயுதம், செயற்கை, அக்குரோணி, வெள்ளம், இல்லணி. இவ்விருபது உட்பிரிவுகளுள் இயல் இசை நாடகம் – முத்தமிழ் ; மண்டிலம் முதல் வெள்ளம் வரை போர் பற்றிய பெயர்கள் ; ஏனையவையே பிற பல்பொருட்கள்.*

**7. பண்பிற் செயலிற் பகுதி வகை :** *திவாகரம் 8 - பண்பு பற்றிய பெயர்; 9 - செயல் பற்றிய பெயர் என்ற இரண்டும். பிங்கலம் இவ்வியலை 12 உட்பிரிவுகளாகச் சொல்கிறது. உள்ள நல்வகை உள்ளத்தின் தீயவகை, மெய் வாய் கண் மூக்கு செவி கை கால், முறைமை, களவு, காரண வகை, பல்பொருள் வகை என. இவற்றுள் திவாகரம் 10 – ஒலி பற்றிய பெயர்த் தொகுதி கூறும் பொருள் இங்கு வாய் வகை செவிவகை என்ற இரு உட்பிரிவினுள் அடங்கி விட்டது.*

**8. மாப்பெயர் வகை :** *திவாகரம் 3 - விலங்கின் பெயர்.*

*திவாகரர் விலங்கு என்று பொதுவாகக் கூறியதைப் பிங்கலர் நான்கு வகையாக்கியுள்ளார். புள், விலங்கு, பாம்பு, சலசரம் இவை சில சொல்லப்பட்டுள்ளன. விலங்கு வகையின் கீழ்ப் பின்னும் உட்பிரிவாக விலங்கின் ஆண்மரபு,*

*பெண்மரபு, பிள்ளைமரபு என்பன பகுத்துள்ளார். இம்மாப் பெயர்கள் தொல்காப்பியர் மரபியலில் முதல் 22 சூத்திரங் களின் கருத்தை அப்படியே எடுத்து எழுதியவையாகும். பாம்பு என்ற இடத்துப் பொதுப் பெயர்களையும் சில பாம்பு வகைகளையும் கூறுகிறார். கொம்பேறி மூக்கன் என்ற ஒரு பாம்பைக் கண்குத்திப் பாம்பு என்று சொல்வதுண்டு; பிங்கலரும் கண்குத்திப் பாம்பு என்று சொல்லுகிறார். சலசரம் என்பது நீர்வாழ் பிராணிகள். மீன் (12 நூற்பா) தொடங்கி அட்டை முடியப் பல்வேறு நீர்ப்பிராணிகள் இங்குச் சொல்லப்படுகின்றன.*

**9. மரப்பெயர் வகை :** *திவாகரம் 4 - மரப்பெயர்.*

**10. ஒருபொருட் பல்பெயர் வகை :** *திவாகரம் 11 - ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி.*

*இவ்வாறு ஆராய்ந்து பார்க்குமிடத்துப் பிங்கலம் 10 தொகுதி என்ற போதிலும், இப்பத்தும் திவாகரத்தின் 12 தொகுதிகளையும் அடக்கி இருப்பதைக் காணலாம்.*[1]

*பிங்கல நிகண்டின் பாகுபாட்டைத் தழுவிச் செய்யப் பட்ட ஒரே நூல் கைலாச நிகண்டு என்பது. அதுபற்றி வையாபுரிப் பிள்ளையவர்கள் கூறுவது: "பிங்கலந்தையி லுள்ள முறையை மேற்கொண்டு சிறந்த கருவி நூலாக விளங்குவது 'கைலாச நிகண்டு' என்பதாம். இதனை இயற்றி யோர் வரலாறும் காலமும் சிறிதும் அறியக் கூடவில்லை. நூற்பெயரை நோக்கும்போது மண்டல புருடர் இயற்றிய சூடாமணிநிகண்டுக்குப் பிற்பட்டதாயிருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. 'கைலாச' என்ற அடைமொழி*

---

**1 ஐயர்வகை என்ற 3 ஆம் பகுதியை ஆராயும்போது, பிங்கலம் அச்சிட்ட சிவன் பிள்ளைக்குப் பிறகு இன்றுவரை இந்த நூலை யாரும் திறந்துகூடப் பார்த்ததாகத் தெரியவில்லை.**

யால் இதனை இயற்றியவர் சைவரென்பதும் 'கைலாசம்' என்ற பெயரினரென்பதும் ஊகித்தல் கூடும். ஏட்டுப் பிரதியின் நிலைமையினின்று அப்பிரதி சுமார் இருநூறு வருடங்களுக்கு முன்பாக எழுதப்பட்டிருக்கலாமென்று சொல்லலாம். சுமார் 300 வருடங்கட்கு முன்னர் இந் நிகண்டு இயற்றப்பட்டிருக்கலாமென்று சொல்லுதல் உண்மையினின்றும் இழுக்காது. இது பிங்கலந்தையின் வழிப்பட்டதென்பது விண்ணவர் வகை, விண்ணின் வகை, மண்ணின் வகையெனத் தொடங்கிச் சென்று ஊர்வன இறுதியாக வரும் 49 பகுப்புக்களாலும் இறுதியில் ஒரு சொற் பல்பொருட் பெயர்களை வைத்திருக்கும் முறைமையாலும் அறியப்படும். ஆனால் இறுதிப் பகுதி பிங்கலந்தையின் முறையைத் தழுவியதன்று.''[1] வேறெந்த நிகண்டும் பிங்கல வைப்பு முறையைப் பின்பற்றவில்லை; யாவும் திவாகரத்தையும் அதைத் தழுவி வந்த சூடாமணி நிகண்டையுமே பின்பற்றின.

### பிங்கலமும் பிற நூல்களும்

தமக்கு முன்வந்த நூல்களில் பிங்கலர் இரண்டு நூல்களைத் தழுவினர் என்று தெரிகிறது. 9ஆம் நூற்றாண்டில் செய்யப் பெற்ற திவாகர நிகண்டைப் பயின்று அதைத் தழுவியும், விரித்தும், கூட்டியும் இவர் தம் நிகண்டைச் செய்தார். இது வெளிப்படை. இது பற்றிப் பின்னரும் தனியே கூறுவோம். இறையனார் அகப்பொருள் முதற் சூத்திர வரியொன்றை இவர் அப்படியே எடுத்துத் தம் நூலுள் வைத்திருக்கிறார் :

**அன்பின் ஐந்திணை களவெனப் படுவது**
**அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்**
**கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்**

1 இலக்கிய மணிமாலை, பக்கம் 171. இந் நிகண்டைப் பிள்ளையவர்களே ஒரு பகுதி அச்சிட்டார்; பெரும் பகுதி அச்சிடப்படவில்லை.

என்பது இறையனர் முதல் சூத்திரம். பிங்கலர் தமது நூல் ஆருவது இயலில், இல்லற வாழ்க்கையில் இதுவரை சொல்லாது எஞ்சிய பொருள்களைக் கூறுவன் என்று பின் வரும் சூத்திரம் செய்திருக்கிருர் :

அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
பிரமம் தெய்வம் பிரசா பத்தியம்
ஆரிடம் காந்தருவம் ஆசுரம் இராக்கதம்
பைசாச மென்ன எண்வகைப் படூஉம்
வதுவை வகையின் மணமொன் ருயினர்
வாழ்க்கை என்னும் இல்லற நன்னெறிக்கு
ஏற்பவை நாமத்து எஞ்சிய கூறுவன். 1662

இங்கு இவர் முதல் அடியை இறையனர் நூலிலிருந்து எடுத்தார் என்று கருதக் கூடும்.

இனி, பிங்கலரை எடுத்தாளுகின்ற நிகண்டு நூல்கள், இலக்கண நூல்கள், இலக்கியங்கள் பற்றிச் சிறிது கூறுவோம். 16ம் நூற்ருண்டில் செய்யப்பெற்ற நிகண்டு நூல்களான சூடாமணி நிகண்டும் அகராதி நிகண்டும் பிங்கலந்தையைக் குறிப்பிடுகின்றன. 'செங்கதிர் வரத்தால் தோன்றும் திவாகரர் சிறப்பின் மிக்க – பிங்கலர் உரை நூற்பாவிற் பேணினர் செய்தார்' (3), 'ஒரு சொற் பல் பொருளினேடும் உரைத்த பல் பெயர்க் கூட்டத் துன்னில் – வருமுறை திவாகரம் போல் வைத்துப் பிங்கலந்தை தன்னில், ஒருங்குள பொருளும் ஓர்ந்திட்டு உரைத்தனன் விருத்தந் தன்னில்' (7–8) என்பன சூடாமணி சிறப்புப் பாயிரப் பகுதிகள். '...இதில், ஒரு சொற் பல பொருள தனைத் – தெரிதரு பிங்கலம் திவாகரம் முதலாய்ப் – பரவிய நிகண்டு பல எடுத்து ஆராய்ந்து' என்பது ரேவண சித்தர் செய்த அகராதி நிகண்டின் சிறப்புப் பாயிரப் பகுதி. ஆண்டிப் புலவர் என்பவர் (17 நூ.) செய்த ஆசிரிய நிகண்டின் பாயிரப்

பகுதியில் தாம் தமக்கு முன் இருந்த திவாகரம், பிங்கலந்தை, உரிச்சொல் நிகண்டு, கயாதரம், அகராதி நிகண்டு ஆகிய மூன்றிலுள்ள சொற்களைத் தொகுத்துத் தம் நூல் செய்ததாகக் கூறுகிறார். (11 பகுதிகள் கொண்ட இந்நூலில் இரு பகுதிகளே அச்சிடப்பட்டன.) எனினும், கைலாச நிகண்டு சூளாமணி என்ப தொன்றே திவாகரருடைய நூற் பாகுபாட்டை விடுத்து, பிங்கலத்தின் பாகுபாட்டைப் பின்பற்றிச் செய்யப்பட்டது. (காலம் 17 நூ.) வேறெந்த நிகண்டும் பிங்கலத்தைத் தழுவி நூற்பாகுபாட்டை அமைக்கவில்லை.

இனி, இலக்கணமென்று பார்த்தால், நன்னூலார் (கி. பி. 1212) பிங்கலத்தைக் குறிப்பிடுகிறார். 'பிங்கலம் முதலா நல்லோர் உரிச்சொலில் நயந்தனர் கொளலே (4)'. இதனால், நன்னூலார் காலத்திற்கும் பிங்கலம் முற்பட்டதென்று தெரிவதோடு, அவர் காலத்திலும், நிகண்டு என்று வழக்காறு ஏற்படவில்லை, உரிச்சொல் என்றே அவ்வகை நூல்கள் வழங்கின என்றும் அறிகிறோம்.

அடுத்துச் சில உரை நூல்கள் தரும் குறிப்புக்களை ஆராய்வோம். இவ்வுரை நூல்கள் பின்வரும் நான்கும் ஆகும் :

யாப்பருங்கல விருத்தியுரை (11 நூ.) சிலப்பதிகார அரும்பதவுரை (11 நூ.) சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரை (12 நூ.) வீர சோழியம் பெருந்தேவனார் உரை (12 நூ.) இவற்றுள் முதலும் கடையும் இலக்கண நூல்கள். நடுவணவிரண்டும் இலக்கிய வுரைகள். அரும்பதவுரைகாரர் இரண்டு பிங்கலச் சூத்திரங்களைக் குறிப்பிடுகிறார். இரண்டில், விரையாவன யாவை என்று ஒரு சூத்திரத்தை இரண்டு முறை தருகிறார். இரண்டு இடங்களிலும் அடியார்க்கு நல்லார் இதை அப்படியே எடுத்தெழுதுகிறார் :

**கொட்டம் துருக்கம் தகரம் அகில்ஆரம்**
**ஒட்டிய ஐந்தும் விரை.**

*இது ஒரு குறட்பாவைப் போலத் தோன்றுகிறது. பிங்கலந்தையில் இதுவே ஒரு நூற்பாவாகப் பின் வருமாறு அமைக்கப்பட்டுள்ளது :*

**கொட்டம் துருக்கம் தகரம் அகில்ஆரம்**
**ஒட்டிய இவை ஐந்தும் விரை என உரைப்பர்.**

*சிலப்பதிகார உரைகள் பிங்கலந்தைச் சூத்திரத்தை எடுத்துச் சுருக்கித் தருகின்றன என்று கருதலாம்.*

*இனி, வீரசோழிய உரைகாரர், வெட்சி முதலான ஏழு மலர்களையும் செயல்களையும் குறிப்பிடுகிற பிரசித்தமான 'வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்' என்ற பஃறொடை வெண்பாவை எடுத்துக் காட்டுகிறார். இது முழுமையும் அப்படியே பிங்கலந்தை 6 ஆவது இயல் அனுபோக வகை 12 ஆவது பிரிவு படை வகை என்பதன் கீழ்த் தனிச் சூத்திரமாக (1474) காணப்படுகிறது. அப்படியே புறப்பொருள் என்று கூறுகின்ற அடுத்த பிங்கலந்தைச் சூத்திரத்தையும் அதே இடத்தில் வீரசோழிய உரை எடுத்துத் தருகிறது. இதுவும் அன்றி, இதே உரை சித்திரக் கவியைக் கூறும் 'மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம்' என்ற நீண்ட சூத்திரத்தை 179 ஆம் காரிகை உரையில் எடுத்துக் காட்டி, 'என்று அமிதசாகரனார் கூறியன கொள்க' என எழுதுகிறார். இது யாப்பருங்கலத்தில் ஒழிபியலின் இறுதியில் காணப்படும் தனிச் சூத்திரமாக உள்ளது. இதற்கு விருத்தி உரைகாரர் உரை எழுதியிருந்தபோதிலும் கூட, நூலின் பகுதி என்று கருதுமாறு அச்சிடப்பெறவில்லை. இதில் 29 அடிகள் உள்ளன. இவற்றுள் முதல் 14 அடிகள் மட்டும் பிங்கல நிகண்டில் மூன்றும் இயலில் 368 ஆம் சூத்திரமாகக் காணப்*

படுகின்றன. இதை அமிதசாகரர் எடுத்துப் பிற்பகுதிகளையும் சேர்த்து 29 அடியாக்கி ஒரு தனிச் சூத்திரமாகத் தம் நூலுள் வைத்தார் என்று கருத இடமுண்டு.

ஐம் பெருங் குழுவும், எண் பேராயமும் இவை என்று கூறுமிடத்து, அரும்பதவுரைகாரர் ஒரு வெண்பா மேற்கோள் தருகிறுர். ஆனல் அடியார்க்கு நல்லார் இரண்டு நூற்பாக்களைத் தருகிறுர். இவை பிங்கல நிகண்டுச் சூத்திரங்கள்; பாட பேதமாகத் தரப்பட்டுள்ளன (769, 770). அப்படியே இவர் இந்திரவிழவூரெடுத்த காதையில் குறிப்பிட்ட மருந்துகளான நான்கும் – சல்லிய கரணி, சந்தான கரணி, சமனிய கரணி, மிருத சஞ்சீவினி என்பன – திவாகரத்துள்ளும் பிங்கலத்துள்ளும் காணப்படுகின்றன.

**காலம்**

இதுவரை கூறிய ஆராய்ச்சிக் குறிப்புகளில் பல இடங்களில் பிங்கல நிகண்டின் காலம் பற்றிய செய்திகள் சிற்சில சொல்லப்பட்டன. திட்டமான இன்ன காலத்தில் தான் பிங்கலர் வாழ்ந்து நூல் செய்தார் என்று கூறுவதற்கான குறிப்புக்கள் எங்கும் இல்லை. ஆகவே கிடைக்கின்ற எல்லாக் குறிப்புக்களையும் ஒன்று தொகுத்து இன்ன காலத்திற்குள் இவர் வாழ்ந்து நூல் செய்திருக்கலாம் என்ற வரையறை மட்டுமே இங்குச் செய்யத் தக்கது.

இவர் திவாகரருடைய புதல்வர் என்ற கருத்தை முன்னமே குறிப்பிட்டோம். திவாகரர் 9 ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தார் என்றும், பிங்கலர் 10 ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தாரென்றும் கருதுதல் பொருந்தும். மற்றப்படி, தந்தை மகன் என்ற தொடர்பை ஒப்புக்கொண்டாலும் சரி, ஒப்புக்கொள்ளாவிட்டாலும் சரி, வேறு வகையாலும் இவர் காலம் இதுவே என்பதை உறுதி செய்ய

முடிகிறது. 11 ஆம் நூற்ருண்டினர் என்று முடிவு செய்துள்ள சிலப்பதிகார அரும்பத உரைகாரரும் யாப்பருங்கல விருத்தியுரைகாரரும் பிங்கலத்தை மேற்கோள் காட்டுவதால், பிங்கலத்தின் காலம் அவர்களுக்கு முற்பட்டது, 10 ஆம் நூற்ருண்டு ஆகலாம் என்பது ஏற்கக் கூடியதே.

அரசியல் துறையில் காணும் இரண்டொரு குறிப்புக்கள் இக்கருத்துக்குத் துணை செய்கின்றன. ஆரியரை மிலேச்சர் என்று திவாகரர் வழங்குவதால் இவரும் வழங்குகிருர் என்று கருதலாம். ஆனல் மற்ருெரு சொல் இங்குக் குறிப்பிடத் தக்கது. கீழோர் பெயருள் பல்லவர் என்ற சொல்லை இவர் முதலில் வைத்துச் சூத்திரம் செய்கிருர்:

பல்லவர் கயவர் பதகர் நீசர்
...........................
வெளிறர் அற்பர் கீழோர் பெயரே. 872

இச்சூத்திரம் சொல்லும் கீழோர் பெயர்கள் 13; ஆனல் திவாகரர் கீழ்மக்கள் பெயர் என்று 20 சொற்களைச் சொன்ன சூத்திரத்தில் (2:77) பல்லவர் என்ற சொல்லைச் சொல்லவில்லை. அவரைத் தழுவிச் செய்த பிங்கலம் பல்லவர் கீழோர் என்று சொல்கிறது. இதில் அடங்கிய அரசியல் நிலை வெளிப்படை. கடைச்சங்க காலத்தின் பின் சில நூற்ருண்டுகளில் தொண்டை நாட்டில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட பல்லவராட்சி ஓங்கி வடபாலிருந்த சோழநாட்டைக் கைப்பற்றிச் சோழரை ஒடுக்கிவிட்டது. இருந்த இடம் தெரியாமல் சோழர் ஒடுங்கிவிட்டனர்; பல்லவரின் கீழ்ச் சிறு தலைவராய் இருந்தனர் போலும். ஆனல் அப்பல்லவ அரசு 9 ஆம் நூற்ருண்டின் இறுதிப் பகுதியில் ஒடுங்கிவிட்டது. பெரும் வீரனைச் சோழ நாட்டின்

1 திவாகரர் காலம் கி. பி. 850 - 900 ஆகலாம். இது எமது 9ஆம் நூற்ருண்டு வரலாற்றில் இன்னும் விரிவாகச் சொல்லப்படும்.

தென்பகுதி முழுவதும் ஆண்டு கொண்டிருந்த வரகுண பாண்டியனை, தஞ்சையில் புதிய சோழர் அரசு 845 இல் நிறுவிய விசயாலய சோழன் மகனுன ஆதித்த சோழன், பல்லவ அரசனுய் 850ல் பட்டமேற்ற மூன்ரும் நந்திவர்மன் புதல்வனுன நிருபதுங்க பல்லவனுடன் சேர்ந்து கொண்டு 880 இல் திருப்புறம்பயத்தில் போரிட்டு, பெரும் வெற்றி அடைந்தான். அடைந்து சோழ நாட்டின் தென்பகுதியைப் பாண்டியனிடமிருந்து கைப்பற்றினுன். நிருபதுங்கன் 882 இல் இறந்து போகவே, ஆதித்த சோழன் சோழ நாட்டின் வட பகுதியையும் தொண்டை நாட்டையும் சேர்த்துக் கைப்பற்றி ஒடுங்கி இருந்த சிற்றரசைப் பேரரசாக்கினுன். காலம் கி. பி. 890. திவாகரரும் பிங்கலரும் சோழநாட்டுப் புலவர்; சிறந்த சைவர். நாட்டுப் பற்று நிரம்பியவர்கள். தாய்நாடு அன்னியர் ஆதிக்கத்தில் ஒடுங்கிக் கிடக்கிறதே என்று வருந்தி ஏங்கினுர்கள். திவாகரர் காலத்தில் திருப்புறம்பயப் போர் நடக்கவில்லை. ஆதித்தனும் நிருபதுங்கனும் பாண்டியனை வெற்றி பெறவில்லை; பின் வெற்றி பெற்றும், பல ஆண்டுகள் சோழ நாடு பல்லவர் வசமே இருந்தது. இந்த நிலையில் வாழ்ந்தவர் திவாகரர். ஆகவே அன்னிய ஆதிக்கத்தின் மீதுள்ள வெறுப்பு இருப்பினும், பல்லவரைக் குறித்து ஒரு சொல் சொல்லவில்லை; உயர்த்தியும் சொல்லவில்லை, தாழ்த்தியும் சொல்லவில்லை.

ஆனுல் பிங்கலர் நிலை வேறு. இவர் சோழநாடு மீண்டும் தனிப் பேரரசான காலத்தில் வாழ்ந்து நூல் செய்தார். பல்லவர் வீழ்ச்சியைக் கண்டார். அன்னிய ஆட்சி வீழ்ந்து விடவே, அதைப் பழித்துக் குறை பேசுவது, நாட்டுப்பற்றின் வெளிப்பாடு என எல்லோருமே கருதுவார்கள். இது மனித இயல்பு. பிங்கலர் இந்த நிலைக்கு விலக்கல்லர். ஆகவே பல்லவர்கள் மீதுள்ள ஆத்திரத்தைச் சொல்லில் வைத்துக் காட்டினுர். இது சரியா தவரு என்று ஆராய்வது

பயனுடையது அன்று. அடிமைத் தளை நீங்கிய மாத்திரத்தில் புதுச் சுதந்திரம் பெற்றோர், விட்டுச் சென்ற அன்னியரை எப்படி மதிப்பர் என்று 1930க்குப் பின் இந்தியாவில் வாழ்ந்தவர்களுக்கு நன்கு தெரியும்.[1] இந்த நினைவோடு பார்த்தால், பல்லவர் கீழோர் என்று பிங்கலர் சொல்வதன் பொருள் விளங்கும். இவர் சுதந்திரச் சோழ நாட்டிலிருந்து பேசுகிறார். காலம் கி. பி. 900 – 925 எனல் பொருத்தம்.

இதை யொட்டிய மற்றொரு குறிப்பும் தரலாம். எட்டாவது இயலில் இவர் மாப்பெயர் இரண்டாம் பகுதி விலங்கின் வகை என்ற பிரிவில், முதல் மூன்று நூற்பாக் களுக்குப்பின் 37 நூற்பாக்கள் யானையைப்பற்றிக் கூறுகிறார். வேறு எந்த விலங்குக்கும் இவர் இவ்வளவு விரிவாகக் கூறவில்லை. இங்கு மதயானை, அதற்கு உதவி செய்யும் யானை என்று இரண்டு சூத்திரங்கள். உதவி செய்யும் யானை யாவது, யானை பிடிக்க உதவுகின்ற பழகிய யானைபோலும். பிறகு யானையின் உடல் உறுப்புக்களை ஒன்றுவிடாமல் சொல்லுகின்றார். யானையின் புகர்முகம், நுதல் அணி, தவிசு, நுதற்பட்டம் என்ற பெயர்களையெல்லாம் இவர் கூறும்போது, யானைத் தொழிலை நன்கறிந்த ஓர் போர் வீரராய் இவர் இருந்திருப்பார் என்று தெரிகிறது. பெரிய யானைப்படையை இவர் கண்டார் என்றால், அது இவர் காலத்தில் சோழ நாட்டில் சோழர் ஆதிக்கம் மீண்டும் தலையெடுத்துச் சிறந்த யானைப் படைகள் எல்லாம் இருந்தன என்று எண்ண இடம் தருகிறது. 'யானையுடைய படை காண்டல் மிக இனிது' அல்லவா? இதுவும் மேலே குறிப்பிட்ட காலவரையறைக்குப் பொருந்திவரும் குறிப் பாகும். பொதுவாக நிகண்டு செய்கின்ற ஆசிரியர் எல்லா

---

1. இதற்கு வேடிக்கையான ஓர் உதாரணம்தரலாம்; சிதம்பரம் மீனாட்சி கல்லூரி மாணாக்கர் தங்கள் விடுதிக் கக்குசுக்கு லண்டன் என்று பெயர் வைத்திருந்தார்கள்-1929

# நிகண்டுகளின் வரலாற்று அட்டவணை

| எண் | நிகண்டு | ஆசிரியர் | சமயம் | நூற்றாண்டு | யாப்பு | பகுதி | சூத்திரம் | சொல் | பதிப்பித்தோர் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | திவாகரம் | திவாகரர் | சைவர் | 9 | நூற்பா | 12 | 2180 | 9,500 | தாண்டவராய முதலியார் | 1835 |
| 2 | பிங்கலம் | பிங்கலர் | சைவர் | 10 | நூற்பா | 10 | 4121 | 14,700 | சிவன் பிள்ளை | 1890 |
| 3 | உரிச்சொல் நி. | காங்கேயர் | சைவர் | 14 | வெண்பா | 12 | 287 | 3,200 | குமாரசாமிப் புலவர் | 1906 |
| 4 | கயாதரம் | கயாதரர் | சைவர் | 15 | கலித்துறை | 11 | 566 | 10,500 | வையாபுரிப் பிள்ளை | 1939 |
| 5 | சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் | சைனர் | 16 | விருத்தம் | 12 | 1197 | 11,000 | ஆறுமுக நாவலர் முதலானவர் | பல |
| 6 | அகராதி நிகண்டு | ரேவண சித்தர் | வீர சைவர் | 16 | நூற்பா | 10 | 3334* | ...... | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 1921 |
| 7 | ஆசிரிய நிகண்டு | ஆண்டிப் புலவர் | சைவர் | 17 | ஆசிரிய விருத்தம் | 11 | 263 | 12,000 | அச்சாகவில்லை | — |
| 8 | கைலாச நிகண்டு | கைலாசர் | சைவர் | 17 | நூற்பா | ... | ...... | 15,000 | பிங்கலத்தின் வழி; அச்சாகவில்லை | — |
| 9 | பாரதி தீபம் | திருவேங்கடபாரதி | ,, | 17 | கலித்துறை | 12 | 737 | 13,000 | அச்சாகவில்லை | — |
| 10 | பல்பொருட் சூடாமணி | ஈ. சுவர பாரதி | சைவர் | 17 | விருத்தம் | 3 காண்டம் | | | அச்சாகவில்லை | — |
| 11 | அரும்பொருள் விளக்க நிகண்டு | அருமருந்தைய தேசிகர் | சைவர் | 18 | விருத்தம் | | 700 | 12,000 | வையாபுரிப் பிள்ளை | 1931 |
| 12 | உசிதசூடாமணி | சிதம்பரக் கவிராயர் | சைவர் | 18 | விருத்தம் | 18 | 197 | — | | 1903 |
| 13 | பொதிகை நிகண்டு | சாமிநாத கவி | சைவர் | 18 | { I விருத்தம்<br>{ II ,, | 10 | 500 | 14,500 }<br>2228 } | வையாபுரிப்பிள்ளை | 193 |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 14 | பொருள் தொகை நிகண்டு | சுப்பிரமணிய பாரதி | சைவர் | 18 | நூற்பா | | 1000 | | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 1920 |
| 15 | ஔவை நிகண்டு | | | 18 | விருத்தம் | ? | ? | | வேதகிரி முதலியார் குறிப்பு | — |
| 16 | நாமதீப நிகண்டு | சிவசுப்பிரமணியக்கவிராயர் | சைவர் | 19 | வெண்பா | 16 | 800 | 12000 | வையாபுரிப் பிள்ளை | 1930 |
| 17 | நானார்த்த தீபிகை | முத்துசாமிப் பிள்ளை | சைவர் | 19 | விருத்தம் | 18 எதுகை | 1110 | 5432 | அனவரத விநாயகம் பிள்ளை | 1936 |
| 18 | கந்தசுவாமியம் | சுப்பிரமணிய தேசிகர் | சைவர் | 19 | நூற்பா | | | 2743 | சில பகுதிகள் மட்டும் | — |
| 19 | அபிதானத் தனிச் செய்யுட் சிந்தாமணி | கோபாலசாமி நாயகர் | சைவர் | 19 | பலவகை யாப்பு | | | | முதல் பகுதி மட்டும் | 1878 |
| 20 | சிந்தாமணி நிகண்டு | வைத்திலிங்கம் பிள்ளை | சைவர் | 19 | | | 400 | 3000 | | 1874 |
| 21 | வேதகிரியார் நிகண்டு | வேதகிரி முதலியார் | சைவர் | 19 | விருத்தம் | 1 | 600 | | 11ஆம் தொகுதி மட்டும் | 1842 |
| 22 | விரிவு நிகண்டு | அருணாசல நாவலர் | சைவர் | 19 | விருத்தம் | 12 | 1100 | | அச்சாகவில்லை | — |
| 23 | பொதிய நிகண்டு | ? | | 19 | விருத்தம் | ? | ? | | வேதகிரி முதலியார் குறிப்பு | — |

குறிப்பு : இப் பட்டியலில் கண்ட 7, 8, 9, 18-23 நிகண்டுகள் எங்கும் கிடைக்குமென்று தோன்றவில்லை; இக் குறிப்புகள் வையாபுரிப் பிள்ளை நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை. ஏனையவை யாவும் நூல்களிலிருந்து யாம் ஆராய்ந் தெடுத்த குறிப்புக்கள். ஆசிரியருள் ஒருவர் சைனர்; ஏனைய அனைவரும் சைவர். நிகண்டுத் தன்மை பொருந்தி வீரமா முனிவர் பெயரால் வழங்கும் சதுரகராதியை இவ்வட்டவணையில் சேர்க்கவில்லை.

*எண் 6 : அகரம் முதல் வகரம் வரை, மொழி முதல் எழுத்துக்கள், 10 வரிசை,

நூற் பிரிவுகளையும் நன்கு உணர்ந்து நூல் செய்வார் என்று எதிர்பார்க்க வேண்டும். அவ்வாறே இவரும் செய்திருக்கிறார். ஆயினும் யானையைப் பற்றிய பகுதி மிகவும் சிறப்புடையது.

அரசியல் துறையில் குறிப்பிட்டது போல சமயத்துறையிலும் குறிப்பிடத் தக்கது ஒன்று உள்ளது. திருமால் சமயத்துக்கு வந்தால், நம்மாழ்வார் 9 ஆம் நூற்றுண்டு; அவர்காலத்தில் பாகவதர் என்ற சொல் ஆட்சிக்கு வந்ததாகத் தெரியவில்லை. நாதமுனிகள், மறைந்துபோன திவ்வியப் பிரபந்தங்களை வெளிப்படுத்தி முதல் வைணவ ஆசாரியரானர். பின்னரே ஆசாரிய பரம்பரை தோன்றிற்று. பாகவதர்களும் தோன்றினர். இக்காலம் 9 ஆம் நூற்றுண்டின் இறுதி. திவாகரர், பாகவதர் நாராயண சமயத்தோர் என்று குறிப்பிடுவதால், அவர் காலமும் இதுவே என்று கூறுதல் பொருத்தம். பிங்கலர், வைணவர் பாகவதர் நாராயண சமயத்தோர் என்று ஒரு சொல் சேர்த்துச் சொல்லுகிறர். வைணவர் என்ற சொல் 9 ஆம் நூற்றுண்டில் ஆட்சியில் இல்லை. ஆனல் 10 ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஆட்சிக்கு வந்துவிட்டது. நாதமுனி உய்யக்கொண்டார் மணக்கால் நம்பி என்போர் 9 ஆம் நூற்றுண்டிலும் 10 ஆம் நூற்றுண்டுத் தொடக்கத்திலும் இருந்தோர். ஆசாரியரும் பாகவதரும் ஏற்பட்டவுடனே பாகவதர் கோஷ்டியும் வைணவர் என்ற சொல்லாட்சியும் தோன்றின. இச் சொல்லைத் தெரிந்து குறிப்பிடுகிற பிங்கல நிகண்டு 10 ஆம் நூற்றுண்டுத் தொடக்கம் என்று கருதுவது பொருத்தமாகும்.

இவ்வாறே இவர் பாட்டியல் பற்றிக் கூறி இருப்பதும் ஒரு தொடர்பு நோக்கி அறியத்தக்கது. 9 ஆம் நூற்றுண்டில் அளவற்ற பாட்டியல் இலக்கண நூல்கள் தோன்றின என்று

காண்கிறோம்[1]. இவரும் தம் நிகண்டு நூலில் அளவில் அதிகமான பாட்டியல் செய்திகளைப் புகுத்தி இருக்கின்றார். இதற்குக் காரணம், இவர் 9 ஆம் நூற்றாண்டை அடுத்துப் பின்வந்தமையே. அந்த நூற்றாண்டின் இலக்கிய வரலாற்றை நன்கறிந்த இவர் அடுத்த நூற்றாண்டில் தாம் ஒரு சொல்லகராதியாகிய நிகண்டைச் செய்தகாலத்து, வழக்கில் வந்த முத்தமிழ் விரிவையும் காட்டவேண்டும் என்று எண்ணி, இயற்றமிழ்ப் பகுதியான பாட்டியல் பகுதியை விரித்துக் கூறினர் என்றே தோன்றுகிறது.

## பதிப்பு

பிங்கல நிகண்டு 1890இல் தி. சிவன் பிள்ளை, மீனாட்சி சுந்தரம் பிள்ளை மாணக்கரான சுப்பராயச் செட்டியார் உதவி கொண்டு, நன்கு பரிசோதித்து அச்சிட்டார். இவர் பள்ளி களின் கண்காணிப்பாளரா யிருந்தமையால், ஆங்கிலப் பயிற்சியுடையவராய், நூலை அதற்குரிய அம்சங்களோடு மிக நன்கு அச்சிட்டிருக்கிறார். சிறப்புப் பாயிரத்துக்கு உரை எழுதியுள்ளார். ஒரு பக்கத்தில் சூத்திரமும் எதிர்ப் பக்கத்தில் அதன் உரையும், எத்தனைப் பெயர்கள் என்பதை எண்ணி எண்ணும் சேர்த்து அச்சிட்டார். நூலிறுதியில் விரிவான சொல்லகராதி (27 பக்கம்), நூற் பகுதி, உட்பகுதி முதலியன காட்டும் அட்டவணை என்ப வற்றோடு அச்சிட்டிருக்கிறார். அக் காலத்தில் இந் நூல் அச்சிடப்பட்டுள்ள முறையும் அமைப்பும் மிக்க அழகு பொருந்தியவை. நூலை ஏட்டிலுள்ளபடி சிவன் பிள்ளை அச்சிடவில்லை, முன்பின் மாற்றிப் புதுமுறையில் வரிசைப் படுத்தி அச்சிட்டார் என்பது வையாபுரிப் பிள்ளை குறிப்பு. இவ்வரிசை முறையில் மிகவும் பிழைபாடு காணப்படுகிறது. பல் பொருட் கூட்டத் தொரு பெயர்த் தொகுதி என்ற

1 எமது 9ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் இது விரி வாய்க் கூறப்படும்.

பகுதியில் அமையவேண்டிய மிக அதிகமான பொருள்களும் சூத்திரங்களும் தொடர்பில்லாமல் நூலெங்கும் வெவ்வேறிடங்களில் அமைக்கப்பெற்றிருக்கின்றன. சிவன் பிள்ளை நூற்பாக்களை மாற்றிப் புதுமைப்படுத்தியபோது, சூடாமணி நிகண்டு முதலியவை அகராதி எதுகை வரிசையாக அமைந்திருத்தலை நோக்கித் தாமும் அப்படியே நூலை எதுகை முறையில் அமைத்தார் என்று தெரியக் கிடக்கிறது. வழக்கம்போல் ஒரு ரிப்பன் பிரஸ் பதிப்பு 1917இல் வெளிவந்தது. இதில் எந்த அபிவிருத்தியும் இல்லை. சிவன் பிள்ளை எதிர்ப் பக்கத்தில் அச்சிட்டதை இப் பதிப்பு நூற்பாவின் கீழே தருகிறது. நூல் முழுமையும் நன்கு பரிசோதித்து, தொடர்பு இன்றியிருப்பனவற்றை நன்கு தொடர்புபடுத்திய ஆராய்ச்சிப் பதிப்பு இன்றியமையாத தேவை. லிங்விஸ்டிக்ஸ் என்ற பெயரில் மொழி இயல்துறையில் ஆராய்ச்சி வளர்ந்து வரும் இன்றைய நாளில் நிகண்டு நூல்களுக்குச் சிறந்த ஆராய்ச்சிப் பதிப்பு வெளிவராதது பெருங்குறை.

அத்தியாயம் 5

# இலக்கணம்-2 : பாட்டியல்

## முன்னுரை

காலத்தில் பின்நோக்கிச் செல்லச் செல்ல, நூல் வரலாற்றுச் செய்திகள் கிடைப்பது அரிது; அரிதிற் கிடைப்பனவும் மிக்க குழப்பந் தருவன. மேலும் அவை ஆதாரபூர்வமாய் இருப்பதும் இல்லை, அவற்றைக் காலவரையறை செய்வதும் கடினமாயிருக்கிறது. இந்த நிலைமை இப் பத்தாம் நூற்றாண்டில் ஆராயும் பல நூல்களுக்கு நன்கு பொருந்துவது; சிறப்பாக இலக்கணத் துறையில் அதிகம் பொருந்துவது.

தொல்காப்பியர் காலத்தின் பின் நெடுங்காலம் இலக்கணத் துறையில் தமிழில் நூல்கள் எழவில்லை என்று தெரிகிறது. ஒன்பதாம் நூற்றாண்டு முதல்தான், இலக்கண நூல் துறை விரிந்து பெருகிக்கொண்டு போகிறது. அந்த நூற்றாண்டில் அகம் புறம் என்ற இரு துறைகளிலும் இலக்கணங்கள் தோன்றின. புறப்பொருள் இலக்கணம், சிறப்புப் பொருந்திய புறப்பொருள் வெண்பாமாலை; இன்றளவும் சிறந்த ஆட்சிபெற்று வழங்குகிறது. அகப்பொருள் இலக்கணமாகத் தமிழ்நெறி விளக்கம் என்ற ஓர் அரிய நூல் எழுந்தது. இது நூற்பாவும், மேற்கோளும் புதிதாய்ப் படைத்த ஒரு நல்ல நூல். ஆனால் துரதிஷ்டவசமாக இந்நூலில் ஒரு சிறு பகுதிதான் இன்று கிடைக்கிறது.[1] இடுகுறியினாற் பெற்ற பெயர் நிகண்டு என்று

1 தமிழ் நெறி விளக்கம் பொருளியல்: இதை அரிதின் முயன்று ஐயரவர்கள் 1937இல் பதிப்பித்தார்கள். உள்ள பகுதி, முழுநூலின் ஒரு சிறு துணுக்கு என்றே சொல்லத்தக்கது.

பண்டைய உரைகள் கூறினும், பழைய நிகண்டு நமக்குக் கிடைக்கவில்லை. அக்காலத்தில் உரிச்சொல் என்று பெயர் ஏற்றிருந்த திவாகர நிகண்டுதான் நமக்குக் கிடைக்கும் முதல் நிகண்டாகும். அணியியல் என்ற ஓர் அணியிலக் கணமும் தோன்றியிருந்தது; நூல் இல்லை. எழுத்து, சொல், யாப்புப் பற்றித் தனி இலக்கணங்கள் தோன்றவில்லை. அவிநயம், செயிற்றியம் போன்ற பெரு நூல்களில் எழுத்தும் சொல்லும் இருந்தன; அந் நூல்கள் இன்று இல்லை. இதன் வரலாறு 9ஆம் நூற்றாண்டு வரலாற்றில் சொல்லப்படும்.

இதுவரை கூறியவை, ஒன்பதாம் நூற்றாண்டு வரை தோன்றியிருந்து இன்றளவும் கிடைப்பனவாயுள்ள இலக்கண நூற்பரப்பாகும். இப் பரப்பு இதனோடு முடியவில்லை. அந்த நூற்றாண்டில் பாட்டியல் என்ற ஒரு புதிய இலக்கண நூல் நெறி தோன்றிப் பெரு வளர்ச்சி பெற்றிருந்தது.

பாட்டியல் நூல்கள் 8–9 நூற்றாண்டுக் காலத்தில் தோன்றின என்று கருதலாம். இக்காலத்துக்கும் ஓர் அமைதி கூற முடியும். தொல்காப்பியர் காலத்திலும் சங்க காலத்திலும் தமிழ் நூல்களின் வகைகள் பெருகவில்லை. பதிற்றுப்பத்து ஓர் இலக்கிய அமைப்பு உடையது; ஏனையவை யாவும் தனியான அமைப்புப் பெறவில்லை; யாவும் தொகை நூல்களே. பின்னர்த் தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் சில எண்ணால் அமைப்புப் பெற்றனவே அன்றி, பிற வகை அமைப்பு அவற்றுள் இல்லை. காப்பியங்கள் தனித்த நெறியில் சென்றன. இவற்றின் பின்னர் நாயன்மார் ஆழ்வார் பாசுரங்கள் எழுந்தன. இங்கு அந்தாதி, மடல், எழு கூற்றிருக்கை, அங்க மாலை, இரட்டை மணிமாலை, உலா, மும்மணிக் கோவை முதலான புது அமைப்புக்கள் இடம் பெறலாயின. கோவை ஒன்றும் முன்னமே இருந்தது. இந்த நிலையில் இவற்றிற்குச் சற்றே பின் வந்த இலக்கண

ஆசிரியர் இவை அனைத்தையும் தழுவி இவற்றிற்கு ஓர் இலக்கணம் செய்ய முற்பட்டனர் என்பது தெரிகிறது. இவ்வாறு செய்யப்பட்ட இலக்கண வகையே பாட்டியல் எனப்படுகிறது.

சங்க நூல்கள் யாவும், ஐங்குறுநூறு, கலித்தொகை, பதிற்றுப் பத்து நீங்கலாக, தனிப்பாடல்கள். தொடர்ந்த பாடல்களாக வருபவற்றுக்குப் பாட்டியல் இலக்கணம் கூறுகிறது. பாட்டுடைத் தலைவன் ஒருவனைச் சார்த்தி நூல் செய்யும் மரபு ஏற்பட்டுவிட்டது. பாண்டிக் கோவையை இதற்கு எடுத்துக் காட்டாகக் குறிப்பிடலாம். இவ்வாறு நூல் செய்யும் போது மங்கலம், பொருத்தம் என்ற சோதிடக் கருத்துக்கள் தொடர்பு கொள்ளலாயின. எழுத்து, சொல், சீர் முதலியவை தலைவன் பெயருக்குப் பொருந்தி வர வேண்டும் என்று கருதுதல் இயல்பு. இதுவே பாட்டியலின் தொடக்கப் பகுதியாகிய பொருத்த வியல். இன்ன வகைப் பாட்டுக்கள் இவ்வாறு பாடப் பெறுதல் வேண்டும், அதற்கு இலக்கணம் இன்னது என்பதே பாட்டியற் பகுதி.

பாட்டியல் என்ற புது நெறியின் விளக்கமாகப் பத்தாம் நூற்றுண்டில் கிடைப்பது பன்னிரு பாட்டியல் என்ற ஒரு சிறு நூலே. இதன் துணை கொண்டும், யாப்பருங்கல விருத்தி, நவநீதப் பாட்டியலுரை, வச்சணந்தி மாலையுரை என்பவற்றின் துணை கொண்டும் பார்க்கும் போது, ஒன்பதாம் நூற்றுண்டில் பாட்டியல் என்ற புது இலக்கண நெறியில் கடல் போன்ற ஒரு பெரு வளர்ச்சியும் விரிவும் ஆழமும் ஏற்பட்டிருந்தன என்பது தெளிவாகப் புலப்படுகிறது. அக்காலத்தும் முன்னும் எழுந்த நூல்கள் இந்திர காளியார் செய்த இந்திர காளியம், அவிநயனுர் செய்த அவிநயம், பரணர் பாட்டியல், பொய்கையார் பாட்டியல், செயிற்றியனுர் செய்த செயிற்றியம் என்பன சிறப்பாய்க் குறிப்பிடத்

தக்கன. இவை யன்றி வேறு எண்ணற்ற நூல்களும் தோன்றியிருந்தன. உரைகளை நன்கு ஆராயும் போது, இவற்றுள் பல முத்தமிழும் குறித்த நூல்களென்றும் அறிகிருேம். இவை யாவும் ஒன்பதாம் நூற்றுண்டு வரலாற்று விரிவாக ஆராயப் பெறும். ஆனுல், இந்த நூல்களில் ஒன்றுமே இன்று கிடைக்கவில்லை; நூல்கள் இறந்து போயின என்றே தெரிகிறது.

இவற்றின் சாரமாகப் பத்தாம் நூற்றுண்டில் இவற்றி லிருந்து திரட்டப்பட்ட ஒரு சிறு நூலே பன்னிரு பாட்டியல் என்பது. பாட்டியல் நெறிகள் இரு பிரிவினவாக இருந்தன. ஒன்று அகத்தியர் என்பவர் நெறி; மற்றது யாமளேந்திரர் செய்த இந்திர காளிய நெறி. வச்சணந்தி மாலை இந்திர காளியத்தின் வழியது என்று அதன் உரையால் அறிகிருேம். நவநீதப் பாட்டியலும் சிதம்பரப் பாட்டியலும் அகத்தியர் பாட்டியலின் வழி.

பதினும் நூற்றுண்டு வரை எழுந்த பாட்டியல் நூல்களைப் பின்வருமாறு அவற்றின் யாப்பைக் குறிப்பிட்டு ஓர் அட்டவணைப் படுத்தலாம் என்று தெரிகிறது.

பாடப்படுவது பாட்டு. பாட்டுக்குச் சொல்லியவாறு பொருத்தமும், வகையிலக்கணமும் கூறும் இலக்கணப் பகுதி பாட்டியல் என்ற பெயர் பெற்றது. பிரபந்த இலக்கணம் என்பதும் இதுவே. பிரபந்தம் என்பது வட சொல்; செம்மையாக யாக்கப்பட்டது என்பது சொல்லின் பொருள். (யாத்தல் - கட்டுதல்; யாப்பு என்பதைக் கருதுக.) வைணவ அருட்பாசுரங்கள், திவ்வியப் பிரபந்தம் எனவும் நாலாயிரப் பிரபந்தம் எனவும் வழக்குண்மையும் இங்கு நோக்கத் தக்கது. சைவத்தில், பதினொராம் திருமுறை, பிரபந்த மாலை என்றே வழங்கப் பெற்றமையும் கர்ணத்தகும். அகக் கூற்றுக்கு உரிய உருக்கள் இருபத்தெட்டு என்று

கூறுமிடத்து, சிலப்பதிகார உரைகாரர் இருவரும் 'கந்த முதலாகப் பிரபந்த உரு ஈருக இருபத்தெட்டும்' என்று இச் சொல்லைச் சொல்லுகிறூர்கள்; அடியார்க்கு நல்லார் மட்டும், பிரபந்தம் என்றது, அடி வரையறையின்றிப் பல தாளத்தாற் புணர்ப்பது' என்கிறூர். இதனுல், அவர் காலமாகிய பன்னிரண்டாம் நூற்றூண்டில் கூட, பிரபந்தம் என்ற சொல்லுக்கு இன்று நாம் கருதுகிற ஓர் இலக்கியப் பிரிவு – சிற்றிலக்கியம் – என்ற பொருள் அமையவில்லை என்பது தெரிகிறது.

## பாட்டியல் - அட்டவணை

| எண் | நூற் பெயர் | யாப்பு | காலம் நூ. | பிரபந்தத் தொகை |
|---|---|---|---|---|
| 1 | அகத்தியர் பாட்டியல் | நூற்பா | 8—9 | நூல் இல்லை |
| | அவிநயனூர், கபிலர், பரணர், பொய்கையார், இந்திரகாளியம் முதலான பல | | | |
| 2 | கல்லாடனூர் பாட்டியல் | குறள் | 8—9 | ,, |
| 3 | பன்னிரு பாட்டியல் | நூற்பா | 10 | 74 |
| 4 | வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியல் | வெண்பா | 12 | 56 |
| 5 | நவநீதப் பாட்டியல் | கட்டளைக் கலித்துறை | 14 | 44 |
| 6 | வரையறுத்த பாட்டியல் ஒரு பகுதி மட்டும் | ஷை | 14 | — |
| 7 | சிதம்பரப் பாட்டியல் | விருத்தம் | 16 | 62 |
| 8 | பிரபந்த மரபியல் | நூற்பா | 16 | 66 |
| 9 | இலக்கண விளக்கப பாட்டியல் | நூற்பா | 17 | 68 |
| 10 | பிரபந்த தீபிகை | விருத்தம் | 18 | 85 |

# பன்னிரு பாட்டியல்

தமிழில் பாட்டியல் என்பது மிகவும் பிற்காலத்தில் ஏற்பட்ட ஓர் இலக்கண நூற்பிரிவு. இன்று கிடைக்கின்ற முதல் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் செய்த தொல்காப்பியர் எழுத்து, சொல், பொருள் மூன்றுக்குமே மூன்று அதிகாரங்கள் செய்தார். ஐந்திலக்கணம் என்ற வழக்கு மிகவும் பிற்காலத்தது. ஐந்திலக்கணம் எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்பன. இவற்றுள் யாப்பு அணி என்ற இவ்விரண்டையும் தொல்காப்பியர் பொருளதிகாரத்தின் செய்யுளியலிலும் உவமை இயல் மரபு இயல்களிலும் அடக்கி விட்டார் என்று கருதுகிறோம்.

பிற்காலத்தில் வரும் பாட்டியற் கருத்துக்கள் சிலவற்றைத் தொல்காப்பியர் செய்யுளியலில் எண் வகை வனப்பினுள் அடக்கிக் கூறியிருக்கிறார்; உரை எழுதிய உரை ஆசிரியரும், இப்பகுதிக்குப் பின் வந்த பிரபந்தங்களை எடுத்துக் காட்டியிருப்பதும் நோக்கத் தக்கது. அச் செய்யுளியலில் ஒரு பிரிவுக்குப் பெருக்கமாகப் பாட்டியல் என்ற பகுதி இன்னும் பிற்காலத்தில் தோன்றியது.[1] இதனுள் சிறப்பாகக் கூறப்படும் பொருள் பாட்டுடைத் தலைவனுக்கும் செய்யும் நூலுக்கும் அமைய வேண்டிய பொருத்தங்கள், பாட்டுக்களால் செய்யப்படுகின்ற பிரபந்தங்களின் இலக்கணங்கள் ஆகிய இரண்டு பொருள்கள்.

## பன்னிரு பாட்டியல்

பன்னிருபாட்டியல் அச்சிட்ட ரா. இராகவையங்கார் ஏட்டிலுள்ளபடி ஆசிரியர் பெயர்களை அச்சிட்டார். மூலத்தில்

1 பாட்டியல் வரலாறு பற்றிய ஒரு விளக்கக் குறிப்பை எமது 13 ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு பக்கம் 212 இலும் 14 ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு பக்கம் 96-100 நவநீதப் பாட்டியல் என்ற தலைப்பிலும் காணலாம்.

ஒரே ஆசிரியர் பாடிய பல சூத்திரங்கள் சேர்ந்து வந்தால் ஒவ்வொன்றுக்கும் ஆசிரியர் பெயர் குறிப்பிடுவது வழக்கம் இல்லை; தொகுப்பான சூத்திரங்களின் இறுதியில் மட்டும் ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பட்டிருக்கும். இடையில் ஓர் இடத்தில் ஓர் ஆசிரியர் பெயர் குறிப்பிடத் தவறிவிட்டாலும் அல்லது பெயர்த்தெழுதும்போது தவறிவிட்டாலும், வேறு பல சூத்திரங்களும் ஒரே ஆசிரியர் பெயரில் சேர்ந்துவிடும். அவ்வாறு சேர்ந்த இடங்களும் இந்நூலில் சில இடங்களில் காணப்படுகின்றன. பொதுவாக நூலினுள் கூறியது கூறல் மிகுதியாக உள்ளது.

பாட்டியல் கூறும் நூல்கள் இன்று கிடைப்பனவற்றுள் பழமையானது பன்னிரு பாட்டியல். பன்னிரு பாட்டியல் வேறு; பன்னிரு படலம் வேறு. பன்னிரு படலம் என்பது புறப் பொருள்களைக் கூறும் இலக்கண நூல்; அதை அகத்தியர் மாணக்கர் பன்னிருவரும் செய்தனர் என்பது வழக்கு. அந்த நூல் முழுமையுமே இன்று இல்லை. தொல்காப்பியர் அதனுள் வெட்சிப் படலம் செய்தார் என்பது ஓர் இலக்கிய வழக்கு; இதை இளம்பூரணர் மறுக்கிறார்.

ஆனல் பன்னிரு பாட்டியல் என்பது மேலே குறிப்பிட்டபடி முற்றிலும் வேருன பொருள் அமைப்பு உடையது. இந்த நூலைச் செந்தமிழ்ப் பிரசுரமாக ரா. இராகவையங்கார் அவர்கள் பரிசோதித்து 1912 இல் வெளியிட்டார்; இரண்டாம் பதிப்பு 1951 இல் வெளியாயிற்று. இப்பதிப்பு அரிதின் முயன்று செய்த திருத்தமான பதிப்பு. இரண்டிலும் பன்னிரு பாட்டியல் என்று சொல்லுகின்ற தொகைக்கு விளக்கம் கிடைக்கவில்லை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூலில் பதினைந்து பாட்டியற் புலவர் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. "அதுவே கொண்டு, பாட்டியல் நூல் பன்னிரண்டு இவையென்றே அவற்றை இயற்றினர் இன்னர்

இன்னுரென்றே துணியுமாறு இல்லை" என்பது அப்பதிப்புக் களில் உள்ள குறிப்பு.

மேலும் அங்கு, 'நூற் பெயரானது, ஆகு பெயராய் வெவ்வேருசிரியர்களால் இயற்றப்பட்ட பாட்டிலக்கண நூல் பன்னிரண்டினை உணர்த்துவதுடன், அப் பன்னிரண்டு நூல்களிலிருந்து பிற் காலத்தவர் ஒருவர் எடுத்துத் தொகுத்த சூத்திரங்களை உடையதொரு தொகை நூலினையும் உணர்த்தி நிற்கும்' என்ற குறிப்பும் உள்ளது. இக் குறிப்புக்கள் பொருந்துவன அல்ல. ஆசிரியர்களை விட்டு, நூல் கூறும் பொருளை நாம் கருதுவோமாளுல், பாட்டியலின் உறுப்புக்கள் பன்னிரண்டே என்பது தெரிய வரும். பன்னிரண்டு பொருள் களைக் கூறுகின்றமையால் இந்நூல் பன்னிரு பாட்டியல் என்று பெயர் பெற்றது. பிற்கால நூல்கள் பாட்டியல் உறுப்புக்கள் பன்னிரண்டும் இன்னின்ன என்று கூறு கின்றன. பன்னிரண்டாம் நூற்றுண்டில் தோன்றியவச்சணந்தி மாலை பத்து உறுப்புக்களை ஒரு வெண்பாவால் கூறுகிறது:

**தொகுத்துரைத்த மங்கலம் சொல்எழுத்துத் தானம்**
**வகுத்தபால் உண்டி வருணம் - பகுத்தநாள்**
**தப்பாக் கதிகணம்என் றீரைந்தின் தன்மையினைச்**
**செப்புவதாம் முன் மொழியின் சீர்.**

இவற்றுக்குப் பொருத்தம் பத்து என்றும் பெயர் வழங்கும்.[1] இப் பத்தாவன மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் என்பனவாம். பின்வந்த பாட்டியல் நூல்களாகிய வச்சணந்தி மாலை, நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கத்தின் பாட்டியல் என்பன யாவும் இந்தப் பத்துப் பொருத்தங் களையே கூறுகின்றன. ஆளுல் பன்னிரு பாட்டியலானது

1 உலக வழக்கிலும் தசப் பொருத்தம் என்று மணப் பொருத்தம் வழங்குவது குறிப்பிடத்தக்கது.

இவற்றோடு கன்னல் புள் என்ற இரண்டையும் சேர்த்துப் பன்னிரண்டு பொருத்தங்களைக் கூறுகிறது. இப் பன்னிரண்டு ஆகிய தொகையினால் இதற்குப் பன்னிரு பாட்டியல் என்ற பெயர் அமைந்தது. ஆராயும்போது பொருத்தங்கள் நூல்களில் ஒரே வரிசை முறையாக அமைக்கப் பெறவில்லை. மேலே காட்டிய வச்சணந்திமாலைப் பாட்டியலின் வரிசையிலேயே சிதம்பரப் பாட்டியல் குறிப்பிடுகின்றது. மற்றவையெல்லாம் வெவ்வேறு வரிசை முறையில் அமைந்திருக்கின்றன. பன்னிரு பாட்டியல் கொண்ட முறையைப் பின்னே கூறுவோம்.

பன்னிரண்டு என்ற எண் ஒரு சிறப்புடைய எண். வாழ்க்கையில் அது பொருளுடையதாயிருப்பது போலவே கதையிலும் இலக்கியத்திலும் சிறப்பான ஆட்சி பெற்றிருக்கிறது. மாதங்கள் பன்னிரண்டு. பாரதத்தில் பாண்டவர் வனவாசம் செய்யச் சொல்லியது பன்னிரண்டாண்டுக் காலம். பாண்டி நாடு பன்னீராண்டு வற்கடம் சென்றது என்று இறையனார் களவியல் கூறும். அந்நூலே அகத்துறையில் களவொழுக்கத்துக்குத் தலைவியின் வயது பன்னீராண்டு என்று கூறும். அகத்தியர் மாணாக்கர் பன்னிருவர்; தொல்காப்பியர் மாணாக்கரும் பன்னிருவர். புறப் பொருள் உரைத்த பண்டை இலக்கணம் பன்னிரு படலம். மேலும்பல. இவை போலவே, இந்நூலும் பன்னிரு பாட்டியல் எனப்படும்.

## நூற்பொருள்

இனி, நாம் இங்குக் கருதுகின்ற பன்னிரு பாட்டியல் என்பது, எழுத்தியல், சொல்லியல், இனவியல் என்ற மூன்று பாகுபாடுகளைக் கொண்டது. இவற்றுள் எழுத்தியலானது எழுத்து (எழுத்தின் பிறப்பு), வருணம், கதி, உண்டி, பால், தானம், கன்னல், புள், நாள் என்ற ஒன்பதையும் கூறுகிறது. அடுத்த சொல்லியலானது, சீர்க்கணம் மங்கலம் சொல்

(பெயர்) என்ற மூன்றையும் விளக்குகிறது. இதனோடு பன்னிரு பொருத்தங்கள் முடியும். இனவியலானது பா, பாவினம் என்ற பொருள்களைப் பேசுகிறது. பாவினம் என்ற தலைப்பில் பிரபந்த இலக்கணம் உரைக்கிறது.

முதல் இரு இயல்களும் முதன் மொழிப் பொருத்தங்கள் பன்னிரண்டையும் கூறுகின்றன. அவற்றுள் எழுத்தியலின் முதல் தலைப்பு, பிறப்பு: எழுத்தின் பிறப்பு. இது எழுத்துக்களை யார் யார் படைத்தனர் என்று கூறுகிறது. அடுத்த உறுப்பு வருணம். இங்கு அந்தணர் (மறையவர்) அரசர் (காவலர்) வணிகர் வேளாளர் சாதி என்ற நால் வகைச் சாதிக்குரிய எழுத்துக்கள் சொல்லப்பட்டுள்ளன. மறையவர் வணிகரைக் கூறும்போது, ஒரே கருத்துடைய இரு வேறு சூத்திரங்கள் வெவ்வேறு ஆசிரியரால் செய்யப் பெற்றவை இங்குத் தொகுக்கப் பெற்றிருப்பதைக் காண்கிறேம். இவற்றைப் பின்னர்க் குறிப்பிடுவோம்.

அடுத்தது கதிப் பொருத்தம். கதியாவது தேவர், மனிதர், நரகர், விலங்கு என நான்கு; இன்ன எழுத்து இன்ன கதி, இது ஆகும் இது ஆகாது என்று கூறுகிறது. பின் உண்டி (உணவு) அமுத எழுத்து, நஞ்செழுத்து என இரு வகை. பிற பாட்டியல் இலக்கணங்கள் இவ்விடத்தில் தசாங்கம் என்பன யாவை எனக் கூறி, அதனுள் பொருந்தும் உண்டியும் நஞ்சும் குறிப்பிடும். அடுத்து, பால் ஆண், பெண், அலி என. பின்னர் தானம் (இடம்) - நட்பு உதாசீனம் பகை யென மூன்று. ஆனல் பின்வந்த நூல்கள், பாலன் குமாரன் இராசன் மூப்பு மரணம் எனத் தானம் ஐந்து எனக் குறிப்பிடும்.

அடுத்து வரும் இரு பொருத்தங்களாகிய கன்னல் புள் என்பன பின் வந்த நூல்களில் சொல்லப் பெறவில்லை. கன்னல் என்பது நாழிகை. புள் என்பது வல்லூறு,

ஆந்தை, வலியான், குருகு, மயில் என ஐந்து. நாள் என்பது எழுத்துக்குரிய நட்சத்திரம் கூறுவது. இதனோடு எழுத்தியல் முடிந்து சொல்லியல் தொடங்குகிறது.

முதலாவது சீர்க்கணம், அசையும் சீரும் கூறி, இயமானன், திங்கள், நிலம், நீர், சூரியன், வானம், தீ, காற்று என்ற எட்டுக்கும் உரிய நாள் இன்னது, அசை சீர் கணம் இவை எனக் கூறுகிறது. இவ்வெட்டும் சிவபிரானது அட்டமூர்த்த வடிவங்கள் என்ற சைவ மரபு இங்கு அறியத் தக்கது. மங்கலச் சொல், முதன் மொழியாக வரத் தக்க மங்கலமுடைய சொல் இன்னது என்பது. பின் பெயர்: இதுவே பின்னர் சொல் எனக் கொள்ளப்பட்டது போலும். எண்வகைப் பெயர்கள் குலம், குடி, கோத்திரம், குணம், மணம், ஆணை ஆகிய சிறப்பு, இயற்பெயர் சிறப்பியற்பெயர் என்பன இங்கு விளக்கப் பெறுகின்றன. இதனோடு பன்னிரு பொருத்தங்களும் முடிகின்றன.

அடுத்து நூலின் மூன்றும் பிரிவாகிய இனவியல். இங்கு பாப் பொருத்தம், பாவினம் என இரு பிரிவுகள். பாப் பொருத்தம் என்பது முன் போல, நால் வகைப் பாக்களும் யாருக்குப் பொருந்தும் என்பது கூறும். பாவினம் என்ற பிரிவு பிரபந்தங்களின் இலக்கணங்களைக் கூறுகின்றது. நூலின் மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பில் 61 பெயர்களே எண்ணிக் காட்டப்பட்டுள்ளன. இவற்றில் 22, 24, 49, 51, 57 ஆகிய தலைப்புக்கள் முறையே 2, 9, 3, 2, 2 பிரபந்தங்களைக் கொண்டுள்ளன வாதலால் இவற்றையும் எண்ண 74 பிரபந்தங்களாகின்றன.

இந்நூலையடுத்து வந்த வச்சணந்தி மாலையானது 71 பிரபந்தங்களைக் கூறுகிறது. ஆனால் 17 ஆம் நூற்றாண்டுத் தொடங்கி, பிரபந்தம் 96 என்ற வழக்கு நிலை பெற்று விட்டது. இவற்றுள் சிறப்பாக இங்கு பிள்ளைத் தமிழ்,

கலம்பகம், உலா, பரணி, மெய்க்கீர்த்தி, ஆற்றுப் படை, கோவை, கீழ்க்கணக்கு என்பன குறிப்பிடத் தக்கவை.

பன்னிரு பாட்டியலில் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நால் வகைக் கவிகளைக் குறிப்பிடவில்லை.

நூல் கூறும் சில கருத்துக்களை இங்குக் குறிப்பிடுதல் தகும். கணக்கு மேற்கணக்கு கீழ்க்கணக்கு என இருவகை எனப் பின்னுல் (344–8) கூறுகிறது. பதினெண் கீழ்க் கணக்கு ஒழித்துப் பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும் மேற்கணக்கு என்பதற்கு இதுவே இலக்கணமாகும். ஆண் பிள்ளைக்கும் பெண் பிள்ளைக்கும் இந்நூல் கூறும் உவமைகள் (193–4), ஏனையவற்றையும் தழுவி விரிந்து, பின்னுல் உவமானங்களை எடுத்துரைக்கும் தனி நூற் பிரிவாகப் பிரிந்தன (14 நூ.). உவமை கூறுமிடத்து, பெண்களுக்கும், ஆண் பிள்ளைகளுக்கும் இப்பாட்டியல் ஏழு பருவம் கூறுகிறது. ஆண்பாற் பருவம் வழக்கில் இல்லை. சில இடங்களில் வேருேர் மதம் என்று கூறிக் கொள்கிறது.

ஒரே கருத்தைச் சொல்லுகின்ற சூத்திரங்கள் இரண் டிரண்டாக நூலெங்கும் காணப்படுகின்றன. பின் வரும் எடுத்துக்காட்டுக்களைக் காண்க.

அந்தணர் சாதி (மறையவர் சாதி) சூ. 6, 7 :

**நறுமலர்த் திசைமுகன் ஈசன் நாரணன்**
**அறுமுகன் படைத்தன அந்தணர் சாதி.**

**திருமால் அரனே திசைமுகன் குமரன்**
**மரபிற் படைத்தன மறையவர் சாதி.**

இரண்டும் பொருள் ஒன்றே. ஆனுல் இரண்டும் பரணர் பாடியன என்பது போலக் குறிப்பு உள்ளது. இப்படியே அவிநயனுர் பெயருள்ள இரு சூத்திரங்கள் (170, 171):

**வெள்ளையும் அகவலும் விருத்தமும் கலியும்**
**வஞ்சியும் எஞ்சா மங்கலம் பொருந்தும்.**

**வெள்ளை அகவல் விருத்தம் கலியே**
**வஞ்சி என்றிவை மங்கலப் பாவே.**

*கதிப் பொருத்தம் கூறும் மூன்று சூத்திரங்கள் 19, 20, 21 காண்க; மூன்றும் அதே பொருள் கூறும். 20, 21 இந்திர காளியார், பரணர் என முறையே குறிப்பிட்டுள்ளன. 19 பெயர் விடுபட்டது போலும்; இத்தகைய எடுத்துக் காட்டுக்களை ஆராயும் போது, இரண்டும் ஒருவரே பாடியன அல்ல, வெவ்வேறு ஆசிரியர் பாடிய வேறு வேறு நூல்களி லிருந்து எடுக்கப் பெற்றவை, எப்படியோ பெயர்கள் விடுபட்டுப்போயின என்றுதான் கருத வேண்டியிருக்கிறது.*

*தமிழ்ச்சங்கப் பதிப்பில் 98 மிகைச் சூத்திரங்கள் அடிக் குறிப்பில் தரப்பட்டுள்ளன. முன் கூறியது போல, நூலிலேயே சூத்திரங்கள் மிகுதியாக இருப்பதால், இவையும், மூலத்தோடு சேர்ந்தவை என்று கொள்வதில் இழுக்கில்லை.*

*நூல் முழுமையும் நூற்பாவில் இயன்றிருப்பினும், கல்லாடனர் பெயரால் 11 குறட் பாக்கள் (61–71) இதனுள் வருகின்றன; ஒருகால் கல்லாடர் குறட்பாவில் ஒரு பாட்டியல் செய்திருந்தார் போலும்.*

*பாட்டியலானது, பாவியல் என்றும் வழங்கப் பெற்றது; பாட்டு – பா. ' பாவியல் பாடப் பழியது முடியும் ' என்பது தொல்காப்பியனர் பெயரில் நவநீதப் பாட்டியல் உரை (21) காட்டும் ஒரு மேற்கோள்; கலாவியல் என்றே கல்லாடர் பாட்டியலை அது வழங்குகிறது; கல்லாடனர் கலாவியல், பொய்கையார் கலாவியல் என்ற தொடர்கள் காண்க; கவியியல் என்ற பாடபேதமும் உண்டு.*

*இந்நூலில் எழுத்தின் பிறப்புக்குத் தெய்வங்கள் இவ ரிவர் என்று குறிப்பிடுவது பிற நூல்களில் காணப்படாத*

செய்தி. இப்பகுதி பொய்கையார் பாட்டியலில் சொல்லப் பட்டுள்ளது. ஆசிரியர் ஓரிடத்தில் (149) பெயர்ப் பொருத்தத்தின் கீழ் ஒரு குறிப்புத் தருகிருர். பெயர்கள் எண் வகை – குலம், குடி, கோத்திரம், குணம், மணம், ஆணை, சிறப்பு, இயற்பெயர் என்பன. இவை ஒவ்வொன் றுக்கும் தனித்தனி சூத்திரம் உள்ளது. மனப் பெயர் என்பதைக் குறிப்பிடு மிடத்து,

**மனப்பெய ராவன தனக்குத் தானே**
**எனக்கிது வேண்டும்என் றெய்தும் பெயரே.**

என்று சொல்லி, 'இஃது இராசாக்கள் நாயன் அடியார் தோழன்' என்று எழுதுகிருர். இதைப் பார்க்கும் போது, இது போல்வன தொகுப்பாசிரியர் எழுதியன என்றும், இவரே சில சூத்திரங்களைச் செய்து வைத்தார் என்றும் கருதத் தோன்றுகிறது.

**ஆசிரியர்**

இந்நூலில் தொகுத்துள்ள பாட்டியல் ஆசிரியர்களின் பெயர்கள் பின் வருவனவாகும்: அகத்தியர், அவிநயனுர், இந்திர காளியார், கபிலர், கல்லாடர், கோவூர்கிழார், சீத்தலையார், செயிற்றியனுர், சேந்தம் பூதனுர், நற்றத்தனுர், பரணர், பல்காயனுர், பெருங்குன்றூர் கிழார், பொய்கையார், மாபூதனுர் என்னும் பதினைவர். இவர்களுள் அவிநயனுர் இந்திர காளியார் என்ற இருவரும் முத்தமிழ் இலக்கணம் செய்திருந்தார்கள். அவ்விலக்கணங்கள் தொல்காப்பியர் நெறியினின்றும் வேறுபட்ட நெறியினை உடையவை என்று உரைக் குறிப்புக்களால் அறிகின்ருேம். இந்திர காளியார் செய்த நூல் இந்திர காளியம். இவரது இயற்பெயர், யாமளேந்திரர் என்று அடியார்க்கு நல்லார் கூறுகின்ருர். செயிற்றியனுர், நற்றத்தனுர் என்ற இருவரும் சிறப்பான இலக்கண நூல் செய்திருந்தார்கள். கல்லாடர்,

பரணர், பொய்கையார், என்ற மூவரும் பெருஞ் சிறப்புடைய பாட்டியல் நூல்கள் செய்திருந்தார்கள். அப்படியே கபிலரும், பல்காயனரும், பாட்டியலும் பிற துறை இலக்கணங்களும் செய்திருந்தனர் போலும். மற்று, கோவூர் கிழார், சீத்தலையார், சேந்தம்பூதனர், பெருங்குன்றூர் கிழார், மாபூதனர், பன்னிரு பாட்டியலை அன்றி வேறிடத்தில் இலக்கண நூல் செய்ததாக வழக்கில்லை. இப்பெயர்கள் பிழையாக எழுதப்பட்டனவோ என்று ஐயுறத் தக்கன. பரணர் பாட்டியல் என்பது பருணர் வருணர் என்றும் சொல்லப்படும். கல்லாடர் நூலும், பொய்கையார் நூலும், நவநீதப் பாட்டியல் உரையிலும், செயிற்றியம் பல்காயம் என்பவை யாப்பருங்கல உரையிலும் சொல்லப்படும். இவற்றால் அக்காலத்தில் மிகப் பலவான பாட்டியல் நூல்கள் வழக்கில் இருந்தன வென்று அறிகிறோம். அன்றியும் பாட்டியல் கலாவியலென வழங்கவும் பட்டது. பரணர், கபிலர், கோவூர் கிழார், பெருங்குன்றூர் கிழார், பொய்கையார், சேந்தம்பூதனர் என்போர் சங்க காலத்துப் புலவர்கள். சீத்தலையார், மணிமேகலை செய்த சீத்தலைச் சாத்தனர் ஆகலாம். சீத்தலை என்பது இவரது ஊர். அன்றியும் இந்நூலில் காட்டிய சூத்திரங்கள் சிலவற்றை வச்சணந்தி மாலை உரை ஆசிரியரும், நவநீதப் பாட்டியல் உரைகாரரும் எடுத்துத் தருகின்றனர். சில பாடலுக்கு வேறு ஆசிரியர் பெயர் சொல்லப்பட்டுள்ளதையும் காண்கிறோம். ஆசிரியர்களையும் அவர்கள் பெயருள்ள சூத்திரங்களின் தொகையையும் காட்டும் அட்டவணை யொன்று பின்னே சேர்க்கப்பட்டுள்ளது.

## தொகுப்பாசிரியர்

பன்னிரு பாட்டியல் ஒரு தொகுப்பு நூல் என்பது முன்னமே சொல்லப்பட்டது. ஒருகால் இவ் வாசிரியர் செய்த நூல்கள் எக்காரணத்தாலோ இறந்து போகவே,

*இப்பாட்டியல் தொகுத்த புலவர், கிடைத்த நூற்பாக்களை மட்டும் தொகுத்து இப்படியொரு நூலாக்கினரோ என்று கருத இடமுண்டு. தொகுத்த ஆசிரியர் பெயர் வரலாறு எதுவும் விளங்கவில்லை. எனினும், இவர் சைவ சமயத்தினர் என்பதைச் சொற்களுக்குத் தெய்வமாக அட்ட மூர்த்தங்களைக் கூறுவதால் அறியலாம்.*

**நீடிய மானன் திங்கள் நிலநீர்**
**சூரியன் வானம் அங்கி காற்றென**
**இயம்பினர் தெய்வ நலம்பெறு புலவர். 104**

**நீரே நிலமே வானே நீள்மதி**
**சீரிய மானன் செந்தீத் தெறுகதிர்**
**காற்றெனக் கிளர்ந்த கூற்றன என்ப. 114**

*இவ்விரண்டும் சிவபிரானது அட்ட மூர்த்தங்களைக் கூறும். இரண்டில் ஒன்று தொகுப்பாசிரியர் செய்ததென்றும், மற்றொன்று இந்திர காளியார் செய்ததென்றும் கருத இடமுண்டு; இரண்டும் ஒரே கருத்தைத் தெரிவிப்பன. இவ்வாசிரியர் நாமகளிடத்து ஈடுபாடு மிக்கவரென்பதை இவர் பாயிரமாக நாமகள் வாழ்த்துக் கூறுவதால் அறியலாம்:*

**சொல்லின் கிழத்தி மெல்லிய லிணையடி**
**சிந்தையில் வைத்து முன்னோர் பொருள்நெறி**
**கூட்டி யுரைப்பல் பாட்டியல் மரபே.**

*மேலும் இவர் மங்கலச் சொல் கூறுமிடத்து (139 மிகைச் சூத்திரம்),*

**எழுத்தின் கிழத்தி நாமகள் ஆதலால்**
**பெண்ணெழுத் தல்லது முன்வைத் துரையார்.**

*எனக் கூறுவதாலும் அறிகிறோம். பண்டைய இலக்கண*

நூல்களில் நாமகளுக்கு வாழ்த்துக் கூறித் தொடங்குவது ஒரு மரபாயிருந்தமை[1] இங்குக் குறிப்பிடத் தக்கது.

இந் நூலுள் பாயிரமும் 360 சூத்திரங்களும் உள்ளன: எழுத்தியல் 96; சொல்லியல் 59; இனவியல் 205. இவற்றுள் ஒன்று வெண்பா (205); பதினொன்று கல்லாடனார் பெயரில் வந்துள்ள குறட் பாக்கள் (61 – 71). ஏனைய நூற் பாக்கள். ஒரே பொருளைப் பற்றிப் பலர் செய்த பாடல்கள் சேர்ந்துள்ளன; பாடினோர் பெயர் தொகுப்பாகக் குறிப்பிடப் பட்டிருந்தபோதிலும், சில பிழையாகலாம், சில விடுபட் டிருக்கலாம் என்று முன் காட்டினோம்; இறுதி 26 சூத்திரங் களில் ஆசிரியர் பெயர் குறிப்பிடப் படவில்லை; ஆசிரியரே செய்தவற்றுள் இவையும் அடங்கலாம்.

**பிரபந்தங்கள்**

பன்னிரு பாட்டியல் சில பிரபந்தங்களைப் பற்றிக் கூறும் கருத்துக்களைச் சிறிது அறியலாம். அது கூறும் பல சிறப்பில்லாத பிரபந்த வகைகள் இக் காலத்து வழங்கவில்லை, இலக்கிய வரலாற்றில் பெயர் கேட்டது மில்லை – சாதகம், பல்சந்தமாலை, ஒலியந்தாதி, யானைத் தொழில் முதலாயின. பிள்ளைத் தமிழ் இங்கு பிள்ளைப் பாட்டு எனப் பெறுகிறது. உலாவைக் கூறுமிடத்து இவர் பெண்பாலுக்கு ஏழு பருவமும் வயதும் கூறியது போல, ஆண்பாலுக்கும் கூறுகிறார். தலைவன் உலா வருங்கால் ஏழு பருவ மகளிரும் கண்டு காமுறுகிறார்கள் என்பது உலாவிற் போந்த பொருளாதலால், பெண்ணுக்குப் பருவமும் வயதும் உணர்த்தல் பொருத்தமே. ஆண்பாலைக் குறித்து இவ்வாறு எந்த வரலாறும் அமைய

1 பன்னிரு பாட்டியலுக்கு முன்னிருந்த தவளத்தாமரை என்ற பழம் பாடலும், என்னையுடையாள், இமையவர்கள் மோலி, புத்தகமும் ஞானத்து, என்பவை முதலான பிற்கால வெண்பாக்களும் இங்குக் கருதத் தக்கன. இன்னும் பிற்காலத்தில் ஆயகலைகள், படிகநிறமும் என்ற பாட்டுக்கள் எழுந்தன.

முடியாது. பெண் உலா வருவதும் ஆடவர் பார்த்துக் காமுறுவதும், தமிழர் வாழ்க்கை நெறிக்கும் இலக்கிய நெறிக்கும் மாறானது. எனவே, இவர் ஏன் ஆண்பாற் பருவம் கூறினார் (228—235) என்பது விளங்கவில்லை. இவர் குறிப்பிடும் பருவங்கள் – பாலன் 7; மீளி 10; மறவோன் 14; திறலோன் 15; காளை 16; விடலை 30 வரை; முது மகன் முப்பதுக்கு மேல். இது வழக்கில் எங்கும் இல்லாத ஓர் இலக்கணம்.

தசாங்கம் கூறும் 100 பாடல் கொண்ட சின்னப்பூ என்ற பிரபந்தம் எங்குமே வழக்கில் இல்லை. இந்நூல் தத்துவராயருடைய பிரபந்தத் திரட்டில் மட்டும் அபூர்வமாய் ஒரு தனிப் பிரபந்தமாய்க் காணப்படுகிறது – 15ஆம் நூற்றாண்டு. மிகவும் சிறப்பான பிற்காலப் பிரபந்தமாகிய தூது இங்கு சொல்லப் பெறவில்லை. தனியான முதல் தூதுப் பிரபந்தம் 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உமாபதி பாடிய சாத்திர நூலாகிய நெஞ்சுவிடு தூதாகும். இப் பாட்டியல் தொகுத்தார் காலத்தில் தூதுப் பிரபந்தம் தனியே எழாமையால் இவர் குறிப்பிடவில்லைபோலும். இதனாலேயே ஏனைய பிரபந்தங்கள் இருந்து, இத் தொகுப்பாளர் அவற்றை அறிந்து குறிப்பிட்டார் என்று நாம் கருதவேண்டும். ஆனால் எடுத்துக் காட்டே இல்லாத சின்னப் பூவை இவர் குறிப்பிடுவதால் ஒருகால் இவர் காலத் துக்கு முன் சின்னப்பூ இருந்து பின்னர் வழக்கு வீழ்ந்திருந் தலும் கூடும்.

இவர் பரணியிலக்கணம் கூறியிருப்பது, இருபதாம் நூற்றாண்டுக்குரிய பரிபாஷையில் சொன்னால் ஒரு புதிராக இருக்கிறது. இராசராசன் காலத்திலெல்லாம், பரணிப் பிரபந்தம் எழுந்ததாக வரலாறு இல்லை. முதற் குலோத்துங்க சோழன் (1070 – 1120) மீது கவிச் சக்கரவர்த்தி சயங்

*கொண்டார் பாடிய கலிங்கத்துப் பரணியே இன்று வழக்கிலுள்ள பரணிப் பிரபந்தங்களில் பழமையானது.[1] அதற்கு முன்னும் இரு பரணிப் பிரபந்தங்கள் பாடப்பெற்றிருந்தன; கொப்பத்துப் பரணி (கி. பி. 1055), கூடல் சங்கமத்துப் பரணி (கி. பி. 1065) என்பன.[2] எனவே இவற்றுக்கு நெடுங் காலம் முன்னமே இப்பாட்டியலாசிரியர் 4 சூத்திரங்களில் 23 வரிகளில் பரணிப் பிரபந்த இலக்கணத்தை நன்கு விரித்தெழுதியிருப்பது எங்ஙனம் நடைபெறும் என்பது கேள்வி. இவர் செய்த இலக்கணத்தைப் பார்த்துப் பின்னுல் இதன்படி இலக்கியம் செய்தனர் என்பது கொள்ளவியலாத கூற்று. ஆகவே, ஒருகால் இப்பிரபந்தம் பற்றிய சூத்திரங்கள் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டனவோ என்ற ஐயம் எழுகிறது; அல்லது 10ஆம் நூற்ருண்டுக்கு முன்னமே ஏதேனும் பரணி இருந்திருக்கவேண்டும், இன்று கிடைக்கவில்லை.*

மடன்மாப் பெண்டிர் ஏரூர், ஏறுவர்
கடவுள் தலைவ ராய்வருங் காலே

*என்னும் இலக்கணம் திருமங்கையாழ்வார் பாடிய இரு திருமடற் பிரபந்தங்களையும் அறிந்து எழுதியது என்பது தெளிவு. அரி பிறப்பு என்ற ஒரு பிரபந்தம் – திருமாலின் தசாவதாரங்களையும் சொல்லிப் பரவி, பாட்டுடைத் தலைவனைக் காக்க வேண்டி அகவல் விருத்தம் ஒருபது இயற்றுதல்: இத்தகைய நூலெதுவும் இல்லை; பிற்காலப் பாட்டியல்கள் இதைத் தசப்பிராதுற்பவம் எனக் கூறும். தாண்டகம் அறுசீரிலும் எண் சீரிலும் வரும் எனப் பாட்டியல் கூறுகிறது. அப்பர் திருத்தாண்டகம் எண் சீர் மட்டுமே. திருமங்கையாழ்வார் நெடுந்தாண்டகம் எண் சீர்,*

1 எமது தமிழிலக்கிய வரலாறு, 12 ஆம் நூற்ருண்டு பார்க்க.

2 ஷை 11 ஆம் நூற்ருண்டு, பிரபந்த இலக்கியம் என்ற அத்தியாயம் பார்க்க, பக்கம் 360 - 365.

குறுந்தாண்டகம் அறுசீர். அப்பர் பாடலுள் அறுசீரில் வரும் விருத்தங்கள் நேரிசை என்று பெயர் பெற்றுள்ளன.

துயிலெடை நிலை என ஒரு பிரபந்தம் சொல்லப் பட்டுள்ளது. 'மன்னன் முன்னர் விடியல் எல்லையில், தந்ததிறையரும், தாராத்திறையரும் நின்மொழி கேட்டியங்க வேண்டினார், துயிலெழுக என விளம்புதல்' என்று கூறும். இதுவே திருப்பள்ளியெழுச்சி; 'எது எமைப் பணி கொளு மாறு அது கேட்போம் எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே' என்று மாணிக்கவாசகர் பாடும் திருப்பள்ளியெழுச்சி இக் கருத்துக்கு மூலமாயிருக்கலாம்; யாண்டுநிலை என்று சொல்லப்பட்ட பிரபந்தம் (328) இன்றைய பல்லாண்டு போலும் :

**வையக மன்னவன் மன்னுக பல்யாண்டு**
**எய்துக என்பது யாண்டுநிலை யாகும்.**

"இது பெரும்பான்மை நேரிசை வெண்பாவாற் பாடப் பெறும், சிறுபான்மை எல்லாப் பாவானும் பாடப் பெறும்"– இவ்வாறு பாடிய வழக்கு இல்லை. பெரியாழ்வார் சேந்தனார் இருவர் பாடிய பல்லாண்டும் விருத்தப்பாக்களே. உழத்திப் பாட்டு குறத்திப் பாட்டு என்ற இரண்டும், பிற்காலத்தில் பள்ளு, குறவஞ்சி என்ற விரிந்த நாடகப் பண்பமைந்த பிரபந்தங்களாக 17ஆம் நூற்றாண்டு தொடங்கி வளர்ந்தன. ஆசிரியர் காலத்தில் இவற்றுக்கு இலக்கியம் இருந்ததில்லை. இவ்விரண்டையும் ஊன்றி நோக்கும் போது, பரணிப் பிரபந்தத்துக்குக் குறிப்பிட்ட ஐயம் இங்கும் எழுகிறது. பன்னிரு பாட்டியல் இவற்றுக்கு விரிவான இலக்கணம் சொல்லுகிறது. அந்நூல் தோன்றிய காலத்தில் இவ்வகைப் பிரபந்தங்கள் இல்லை. பிற்காலத்தில் அவ்விலக்கணத்துக்கு முழுமையும் பொருந்துகின்ற விரிவான பிரபந்த வகைகள் தோன்றியிருக்கின்றன. இலக்கணத்தை வைத்து இலக்கியம்

*செய்தல் என்று கூறுவது பொருந்தாது. இவ்விலக்கியங்கள் தோன்றிய பின் இலக்கணம் செய்யப் பெற்றதென்றால், பன்னிரு பாட்டியலில் காணப்படும் சூத்திரங்கள் பிற்காலத்தில் சேர்க்கப்பெற்றன என்றுதான் கருதவேண்டும். இக் கருத்து பின்னும் ஆராய்தற்குரியது.*

*ஒருபோகு என்ற தலைப்பில் தேவபாணிக்கு இலக்கணம் சொல்லப்பட்டுள்ளது :*

**தேவ பாணி தெரியுங் காலை**
**மாசறு துழாய் முடி மலைந்த சென்னி**
**நீர்நில மளந்த நெடியோன் மேற்றே.** 210

*தேவபாணி – தேவரைப் பாடும் பாட்டு ; இது தொல்காப்பிய உரைகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. அடியார்க்கு நல்லார் உரையால், இது பெருந் தேவபாணி சிறு தேவபாணி என இரு வகைப்படு மென்றும், இவை முத்தமிழுக்கும் பொது என்றும், இயற்றமிழில் கொச்சக ஒருபோகு ஆகுமென்றும், நாடகத் தமிழில் முறையே பல தேவரையும் வருணப் பூதரையும் துதிக்கு மென்றும் அறிகிறோம். அவர் கூற்றுக்குப் பொருந்தவே பன்னிரு பாட்டியலானது இயற்றமிழில் ஒரு போகு என்ற தலைப்பில் தேவபாணியைக் கூறுகிறது. இது திருமாலைத் துதிப்பது என்பது இங்குச் சொல்லப்பட்ட பொருள். நக்கீரர் பாடிய பெருந் தேவபாணி என்ற சிறு பிரபந்தம் பதினொராம் திருமுறையுள் அடங்கியுள்ளது; இவர் காலம் கி.பி. 900–925 என்று வேறிடத்தில் குறிப்பிட்டிருக்கிறோம். பன்னிரு பாட்டியலார் அவருக்குப் பின் வந்தாராகிறார். அடியார்க்கு நல்லார் கருத்து இவ்விதம் இருந்த போதிலும், பல தேவரையோ வருணப் பூதரையோ துதிக்கின்ற பாடல்களோ நூல்களோ தமிழில் இல்லாமையால், நூலாக வரும்போது, சிறு தேவபாணி பாட்டியலார்*

கூறுவது போல திருமாலைப் பரவுவது என்றும், பெருந் தேவபாணி பெருந்தேவராகிய சிவபிரானைத் துதிப்ப தென்றும் கருதலாம். யாப்பருங்கல விருத்தியில், 'வீடு பேறுலகங் கூடுக வென்று, அருளுடை ஒருவனாகிய அருகனைப் பரவும்' கலிப்பா வொன்று, பெருந்தேவபாணிக்கு உதாரண மாகக் காட்டப்பட்டுள்ளது. (ப. 296.)

தொடர்நிலைச் செய்யுள் தலை இடை கடை என மூன்று வகை என்று சூத்திரம் 351 சொல்லுகிறது, அடுத்து 'தலையெனப் படுவது' மட்டும் விளக்கப்பட்டுள்ளது. இடை, கடை இரண்டும் அங்கு விளக்கப்படவில்லை. தொடர் நிலைச் செய்யுளுக்கு அடுத்த இரண்டு தலைப்புக்கள் பாட்டு, (பத்துப் பாட்டு) கடைநிலை என்று உள்ளன. இவை யிரண்டும் முறையே இடை நிலையும் கடைநிலையும் ஆகுமா என்பது தெளிவாகவில்லை. கடைநிலை என்பது பரிசில் தராது உழப்பும் குரிசிலை முனிந்து சொல்வது என்று சொல்லுகிறார். பிங்கல நிகண்டில், தலைவன் பரிசில் தாராதாகில், இன்னது செய்தால் தலைவன் அழிவான் என்று சில சூத்திரங்கள் சொல்லியிருப்பது கருதத்தக்கது.

பன்னிரு பாட்டியல் இறுதிச் சூத்திரம், இங்கு சொல்லியன அல்லாமல் வேறு பிரபந்தங்கள் தோன்றினும் அவற்றையும் மரபுக்குள் அடக்கி கொள்ள வேண்டும் என்று சொல்லுகிறது.

347 ஆம் சூத்திரம் மேற் கணக்கைக் கூறுகிறது :

**ஐம்பது முதலா ஐந்நூ றீறு**
**ஐவகைப் பாவும் பொருள்நெறி மரபில்**
**தொகுக்கப்படுவது மேற்கணக் காகும். 347**

அகவலும் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம் பதீரு
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்கெனவும்
வெள்ளைத் தொகையு மவ்வகை யெண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே. 346

*இங்குச் சொல்லப்பட்ட இலக்கணம் பொதுவாகப் பத்துப் பாட்டு எட்டுத் தொகை ஆகியவற்றைக் கருதியே சொல்லப் பட்டது எனத் தெரிகிறது. வெள்ளைத் தொகை என்பதனால் கீழ்க் கணக்கு வெண்பாவினால் வருதல் வேண்டும் என்பது இலக்கணமாகிறது; பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் யாவும் வெண்பாவால் இயன்றிருந்ததால் இவ்வாறு இலக்கணம் செய்தார் போலும்.*

*பிரபந்தங்கள் 96 என்பது பிற்கால வழக்கு. சிவந் தெழுந்த பல்லவராயன் உலா என்பதுதான் இவ்வழக்கைக் குறிக்கிறது; 'தொண்ணூற்றாறு – கோலப் பிரபந்தங்கள் கொண்ட பிரான்' என்று இவ்வுலா வுடையார் முதன் முதல் குறிப்பிடுகிறார். இந்நூலின் காலம் 1635 என்பர். இக் குறிப்புக்கு முன், 96 என்ற எண்ணை யாரும் குறிப்பிடவில்லை; அன்றியும் பழைய பாட்டியல் நூல்கள் எவையும் தொண்ணூற்றாறு பிரபந்தங்களைச் சொல்லவும் இல்லை. 16 ஆம் நூற்றாண்டில் தோன்றியது எனக் கருதத் தக்க பிரபந்த மரபியலும் 96 என்று குறிப்பிடுகிறதே யன்றி, இவை யாவை என்று வரையறை செய்யவில்லை. சதுரகராதிதான் இவற்றை வரையறுத்து உரைக்கிறது. பிரபந்தங்கள் அகம் புறம் என்ற இரு பொருளும் பற்றி எழுந்தன. கோவை போன்றவை அகப்பாட்டு; ஆற்றுப் படை போன்றவை புறப்பாட்டு.*

**காலம்**

*இந்நூல் குறிப்பிடும் பிரபந்தங்கள் 74 ஆகும் என்று சொன்னோம். இனவியல் என்ற பகுதியில் சில பாட்டியல்*

ஆசிரியர் பெயர்கள் சொல்லப்பட்டிருப்பது உண்மை. எனினும் இப்பகுதியுள் பெரும் பான்மை தொகுப்பாசியரே செய்தது என்று கருதவேண்டும்; இல்லாத பிரபந்தத்துக்கு விரிவான இலக்கணம் கூறமுடியாது.

மெய்க்கீர்த்தி என்ற சிறப்பான ஒரு பிரபந்த வகையை இந்நூலும் குறிப்பிடுகிறது (313-4). 'சீர் மெய்க்கீர்த்தி' என்ற தலைப்பில் கோவூர் கிழார் பெயரில் இச்சூத்திரங்கள் உள்ளன. ஆசிரியர்களைக் குறித்துப் பேசிய போது, இப் பெயருடைய பாட்டியல் ஆசிரியர் இருந்தது ஐயப் பாடுடையது என்ற கருத்து சொல்லப்பட்டது. இச் சூத்திரங்கள் தொகுப்பாசிரியரே செய்திருக்கலாம். அச் சூத்திரங்கள் இரண்டும் பின் வருவன :

**சீர்நான் காதி இரண்டடித் தொடையாய்**
**வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்,**
**அந்தத் தவன்வர லாறு சொல்லியும்,**
**அவளுடன் வாழ்கெனச் சொல்லியும், மற்றவன்**
**இயற்பெயர் பின்னர் சிறக்க யாண்டெனத்**
**திறம்பட உரைப்பது சீர்மெய்க் கீர்த்தி.**

**நிலைபெறு சீர்மெய்க் கீர்த்தியின் அந்தம்**
**உரையால் முடியும் எனஉரைத் தனரே.**

இங்குச் சொல்லப்பட்ட இத்தனை இலக்கணங்களும்—நான்கு சீருள்ள பாட்டு, இரண்டடித் தொடை, மெய்ப் புகழ் சொல்லுதல், அவன் வரலாறு சொல்லுதல், தேவியோடு வாழ்க எனல், இயற்பெயர், யாண்டு உரைத்தல், அந்தம் உரையாய் முடித்தல் – இத்தனையும் பொருந்தியுள்ள முதல் மெய்க் கீர்த்தி இராசராசனுடைய மெய்க் கீர்த்தியாகும். சோழப் பேரரசு வளர்ந்து ஒரு பெரு நிலைக்கு வந்தபின் இம் மன்னன் தன் கல்வெட்டுக்களில் இவ்வாறு மெய்க்கீர்த்தியை அமைத்தான் என்பது தெரிகிறது. இதை அப்படியே

இலக்கணமாக எடுத்துவைத்திருக்கிற பன்னிரு பாட்டியலார் இராசராசன் காலத்திலே தோன்றியிருத்தல் இயல்பே. இராசராசன் ஆட்சி கி. பி. 985 இல் தொடங்கிற்று. இவன் ஆட்சி தொடக்கத்திலிருந்தே மிக்க சிறப்புடையதா யிருந்தது. அரசவைப் புலவர்கள் தொடக்கத்திலேயே மெய்க்கீர்த்தி பாடியிருப்பார்கள். அவற்றை நன்குணர்ந்து இப்பாட்டியல்காரர் இலக்கணம் வகுத்திருப்பதால், அவர் காலம் இத்தொடக்க காலமே; 985 – 1000, பத்தாம் நூற்றுண்டின் இறுதிப் பகுதி என்று கருதுகிறோம்.

இக்கூற்றுக்கு ஆதரவு தரும் வகையில் பின்னும் சில குறிப்புக்களையும் இங்குச் சொல்லலாம். பன்னிரு பாட்டியல் கூறும் பிரபந்த வகைகளில் சிறப்பில்லாதன பல, சிறப் புடையன சில. சிறப்புடையவற்றை மட்டும் நாம் இங்குக் கருதுவோமாஞல் அவற்றுட் பல, 10ஆம் நூற்றுண்டுக்கு முன்னமே தோன்றியிருந்தன என்று காண்கிறோம். பரணியை முன்னமே குறிப்பிட்டோம். கோவை : பாண்டிக் கோவை, திருக்கோவையார். உலா : திருக்கைலாய ஞான உலா. கலம்பகம் – நந்திக் கலம்பகம். ஆற்றுப் படை : திருமுரு காற்றுப் படை முதலாகப் பத்துப் பாட்டில் உள்ள பல. பிள்ளைத் தமிழ் என்று முன்னமே தனியான பிரபந்தம் எழுந்திராத போதிலுங்கூட, பெரியாழ்வார் பாடிய பாசுரங்கள் பிள்ளைத் தமிழாகும். இப் பிரபந்தங்கள் யாவும், பன்னிரு பாட்டியல் இவற்றுக்குப் பின் தோன்றியது என்பதை நன்கு உணர்த்தும்.

இந்நூல் கூறும் பிரபந்தங்கள் பல பதினேழாம் நூற்றுண்டு வரையில் வேறெந்த இலக்கணத்துள்ளும் சொல்லப் பெறவில்லை. உதாரணம் : உழத்திப் பாட்டு, கடைநிலை, கண்படைநிலை, குறத்திப் பாட்டு, துயிலெடை நிலை, பதிகம், விளக்கு நிலை போல்வன.

*சொல்லியலில் பெயர்ப் பொருத்தம் கூறியவிடத்து, எண் வகைப் பெயர்களைச் சொல்லுகிருர். சிறப்புப் பெயராவது :*

**சிறப்புப் பெயராவது தெரியுங் காலை**
**சிறப்புடை வேந்தன் கொடுக்கும் பெயரே.**

*சிறப்புடை வேந்தன் இராசராசனை ஒத்தவர். அவர்கள் தம் படைத் தலைவோருக்கும் அமைச்சராதியோருக்கும் சிறப்புடைய பட்டங்கள் அளித்தமையை ஆசிரியர் உணர்ந்தே இவ்வாறு சிறப்புப் பெயரைக் கூறுகிருர் என்பது நன்கு விளங்கும்.*

## பதிப்பு

*முன்னமே சொல்லப்பட்டது : ரா. இராகவையங்கார் பதிப்பு, மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடு, 1904. இரண்டாம் பதிப்பு 1951.*

# பன்னிரு பாட்டியல்
## ஆசிரியர் பாடல் தொகை

| எண் | ஆசிரியர் பெயர் | பன்னிரு பாட்டியல் எழுத்தியல் | சொல்லியல் | இனவியல் | மொத்தம் | நவநீதப் பாட்டியல் உரை | யாப்பருங்கல விருத்தி உரை | அடியார்க்கு நல்லார் உரை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | அகத்தியர் | 2 | — | — | 2 | 7 | * | * |
| 2 | அவிநயனார் | 1 | — | 14 | 15 | 2 | * | * |
| 3 | இந்திரகாளியார் | 21 | 30 | 12 | 63 | 5 | — | * |
| 4 | கபிலர் | 19 | 5 | — | 24 | — | — | — |
| 5 | கல்லாடர் | 16 | 16 | 13 | 45 | 5 | — | — |
| 6 | கோவூர் கிழார் | — | 1 | 52 | 53 | — | — | — |
| 7 | சீத்தலையார் | — | — | 2 | 2 | — | — | — |
| 8 | செயிற்றியனார் | — | — | 3 | 3 | — | * | * |
| 9 | சேந்தம்பூதனார் | — | 4 | 12 | 16 | — | — | — |
| 10 | நற்றத்தனார் | — | — | 8 | 8 | — | * | * |
| 11 | பரணர் | 20 | 1 | 13 | 34 | 17 | — | — |
| 12 | பல்காயனார் | — | — | 4 | 4 | — | * | — |
| 13 | பெருங்குன்றூர் கிழார் | — | — | 20 | 20 | — | — | — |
| 14 | பொய்கையார் | 17 | 2 | 21 | 40 | 15 | * | — |
| 15 | மாபூதனார் | — | — | 5 | 5 | — | — | — |
| | பெயர்க் குறிப்பிடா தவைஇறுதிப்பகுதி | — | — | 26 | 26 | — | — | — |
| | மொத்தம் | 96 | 59 | 205 | 360 | 51 | — | — |

* பெயர் சொல்லப்பட்டுள்ளது.

அத்தியாயம் 6

# இலக்கண உரை

## முன்னுரை

இலக்கிய உரை பற்றிய இரண்டாம் அத்தியாயத்தில் இக்காலத்தேதான் முதன்முதலாகத் தமிழ் இலக்கிய இலக்கண உரைகள் தோன்றத் தொடங்கின என்று விளக்கிக் கூறினேம். இறையனர் களவியல் என்ற அகப் பொருள் இலக்கண நூலுக்கு நக்கீரர் என்ற புலவர் செய்த உரையானது முன்னமே தோன்றியிருந்தது. (8 ஆம் நூற்ருண்டாயிருக்கலாம்). அது வாய்மொழியாகவே வழங்கிவந்து இந்த நூற்ருண்டில் ஏட்டில் எழுதிவைக்கப் பட்டது. இன்று கிடைக்கிற உரைகளில் அதுவே காலத் தால் முற்பட்ட உரை. கி. பி. பத்தாம் நூற்ருண்டு முடிய, தொல்காப்பியம் ஆட்சியின்றி மறைந்திருந்தது என்று சொன்னல் பொருந்தும்; அதன் எழுத்தும் சொல்லும் ஒருகால் அறியப்பெற்றிருக்கலாம்; பொருள், வெளிவராது அடங்கிவிட்டது. இதற்குக் காரணம், கி. பி. மூன்றுமுதல் ஆறு நூற்ருண்டுவரை மதுரையில் களப்பிரர் என்ற வேற்று நாட்டுச் சைனர் புகுந்து பாண்டியர் ஆட்சியை ஒடுக்கித் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டினமை. இது பின்னர் நன்கு விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறு தமிழின் சிறப்புப் பகுதியாகிய பொருளுக்கு, நூல் ஆட்சியில் இல்லாது போகவே, புது நூல் தோன்றும் அவசியம் ஏற்பட்டது. அதுவே இறையனர் களவியல். இலக்கணம் மட்டும் அமைந்துவிட்டால் போதாது. அதன் பிரயோகமும் ஆட்சியும் உரையினலேயே சிறப்புறுகின்றன. ஆகவே, களவியலுக்குச் சிறப்பான நக்கீரர் உரை எழுந்தது.

மேலும் முதன்முதலாக ஏற்பட்ட உரைநடை நூல் நக்கீரருடைய இந்த உரை நூல். இது சிறந்த நடையும் கொண்டது. நடையழகும், இலக்கியப் பண்பும் செம்மையாக அமைந்தது. செய்யுளோசை பெற்று, படிப்போரை இலக்கிய உணர்வில் ஆழ்த்துவது. நடையின் கம்பீரமும் ஓட்டமும், அதே சமயத்தில் எளிமையும், பிற்காலத்தில் காணுமாறு இல்லை. வாய்மொழியாக இந்த உரை வந்தமையால் இது மனப்பாடத்திற்கென்றே செய்யப்பெற்றிருந்தமை தெளிவு. ஆயினும், இது சிறந்த இன்பம் பயப்பதால், தான் கூறும் பொருளுக்கேற்ப இயற்கையின் எழிலையும், மக்களின் உள்ளப் பெருமிதத்தையும், வாழ்க்கையின் விரிவுகளையும் நுட்பத்தையும் உணர்த்திச் செல்வது. கற்குந்தோறும் கருத்தைக் கவரும் தன்மையது.

தொல்காப்பியத்திற்குப் பிற்காலத்தில் ஆத்திரையன் பேராசிரியர் என்பவர் பொதுப் பாயிரம் செய்தார்; அவரே இதற்கு உரையும் செய்தார். அது 33 அடிகள் கொண்ட சிறு ஆசிரியப்பா. அவ்வாசிரியர் இந்த நூற்றாண்டில் வாழ்ந்தார் என்று கருதப்படுவதால் அவரைக் குறித்த சிறு குறிப்பையும் இங்குக் காணலாம்.

## இறையனார் களவியல் உரை

நாம் ஆராய்ச்சிக்கு இங்கு எடுத்துக்கொண்ட பத்தாம் நூற்றாண்டில், இறையனார் களவியலும் செய்யப்பெறவில்லை, அதன் உரையும் செய்யப்பெறவில்லை. ஆனால் வாய்மொழியாகப் பல தலைமுறைகள் வழங்கிவந்த அவ்வுரை ஏட்டில் எழுதிவைக்கப்பட்டது. அதுபற்றியே இதை இங்கு ஆராய்கிறோம். வாய்மொழியாக வந்த காலத்தில், பழையன நீங்கியும் இருக்கும், புதியன சேர்ந்தும் இருக்கும். இவை எவை என இன்று பாகுபடுத்திச் சொல்ல முடியாது.

இருப்பினும், இவ்வுரை இன்று கிடைக்கும் எல்லா வகை உரைகளினும் காலத்தால் முந்தியதாகலானும், சிறப்புடைய தாகலானும், சற்று விரிவாகவே இதைக் குறித்துப் பேசுவோம்.

## இறையனர் களவியல் வரலாறு

தமிழில் அனேக நூல்களின் அருமையும் பெருமையும், அவற்றுக்கெழுந்த உரைகளால்தான் மிகுதியாக வெளிப் படுகின்றன. இலக்கியம், இலக்கணம் என்ற இரு துறைகளுக்கும் இது பொருந்தும். இவ்வாறு உரையால் சிறப்புப்பெறும் நூல்களில் இறையனர் களவியலும் ஒன்று. நூலைக் குறித்த முழு ஆராய்ச்சியும் இங்குச் செய்யவில்லை; அது நூலுக்குரிய நூற்ருண்டு வரலாற்றில் செய்யப்பெறும். எனினும், உரை வரலாற்றை அறியப்புகுமுன், நூல் வரலாற்றைச் சுருக்கித் தருகிறேம்.

களவியலுரைகாரர் முதற் சூத்திரவுரையில் சூத்திரத் துக்கு உரை கூறுமுன், நூலுக்குப் பாயிரம் விரிவாக எழுதியிருக்கிருர். பாயிரம், பொது சிறப்பு என இரு வகை, பாயிரத்தின் அவசியம், பொதுப் பாயிரத்தில் கூறும் பொருள், சிறப்புப் பாயிரத்துள் கூறும் பொருள் என்பன வற்றை விளக்கிய பின், முச்சங்க வரலாறு, களவியலின் வரலாறு என்ற பொருள்களை இங்குக் கூறிப் பின்னர் உரையின் வரலாறு கூறுகிருர். முச்சங்க வரலாற்றில், மூன்று சங்கங்களையும் நிறுவினர் பாண்டியர் என்று சொல்லி, ஒவ்வொரு சங்கத்திலும் தலைவர், பாடினேர் தொகை, பாடிய நூல், காலம், ஆதரித்த பாண்டியர், அவருட் புலவரானேர், இடம், நூல் என்பவற்றைக் கூறுகிருர். இத்தகைய வரலாற்றை இளம்பூரணரும் அடியார்க்கு நல்லாரும் கூறிய போதிலுங் கூட, முதன் முதலாக இப்பொருள்களைக் கூறுவது இக்களவியலுரையே யாகும்; ஆதலினல்

இங்குக் கூறப்பட்ட செய்திகளை விளக்கமாக ஓர் அட்டவணைப்படுத்திப் பின்னே இங்கு தந்திருக்கிறோம்.

"அக்காலத்துப் பாண்டியநாடு பன்னீரியாண்டு வற் கடஞ் சென்றது. செல்லவே, பசி கடுகுதலும், அரசன் சிட்டரையெல்லாம் கூவி, 'வம்மின், யான் உங்களைப் புரந்தரகில்லேன். என் தேயம் பெரிதும் வருந்துகின்றது. நீயிர் நுமக்கு அறிந்தவாறு புக்கு, நாடு நாடாயின ஞான்று என்னை யுள்ளி வம்மின்' என்றான். என, அரசனை விட்டு எல்லாரும் போயின பின்றை, கணக்கின்றிப் பன்னீரி யாண்டு கழிந்தது. கழிந்த பின்னர் நாடு மலிய மழை பெய்தது. பெய்த பின்னர் அரசன், 'இனி நாடு நாடாயிற் றாகலின், நூல் வல்லாரைக் கொணர்க' என்று எல்லாப் பக்கமும் ஆட் போக்க, எழுத்ததிகாரமும், சொல்லதி காரமும், யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, 'பொருளதிகாரம் வல்லாரை 'எங்கும் தலைப்பட்டிலேம்' என்று வந்தார். வர, அரசனும் புடை படக் கவன்று, 'என்னை, எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே? பொரு ளதிகாரம் பெறேமேயெனின் இவை பெற்றும் பெற்றிலேம் எனச் சொல்லா நிற்ப, மதுரை ஆலவாயில் அழல்நிறக் கடவுள் சிந்திப்பான் ; 'என்னை பாவம்! அரசற்குக் கவர்ச்சி பெரிதாயிற்று ; அது தானும் ஞானத்திடையதாக லான், யாம் அதனைத் தீர்க்கற்பாலம்' என்று, இவ்வறுபது சூத்திரத்தைச்[1] செய்து, மூன்று செப்பிதழகத்து எழுதிப் பீடத்தின் கீழ் இட்டான்.

"இட்ட பிற்றை ஞான்று, தேவர் குலம் வழிபடுவான் தேவர் கோட்டத்தை எங்குந் துடைத்து, நீர் தெளித்துப் பூவிட்டுப் பீடத்தின் கீழ் என்றும் அலகிடாதான் அன்று

1 இவ்வறுபதினுள் களவு 33, கற்பு 27.

தெய்வத்துக் குறிப்பினுன், 'அலகிடுவன்' என்று, உள்ளங் குளிர அலகிட்டான். இட்டாற்கு அவ்வலகினேடும் இதழ் போந்தன. போதர, கொண்டு போந்து நோக்கினுற்கு, வாய்ப்புடைத்தாயிற்ருேர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்டப் பிராமணன் சிந்திப்பான்: 'அரசன் பொருளதி காரம் இன்மையிற் கவல்கின்ருன் என்பது கேட்டுச் செல்லா நின்றது உணர்ந்து நம் பெருமான் அருளிச் செய் தாருகும்' என்று, தன் அகம் புகுதாதே, கோயிற்றலைக் கடைச் சென்று நின்று, கடை காப்பார்க்கு உணர்த்தக் கடை காப்பார் அரசற்கு உணர்த்த, அரசன், 'புகுதுக' எனப் பிராமணனைக் கூவச் சென்று புக்குக் காட்ட ஏற்றுக் கொண்டு நோக்கிப் 'பொருளதிகாரம்! இது நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்தாரு கற்பாலது!' என்று, அத்திசை நோக்கித் தொழுது கொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து, 'நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்த பொருளதிகாரம், இதனைக் கொண்டு போய்ப் பொருள் காண்மின்' என, அவர்கள் அதனைக் கொண்டு போந்து கன்மாப் பலகை ஏறியிருந்து ஆராய்வுழி, எல்லாரும் தாந்தாம் உரைத்த உரையே நல்லதென்று சில நாளெல்லாஞ் சென்றன."

இப்பகுதியிலுள்ள சில கருத்துக்கள் ஆராயத் தக்கன. எழுத்து சொல் யாப்பு என்ற மூன்றும் கிடைத்தன, பொருள் கிடைக்கவில்லை என்று அரசன் கலங்கினுன். ஐந்திலக்கணம் என்பவற்றுள் அணி இங்குச் சொல்லப் பெறவில்லை. யாப்பு சொல்லப்பட்டுள்ளது. எழுத்து சொல் பொருள் என்ற மூன்று அதிகாரங்களையுடைய தொல் காப்பியம் இருந்தது. தொல்காப்பியச் சூத்திரங்களை அப்படியே எடுத்து இக்களவியல் வைத்திருக்கிறது. தொல்காப்பியத்தில் செய்யுளியல் என்ற பகுதி உள்ளதே யன்றி யாப்பதிகாரம் என ஒன்று இல்லை. ஆகவே உரை

காரருடைய கூற்றுக்கள் நமக்கு ஒரு நிலையை உணர்த்துகின்றன: தொல்காப்பியம் எழுத்தும் சொல்லும் வல்லார் இருந்தனர்; தனியே (தொல்காப்பியமல்லாமல் வேறு) யாப்பதிகாரம் வல்லாரும் இருந்தனர்; தொல்காப்பியப் பொருளதிகாரம் மட்டும் பயிற்சி குன்றிப் போய்விட்டது, வல்லார் இல்லை; ஆகவே அரசன் தேடுகிறுன் – பொருளதிகாரமல்ல, பொருளதிகாரம் வல்லாரை. '...........யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து' என்பது அக்காலத்திருந்த ஒரு நிலையை நமக்கு நன்குணர்த்துகிறது. யாப்பதிகாரம் வல்லார் இருந்தனர் என்றுல், யாப்பதிகாரம் என்ற பகுதிக்குரிய நூல்களும் பல இருந்தன என்று பொருளாகிறது. யாப்பருங்கல விருத்தியுரையினுல், அக்காலத்தில் எண்ணற்ற செய்யுளியல், பாட்டியல் நூல்கள் இருந்தன என்று அறிகிறோம். அவை பெரும் பகுதி தோன்றிய காலம் 8, 9 ஆகிய நூற்றுண்டுகள் என்று சொல்லத் தகும். இறையனூர் களவியல் உரையும் இக்காலப்பகுதியில், அதாவது ஒருகால் 9ஆம் நூற்றுண்டில், செய்யப்பெற்றிருக்கலாம்.

யாப்பதிகாரம் என்று களவியலுரைகாரர் கூறியதைப் பேராசிரியர் மறுக்கிறுர்: 'வழக்கும் சொல்லும் ஆயிரு முதலின் - எழுத்தும், சொல்லும், பொருளும்' என்ற தொல்காப்பியப் பாயிரப் பகுதியை எடுத்துத் தந்து, "மற்றிதனை யாப்பதிகாரமென வேறோரதிகார மாக்கி உரைப்பாருமுளர். அங்ஙனம் கூறின் வழக்கதிகாரமெனவும் வேறு வேண்டுமென மறுக்க. அல்லது எழுத்தும் சொல்லும் பொருளுமென் மூன்றிற்கும் மூன்றதிகாரமாக்கி, அதிகார மொன்றிற்கு ஒன்பது ஓத்தாகத் தந்தும் செய்ததனேடு மாறுகோளாம் இதனை வேறு அதிகாரம் என்பார்க்கு' என்று எழுதுகிறுர். சொல்வதானுல் மரபியலை வழக்கதிகாரம் என்று கூறலாம்; ஆனுல், அது பொருளன்று. களவியலுரைகாரர் தம்

காலத்துக்கு முன்னும், தொல்காப்பியத்துக்குப் பின்னும், இலக்கணத்துறையில் ஏற்பட்டிருந்த செய்யுளியல்-பாட்டியல் என்ற இயக்கங்களை நன்கு உணர்ந்து யாப்பதிகாரம் என்று வேறு பிரித்துக் குறிப்பிட்டார் என்று கருதவேண்டும்; தொல்காப்பியத்தை வைத்து இவர் குறிப்பிடவில்லை.

இனி, 'பொருளதிகாரம் வல்லாரை எங்கும் தலைப் பட்டிலேம்' என்று உரைகாரர் கூறியிருப்பது நோக்கத் தக்கது. இதுபற்றியல்லவா இறையனார் பொருளதிகாரம் செய்து அளிக்கிறார்?

இக்காலத்தில் தொல்காப்பியம் பொருளதிகாரம் இருந்தது, ஆனால் பயில்வாரின்றியும் கற்பிப்பாரின்றியும் போய்விட்டது. ஆதலால் வல்லவர் இலராயினர். இது மற்றொரு நிலையை உணர்த்துகிறது. பாண்டி நாட்டில் களப்பிரர் ஆட்சி 3–6 நூற்றாண்டுகளில் நிலவிற்று. களப்பிரர் தமிழ்ப்பண்பையும் மொழியையும் கலைகளையும் வைதிக சமயத்தையும் ஒடுக்கிவந்தார்கள். அவர்கள் சைனர். சைன சமயத்தில், பெண்களை இழித்து ஒதுக்கவேண்டு மென்பது கொள்கை.

மக்களுள் தலையாயினார் காமத்தினின்று எவ்வாறு நீங்குவர், இடையாயினார் எவ்வாறு நீங்குவர், கடையாயினார் எவ்வாறு நீங்குவர் என்று உரையாசிரியர் கூறுமிடத்து, இடையாயினாரைக் குறித்துச் சொல்வது, களப்பிரர் காலத்துச் சைனர் கருத்தை வடித்துச் சொல்வதாக உள்ளது. "இடையாயினார் பெண் என்பது எற்புச்சட்டகம், முடைக் குரம்பை, புழுப் பிண்டம், பைம்மறியா நோக்கப் பருந் தார்க்குந் தகைமைத்து; ஐயும் பித்தும் வளியும் குடரும் கொழுவும் புரளியும் நரம்பும் மூத்திர புரீடங்களும் என்று இவற்றது இயைபு பொருளன்று; பொருளாயின், பூவே சாந்தே பாகே எண்ணெயே அணிகலனே என்றிவற்றான்

புனையவேண்டா, தான் இயல்பாகவே நன்ருயின் என்று அதன் அசுபத்தன்மை உரைப்பக் கேட்டு நீங்குவர்.''

ஆனல், தமிழ் அகப்பொருளானது, காதலேயும் பெண்ணுடன் கூடி வாழும் வாழ்க்கையையும் போற்றிச் சொல்வது ஆதலால் இது சைனர் கொள்கைக்கு மாருனது என்பது தெளிவு. எழுத்தும் சொல்லும் இருந்தன என்று உரை கூறுகிறது. அக்காலத்தில் இருந்த இவ்விரு இலக்கணப் பகுதிகள் என்று நமக்கு இன்று கிடைப்பது, தொல்காப்பியம் ஒன்றே. ஆகவே, களப்பிரர் ஆதிக்கக் காலத்தில் எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் பயிலப் பெற்றும், அகப்பொருளிலக்கணம் பயிலப் பெறவில்லே; தடை செய்து நிறுத்தப்பட்டது என்ற நிலேயைத்தான் இறையனுர் களவியலுரை நமக்குக் காட்டுகிறது. இதனுலேயே களப்பிரர் ஆட்சிக்குப் பின் வந்த பாண்டியன் பொருளதிகாரம் வல்லாரைத் தேடுகிருன். இத் தேட்டத்தை இறையனுர் களவியல் நிறைவு செய்தமையால், அக்காலத்து இல்லாமற் போனது, அகப் பொருளிலக்கணம் என்று கருத வேண்டும். புறப் பொருளிலக்கண ஆட்சி இருந்தது போலும். (பொருளதிகாரம் என்னும்போது, அகம் புறம் இரண்டுமே.)

அரசனுடைய கவற்சி 'ஞானத்திடையது' என்று இறையனுர் கருதினுர். மேலும், சிறப்புப் பாயிரத்திலக்கணம் கூறுமிடத்தில், பயன் என்பதை உரைகாரர் பின் வருமாறு விளக்குகிருர். "பயன் என்பது இது கற்க இன்னது பயக்கும் என்பது... என் பயக்குமோ இது கற்க எனின், வீடுபேறு பயக்கும் என்பது.''

தலே இடை கடை என்று மூன்று வகை மக்களே முன்னே இவர் குறிப்பிட்ட இடத்தும், காமத்தைக் கைவிட்டு முடிவில் வீடு பெறுவதையே உரை குறிப்பிடுகிறது; இதைச்

சுவையாகவும் உரைக்கிறது: "வீடு பேற்றின்பத்தை விரித்துரைக்கும்; அதுதான் பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடு அவலக் கையாற்றின் நீங்கி, மணியினது ஒளியும், மலரினது நாற்றமும், சந்தனத்துத் தட்பமும் போல உண்ணின்று ஒரு பேரின்ப வெள்ளத்தது என்பது கேட்டு, அதனை விட்டு, வீடு பேற்றின் கண்ணே அவாவி நின்று, தவமும், ஞானமும் புரிந்து வீடு பெறுவானும்" என்பது. இக் கருத்து ஒரு வகையில், இன்ப வாழ்க்கையின் முடிவாகத் தொல்காப்பியர் காட்டுகின்ற

**காமம் சான்ற கடைக்கோட் காலை**
**ஏமம் சான்ற மக்களொடு துவன்றி**
**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே**

என்ற கருத்தோடு ஒத்திருப்பதும் காணத் தக்கது. மாணிக்கவாசகர் பாடியதாக வழங்கும் திருக்கோவையாருக்குப் பேரின்பப் பொருளைப் பிற்காலத்தில் கூறுவதற்கும், களவியலின் பயன் வீடு பேறு என்பதே காரணமாகும்.

இனி, பீடத்தின்கீழ் 'என்றும் அலகிடாதான் இன்று தெய்வச் செயலால் அலகிட்டான்' என்பது, உலகியலை உரைகாரர் உணர்ந்து சுவைபடக் குறிப்பிடுவதாகும். அலகிட்டு ஏட்டைக் கண்டவன் தேவ குலம் வழிபடும் பிராமணன். கோயிற்பணியாளர், பணிகளைத் திருத்தமாகச் செய்யாத நிலை, இன்று மட்டுமல்ல, அன்றும் இப்படியே இருந்தது போலும்!

## நூற் பெயர்

மூல நூலானது, இறையனார் செய்ததாக வரலாறு உண்மையின், அவர் பெயரைச் சார்த்தியே வழங்கும். களவியற் பகுதி ஒன்றேறே கூறுதலின், இறையனார் களவியல்

என்றும், இறையனார் அகப்பொருள் என்றும் வழங்கும். அன்றியும், இதற்குப் பொருளதிகாரம் என்ற பெயரும் உண்டென்று அறிகிறோம். "இது பொருளதிகாரம், நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்தானாகற் பாலது" என்ற இவ்வுரையின் பாயிரப் பகுதியால் அறியலாம். மற்றும் திருக்கோவையார் உரையில் பேராசிரியர், 'பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகள்' (118 ஆம் பாடல் உரை) என்று கூறுமிடத்து, இறையனார் களவியலையே இப்பெயராற் சுட்டுகிறார்.

## உரை வரலாறு

செப்பிதழில் கண்ட பொருளதிகாரச் சூத்திரங்களுக்கு உரை எழுதிய புலவர் பலரும் தம்முள் முரண, அரசனிடம் சென்று, உரைகளைச் சீர்தூக்கி அறியவல்லா னொருவனைப் பெற வேண்டுமெனக் கேட்கின்றனர்; 'நாம் அரசனுழைச் சென்று, நமக்கோர் காரணிகனைத் தரல் வேண்டும் என்று கொண்டு போந்து, அவனாற் பொருளெனப் பட்டது பொருளாய், அன்றெனப்பட்டது அன்றாய் ஒழியக் காண்டும்' என்று எல்லாரும் ஒருப்பட்டு அரசனுழைச் சென்றார். அரசனும் எதிர் எழுந்து சென்று, 'என்னை, நூற்குப் பொருள் கண்டீரோ?' என, 'அது காணுமாறு எமக்கோர் காரணிகனைத் தரல் வேண்டும்' என, 'போமின், நுமக்கோர் காரணிகனை யான் எங்ஙனம் நாடுவேன்? நீயிர் நாற்பத் தொன்பதின்மராயிற்று, நுமக்கு நிகராவார் ஒருவர் இன்மையின் அன்றே' என்று அரசன் சொல்லப் போந்து பின்னையும் கன்மாப் பலகை ஏறியிருந்து, 'அரசனும் இது சொல்லினான்; யாம் காரணிகனைப் பெறுமாறு என்னை கொல்?' என்று சிந்திப்புழி, 'சூத்திரஞ் செய்தான் ஆலவாயில் அவிர்சடைக் கடவுளன்றே, அவனையே காரணிகனையுந் தரல் வேண்டும் எனச் சென்று வரங் கிடத்தும்' என்று வரங்கிடப்ப, இடையாமத்து, 'உப்பூரி குடிகிழார் மகனாவான்

உருத்திர சன்மன் என்பான்; பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப் பிராயத்தான், ஒரு மூங்கைப் பிள்ளை உளன்; அவனை அன்னனென்று இகழாது கொண்டு போந்து, ஆசனத்தின்மேல் இரிஇக் கீழிருந்து சூத்திரப் பொருள் உரைத்தாற் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும், மெய்யாயின உரை கேட்ட விடத்து; மெய்யல்லா உரை கேட்ட விடத்து வாளா இருக்கும்; அவன் குமார தெய்வம், அங்கோர் சாபத்தினற் றேன்றினன்' என முக்கால் இசைத்த குரல் எல்லார்க்கும் உடன்பாடாயிற்று; ஆக எழுந்திருந்து, தேவர் குலத்தை வலங் கொண்டு போந்து உப்பூரிகுடி கிழாருழைச் சங்க மெல்லாஞ் சென்று இவ் வார்த்தை யெல்லாஞ் சொல்லி, 'ஐயனுவான் உருத்திர சன்மனைத் தரல் வேண்டும்' என்று வேண்டிக் கொடு போந்து வெளியது உடீஇ, வெண்பூச்சூட்டி, வெண்சாந்து அணிந்து, கன்மாப் பலகை யேற்றிக் கீழிருந்து சூத்திரப் பொருள் உரைப்ப, எல்லோரும் முறையே பொருளுரைப்பக் கேட்டு வாளா இருந்து, மதுரை மருதனிள நாகனுர் உரைத்த விடத்து ஒரோவிடத்துக் கண்ணீர் வார்ந்து, மெய்ம் மயிர் நிறுத்தி, பின்னர்க் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர் உரைத்த விடத்துப் பதந் தொறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம் மயிர் சிலிர்ப்ப இருந்தான். இருப்ப, ஆர்ப்பெடுத்து "மெய்யுரை பெற்றும் இந் நூற்கு!" என்றார்.

"அதனுல் உப்பூரிகுடி கிழார் மகனுவான் உருத்திரசன் மனுவான் செய்தது இந் நூற்கு உரை என்பாரும் உளர். அவர் செய்திலர், மெய்யுரை கேட்டார் என்க; மதுரை ஆலவாய்ப் பெருமானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனுரால் உரைகண்டு, குமாரசுவாமியாற் கேட்கப் பட்டது என்க."

களவியல் செய்தார் இறையனுர் என்ற ஆசிரியரது பெயர் காரணமாக, இவரே மதுரை ஆலவாய்ப் பெருமான்

அடிகள் என்ற ஒரு தெய்வ சம்பந்தம் இந் நூலுக்கு ஏற்பட்டது. இதைப் பிற்காலத்தார் அபிமானத்தால் கூறிய கூற்று என்றே கொள்ளவேண்டும். இடைச் செருகலாக மிகவும் பிற்பட்ட காலத்தே இவ்வாறு எழுதிச் சேர்க்கப் பட்டது எனக் கருதுதல் ஒவ்வாது. உரைகாரரே இவ்வாறு ஆலவாய்க் கடவுள் என்றெண்ணிச் சொல்லுகிருர் என்று கருதவேண்டும். இவ்வாறு இறைவனே சொன்னபின் உரைகளின் தரமறிந்து மனிதனுல் எப்படி மதிப்பிடமுடியும் ஆகவே, இறைவன் புதல்வனை தமிழ்க் கடவுளாகிய முருகனுடைய அவதாரமான உருத்திரசன்மர் கதை தோன்றிற்று.

உருத்திரசன்மரை ஒரு கன்மாப் பலகை[1] ஏற்றி எல்லோரும் பொருள் உரைத்தார்கள். (சங்கப் புலவர்கள் எப்போதுமே தங்களுக்குள் பூசலிட்டுக்கொண்டிருப்பார்கள் போலும்!) அவ்வாறு கேட்டுவரும்போது காரணிகரான (நடுநிலையாளரான) உருத்திரசன்மர் தம் மெய்ப்பாடுகளால் உரையின் சிறப்பை உணரவைக்கிருர். நக்கீரர் உரைத்த உரையைக்கேட்டு இதுவே மெய்யுரை என்று உணருமாறு செய்திருந்தாலும், மதுரை மருதனிள நாகனுர் உரைத்த இடத்து, ஒரோவிடத்துக் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் நிறுத்தினுர் என்று உரைப்பகுதி கூறுகிறது. அவ்வுரை இன்று இல்லை. அன்று ஏட்டில் எழுதிவைக்கப்பெற்றதா என்பதும் தெரியவில்லை. நக்கீரரோடு பெரும் சிறப்புடைய வர்களான கபிலர் பரணர் கல்லாடர் மாமூலர் என்றோர் உரைகளெல்லாம் உருத்திரசன்மருக்குச் சுவைக்கவில்லை போலும்!

மதுரை மருதனிள நாகனுர் பெயர், மதுரை என்ற அடையில்லாமலே சங்க நூல்களில் வழங்குகிறது. குறுந்

1 கல் - மா - பலகை: கல்லாலான பெரிய ஆசனம்போலும்.

தொகை (4) நற்றிணை (12) அகநானூறு (23) என்ற அகப்பொருள் நூல்களிலும், புறநானூற்றிலும் (5) 44 தனிப் பாடல்கள் இவர் பாடியிருக்கிறார். கலித்தொகையில் மருதக்கலி (35 பாடல்) இவர் பாடியது. இதுபற்றியே இவர் பெயரில் மருதம் என்ற அடை வழங்கும். கலித் தொகை நீங்கலாக இவர் பாடிய ஏனையவற்றில் பாலைத் திணையே மிகுதி.

## உருத்திரசன்மர்

களவியலுரை கேட்டார் பெயர் உருத்திரசன்மர். இவர், "உப்பூரிகுடி கிழார் மகனாவான், செங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப் பிராயத்தான், ஒரு மூங்கைப்பிள்ளை[1]; அவன் குமாரதெய்வம்; அங்கோர் சாபத்தால் தோன்றினான்'. ஐந்தாண்டுப் பிராயமுடையவன் களவியலுரை கேட்டு மதிப்பிடமுடியுமா என்ற கேள்விக்கு இடமில்லாமலே, பின்னால் அவன் மூங்கைப்பிள்ளை என்று தொடர்கிறது!

சங்கப் புலவர் வரிசையில் தந்தை மகன் இருவர் பெயரும் இல்லை. ஆனால் "சிலப்பதிகார ஏட்டிலிருந்து கிடைத்தது. இதன் கூற்றுக்கள் சில மறுத்தற்குரியன"

1 பொதுவாகச் சமயங்கள்பற்றி ஓரியல்பைக் குறிப்பிடவேண்டும். இந்து சமயத்தில் உள்ளன யாவும் சைன சமயத்தார் தங்கள் சமயத்திலும் கதைகளிலும் சொல்லிக்கொள்கிறார்கள். அப்படியே சைவத்தில் சொல்லும் கதைகள் யாவும் வைணவத்திலும் சொல்லிக்கொள்கிறார்கள். இதை எமது இலக்கிய வரலாறுகளில் ஆங்காங்குக் குறிப்பிட்டிருக்கிறோம். இவ்வூமைக்கும் மற்றோர் ஊமை வைணவத்தில் உள்ளான். பெருமாள் கோயிலில் பாகவதரிலே ஒரு பிள்ளை அஞ்சாறு வயதளவும் ஊமையா யிருந்து நாலு மூன்று சம்வத்ஸரம் காணாமலிருந்து பின்பு வார்த்தை சொல்ல வல்லவனாய்வர, இந்த ஆச்சர்யத்தைக் காண்கைக்காக எல்லாரும் திரண்டு, ஊமாய், எங்குப் போனாய்? என்ன, அவனும் நான் க்ஷீராப்திக்குப் போனேன் என்ன, அங்கே விசேஷம் என்னென்று கேட்க, 'சேனை முதலியார் உடையவராய் வந்து திருவவதரித்தருளினார்' என்று சொன்ன அனந்தரம் அவனைக் கண்டதில்லை—என்று இராமானுசாரிய திவ்ய சரிதை கூறும் (பக்கம் 295).

என்று ஐயரவர்கள் பதிப்பித்த 103 அடிகொண்ட முச் சங்க வரலாறு கூறும் நீண்ட பாடல் பெருந்தொகை 1334, கடைச் சங்கப் புலவர் வரிசையில் 'முப்பாலுணரும் உப்பூரிகுடி கிழார் – உருத்திர சன்மர்' என்று இருவர் பெயரையும் சேர்த்துச் சொல்லுகிறது. இது பிழையாதல் வேண்டும். பிற் காலத்தில் பல செய்திகளையும் ஒன்று சேர்த்து இப்பாடலாசிரியர் புனைந்தார் போலும்.

இருப்பினும் உருத்திர சன்மர் பற்றிப் பின்னும் பல செய்திகள் இங்குக் கருதத் தக்கன. 'உருத்திர சன்மரே களவியலுரை செய்தார் என்பாரும் உளர்' என்று உரைப் பகுதி சொல்லுகிறது. இதனால் உரையின் பாயிரப் பகுதி உரையாசிரியரே செய்ததன்று, பிற்காலத்தில் எழுதிச் சேர்க்கப்பட்டது என்று கருதத் தோன்றுகிறது.

முப்பால் என்பது திருக்குறள். முப்பால் உணரும் உப்பூரிகுடி கிழார் என்பது எத்துணைப் பொருத்தம் என்பது ஆராயத் தக்கது. திருவள்ளுவ மாலையின் முதற் பாடலான அசரீரி வாக்கு, பலகையில் திருவள்ளுவரோடு உருத்திரசன்மரும் ஒக்க இருக்க என்று கூறிற்று. இவ் வுருத்திர சன்மர், நக்கீரர் களவியல் உரையைக் கேட்டு இது மெய்யுரை என்றவரா? தெரியவில்லை. திருவள்ளுவமாலை போலி நூல் என்று குறிப்பிட்டிருக்கிறோம்.[1] அதனுள் உருத்திர சன்ம கண்ணர் என்பவர் செய்ததாக, மணற் கிளைக்க நீரூறும் என்ற பாடல் (31) உள்ளது. இவை யாவும் வெறும் கற்பனை. அன்றியும், சங்கப் புலவர் குறள் ஆசிரியரைத் தவிர ஏனையோரை வாரியுள் தள்ளிவிட்டது என்ற கதையைக் கேட்ட மாலையாசிரியர், கன்மாப் பலகை யிடப்பட்ட உருத்திரசன்மரைத் தள்ளிவிடக் கூடாது என்று

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு, பக்கம் 34 - 56 பார்க்க.

கருதி, அசரீரியைக் கொண்டு இவருக்கும் இடங்கொடுக்கச் செய்தார் போலும். இந்த உருத்திரசன்மருடைய தந்தை உப்பூரிகுடி கிழார் திருக்குறள் உணர்ந்தவர். இதுவெல்லாம் கற்பனைக் கதை.

"அகநானூறு தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி; தொகுத்தான் உப்பூரிகுடிகிழான் மகனுவான் உருத்திரசன்மன் என்பான்" என்ற வரலாறு, அகநானூற்றின் இறுதியில் எழுதப்பட்டுள்ளது. ஆனல் தொகுத்த முறைகூறும் பஃறெடை வெண்பா இவர் பெயரைக் கூறவில்லை. அகநானூறு தொகுத்த காலம் இதுவரை வரையறை செய்யப்பெறவில்லை. அதுபோலவே மூங்கையான உருத்திரசன்மர் நக்கீரர் உரையை அங்கீகரித்த செய்தி வரலாற்றுண்மைக்குப் பொருந்துவதா, காலம் யாது என்ற செய்திகள் வரையறுத்தாகவில்லை. இந்த நிலையில் உருத்திரசன்மர் ஒருவரா, இருவரா? இருவர் ஆனல் எவர்முன், எவர்பின் என்ற முடிவுகள் சொல்ல முடியவில்லை. ஒன்று பார்க்கலாம். வெவ்வேறு ஆசிரியர்கள் செய்த தனி ஆசிரியப் பாடல்களாய்த் தொகுக்கப் பெற்ற முறையான குறுந்தொகை நற்றிணை அகநானூறு என்ற அகப்பொருள் நூல் மூன்றில், முதல் இரண்டுக்கும் தொகுத்தார் தொகுப்பித்தார் சொல்லப் பெறவில்லை; அகநானூற்றுக்கு மட்டும் சொல்லப்பட்டுள்ளது.

உருத்திரசன்மர் வரலாற்றோடு சேர்த்துத் திருவிளையாடற் புராணச் செய்திகள் இரண்டு கருதத் தக்கன. உருத்திர சன்மன் – உருத்திரரால் அடைந்த பிறப்பையுடையவன். முருகப்பெருமான் 'சிவன் பொருள் நிறுக்குமாற்றல் உருத் திரசன்மனுகி உற்றிடும் நிமலன்' என்று கந்தபுராணமும் (சூரபதுமன் வதை 261) கூறுகிறது. உருத்திர சன்மன், 'குமார தெய்வம், அங்கோர் சாபத்தால் தோன்றினன்' என்று சொல்லப்பட்டது. இக்கால வரலாற்றைப் பெரும்

பற்றப் புலியூர் நம்பி திருவிளையாடலும் (படலம் 19), பரஞ்சோதி திருவிளையாடலும் (படலம் 57) வலை வீசிய திருவிளையாடல் என்ற படலத்தில் கூறுகின்றன. ஒரு சமயம் கைலாயத்தில் சிவபெருமான் உமாதேவிக்கு ஆகமங்களை உபதேசிக்க, அப்போது சிறிது நேரம் தேவியார் பராமுகமாய்க் கேட்க, பெருமான் சினந்து தேவியைச் சபிக்கிறார். அப்போது கணபதி வந்து ஆகமங்களைக் கடலில் எறிகிறார். முருகன் அவற்றைக் கிழித்தெறிகிறான்; 'நீ வணிகர் குலத்தில் மூங்கையாய்ப் பிறக்க' என்று சிவபிரான் சாபமிட்டார். இது இரண்டு புராணங்களும் சொல்வது. இவ்வாறு பிறந்த ஊமைப்பிள்ளை உரை கேட்ட வரலாற்றை இரண்டு புராணங்களும் வெவ்வேறாய்ச் சொல்லுகின்றன. பிற்காலப் புராணமாகிய பரஞ்சோதி திருவிளையாடல், சங்கத்தார் கலகந் தீர்த்த படலம் என்ற பகுதியில், சங்கப் புலவர் 48 பேரும் வேறு வேறு செந்தமிழ் செய்துகொண்டு கலகமிட்டு, சீர்தூக்கி யுரைக்குமாறு சோமசுந்தரக் கடவுளை வேண்ட, அவர் "தனபதி, குணசாலினி என்ற இருவர் புதல்வனாய்ப் பிறந்த ஊமைப் பிள்ளை உங்கள் கலகத்தைத் தீர்த்து வைப்பான்" என்று சொல்லி அனுப்புகிறார். உப்பூரிகுடி கிழார் மகன் என்றோ உருத்திரசன்மன் என்ற பெயரையோ பரஞ்சோதி சொல்லவில்லை; அகப்பொருளுரை என்றும் சொல்லவில்லை. பரஞ்சோதி காலம் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கம். ஒருகால் இவர் காலத்தில் இறையனார் அகப்பொருள் பயிற்சி அருகிப்போய் இவர் அவ்வுரை எழுந்த கதையைச் செவ்வனே உணராது, சங்கத்தார் கலகம் என்றும், புலவருடைய செந்தமிழ்ப் பாடல் என்றும், வணிகன் தனபதி மகன் ஊமைப் பிள்ளை என்றும் சொன்னார் போலும்.

ஆனால் 13ஆம் நூற்றாண்டில் திருவிளையாடல் பாடிய பெரும்பற்றப் புலியூர் நம்பி வரலாறு தெரிந்து கூறுகிறார்:

இவர்கள் 'ஆலவாய் அமுதவாக்கன் இறையவன் முன்னம் சொன்ன அரும் பொருட் சூத்திரத்துக் குறு முறை கேள்' என்றனர். இறைவன், 'இந்நகர் நம்முடைய பக்தனுகிய வணிகன் உப்பூர்[1] கிழான் மகன் ஊமன், அவன் சரவண குகனே, நாமம் உருத்திரசன்மன்' என்று திட்டமாய்க் கூறுகிருர். (உப்பூரிகுடி என்பது இங்கு உப்பூர் என்றுள்ளது. வணிகன் என்று களவியலுரை கூறவில்லை.) அவ்வாறே அவர்கள் சென்று மூங்கையை அழைத்து வந்து சிங்கத்தவிசினேற்றித் தூப தீபாதி நல்கிக் கேட்டு என்று இப் புராணம் சொல்வது களவியலுரையை ஒத்துள்ளது. கீரன், கபிலன், பரணன் இம் மூவர் உரை சிறப்பென்று உருத்திரசன்மர் உணர்த்தினர்; மருதனிள நாகனர் பற்றிய பேச்சு இல்லை. 'அருந்தமிழ்ச் செட்டியாம் செட்டி மயில் மீது ஆறுமுகத்தோடும் பன்னிரு கரத்தோடும் சாபம் நீங்கிப் போயினர்' என்று படலத்தை முடிக்கிருர் நம்பி.

உருத்திரசன்மரான மூங்கை கதையை ஏற்பதில் பெரிய இடர்ப்பாடு ஒன்று எழுகின்றது. மூங்கையாய்ப் பிறக்க என்ற சாபத்தை ஏற்று, இம் மூங்கை பிறந்தான் என்ருல், பிறவி ஊமை; பிறவி ஊமை என்ருல் பிறவிச் செவிடு. இது உலகியல் வழியாகவும் மருத்துவ வழியாகவும் அறியப் பெறும் உண்மை. ஆகவே உருத்திரசன்மர் ஊமை என்ருல், செவிடருமாவார். இவர் எவ்விதம் புலவர்களுடைய உரையைக் கேட்டுத் தம்முடைய பாராட்டைத் தெரிவிக்க முடியும்? முடியாதென்றே நாம் சொல்வோம். ஆனல் கதையே பொய் என்ருலும், குமார தெய்வத்தின் அவதாரம் எதுவும் உணரும், எதுவும் செய்யும் ஆற்றல் பெற்றது என்ருலும், நாம் மறுமொழி சொல்லவியலாது.

---

1 உப்பூர் - பரம்பக்குடிக்கு ஈசானத்திலுள்ளது என்பது ஐயரவர்கள் குறிப்பு.

**உரையாசிரியர் நக்கீரர்**

நக்கீரர் உரையையே உருத்திரசன்மர் மெய்யுரை என்று ஏற்றுக்கொண்டார், அதுவே உலகில் வழங்கிற்று என்று அறிந்தோம். ஆனுல் இன்று வழங்குவது நக்கீரர் நேரே எழுதித் தந்தது அன்று. சுருதிபோல, அவர் உரை வாய்மொழியாகப் பல தலைமுறைகள் வழங்கி வந்தது. இதை உரையே பின் வருமாறு சொல்கிறது :

"மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர் தம் மகனுர் கீரங் கொற்றனுர்க்கு உரைத்தார்; அவர் தேனூர் கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங் கொற்றனுர்க்கு உரைத்தார்; அவர் செல்வத்தாசிரியர் பெருஞ்சுவனுர்க்கு உரைத்தார்; அவர் மணலூராசிரியர் புளியங்காய்ப் பெருஞ் சேந்தனுர்க்கு உரைத்தார்; அவர் செல்லூராசிரியர் ஆண்டைப் பெருங்குமரனுர்க்கு உரைத்தார்; அவர் திருக் குன்றத்தாசிரியர்க்கு உரைத்தார்; அவர் மாதளவனுர் இள நாகனுர்க்கு உரைத்தார்; அவர் முசிறியாசிரியர் நீலகண்ட னுர்க்கு உரைத்தார்; இங்ஙனம் வருகின்றது உரை." [1]

எனவே, இப்போது வழங்கும் உரை நீலகண்டனுர் எழுதிவைத்ததென்று கொள்ளலாம். இவர் நக்கீரருக்குப் பின் ஒன்பதாம் தலைமுறையினர். இவர் எழுதி வைத்த எழுத்தையே நாம் இப்போது இறையனுர் களவியல் — நக்கீரனுர் உரை என்று சொல்லி வருகிறேம்.

---

1 முத்து வேங்கடசுப்பு பாரதி செய்த இலக்கண தீபம் என்ற நூலில் 14ஆம் பாடல் இவ்வாசிரியர் மரபைப் பின் வருமாறு கூறுகிறது; நக்கீரர் கோசவுரை கொண்டு கீரங் கொற்றர், தேனூர் இளநாகர், படியங் கொற்றர், செயினூராசிரியர் பெருநாகனுர், குலரமணலியாசிரியர், புளியங்காய்ப் பெருஞ்சேந்தர், செல்லூரிஞசிரியர், முண்டம் பெருஞ் சேந்தனுர், முசிறியாசிரியனுர், நீலகண்டர், ராசை திருக்குன்றத்தி லாசிரியர் வழி வந்தது

உரையின் பாயிரப் பகுதியில், நக்கீரர் உரை அங்கீகரிக்கப் பெற்ற வரலாறு படர்க்கையில் சொல்லப் பெற்றுள்ளது; மேலும், 'உருத்திரசன்மர் இந்நூற்கு உரை செய்தார் என்பாரும் உளர்; அவர் செய்திலர் மெய்யுரை கேட்டார் என்க. மதுரை ஆலவாயிற் பெருமானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனாரால் உரை கண்டு, குமார சுவாமியாற் கேட்கப்பட்டது என்க' என்றும் உரையுள் வருவதால், நக்கீரனார் வேறு, இன்று சொல்பவர் நீலகண்டனார் வேறு என்பது பொருந்துவதாகும்.

ஆனால் பின் வந்த ஆசிரியர் பலரும், களவியல் உரை செய்தவர் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்றே சொல்லி வருகின்றனர்.

களவியலைக் கல்லாடர் (11 நூ.) மூன்றும் பாடலில் குறிப்பிடுகிறார்; உரையைக் கூறவில்லை. பண்டையுரையாசிரியர் பலரும், களவியலுரை செய்தவர் நக்கீரர் என்றே கொண்டுள்ளனர். 'கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்த இறையனார் பொருளுரை' என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப்பதிகாரம் 7 : 1–2 உரை). "பிற்காலத்தில் பெருமானடிகள் களவியல் செய்தாங்குச் செய்யினும்...... கடைச்சங்கத்தாருட் களவியல் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரர் இடைச் சங்கத்தாருக்கும், கடைச் சங்கத்தாருக்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம் என்றாராகலானும்' என்பர் பேராசிரியர். (தொல்காப்பியம், பொருளதிகாரம் 649 சூத்திர உரை, 13 நூ.) 'இக்கருத்தானே நக்கீரரும் ஐந்திணையுள்ளும் களவு நிகழுமெனக் கொண்டவாறுணர்க' என்றார் நச்சினார்க்கினியர் (தொல்-பொருள் 12, 14 நூ.)

நக்கீரனார் இங்கு மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் எனப்படுகின்றார். நக்கீரர் என்ற பெயரோடு

பெரும் புலவர் பலர் இருந்திருக்கிருர்கள். இதே நூலில் பின்னே அத்தியாயம் 7 சைவ இலக்கியம்-1 என்ற பகுதியில் நக்கீரர் பலர் ஆய்ந்து காலவரையறை செய்யப் பெறு கின்றனர். இவர் அங்குக் கூறிய நக்கீரருள் ஒருவரு மல்லாது, மற்றும் ஒரு நக்கீரராவார். நக்கீரர் என்ற மாத்தி ரத்தில் அவர் யார் என்பதைப் பாராது, சங்க நூலில் சொல்லப்பட்ட மதுரைக் கணக்காயனுர் மகனுர் என்றே நீலகண்டனுர் கருதித் தம் உரையை எழுத்து வடிவத்தில் அமைத்தாராதல் வேண்டும். அது பிழை. ஆனுல், இவ் வுரையானது ஊர் பெயர் தெரியாத யாரோ ஒருவர் எழுதி யதன்று; மிக்க புலமை படைத்த புலவரால் செய்யப்பட்டு வழி வழியாகக் கற்பிக்கப்பட்டு வந்து நெடுங்காலம் கழித்து எழுத்தில் வடிக்கப்பட்டது. நெடுங்காலம் செவி வழியாகவே வந்த போது, இடையில் பல செய்திகளும் சேர்க்கப் பெற் றிருத்தல் கூடும். இருப்பினும், முதலில் செய்த புலவர் பெயர் நக்கீரராகவே இருத்தல் பிழையாகாது. வேறு எந்த நக்கீரருமல்லாமல் இவர் மற்ருெரு தனியான நக்கீர ரெனக் கருதுதல் வேண்டும்.

இவ்வாறு இவ்வுரையாசிரியர்கள் பலரும் கூறிவருவது, கணக்காயனுர் மகனுர் என்ற ஒரே நக்கீரரை. ஆனுல் இவ் வுரை செய்தாரும் ஒரு நக்கீரராதலால், இருவரையும் ஒன்ருகவே அவர்கள் கொண்டதால் இவ்வாறு பிழை படக் கூறியுள்ளனர்.

நக்கீரனுரிலிருந்து நீலகண்டனுர் வரையில் பல தலைமுறைகள் உரை சொல்லப்பட்டு வந்த காலத்தில், நக்கீரர் வரலாற்றையும் அதனுள் பாயிரப் பகுதியில் பின் வந்தார் சேர்த்துச் சொல்லினர். சொன்னுர், உரை முழுமை யும் நக்கீரர் உரையாதலால், புதிதாகச் சேர்த்துச் சொல் லியவற்றையும், நக்கீரர் கூற்றென்றே சொல்லினர். பாயிரப்

பகுதியில் 'அக்காலத்துப்' பாண்டியனும் சங்கத்தாரும் பொருளிலக்கணம் பெருது இடர்ப்படுவார்' என்று சேய்மைக்கண் வைத்துச் சொல்லிய கூற்று, நக்கீரருக்குப் பின் வந்தார் கூற்று என்பதைக் காட்டும். அன்றி, "நூல் நுதலியதூஉம் உரைக்கற் பாலது, அது பாயிரத்துள் உரைத்தாம்" என்று பின்னே உரைகாரர் கூறுவது, நக்கீரர் கூற்ருகப் பின் வந்தோர் சேர்த்துக்கொண்டதே யன்றி நக்கீரர் கூற்றன்று.

இதுகாறும் நாம் விளக்கிக் காட்ட முயன்றது, களவியலுரைகாரர் நக்கீரரொருவர், அவர் கணக்காயனுர் மகனுரல்லர், தொடர்பாக வந்த சொல்லாட்சியால் இவ்வாறு சொல்லப் பெறுகின்ருர், வாய் மொழியாக வந்த உரையில் பின் வந்தோர் நக்கீரராகவே பல தொடர்களைச் சேர்த்துச் சொல்லி வந்தனர், நீலகண்டனுர் எழுதி வைத்தபோது யாவும் நக்கீரர் உரை என்றே எழுதிவைத்தார், அது இயல்பேயாகும் என்பது.

நக்கீரர் என்ற ஆசிரியரைக் குறித்தும் தனியான சில செய்திகள் சொல்ல முடியும். இவர் பொருளதிகாரம் வல்லவர் என்பதை உரை நன்கு உணர்த்தும். அன்றியும், ஏகாரம் ஐந்து என்று பலமுறை கூறுவதையும் வேறு குறிப்புக்களையும் கொண்டு, இவர் மற்ற இலக்கணப் பகுதிகளிலும் வல்லவர் என்று கருதலாம். அருத்தா பத்தி முதலியவற்றைக் குறிப்பிடும்போது, இவர் தருக்க நூல் வல்லவர் என்றும் தெரிகிறது. வேறு பல நக்கீரர் கதைகளை விட்டு, இவரைப் பற்றி மாத்திரம் தனிப்பட ஆராயும்போது, இவர் சைவர் என்று கருதுவதில் இடர் இல்லை. இவர் மேற்கோள் காட்டியுள்ள பாண்டிக் கோவையுள் பல பாடல்கள் சிவபெருமானைப் போற்றுவன. நாடு காத்தற் பிரிவு, 'தேவ குலம் முதலியன ஆராயும் பொருட்டு' என்கிருர். அப்படியே

'ஏதுக் கருத்தன்' என்பதை விளக்கும்போது, அரசர் தொட்ட குளம், அரசர் எடுத்த தேவகுலம் என்று உதாரணம் காட்டுகிருர். பிதிரர் கடன் என்பதையும் குறிப்பிடுகிருர். மேலும், இன்னும் சிறப்பாக, 'அகப்பொருள் ஆராய்வது வீடு பேற்றின் பொருட்டு' என்கிருர். இக்கூற்று, இவரைக் குறித்த சில கருத்துக்களைத் தோற்றுவிக்கின்றன. தேவ குலம் ஆராய்தல், தேவ குலம் எடுத்தல் முதலியன, இடையே சிலகாலம் இருட்டடிப்புண்டு, பின்னர் சோழரால் மீண்டும் ஒன்பதாம் நூற்ருண்டின் இறுதிப் பகுதியில் தொடங்கப்பட்டன. தேவார காலம் எட்டாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் நின்று போகிறது. பின்னல் திருவாசகம் தோன்றியிருந்துங்கூட, தலங்களைச் சுற்றி வந்து யாத்திரை செய்து பாடுதல் என்பது சுந்தரர் காலத்துக்குப் பிறகு இல்லையென்று சொல்லலாம். மாணிக்கவாசகர் பல தலங் களைக் குறிப்பிட்ட போதிலுங்கூட, அவர் அடியார்குழாத் தோடு தல யாத்திரை செய்ததாக வரலாறு இல்லை. சுமார் கி. பி. 940 – 1040க்குள் தேவாரம் இல்லாத சில தலங் களுக்குத் திருவிசைப்பா பாடப்பட்டது. கி. பி. 700 முதல் 850 முடிய சிவாலயங்களின் விளக்கம் ஓரளவு குறைந்தி ருந்தது போலும். இக்காலப் பகுதியில் உரைகாரர் தோன்றி யிருக்கக் கூடும். ஆகவேதான் இவர் தேவகுலத்தைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்துச் சொல்கிருர். இவற்ருல் இவர் சைவர் என்று நன்கு கருதமுடியும். மற்றப்படி களவியலை ஆலவாய்ப்பெருமான் அருளிச்செய்தார் என்ற கதையை இவர் விரித்துச்சொல்வதாலும், 'மால்வரை புரையும் மாடக் கூடல் ஆலவாயில் பால்புரை பசுங்கதிர்க் குழவித் திங்களைக் குறுங்கண்ணியாகவுடைய அழலவிர் சோதி அருமறைக் கடவுள்' என்று கூறுவதாலும், இவர் சைவ சமயத்தவர் என்பதில் ஐயம் இல்லை.

நாலாயிரப் பிரபந்த காலம் ஆறும் நூற்றுண்டு தொடங்கி ஒன்பதாம் நூற்றுண்டுவரை போகிறது. ஆழ்வார்கள் பாசுரம் பாடிஞர்கள்; வேறு எவ்வகை வைணவ எழுச்சியும் இலக்கியத்துள் இல்லை. ஆனல் நக்கீரர் வரலாறு முழுமையும் சைவத் தொடர்பு கொண்டது. களவியல் செய்தமையும் சிவபிரான்மீது ஏற்றப்பட்டுள்ளது. வரியின் தொடர்களும் சிவபிரானைப் போற்றுபவையாகவும் குமாரதெய்வத்தைக் குறிப்பிடுவனவாகவுமே உள்ளன; வேறு எத்தெய்வத்தையும் பேசவில்லை. ஆகவே உரைகாரர் சைவர் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

**உரைநடை**

நக்கீரர் உரையே தமிழில் முதன்முதலாகத் தோன்றிய உரைநடையாகும். ஆகவே ஏட்டில் எழுதும்போது, செய்யுளையே எழுதிப் பழகியவர்களுக்கு, செய்யுளல்லாத மற்ருென்றை எப்படி அமைப்பது என்ற திகைப்பு இருந்திருத்தல் இயல்பே. அதனுலும், நக்கீரர்தம் உரை நெடுங்காலம் வாய்மொழியாகவே வழங்கிவந்தமையாலும், இதனுள் செய்யுளோசை அதிகம் பயிலக் காணலாம். சிறப்பாக இவர் வருணனை சொல்லுமிடங்களில் செய்யுளோசை அதிகம் பயிலக் காணலாம். சில எடுத்துக்காட்டுக்கள் தரலாம். தலைவன், 'கற்கந்தும் எறிபோத்தும் கடுங்கண் யானையும் தறுகட் பன்றியும் கருவரையும் இருநிலனும் பெருவிசும்பும் அனையார், ஆளிமொய்ம்பினர் அரிமான் துப்பினர், பற்பல் நூறுயிரவர் கூர்வேல் இளையர் தற்சூழச் செல்வன்.' 'இவளும் உடன் பிறந்து உடன் வளர்ந்து, நீர் உடன் ஆடிச் சீருடன் பெருகி, ஓலுடனுட்டப் பாலுடன் உண்டு, பல்லுடனெழுந்து சொல்லுடன் கற்று, பழமையும் பயிற்சியும் பண்பும் நண்பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார் பற்பல்

நூறுயிரவர் கண்ணும் மனமும் கவரும் ஒண்ணுதல் மகளிர் தற்சூழத் தாரகை நடுவண் தண்மதி போலச் செல்வாள்...' 'கருங்குழற் கற்றை மருங்கு திருத்தி, அளகமும் நுதலும் தகைபெற நீவி, ஆகமும் தோலும் அணிபெறத் தைவந்து, குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்கிப் பிரிவல் என வலித்தான்,' 'யாங்ஙனம் நிற்குமோ எனின், சந்தனமும் சண்பகமும் தேமாவும் தீம்பலவும், ஆசினியும் அசோகும் கோங்கும் வேங்கையும் குரவமும் விரிந்து, நாகமும் திலகமும் நறவும் நந்தியும், மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணங் கமழ்ந்து, பாதிரியும் பாவை ஞாழலும் பைங் கொன்றையொடு பிணியவிழ்ந்து, பொரிப் புன்கும் புன்னுகமும் முருக்கொடு முகை சிறந்து வண்டறைந்து தேனார்ந்து வரிக்குயில்கள் இசைபாட, தண்தென்றல் இடை விராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழிலது நடுவண், ஒரு மாணிக்கச் செய்குன்றின்மேல், விசும்பு துடைத்துப் பசும் பொன் பூத்து, வண்டு துவைப்பத் தண்தேன் துளிர்ப்ப தோர் வெறியுறு நறுமலர் வேங்கை கண்டாள்; கண்டு, பெரியதோர் காதல் களிகூர்ந்து, தன் செம்மலர்ச் சீறடி மேற் சிலம்பு கிடந்து சிலம்பு புடைப்ப, அம்மலர் அணி கொம்பர் நடை கற்பதென நடந்து சென்று, நறைவிரி வேங்கை நாண் மலர் கொய்தாள்; கொய்த விடத்து, மரகத மணி விளிம்பு அடுத்த மாணிக்கச் சுனை மருங்கினதோர் மாதவி மண்டபத்துப் போதுவேய்ந்த பூநாறு கொழுநிழற் கீழ்க் கடிக்குருக்கத்திக் கொடி பிடித்துத் தகடு படு பசும் பொற் சிகரங்களின் முகடு தொடுத்து வந்து இழி தரும் அருவி, பொன் கொழித்து, மணிவரன்றி, மாணிக்கத்தொடு வயிரம் உந்தி, அணிகிளர் அருவி ஆடகப் பாறைமேல் அதிர் குரன் முரசின் கண்ணிரட்ட, வண்டும் தேனும் யாழ் முரல, வரிக் குயில்கள் இசை பாடத் தண்தாது தவிசு படப் போர்த்ததோர் பளிக்குப் பாறை மணித்தலத்துமிசை, நீல ஆலவட்டம் விரித்தாற் போலத் தன் கோலக் கலாவங்

கொள விரித்து, முளையிள ஞாயிற்று இளவெயில் எறிப்ப, ஓர் இளமயில் ஆடுவது கண்டு நின்றுள்.'

'இந்நூல் செய்தார் யாரோ எனின், மால்வரை புரையும் மாடக் கூடல் ஆல வாயிற் பால்புரை பசுங்கதிர்க் குழவித் திங்களைக் குறுங் கண்ணியாக வுடைய அழலவிர் சோதி அரு மறைக் கடவுள் என்பது.'

உரையாசிரியர் சிக்கலில்லாமல் ஓர் நாடகப் பாங்கில் நேர் முகமாகவே பொருளைச் சொல்லிக்கொண்டு போகிருர். வருணனை யொன்றுதான் நீண்டுபோகுமே ஒழிய ஏனைய பகுதிகள் யாவும் சிறு சொற்களால் புனைந்து சிறு வாக்கியங் களாகவே நிற்கும்; இத்தன்மையை, இக்கட்டுரையுள் மேற் கோளாக வந்துள்ள பகுதியில் எங்கும் காணலாம். சிறப்பாக விளையாட்டைக் குறித்த இரு செய்திகளிலும் காணலாம் ஓர் எடுத்துக்காட்டு காண்க :

"தலைமகன் வண்டிற்கு உரைப்பானுய்த் தலை மகள் கேட்பத் தன் நயப்பு உணர்த்தியது. எங்ஙனமோ எனின், 'அவள் கையினைச் செங்காந்தள் எனவும், கண்ணினைக் கருங் குவளை எனவும், வாயினை அரக்காம்பல் எனவும் சென்று தடுமாறிக் குழன் மேலும் கோதை மேலும் சுழல்வாய். இவள் செவ்வாயது நறு நாற்றம் அறிதியன்றே! இனிய நீர்ப்பூ நிலப்பூ கோட்டுப்பூ கொடிப்பூ என்று இப் பல்வேறு வகைப்பட்ட பூவின் மேலுஞ் செல்வாய். ஆம்பற் பூவினது நாற்றம் அறிதியன்றே! அறிவாய். இவ் வகைப்பட்டாள் செவ்வாய் போல நாறுந் தகைமைய உளவே, ஆம்பல் நறு மலர்? என்முல், தேறப்படும் வண்டே, உரையாய்' என உணர்த்தினுன் என்பது."

இவ்வாறே இவரது உரையுள், கிளவிக் குரியாரைப் பாத்திரமாக வைத்துக் காட்டுமிடமெல்லாம், சில

சொற்களோடு கொண்ட சிறு வாக்கியங்களாய் அமைத்து எழுதுகிறார். அதனால், இவ்விடங்கள் ஒவ்வொன்றும் ஒரு நாடகக் கட்டம் போலவே நடைபெறும்.

வரலாறாகச் சொல்லிக்கொண்டு போகுமிடத்து, சிறு வாக்கியத்தை முடித்தவுடன், முடிக்கும் வினைமுற்றை அடுத்த வாக்கியத் தொடக்கத்திற்கான வினையெச்சமாக்கி அடுத்த வாக்கியம் தொடங்குகிறார்: "அது சொற் கேட்டலும் இறந்து பட்டான் எனக் கருதிக் கவன்று நோக்கினாள். நோக்கி உண்மை கண்டாள்; கண்டாட்குக் கெடுத்துத் தேடும் நன்கலம் எடுத்துக் கொண்டாற் போலப் பெரியதோர் கழியுவகை ஆயிற்று; ஆயின உவகை ஒரு முரல் முறுவலைத் தோற்றிற்று; தோற்றவே, 'எம்பெருமான், முன்னர்ப் பெரிய தோர் நாணின்மை செய்தேன்' என ஆற்றாளாயினாள். 'யான் முன் நிற்பவும் ஆற்றானாயினான் எம்பெருமான், எனது ஆற்றாமை கண்ட விடத்து இறந்துபடும் பிற' என ஆற்றாமை நீங்கும். நீங்க, நாண் வந்து அடையும்; அடையவே, மறைவது காணாது, மாறுபாடு நோக்கி தன் மணிக்காந்தள் மெல் விரலாற் போது புரை நெடுங்கண் புதைத்தாள். புதைப்ப, 'இனிச் சார ஆற்றும்' என நினைத்து, 'நின் கரு நெடுங்கண் புதைத்து இவற்குப் பெரியதோர் ஆற்றாமையைச் செய்யுமென்றாகாதே? அவற்றின் பரத்தனவோ, சுரும்புடைக் கோதை, நின் கரும்புடைத் தோள்? என்னும்."

## உரை தரும் விளக்கங்கள்

களவியல் உரை தரும் முக்கியமான விளக்கம் முச்சங்க வரலாறு பற்றியதாகும். வேறு எவரும் இந்த அளவு சொல்லவில்லை. அடியார்க்கு நல்லார் இவரிடமிருந்து இந்த வரலாற்றை அறிந்து, வேனிற் காதையுரையில் இதை அப்படியே எடுத்துப் பெய்திருக்கிறார். ஏனையாசிரியர் கூறவில்லை. சிலப்பதிகார ஏட்டில் கண்டு ஐயரவர்களால்

வெளியிடப்பட்ட தனிப்பாடலொன்று,[1] தலையிடைச் சங்கங்களின் வரலாற்றை இதிலுள்ளபடி கூறி, கடைச்சங்க வரலாற்றில் பின்னும் பல செய்திகளைக் கூறுகிறது; இச் செய்திகளுக்கு ஆதாரம் எதுவும் புலப்படவில்லை, இப் பாடலின் காலமும் தெரியவில்லை. களவியல் கூறும் வரலாறு முழுமையும் உடன்சேர்த்துள்ள அட்டவணையில் காணலாம்.

பிற விளக்கங்களுள் முக்கியமானவற்றை இனிக் கூறுவோம்.

'நூல்: நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளாற் கைவண் மகடூஉத் தனது செய்கை நலம் தோன்ற ஓரிழைப் படுத்தலாம் நூல் நூற்றல் என்பது. அவ்வாறே சுகிர்ந்து பரந்த சொற் பரவைகளாற் பெரும் புலவன் தனது உணர்வு மாட்சியிற் பிண்டம் படலம் ஓத்துச் சூத்திரம் என்னும் யாப்பு நடைபடக் கோத்தல் ஆயிற்று, நூல் செய்தலாவது. அவ்வகை நூற்கப்படுதலின் நூல் எனப்பட்டது.[2]'' 'அந்தணர் அருமறை மன்றல் எட்டு' என்பது முதற் சூத்திரமாதலால், மன்றல் எட்டையும் விளக்கிக் கூறுகிறார். இவர் கூறும் பெயர்கள் பிரமம் முதலான வடமொழிப் பெயர்கள். இப்பெயர்களைக் கூறி விளக்கி ஒவ்வொன்றுக்கும் நேரான தமிழ்ப் பெயரையும் ஒரு பழைய சூத்திரத்தைக் காட்டி அதிலிருந்து எடுத்துத் தருகிறார்:

**அறநிலை ஒப்பே பொருள்கோள் தெய்வம்**
**யாழோர் கூட்டம் அரும்பொருள் வினையே**
**இராக்கதம் பேய்நிலை என்றிக் கூறிய**
**மறையோர் மன்றல் எட்டவை, அவற்றுள்**
**துறையமை நல்யாழ்ப் புலமையோர் புணர்ப்பிதன்**
**பொருண்மை என்மனார் புலமை யோரே.**

---

1 பெருந்தொகை 1384.

2 நன்னூல், பாயிரம் 24பஞ்சிதன் சொல் என்ற சூத்திரம் பார்க்க.

திவாகரம் பிங்கலம் இரு நிகண்டுகளும், பிரமம் பிரசா பத்தியம் முதலான வடமொழிப் பெயர்களையே கூறு கின்றன. இவர் குறிப்பிடும் இச் சூத்திரம் இளம்பூரண ராலும் காட்டப் பெற்றுள்ளது. ஒருகால் இச் சூத்திரம், நிகண்டு என்று இடுகுறிப் பெயர் பெற்ற நூலாக இவர் காட்டுகின்ற இன்று கிடைக்காத வேறு பழைய நிகண்டா யிருக்கலாம்.[1]

தலைமகன் குணம் நான்கு: அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி; தலைமகள் குணம் நான்கு: நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு – இவற்றை இவர் விளக்கி யுரைக்கிறார். இவை இப்படியே இரு நூற்பாக்களால் திவாகரம் பிங்கலத்துள் காணப்படுகின்றன. திவாகரத்தின் காலம் 9ஆம் நூற்றாண்டென்று சொல்லக் கூடும். இறையனார் களவியல் உரை எழுதப் பெற்ற காலத்தை அறுதியிட இக் குறிப்பும் துணை செய்யும்.

ஓதற் பிரிவு முன் வைக்கப்பட்டது, தலையான பிரிவாக லானும், உயர்ந்தோர்க்குரித்தாகலானும் என்பது; பரத்தையிற் பரிவு பின் வைக்கப்பட்டது, காமம் பின்வைத்து எண்ணப்படுமாகலான் என்பது.

சூத்திரக் கிடக்கை (நிலை) நான்கு வகை என்று கூறி விளக்குகிறார் — ஆற்றொழுக்கு சிங்க நோக்கு தவளைப் பாய்த்து பருந்தின் வீழ்க்காடு என்பன. இவை நன்னூலில் ஒரு சூத்திரமாகவே சொல்லப்பட்டுள்ளன (*19*). பொருள் கோள் ஐந்து வகை என்று இவர் கூறுகிறார். விற்பூட்டு, விதலையாப்பு, பாசிநீக்கம், கொண்டு கூட்டு, ஒருசிறைநிலை என. இவை பின்னும் விரிக்கப் பெற்றன, யாப்பருங்கல விருத்தியுள். நன்னூலார் இவை எட்டு என ஒரு சூத்திரம் செய்துள்ளார் (*411*).

---

1 இந்நிகண்டைக் குறித்து வேறிடத்திலும் விளக்கமாய் எழுதி யிருக்கிறோம்.

அன்பு என்பதன் கருத்தை ஒரு மேற்கோளும் காட்டி விளக்குகிருர்: "குடத்துள் விளக்கும் தடத்துள் வாளும் போல 'இது காண் அன்பு' என்று போகத் திறந்து காட்டலாகாது. அன்புடையரான் குணங் கண்டவிடத்து இவை உண்மையான் ஈங்கு அன்பு உண்டென்று அனுமித்துக் கொள்ளற் பாற்று. அன்புடையரான குணம் யாவையோ எனின்:

**சாவிற் சாதல் நோவின் நோதல்**
**எண்பொருள் கொடுத்தல் நன்கினிது மொழிதல்**
**புணர்வுநனி வேட்டல் பிரிவுநனி இரங்கல்**

என இவை. இவை திரிபுடைய என்று கூறி எவ்வாறு திரிபுடைய என்பதை ஒவ்வொன்றிலும் திரிபைக் காட்டி விளக்குகிருர்.

எதிர் நூல் என ஒன்றை இவர் சொல்லி, அதற்கு மேற்கோளும் தருகிருர்:

**தன்கோள் நிறீஇப் பிறர்கோள் மறுப்பது**
**எதிர்நூல் என்ப ஒருசா ராரே.**

"இனி நூல் நுதலியதூஉம் உரைக்கற்பாலது. அது பாயிரத்துள்ளே உரைத்தாம். தமிழ் நுதலிற்று என்பது. தமிழ் தான் நான்கு வகைப்படும், எழுத்து சொல் பொருள் யாப்பு என" என்று இவர் கூறுமிடத்து, இரண்டு கருத்துக்கள் நோக்கத் தக்கன. ஒன்று தமிழ் நுதலிற்று என்ருல் அகப் பொருளைக் கூறுதல் பொருள் என்று ஆராய்ச்சியாளர் சிலர் கூறியுள்ளனர். தமிழ் என்ற சொல்லுக்குப் பண்டையாசிரியர் அழகு இனிமை என்ற பொருள்களைக் கூறியிருப்பது போல, இவ்விடத்தில், இந் நூல் அகப்பொருள் நூலாதலால், இங்குத் தமிழ் என்ருல் அகம் என்று பொருள் செய்ய வேண்டும் என்று கூறுவர்.

இது முழுமையும் பொருந்துவதாகத் தோன்றவில்லை. அடுத்து ஆசிரியர் தமிழ் நான்கு வகைப்படும் என்று சொல்வதால், அந்நான்கு வகையும் தமிழ் மொழிக்குப் பொருந்துமேயன்றி அகப்பொருளுக்கு மட்டும் என்பது பொருந்தாது.

இனி, பொருள் என்பது சிந்திக்கத் தகுந்தது. யாப்பைக் குறித்து முன்னமே கூறினேம். பொருளதிகாரம் என்றும் பாயிரத்துள் வருகிறது. பொருளதிகாரத்தில் அகப்பொருள் புறப்பொருள் இரண்டையுமே கருதுகிறேம். யாப்பு என்று சொன்னமையால், செய்யுள், மரபு, உவமம் என்ற மூன்றையும் ஒதுக்கிவிடலாம். ஏனைய இடங்கள் யாவும் பொருள் அதிகாரத்துக்குப் பொருளால் பொருந்தியவை. ஆகவே, பொருளதிகாரம் விரும்பியபோது, இங்குக் களவியல் கிடைத்தது என்றல், அகப்பொருளின் ஒரு பகுதிதான் கிடைத்ததாகும். இக் களவியலில் பிற்பகுதி கற்பு என்ற பெயரில் அமைந்தது. ஆகவே இங்குப் புறப்பொருட் பகுதி கிடைக்கவில்லை என்பது தெளிவு.

இனி, பிரிவு என்ற தலைப்பில் இவர் சில விளக்கங்கள் மிகவும் அழகாகச் சொல்லுகிருர். "எதற்குப் பிரியும் என்பது: கற்பான் பிரியும் என்பதன்று; பண்டே குரவர்களால் கற்பிக்கப்பட்டுக் கற்ருன், அறம் பொருள் இன்பம் விடுபேறுகள் நுதலிய நூல்களெல்லாம். இனிப் பிற தேசங்களிலும் அவை வல்லார் உளரெனிற் காண்டற்கும், வல்லார்கள் உள்வழிச் சென்று தன் ஞானம் மேற்படுத்து அவர் ஞானங் கீழ்ப்படுத்தற்கும் பிரியும் எனக் கொள்க. இனி நாடு காத்தற்குப் பிரியும் என்பது நலிவார் உளராக நலிவு காத்தற்குப் பிரியும் என்பதன்று; நாட்டகத்து நின்றும் ... வளன் இல் வழி வளம் தோற்றுவித்தற் பொருட்டாகவும், தேவகுலமே சாலையே அம்பலமே என்று இத் தொடக்கத்தனவற்றை ஆராய்தற்கும், அழிகுடியோம்பு

தற்கும் பிரியும் என்பது ... இனிப் பொருட் பிரிவு என்பது பொருளிலனுய்ப் பிரியும் என்பதன்று; தன் முதுகுரவராற் படைக்கப்பட்ட வேறு வகைப்பட்ட பொருளெல்லாம் கிடந்ததுமன், அதுகொடு துய்ப்பது ஆண்மைத்தன்மையன் றெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியும் என்பது. அல்லதூஉம், தேவர் காரியமும் பிதிரர் காரியமும் தனது தாளாற்றலாற் படைத்த பொருளாற் செய்தன வல்லது பயன்படாது; என்னை? தாயப் பொருளாற் செய்தது தேவரும் பிதிரரும் இன்புறார்; ஆதலான், அவர்களையும் இன்புறுத்தற்குப் பிரியும் என்பது.'' இவ்விளக்கங்கள் மிகவும் சுவையுடையவை என்பதில் ஐயமில்லை. வளன் இல்வழி வளம் தோற்றுவித்தற் பொருட்டு – இன்றும்கூட, உணவு உற்பத்தி என்ற துறையில் இது எத்துணை முக்கியமான தேவை! தேவகுலம் சாலை அம்பலம் – ஆராய்தற்பொருட்டு: ஒருகால் இது உரைகாரர் காலநிலையை உணர்த்துவதென்று கருதலாம்.

சம்பந்தராகிய சைவ ஆசிரியர் காலத்துக்குப்பின், 11ஆம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் நம்பியாண்டார் நம்பி வழக்கில்லாமல் மறைந்துபோய் இருந்த தேவாரங்களை வெளிப்படுத்தித் திருமுறை வகுத்த காலம், வரையில் சமய விளக்கம் இல்லாமல் இருந்தது. அக்காலத்தில் இறையனுர் அகப்பொருள் உரை தோன்றியிருக்க வேண்டும் என்று தெரிகிறது. விளக்கம் இல்லாத காரணத்தால் உரைகாரர் நாடுகாத்தற்குப் பிரியும் என்று சொல்லுமிடத்து தேவகுலம் சாலை அம்பலம் முதலியவற்றை ஆராய்தற்குப் பிரியும் என்று கூறுகிருர். எட்டாம் நூற்றுண்டுக்குப் பின் தலங்கள் தோறும் சென்று யாத்திரை செய்வது குறைந்திருந்தது. அது காரணத்தால் கோயில்களைப்பற்றிய செய்தி விளக்கமில்லை. ஆகவேதான் இவர் தேவகுலம் (கோயில்) ஆராய வேண்டும் என்று சொல்வதுபோலத் தோன்றுகிறது.

பரத்தையிற் பிரிந்த கிழவோன், மனைவி
பூப்பின் புறப்பா டீரறு நாளும்
நீத்தகன்று உறைதல் அறத்தா றன்றே

என்பது 43ஆம் சூத்திரம். இதன் உரையில், முந்நாளும் சொற்கேட்கும் வழி உறைக, பன்னிரு நாளில் எஞ்சிய ஒன்பது நாளும் கூடி உறைக[1] என்று எழுதி, முதல் மூன்று நாளும் கூடி உறைதல் ஆகாது என்று கூறுவதற்குக் காரணமும் கூறுகிருர்; "முந்நாளும் கூடி உறையப்படுங் குற்றம் என்னை என்னின், பூப்புப் புறப்பட்ட ஞான்று நின்ற கரு வயிற்றிலே அழியும்; இரண்டாம் நாளின் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்ரும் நாள் நிற்கும் கருக் குறுவாழ்க்கைத்தாம், வாழினும் திருவின்ரும்; அதனுற் கூடப்படாது என்ப.

பூப்புமுதன் முந்நாட் புணர வுணரின்
யாப்புறு மரபின் முனிவரும் அமரரும்
யாத்த கரணம் அழியும் என்ப

எனப் பிறரும் ஓதினுராகலான், அமையாது என்பது" என்று வேறு மேற்கோட்பாடலும் காட்டுகிருர். இக் கூற்று மிகவும் சிறப்புடையது. முன்பின் தொடர்புகளால் இச் சூத்திரம் காக்கை பாடினியமா யிருக்கலாம் என்று கூற முடியும்.

பரத்தையிற் பிரிவு என்றவிடத்தில் உரைகாரர் தலைவனுக்கு ஒரு நாட்குறிப்புக் கூறுவது போல எழுதுகிருர். 'இவன் கண்டாரையெல்லாம் காமுறுவானே எனின், ஆகான்; ஆகாதவாறு சொல்லுதும்; தலைமகனுல்

---

1 தொல்காப்பியம், சூத்திரம் 185 கற்பியல் இதே கருத்தில் அமைந்துள்ளது. இளம்பூரணரும் இதே உரையைத்தான் எழுதுகிருர்; ஆனுல் அகப்பொருள் விளக்கம் செய்த நாற்கவிராசநம்பி, நீராடியபின் பன்னிரு நாளும் கூடி உறைக என்று எழுதுவது, உலகியல்பையொட்டி இன்னும் சிறப்பாயுள்ளது.

தலை நின்று ஒழுகப்படுவன அறம், பொருள், காமம்[1] என்ற மூன்று ; அம்மூன்றினையும், ஒரு மூன்று கூறிட்டு, முதற்கட் பத்து நாழிகையும் அறத்தொடுபட்டுச் செல்லும்; இடையன பத்து நாழிகையும் அருத்தத்தொடுபட்டுச் செல்லும் ; கடையன பத்து நாழிகையும் காமத்தொடு பட்டுச் செல்லும் ; ஆதலான், தலைமகன் நாழிகை அளந்து கொண்டு கருமத் தொடு படுவான். தலைமகளும் வேண்டவே தானும் வேண்டிப் போந்து அத்தாணி புகுந்து அறங் கேட்பதும் அறத்தொடுபட்டுச் செல்வதும் செய்யும் ; நாழிகை அளந்து கொண்டு இடையன பத்து நாழிகையும் இறையும் முறையும் கேட்டு அருத்தத்திறெடுபட்டு வாழ்வாளும். அவற்று நீக்கத்துக் கடையன பத்து நாழிகையும் தலைமகளுழைப் போதரும்.''

'வினைச் சொற்கள் நான்கு விகற்பமுடைய : கருத்தன் ஏதுக் கருத்தன் கருவிக் கருத்தன் கருமக் கருத்தன் என' என்று கூறி, நான்கையும் விளக்கி யுரைக்கிறார். மனையகத்தின் பகுதிகளாகக் கட்டில் கொட்டகாரம் பண்டகசாலை கூடகாரம் பள்ளியம்பலம் உரிமையிடம் சாத்தப்பள்ளி என்பவற்றைக் குறிப்பிடுகிறார்.

முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருளை இவர் விரித்துரைத்துக் காட்டியிருப்பதும், குறிஞ்சி மருதத்திணைகளுக்குரிய இரு செய்யுட்களை எடுத்துக் காட்டி, இவர் அவற்றின் திணை கைகோள் கூற்று முதலான பத்திலக்கணங்களைப் பொருத்திக் காட்டியிருப்பதும் பின் உரை செய்தாருக்குச் சிறந்த வழிகாட்டியாயமைந்தது.

பரத்தையிற் பரிவு என்பதற்குத் தரும ரீதியான ஓர் அமைதி காண்பதற்கு இவ்வுரைகாரர் பெரு முயற்சி

1 திருக்குறளின் பாகுபாடும் அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என வழங்குவதையும் கருதுக.

செய்கிறர்., பலவகையான சமாதானங்களையும் குறிப்பிட்டு அவை பொருந்துவனவல்ல என்று மறுத்துப் பின் தமது விளக்கத்தை எழுதுகிறர்; "மற்று என்னே உரை எனின், தலைமகனை எய்தாத முன்னே பரத்தையரை உடையன் என்பது. எனவே, மேற்சொல்லப்பட்ட குறை எய்தாதோ எனின், எய்தாது. குரவர்கள் இவனறியாமையே இவ னுரிமை இது எனவும், இவன் யானையும் குதிரையும் இவ் வெனவும், மற்றுமெல்லாம் இவற்கென்று வகுத்து வைத்துத் தாம் வழங்கித் துய்ப்ப என்பது. அவ்வகையே குரவர் களான் இவனுரிமை என்றே வளர்க்கப்பட்டாராகலான் தலைமகளை எய்துவதன் முன் உளர் என்பது. இவன் முன்னே தன் உரிமையாவது அறிந்தவாறு என்னை எனின் தலைமகன் தலைமகளை நீங்கித் தருமமும் அருத்தமும் உட்பட்டுத் தலை மகள் மாட்டுப் போதருமிடத்து, அவர் முன் சொன்னவாறே குழலும் யாழும் தண்ணுமையும் முழவும் இயம்புப; இயம்பின விடத்து 'இஃது என்னை?' என்னும்; என்றக்கால், 'அது நின் உரிமை அன்றே' என்ப. என்றார்க்கு, 'அஃது என் உரிமையாயினவாறு என்னை?' என்னும்; என்றவிடத்து, 'நின் குரவர்களான் நினக்கு உரிமையாக வகுக்கப்பட்டார்' என்ப. 'ஆயின் நாம் குரவரது பணி மாறு கொள்ளலாகாது' என்பதனுற் காண்டதற்குச் செல்லும். சென்றானை அவர் தங்கண் நயப்பிப்ப என்பது. இது பரத்தையிற் பிரிவு நிகழுமாறு." தலைமகன் வரக்கண்ட பரத்தையர் தாமே அவனைத் தங்கள் இசையாலும் கூத்தாலும் கவர்கிறர்கள் என்று கூறுகிறர்: தலைமகன் "போதர, அப்போதரவு பார்த்திருந்த பரத்தையர் குழலூதி யாழெழீஇத் தண்ணுமை இயக்கி அவ்வகை அறிவிக்கப்பட்ட தலைமகன் நாம் இதனை ஒருகால் நோக்கிப் போதும் என்று செல்லும்; சென்றக் கால், அவர் தங்கண் தாழ்விப்பர் என்பது."

இவர் கால வழக்கங்கள் சிலவற்றை உரையிலிருந்து தெரிந்து கொள்ளுகிறேம். களவுக்குத் தண்டனை கை-

குறைப்பவும்கண் ஆழவும்,கழுவேற்றவும்படுதல்.பன்னீராண்டு பிராயத்தாளை மணம் செய்து கொடுக்காது வைத்திருந்தால், ஓர் இருதுக் காலம் செல்லுமாயின் ஒரு பார்ப்பனக் கொலை யோடு ஒக்கும். தலைவன் தலைவியைச் சென்று உழையோர் வணங்கும் பொழுது பல்லாண்டு கூறுவர்; வரையகத்துத் தெய்வம் இருக்கும்; அங்குப் பெண்டிர் செல்லலாகாது. கையைத் தொட்டுச் சூளுறுவது ஒரு வழக்கம்: "நினக்கு அடைக்கலம் எனக் கைப்பற்றும். கைப்பற்ற, அதனைத் தோழி சூளுறவாகக் கருதினாள். உலகத்துச் சூளுறுவார் பார்ப்பாரையும், பசுவையும், பெண்டிரையும் தொட்டுச் சூளுறுபவாகலான். சூளுற்றானென்பதனை நினைந்து, 'நீர் வரைவல் என்றதே அமையாதோ? சூளுற வேண்டுமோ? பொய்த்ததும் வாய்த்ததும் உடையாரன்றே சூளுறுவார்? மெய்யல்லது சொல்லார்க்குச் சூளுறவு வேண்டுமோ? நின் கண்ணும் பொய்யுண்டாகின் மெய் யென்பது இவ்வுலகத்து நிலை பெற்ற வழி இல்லை யாகாதே' என்னும்." இப்பகுதி சூளுறவைப் பற்றிய கருத்தை விளக்குவதோடு, அறவழி நிற்பாரின் உயர்வையும் நன்கு புலப்படுத்துகிறது.

கோயிலில் வழிபடுகின்ற அர்ச்சகன் பெருக்கி மெழுகிப் பூவிட வேண்டியவன். ஆனால் இவ்வுரைகாரர், மதுரைக் கோயிலில் அவன் என்றுமே அலகிடும் வழக்கமில்லை, இன்று அலகிட்டான், இது தெய்வத்துக் குறிப்பினால் நிகழ்ந்தது என்று நகைச் சுவைபடக் குறிப்பிடுகிறார். ஆறுவகை அன்பின் வெளிப்பாடும் திரிபுடைய என்று கூறிய விடத்து, சாவிற் சாதல் பற்றிப் பின் வருமாறு கூறுகிறார்: "கண்டீ ரன்றே, குடுமிக் கூந்தலில் நறு நெய்பெய்து, கொண்டானிற் பின்னையும் இருந்து, சோறு தின்று வாழ்கின்றாள். ஓ, கொடியளே காண்! என்று நித்தல் பழி தூற்றப்பட்டிருந்து, பின்னுமே ஒருநாட் சாவல் அதனால் இன்றே சாவல், எனச் சாவவும் பெறும்; அதுவன்றிப் புகழ் வேண்டிச் சாவவும்

பெறும்; கணவனொடு செத்தார் சுவர்க்கம் புகுவர் என்னும் உரை கேட்டு அது வேட்கையானும் சாம்; அப்பரிசு அன்றி அன்பினனுஞ் சாம்." இப் பகுதி கைம்மை தாழ்வாகக் கருதப்பட்டது என்று குறிப்பிடுவது புறநானூற்றில் பூதப் பாண்டியன் தேவி கூறியிருப்பதை நினைவூட்டுகிறது.

அக் காலத்து நடந்த சில நகர விழாக்கள் மிகவும் சிறப்புற்றிருந்தன போலும். 'மதுரை ஆவணி அவிட்டம், உறையூர்ப் பங்குனி உத்திரம், கருவூர் உள்ளிவிழாவே என்றிவை போல்வன' என்ற பகுதி காண்க. இங்கு இவர் மூவேந்தர் தலை நகரங்களிலும் இருந்த மூன்று விழாக்களைக் குறிப்பிடுகிறார் என்பது தெரிகிறது.

இவர் உரையில் பல உவமைகள் இவரது நடைச் சிறப் பென்றே சொல்லத் தக்கவாறு அமைந்துள்ளன. தொட்ட இடமெல்லாம் சிறியனவும், பெரியனவும் விளக்கம் உடையனவும் இல்லாதனவுமான உவமைகள் மல்கிக் காண்கின்றன. தாரகை நடுவண் தண் மதிபோலத் தலைவி தோன்றினள்; கண்ணடி மண்டலத்து ஊது ஆவிபோலக் காண ஒளி மழுங்கி; கனல் முன் இட்ட மெழுகுப் பாவை போல மனம் உருகி; மழைக் கொண்டலுள் மின்னுப்புக்கு ஒளித்தாற் போல மறைந்தாள், தாமரைக் கொட்டையின் அல்லியே போலக் கிளை புறங்காப்பச் செல்வாள்; பள்ளத்து வழி வெள்ளம் போல; நீர்வழி மிதவை போல; புனலோடு வழிப் புற்சாய்ந்தாற் போல; கொழுச் சென்றவழித் துன்னூசி போல; சந்தனமும் காஞ்சரியும் மரமெனப்பட்டது போல; வேலேறு படத் தேளேறு மாய்ந்தாற் போல – இவை சிறிய உவமைகள். "குன்றம் உருண்டாற் குன்றி வழியடை யாகாதவாறு போலவும், யானை தொடுவுண்ணின் மூடுங்கலம் இல்லது போலவும், கடல் வெதும்பின் வளாவு நீர் இல்லது போலவும், எம்பெருமான், நின் உள்ளம், அறிவு நிறை

ஓர்ப்புக் கடைப்பிடியின் வரைத்தன்றிக் கைம்மிக்கு ஓடுமே யெனின் நின்னைத் தெருட்டற்பால நீர்மையார் உளரோ?" இது உவமை விளக்கத்துக்கு எடுத்துக்காட்டாகும். "யாரும் கேட்காத விடத்துத் தலைமகள் வறிதே குழவி அழுதாற் போல ஒரு சொற் சொல்லி ஆற்றுவாள். மூடியிருந்து வேவதோர் கொள்கலம் மூடியது திறந்த விடத்து, ஆவி எழுந்து முன்னின்ற வெப்பம் நீங்கினாற் போல, அச்சொற் சொல்ல ஆற்றாளைப் பண்டையிற் சிறிதளவு படுதலாம்."

மக்கள் இயல்புகளை நன்கு புலப்படுத்துகிறார்: "உலகத் தோர் இடுக்கணுற்றால் விதியானே தீருமென்றிரார்; முன்னே தீர்த்தற்குச் சுற்றத்தாரையும், நட்டாரையும் நினைப்பர்." "ஆரறிவார், சிறியாராற் பெரியார் முடிக்கும் கருமங்களும் உள. இனியாரோடு தலைப் பெய்த இடங்கண்டாலும் அவ் வினியாரைக் கண்டாலே போல்வது உலகத்துத் தன்மை."

விளையாட்டையும், பெண்கள் தங்களிடை விளையாட் டாகப் பேசிக்கொள்வதையும் சுவைபடக் கூறுகிறார்: "எம்மைக் கூழைக் கற்றைக் குழவிப் பிராயத்து மாயை கலர்த ஏழை நீர்மை யாரோடு நாட்கோலம் செய்து, 'விளையாடி வம்மின்' என்று போக்கினாய்; போனவழி யாம் போய், ஒரு வெண் மணல் பரந்த தண்மலர்ப் பொழிலிடை விளையாட நின்றேமாக, ஒரு தோன்றல் ஒரு சுனைக் குவளைப் பூக்கொண்டு அவ்வழியே போந்தான். போதர, நின் மகள் அவனை நோக்கி, 'அக் குவளைப் பூவை என்பாவைக்கு அணியத் தம்மின்' என்றாள். அவனும் பிறிதொன்றும் சிந்தியாது, கொடுத்து நீங்கினான். இஃது அறியாப் பருவத்து நிகழ்ந்தது" என்று, தலைவியின் வேறுபாட்டைக் கண்ட தாய் வினவத் தோழி கூறுகிறாள்.

இது போலவே, தலைவியின் வேறுபாட்டைக் கண்ட தோழி வினவுகிறாள்; "இவ்வேறுபாடு எற்றினால் ஆயிற்று,

எனக்குச் சொல்லாய் என்னும்; என, 'நெருநல் நின்னின் நீங்கி மேதக்கதோர் சுனை கண்டு ஆடினேன், நெடும் காலமும் நின்றாடினேற்கு ஆயிற்று; ஆகாதே கண் சிவப்பும் நுதல் வேறுபாடும்' என்னும்; 'அஃதேல், சுனையாடினோர்க் கெல்லாம் இக்காரிகை நீர்மை பெறலாமே எனின், யானும் ஆடிக் காண்கேன்' என்னும்."

## சொல்லாட்சிகள்

பல வட சொற்கள் இவ்வுரையினுள் காணப்படு கின்றன. ஆரியம், ஏகதேசம், ஏது, அசுரம், ஆசாரம், இராக்கதம், கர்த்தன், கருமம், கலியாணம், காரணிகன், காந்தர்வம், குமாரசாமி, சனம், சிட்டர், சுவர்க்கம், தெய்வம், பிரசாபத்தியம், பிரமம், பிராமணம், பைசாசம், வாசகம், ருது என்பன சில. பரம் என்பது புறம்; இஃது ஆரியச் சொல் என்பார். இவர் காலம், தேவார காலத்துக்குப் பிற்பட்டது என்ற கருத்துக்கு இந்த நிலை ஆதரவு தருகிறது. அப்படியே இவருடைய தமிழ்ச் சொல்லாட்சிகள் சில குறிப் பிடத் தக்கன. தக்கின்று—தகுதியின்று. உருளரிசி, கொத்த முரி – இன்றும் உருளரிசி என்றும், கொத்துமல்லி என்றும் வழங்குகிறோம். வதுவையைக் கலியாணம் என்பார். இயற்கையன்பு, காரணமின்றித் தோன்றும் அன்பு; செயற்கை அன்பு – அவள் தன் குணங்களால் தோன்றிய அன்பு. 'கண்டீரே' என்ற ஒரு சொல் (கண்டீரன்றே என்பதுமுண்டு) எதிரே உள்ளவர்களை விளித்துப் பேசும்போது, ஓர் அசைச் சொல்லாக இவர் பயன்படுத்துகிறார்; இன்றும் பலர் 'இதோ பாருங்கள்' என்று தொடங்கிப் பேசுவது போல.

பாடபேதம் இருந்தது என்பதை 16ஆம் சூத்திர உரையால் நாம் அறியலாம். இவர் உரையில் காணும் பல குறிப்புக்களால் இவருக்கு முன் இலக்கணமும் இந்நூலுக்கு உரைகளும் இருந்தன என்பதை அறிய முடிகிறது.

என்மனர், என்ப என்ற சொற்கள் முந்தையோர் கூற்றை உணர்த்துகின்றன. மற்றப்படி, ஓர் ஆசிரியன் இவ்வாறு சொல்லும், ஒருசாரர் இவ்வாறு உரைப்பர், ஒரு திறத்தார் கூறுமாறு என்று பல இடங்களில் வேறு கருத்துக்களைச் சொல்லுகிருர். சில சமயம் அக்கருத்துக்களை விளக்கிச் சொல்கிருர். பின்னும் சில சமயம், 'பொருந்தாமை அறிந்து கொள்க, நல்லது அறிந்து கொள்க' என்று எழுதுகிருர். சில சமயம் 'இவ்வாறு சொல்வாரும் உளர், அது பொருந்தாது' என்று எழுதி, பொருந்தாமைக்குக் காரணம் காட்டுகிருர். சில சமயம் 'அவர் அறியார்' என்று எழுதுவார். மற்றென்னோ உரை எனின் என்று தொடங்கித் தம் கருத்தைக் கூறுவார். 'இவ்வுலகம் உணர்தல் பொருந்தாது; நாணவும் நடுங்கவும் நாடுதல் அகத்திணை யிலக்கணம் அன்ருகலான்...... அவரது குறிப்பறியாது உரைத்தலான். ஆசாரம் அறியாமலுமாம்' என்பார்.

## மேற்கோள் நூல்கள்

தமிழ் நூல் உரை வரிசையில் இது முதலில் எழுந்த உரையாதலால் இதன்கண் காணப்படும் மேற்கோள் நூல்களையும் பாடல்களையும் சிறிது விரிவாகப் பார்த்தல் வரலாற்று அறிவுக்குத் துணை செய்வதாய் இருக்கும்.

*1.* **எட்டுத்தொகை:** நூல்களில் இங்கு பயில்பவை குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறு நூறு, கலித்தொகை. பிற: திருக்குறள், சிலப்பதிகாரம்; பொதுவாக சிலப்பதிகாரப் பாடல்கள் சிலவற்றை இவரே எடுத்துத் தருகிருர்.

*2.* **தொல்காப்பியம்:** இதிலிருந்து 20க்கு மேற்பட்ட சூத்திரங்களை எடுத்துத் தருகிருர். தொல்காப்பியப் பொருட்பால் என்று ஓரிடத்தில் கூறுகிருர்; பொருள்

அதிகாரத்தை இவ்வாறு கூறினர்போலும். எல்லை கூறு மிடத்து, பனம்பாரனார் சிறப்புப் பாயிர முதல் வரிகளான 'வடவேங்கடம் தென்குமரியாயிடை' என்ற மூன்று வரிகளைத் தந்து, என்றார் தொல்காப்பியனார் என்கிறார், தொல் காப்பியச் சிறப்புப்பாயிரம் என்ற கருத்தில். தொல்காப்பிய மேற்கோள் இவர் தருவதால் இக்களவியல் அதன் வழித்து என்பது தெளிவு. ஆனால் இதுவே முதல் நூல் என்று இவர் கூறுவது, ஆலவாய்ப் பெருமானடிகள் இந்தக் களவியல் செய்தளித்தார் என்ற கருத்துப்பற்றி உயர்த்திச் சொல்வதன்பொருட்டாகும்.

3. **காக்கை பாடினியம்:** ஒரு சூத்திரத்தைத் தொல்காப்பியச் சூத்திரத்தின் முன் வைத்து, 'என்றார் காக்கை பாடினியார்' என்று காட்டுகிறார். வேறுபல, பெயர் சொல்லாமல் இவர் காட்டுவன காக்கைபாடினியம்போலும்.

4. **கூத்த நூல்:** 'குழல் வழி யாழ் எழீஇத் தண்ணுமைப் பின்னர் – முழவியம்பல் ஆமந்திரிகை' என்ற பாட்டைத் தந்து 'என்றார் கூத்த நூலாசிரியர்' என்று கூறுகிறார். கூத்த நூற் பாடலொன்றை அடியார்க்கு நல்லாரும் காட்டுகிறார்.

5. **தமிழ் நெறி விளக்கம்:** பொருளியல் என்ற சிறு அகப்பொருளிலக்கண நூலிலிருந்து, 'இவளே நின்னல திலளே' என்ற பாடல் இங்குத் தரப்பட்டுள்ளது. இப் பாடலும் வேறு பல பாடல்களும் இதிலிருந்து இளம் பூரணம் எடுத்துத் தருகிறது. இவற்றால், இத் தமிழ் நெறி விளக்கம் ஒருகால் ஒன்பதாம் நூற்றாண்டுக்குரியதாயிருக்கலாமென்பது தெரிகிறது. இதன்படி பார்த்தால் இது மிகப் பழைய இலக்கண நூல்களிலொன்றாகும். இதன் ஒரு பகுதி மட்டுமே கிடைத்து ஐயரவர்களால் அச்சிடப்பட்டுள்ளது.

ஒன்பதாம் நூற்ருண்டில் தோன்றியது என்று கருதக் கூடிய தமிழ் நெறி விளக்கம் என்ற நூற்பாவால் ஆன அகப்பொருள் இலக்கணமானது குறைந்த வரிகளால் அமைந்த ஆசிரியப் பாக்களினுல் தான் காட்டும் துறை ஒவ்வொன்றுக்கும் எடுத்துக்காட்டு தருகிறது.

*6.* **நன்னூல் பாயிரப் பாடல்கள்:** இவற்றுள் 7 சூத்திரங்கள் இங்குத் தொடக்கத்தில் காட்டப்பட்டுள்ளன; அன்றியும் வேறு பொதுப்பாயிரச் சூத்திரங்கள் சிலவும் இங்குக் காண்கிறோம். யாப்பருங்கல விருத்தியும் பல சூத்திரங்களைத் தருகிறது. மயிலைநாதர் இச் சூத்திரங்கள் நன்னூலுக்கு உரியனவல்ல என்ற கருத்துடையவர்; தாம் கணக்கிட்ட சூத்திர எண்ணில் இவற்றை அவர் சேர்க்கவில்லை. சிலவற்றைப் பாடலம், பனம்பாரம் என்றும் குறித்திருக்கிருர். 10 ஆம் நூற்ருண்டில் எழுதி வைக்கப்பட்ட இக் களவியலில் இவை காணப்படுவதால், இவை 13 ஆம் நூற்ருண்டுக்குரிய நன்னூல் அல்ல என்பதும், பழைய சூத்திரங்களே[1] என்பதும் உறுதி பெறுகிறது.

*7.* **பாண்டிக் கோவை 1**[2]**:** களவியலுரைகாரர் தம்முரையுள் குறிப்பிடும் துறைகளுக்கு எடுத்துக் காட்டாக ஒரு நூலிலிருந்து தொடர்பான செய்யுட்களைத் தருகிருர்: பாடல்கள் 324. தொல்காப்பிய அகப்பொருள் இலக்கணத்தின் பல உரைகளிலும் தனியான சங்க நூற் பாடல்களும் வேறு பலவும் காட்டப்பட்டிருக்குமேயன்றி, தொடர்ந்த நூல் காட்டப்பட்டதாக இல்லை. இவ்வுரையே இவ்வாறு

1 எமது தமிழ இலக்கிய வரலாறு, 13 ஆம் நூற்ருண்டு, பக்கம் 164 – 166 பார்க்க.

2 இந்நூல் பற்றிய விளக்கக் குறிப்பை எமது தமிழ இலக்கிய வரலாறு 11ஆம் நூற்ருண்டு, பக்கம் 162-165 இல் காணலாம் இப்பிரபந்தம் வே. துரைசாமி ஐயரால் தனி நூலாகக் குறிப்புரையுடன் 1957இல் அச்சிடப் பெற்றுள்ளது. இதிலுள்ள பாடல் தொகை 350.

காட்டுகின்றது. சில பாடல்களுக்கு விளக்கமும் தருகிறது. 13ஆம் நூற்ருண்டில் அகப்பொருள் விளக்கம் செய்த நாற்கவிராச நம்பி, அதே நூற்ருண்டின் முற் பகுதியில் தோன்றிய தஞ்சைவாணன் கோவையைத் தம் நூலுக்கு உதாரணப் பாடல்களாக அமைத்துக் கொண்டார். இதன் பின் 17ஆம் நூற்ருண்டில், திருக்குருகைப் பெருமாள் கவிராயர் தாம் மாறனகப் பொருள் என்ற பெயரால் ஓர் இலக்கணம் செய்து, அதற்கு மாறன் கோவை என்ற ஒரு கோவையையும் புதிதாய்ச் செய்து உதாரணங் காட்டினூர்.

இனி, களவியல் உரைகாரர் தாம் எந்த நூலிலிருந்து தம் பாடல்களை எடுத்தார் என்று சொல்லவில்லை. இவை கட்டளைக் கலித்துறையால் இருந்தது கொண்டு, இவை ஒரு கோவை நூலைச் சேர்ந்தவை என்று அறிஞர் கருதினர். இலக்கண விளக்கம் முதலான பாட்டியல் நூல்களில் செய்வித் தோனல் பெயர் பெற்ற நூலுக்கு உதாரணமாகப் பாண்டிக் கோவை என்ற ஒரு நூல் குறிப்பிடப்பட்டது. ஆனல் அந்த நூல் எது என்பது அப்போது தெரியாது. பின்னல் களவியல் காரிகை 1930இல் வையாபுரிப் பிள்ளையவர்கள் அச்சிட்ட போது, அதில் களவியலுரை மேற்கோள் பாடல்கள் பல பாண்டிக் கோவை என்ற பெயரோடு காட்டப் பட்டிருந்தமை தெரிந்தது. இதன் பின்னரே, இறையனூர் களவியலுரைகாரர் இப்பாடல்களை அப்பெயர் கொண்ட கோவையிலிருந்து எடுத்தார் என்பது தெரிய வந்தது. அந் நூல் முழுமையும் இன்று கிடைக்கவில்லை. களவியலுரை, காரிகையுரை, இளம்பூரணருரை, யாப்பருங்கல விருத்தி யுரை முதலியவற்றுள் கிடைக்கும் இதன் பாடல்களைத் தொகுத்தால் இப்போது கிடைக்கும் பாடல்கள் சுமார் 360. கோவைத்துறை 400 என்பது திருக்கோவையார் தந்த வரையறை. பாண்டிக் கோவை ஒரு துறைக்குப் பல பாடல் கொண்ட பெரு நூலாயிருக்கு மென்று தெரிகிறது.

இங்கு, பல இடங்களில் மூன்று பாடல்கள் ஒரே துறைக்கு வருவதைக் காணலாம். ஆதலால், இந்நூல் ஆயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைக் கொண்டிருந்தது போலும். உற்றது விளைதல் என்ற துறையில், 'கூடற் கொழுந் தமிழின் ஒண் துறை மேலுள்ளம் ஓடியதோ...என் நீ தளர் கின்றதே' என்று பாங்கன் வினவுவது, 'கூடலின் ஆய்ந்த ஒண்தீந் தமிழின் துறைவாய் நுழைந்தனையோ' என்ற திருக்கோவைப் பாடலோடு ஒப்பு நோக்கத் தக்கது.

இங்கு இக்கோவை குறித்துச் சில சொற்கள் கூறுவது அவசியமாகும். இந்நூல் பொதுவாக மதுரையில் ஆட்சி புரிந்த பாண்டியன் மாறவர்மன் அரிகேசரி என்பவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்டது. இவனது ஆட்சியாண்டு கி. பி. 640–670. இவன் நெல்வேலி வென்ற சீர் நெடுமாறன் எனவும் பெயர் பெறுகிறான். திருஞான சம்பந்தரால் சைன மதத்திலிருந்து திருத்திப் பணி கொள்ளப் பெற்ற நெடுமாற நாயனார் இவரே. அறுபத்து மூன்று நாயன்மாரில் ஒருவராக இவர் சேர்க்கப்பட்டுள்ளார். பாண்டிக்கோவை இவருடைய சிவபக்தியை நன்கு குறிப்பிடுகிறது. இவர் மீது பாடப்பட்ட இக்கோவையானது ஒவ்வொரு பாடலிலும் சரித்திரச் செய்தி ஒன்றை உணர்த்திச் செல்கிறது. ஆகவே, இக்கோவையறிவு களவியல் உரைக்கு மட்டுமன்றி, வரலாற்று அறிவுக்கும் துணை செய்வதாகும்.

கோவையினுள் பின் வரும் போர்கள் சொல்லப்பட்டுள்ளன. ஆற்றுக்குடி (14) கடையல் (21) களத்தூர் (2) குளந்தை (2) கோட்டாறு (12) சங்கமங்கை (4) செந்நிலம் (18) சேவூர் (22) நறையாறு (17) நெடுங்களம் (8) நெல்வேலி (9) பாழி (20) பூலந்தை (27) வல்லம் (18) விழிஞம் (16). இப்போர்கள் நெடுமாறன் செய்தவை. பல போர்களுக்குச் சாசன ஆதாரம் உள்ளது. விழிஞப்

போர் போன்ற சிலவற்றிற்குச் சாசன ஆதாரம் இல்லை என்றமையால், இப்பாண்டியன் எட்டாம் நூற்ருண்டின் இறுதியிலோ ஒன்பதாம் நூற்ருண்டிலோ இருந்த வேறு பாண்டியன் ஆவான் என்று ஆராய்ச்சியாளர் சிலர் எழுதியிருக்கின்றனர்.

கோவையில் குறிப்பிட்ட போர்களுள் ஒன்ருன விழிஞத்துப் போர் இன்னும் பிற்காலத்தில் ஏற்பட்டது, ஆகவே, அக்கோவையின் பாட்டுடைத் தலைவன் நெடுமாறன் அல்லன், பின் வந்த மற்றொரு பாண்டியன் என்று நீலகண்ட சாஸ்திரி சொல்லுவார். இது பொருந்தாது. நெடுமாறனுடைய போர்கள் எல்லாமே சாசனத்துக்குள் புகவில்லை. எல்லாச் சாசனங்களும் கிடைக்கவில்லை; கோவை கூறுகின்ற மிகப் பலவான சிறு போர்ச் செய்திகள் யாவும் நெடுமாறனுக்கே உரியவை. விழிஞத்துப் போர் பற்றி அவன் காலத்துச் சாசன ஆதரவு கிடைக்காமையினால், அப்போர் அவன் காலம் அன்று என்று கருதுவது சரியாகாது. பாடல் கூறும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் சாசனச் சான்று கிடைத்தால் நல்லது. கிடைக்காவிட்டால் பாடல் பிழை என்று கருத முடியாது. அன்றியும் நெடுமாறன் காலத்துப் பல்வேறு சிறு நிகழ்ச்சிகளையும் பிற்காலத்தில் மற்றொரு பாண்டியன் மீது ஏற்றிக் கோவையாசிரியர் பாடினர் என்பதும் கொள்ளக் கூடியதன்று. இக்கோவையை ஆராய்கின்ற ஏழாம் நூற்ருண்டு வரலாற்றில் இதை விரிவாய்க் குறிப்பிடுவோம். ஏழாம் நூற்ருண்டின் இடைப் பகுதியில் தோன்றிய இவனைப் புகழும் கோவையை எடுத்துத் தரும் களவியல் உரைகாரர் இக்காலத்துக்குச் சிறிது காலமாவது பிற்பட்டு வாழ்ந்தார் என்றே கருதவேண்டும்.

நூற்பாவாலான யாப்பருங்கலத்துக்கு, அதன் ஆசிரியரே புறனடையாகக் கட்டளைக் கலித்துறையில் ஒரு சிறு நூல்

செய்து யாப்பருங்கலக் காரிகை என்று பெயரிட்டு வைத்தார். அது இன்று வரை விரும்பிப் பயிலும் நூலாக இருக்கிறது. அது போல, இறையனுர் களவியலுரைக்குப் பிற்காலத்தில் (14ஆம் நூற்றுண்டில்) மற்றெருருவர் கட்டளைக் கலித்துறை யால் ஒரு வழி நூல் செய்து வைத்தார். இதன் சூத்திரங்கள் 60. நெருங்கிய காலத்திலேயே அதற்குச் சிறப்பான உரையும் செய்யப்பட்டிருந்தது. களவியலுரை போல, இதன் உரையே நூலினும் சிறப்பு வாய்ந்தது. ஆனல் இந்நூலும் உரையும் அழியும் தருவாயிலிருந்தமை கண்டு, கிடைத்த துணுக்கு களைச் செப்பம் செய்து, பெயரில்லாதிருந்த நூலுக்குக் களவியற்காரிகை என்ற ஒரு பெயரும் புதிதாகச் சூட்டி, வையாபுரிப் பிள்ளையவர்கள் 1930ல் அதை அச்சிட்டார்.[1]

8. இவர் பெயர் குறிப்பிடும் நூல்கள் பின்வருவன: காக்கை பாடினியம், அகத்தியம், சாதவாகனம், இளந் திரையம், நிகண்டு, நூல், கலைக்கோட்டுத்தண்டு, பன்னிரு படலம்; கூத்த நூல், பரிபாடல், முது நாரை, முதுகுருகு, களரியாவிரை, கலி, குருகு, வெண்டாளி, வியாழ மாலை அகவல், மாபுராணம், இசை நுணுக்கம், பூத புராணம்; எட்டுத் தொகை; கூத்தும் வரியும் சிற்றிசையும் பேரிசையும்; எதிர்நூல்; செம்பூட்சேயார் கூற்றியல். இவற்றுள் எட்டுத் தொகை தவிரப் பிற யாவும் இறந்தன. பல இடங்களில், 'என்முர் பிறரும்' என்று காட்டி வேறு சூத்திரங்களையும் தருகிறுர். பிறர் யாவர், நூல் யாது என்பதொன்றும் விளங்கவில்லை.' "என்னை ?

தன்கோள் நிறீஇப் பிறர்கோள் மறுப்பது
எதிர்நூல் என்ப ஒருசா ரோரே

என்முராகலின்; அல்லதூஉம்,

1 இந்நூல் பற்றிய விளக்கத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றுண்டு பக்கம் 90-96ல் காணலாம்.

நூலெனப் படுவது நுதலிய பொருளை
ஆதிக் கண்ணே அறியச் சுட்டி
ஓத்துமுறை நிறுத்துச் சூத்திர நிறீஇ
ஓதல் வழி சார்பென மூவகை மரபில்
தொகைவகை விரியின் வகையுறத் தெரிந்து
ஞாபகஞ் செம்பொரு ளாயிரு வகையிற்
பாவமைந் தொழுகும் பண்பிற் ருகிப்
புணர்ச்சியி னமைந்தது பொருளகத் தடக்கித்
தனக்குவரம் பாகித் தான்முடி வதுவே

எனவும் சொன்னராகலின்: அன்றியும்,

நூலெனப் படுவது நுவலுங் காலை
நுதலிய பொருளை முதலிற் கூறி
முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உண்ணின் றமைந்த உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே

என்ருராகலானும், இவ் வகை சொல்லப்பட்டது நூல் என்க." இது போன்ற இடங்களைக் காண்க. இவற்ருல், களவியலுரை காரருக்கு முன் தொல்காப்பியத்தை யன்றி வேறு பொருளிலக்கண நூல்கள் இருந்தன என்பது தெரிகிறது. ஒன்று, முன் குறிப்பிட்ட தமிழ் நெறி விளக்கமாகும்; பின்னும் சில இருந்தன போலும்.

எண்வகை மணத்தைக் கூறுகின்ற 'அறநிலை யொப்பே பொருள் கோள் தெய்வம்' என்ற சூத்திரம் ஒரு பழைய பாடல் போலும்; இளம்பூரணரும் இதைத் தருகிருர். திருவிருத்த வியாக்கியானத்தில் பரவாதிகேசரி அழகிய மணவாளஜீயர் என்பவரும் (14 நூ.) இதை எடுத்துத் தருகிருர்.

*9. இரண்டு மேற்கோள் பாடல்கள் சிறப்பாய்க் குறிப்பிடத் தக்கன. ஒன்று :*

**ஒளிப்பினும் ஊழ்வினை ஊட்டாது கழியாது**

*என்பது. இது யாப்பினுலும், பொருளினுலும் முதுமொழிக் காஞ்சி வரி போல, அமைந்துள்ளது. ஒருகால் இதுவும் அதை யொத்த மற்றொரு நூலின் பகுதியாயிருக்கலாம்; தெரியவில்லை. இரண்டாவது :*

**நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்**
**பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே**

*என்ற வரிகள். மகட் பேச்சுரைத்தலைத் தோழி தலைவனுக்குக் கூறுமிடத்து, 'என்னை இன்னது செய்யத் தக்கது என்று நீ வினவற்பாலையல்லை, நீ இதற்குக் தக்கவாறு அறிந்து செயற்பாலை' என்று சொல்லி, பெண்ணறிவு பேதைமை யுடையது என்று தெருட்ட இவ் வரிகளைக் காட்டி, 'என்ப தாகலான் நீ ஒரு பொருளை விகற்பித்து அறியுந்துணை, யான் அறியுமாறில்லை பிற; அல்லதூம், யாம் குற்றேவல் மகளிர், நீர் ஏயினவாறு ஒழுகுவதல்லது, இது கொண்டு இது செய்ம்மின் என்றதற்குத் தக்கே மல்லேம் என்னும்' என்று உரைகாரர் எழுதுகிருர். இவை தோழி என்ற நிலைக்குப் பொருந்திய சொற்களே; ஆயினும் நுண்ணறிவை நன்கு விளக்குபவை; மேற் குறித்தவாறு நுண்ணறிவின்மையைக் காட்டுபவையல்ல. எனினும், அக்காலத்துப் பெண்களின் நிலையை இவை பிரதிபலிப்பன என்று கருதுவதும் ஒக்கும். இத் தொடர்கள், சிலப்பதிகாரத்திலிருந்து எடுத்தவை: 'பெண்ணறி வென்பது பேதைமைத்தே என்றுரைத்த— நுண்ணறிவிஞேர் நோக்கம்'–21 : 24 – 5.*

*10. இவையன்றி, உரையுள் இடம் விளங்கா மேற்கோளாக 20 பாடல்கள் வருகின்றன. இவற்றுள் பின்வரும்*

# முச்சங்க வரலாறு

| எண் | சங்கம் | தமிழ் ஆராய்ந்தார் | தொகை | பாடினோர் | பாடிய பாட்டு | அவருக்கு நூல் | சங்கமிருந்த காலம் | சங்கமிரீஇனோர் அரசர் | காலம் | கவியரங்கேறினோர் | இடம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | தலை | அகத்தியனார், திரிபுரம் எரித்தவிரிசடைக் கடவுள், குன்றெறிந்த முருகவேள், முரஞ்சியூர் முடிநாகராயர், நிதியின் கிழவன். | 549 | 4449 | பரிபாடல் முதுநாரை முதுகுருகு களரியாவிரை | அகத்தியம் | 4400 ஆ | கராய்சின வழுதி முதல் கடுங்கோன் ஈருக | 89 ஆ | 7 | தென்மதுரை |
| 2 | இடை | அகத்தியனார். தொல்காப்பியர், இருந்தையூர்க் கருங்கோழிமோசி, வெள்ளூர்க் காப்பியன், சிறுபாண்டரங்கன், திரையன் மாறன், துவரைக் கோமான், கீரந்தை | 69 | 3700 | கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலை அகவல். | அகத்தியம்தொல்காப்பியம், மாபுராணம் இசைநுணுக்கம் பூத புராணம். | 3700 | வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் ஈருக. | 59 ஆ | 5 | கபாடபுரம் |
| 3 | கடை | சிறுமேதாவியார், சேந்தம் பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர் கிழார், இளந்திருமாறன், மதுரையாசிரியர் நல்லந்துவனார், மதுரை மருதனிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் | 49 | 449 | எட்டுத்தொகை, கூத்து, வரி, சிற்றிசை, பேரிசை. | அகத்தியம் தொல் . காப்பியம் | 1850 | முடத்திருமாறன் முதல் உக்கிரப்பெருவழுதி ஈருக | 49 | 3 | வடமதுரை |

முதற் குறிப்புடைய ஆறு பாடல்கள் இளம்பூரணராலும் ஏனைய உரையாசிரியர் பலராலும் எடுத்துக்காட்டப்படுபவை; இலைசூழ் செங்கந்தள், ஏனல் காவல் இவளும் அல்லள், நீடு நீர்க்கானல், நெருநலும் முன்னுள், நெறி நீர் இருங்கழி, வெள்ளாங்குருகின் பிள்ளையும் பலவே. இவற்றுள் ஒன்பது பாடல்கள் நச்சினுர்க்கினியர் போன்ற உரையாசிரியர் காட்டுவன. ஐந்து பாடல்களே வேறிடங்களில் பயிலாத பாடல்கள் (ஒன்று கூத்த நூல்).

**பதிப்பு**

தாமோதரம் பிள்ளை 1883, 1899. பவானந்தம் பிள்ளை 1916. கா. நமசிவாய முதலியார் பதிப்பு – மிகவும் அழகாக அச்சிடப் பெற்ற பதிப்பு. இருப்பினும், ஐயரவர்களின் பதிப்புக்களை ஒத்த ஓர் ஆராய்ச்சிப் பதிப்பு இந்நூலுக்கு இன்னும் வெளிவரவில்லை.

## ஆத்திரையன் பேராசிரியன்

பேராசிரியர் என்ற பெயருடையார் தமிழ் இலக்கிய இலக்கண வரலாற்றுள் பலர் காணப்படுகின்றனர்.[1] இவர்கள் அனைவரும் இலக்கண இலக்கிய உரை செய்தவ ராகத் தெரிகின்றனரேயன்றி, தனி நூல் எவரும் செய்ததாகக் கிடைக்கவில்லை. இவர் பலருள்ளும், நாம் இங்குக் குறிப்பிடும் ஆசிரியர் காலத்தால் மிகவும் முற்பட்டவர் என்று தெரிகிறது. இவர் தொல்காப்பியத்துக்குப் பொதுப்பாயிரம் செய்தா ரென்று இலக்கிய வரலாற்றுள் இரு குறிப்புக்கள் கிடைக் கின்றன. இரண்டினுள் காலத்தால் முற்பட்டது, தொல் காப்பிய மரபியல் உரையுள் பேராசிரியர் தரும் குறிப்பு. 'ஒத்த சூத்திரம் உரைப்பின்' (மரபியல் 98) என்ற சூத்திர

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு, 13 ஆம் நூற்ருண்டு, பக்கம் 188 – 194 இல் பேராசிரியர் ஐவர் பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது.

உரையில், 'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்' என்னும் பொதுப்பாயிரமும், 'வடவேங்கடந் தென்குமரி' என்னும் சிறப்புப் பாயிரமும் என்று ஒருமுறை எழுதி, மீண்டும், "வடவேங்கடந் தென்குமரி என்னும் சிறப்புப் பாயிரம் செய்தார் பனம்பாரனர் எனவும், 'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்' என்னும் பொதுப்பாயிரம் செய்தான் ஆத்திரையன் பேராசிரியன் எனவும், பாயிரம் செய்தான் பெயர் கூறியவாறு என்று எழுதுகிருர். இக் கூற்றுக்களால், ஆத்திரையன் பேராசிரியன் என்ற ஓராசிரியர் தொல்காப்பியத்துக்குப் பொதுப்பாயிரம் செய்தார் என்பதும், அவர் தொல்காப்பிய உரை செய்த, நன்கு தெரிந்த பேராசிரியரினும் வேருவர் என்பதும் தெளிவாகின்றன. ஆத்திரையன்[1] என்பது கோத்திரத்தால் வந்த பெயர்; அத்திரி கோத்திரத்தினர் ஆத்திரேயர்.

மற்ருெரு குறிப்பு, சிவஞானசுவாமிகள் (18 ஆம் நூற்ருண்டு) தருவது. இவர் சங்கர நமசிவாயர் உரையைத் திருத்திய இடத்து, சிறப்புப்பாயிரத்தை அடுத்து, அதே பொதுப்பாயிரத்தையும் அதன் ஆசிரியர் பெயரையும் தந்துள்ளார். இப் பாயிரம் 33 அடிகள் கொண்ட ஆசிரியப்பா. இது வேறிடங்களிற் பயிலாமை நோக்கி இங்குப் பாடல் முழுமையும் தருகிறோம்.

வலம்புரி முத்தின் குலம்புரி பிறப்பும்,
வான்யா றன்ன தூய்மையும், வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமும்,
திங்களன்ன கல்வியும், திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும், யாவதும்
அஃகா வன்பும், வெஃகா உள்ளமும்,
துலைநா அன்ன சமநிலை யுளப்பட

1 ஆதிரையன் என்றும் பாடபேதமுண்டு.

எண்வகை உறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும், தாஅ ளாண்மையும்,
உலகியல் அறிதலும், நிலைஇய தோற்றமும்,
பொறையும், நிறையும், பொச்சாப் பின்மையும்,
அறிவும், உருவும், ஆற்றலும், புகழும்,
சொற்பொருள் உணர்த்துஞ் சொல்வன் மையும்,
கற்போர் நெஞ்சம் காமுறப் படுதலும்,
இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பின் நல்லா சிரியர்
அறனே பொருட்பயன் இன்பெனும் மூன்றின்
திறனறி பனுவல் செப்புங் காலை,
முன்னர்க் கூறிய எண்வகை யுறுப்பினுள்,
ஏற்பன வுடைய ராகிப் பாற்படச்
சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலும்,
சொல்லிய பொருளொடு சூழ்ந்துநன் குணர்தலும்,
தன்னோ ரன்னோர்க்குத் தான்பயன் படுதலும்
செய்ந்நன்றி யறிதலும் தீச்சார் வின்மையும்,
மடிதடு மாற்றம் மானம் பொச்சாப்புக்
கடுநோய் சீற்றம் களவே காமம்
என்றிவை இன்மையும், சென்று வழிபடுதலும்,
அறத்துறை வழாமையும், குறிப்பறிந் தொழுகலும்,
கேட்டவை நினைத்தலும், பாடம் போற்றலும்,
மீட்டவை வினவலும், விடுத்தலும், உரைத்தலும்,
உடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணுக்கர் என்ப: மண்மிசைத்
தொன்னூற் பரவைத் துணிபுணர் வோரே.

*இப்போதுப் பாயிரம் உரையுடன் 1923 இல் தி. வை. சதாசிவ பண்டாரத்தாரால் அச்சிடப்பட்டது.*

பொதுப்பாயிரம் செய்தாரே உரையையும் எழுதியிருக்கிறார் என்ற கருத்தை அவர் குறிப்பிட்டு இருக்கிறார். இது பொருந்துவதே. இப் பாயிரம் இளம் பூரணருக்கு முன்னரே தோன்றியதாகலாம். எனவே இதன் காலம் 10 ஆம் நூற்றாண்டு எனக் கருதுகிறோம்.

இவ்வாசிரியரையோ, இவர் பாயிரம் எழுதிவைத்த காரணத்தையோ அறிந்துகொள்வதற்கு ஆதாரங்கள் எவையும் இல. தொல்காப்பியத்திற்கு உடன் காலத்தில் பனம்பாரனார் சிறப்புப்பாயிரம் செய்திருந்தார். பொதுப் பாயிரம் இல்லாத குறையை நீக்கவேண்டி இவர் இப்பாயிரம் எழுதினார் எனக் கொள்ளவேண்டி இருக்கிறது. ஆனால் பாயிரம் இல்லாது நூலிருக்கலாம் என்பதற்குத் தொல் காப்பிய உரை ஆசிரியரான பேராசிரியர் இறையனார் அகப் பொருளை எடுத்துக்காட்டுகிறார். முதல் சூத்திரத்தை எடுத் தெழுதி, இது பாயிரமின்றி, தானே நூன்முகத்து நிற்பது ஆதலால், உரையாசிரியர் இருவகைப் பாயிர உரையையும் பெய்துரைத்தார் என்ற கருத்துப்பட அவர் எழுதுகிறார்.

ஆராயும்போது இச்சிறு பாடலின் உரையானது தமிழில் தோன்றிய முதல் சில உரைகளில் ஒன்று என்பது தெரிகிறது.

## அத்தியாயம் 7

# சைவ இலக்கியம் - 1

## முன்னுரை

### ஒன்பதாம் திருமுறையும் பதினொராந் திருமுறையும்

சங்க காலத்தின் பின் சைவ சமய இலக்கியமானது தொடர்பாக வளர்ந்து வருவதை இலக்கிய வரலாறுகள் நமக்கு நன்குணர்த்துகின்றன. இவ்வளர்ச்சியின் கலங்கரை விளக்கம் போலச் சில வரலாறுகளும் காலங்களும் ஒளி வீசி நிற்கின்றன. திட்டமாய்ச் சொல்லக் கூடிய வ ர லா று களையும், காலங்களையும் மட்டும் நாம் இங்குக் கருதுவோமானால், சங்க நூல்களின் பின் நன்கு அறியப்பட்ட ஒரு காலப் பகுதி ஏழாம் நூற்றாண்டின் இடைப் பகுதி. விளக்கம் தெரிந்த ஆசிரியர் அப்பரும், சம்பந்தரும். அடுத்து நன்கு தெரிந்து நிறுவப்பட்ட ஓர் ஆசிரியர் கண்டராதித்தர்; காலம் பத்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதி. அடுத்துவரும் காலம் 11ஆம் நூற்றாண்டு; ஆசிரியர் நம்பியாண்டார் நம்பியும், கருவூர்த்தேவரும். அடுத்த காலம் 12ஆம் நூற்றாண்டு; ஆசிரியர் சேக்கிழார் ஒட்டக் கூத்தர். அடுத்து 13ஆம் நூற்றாண்டு (?) மெய்கண்டார். பின் 14ஆம் நூற்றாண்டு; உமாபதி சிவாசாரியர் முதலியோர். அடுத்து மதுரைச் சிவப்பிரகாசர் 15ஆம் நூற்றாண்டு. இதன்பின் நூற்றாண்டு தோறும் சைவ இலக்கியம் மிகப் பல பிரிவுகளில் விரிந்துகொண்டு போகின்றது. நன்கு தெரிந்து ஒப்புக்கொள்ளப்பட்ட வரலாறுகளை மட்டுமே இங்குக் குறிப்பிட்டோம். திட்டமாக வரையறை செய்யப்படாதவற்றைக் கூறவில்லை; காலம் வரையறை செய்யப் பெறாதோருக்கு எடுத்துக்காட்டாவார்,

5 – 6 நூற்றண்டுகளில் வாழ்ந்தவர்களான திருமூலரும், காரைக்கால் அம்மையாரும்; எட்டாம் நூற்றண்டில் சுந்தரமூர்த்தியும், சேரமான் பெருமாளும்; 9 ஆம் நூற்றண்டில் மாணிக்கவாசகர்; 10 – 11 நூற்றண்டுகளில் திருவிசைப்பா உடையார் பலர்; 12 ஆம் நூற்றண்டில் ஞானமிர்தம்; 13 ஆம் நூற்றண்டில் நம்பி திருவிளையாடல்; 14 ஆம் நூற்றண்டில் கந்தபுராணம்; 15 ஆம் நூற்றண்டில் கடவுள்மாமுனிவர்; இவை முதலான வரலாறுகள் மிகப்பல. ‘விரிவஞ்சியும், திட்டமாக முந்தையோர் இவற்றின் காலத்தைக் குறிப்பிடாமையாலும், நாம் முன்னமே வரையறை செய்யப்படாதன என்று இவற்றை சொன்னேம்; அந்தந்த நூற்றண்டின் வரலாற்றில் யாமே இவர்களின் காலத்தை வரையறை செய்திருக்கின்றேம்.

இவ்வாறு வளர்ந்து வந்த சைவ இலக்கிய நெறியில் 10 ஆம் நூற்றண்டிற்குரிய இடத்தை இந்த அத்தியாயத்திலும் அடுத்த இரு அத்தியாயங்களிலும் வரையறை செய்ய முயல்வோம். அடுத்த நூற்றண்டாகிய 11 ஆம் நூற்றண்டில் இராசராச மன்னனுல் போற்றப்பெற்று வாழ்ந்த நம்பியாண்டார் நம்பி தமக்கு முன்னும் தம் காலத்திலும் எழுந்த சைவத் தோத்திரப்பாசுரங்களைத் திருமுறைகளாகத் தொகுத்தார். அவற்றுள் இந்த நூற்றண்டில் சிறப்பாகக் கருதத்தக்கவை, இரு தொகுப்பு நூல்களாகிய ஒன்பதாந் திருமுறையும், பதினெராந் திருமுறையும். கால எல்லை பற்றியும் சில பொது இயல்புகள் பற்றியும் ஒன்பதாந் திருமுறையைப் பின்னே கூறுகிறேம். இவ்வத்தியாயத்தில் இக்காலப் பகுதிக்குரிய அளவு பதினெராந் திருமுறையின் பிரிவுகளையும் அவற்றின் ஆசிரியர்களையும் ஆராய்வோம்.

இவ்வத்தியாயத்தின் இறுதியிலுள்ள பதினெராந் திருமுறை அட்டவணையால் அத்திருமுறை ஆசிரியர்கள்,

அவர்கள் செய்த நூல்கள், பாடல்களின் எண்ணிக்கை, பாடல்களின் காலம், பாடப்பெற்றோர் முதலிய அம்சங்கள் நன்கு விளங்கும். அவ்வட்டவணையின்படி இத் திருமுறையில் சேர்க்கப்பட்ட ஆசிரியர் தொகை 12. அவர்கள் செய்த பிரபந்தங்கள் 40.

பதினோராம் திருமுறையின் வரலாற்றைச் சிறிது இங்கு அறிவது பொருத்தம். நம்பியாண்டார் நம்பி தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருமந்திரம் என்பவற்றைத் தொகுத்தார். அதன் பின்னர் மன்னர் பிரானாகிய இராச ராசன் அவரை வணங்கி, திருமுகப்பாசுரம் முதலியவற்றையும் ஒரு திருமுறையாகச் செய்க என வேண்டவே, இவர் திருமுகப்பாசுரம் முதலான பதிகங்களையும், பதினோராம் திருமுறையாகத் தொகுத்தார்.[1] 11 என்ற எண்ணுக்கு ஒரு பொருத்தம் உள்ளது; மந்திரங்கள் பஞ்சப் பிரமம், ஷடங்கம் ஆக 11 ஆதலினால் திருமுறையும் 11 ஆக்கினார். திருமுறை கண்ட புராணத்தில் இரு பாடல்கள் இதை நன்கு விளக்குகின்றன.

வைத்ததற்பின் நம்பிகழல்
மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதரும் இறைமொழிந்த
திருமுகப்பா சுரம்முதலா
உய்த்தபதி கங்களையும்
ஒருமுறையாச் செய்களனப்
பத்திதருந் திருமுறைகள்
பதினொன்றாப் பண்ணினார்.

1 இதன் விரிவை எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு பக்கம் 295 - 300இல் காணலாம.

**மந்திரங்கள் எழுகோடி ஆதலினால் மன்னுமவர்**
**இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்துப்**
**பந்தமுறு மந்திரங்கள் பதினொன்றும் ஆதலினால்**
**அந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றுக்கினார்.**

*தொகுத்தபின்னர் நம்பி திருத்தொண்டத் தொகை அடைவை அருளாலே நோக்கித் திருத்தொண்டர் அந்தாதி பாடினார். விநாயகர் இரட்டை மணிமாலை இவராலே முன்னமே பாடப்பட்டது. ஏனைய பிரபந்தங்களை, நம்பி இதே காலத்தில் பாடினார் போலும். இவ்வாறு நம்பியாண்டார் நம்பி பாடிய பாடல்கள் யாவும் அவர் காலத்திலேயே பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டன என்று நாம் யூகிக்க வேண்டியிருக்கிறது. அவரே சேர்த்திருக்கலாம். ஆனால் இவ்வாறு கொள்வதற்கு இலக்கியச் சான்றுகள் இல்லை. திருமுறைகள் பதினொன்று என்று அவர் முடித்த மையாலே, தொகுப்பு வேலை முடிந்தது என்பதே பொருள். தொகுத்த தொகுப்பினுள், பண்டைக் காலத்தார் யாரும் இடையில் பிற நூல்களை நுழைக்கத் துணிய மாட்டார்கள். இந்த அளவு உண்மை என்று கொள்ளக் கூடியதே.*

*ஆனால் ஒன்று: ஒன்பதாந் திருமுறைக்கு ஆசிரியர் பெயர், பதிக எண், தலப் பெயர், பண்ணின் பெயர், பாடல் தொகை முதலிய அனைத்தையும் கூறுகின்ற சில பாடல்கள் மிகப் பழங்காலத்திலேயே (உடன் காலத்தில் என்றுகூடச் சொல்லலாம்) செய்யப் பெற்றிருந்தன. இதனால், அத் திருமுறை பற்றிய எவ்வித ஐயமும் பின்னால் எழுவதற்கு வழியில்லை; சில பாடல்கள் கிடைக்கவில்லை என்பது மட்டுமே அதுபற்றிச் சொல்லத் தகுந்தது. ஆனால் பதினோராம் திருமுறைபற்றி இத்தகைய நிலை எதுவும் இல்லை. நூலாசிரியர் யார், பதிகங்கள் யாவை, தலங்கள் யாவை, பாடல்களின் எண்ணிக்கை யாது என்பது பற்றித் தெரிவிக்கும் பழம்பாடலோ குறிப்போ எதுவும் இல்லை.*

*முதன்முதல் இத்திருமுறையை அச்சிட்டவர் என்ன நூல்களைக் கண்டு அச்சிட்டாரோ அவை மட்டுமே இன்று வரை பலரால் திருப்பித் திருப்பி அச்சிடப்பட்டு வழங்குகின்றனவே யன்றி, யாரும் இதுவரை வேறு ஏடுகளைப் பார்த்து ஒப்பிட்டுப் புதிதாகச் செப்பம் செய்தவர் இலர். ஏடுகள் பிற திருமுறைகளுக்கு அனேகம் கிடைத்தபோதிலும் கூட, இத் திருமுறை முழுமைக்குமான ஏடு கிடைக்கவில்லை; சில சில பிரபந்தங்களுக்கு மட்டும் தனியே கிடைக்கின்றன. ஆதலால் இத்திருமுறை இன்னும் முழுமையும் செம்மை பெறாத நிலையில்தான் உள்ளது.*[1]

*யாம் பரிசோதித்த பழமையான ஏடு ஒன்றில் திருவிசைப்பாப் பாடினோர் யார் என்று குறிப்பிட்ட ஒரு தனிப்பாடலைக் கண்டோம். அது கூறும் பொருள் திருத்த முடையதன்று. பார்க்கும்போதே இப்பாடல் செய்தவர் திருவிசைப்பா 11ஆம் திருமுறை இரண்டையும் ஒன்று சேர்த்துக் குழப்பமான நிலையில் பாடியிருக்கிறார் என்று தெரிகிறது. இருப்பினும், இப்படி ஒரு கருத்து இருந்தது என்பதைக் காட்டவே இப்பாடலை இங்குத் தருகிறோம்; இப் பாடலை ஆறுமுக நாவலரும் தமது சைவ சமய நெறியுரையில், திருமாளிகைத் தேவர் துதியின் உரையில், குறிப்பிட்டிருக்கிறார் :*

சீரார்மா ளிகைத்தேவர் கருவூர்த் தேவர்
திகழ்நம்பி கண்ட ராதித்த தேவர்
பாரார்வே ணாட்டுத்திரு வடிகள்முது வாலி
பரமபுரு டோத்தமர்பண் பயில்சேது ராயர்

1 திரு ஈங்கோய்மலை எழுபதில் கிடைக்கவில்லை என்று முன் பதிப்பாளர் அனைவரும் குறிப்பிட்டிருந்த 15 பாடல்களை யாம் ஓர் ஏட்டில் கண்டு வெளியிட்டோம். எனினும் இத்திருமுறை முழுவதிலும் பல பிரபந்தங்கள் இன்னும் செப்பம் பெறாமலே உள்ளன; ஏட்டுத் துணை கொண்டு சிலவற்றை யாம் ஒழுங்கு செய்துள்ளோம்.

ஏராரும் இளம்பெருமா னடிகள் சேந்தர்
எனும்புகழ திராவடிகள் இவரோ டின்னம்
பேராருங் கல்லாடர் பட்டினத்துப் பிள்ளை
பெருகுதிரு விசைப்பாவைப் பண்ணி னரே.

*இவ்வாசிரியருள் பத்தாம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்து நூல் செய்தவர்கள் திருவாலவாயுடையார், காரைக்கால் அம்மையார், சேரமான் பெருமாள், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், இளம் பெருமானடிகள், அதிராவடிகள் ஆகிய அறுவர். இந்த நூற்றாண்டுக்கு அடுத்த 11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் நம்பியாண்டார் நம்பி ஒருவர். ஏனைய ஐவரும் 10ஆம் நூற்றாண்டுக்குரியோர். இவர்கள் நக்கீர தேவர், கல்லாட தேவர், கபில தேவர், பரண தேவர், பட்டினத்துப் பிள்ளையார் என்போர். இவர்கள் மட்டும் செய்த பிரபந் தங்கள் 20. பதினொராந் திருமுறை ஆசிரியர் பன்னிருவருள் காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமாள் என்னும் மூவரும் திருத்தொண்டத் தொகையில் பாடப்பெற்ற அறுபத்துமூன்று நாயன்மார்களின் வரிசையில் வைத்தெண்ணும் பெருமையுடையோர். இந்த நூற்றாண்டுக் குரியவராக நாம் கருதுவோரில், கபிலர், பரணர், நக்கீரர் ஆகிய மூவர் பெயர்களை நம்பியாண்டார் நம்பி தமது திருத்தொண்டர் அந்தாதியில் (49) பொய்யடிமை இல்லாத புலவர் வரிசைக்கு எடுத்துக்காட்டாகக் கூறுவர்.*

*இனி, சில பொது இயல்புகளை ஆராய்ந்து மேற் செல்லலாம். முதலாவது திருவால வாயுடையார் என்பவர் மதுரை ஆலவாய்ப் பெருமானாகிய இறையனார் என்று பெயர் தாங்கிய சோமசுந்தரக் கடவுளே என்பது ஆன்றோர் கருத்து. எனினும், இவ்விறையனார் சேரமான் பெருமானுக்குத் திருமுகம் கொடுத்தார் என்றமையால் இவர் புலவராய் வீற்றிருந்த காலம் வரையறுக்கப்படுகிறது. சேரமான்*

காலம் எட்டாம் நூற்றுண்டின் தொடக்கம் எனவே, இவ் இறையனுர் காலமும் இதுவே என்று கொள்ளவேண்டும். 'மதிமலி புரிசை'த் திருமுகத்தைப் பெற்றவர் இச்சேரமானே என்று சேக்கிழார் தெளிவாக உரைத்திருக்கிருர். இந்தக் காலம் நாம் கருதும் நூற்றுண்டுக்கு மிகவும் முற்பட்டது ஆதலால், இங்கு ஆராய எடுத்துக் கொள்ளவில்லை. காரைக்காலம்மையார், காலத்தால் அப்பர் சம்பந்தர் என்போருக்கு முற்பட்டவர் என்பது வரலாறு. ஐயடிகள் காடவர்கோன் ஏழாம் நூற்றுண்டு. சேரமான் பெருமாள் சுந்தரர் காலமாகிய எட்டாம் நூற்றுண்டு; இளம்பெருமா னடிகளும் அதிராவடிகளும் இதே காலம் என்று நாம் கருதுகிறேம். இவர்களை நீக்கி முன் குறிப்பிட்ட ஆசிரியர் ஐவர் வரலாற்றை இங்கு ஆராய்வோம்.

இவ் ஐவருள் முதலாவது கருதத் தக்கோர், தேவர் என்றும் நாயனுர் என்றும் பெயர் படைத்த நால்வர். இவர்கள் ஆவார் நக்கீரர், கல்லாடர், கபிலர், பரணர். இவர்கள் வரலாறுகளை தனித்தனியே கூறுமுன் இவர்களைக் குறித்த ஒரு பொது இயல்பைக் குறிப்பிடவேண்டும். அதாவது இந்நால்வர் பெயரும் சங்கப் புலவர் வரிசையில் இடம் பெற்றுள்ளது: சங்கப்புலவர் பெயர் நக்கீரர், இத் திருமுறைப் புலவர் நக்கீரதேவ நாயனுர். பொதுவாக ஆராய்ச்சியில்லாது வழங்கும் கருத்து, சங்கப் புலவரும், திருமுறைப் புலவரும் ஒருவரே என்பது. சங்க இலக்கிய காலம் இறுதி எல்லை கி. பி. இரண்டாம் நூற்றுண்டு. நாம் கூறுகின்ற இத்திருமுறைப் பகுதியின் காலம் பத்தாம் நூற்றுண்டு என்று பின்னர் ஆராய்ந்து நிறுவுகிறேம். ஆதலால், இவ்வளவு கால இடையீடு இருக்கும்போது சங்கப்புலவரே திருமுறைப் புலவராக இருத்தல் இயலாது. இதற்குக் காரணங்கள் பல. நூலில் ஆளப்படும் சொற்கள், பொருள், யாப்பு அமைதி, பிரபந்த அமைப்பு முதலான

*தன்மைகள் இவ்விடையீடு உண்டு என்பதை நன்கு உறுதி செய்கின்றன. இதுபற்றிச் சொல்லத்தக்க பொதுக் கருத்துக்களை அவ்வவ் ஆசிரியர் பற்றிப் பேசும் இடங்களில் குறிப்பிட்டிருக்கிறோம். இரு புலவரும் ஒருவரே என்ற தவருன எண்ணத்தை உறுதி செய்ய உதவியது, நம்பி யாண்டார் நம்பி முன்னே குறிப்பிட்டபடி பொய்யடிமை இல்லாத புலவரைக் குறித்துப் பாடிய பாடல்:*

**தரணியில் பொய்ம்மை இலாத்தமிழ்ச் சங்கம் அதில்கபிலர்**
**பரணர்நக் கீரர் முதல்நாற்பத் தொன்பது பல்புலவோர்**
**அருள்நமக் கீயும் திருவால வாய்அரன் சேவடிக்கே**
**பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே.**

*"இந் நிலவுலகில் பொய்ம்மையில்லாத தமிழ்ச் சங்கத்தில் இருந்தவர்களான கபிலர், பரணர், நக்கீரர் முதலான பல புலவர்கள் நமக்கு அருள் சுரப்பவனுகிய திருவாலவாய்ச் சிவபெருமான் திருவடியைத் துதிக்கின்ற பொருளை அமைத்துப் பல நூல் செய்கின்ற புலவர் ஆவார்" என்பது இதன் பொருளாகும். இங்கு நம்பியாண்டார் நம்பி, சோம சுந்தரக் கடவுள் மதுரைக் கடைச் சங்கத்தில் தலைமைப் புலவராய் இருந்தார், சங்கத்தில் 49 புலவர் வாழ்ந்தனர், அவர்கள் அனைவரும் அப்பெருமான் சேவடிக்கே பாடுகின்ற திறமுடையவர்கள் என்று புராணங்கள் கூறுகின்ற பண்டைக் கதையை நம்பினுர் என்று ஏற்படுகிறது. அன்றியும், அவர் கபிலர், பரணர், நக்கீரர் என்ற சிறப்பான சில புலவர் பெயர்களையும் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிருர். இதுவே பிற்காலத்தில் நக்கீரர் பற்றிய பல கதைகள் எழுவதற்கும், சங்கப்புலவரும் திருமுறைப்புலவரும் ஒருவரே என்ற கருத்து எழுவதற்கும், ஆதரவாக இருந் திருக்கிறது. உண்மையில் சங்கப்புலவர் – அதாவது கடைச்சங்க காலத்தில் ஆராயப்பெற்றன என்று கருதப் படுகின்ற சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகை,*

பத்துப்பாட்டு என்ற இரு தொகுதிகளையும் பாடிய புலவர்–49 என்ற எண்ணினும் மிக அதிகமானவர். இவர்கள் அனைவரும் திருவலவாய் அரன் சேவடிக்குப் பாடுபவர் அல்லர். ஆகவே ‘சங்க மதில் பல் புலவோர்’ என்ற தொடருக்குச் சங்க இலக்கியம் பாடிய புலவர் என்று நாம் கொண்டால் நம்பி கூறுகின்ற இரு கருத்துக்களும் பொருந்தவில்லை என்பது தெளிவாகிறது.

‘பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்’ என்று சுந்தரமூர்த்தி தமது திருத்தொண்டத் தொகையில் பாடிய ஒரு வரியை, நம்பி இவ்வாறு விரித்தார். ‘பொய்யடிமை இல்லாத புலவர் இவர் அல்லர், மாணிக்கவாசகரே ஆவர்’ என்று எழுதிய ஆராய்ச்சியாளரும் உளர். இது சிறிதேனும் பொருத்தம் அற்ற, பயனற்ற விவாதம். இதை இங்கு ஆராய்வது நமது நோக்கம் அன்று. அடுத்து, புராணம் பாடிய சேக்கிழார் பொய்யடிமை இல்லாத புலவர் என்ற பெயரில் மூன்று பாடல் பாடியிருக்கிறார்.

“செய்யுள்நிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்
மெய்யுணர்வின் பயனிதுவே” எனத்துணிந்து விளங்கியொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்
பொய்யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார்.

பொற்பமைந்த அரவாரும் புரிசடையார் தமையல்லால்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற
பெற்றியினில் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையார் அறிந்துரைக்க வல்லார்கள்.

ஆங்கவர்தம் அடியிணைகள் தலைமேற்கொண் டவனிஎலாம்
தாங்கியவெண் குடைவளவர் குலஞ்செய்த தவமனையார்
ஓங்கிவளர் திருத்தொண்டின் உண்மையுணர் செயல்புரிந்த
பூங்கழலார் புகழ்ச்சோழர் திருத்தொண்டு புகல்கின்றாம்.

இவ்வளவே சேக்கிழார் பொய்யடிமை இல்லாத புலவர் பற்றிக் குறிப்பிடும் கருத்துக்கள்; நக்கீரர் முதலான எந்தப் பெயரையும் இவர் சொல்லவில்லை. ஆதலால் நம்பியின் கருத்தை இவர் ஒப்புக்கொள்ளவில்லை என்பது மிகத் தெளிவு. "சொல்லின் பொருளும், நூலின் நோக்கமும் உணர்வின் பயனும் சிவனடிக்கு ஆகுதல் என்று உணர்ந்து அப்படி ஆளானவர்கள் பொய்யடிமை இல்லாத புலவர். பிறருக்காகச் செய்யுள் செய்ய இவர்கள் வாய் திறவார். இவர்கள் பெருமை யார் அறிந்து உரைக்கவல்லார்?" என்பது சேக்கிழார் கூற்று. இதிலிருந்து தெளிவாவது, நம்பி கூறிய சங்கப் புலவரைப் பொய்யடிமை இல்லாத புலவராகச் சேக்கிழார் கருதவில்லை என்பதாகும். கருத்தில் மாறுபாடு இருப்பதனல் நம்பியிடத்துச் சேக்கிழாருக்கு ஈடுபாடு குறைவு என்று கருதலாகாது.

இனி நூல் செய்த ஆசிரியர்களைத் தனித்தனியே ஆராய்வோம்.

சேரமான் காலத்தினரான இறையனர் (திருவால வாயுடையார்) பெயரை நீக்கி, இங்கு சங்கப்புலவராகக் குறிப்பிடப்பட்ட பெயருடைய ஆசிரியர்–நக்கீரதேவர், கபிலதேவர், பரணதேவர், கல்லாடதேவர் என்னும் நால்வர். இந் நால்வருடைய பாடல்களும் தொகை நூல்களில் காணப் படுகின்றன. அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை மூன்றிலும் நால்வர் பாடல்களும் உள்ளன. ஆனல், நற்றிணை யில் கல்லாடர் பாடல் இல்லை, மற்றவர் பாடல்கள்உள்ளன. அப்படியே ஏனையோர் பாடல்கள் பத்துப் பாட்டிலோ பதிற்றுப்பத்திலோ காணப்படுகையில், கல்லாடனர் பாடல் அங்கு எங்கும் காணப்படவில்லை. ஆகவே சங்க நூல்களைப் பொறுத்தவரையில், மூவர் ஒரு தன்மையாகவும் கல்லாடர் வேறு தன்மையாகவும் உள்ளனர். மேலும் நம்பியாண்டார்

நம்பி பெயர் சொல்லும்போது கபிலர் பரணர் நக்கீரர் என்று மட்டுமே சொல்கிருர்; கல்லாடர் பெயரைச் சொல்ல வில்லை. இந்த வேற்றுமையை அடிப்படையாக வைத்து நாம் பார்க்கும் போது, நக்கீரர், பரணர், கபிலர் மூவரும் ஒரு காலத்தினர், ஒரே குழுவாக இருந்தோர் என்றும், கல்லாட தேவர் இவர்களின் வேருனவர் என்றும் கருத வேண்டியிருக்கிறது. கல்லாட தேவர், தேவர் என்ற பெயர் சூட்டப்பட்ட போதிலும்கூட, காலத்தால் இதே நூற்றுண்டில் சற்றுப் பிற்பட்டிருக்கலாம் என்று தோன்று கிறது. இவரது வரலாறும் திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்று இவர்பெயரால் வழங்குகின்ற பதினெராந் திரு முறைப் பிரபந்தமும் இவ்வத்தியாயத்தின் இறுதியில் அம் மூவருக்கும் பின்னர் ஆராயப்பெற்றுள்ளன.

## நக்கீரதேவ நாயஞர்

இவர் பதினெராந் திருமுறை ஆசிரியருள் ஐந்தாமவர். இவர் பிரபந்தங்கள் இதனுள் பத்து உள்ளன. இப்படியே நம்பியாண்டார் நம்பியின் பிரபந்தங்களும் பத்து உள்ளமை குறிப்பிடத் தக்கது. நக்கீரர் பிரபந்தங்கள் பின்வருவன: கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி, திரு ஈங்கோய்மலை எழுபது, திரு வலஞ்சுழி மும்மணிக் கோவை, திரு எழு கூற்றிருக்கை, பெருந் தேவபாணி, கோபப் பிரசாதம், கார் எட்டு, போற்றித் திருக்கலி வெண்பா, திருமுருகாற்றுப் படை, திருக்கண்ணப்ப தேவர் திருமறம். இப்பத்தினுள் திருமுருகாற்றுப்படைக்கு ஒரு தனிநிலை உள்ளது, ஏனைய ஒன்பதும் மற்றொரு தனிநிலையில் உள்ளன. திருமுருகாற்றுப் படையானது பதினெராந் திருமுறையில் கோக்கப் பெறு வதற்கு முன்னமே, பத்துப் பாட்டில் முதல் பாட்டாகக் கோக்கப்பட்டிருந்தது. பத்துப்பாட்டுள் முருகாறு, சிறுபாண், பெரும்பாண், பொருநாறு, கூத்தர் என்று ஐவகை ஆற்றுப்

படைகள் உள்ளன. முருகாற்றுப்படையின் பொருளானது தொல்காப்பியர் கூறிய ஆற்றுப்படை இலக்கணப்படி அமைந்து, 'முருகன் பால் வீடு பெறுதற்குச் சமைந்தாஞேர் இரவலனை முருகனிடத்தே ஆற்றுப்படுத்தது' என்பது பொருள். இப்பாடலானது ஓர் இரவலனைப் புலவர் ஒருவர் ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ள காரணத்தால், முருகன் பெயரால் வழங்காது புலவர் பெயரால் புலவராற்றுப்படை என்றே வழங்க வேண்டும் என்று கூறுதலும் உண்டு. இப் பாடல் சங்க நூல்களில் ஒன்று ஆதலால், இது சங்க நூலின் காலத்துக்குரிய பாடலாகும். ஆகவே, சங்க காலத்தின் இறுதி எனக் கருதப்படும் கி. பி. இரண்டாம் நூற்ருண்டே இதற்குரிய காலமாகும். ஏனைய நூல்கள் பிந்திய நூல்கள். அவற்றை நாம் இங்கு ஆராய்வது பொருந்தும். இரண்டாம் நூற்ருண்டுக்குரிய திருமுருகாற்றுப்படை[1] பத்தாம் நூற்ருண்டு இலக்கிய ஆராய்ச்சிக்குப் பொருந்தும் பொருளன்று. ஆகவே அதுபற்றி இவ்விடத்தில் எந்த ஆராய்ச்சியும் நிகழ்த்தவில்லை.

இதனுல் ஏற்படும் நிலை என்னவென்ருல், பதினெராந் திருமுறையில் உள்ள நக்கீரர் இருவர் ஆகின்றனர். ஒருவர் சங்க கால நக்கீரர்; திருமுருகாற்றுப்படை பாடியவர். மற்றவர் நக்கீர தேவ நாயனுர்; இவர் ஏனைய பதினெராந் திருமுறைப் பிரபந்தங்கள் பாடியவர். இப்படி பார்க்கும் போது பதினெராந்திருமுறை ஆசிரியர் தொகை 12 அன்று, 13 ஆகிறது. திருமுருகாற்றுப்படையை நீக்கி மற்றுள்ள ஒன்பது பிரபந்தங்களைப் பார்க்கும்போது அவற்றை இரு பிரிவாகப் பிரிக்கலாம். முதல் பிரிவு 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாடலையொட்டிய கதையின் தொடர்பு

---

1 இதன் காலம் 5ஆம் நூற்ருண்டு என்பது வையாபுரிப் பிள்ளையவர்கள் கருத்து.

உடையது; மற்றது, அத் தொடர்பு இல்லாதது. முதல் பிரிவைச் சேர்ந்த பிரபந்தங்கள்:

கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி
திரு எழுகூற்றிருக்கை
பெருந்தேவ பாணி
கோபப் பிரசாதம்
போற்றித் திருக் கலிவெண்பா.

'கொங்குதேர் வாழ்க்கை' கதைத் தொடர்பு இல்லாத பிரபந்தங்கள் பின் வருவன :

திரு ஈங்கோய்மலை எழுபது
திரு வலஞ்சுழி மும்மணிக்கோவை
கார் எட்டு
திருக் கண்ணப்பதேவர் திருமறம்.

இவற்றை ஆராயுமுன் முதற்பிரிவின் பிரபந்தங்கள் தோன்றிய வரலாற்றை இங்குச் சுருக்கிக் கூறலாம். அவ் வரலாற்றில் முக்கியமான பகுதி பின் வருவது.

மதுரையில் பாண்டி மன்னன் ஒரு நாள், தன் தேவியோடு தனித்துலாவிய பொழுது, அவள் கூந்தலின் மணம் இயற்கையானதா, அன்றி மலரினால் விளைந்ததா என்ற ஆராய்ச்சி மனத்தில் தோன்ற, மறுநாள் அவன் சங்கப் புலவரிடத்தே "நான்கொண்ட ஐயத்தைக் குறிப்பால் உணர்ந்து தீர்ப்பவர் இப்பொற்கிழி பெறுவர்" என்று சொல்லி, ஆயிரம் பொன் கொண்ட ஒரு கிழியைப் புலவர் முன் கட்டிவைத்தான். அவன் உள்ளக் குறிப்பை ஒருவரும் அறிய வழியில்லை. இதற்கிடையில் அந்நகரில் இருந்த தருமி என்ற ஒரு வேதிய இளைஞன் தான் மணம் புரிந்து கொள்வதற்காகப் பொருள் வேண்டி ஆலவாய்ப்

*பெருமானைக் குறையிரந்தான். அவர் பின்வரும் பாடலைப் பாடியளித்து, "நீ இதைக் கொண்டு போய் அரசனிடம் படித்துப் பொருள் பெறுவாயாக" என்று சொல்லி அனுப்பினர் :*

**கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி**
**காமஞ் செப்பாது கண்டது மொழிமோ,**
**பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்**
**செறியெயிற் றரிவை கூந்தலின்**
**நறியவும் உளவோ நீஅறியும் பூவே.** [1]

*தருமி அப்பாடலை எடுத்துச் சென்று அரசனிடம் படித்துக் காட்ட, அவன் அப்பாடல் தனது உள்ளக் கருத்தைத் தெளிவு செய்தமைபற்றி மகிழ்ந்து, பொற்கிழியை எடுத்துச் செல்லுமாறு தருமியைப் பணித்தான். அவன் எடுக்கப் புக்கபோது நக்கீரர் தடுத்து "இப்பாடல் குற்றமுடையது, ஆதலால் நீ பொற்கிழி பெற இயலாது" என்று சொல்லி அவனை வெருட்டி விட்டார். தருமி சென்று இறைவனிடம் முறையிட, அவர் மறுநாள் ஒரு புலவன் வேடந்தாங்கித் தருமியோடு சங்கப் புலவர் முன் வந்தார். நக்கீரரே குறை கூறியவர் என்று அறிந்து, புலவராக வந்த இறையனர்,*

**அங்கங் குலுங்க அரிவாளின் நெய்தடவிப்**
**பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் - சங்கைக்**
**கீர்கீ ரெனஅறுக்குங் கீரனோ என்கவியை**
**ஆராயும் உள்ளத் தவன்**

*என்ற பாடலைச் சொன்னர். அதற்கு எதிராக நக்கீரர்,*

**சங்கறுப்ப தெங்கள் குலம், தம்பிராற் கேதுகுலம் ?**
**பங்கமுறச் சொன்னற் பழுதாமோ ? - சங்கை**

---

1 இது சங்க நூலாகிய குறுந் தொகையின் இரண்டாம் பாடலாகவும் தொகுக்கப்பட்டுள்ளது.

அரிந்துண்டு வாழ்வோம், அரனுரைப் போல
இரந்துண்டு வாழ்வ திலே

என்ற பாடலைப் பாடினர். அதன் மேல் இருவருக்கும் வாக்கு வாதம் நிகழ்ந்து, கூந்தலுக்கு இயற்கை மணம் இல்லை என்று கூறி உமாதேவியின் கூந்தலுக்கும் இல்லை என்று நக்கீரர் நிறுவ முயன்றபோது, புலவராக வந்த இறைவன் நெற்றிக் கண்ணைத் திறக்க, அதன் வெம்மை ஆற்றுது நக்கீரர் பொற்றுமரை வாவியில் வீழ்ந்தார். தருமி கிழி பெற்றுச் சென்றுன். பின் பிற புலவர்களுடைய வேண்டு கோளுக் கிணங்கிச் சிவபெருமான் நக்கீரரை வாவியினின்றும் கரையேற்றினர். பின்னர் நக்கீரர் தாம் கூறிய பிழையான சொற்களைப் பொறுக்கும்படி வேண்டி, கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி, கோபப் பிரசாதம், திரு எழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, போற்றிக் கலிவெண்பா ஆகிய நூல்களைப் பாடினர்.

இவ் வரலாறு சிற்சில மாறுதல்களுடன் நம்பி திருவிளை யாடல், பரஞ்சோதி திருவிளையாடல் ஆகிய நூல்களில் சொல்லப்பட்டுள்ளது. நம்பி திருவிளையாடலின் காலம் 13ஆம் நூற்றுண்டு, பரஞ்சோதி திருவிளையாடலின் காலம் கி. பி. 1700. 11ஆம் நூற்றுண்டில் கல்லாடம் பாடிய கல்லாடரும் இச்செய்தியைக் குறிப்பிடுகின்றுர்:

பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக்
கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப்
பொற்குவை தருமிக்கு அற்புடன் உதவி
என்னுளங் குடிகொண் டிரும்பய னளிக்கும்
கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்.

இங்கு 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாடலையும் தருமி என்ற அந்தணன் பெயரையும் இவர் குறிப்பிடுகின்றுர். மேலும்,

அருந்தமிழ்க் கீரன் பெருந்தமிழ்ப் பனுவல்
வாவியிற் கேட்ட காவியங் களத்தினன்

என்ற இடத்தில் வாவிக் கரையில் கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி பாடக் கேட்டதாகவும் சொல்லுகிறர். தருமியின் கதை பழைய கதை என்பதை அப்பர் திருவாக்காலும் அறிகிறேம்:

நன்பாட்டுப் புலவனய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னேன்காண் 7000

என்று திருப்புத்தூர்த் திருத்தாண்டகத்தில் குறிப்பிடுகிறர். எனவே, இத்தகையதொரு பழங்கதை நெடுநாட்களாகத் தமிழ்நாட்டில் வழங்குகிறது. அப்பருக்கு முன் வழங்கிற்று; சங்க காலத்தில் இருந்ததா என்பது தெரியவில்லை. ஆதலால் சங்க கால நக்கீரர், அவர் பாடிய திருமுருகாற்றுப் படை, தருமிபொற்கிழி பெற்றது, கயிலைபாதி காளத்திபாதியந்தாதி முதலான நூல்கள் — இத்தனையும் கொண்டு பிற்காலத்தில் ஒரு கதை எழுந்தது எனத் திட்டமாய்ச் சொல்லலாம். ஆனல், நக்கீரர் உண்மையில் ஒரு சங்கப் புலவர்; கொங்குதேர் வாழ்க்கை என்பது உண்மையில் சங்கம் மருவிய பாடல். இதுவும், தருமிக்காக இறையனர் சங்க மேறிக் கனகக்கிழி அருளியதை அப்பர் குறிப்பிடுவதும், புராணக் கதைகளும் அவிழ்க்க முடியாத ஒரு சிக்கலை உண்டாக்கி இருக்கின்றன. இச் சிக்கலை என்றேனும் அவிழ்க்க முடியுமா என்பது சந்தேகமே. எனினும் சில நிலைமைகளைத் தெளிவுபடுத்திக்கொள்ளலாம்.

1. நக்கீரர் சங்கப் புலவராய்த் திருமுருகாற்றுப்படை பாடினர்.

2. கொங்குதேர் வாழ்க்கை சங்க காலத்திலேயே இறையனர் என்ற பெயருடைய ஒரு புலவரால் பாடப் பட்டது.

3. அப்போது விவாதம் இல்லை. நக்கீரர் ஆட்சேபிக்கவில்லை. நெற்றிக்கண்ணைத் திறக்கும் அற்புதம்பற்றிய கதை வழங்கவில்லை.

இவை அப்பருக்கு முன்னுள்ள நிகழ்ச்சிகள். (அப்பர், 'நன் பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி, நற்கனகக் கிழிதருமிக் கருளினேன் காண்' என்கிருர்; சங்கப் பாடல் பாடிக் கொடுத்துக் கிழிபெறச் செய்தார் என்பதுமட்டுமே இதற்குப் பொருளாகும்.) இனிக் கல்லாடர் காலத்துக்குமுன் எழுந்து விட்ட கருத்துக்கள் பின்வருவன:

4. அரசன் உள்ளக் குறிப்பை விளக்கவே 'கொங்கு தேர் வாழ்க்கை'ப் பாடல் தொடங்கியது. அரசன் அது கொண்டே தருமிக்குப் பொற்குவையளித்தான்.

5. கீரன் பாடிய பாடலை (அந்தாதியை) வாவியங் கரையில் பெருமான் கேட்டனன்.

6. நக்கீரர் இறையனுர் பாடலில் குற்றங் கூறிச் சிவ பெருமான் கோபத்துக்கு ஆளாகிப் பொற்ருமரை வாவியில் வீழ்ந்தது.

7. பின் இறைவன் அருளுக்குப் பாத்திரமாகவேண்டி, கோபப் பிரசாதம், பெருந்தேவபாணி, எழு கூற்றிருக்கை என்பன பாடியது.

8. போற்றிக் கலி வெண்பா பாடியது.

இவற்றை ஒருசேர ஆராயும்போது, நிச்சயமான சில முடிவுகளுக்கு வர இயலும்.

1. திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் சங்கப் புலவர். அவருக்கும் ஏனைய பிரபந்தங்களுக்கும் ஏனைய வரலாற்றுப் பகுதிகளுக்கும் சம்பந்தமில்லை.

2. 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாடலை இறையனர் என்ற புலவர் (இறைவனல்ல) தருமிக்காகப் பாடிக் கொடுத்து, பொற்கிழியைச் சங்கப் புலவர்முன் பெறச் செய்தார். இது அப்பர் கருத்துப்படி பழஞ் செய்தியே.

இவ்விரு நிகழ்ச்சிகளும் சங்ககால நிகழ்ச்சிகளே. ஏனைய நிகழ்ச்சிகள் யாவும், பத்தாம் நூற்றுண்டில் — கல்லாடர் காலத்துக்குமுன், பழைய பாடல்களையும் ஆசிரியர் பெயர்களையும் வைத்துப் புனையப்பட்டன. அவற்றைப் பின்வருமாறு முறைப்படுத்தலாம்:

அ. பத்தாம் நூற்றுண்டில் – அதாவது அப்பருக்குப் பின்னும், கல்லாடருக்கும் நம்பியாண்டார் நம்பிக்கும் முன்னும் ஒரு புலவர் வாழ்ந்தார். இவருக்கு நக்கீரதேவர் என்ற பெயர் இடப்பட்டிருந்தது.

ஆ. இவர் பாடிய பல பாடல்களுக்குத் தருமி வரலாற்றேடு புதிதாகத் தொடர்பு காணப்பட்டது.

இ. கீரன் பொருமையால் நாயகன் பாடலுக்குக் குற்றம் கூறியது, பெருமான் நெற்றிக் கண்ணைக் காட்டியது, கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி பாடியது முதலான செய்திகள் இவர்பால் ஏற்றப்பட்டது – ஆகிய நிலைமைகள் இப்போது எழுந்தன.

ஈ. அந்தாதி பாடிப் பெருமான் அருள்பெற்ற நக்கீர தேவர் பின்னர் கோபப் பிரசாதம், பெருந்தேவபாணி, எழு கூற்றிருக்கை என்பன பாடினர். (இக் கருத்து நம்பி திருவிளையாடலில் சொல்லப்பெருமல் பரஞ்சோதி திருவிளை யாடலில் சொல்லப்பட்டது.)

*உ. நம்பியாண்டார் நம்பியால் மட்டுமே குறிப்பிடப் பட்ட போற்றிக் கலிவெண்பாவும் இவரால் பாடப்படது.*

*ஊ. நிரம்ப அழகிய தேசிகர் என்ற சைவ ஆசிரிய ரொருவர் 16ஆம் நூற்றுண்டின் பிற்பாதியில் (சுமார் 1575) வாழ்ந்தார். இவர் புராணங்களும் சித்தாந்த சாத்திர உரைகளும் செய்தார். புராணங்களில் ஒன்று திருப்பரங் கிரிப் புராணம். ஒரு பூதத்திலிடமிருந்து அடியார்களைக் காக்கவேண்டித் திருமுருகாற்றுப்படையை நக்கீரர் பாடினுர் என்று இவர் அப் புராணத்தின் நக்கீரச் சருக்கத்தில் கூறுகிறுர்; ஏனைய நூல்கள் எவையும் குறிப்பிடவில்லை. இவர் காலம் பரஞ்சோதி காலத்திற்கு (1700) மிக முற்பட்டது.*

*இந்த நிலைமைகளை அடிப்படையாக வைத்தே மேல் நக்கீர தேவர் பாடலைக் குறித்த ஆராய்ச்சியை நிகழ்த்த வேண்டும்.*

*திருமுருகாற்றுப்படைத் தனிப் பாடல்கள்: திருமுரு காற்றுப்படையின்பின், பத்துத் தனி வெண்பாக்கள் காணப்படுகின்றன. முதற் பாட்டு பின்வருவது:*

**குன்றம் எறிந்தாய் குரைகடலில் சூர்தடிந்தாய்**
**புன்தலைய பூதப் பொருபடையாய் - என்றும்**
**இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே**
**உளையாய்என் உள்ளத் துறை.**

*இப் பாடலை நம்பித் திருவிளையாடல் (44·28) குறிப் பிடுகிறது:*

**இனிதோர்கவி குன்றமெறிந் தாயெ னப்பின்**
**என்றுமிளை யாயழகி யாயென் னுங்கால்**
**மனமகிழ்ந்தீது யார்பகர்வார் அவர்க்கு வேண்டும்**
**வரங்கொடுப்போம் மதுரையிற்போ கென்னப் போந்து**

கனமலிசங் கத்துரைப்பக் கேட்டு யாருங்
களிகூர்ந்தார் தமிழ்முருகன் அருளை வாழ்த்தி.

பனுவல் திருமுருகாற்றுப்படையென் ருேங்கிற்றென நயந்து பாண்டியனென் செய்தா னென்றார். இதுகொண்டு இப்பாடல் நம்பி காலத்தே வழங்கிற்றென்று கருதவேண்டும். இப் பாடலில் 'குன்ற மெறிந்தாய்' 'என்றும் இளையாய் அழகியாய்' என்ற தொடர்களை எடுத்துக் கூறியிருப்பது காணத் தக்கது. நம்பி தம் நூலில் எல்லாப் பாடல்களையும் குறிப்பிடவில்லையாயினும் அவர் குறிப்பிடாது விட்ட பிற பாடல்களும் அவர் காலத்தே வழங்கியிருத்தல் கூடும். ஆதலால் பிற்கால வரலாறுகள் தம்மீது புனையப்பெற்ற ஓராசிரியர் – நக்கீர தேவர் – இப் பாடல்களை முருகாற்றுப்படையின் பின்னே சேர்த்தாரென்று கருதலாம். ஆசிரியர் பெயரொற்றுமையையும், பாடப் பெற்ருேருக்குரிய ஒற்றுமையையும் கருதி இப் பாடல்கள் பிற்காலத்தோரால் திருமுருகாற்றுப்படையின்பின் கோக்கப் பெற்றன என்று கருதவேண்டும். பத்துப் பாடல்களில் பின் காணும் முதற் குறிப்புடைய எட்டுப் பாடல்கள் இவ்வாறு கருதத்தக்கன. குன்ற மெறிந்தாய், குன்றம் எறிந்ததுவும், வீரவேல் தாரைவேல், இன்னம் ஒருகால், உன்னை ஒழிய, அஞ்சு முகம் தோன்றில், முருகனே செந்தி, காக்கக்கடவிய நீ என்ற எட்டும்; பரங்குன்றில் பன்னிருகை, நக்கீரர் தாமுரைத்த என்ற இரு பாடல்களும் தொடர்ந்து நூல்களில் அச்சிடப் பெற்றிருப்பினும், இவை திருமுருகாற்றுப் படையைச் சிறப்பித்து இன்னும் பிற்காலத்தோரால் பாடப் பெற்றவையாகும்.[1]

1 சுப்பராயச் செட்டியார் பதிெைராந் திருமுறைப் பதிப்பில் முதல் இரு பாடல்களே காணப்படுகின்றன. அன்றியும் பத்துப்பாட்டு ஏடுகளில் முருகாற்றுப படையின் பின் இப்பாடல்களில் எதுவுமே காணப்படவில்லை.

நக்கீரதேவர் கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி பாடியதற்கு, சீகாளத்திப் புராணத்தில் சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய நக்கீரச் சருக்கத்தில் ஒரு குறிப்புத் தரப்பட்டுள்ளது. பாட்டில் குற்றம் காட்டிய காரணத்தால் சோம சுந்தரக் கடவுளிடம் அபசாரப்பட்ட நக்கீரர் தமக்கு அப்போது ஏற்பட்ட கொடுநோயை நீக்குமாறு வேண்ட, அவர் "நீ சென்று கயிலையைக் காணின் இக் கொடுநோய் நீங்கும்" என்றார். அப்படியே நக்கீரர் சங்கப் புலவர்களைப் பிரிந்து, வடநாடு நோக்கிச் சென்று பல தலங்களையும் தரிசித்து, இமயமலைச் சாரலில் ஒரு தடாகக் கரையில் தியானத்திலிருந்தபோது, மரத்திலிருந்து விழுந்த ஓர் இலை நீரில் பட்ட பாகம் மீனாகவும், தரையில் பட்ட பாகம் பறவை யாகவும் மாறி ஒன்றையொன்று இழுத்துத் தவித்தது கண்டு இவர் தியானம் கலைந்தது. ஒரு பூதம் இவரைக் கொண்டு போய் மற்றவர்களுடன் சேர்த்து அடைக்க, அவர்கள் வேண்டுகோளுக்கு ஏற்ப இவர் முருகவேளைத் திரு முருகாற்றுப்படை பாடித் துதித்தார். முருகவேள் தோன்றிப் பூதத்தை அழித்தலும், இவர், "கயிலையைத் தரிசிப்பித்து என் நோயை அகற்றி அருள்க" என்று வேண்டினர். முருகன் கருணை கூர்ந்து, "சிவபிரான் இன்ன கயிலை என்று சுட்டி உரையாமையால் நீ தென் கயிலையாகிய காளத்தியில் முழுகினாலும் இப்பிணி தீரும்" என்று சொல்லி, ஒரு பொய்கையைக் காட்ட, இவர் அதில் மூழ்கவும், தென் கயிலையில் பொன்முகரியில் எழுந்தார். இவருடைய நோயும் அகன்றது. அப்போது இவர் காளத்திநாதரைப் பணிந்து கயிலை வேறு காளத்தி வேறு என்னும் சிந்தனையின்றி, இரண்டையும் கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதியால் துதித்தார் என்பது இப் புராணத்தில் சொல்லப்பட்ட வரலாறு. இவ்வரலாறு முழுமையும் பிற்காலக் கதைகளைக் கொண்டெழுந்த புனைந்துரை என்பது சொல்லவேண்டுவ தில்லை.

## கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி [1]

*மண்டலித்து வரும் அந்தாதியாக நூறு பாடல் உள்ளது. சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருக்கயிலை மலையையும், தக்ஷிண கயிலாயம் என்னும் பெயருடையதாய், ஞானப் பூங்கோதையார் கூந்தலுக்கு இயற்கை மணம் இல்லை என்று நக்கீர தேவர் சொல்லி அபசாரப்பட்ட அம்மையப்பருக்குரிய தலமாய் உள்ள திருக்காளத்தியையும் மாறி மாறித் துதிக்கின்ற பாடல்கள். முதல் பாடல் கயிலையையும் இரண்டாம் பாடல் காளத்தியையும் குறிப்பது. இது காரணமாகவே இப்பிரபந்தம் இப்பெயர் பெற்றது. இந்நூலின் இத்தகைய அமைப்பைக் கண்டு, கயிலாயத்து எம் பெருமானது காளத்தித் திருக்கோலத்தைப் பொற்றாமரை வாவிக் கரையிலே நக்கீரர் கண்டு பாடினர் என்ற வரலாறு எழுந்திருக்கலாம். பாடல்கள் மிக்க சுவையும் இலக்கியச் சிறப்பும் பக்திப் பெருக்கும் உடையன. முதல் பாடலில் கயிலை மேலிருந்த இறைவனைத் தாம் தம்முடைய வெண்பா நூலாகிய விளக்கைக் கொண்டு காணுவதாகக் கூறுகின்றார் :*

**சொல்லும் பொருளுமே தூத்திரியும் நெய்யுமா,**
**நல்லிடிஞ்சில் என்னுடைய நாவாக, - சொல்லரிய**
**வெண்பா விளக்கா, வியன்கயிலை மேல்இருந்த**
**பெண்பாகர்க் கேற்றினேன் பெற்று.**

*இதனுள் முதல் இரு ஆழ்வார்கள் பாடிய இரு அந்தாதிகளின் தொடக்கப் பாடல்களின் சாயல் நன்கு புலப்படும். அப்படியே, 'நின்னில் வெளிப்படுவதேழுலகும் மீண்டே ஒருகால் ஒளிப்பதுவும்' (46) என்று இவர் கூறுவது, 'இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான் தோற்றி,*

---

**1 இப் பெயரைக் காளத்தியந்தாதி என்றே மதுரைச் சிவப்பிரகாசர் எங்கும் கூறுகிறார்.**

இறைவனே ஈண்டு இறக்கஞ் செய்வான்' என்ற அம்மையின் பாடலையும் (அந்தாதி 5), 'நின்னுளே பிறந்திறந்து நிற்பவும் திரிபவும், நின்னுளே அடங்குகின்ற நீர்மை நின் கண் நின்றதே' என்ற திருமழிசையார் பாடலையும் (சந்த விருத்தம் 10) தழுவியது. காரைக்கால் அம்மையார் பாடல் களையும் திருவாசகத்தையும் கொண்டு எழுந்த பாடல்கள் மிகப் பல.

**பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்**
**குழைத்தசொல் மாலை கொண்டருள் போற்றி**

(போற்றித்திரு அகவல், 219 – 20) என்ற திருவாசக அடிகளை பிழைப்பு வாய்ப்பொன் றறியேன்' (99) என்று இவர் எடுத்து அமைத்துள்ளார்.

பொதுவாக இவர் பாடல்களில் இயற்கை வருணனை மிகக் குறைவு. ' இன மரங்கள் ஏறிக் – கனிதேர் கடுவன்கள் தம்மில் – முனிவாய்ப் – பிணங்கி வரும் தண்சாரல் காளத்தி என்பது அபூர்வமான ஒரு வரி.

இந் நூலின்கண் அகத்துறைப் பாடல்கள் 25 உள்ளன. அஃறிணைப் பொருள்களை விளித்துத் தலைவி கூறுவதாகவும், தூது விடுவதாகவும் உள்ள பாடல்கள் பல. தூது அனுப்பு கின்ற பொருள்கள் மதி, முகில், வண்டு; விளித்துக் கூறுகின்ற பொருள்கள் குருகு, கடல், ஏறு, குயில் என்பன. ஏற்றைக் கூறும்போது "போர் ஏறே! நீ இத் தெருவே போதுக; காளத்திச் செல்வனைக் கண்டு எனது மெலிவை நான் காட்டவேண்டும்" என்பது கருத்து :

**செய்ய சடைமுடிஎன் செல்வனையான் கண்டெனது**
**கையறவும் உள்மெலிவும் யான்காட்டப் - பையவே**
**காரேறு பூஞ்சோலைக் காளத்தி ஆள்வார்தம்**
**போரேறே, இத்தெருவே போது.**

*இப்பாடல் இதற்கு முன் எழுந்த முத்தொள்ளாயிரத்தின் பாடலை நினைவூட்டுகிறது.*

**துடியடித் தோற்செவித் தூங்குகைந் நால்வாய்ப்**
**பிடியே, யான் நின்னை இரப்பல், - கடிகமழ்தார்ச்**
**சேலேக வண்ணனொடு சேரி புகுதலும்,எம்**
**சாலேகம் சார நட.**

*சில பாடல்கள் திருவாசகத்தில் தசாங்கத்தையும் குயிற் பத்தையும் நினைவூட்டுகின்றன. ஒரு பாடல் (90) கூடல் இழைத்தலைக் குறிப்பிடுகிறது.*

*சமயத்துறையில் இவர் கூறும் கருத்துக்கள் மிக்க சிறப்புடையவை. திருவைந்தெழுத்தை எங்கும் சிறப்பித்துச் சொல்லுகிறுர் (38 – 40, 100). காலன் கயிலைக் கோனுடைய பத்தருக்கு அருகணையான், தொழுது தூரத்தே போவான்; 'காளத்தி மன்னன் பக்தர்களைக் கண்டால் பணிந்து அகலச் சேய்த்தாகப் போமின்கள்' என்று 'நமன் தன் தூதுவர்க்குச் சொல்லும்' என்றும் உரைக்கிறுர். 'வினைகள் பொன்முகலி யாடினல் போம்' என்று தீர்த்தச் சிறப்பையும் அறிவுறுத்துகின்றுர்:*

**அறியாம லேனும் அறிந்தேனுஞ் செய்து**
**செறிகின்ற தீவினைகள் எல்லாம் - நெறிநின்று**
**நன்முகில்சேர் காளத்தி நாதன் அடிபணிந்து**
**பொன்முகலி ஆடுதலும் போம்.**

*"கயிலாயத்து அண்ணல் தன்னடியார் வாளை மண்ணுள் வைத்து, தான் வருந்திப்போய் நாளும் பிச்சை புகும் போலும்" (53) என்பார். சிவபெருமானுடைய திரு நடனத்தின் விசுவரூபத்தை ஒரு பாடல் (88) மிக்க அழகாகச் சித்தரிக்கின்றது.*

**தாளொன்றாற் பாதாளம் ஊடுருவத் தண்விசும்பில்**
**தாளொன்றால் அண்டங் கடந்துருவித் - தோளொன்றால்**
**திக்கனைத்தும் போர்க்கும் திறற்காளி காளத்தி**
**நக்கனைத்தான் கண்ட நடம்.**

*இறைவனது நிலையை மிகவும் நன்றாகவும் சைவ சித்தாந்தக் கருத்துக்களுக்குச் சிறப்பாகப் பொருந்துமாறும் இவர் உரைத்திருப்பது எண்ணி மகிழத் தக்கது. சிவபெருமான் ஒருவனே படைத்தும், காத்தும், ஒன்றாய் ஒடுக்கியும் மீண்டும் பலவாகியும் நிற்கின்றான் (67). யான் வேறு தான் வேறு என்பதில்லை என்று உணர்ந்திருக்கலாம்; ஆனால் சிவபெருமானது மாயத்தால் சில சமயம் இதை உணர முடியாமல் போகிறது (55). சிவபெருமானே எல்லோருக்கும் அப்பாற்பட்ட பரம்பொருள்; ஆயினும், அவரே நீர் ஆதரித்த தெய்வமாக உள்ளார் என்று இவர் கூறுவதைப் பிற்கால நூல்கள் விரிவாகப் பேசுகின்றன. அடுத்த நூற்றாண்டில் கருவூர்த் தேவர் கங்கை கொண்ட சோழேச்சுரப் பதிகத்தில் இக் கருத்தையே சொல்லுகிறார்:*

**சுருதிவானவனும் திருநெடு மாலாம்**
**சுந்தர விசும்பின் இந்திரனும்**
**பருதிவானவனும் படர்சடை முக்கட்**
**பகவனும் அகவுயிர்க் கமுதாம்**
**எருதுவாகனனும் எயில்கள்மூன் றெரித்த**
**ஏறு சேவகனுமாம் பின்னும்**
**கருதுவார் கருதும் உருவமாம் கங்கை**
**கொண்ட சோழேச் சுரத்தானே.**

*சிவஞான சித்தியாரில் அருணந்தி சிவாசாரியர் :*

**யாதொரு தெய்வங் கொண்டீர். அத்தெய்வமாகி ஆங்கே**
**மாதொரு பாகனார் தாம் வருவர்**

*என்று சொல்வதும் இதுவே.*

*இனி, சிவபெருமான் எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கின்ற ஒரு நிலையை இவர் பின் வருமாறு அழகாகப் பாடுகின்றுர் :*

**உரையும் பொருளும் உடலும் உயிரும்**
**விரையும் மலரும்போல் விம்மிப் - புரைஇன்றிச்**
**சென்றவா ருேங்கும் திருக்கயிலை எம்பெருமான்**
**நின்றவா றெங்கும் நிறைந்து. 47**

*இவ்விரண்டிடங்களிலும், அந்தாதிக் கருத்தும் சொற்களும் பயிலுவதைக் காணலாம். இவற்றை இன்னும் பிற்காலத்தில் எழுந்த திருத்தணிகைப் புராணச் சுருக்க ஆசிரியர் நடராசப்பெருமானும் அம்பிகையும் கலந்து நிற்கும் நிலையை விளங்கக் குறிப்பிட்டு ஒரு துதிப்பாடல் கூறியிருக்கிறுர் :*

**சொற்பொருளும் உடலுயிரும் சுடர்ஒளியும்**
**விரைமலரும் சுவையும் பாலும்**
**நிற்கும்நிறைவு எனக்கலந்து சிவத்தில்அனன்**
**னியமாகி நிலவும் அண்டம்**
**பற்பலவும் படைத்தளிக்கும் தாயாகி**
**வினைசமமாம் பருவந் தோன்றும்**
**சிற்பரையைத் தில்லைநகர்ச் சிவகாம**
**சவுந்தரியைச் சிந்தை சேர்ப்பாம்.**

*இங்ஙனமாக இச்சிறுநூல் பொருட் சுவையும், பக்திச் சுவையும் சமய தத்துவ நுணுக்கங்களும் பொருந்திய ஒரு சிறந்த பிரபந்தமாக உள்ளது. பின்வரும் கதைகளில் சொல்லப்படும் பெருந்தேவபாணி முதலான நூல்களின் தன்மை எவ்வாறு இருந்த போதிலும், இந்நூலானது ஆசிரியரின் பெரும் புலமைக்கும், பக்திப் பெருக்குக்கும் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது.*

**திரு எழுகூற்றிருக்கை**

எழு கூற்றிருக்கை என்பது ஏழு கூறுகள் முறையாக அமையும்படி செய்யப் பெறும் சித்திரக் கவி வகை என்று பொருள்படும். மிக முயன்று செய்கின்ற கவியாதலால், மிறைக்கவி என்னவும் படும். இது ஆசிரியப்பாவில், ஒன்று என்னும் எண்ணுப் பெயரில் தொடங்கி, ஒவ்வொன்றுய்ப் படிப்படியாக ஏறியும் இறங்கி ஒன்று வரையில் குறைந்தும், இவ்வாறு ஒன்று முதல் ஏழு வரையில் எண்ணுப் பெயர்கள் அமையுமாறு பாடப்படும் செய்யுள் வகை. இதன் இலக்கணம் யாப்பருங்கல விருத்தியுரைகாரரும், மாற னலங்காரமுடையாரும் கூறுகிறுர்கள்.

'எழு கூற்றிருக்கையாவது, ஏழறையாக்கி முறையானே குறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியான் வழுவாமை ஒன்று முதலாக ஏழிறுதியாக முறையானே பாடுவது' என்பர் யாப்பருங்கல விருத்தி யுரையாசிரியர். 'செய்யுளகத்து எண்ணப்பட்ட ஒன் றென்னுமெண் ஒன்று முதலாக ஓரேழிருக நிகழ்ந்த எண்களைப் பதினறு நிலந்தொறும் மீளவெண்ணுவ தொன்றுகும் எழுகூற்றிருக்கை யென்றவாறு......அங்ஙனம் எண்ணப்படும் எண்கள் தாம் இரதத்திற் பெந்திக்கு மிடத்து மையத்திற் பத்தியிரண்டு பத்தியாய்க் கீறி வலமே யிடமே கடத்தலைத் தரும் பகுதியில் மையத்திலொன்று பன்னன் காகவும் அதனயலிருபத்தியிலிரண்டும் பன்னிரண்டாகவும் ஒழிந்த மூன்று முதலியவெண்ணும் பத்தி தோறு மிரண்டு குறைந்து ஏழென்னுந் தொகை பொருந்தி முதலே நின்ற ஒன்றில் வந்து முடியுமென்றவாறு'' என்று மாறனலங்கார உரையாசிரியர் எழுதுகிறுர். இவ்வாறு செய்யுளில் வரும் எண்கள் இரட்டுற மொழிதலாகவும், ஈறு திரிந்தும் வரும் என்று இவ்விலக்கணம் கூறும். இவ்வியல்பே எழு

கூற்றிருக்கைப் பாடல்களில் காணப்படுகிறது. எழு கூற்றிருக்கை இரத பந்த அமைப்புக்கு உரியது என்றும் தெரிகிறது. மாறனலங்காரப் பதிப்பு இரதபந்தச் சித்திர மெழுதிக் காட்டுகிறது.

முதல் எழு கூற்றிருக்கை இலக்கியம், திருஞானசம்பந்தர் பாடியது. இது முதல் சைவத் திருமுறையில் சீகாழி பற்றிச் சம்பந்தர் பாடிய பாடல் ஆகும். அடுத்துத் தோன்றியது திருமங்கை யாழ்வார் பாடிய திருமால் பரமான பாடல். இவற்றின் பின்னர் வந்தது, பதினெராம் திருமுறையில் காணப்படுகின்ற நக்கீரதேவர் பாடிய திருவெழுகூற்றிருக்கை. இதை யடுத்த காலத்தில் தோன்றியது அருக தேவனைப் பரவுகின்ற திரு எழுகூற்றிருக்கை; இது யாப்பருங்கல விருத்தியில் உதாரணப் பாடலாகக் காட்டப்பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் சொல்லப்படவில்லை; உரைகாரரே செய்திருக்கக் கூடும். பின்னர் 15ஆம் நூற்றுண்டில் அருணகிரிநாதர் முருகன் துதியாக ஓர் எழுகூற்றிருக்கை பாடினுர். 16ஆம் நூற்றுண்டில் மாறனலங்கார உரை யாசிரியர் தாமே ஓர் எழுகூற்றிருக்கை பாடி உதாரணங் காட்டியிருக்கிறுர். இவ் ஆறுமே இன்று நாம் அறிந்த இவ்வகைப் பிரபந்தங்கள். ஆசிரியருடைய மன விரிவுக்குத் தக்கபடி இப்பாடல்கள் விரிந்தும், சுருங்கியும் செல்லும். விரிந்து செல்வது எளிது; சுருக்கிச் சொல்வதே அரிது. ஒவ்வொரு பாடலிலும் உள்ள அடிகளின் எண்ணைக் கீழே தருகிறேம்: சம்பந்தர் 47; திருமங்கை யாழ்வார் 46; நக்கீரதேவர் 55; அருகப் பெருமானது 36; அருணகிரி நாதர் 27; மாறனலங்கார உரை 51. அருணகிரிநாதர் பெயரால் வழங்கும் பாடலே மிகவும் சுருங்கியது.

ஏழு எண்களும் ஏறியும் இறங்கியும் பாடலுள் அமைக்கப் பெறும் முறையை ஒரு படமாகப் பின்வருமாறு அமைத்துக் காட்டலாம் :

1
1 2 1
1 2 3 2 1
1 2 3 4 3 2 1
1 2 3 4 5 4 3 2 1
1 2 3 4 5 6 5 4 3 2 1
1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1
1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1

இவற்றுள் மாறனலங்கார உரை மட்டுமே முதலில் மையத்தில் ஒன்று வருமாறு செய்யுள் அமைத்துக் காட்டுகின்றது. அவ்வெண்ணை ஏனையவை காட்டவில்லை. எண் வரவேண்டுவது அவசியமில்லை, இரட்டுற மொழிதலும் அவசியமில்லை, எண்ணின் பெயர் தொனித்தால் போதும் என்று பாடல்களின் அமைப்பிலிருந்து நாம் அறிகிறோம்.

அருணகிரிநாதர் பாடியதென வழங்கும் திருவெழுகூற்றிருக்கையில் இறுதியில் இரண்டாம் முறை ஏழுவரை ஏறியும் இறங்கியும் வருகின்ற அமைப்பு இல்லை. மேலும் அருகபரமன் எழுகூற்றிருக்கையில், ஒன்றிலிருந்து மேலே ஏறி இறங்கி ஒன்றுக்கு வரும்போது, அங்கு ஒன்று ஒருமுறை வருகிறதேயன்றி, அடுத்த ஏற்றத்துக்குரிய ஒன்று தனியாக இல்லை. இதைத் தனியாகப் பின் வருமாறு காட்டலாம்:

1 2 1
2 3 2
1 2 3 4 3 2 1
2 3 4 5 4 3 2
1 2 3 4 5 6 5 4 3 2 1
2 3 4 5 6 7 6 5 4 3 2
1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1

நக்கீரதேவர் பாடிய திருஎழு கூற்றிருக்கை முழுமையும் சம்பந்தர் பாடிய பாடலைப் பின்பற்றிப் பாடப்பெற்றது. இப் பாடலை யாப்பருங்கல விருத்தி உரைகாரர் மேற்கோளாக எடுத்துத் தருகிறுர். ஆனுல் திருமுறைப் பாடலுக்கும் விருத்தியுரை மேற்கோட்பாடலுக்கும் எண் அமைப்புக்கள் ஒன்ருய் இருந்த போதிலும் கூட, பாட பேதங்கள் நிரம்பக் காணப்படுகின்றன.[1] நக்கீரதேவருடைய பாடலைப் பார்த்து யாப்பருங்கல விருத்தியுரைகாரர் அருகபரமாகத் தாமே ஒரு புதிய பாடல் செய்து அதே இடத்தில் மேற்கோள் காட்டியிருக்கவும் காண்கிருேம்.

எழு கூற்றிருக்கையின் நோக்கம், எண்ணுப்பெயர்கள் தொனிக்குமாறு பாடல் பாடுவது. இப் பாடலும் அவ்வாறு பாடப் பெற்றது. பாடலுள் எண் ஏறி இறங்கிவரும் தன்மைக்கு எடுத்துக்காட்டாக ஐந்துக்குரிய பின்வரும் பகுதியைத் தருகிருேம்:

**அங்நெறி**
**ஒன்று மனம்வைத்து இரண்டும்இல்லோர்க்கு**
**முங்நெறி உலகம் காட்டினே ; அங்நெறி**
**நான்கென ஊழி தோற்றினே ; வான்செலும்**
**ஐந்தலை அரவரைக் கசைத்தனே; நான்முகன்**
**மேன்முகக் கபாலம் ஏந்தினே; நூன்முக**
**முப்புரி மார்பினே; மூவா மேனியை;**
**இருவரை குடையா ஏந்திய ஆற்றல்**
**ஒருபெரும் கடவுள் ஒருவன் ஆயினே;**

இங்கு எண்ணுப் பெயர்கள் 1 2 3 4 5 4 3 2 1 என வருவது காண்க. மூலத்தில் இருங்களிறு, இருவரை என்ற விடங்களில், வலிமைபொருந்திய யானை, திண்மை பொருந்திய மலை

1 இப்பாட பேதங்களை ஆராய்ந்து திருத்தமான பாடலின் வடிவத்தை யாம் வேறிடத்தில் வெளியிட்டிருக்கிருேம் (சித்தாந்தம் ஜுலை 1970).

என்பதே பொருள். ஆயினும் இங்கு இரு என்ற இரண்டாம் எண் தொனிக்கிறது.

இதன் இறுதிப் பகுதியில் நக்கீர தேவர் இறைவனுடைய திருநடனத்தைக் குறிப்பிட்டு, "என்னுடைய அறிவில்லாத வாய்மொழியையும் பொருள் உடையதாக நீ கொள்வாயாக" என்று வேண்டுகிருர் :

**மட்டுவிரி அலங்கல் மலைமகள் காண**
**நட்டம் ஆடிய நம்ப, அதனுல்**
**சிறியேன் சொன்ன அறிவில் வாசகம்**
**வறிதெனக் கொள்ளா யாகல் வேண்டும்,**
**வெறிகமழ் கொன்றையொடு வெண்ணில வணிந்து**
**கீதம் பாடிய அண்ணல்**
**பாதம் சென்னியில் பரவுவன் பணிந்தே.**

'நீ கீதம் பாடிய அண்ணலாதலால், நான் பாடியதைப் பொருளற்றதென்று கருதாது பொருளுடையதாகவே கொள்வாயாக' என்கிருர்.

**பெருந்தேவ பாணி**

நக்கீர தேவர் நூல் வரிசையில் ஐந்தாவது, பெருந்தேவபாணி. பாணி என்பது இசையோடு கூடிய பாட்டு. அது தெய்வத்தை முன்னிலைப்படுத்திப் பாடுகின்ற பாடல். முத்தமிழுக்கும் பொதுவானது. இயற்றமிழில் வருங்கால் கொச்சக ஒரு போகாய் வரும். அது இரு வகைத்து, பெருந்தேவபாணி சிறுதேவபாணி என. இவற்றின் இலக்கணமெல்லாம் சிகண்டியார் இசை நுணுக்கத்திலும், அறிவனுர் பஞ்சமரபிலும், மதிவாணனுர் நாடகத் தமிழ் நூலிலும் சொல்லியிருக்கின்றனர். இச் செய்திகள் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் கண்டவை (6 . 35 – 36).

நக்கீரர் பாடிய பெருந்தேவ பாணியானது ஆசிரியப் பாவில் அமைந்தது. அக் காலத்துக்குச் சிறிது முன்னல் கலிப்பாவில் பாடவேண்டும் என்று இலக்கணம் ஏற்பட்டிருக்க இவர் இவ்வாறு பாடியிருக்கிருர். இது அவ் விலக்கணத்திற்குப் பொருந்தாது. அன்றி இதற்குப் பண் முதலியன இருக்க இயலாது என்பது தெளிவு. எப்படியோ தேவபாணி என்ற பெயர் கொடுக்கப்பட்டதே யன்றி வேறு பொருத்தம் இல்லை. நூலகத்து, கூடல் ஆலவாய்க்குழகன் என்ற பெயர் வருகிறது. கூடல் ஆலவாய் அகவல் என்றே இதன் பெயர் அமைந்திருக்கலாம். இதன்கண் நக்கீர தேவர் முதல் 38 அடிகளில் சிவபெருமானது தன்மையையும் அவர் திருவுருவத்தையும் சொல்லித் துதித்தபின், 49 அடி வரையில் அவரது பராக்கிரமச் செயல்களைச் சொல்லித் துதிக்கின்ருர். கடல் நஞ்சம் உண்ட செயலை முதலில் ஒருமுறையும் பின்னர் இரண்டாம் முறையும் சொல்லிப் போற்றுகிருர். அப்படியே ஆதிமூர்த்தியை என்ற தொடர் 15ஆம் அடியில் ஒரு முறையும் 28ஆம் அடியில் மற்ருெரு முறையும் வருகிறது. பொதுவாக இவ்வாறு சொல்வது செய்யுள் அமைப்புக்கு இழுக்கு என்று கருதப்படும். அடுத்து இவ்வாறெல்லாம் செய்த நீயே அனைத்தும் என்று 63ஆம் அடிவரையில் சொல்லுகின்ருர். இதன் பின்னரும் நான்கு வரிகள் கருதத் தக்கன.

**கூடல் ஆலவாய்க் குழகன் ஆவது**
**அறியா தருந்தமிழ் பழிச்சினன்[1] அடியேன்,**

---

**1** பழித்தனன் என்று நூலில் வழக்கமாய் அச்சிட்டு வரும் சொல்லைப் பிழை என்று கூறி, இச்சொல் பழிச்சினன் என்று இருத்தற்குரியது என்றும், உன்னுடைய எல்லையற்ற பெரு நிலையை அறியாது உன்னைத் தமிழ்ச் சொல்லாலே துதிக்கத் துணிந்தேன் என்றும் வெள்ளைவாரணனுர் தெளிவு படுத்திப் பொருள் எழுதுகிருர் பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பகுதி 1967, பக்கம் 129-130. பாடல் உள்ளபடியே பொருள்கொள்வது சிறக்கவில்லை.

**ஈண்டிய சிறப்பில் இணையடிக்கீழ் நின்று**
**வேண்டு மதுவினி வேண்டுவன் விரைந்தே.**

*"நீ கூடல் ஆலவாயில் எழுந்தருளியுள்ள பரம்பொருளே என்ற நினைவில்லாது யான் உன்னை அரிய தமிழ்ப் பாடலால் பாட முற்பட்டேன். அப்பிழையைப் பொறுத் தருள்க. பொறுத்து இப்போது உன்னால் ஆட்கொண்டு அணுக்கன் ஆக்கிய சிறப்பைப் பெற்றவனாய் உன் திருவடிக் கீழே நின்று உன்னைத் துதித்துக்கொண்டே இருக்கின்ற நிலையை யான் விரைந்தே பெற வேண்டுகின்றேன்"* என்பது இதன் பொருளாகும்.

*இதன் பின்னர் இப்பாடலின் அந்தமாகிய 'விரைந்தே' என்ற சொல்லை ஆதியாக வைத்து அடுத்து ஒரு வெண்பா பாடப்பட்டுள்ளது :*

**விரைந்தேன்மற் றெம்பெருமான் வேண்டியது வேண்டாது**
**இகழ்ந்தேன் பிழைத்தேன் அடியேன் - விரைந்தென்மேல்**
**சீற்றத்தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே**
**ஆற்றவுநீ செய்யும் அருள்.**

*இறுதியில் உள்ள வெண்பா பிற்காலத்தில் சேர்க்கப் பட்டது என்று தோன்றுகிறது. முன்னே எழு கூற்றிருக் கையின் பின் உள்ள பாடலும் இவ்வாறனதே என்று குறிப்பிட்டோம். இதுவும் அதே தன்மையுடையது. சீற்றத்தைத் தீர்த்தருளும்படி இப்பாடலில் வேண்டுவ தெல்லாம், பிற்காலத்துக் கதையைக் கொண்டு புதுவது புனைந்து தொகுக்கப்பட்டதாகும். இப் பிரபந்தத்தின் இறுதியில் பின்வரும் வெண்பா காணப்படுகிறது :*

**பணிந்தேன்நின் பாதம் பரமேட்டி பால் நீ(று)**
**அணிந்தால வாயில் அமர்ந்தாய் - தணிந்தென்மேல்**
**மெய்யெரிவு தீரப் பணித்தருளு வேதியனே**
**ஐயறவொன் றின்றி அமர்ந்து.**

"மெய்யெரிவு தீரப் பணித்தருளு" என்பதைச் சிவபெருமான் நெற்றிக் கண்ணல் எரித்தபோது வந்த வெப்பத்தைப் போக்கி அருள் செய்யுமாறு இவர் வேண்டினர். என்று பொருள் சொல்வார்கள். இப்பாடல் இடைச் செருகலாகப் பின்னல் சேர்த்த காலத்து நக்கீரர் கதையைப் பொருத்திப் பாடப்பட்டது எனத் தெரிகிறது. இதன் கருத்துக்கும் எழுகூற்றிருக்கைப் பாடலுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

'மெய்யெரிவு' என்பதற்கு நக்கீர தேவர் உடலில் ஒரு பிணி இருந்தது என்று கூறி, இப்பிரபந்தம் பாடி அவர் நோய் நீங்கி இன்புற்ருர் என்றும் சொல்லப்படுகிறது. இப்பாடலே நக்கீரர் பாடவில்லை என்று நாம் கருதுவதால், இதன் பொருத்தத்தை ஆராயவில்லை.

எழுகூற்றிருக்கைப் பாடல், சித்திரக் கவியாதற்கென்றே பாடப் பெற்றது. அதன் இலக்கணம் கொண்டு அது விளங்குகிறது. ஆங்காங்கு அதன் ஆசிரியர் தாம் பயின்ற அளவு பாடலைச் சுவையூட்ட முயன்றிருக்கிருர். தமது வேண்டுகோளை முற்காட்டிய சில வரிகளில் சொல்லிக் கொள்ளுகிருர். இத்தனைக்கும் மேலாக, மீண்டும் 'பணிந்தேன் நின்பாதம்' என்று கூறுவது பொருந்தாமல் உள்ளது, அன்றியும் இவ் வெண்பாவின் இறுதிவரி, ஐயுறவொன்றின்றி அமர்ந்து என்பது, பொருளின்றிச் சுவையற்றுச் 'சப்' பென்று உள்ளது. இதை நக்கீர தேவர் பாடவில்லை என்பது மிகவும் தெளிவு.

**கோபப் பிரசாதம்**

இறைவனது கோபமும் பிரசாதமுமாகிய தன்மைகளை மாறி மாறிச் சொல்லுகின்ற சிறு பாடலாதலால் இப்பெயர் பெற்றது. குற்றம் கூறிய தம்மீது முதலில் கோபித்துப் பின்

தமது பாடல் (கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி) கேட்டு உவந்து பிரசாதம் (கருணை) செய்ததால் இப்பெயர் பெற்றது என்று வரலாறு கூறும். சங்க இலக்கியத்தில் 'அளியும் தெறலும் உடையோய்' என்று ஒரு புலவர் பாடுகிறார். நெறியின் நீங்கியோரிடத்துத் தெறலும், நெறியின் நின்று அன்பு செய்வோருக்கு அளியும் செய்தல் அரச இயல்பு மட்டுமல்ல, தெய்வ இயல்புமாகும். துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனம் என்று சொல்வதும் இதுவே.

இப்பாடல் ஆசிரியப்பாவில் 100 அடிகளைக்கொண்டது. 'இன்னவை பிறவும் எங்கள் ஈசன் கோபப் பிரசாதம்' என்று பாடலே கூறுகிறது (அடி 41 – 42). திருமாலுக்கு ஆழியருளியது தொடங்கி, கருடனைக் காய்ந்தது வரையில் பிரசாதம் கோபம் ஒவ்வொன்றிலும் பதின்மூன்று தன்மைகள் மாறிமாறிச் சொல்லப்பட்டுள்ளன. இவற்றுள் சிறப்பானவை மானுடனாகிய சண்டியை வானவனாக்கியது, கற் கொண்டெறிந்த சாக்கியன் அன்பு தற்கொண்டு இன்னருள் அளித்தது, நந்தீசுவரர்க்கு நெற்றிக்கண்ணும் நீள்புயம் நான்கும் அருளியது, பிருங்கிருடிக்கும் நந்தி மாகாளருக்கும் அருளியது, கருடனைக் காய்ந்தது என்பன; பிருங்கிருடியை எழுகூற்றிருக்கையிலும் கூறுகின்றார். சாக்கியர் வரலாறு, இவர் கூறும் புதுச்செய்தி; திருத்தொண்டத் தொகையே ஆதாரம். 'திருவுருவத்தொடு செங்கண் ஏறும் – அரியன திண் திறல் அசுரனுக்கருளி' என்பதிலுள்ள வரலாறு விளங்க வில்லை. இவ்வாறான அருட் செயல்களும் மறச் செயல்களும் உடைய சிவபெருமானை வணங்காது வீணே காலத்தைக் கழித்தும் சிறு தெய்வங்களே கடவுள் என்று எண்ணியும் வரும் அறிவில்லாத மூர்க்க மாக்களின் உயிரைக் கவர்ந்து செல்லாத கூற்றுவன் பெருந் தவறுடையவன் என்று ஆசிரியர் கூறுகின்றார். 'தவறு பெரிதுடைத்தே, தவறு பெரிதுடைத்தே' என்று நூலின் தொடக்க வரியும் இறுதி

வரியும் அமைந்துள்ளன. 'பத்தின் வகையும் ஆகிய பரமன்' என்று ஒன்று முதல் பத்து வரை எண்களை நிரல்பட அமைத்துக் கூறுகிருர். இவ்வியல்பே இவரை எண்ணமையப் பாடும் எழுகூற்றிருக்கை பாடவைத்தது போலும். இவ்வொரு பாடலில் அமைந்துள்ள பழமொழிகள் எந்த நூலிலுமே காணுதல் அரிது. 'கடல் மா நீரை அங்கை கொண்டு இறைக்கும் ஆதர்' போன்றவர், இறைவன் பெருமையை நாவால் கிளக்க முயல்பவர். ஆடு போலக் கூடி நின்று அழைப்போர் 'உன் தலை, மீன் தலையை ஒத்தது அதன் எடை எட்டுப்பலம் என்ருல் அதனை அறுத்து நிறுப்போர் இலர்.' 'முயல்விட்டுக் காக்கையின் போம் கலவர்; விளக்கங்கு இருப்ப மின்மினி கவரும் ஆதர்' என்ற இரண்டும் அப்பர் தேவாரத்திலும் பயிலும் பழமொழிகள். சிறு தெய்வங்களைக் கொச்சைத் தேவர் என்பார் (கொச்சை – இழிவு). வடநூல் பயின்று, சிறப்பாகத் தருக்கம் பயின்று, வாதமே பேசிச் சிவபெருமானை வழிபட அறியாத மக்களை நோக்கி, 'ஆரியப் புத்தகப் பேய் கொண்டு புலம்புற்று வட்டணை பேசுவர்' என்பார். இவர் காலத்தில் அத்வைதம் எங்கும் பரவத் தொடங்கிற்று என்றும், அதைக் கண்டித்து வழிபாட்டு நெறியைப் போற்றி இவர் இவ்வாறு குறிப்பிட்டார் என்றும் கருதலாம்.

**கள்ளம் கைவிட்டு உள்ளமது உருகிக்**
**கலந்து கசிந்துதன் கழலிணை அவையே**
**நினைந்திட ஆங்கே தோன்றும் நிமலன்**

என்று இவர் கூறுவது, அப்பர் தேவாரத்தைத் தழுவியது:

**உள்ளம் உள்கசிந்து உள்க வலாற்கலால்**
**கள்ளம் உள்ள வழிக்கசி வான்அலன்.**

இதனுலும் அப்பர் பழமொழிகளை எடுத்தாள்வதாலும், இவர் அப்பர் தேவாரத்துள் ஈடுபாடு மிக்கவர் என்று கருதலாம்.

இறைவனுடைய தன்மைகளை நயமான சொற்களால் வருணித்துக்கொண்டு போகிறார். 'மூர்க்க மாக்கள்' என்று இவர் குறிப்பிடுவதும், அவர்களைக் கூற்றம் கொண்டு செல்லவில்லையே என்று வருந்துவதும், சமயநெறியில் இவருக்குள்ள உறைப்பைக் காட்டும்.

**போற்றிக் கலிவெண்பா**

சிவபெருமானுடைய வீரச் செயல்களையும் அருட்செயல்களையும் முறையாகக் கூறி, போற்றி என்ற சொல்லை இறுதியாக வைத்துத் துதிக்கின்ற பாடல்கள் போற்றி என்ற பெயரிலேயே வழங்குகின்றன. அப்பர் சுவாமிகள் பாடிய ஒரு திருத்தாண்டகம் போற்றித் திருத்தாண்டகம் என்பது. மாணிக்கவாசகர் பாடிய நான்காம் அகவல் போற்றித் திரு அகவல். தமது குரு தமக்குச் செய்த பல உபகாரங்களையும் தொகுத்துப் போற்றி என்ற முடிபோடு உமாபதியார் கலிவெண்பாவில் செய்த பிற்கால நூல் போற்றிப் பஃறொடை என்று பெயர் பெற்றுள்ளது. இதே முறையில் நக்கீர தேவர் சிவபெருமானுடைய வீரம், அருள் இரண்டையும் எடுத்துப் போற்றுகின்ற நூல் போற்றிக் கலிவெண்பா என்று பெயர்பெறுகின்றது. இது பதினோராந் திருமுறையில் நக்கீரர் பெயரில் உள்ள எட்டாவது பிரபந்தம். இதன் கண்ணிகள் 45. திருமால் அடிகாணாமை, பிரமன் (கழுகுரு) முடிகாணாமை, கடவூரில் காலன் வலி தொலைய உதைத்தமை, காமன் அழகழித்தமை, முயலகன் மொய்ம்பை மிதித்தமை, ஆலமுண்டமை, மாகாளி கோபம் தவிர நடம் எடுத்தமை, இராவணன் தோளிருபதும் விரலால் நெரியவைத்தமை, அயன் சிரத்தை வெட்டியமை, தாதை தாள் எறிந்த சண்டிக்குப் பொற்கோயில் பூமாலை போனகம் நற்கோலம் ஈந்தமை, சலந்தரனை ஈர்ந்த சக்கரத்தை அரி தாமரைக் கண் சாத்தவே ஈந்தமை, நாமகளை மூக்கரிந்தமை, மானைக் கையில் ஏந்தியமை, சந்திரனைத்

*தேய்த்துப்பின் சடையிற் சேர்த்தமை இமையோருக்கு வரம் அளித்தமை, புரமெரித்த அன்று உய்ந்த மூவருக்கு வரமளித்துக் காவல் கொடுத்தமை, மயிலூரும் கோனை சேனுபதியாகச் செம்பொன் முடிகவித்து வாளுளவைத்தமை, அந்தகனைச் சூலத்தால் கோத்தமை, களிற்றை உரித்துப் போர்த்தமை, நால்வர்க்கு ஆல் நிழற் கீழ் அருளியமை, விசயனுக்குப் பாசுபதம் ஈந்தமை, கண்ணப்பர் தம் கைமிகக் காதலித்து விண்ணரசளித்தமை ஆகிய வீரச் செயல்களும் அருட் செயல்களும் முறையாகச் சொல்லிப் போற்றுகின்ருர். புரமெரித்த ஞான்று உய்ந்த மூவர்பற்றிய தொடர்களை இவர் அப்படியே சுந்தரர் தேவாரத்திலிருந்து எடுத்திருக்கிருர். அதுபோல, சண்டிக்குப் பொற் கோயில் போனகம் முதலிய வற்றை இவர் பாடலிலிருந்து சேந்தனர் பல்லாண்டில் எடுத்தமைத்திருக்கிருர்.*

*இதன் இறுதி வரிகளில் கண்ணப்பருக்கு அருள் செய்த திறத்தைத் துதித்து இவ்வாறு காளத்தியைப் போற்று பவர்கள் சிவபெருமான் திருவடி நிழலைச் சேர்வர் என்று முடிக்கின்ருர்.*

— நேசத்தால்

**வாயில்நீர் கொண்டு மகுடத் துமிழ்ந்திறைச்சி**
**ஆயசீர்ப் போனகமா அங்கமைத்துத் - தூயசீர்க்**
**கண்ணிடந்த கண்ணப்பர் தம்கைமிகக் காதலித்து**
**விண்ணுலகம் ஈந்த விறல்போற்றி - மண்ணின்மேல்**
**காளத்தி போற்றி கயிலைமலை போற்றிஎன**
**நீளத்தி ஞல்நினைத்து நிற்பார்கள் - தாளத்தோடு**
**எத்திசையும் பன்முரசம் ஆர்த்திமையோர் போற்றிசைப்ப**
**அத்தனடி சேர்வார்கள் ஆங்கு.**

*இப் போற்றிக் கலிவெண்பா முற்கூறிய புராணங்களில் சொல்லப்பெறவில்லை. எனினும், 'காளத்தி போற்றி,*

கயிலை மலை போற்றி' என்று இவர் சேர்த்தே துதிப்பதனால், கயிலை பாதி, காளத்தி பாதி யந்தாதி பாடிய நக்கீர தேவரே இதையும் பாடினார் என்று ஆன்றோர் கருதிவந்திருக்கிறார்கள். இக் கருத்து ஏற்புடையதே. நூல் ஓரளவு சுவையுடையது. நக்கீர தேவர் வழிபடும் தெய்வம் ஞானப் பூங்கோதை சமேத காளத்தியப்பர் என்பது வரலாறு. ஆதலினால் இப் பிரபந்தமும் அவர் பாடியது என்று கருதுவதில் தவறு இல்லை.

இதுபற்றி ஒரு கருத்தைமட்டும் குறிப்பிடலாம். இங்கு சிவபெருமான் செய்த அருட்செயல்களில் சண்டேசருக்கு அருள்செய்ததையும் கண்ணப்பருக்கு அருள்செய்ததையும் மட்டுமே இவர் கூறுகிறார். திருவாசகம் கூறுவது இவ்விரு வரலாறுகளை மட்டுமே. எனவே இவருக்குத் திருவாசகத்தில் மிக்க ஈடுபாடு இருந்தது என்று சொல்லலாம். அது வல்லாமலும், ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாணிக்க வாசகரோடு ஒருகால் இவ்வாசிரியர் இளமையில் தொடர்புடையராய் இருந்திருக்கலாம் என்ற ஐயமும் எழுகின்றது.

நக்கீரதேவ நாயனார் வரலாறு பற்றியும், அவர் செய்த நூல்கள் பற்றியும் இதுவரை விளக்கம் கொடுத்தோம். இவருடைய நூல்கள் ஐந்து எனக் கூறினோம். இந்த ஐந்தில் திரு எழுகூற்றிருக்கை, கோபப் பிரசாதம், பெருந் தேவபாணி ஆகிய மூன்றும் ஓர் இயல்பினவாகவும், மற்ற இரண்டும் வேறோர் இயல்பினவாகவும் இருக்கக் காணலாம். முந்திய மூன்றும் ஆசிரியப்பாக்கள் பிந்திய இரண்டும் வெண்பாவும், கலிவெண்பாவும். அன்றியும் முதல் மூன்றும் ஆலவாய் இறைவனைத் துதிப்பன; மற்ற இரண்டும் காளத்தியப்பரைத் துதிப்பன; எனினும், இவை ஐந்துமே நக்கீர தேவர் வரலாற்றோடு தொடர்புபடுத்தப் பட்டுள்ளன.

# நக்கீரதேவ நாயனுர் - II

இதுவரை நக்கீரதேவ நாயனுருடைய வரலாற்றுத் தொடர்புகொண்ட ஐந்து பிரபந்தங்களை ஆராய்ந்தோம். ஆராயாத பிரபந்தங்கள் பின்னும் நான்கு உள்ளன. அவை பின்வருவன :

திரு ஈங்கோய்மலை எழுபது,
திரு வலஞ்சுழி மும்மணிக் கோவை,
கார் எட்டு
திருக் கண்ணப்ப தேவர் திருமறம்.

இப்பாடல்களை முற்குறிப்பிட்ட வரலாறு உடைய நக்கீரதேவ நாயனுர் பாடினுர் என்பதற்கு முதன் முதலில் இப்பிர பந்தங்களைத் தேடித் தொகுத்து அச்சிட்டவருடைய முயற் சியால் விளைந்த பதிப்பைத் தவிர வேறு எந்த ஆதாரமும் காணப்பட்டிலது. மகா வித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையின் மாணுக்கர் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் பதிப்பு 1868இல் வெளி வந்தது. அதில் உள்ள படியே பின்வந்தோர் அனைவரும் அச்சிட்டு வருகிருர்கள். பதினெராம் திருமுறை ஆசிரியர் யாவர், அதில் உள்ள பிரபந்தங்கள் யாவை என்பதற்கு எந்த வரையறையும் ஆதாரமும் இல்லை. ஆதலால், இன்ன நூல்கள் இன்னுர் பாடல் என்று சொல்வது, முன்வந்தோர் கூற்றைப் பின் வந்தோர் அப்படியே எடுத்து மொழிதல் அத்தனையே.

பதினெராம் திருமுறை ஆசிரியர் பன்னிருவர் என்பது, நக்கீரர் இருவர் என்று முன்னமே காட்டியபடி ஏற்படுவதால் பதின்மூவர் ஆகின்றது. இதுதானும் முடிவான கருத்தாகச் சொல்வதற்கில்லை. எமது கருத்துப்படி, இங்குக் குறிப்பிட்ட நான்கு பிரபந்தங்களும், திருமுருகாற்றுப்படை நக்கீரரும் கயிலைபாதி அந்தாதி பாடிய நக்கீரரும் அல்லாத மற்றெருர்

ஆசிரியர் பாடியனவாய் இருக்கலாம். இவர் பெயரும் ஒருகால் நக்கீரதேவராகவே இருந்தது போலும். இவர் காலத்தால் கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி பாடிய நக்கீரருக்கு முற்பட்டவர் ஆவாரோ என்ற ஐயமும் உண்டு. இவ்வாறு கருதுவதற்குப் பிரபந்தங்களே ஆதாரம்.

இவற்றை முன்கூறிய நக்கீரதேவருடைய ஐந்து பிரபந்தங்களோடு வைத்து ஒப்பு நோக்கும்போது, இவை முழுமையும் வேருன நடை, சொல்லமைதி, பொருளமைதி உடையன என்பது எளிதில் விளங்கும். திருமுருகாற்றுப் படை போன்ற சொற்செறிவு இவற்றின் கண் இல்லா விட்டாலும், கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி போன்ற சொல்நெகிழ்ச்சி இவற்றுள் காண முடியாது. பொருளும் அங்ஙனமே, கருத்தின்பம் உடையதாகக் காணப்படுகிறது. இந்த நக்கீரர் எவ்விதத்திலும் முற்கூறிய இருவர் வரலாறுகளிலும் சம்பந்தப்பட்டவராகத் தெரியவில்லை. வேறு ஆதாரங்கள் கிடைத்து அல்லது ஆராய்ச்சித் தெளிவு உண்டாகி, இவ்வாசிரியர் இன்னுர், இவர் காலம் இன்னது என்ற வரையறை ஏற்படுகின்ற வரையில், இவரைப் பதினெராம் திருமுறை பொறுத்த மட்டில் இரண்டாம் நக்கீரதேவ நாயஞர் என்று பெயர் குறிப்பிடுவோம். வேறு முடிவுகள் காண்கிறவரை இவருடைய காலமும் பத்தாம் நூற்றுண்டின் தொடக்கப் பகுதி என்றே கொள்கின்றோம்.

ஆயினும், நாம் இதுவரை நான்கு நக்கீரரைப் பார்த்தோம் என்று கூறுவது பிழையாகாது. ஒரு நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடினர். பொதுவாக பத்துப் பாட்டில் ஒன்ருகிய நெடுநல்வாடை திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரரே பாடியது என்பது ஆராய்ச்சியாளர் அனைவருடைய கருத்தாகும்; (ஆனல் வையாபுரிப் பிள்ளை மட்டும் நெடுநல்வாடை பாடிய நக்கீரர் காலத்தால்

முந்தியவர், அவர் காலம் கி. பி. 250; முருகாறு பாடிய நக்கீரர் வேறு, காலம் கி. பி. 450 என்று எழுதியிருக்கிறுர்.) இவ்விருவரை அன்றி, மூன்ருவது நக்கீரர் இறையஞர் களவியலுக்கு உரை எழுதினுர். நக்கீர தேவர் மேலே நாம் விவரித்தபடி பதினெராம் திருமுறையில் கயிலே அந்தாதி முதலிய ஐந்து பிரபந்தங்கள் பாடினுர். நாம் இப்போது கருதுகின்ற நக்கீரர் பின்னும் ஒருவர். எனவே, ஒரு நக்கீரர் இத்தனையும் பாடினுர் என்று வழங்கிய ஆரம்ப காலத்துக்கு மாருக ஐவர் குறிப்புக்களே நாம் கருத வேண்டியிருக்கிறது. இதைக் குழப்பம் என்று யாரும் எண்ண வேண்டியதில்லே. வரலாற்று விளக்கம் சிறிதும் இல்லாத இடத்து, ஐயம் எழுவதே விளக்கத்துக்கு முதல் படியாகும்.

கயிலேபாதி யந்தாதி பாடிய நக்கீரர் பிரபந்தங்கள் ஐந்திலுள்ள வட சொற்களேயும், மற்ற திரு ஈங்கோய்மலே எழுபது முதலான நான்கு பிரபந்தங்களிலும் வரும் வட சொற்களேயும் கீழே அட்டவணேப்படுத்துகிருேம். இவற்றை மேற்போக்காகப் பார்த்தாலும் இவற்றின் ஆசிரியர் வெவ்வேருனவர் என்பது தெளிவாகப் புலப்படும். இங்கு ஈசன், சோதி, பயம், பாவனே, பூசனே, விடம், ஆதி, சோதி என்பன போன்ற சொற்களேச் சேர்க்கவில்லே.

| தருமி வரலாற்றுத் தொடர்பு உடைய பிரபந்தங்கள் | மற்றப் பிரபந்தங்கள் |
|---|---|
| 1. **காளத்தியந்தாதி:** அநங்கன், காமாதி, சரணம், தயா, தியானிப்பார், தேவாதிதேவன், பசுபதி, புத்தர், பாதாரவிந்தம், பாசுபதம், மூர்த்தி, விண்ணப்பம் | 1. **ஈங்கோய்மலே எழுபது:** ஓங்காரம், காகோதரம். |

2. **எழுகூற்றிருக்கை:** *கபாலம் தருமம், பிருங்கிருடி, பூதம், வாசகம் (பரமேட்டி).*

3. **பெருந்தேவ பாணி:** *மூர்த்தி, சுந்தரவிடங்கன், சூலபாணி, தேவ தேவன், தேவாதிதேவன், நிமலன் பரமயோகி, பரமேச்சுவரன், பாவநாசன், பிருங்கிருடி, முத்தி, வரதன், வேதகீதன்.*

4. **கோபப் பிரசாதம்:** *கோபப் பிரசாதம், சிவலோகன், தேவ தேவன், நந்தி, மாகாளர், நந்தீச் சுரர் பாவநாசர் பிருங்கிருடி புண்ணியநாதன்.*

5. **போற்றிக் கலி வெண்பா:** *சேனுபதி, தக்கிணம், தேவகாளி, பாசுபதம், புண்டரிகம்.*

2. **வலஞ்சுழி மும்மணிக் கோவை:** *கோடாலம், பாடலம்.*

3. **கார் எட்டு:** *பாசுபதன்.*

4. **கண்ணப்பதேவர் திருமறம்:** *அங்குலி அர்ச்சனை சிவகதி துந்துபி தீவகம் முத்திரை.*

*இந்தச் சொல் வரிசைகளை உற்று நோக்கும்போது, கயிலை பாதி வரிசையில் வட சொற்களும் தொடர்களும் அதிகமாயிருப்பது நன்கு புலப்படும். பொதுவாக எல்லா நூல்களும் வெவ்வேறு பண்புகளைக் கூறுவன. ஆதலால், நூலின் பொருளைத் தழுவி நடையும் சொல்லாட்சியும் ஓரளவு மாறுதல் இயல்பே. இருப்பினும் இங்கு அதிகமாகக் காணப்படுகிற இந்த வடசொல்லாட்சி வேற்றுமையானது, இவ்விரு பகுதி நூல்களையும் பாடியவர்கள் வெவ்வேருன ஆசிரியர் என்ற கருத்துக்கு மேலும் ஆதரவு தருகிறது.*

*இதன் மேலும் ஒரு கருத்து சொல்லத் தோன்றுகிறது. கயிலை பாதி காளத்தி பாதி யந்தாதி முதலான ஐந்து நூல்*

களையும் பாடிய நக்கீரதேவநாயனர் ஒருகால் மதுரையிலேயே வாழ்ந்திருந்தார் போலும். அந்தாதியானது, காளத்தி, கயிலை என்ற இரண்டு தலங்களை மட்டுமே குறிப்பிடுகின்றது. வேறு எந்தத் தலத்தையும் குறிப்பிடவில்லை. (இடைச் செருகலான பின்னுள்ள வெண்பா மட்டும் ஆலவாயைக் குறிப்பிடுகிறது.) பெருந் தேவபாணி கூடல் ஆலவாய் என்று குறிப்பிடுகிறது. கோபப்பிரசாதம் எத்தலத்தையும் குறிப்பிட வில்லை. போற்றிக் கலி வெண்பா கடவூர்ப் பெருமான் எமனை உதைத்த வரலாற்றைக் குறிப்பிடுகின்றது; காளத்தியையும் கயிலையையும் குறிப்பிடுகின்றது. கடவூரைக் குறிப்பிடுவது; சிவ பராக்கிரமத்தைக் கூறும் முகமாக மார்க்கண்டன் வரலாறு நிகழ்ந்த தலத்தைச் சொல்லுகிறதேயன்றி, தலத்தை மட்டும் குறிப்பிட்டதாக ஆகாது. (திருமுருகாற்றுப் படை வெண்பாக்கள் செந்தில் மட்டுமே குறிப்பிடுகின்றன.) இங்ஙனம் பார்க்கும்போது, இந்த நக்கீரதேவ நாயனருடைய வரலாற்றில் தொடர்புபட்ட மதுரை, காளத்தி, கயிலை என்ற மூன்று தலப் பெயர்கள் வருகின்றனவேயன்றி வேறு எத் தலப் பெயரும் வரவில்லை.

ஆனல் ஈங்கோய் மலை எழுபது முதலிய நான்கு நூல்களைப் பாடியவர் என்று நாம் கருதும் மற்றொரு நக்கீர தேவர் தலங்களுக்கு இரண்டு நூல் பாடியிருக்கிறர் – திரு ஈங்கோய் மலையும் திருவலஞ்சுழியும். கார் எட்டு எத்தலப் பெயரும் சொல்லவில்லை. திருக் கண்ணப்ப தேவர் திருமறம் தன் பொருள் காரணமாகக் காளத்தியையும், கண்ணப்பர் பிறந்த ஊராகிய உடுப்பூரையும் குறிப்பிடுவது பொருத்தமே. ஆனல் ஈங்கோய் மலை எழுபதில் பிற தலம் எதையும் குறிப்பிடாவிட்டாலும், திருவலஞ்சுழி மும்மணிக்கோவையில் திருமறைக்காட்டை இரண்டு முறையும் அண்ணுமலையை ஒரு முறையும் குறிப்பிடுகின்றர். மறைக்காடும் ஒரு சோழ நாட்டுத் தலம். (ஈங்கோய் மலை, காளத்தி, அண்ணுமலை

*என்ற மூன்றும் மலை சார்ந்த தலங்கள்.) இவர் எந்தப் பாண்டி நாட்டுத் தலத்தையும் குறிப்பிடவில்லை. இதனால் ஒரு கருத்து எழுகிறது. அந்தாதி பாடிய நக்கீரர் பாண்டி நாட்டினராயும், எழுபது முதலிய பிரபந்தம் பாடிய நக்கீர தேவர் சோழ நாட்டினராயும் இருக்கலாமோ என்ற ஐயம். இப்பொருள் மேலும் ஆராய்ந்து முடிவு காணத் தக்கது (ஒரு நாட்டைச் சேர்ந்தவர் பிற நாட்டுத் தலங்களைப் பாட மாட்டார் என்ற நியதி இல்லை.)*

## திரு ஈங்கோய்மலை எழுபது

*ஈங்கோய்மலை என்ற பாடல் பெற்ற சிவஸ்தலத்தின் புகழாக எழுபது[1] வெண்பாக்கள் கொண்டது. பாடல் ஒவ்வொன்றும் ‘இத்தகைய ஈங்கோய் சிவபெருமான் மலை’ என்ற பொருள் அமைந்தது. பாடல் தோறும் மலை, குன்று, சிலம்பு, வெற்பு கடறு, பொருப்பு என்ற முடிபை உடையது. பாடல்களின் முதல் எழுத்துக்கள் அகர வரிசையில் அமைந்தன. இது நக்கீரதேவர் பிரபந்தங்களில் இரண்டாவதாக அமைக்கப்பட்டுள்ளது.*

*எழுபது பாடல்கள் பாடுவது ஓர் இலக்கிய மரபு. பரிபாடல் எழுபது, ஐந்திணை எழுபது என்பன இந்நூலுக்கு முன்னர்த் தோன்றிய நூல்கள். இதன்பின்னர்த் தோன்றியவை நம்பியாண்டார் நம்பிபாடிய கோயில் திருப்பண்ணியர் விருத்தம், ஏர் எழுபது முதலாயின.*

---

1 இப்பாடல்களுள் 48ஆம் பாடல் தொடங்கி 62ஆம் பாடல் வரையில் எந்தப் பிரதிகளிலும் கிடைத்தில என்று சுப்பராயச் செட்டியார் பதிப்பு ஆறுமுக நாவலர் பதிப்பு, காசி மடத்துப் பதிப்பு ஆகிய எல்லாப் பதிப்புக் களிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. செப்பறை மடத்து ஏடு ஒன்றில் இப் பாடல்களை யாம் முதல்முதல் கண்டு, 1942ஆம் வருஷம் திரு. வி. உலகநாத முதலியார் மணிவிழா மலரில் இவற்றை வெளியிட்டிருந்தோம். பின்னர் இவை அதிலிருந்து எடுத்துக் காசி மடத்து இரண்டாம் பதிப்பில் (1963) பதிப்பிக்கப்பட்டுள்ளன.

தலம் மலையாதலினல் நூலாசிரியர் இங்கு அதிகமாக மலைவாழ் மக்களான குறவர் குலத்தின் வாழ்க்கையை எடுத்துச் சொல்லுகிறர். மலைவாழ் விலங்குகளாகிய சிங்கம், ஆளி, கேழல், புலி, மான் முதலியவை, மயில் ஆகிய புள் என்பவற்றின் இயல்புகளைப் மிக நன்ருக விரித்துக் கூறுகிறர். குறிஞ்சி நில வாழ்வின் வளமும், அதிலுள்ள பல்வேறு சுவைகளும் இன்பமும் மிக நன்ருக இந்நூலில் சொல்லப்பட்டுள்ளன. ஒரே விதமான பொருளையே ஆசிரியர் திருப்பித் திருப்பிச் சொல்லிய போதிலும் கற்போருக்குச் சலிப்பே ஏற்படவில்லை. குறவர் வேட்டையாடுதல், தேன் எடுத்தல், குறமகளிர் யானை மருப்பை உலக்கையாகக் கொண்டு தினை இடித்தல், தேனேடு கலந்து உண்ணுதல், பலாக் கனி உண்ணுதல், குறமகளிர் குரவை யாடுதல் முதலிய செய்திகள் நயமாக இயற்கையோடு பொருந்தச் சொல்லப்பட்டுள்ளன. வனவிலங்குகளுக்கு இவ்வாசிரியர் மனிதப் பண்புகளை ஏற்றிக் கூறியிருப்பது மிக்க சுவை யுடையதாய் இருக்கிறது. மந்தி, ஈன்ற குழவிக்குத் தேனை விரலால் தோய்த்து ஊட்டுகிறது. ஊடி உறங்கும் பிடிக்கு இனிய கதலிக் கனிகளை தேர்ந்துகொண்டு வந்து களிறு ஊட்டுகிறது. சூற்பிடிக்கு யானை சந்தனத் தழையைக் கொண்டு வந்து ஊட்டி அது களிக்கக் கண்டு தானும் களிக்கிறது. ஒரு மந்தி கோலினல் தேனடையைக் குத்த, இளம் மந்தி, ஒழுகும் தேனை வாழை இலையில் ஏற்று உண்டு உவக்கிறது. ஒரு யானை, வேடர்கள் யானை பிடிப்பதற்காகக் குழிதோண்டி வைத்திருப்பதை அறிந்து, தன் துதிக்கையால் ஒரு தண்டைப் பற்றிக் குழி இருக்கிறதா என்று ஊன்றிப் பார்த்துக்கொண்டு செல்லுகிறது! புற்றிலுள்ள பழஞ் சோற்றைக் கரடி இடந்துதரப் பெண்கரடி அதை ஏற்றுக் கைநீட்டிக் கொண்டிருக்கிறது.

இவ்வாறுள்ள பாடல்களில் ஆசிரியர் குறவர் செயலாக இரு காட்சிகளைக் காட்டுகிறர். அவை ஆசிரியருடைய

*உள்ளப் பண்பாட்டை மிகச் சிறப்பாக உணர்த்துகின்றன. இவற்றை ஒத்த பண்பை வேறிடத்தில் காண்பது அரிது. ஒரு வேடன் பெண் மானை எய்வதற்கு வில்லில் அம்பைப் பூட்டிக் குறி பார்த்தபோது, அக்கன்னி மானின் கண் தன் குறத்தியின் கண்ணை ஒத்திருப்பது உணர்ந்து, கையில் கணையை நழுவ விட்டு, "பையப்போ" என்று அம் மானை எய்யாது விடுகிறான் (12):*

**எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதெனக்**
**கையிற் கணைகளைந்து, 'கன்னிமான் - பையப்போ'**
**என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே, தூங்கெயில்கள்**
**சென்றன்று வென்றான் சிலம்பு.**

*மற்றொரு குறவன் ஒரு பெண் மானை அடித்துக்கொண்டு வந்து குறத்தியிடம் கொடுக்கவே, அவள் ஆணும் பெண்ணுமாக இருந்த மான்களில் ஒன்றைப் பிரித்துக் கொணர்ந்தது இழுக்கு என்று அவன்மீது கோபிக்கிறாள் (60):*

**மலைதிரிந்த மாக்குறவன் மான்கொணர நோக்கிச்**
**சிலைநுதலி சீறிச் சிலைத்துக் - 'கலைபிரிய**
**இம்மான் கொணர்தல் இழுக்கு' என்னும் ஈங்கோயே!**
**மெய்ம்மான் புணர்ந்தகையான் வெற்பு.**

*சிலேடையாகிய சொல்லணி எல்லாப் புலவர்களையும் கவர வல்லது. இவ்வாசிரியர், இதன் கவர்ச்சி வயப்பட்டு ஒரு பாடலைச் சிலேடையில் அமைத்திருக்கக் காண்கிறோம்.*

**வளர்ந்த இளங்கன்னி மாங்கொம்பின் கொங்கை**
**அளைந்து வடுப்படுப்பான் வேண்டி - இளந்தென்றல்**
**எல்லிப் புகநுழையும் ஈங்கோயே தீங்கருப்பு**
**வில்லிக்குக் கூற்றானான் வெற்பு.**

இளந்தென்றலாகிய தலைவன் மாவின் கொங்கை அளைந்து வடு உண்டாக்குகிறன் என்றும், கன்னியின் கொங்கையை அணைந்து அவளுக்கு வடு உண்டாகும்படி செய்கிறன் என்றும் இரு பொருள் தோற்றுவது காணத் தக்கது.

இவ்வாறு நயமான வருணனையைச் சொல்லுகின்ற ஆசிரியர் சிவபிரானது இயல்பையும், கருணைத் திறத்தையும் ஒவ்வொரு பாட்டிலும் நன்கு குறிப்பிடுகிறர். சிவபிரான் மறுதலைநோய் தீர்ப்பான்; நம்மேல் கொடுவினைகளை வீட்டு விப்பான்; நந்தம் மனக் கவலை தீர்ப்பான்; அன்பர் குறித்த வரம் கொடுப்பான்; தீங்கு வர அதனைக் காப்பான்; நம் மேல் வருந்துயரம் தீர்ப்பான் என்பன சில கருத்துக்கள்.

## திருவலஞ்சுழி மும்மணிக் கோவை

நக்கீர தேவ நாயனர் பெயரிலுள்ள மூன்ருவது பிரபந்த மாகிய இச்சிறு நூல், சோழநாட்டுத் திருவலஞ்சுழி என்ற பாடல் பெற்ற தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் மீது, ஆசிரியப்பா வெண்பா கட்டளைக் கலித்துறை என்ற மூவகைப் பாக்களால் இயன்ற ஒரு பிரபந்தம். பாட்டியல் கூறும் இலக்கண நூல்கள், 9 – 10 நூற்ருண்டுகளிலும், பின்னருமே எழுந்தன. இலக்கணப்படி, மும்மணிக்கோவை என்பது, இம்மூன்று பாக்களால் மண்டலித்து வரும் அந்தாதியாக முப்பது பாடல் கொண்டது. ஆனல் இவ் வாசிரியர் தம் பிரபந்தத்தை மண்டலித்து வரும் அந்தாதியாகப் பதினைந்து பாக்களில் முடித்துக் கொண்டார். ஆதலால் இவர் நூல் குறையல்ல, முற்றுப்பெற்ற நூல் என்றும், இவர் காலத்துக்குப் பின்னரே பன்னிரு பாட்டியல் ஆகிய இலக்கணம் தோன்றியது என்றும் நாம் கருதுவது பொருந்தும்.

*இனி, இந்நூலின் இயல்புகளைச் சில சொற்களால் சொல்லலாம். சிறப்பாக இதனுள் அமைந்த ஆசிரியப் பாக்கள், பொருட் செறிவு உடையனவாய், குறைந்த சொற்களால் அமைந்துள்ளன. இப்பாடல்களுள், முதல் மூன்றும் இறுதிப் பாடலும் ஆக நான்கு பாடல்கள் நீங்கலாக, ஏனைய அகத்துறைப் பாடல்களாய் உள்ளன. பதிஞெராந் திருமுறையில் மும்மணிக்கோவைகள் ஏழு உள்ளன; அகத்துறைப் பாடல்கள் எல்லாவற்றிலும் உள்ளன. ஆயினும், அவற்றுள் சேரமான் பெருமாள் பாடிய திருவாரூர் மும்மணிக்கோவையே முதலில் வந்தது. பின் வந்த ஆசிரியர்கள் அதை ஓர் அகப்பொருள் நூலாகவே கருதினர்கள் எனத் தெரிகிறது.*

*இருபாடல்கள், தலைவனைக் கண்டு தலைவி வசம் இழந்து வளையும் இழந்த நிலையில் கூறும் கூற்ருக உள்ளன. பலிக்குப் புகுந்த வலஞ்சுழி வாணனாகிய தலைவனை 'யாதுநும் ஊர்?' என்று தலைவி கேட்க, தலைவர் 'மாமறையம், வலஞ்சுழி நம் வாழ்வு' என்று சொல்லுகிருர். அந்த நிலையில் இவள் கையில் இருந்த வளைகள் மறைந்துவிட்டன' என்கிருள். மாமறையம் என்பது இரட்டுற மொழிதலாக உள்ள விடை; பெருமைமிக்க வேதத்தில் உள்ளோம் என்றும், திருமறைக் காட்டில் உறைகின்ருேம் என்றும் இரு பொருள் தொனிக் கிறது. மற்றப் பாடலை கீழே காண்க:*

**தான்ஏறும் ஆனேறு கைதொழேன், தன்சடைமேல்**
**தேன்ஏறு கொன்றைத் திறம்பேசேன், - வான்ஏறு**
**மையாருஞ் சோலை வலஞ்சுழியான் என்கொல், என்**
**கையார் வளைகவர்ந்த வாறு? 11**

*இறுதிப் பாடலில் மறைக்காடு அண்ணமலை என்ற இருதலப் பெயர்களையும் அமைத்திருக்கிருர். முதற் பாடலில் வலஞ்சுழி என்ற தலப் பெயரின் பொருளை உணர்த்துவதுபோல,*

மடுக்கும் காவிரி மடந்தை வார்புனல்
உடுத்த மணிநீர் வலஞ்சுழி

*என்று குறிப்பிடுகின்றார். மூன்றும் பாடலில் இவர் வண்ணம் என்ற சொல்லைச் சுழன்று சுழன்று பலமுறை வரும்படி செய்திருப்பது, பொன் வண்ணத்து அந்தாதியின் முதற் பாடலை நினைவூட்டுகிறது.*

கழல்வண்ண முஞ்சடைக் கற்றையும்
மற்றவர் காணகில்லார்,
தழல்வண்ணங் கண்டே தளர்ந்தார்
இருவர்,அந் தாமரையின்
நிழல்வண்ணம் பொன்வண்ணம் நீர்நிற
வண்ணம் நெடியவண்ணம்
அழல்வண்ண முந்நீர் வலஞ்சுழி
ஆள்கின்ற அண்ணலையே 3

*என்ற பாடலையும் பின்வரும் சேரமான் பாடலையும் ஒப்பிடுக:*

பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மேனி, பொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை, வெள்ளிக்குன்றம்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மால்விடை, தன்னைக்கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
ஆகிய ஈசனுக்கே.

*சேரமான், காலத்தால் இவருக்கு இரு நூறு ஆண்டுகளுக்கு மேல் முற்பட்டவர்.*

*இரண்டாம் பாடலில் செவியறிவுறூஉவாக வலஞ்சுழி வாணனது திருவடிப் பெருமையைக் கூறுகின்றார். பெருமானது திருவடித் தாமரையை முடிமேல் வைத்து*

*வணங்கி நெஞ்சத்திலே அவ்வடிகளைத் தியானித்துக் கையிலே மணம் மிகுந்த பூக்களைக் கொண்டு அருச்சித்து, இவ்வாறு மெய், மனம், மொழி ஆகிய முக்கரணங்களாலும் வழிபடுபவர்களே அவனுடைய திருவருளைப் பெறமுடியும் :*

அடிப்போது தந்தலைவைத் தவ்வடிகள் உன்னிக்
கடிப்போது கைக்கொண்டார் கண்டார் - முடிப்போதா
வாளுகஞ் சூடும் வலஞ்சுழியான் வாஞேரும்
காணுத செம்பொற் கழல்.

## கார் எட்டு

*மலை என்றே முடிகிற ஈங்கோய் மலைப் பாடல்கள் போல, கார் என்று முடிகிற எட்டுப் பாடல்கள் கொண்ட சிறுநூல் ஆகியமையால் இது இப்பெயர் பெற்றது. இப்பாடலின் பொருளாவது, தலைவனது பிரிவினுல் வருத்தமுற்று இரங்குகின்ற தலைவிக்குத் தோழியானவள் 'கார்ப்பருவம் வந்தது, தலைவனும் இனி மீள்வான். நீ கவலற்க' என்று கூறித் தெருட்டுவதாகும். இது தலப்பெயர் சொல்லாது, பொதுவாகச் சிவபெருமானைச் சார்த்திப் பாடப் பெற்றது. கார்ப்பருவத்தின் வரவினைக் கூறுகின்ற கீழ்க் கணக்கு நூலாகிய கார் நாற்பது என்பது 40 வெண்பாக்களால் ஆனது. அதை ஒப்ப இது 8 வெண்பாக்களால் ஆனநூல். தோழி தலைவியை விளித்துக் கூறுவதைப் பின்வரும் பாடல் நன்குணர்த்துகிறது :*

செழுந்தழல் வண்ணன் செழுஞ்சடை போல்மின்னி,
அழுந்தி அவர்போல் உயர - எழுந்தெங்கும்
ஆவிசோர் நெஞ்சினரை அன்பளக்க உற்றதே,
காவிசேர் கண்ணுய்!அக் கார்.

*இது போலவே, நான்காம் பாடலும் தோழி தலைவியை விளித்துக் கூறுவதாக உள்ளது. இறுதிவரி, காம்பினங்கள்*

தோள் ஈயக் கார்' என்று பிரித்து அச்சிடப்பட்டுள்ளது[1]. இது பிழையாகும். இது 'காம்பினங் கொள்' என்று பாடங் கொண்டு 'காம்பினங் கொள் தோளீ' என்று விளியாக்கத் தக்கது.[2] காம்பினங் கொள் தோளீ – மூங்கிலை உவமையாகக் கொண்ட தோளையுடையவளே.

## திருக் கண்ணப்பதேவர் திருமறம்

இது நக்கீர தேவ நாயனுர் பெயரிலுள்ள இறுதியான பத்தாவது பிரபந்தம். இதில் 58 வரியுள்ள நீண்ட ஆசிரியப் பாவும் இறுதியில் ஒரு வெண்பாவும் உள்ளன. இவ்வெண்பா கண்ணப்பர் வரலாற்றை மிகச் சுருக்கி உரைக்கிறது :

**தத்தையாம் தாய், தந்தை நாகனும், தன்பிறப்புப்**
**பொத்தப்பிநாட் டுடுப்பூர் வேடுவனும், - தித்திக்கும்**
**திண்ணப்ப னும்சிறுபேர்; செய்தவத்தாற் காளத்திக்**
**கண்ணப்ப னய்நின்ருன் காண்.**

மறம் என்பது வீரத்தைப் புலப்படுத்தும் சொல். புறப் பொருள் இலக்கணத்துள் இத்துறை சிறப்பாகச் சொல்லப் பட்டிருக்கக் காணலாம். இங்கு ஆசிரியர், சிவலிங்கத்தின் கண்ணிலிருந்து ஒழுகிய இரத்தத்தை நிறுத்துவதற்காகக் கண்ணப்பர் தமது கண்ணை இடந்து அப்பிய அருஞ்செயலை மறம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்ருர். இச் செயல் அவருக்குப் பேரின்பப் பெருவாழ்வு அளித்தமையால் இது திரு மறம் ஆயிற்று. மிக்க விரைவாக இங்குக் கண்ணப்பர் வரலாற்றை ஆசிரியர் கூறுகிருர். தொடக்க வரிகளிலேயே, கண்ணப்பர் வரலாறு நாட்டில் பழமையாக வழங்கிய வரலாறு எனவும், அதனிடத்து எல்லோருக்கும் ஈடுபாடு மிகுதி என்பதையும் உணர்த்துகிருர் :

1 காசி மடத்துப் பதிப்புக்கள்.
2 பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பகுதி, பக்கம் 668.

**திருக்கண் ணப்பன் செய்தவத் திறத்து**
**விருப்புடைத்து அம்ம, விரிகடல் உலகே.**

*அம்ம என்று ஓர் இடைச் சொல் பெய்திருப்பது கண்ணப்பர் தவத் திறத்தையும் உலகின் ஈடுபாட்டையும் ஒருங்கே உணர்த்துகிறது. கானவர் குலத்தில் பிறந்து, பொருப்பிடைத் திரிந்து, வன விலங்குகளை வளர்த்து, படைக்கலம் பயின்று, வெள்ளிடையில் உறைந்து, உயிர் கொல்லும் தொழிலை மேற்கொண்டவர் கண்ணப்பர். கொடுவிறல் கொண்ட வடிவம். மனம் வேட்டையில் அமர்ந்தது. அவர் சிவலிங்கத்துக்குப் பூசனை செய்தே உண்பார். வன விலங்குகளைக் கொன்று, தீயில் வேகவைத்துச் சுவைத்துப் பார்த்து நல்ல சுவையுடையதை அண்ணலுக்கு என்று வேறு வைப்பார். சுனைநீரைத் தம் வாய்க்குடத்தால் மஞ்சனமாக முகந்து வருவார். மலரைத் தம் செந்நிற முடியில் செருகி வருவார். இவ்வாறு வெங்கடும் பகலில் திருக்காளத்தி இறைவனுக்கு இவரது வழிபாடு நடைபெற்றது. அங்கு முறையாக வழிபட்டு வந்த மறையோன் பெருமானுக்குத் துகில் அணிந்து, தூநீர் ஆட்டி, நறுமலர் நறும்புகை விளக்கு திரு அமுது முதலியன தந்து, அலங்கரித்து அருச்சனை செய்து, முத்திரை காட்டி, மந்திரம் சொல்லி, வலங்கொண்டு செல்லும் கடமையுடையவன். அங்குச் சென்ற கண்ணப்பர் பூசனை செய்யப் புகுந்து, செருப்படியால் மலரை நீக்கி, வாய் நீரால் மஞ்சனம் ஆட்டி, தந்தலைத் தாங்கிய பூவைச் சூட்டி, இறைச்சிப் போனகம் படைத்து, கசிந்த காதலினால் கூத்தாடி, இரவு கழிந்து மறுநாள் காலையில் வேட்டை மீது சென்றார். அந்நேரம் வந்த மறையோன், அங்கிருந்த நிலைமையைக் கண்டு வருந்தி, இவ்வாறு செய்தவன் யார் என்று கண்டறிய வேண்டிக் கரந்திருந்து, கண்ணப்பர் செயலைக் கண்டறிந்து பின் போய், மறுநாளும் வந்து "இறைவா, இது உனக்கு அழகா? செருப்புக்காலும், வாய்*

நீரும், தலைச்சருகும், இறைச்சியும் உனக்கு இனியனவா? அவ்வேடன் என்னைக் கண்டால், கொன்று விடுவான். உனது கருத்துத்தான் யாது?" என்று விண்ணப்பித்துச் சென்றார். அவன் கனவில் காளத்தியப்பர் தோன்றி, "அன்பனே, அவ்வேடனே எனக்கு அன்புடைய சிறந்த மாதவன்; அவன் செருப்படியே எமக்குப் பூ. அவன் வாயே பொற்குடம்; வாய் நீரே கங்கையின் புனல், அவன் தலையில் தங்கிய சருகிலையே எமக்குக் கற்பக மலர்; அவன் இட்ட இறைச்சியே எமக்கு நெய் பால் அவி; அவன் அன்பை நாளை உனக்குக் காட்டுகின்றோம், நீ இருந்து பார்" என்று அருள் செய்தார். மறுநாள் அவ்வாறே மறையோன் மறைந்திருந்து கண்டான். இறைவன் கண்ணுள் ஒன்று உதிரம் ஒழுக்கியதைக் கண்ணப்பர் பார்த்து, நடுக்குற்றுப் பதைத்து, மனஞ் சுழன்று, "யார் இக்கொடுமை செய்தார்?" என்று தேடிக் காணது மீண்டு, மருந்து பிழிந்து பார்க்க அதனிலும் உதிரம் நிற்காதது கண்டு, அன்பினல் தம் கண்ணை இடந்து அப்பினர். அப்பவும், உதிரம் நிற்பது ஒத்திருந்தது. மற்றக் கண்ணையும் பெயர்க்க வேண்டிக் கணையை மடுத்தார். அப்போது, "நில்லு கண்ணப்ப நில்லு கண்ணப்ப, என் – அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப" என்று சிவலிங்கப் பெருமானுர் தம்மிடைப் பிறந்த மலர்க் கையால் கண்ணப்பர் கையை அம்போடு பிடித்து நிறுத்தினர். கண்ணப்பர் சிவகதி பெற்றார்.

இது இந்நூலுள் கூறப்பட்ட வரலாறு. செய்திகள் மிக்க சொற் செட்டோடு, வருணனை கலவாமல், உணர்ச்சி மிக்குடைய தன்மையில் சுவைபட நேரில் நெஞ்சில் தைக்குமாறு சொல்லப்பட்டுள்ளன. தேவையற்ற எந்த வருணனையும் அடைகளும் இங்குக் காண்பதற்கில்லை. கண்ணப்பர் உருவ வருணனை, வேட்டை வருணனை, மறையோன் பூசையின் விரிவு முதலியன, அவ்வவற்றிற்குரிய

விளக்கத்தோடு சொல்லப்பட்டுள்ளன. ஆசிரியர் உணர்ச்சி வசமாகவே இப் பாடலைச் செய்திருக்கிறுர். கண்ணப்பர் அருஞ்செயலைக் கண்டு இறைவனே பொறுமல், "நில்லு கண்ணப்ப நில்லு கண்ணப்ப – என் அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப" என்று மூன்று முறை சொன்னுர் என இவர் குறிப்பிட்டிருப்பது, இவரது கரையற்ற உணர்ச்சி வேகத்தை நன்கு காட்டுகிறது.

இவரே கூறுகிறபடி, கண்ணப்பர் கதை நாடறிந்த பழங் கதை. தேவாரம், திருவாசகம் ஆகிய எல்லா நூல்களும் இக் கதையைக் கூறும். ஆனுல், அக் கதைக்கு முதலில் முழு உருவம் கொடுத்து விரிவாக அமைத்தவர் இவரேயாவர். பின்னுல் இரு நூற்றுண்டுகள் கழித்துச் சேக்கிழார் 186 விருத்தப் பாடல்களில் கண்ணப்பர் வரலாற்றை இந்நூலை ஒட்டியே, நாடன், காடன் முதலான துணைப் பாத்திரங்களை அதிகமாகப் படைத்து, விரித்துரைத்திருக்கிறுர். அவருக்கு மூலம் இந்த நூலேயாகும்.

பதினெராந் திருமுறை அதிகம் ஆட்சிபெருமையால் அதன்கண் அடங்கிய இந்த நூலும் அதிகம் பயிலப்பெற வில்லை. சங்க இலக்கியம் பயில்வோர் இந்நூலையும் நன்கு பயில்வது பயனுடையதாகும். மொழி வளர்ச்சி ஆராய்வோருக்கு இது ஓர் அரிய விருந்தாகும்.

ஒருகால் நக்கீரதேவர் பாடிய இத்திருமறம் கல்லாட தேவருக்கு மூல நூலாக இருக்கலாம். மறையோன் என்று இவர் சொல்லுவதை அவர் கோசரி என்று சொல்லுகிறுர்; பின்னர் இப்பெயர் சிவகோசரியார் என்று பெரிய புராணத்தில் சொல்லப்படுகிறது.

**காலம்**

இதுவரையில் நக்கீரதேவ நாயனுரைப்பற்றிக் கூறி வந்தோம். இவர் வரலாற்றில் ஏற்பட்ட குழப்பத்தையன்றி

*வேறு திட்டமான எந்தச் செய்தியும் தெரியவில்லை. இவர் காலம் 10ஆம் நூற்றுண்டு என்று பொருள்படவே இதுகாறும் சொன்னேம். இதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன. கயிலைபாதி அந்தாதியை நம்பி திருவிளையாடல் குறிப்பிடுவதால், அந்நம்பியின் காலமாகிய 13ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்டு இந்நக்கீரதேவர் வாழ்ந்தார் என்பது தெளிவு. அதேபோல 11ஆம் நூற்றுண்டினரான கல்லாடர், நக்கீர தேவர் வரலாற்றைக் குறிப்பிடுகின்றுர். கயிலைபாதி அந்தாதியைச் சிவபெருமான் வாவிக் கரையில் கேட்டனன் என்று அவர் கூறுவதால், நக்கீரர் அந்தாதி பாடிய வரலாறு 11ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்டது என்பது தெளிவு. இனி இவரது திருவெழு கூற்றிருக்கையை யாப்பருங்கல விருத்தியுரை குறிப்பிடுவதால் அவ் விருத்தி யுரையின் காலமாகிய 11ஆம் நூற்றுண்டுக்கு நக்கீர தேவர் முற்பட்டவர் என்பது தெளிவு. நம்பியாண்டார் நம்பி 11ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்து இவர் பாடல்களை 11ஆம் திருமுறையில் தொகுத்திருக்கிறுர். ஆதலால் இவர் காலம் நம்பிக்கு முற்பட்ட காலம். எனவே, இப் பல்வேறு ஆதரவுகளால், நக்கீர தேவர் 11ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்டவர் என்பது தெளிவாகிறது. 10ஆம் நூற்றுண்டு என்று கொள்வது பொருந்தும்.*

*திரு ஈங்கோய்மலைக் கல்வெட்டு ஒன்று நக்கீர தேவர் படிமத்தை அக் கோயிலில் எழுந்தருளுவித்த செய்தியைக் கூறுகிறது. இது நடந்த காலம் மூன்றும் குலோத்துங்க சோழனுடைய 36ஆம் ஆட்சியாண்டு; கி. பி. 1214. கோயிலில் அச்சமயம் ஆளுடைய பிள்ளையார், திருநாவுக்கரசு தேவர், ஆலாலசுந்தரர், நக்கீர தேவர் ஆகியோருக்கு நிவேதனத்திற்காக நிலம் அளிக்கப்பெற்றிருக்கிறது. கல்வெட்டில் இந்த முறையில் இந் நால்வர் பெயரும் கூறப் பட்டுள்ளபடியால், இவர் மற்ற மூவருக்கும் பிற்பட்டவர்*

என்பதும் யூகிக்கத்தக்கது. மூவருள் பிற்பட்டவராகிய சுந்தரர் காலம் 8ஆம் நூற்றுண்டின் தொடக்கம், நக்கீர தேவர் இதற்குப்பின் வந்தார் என்று ஏற்படுவதால், நாம் குறிப்பிட்ட 10ஆம் நூற்றுண்டின் தொடக்கம் என்பது பொருந்தக்கூடியதே. இவர் 900 – 925 ஆகிய கால எல்லையில் வாழ்ந்து தம் நூல்களைப் பாடியவர் ஆகலாம்.

## கபிலதேவ நாயனர்

### ஆசிரியர்

பதினெராந் திருமுறை ஆசிரியர் வரிசையில் இவர் பெயர் இவ்வாறு வழங்குகிறது. இவர் வேறு; மிக்க புகழோடு பாரியின் நண்பராய் வாழ்ந்த புலவராகிய 'புலனழுக்கற்ற அந்தணளர்' என்ற கபிலர் வேறு. அவர் காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டுக்கு முன், இவர் காலம் பத்தாம் நூற்றுண்டின் தொடக்கம். பிற்காலத்தில் சங்கப் புலவர் பெயர் சூட்டப்பெற்றோ, அப்பெயர் தரித்துக் கொண்டோ, வாழ்ந்த சைவப் புலவர்களுள் இவரும் ஒருவர். கபில தேவர் என்பதனல் இவர் அந்தணரல்லர் என்பது தெளிவு; நாயனர் என்று வழங்குவது இவரது சிவபக்தியைக் கருதியாகும். இவர் பாடிய மூன்று பிரபந்தங்கள் இத்திருமுறையில் உள்ளன. சிவபெருமான்மீது பாடிய இரண்டு பிரபந்தங்களிலும் இவர் 45 தலங்களுக்குமேல் குறிப்பிடுகின்றுர்; இவற்றுள் 32 சோழநாட்டிற்குரியவை. திருவாரூரைப் பலமுறையும், மறைக்காடு, வெண்காட்டைச் சில முறையும் குறிப்பிடுகின்றுர். இவற்றல் இவர் திருவாரூரில் வாழ்ந்தவர் என்றும், சிவபக்தியால் பல தலங்களைத் தரிசனம் செய்தவர் என்றும் கருதலாம்.

### மூத்த நாயனர் திரு இரட்டை மணிமாலை

கபில தேவர் பாடிய இரு இரட்டை மணிமாலைகளில் இது முதலாவது. இவருக்கு முன்னமே, காரைக்கால்

அம்மையார் 5-6ஆம் நூற்ருண்டில் இவ்வகைப் பிரபந்தம் பாடி இருந்தார்; அது திருவிரட்டை மணிமாலை என்று மட்டுமே பெயர் கொண்டது. மூத்த நாயனர் ஆவார் விநாயகர். நாயனர் என்ற சொல், நாயகன், இறைவன் என பொருளுடையது; "சிராப்பள்ளி மேவிய நாயனர் எனின் நம் வினை நாசமே" என அப்பர் தேவாரத்துள்ளும் (6071) சாசனங்களிலும் பயில்வது சிவபெருமானைக் குறிக்கும். இச்சொல், அவரின் வேறல்லாதவராக ஆசிரியர் கூறும் மூத்தபிள்ளையான விநாயகருக்கு இங்கு உரியதாக்கப் பட்டது.

இது விநாயகரைக் குறித்து வழக்கம்போல் வெண்பா கட்டளைக் கலித்துறை ஆகிய இரு பாடல்கள் மாறிமாறி மண்டலித்துவரும் அந்தாதியாகப் பாடப்பெற்ற 20 பாடல் கொண்ட நூல். 'திருவாக்கும் செய் கருமம் கை கூட்டும்,' 'விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்' என்ற இரு பாடல்களும் அன்பர்களால் இன்று எங்கும் பாடப் பெறுபவை. விநாயகரைக் குறித்துப் பாடப்பெற்ற முதல் தனி நூல் இதுவேயாகும். விநாயகரைப் பரம் பொருளாகக் கொண்டு, அவரை வழிபட எல்லாப் பொருள்களும் கைகூடும் என்று நூல் கூறும். யானைமுகமுடைய பெருமான், கனி வர்க்கம் பணிகாரவகை எல்லாவற்றிலும் மிக்க விருப்ப முடையவன் என்ற பிற்காலக் கருத்தை இவர், 'அப்பம் இடி அவலோடு எள்ளுண்டை கன்னல் வடி சுவையில், தாழ்வான்', 'வாழைக்கனி பலவின்கனி மாங்கனி தாம் சிறந்த கூழைச் சுருள் குழை அப்பம் எள்ளுண்டை எல்லாம் துறுத்தும் பேழைப் பெருவயிறு' என்ற சொற்களால் குறிப்பிடுகிருர். விநாயகரை ஆழ்வான் என்று கூறுகிருர்.

இந்நூலுள் பயின்ற சில புதிய வடசொற்கள்: போக பந்தத் தந்தம், நாக பந்தம், ஏக தந்தம், நீல கண்டம்.

அருஞ்சொற்கள்: மைத்துனன், துறுத்தும். இந்நூலின் சுவையுடைய பாட்டொன்று பின்வருவது:

**நல்லார் பழிப்பில் எழிற்செம் பவளத்தை நாணநின்ற**
**பொல்லா முகத்தெங்கள் போதக மே,புரம் மூன்றெரித்த**
**வில்லான் அளித்த விநாயக னேஎன்று மெய்ம்மகிழ**
**வல்லார் மனத்தன்றி, மாட்டாள் இருக்க மலர்த்திருவே.**

## சிவபெருமான் திரு இரட்டை மணிமாலை

இது இவ்வகைப் பிரபந்த இயல்புக்கு மாறாக 37 பாடல்கள் கொண்டது. ஒரு கால் 40 இருந்திருக்கலாம். இது அந்தாதி ஆயினும், நூலின் இறுதிச் செய்யுளின் முடிவு முதற் செய்யுளின் தொடக்கமாக மண்டலித்து வரவில்லை; ஆதலால் நூலின் இறுதியில் சில செய்யுட்கள் கிடைக்கவில்லை எனக் கருதலாம். முந்திய நூலில் ஒரு தலப்பெயரையும் குறிப்பிடாத இவ்வாசிரியர், இப்பிரபந்தத்துள் மிக அதிகமான தலங்களைக் குறிப்பிடுகின்றார். அவை பின்வருவன: அதிகைமங்கை, ஆரூர், ஐயாறு, ஒற்றியூர், கயிலை, கோவலூர், சத்திமுற்றம், தில்லை, பழனம், பாண்டிக்கொடுமுடி, மறைக்காடு, முதுகுன்று, வலஞ்சுழி, வாய்மூர், வெண்காடு என்பன. அதிகை மங்கைத் திருவீரட்டம், அதிகை மங்கை, குடதிரு வீரட்டானம், கோவலூர் வீரட்டம் என்று கூறிப்பிடுகின்றார்; கொட்டுக்காடு என்பது ஒரு தலம் போலும். அதிகமான பாடல்களில் சிவபெருமான் கோவணம் உடுத்துப் பலியேற்ற செய்தியைக் குறிப்பிடுகின்றார்; பிட்சாடனமூர்த்தி வடிவத்தில் இவருக்குள்ள மிக்க ஈடுபாடு பாடல்களில் புலப்படுகிறது. தாதையைத் தாள் எறிந்த சண்டி வரலாற்றைக் குறிப்பிடுகின்றார். அகத்துறையாகப் பல பாடல்கள் உள்ளன. 'வானவர் தம்—அந்தாள் மடைத்து அடுத்தலைபம் போதில் அந்தேன் உழக்கிச் - செந்தாமரைச் செவ்வி காட்டும், திருவடி' என்று

இவர் கூறுவது அப்பர் சுவாமிகளுடைய திருவிருத்தக் கருத்தையும் சொற்களையும் கொண்டது :

நின்போல் அமரர்கள் நீள்முடி சாய்த்து நிமிர்த்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன ; பாங்கறியா
என் போலிகள் பறித்திட்ட இலையும் முகையும்எல்லாம்
அம்போ தெனக்கொள்ளும் ஐயன் ஐயாறன் அடித்தலமே.

இயலிசை நாடகம் என்ற தொடரை ஓரிடத்தில் சொல்கின்ருர். ஒற்றியூர் என்ற தலப்பெயரை இவர் சுவை படச் சிலேடையில் சொல்கின்ருர்.

அடியோமைத் தாங்கியோ, ஆடை உடுத்தோ,
குடியோம்ப மாநிதியங் கொண்டோ ? - பொடியாடு
நெற்றியூர் வாளரவ நீள்சடையாய், நின்னூரை
ஒற்றியூர் ஆக்கிற் றுரை.

இப்பாடல்கள் பெரும்பகுதி சுவையான வருணனைகளும் அகத்துறைக் கருத்துக்களும் சிவபெருமான் துதியுமாக உள்ளன.

## சிவபெருமான் திரு அந்தாதி

இது நூறுபாடல் கொண்ட வெண்பா அந்தாதி, முந்திய நூல் போலவே இதிலும் இவர் மிகப் பலவான தலப் பெயர்களைக் குறிப்பிடுகின்ருர். இவற்றுள் ஆக்கூர், ஆரூர், ஆவூர், உறந்தை, ஒற்றியூர், களந்தை, குரக்குக்கா, காரோணம், கோப்பாடி (ஆய்ப்பாடி), சிராமலை, தலையாலங்காடு, தில்லை (புலிப் பொது), நாரையூர், பழனம், புகலூர், புகார், புன்கூர், மண்டளி, மறைக்காடு, வெண்காடு என்பன சோழ நாட்டில் உள்ளவை. அண்ணமலை, ஆடானை, ஆமாத்தூர், கானப்பேர், குற்ருலம், கூடல், கோகரணம், செங்குன்றூர், மேற்றளி (கச்சி), வேங்கடம் என்பன சோழநாட்டிற்கு வெளியே உள்ளவை. இவர் குறிப்பிடுகின்ற பின்வரும் தலங்கள்

விளங்காதவை : ஆனையூர், இடுமணல், கோவணம், தாங்கால், திருமாலு மங்கை, பனிச்சங்காடு, வெள்ளல்காடு. வேங்கடத்தை ஒரு தலமாக இவர் கூறுவது விளங்கவில்லை. இத் தலப் பெயர்களை ஆங்காங்கு யமகத்திலும் எதுகை பொருந்தவும் அமைத்து இருக்கிறார். யமகத்திலேயே அமைக்க இவர் முயன்றிருப்பதாலும் ஏடு எழுதினோர் பிழையாலும் திருத்தமான படங்கள் கிடைக்காமையாலும், பல இடங்கள் விளக்கம் இல்லாமல் உள்ளன. 1008 பேருடையான் என்று ஓரிடத்தில் சொல்லுகின்றார். அதிகமான பாடல்கள் அகத்துறையில் உள்ளன. சிவபெருமான் திருவந்தாதியின் 95ஆம் பாடல் பின்வருவது :

**சிவன்மாட் டுகவெழுதும், நாணும், நகுமென்னும்,**
**சிவன்மேய செங்குன்றூர் என்னும், - சிவன் மாட்டங்கு**
**ஆலிங்கனம் நினையும், ஆயிழையீர், அங்கொன்றை**
**ஆலிங் கனம்செய்யு மாறு.**

இவ் வெண்பாவுள் செங்குன்றூர் (திருச்செங்கோடு) வருவதால் கொங்கு மண்டல சதகம் பாடியவர், இதைச் சதகம் 62ஆம் பாடலில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

**செய்தவம் ஓங்கிய சீரார் கபிலநல் தேவரன்பில்**
**பெய்த அமுதச் சுவைகொள் அந்தாதியிற் பீடுபெறச்**
**செய்தல மாச்சிவன் மேயசெங் குன்றூர் செபிக்குமெனும்**
**மைதவழ் அப்பதி ஓங்குவ தும்கொங்கு மண்டலமே.**

அந்தாதி சுவையுடையது என்று இவர் கருதுகிறார்.

### காலம்

இவர் காலத்தை வரையறை செய்வதற்குப் பல குறிப்புக்கள் கிடைக்கின்றன. நம்பியாண்டார் நம்பி இவர் பாடல்களைத் தொகுத்தமையால் அவர் காலமாகிய 11ஆம் நூற்றாண்டுக்கு இவர் முந்தியவர் என்பது தெளிவு. அது

*போலவே இளம் பூரணர் தொல்காப்பிய உரையில் கபில தேவருடைய மூத்த நாயனார் திரு இரட்டை மணிமாலையில் உள்ள கனிய நினைவொடு, நல்லார் பழிப்பில் என்ற இரு பாடல்களைச் செய்யுளியல் உரையில் உதாரணமாக எடுத்துக் காட்டியிருக்கிறார். ஆதலாலும், கபில தேவர் இளம்பூரணர் காலமாகிய 11ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் என்பது தெளிவு.*

*சிவபெருமான் திருவந்தாதி 90ஆம் பாடலில் 'களந்தைக் கோன்' என்று குறிப்பிடுகின்றார். களந்தைக் கோன் — களந்தை; திருக்களந்தை ஆதித்தேச்சரம் என்ற கருவூர்த் தேவர் திருவிசைப்பாப் பெற்ற தலம். கோயில் களப்பாள் என்று இக்காலத்தில் வழங்குகிறது. இக்கோயில் ஆதித்த சோழன் எடுத்த கற்றளிகளில் ஒன்று. இம்மன்னன் காலம் கி. பி. 871–907. கபில தேவர் இக்காலத்துக்குப் பிற்பட்டிருந்தவர் ஆதலால், இவருடைய காலம் 10ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கருதுவது பொருத்தமாகும்.*

## பரணதேவ நாயனார்

*பதினோராந் திருமுறையில் கபிலருக்கு அடுத்த ஆசிரியர் பரணதேவர். இவர் பாடிய ஒரே பிரபந்தம் சிவபெருமான் திரு அந்தாதி. இதுவும் வெண்பா யாப்பினால் மண்டலித்து வரும் அந்தாதியாக நூறு பாடல் கொண்டது. 101ஆம் பாடலாக உள்ள தனிப்பாடல் ஆசிரியர் பெயரைக் கூறுகிறது:*

**ஒன்றைப் பரணர் உரைத்தஅந் தாதிபல**
**ஒன்றைப் பகலில் ஒருகோடி - ஒன்றைத்**
**தவிரா துரைப்பார் தளரார் உலகில்**
**தவிரார் சிவலோகந் தான்.**

பத்துப் பாடல்களுக்கு மேல் ஆரூரையும், ஒன்று ஆரூர் மூலட்டானத்தையும், குறிப்பிடுகின்றன. இவர் சோழ நாட்டினர், திருவாரூரினர் என்றே கருதத் தோன்றுகிறது.

## நூல்

நூலின் வெண்பாக்கள் யாவும் நேரிசை வெண்பாக்கள். இவற்றின் பாடல் ஒவ்வொன்றிலும் முதல் இரு வரியின் தொடக்கச் சீர்கள் ஒரே எதுகையில் மடக்காகவும், பின் இருவரிகளின் சீர்கள் வேறு எதுகையில் அதேபோல் அமைக்கப்பட்டுள்ளன. இப்பிரபந்தமும் கபில தேவர் நூல்கள் போலப் பிரதிகள் ஒப்பு நோக்கித் திருத்தம் செய்யப் பெறுமையால் பல இடங்கள் பிழைபட்டும் இன்னும் பொருள் விளங்காத நிலையிலும் உள்ளன.

நூறு பாடல்களில் 36 பாடல்களில் தலப்பெயர் இல்லை. இருப்பினும் அங்கு, பல இடங்களில் சலந்தரனைக் கொன்றது, காமனைப் பொடியாக்கியது, கண்ணிடந்தப்பியது போன்ற குறிப்புக்களால் தலம் குறிக்கப்படுகிறது என்று கருதலாம். ஏனைய 64 பாடல்களிலும் தலப் பெயர்கள் உள்ளன. சில தலப் பெயர்கள் பல பாடல்களில் வருகின்றன. இவற்றுள் பின் வருவன சோழ நாட்டிற் குரியவை. அம்பர் மாகாளம், ஆரூர், ஆரூர் மூலட்டானம், ஆலந்துறை, ஆனைக்கா, இடைமருது, ஈங்கோய்மலை, கடவூர், கழிப்பாலை, கழுமலம், காறை, கோளிலி, சாய்க்காடு, சிராமலை, செங்காட்டங்குடி, சோற்றுத்துறை, தில்லை, நாகைக்காரோணம், புகலூர், பைஞ்ஞீலி, மருகல், மறைக் காடு, மீயச்சூர், வலஞ்சுழி, விடையூர், வெண்காடு என்பன. இவை 26. பிறநாட்டுத் தலங்கள் அண்ணாமலை, ஆமாத்தூர், அதிகை, ஆலங்காடு, ஆலவாய், ஏகம்பம், ஒற்றியூர், கயிலை, காளத்தி, கானப்பேர், சேதுக்கரை, பாசூர், பூவணம், வஞ்சி என்பன. இவற்றின் தொகை 14.

எனவே, தலக்குறிப்பில் பெரும் பகுதி சோழ நாட்டிற்கே உரியது. அதனுள்ளும் 10 பாடல்கள் ஆரூருக்கு உள்ளன. இவற்றால் இவர் சோழநாட்டினர், திருவாரூரினர் என்று கருதல் பிழையாகாது.

இவர் பாடல்களில் பின்வரும் இரண்டே வரலாற்றுக் குறிப்புக்கள் உள்ளன. சண்டீசர்க்கு அருள் செய்தது (11) கண்ணப்பர் செருப்புக்காலால் மலர் நீக்கி வாய் நீர் வார்த்துக் கண்ணிடந்தப்பியது(28). எனவே இவர் பிரபந்தம் மிகவும் பழமையானது என்பதில் ஐயமில்லை. திருவாசகத்தில் காணப்படும் இரு வரலாறுகள் சண்டேசர் வரலாறும் கண்ணப்பர் வரலாறும் மட்டுமே ஆகும். புராணக் கதைகளை ஒதுக்கி விட்டுப் பார்த்தால் மாணிக்கவாசகரும், பரணரும் இவ்விரு அடியார் வரலாறு மட்டும் குறிப்பிடுவது நன்கு விளங்குகிறது. ஒருகால் பரணதேவர் மாணிக்க வாசகரின் அடியார்களுள் ஒருவராக இருந்திருப்பாரோ என்ற ஐயம்கூட எழுகிறது. இதற்கு வரலாறுகள் இன்மையால் இவ்வையத்தைப் போக்க வழியில்லை.

### காலம்

இவர் திருமூலர், ஏனைய மூவர் ஆகியோருக்குப் பின் வந்தவர் என்பது பாடல்களால் நன்கு விளங்குகிறது. கபில பரணர் என்ற தொடர்பாலும் இருவரும் சிவபெருமான் மீது வெண்பா அந்தாதி பாடியுள்ளமையாலும், இந்நக்கீர தேவர் கபிலர் பரணர் ஆகியோர் சமகாலத்தில் வாழ்ந்தவர் என்றே கருதவேண்டும். ஒரே சூழலில் ஒன்றாகவே வாழ்ந்தும் இருக்கலாம்.

## கல்லாட தேவர்

பதினோராந் திருமுறையாசிரியர்களுள் தேவர் என்று பெயர் அமைந்தோர் நால்வர்; அவர்கள் பெயரும் பின்கண்ட

முறைப்படி அமைந்துள்ளது – நக்கீரதேவர், கல்லாட தேவர், கபில தேவர், பரணதேவர் என. இம்முறையமைப்புக்கு ஆதாரம் விளங்கவில்லை. இத்திருமுறைப் பிரதிகள் கிடைக்காமையால் இது பற்றித் திட்டமாக எதுவும் சொல்வதற்கில்லை. இந்நால்வருள் மூவரை இதுவரை ஆராய்ந்தோம். கல்லாட தேவர் இப்போது ஆராய்ச்சிக்குரியவர். கல்லாடர் என்ற பெயர் படைத்த ஆசிரியர் பலர் பற்றியும், அவர்கள் செய்த நூல் பற்றியும், காலம் பற்றியும் விளக்கமான குறிப்புக்கள் எமது 11ஆம் நூற்றுண்டு வரலாறு – இலக்கிய ஆசிரியர் என்ற முதல் அத்தியாயத்துள் விரிவாகத் தரப் பெற்றுள்ளன. இப்போது பதினெராந் திருமுறையில் கண்ட 19ஆம் பிரபந்தமாகிய திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்ற சிறுபாடல் பாடிய கல்லாட தேவரை மட்டும் இங்குக் கருதுவோம்.

### திருக் கண்ணப்பதேவர் திருமறம்

ஆசிரியப்பாவால் அமைந்த இச்சிறு பாடல் 38 அடிகள் கொண்டது. இது நக்கீரர் இதே பொருள் கொண்டு பாடிய திருமறத்துக்கு அடுத்த பாடலாக உள்ளது; அந்தப் பாடல் மிக விரிந்தது, நீண்டது என முன்னமே பார்த்தோம். இப்பாடல் கண்ணப்பரது பக்தி நிறைந்த வீரச்செயலை நேர்முகமாக விரித்தலின்றிச் சுவை ததும்பச் சுருக்கி உரைக்கிறது. சுருங்கியமையால் இது கூறும் பொருளை நயம் கருதி முழுமையும் இங்குத் தருகிறேம். கண்ணப்பர் என்ற பெயரை ஆசிரியர் கூறவில்லை, வேட்டுவன் என்றே சொல்கிறுர்.

அவ் வேட்டுவன் அன்பே உருவானவன், வார் போர்த்த செருப்புடையவன். குருதி புலராத தோற் கச்சையணிந்தவன். அதில் உடைவாள் செருகியிருக்கிறுன்; கச்சையில் மயிர் திணிந்த தோற்பை தொங்குகிறது. புலியின் நகமும், கேழல் மருப்பும் மாறிமாறித் தொடுத்த மாலையே உத்தரியம்

போல அணிந்திருக்கிறன். நெற்றியில் மயிற்பீலி. குஞ்சியில் சோழியணிந்தவன். உடலில் புலால் நாறும். புலித்தோல் போர்த்த சங்கரன் இனத்தலைவன். வில்லும் அம்பும் தாங்கிப் பாறை வழியே சென்று, பன்றியை எய்து, கோலின் ஏற்றிக் கொழுந்தீயில் காய்ச்சி அந்த நாட் போனகமாக நாவில் அமைத்து, பள்ளித் தாமத்தைத் தலையில் செருகி வாய்க் கலசத்து மஞ்சன நீர் ஏந்தி, கானப்பேருறை கண்ணுதல் முடியில் இருந்த பூசை மலரைத் தன் அடியால் நீக்கிப் பூசை செய்த காலத்து அவன் அன்பின் பெருக்கைக் கோசரிக்குக் காட்ட எண்ணிய முக்கண் அப்பன், ஒரு கண்ணில் உதிரம் தக்கணத்து இழிதர, அவன் அழுது விழுந்து அரற்றிப் புன்மருந்து ஆற்றப் போகாதென் றுணர்ந்து, மருந்தென்று தன் மலர்க்கண் அப்ப, உதிரப் பெருக்கு நின்றது. மற்றொரு கண்ணிலும் குருதி பொழிய, அவன் தனது மற்றைக் கண்ணைப் பகழித்தலையால் அகழ, ஆண்டகை,

**ஒருகை யாலும் இருகை பிடித்து**<br>
**'ஒல்லை நம்புண் ஒழிந்தது பாராய்!**<br>
**நல்லை நல்லை!' எனப்பெறும்**<br>
**திருவேட் டுவர்தம் திருவடி கைதொழக்**<br>
**கருவேட் டுழல்வினைக் காரியம் கெடுமே.**

இது பற்றிப் பல சொற்கள் சொல்லத் தக்கன. கண்ணப்பர் பெயர் வரலாறுகள் ஒன்றையும் இவர் சொல்ல வில்லை. ஆனால் கோசரியார் என்று, பூசனை செய்து வந்த அந்தணர் பெயரைக் குறிப்பிடுகிறார். இப்பெயரை நக்கீரர் குறிப்பிடவில்லை என முன்பு காட்டினோம். இறைவன் வேட்டுவருடைய இரு கைகளையும் ஒரு கையால் பிடித்தான்; 'நம்புண் விரைவில் ஆறியிருப்பதைக் காண்பாயாக' எனக் காட்டினான். 'இவ்வாறு பரிவு காட்டிய நீ நல்லை, நல்லை'

எனப் பாராட்டினுன். இவ்வாறு சொல்லப் பெற்ற வேட்டுவர் திருவடியைத் தொழுபவர் வினைகெடும் என்று ஆசிரியர் துதியின் ஒரு பகுதியான இயன் மொழியாக இப்பாடலை முடிக்கிருர்; நக்கீரர் பாடல் வரலாருகவே முடிகிறது. அனையவன் என்று ஒருமையில் தொடங்கிய இவ்வாசிரியர் நூல் முடிவில் திருவேட்டுவர் என்று பக்திச் சிறப்பினுல் விளைந்த மரியாதைப் பன்மையில் முடித்திருப்பது இவருடைய ஈடுபாட்டை நன்குணர்த்துகிறது.

கண்ணப்பர் வரலாற்றைக் கருதும்போது, அவர் முற் பிறவிகளில் விளைந்த சிவபுண்ணியப் பலனும் பக்திப் பெருக்கும் இவ்வேட்டுவப் பிறவியிலும் தொடர்ந்து வந்தமை காரணமாக, எவ்விதப் புறக்காரணமும் இன்றிப் பூசனைத் தொழிலில் ஈடுபட்டுச் செய்தற்கரிய செயல் செய்து மேல் நிலையடைந்தார்; கலைஞானம் எல்லாம் உணர்ந்து பூசித்த கோசரியாரினும் பெரியவராகக் கடவுளாலேயே கருதப் பெற்ருர். 'கலைஞானம் கல்லாமே கற்பித்தானை' என்பது அப்பர் சுவாமிகள் திருவாக்கு. இந்த ஓர் அருமை பற்றியே சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவரைக் கலை மலிந்த சீர்நம்பி கண்ணப்பர் என்று பாடுகிருர்; மற்றுப் படிப்பில்லாத வேட்டுவரைக் கலை மலிந்தவர் என்று கூறுவது எங்ஙனம்?

## ஆசிரியர்

கல்லாடர் என்ற பெயரோடு வாழ்ந்த ஆசிரியர்களைப் பற்றிய ஒரு குறிப்பு கல்லாடம் என்ற நூலாராய்ச்சியில் காணப்படும். நான்கு கல்லாடருள் இவர் ஒருவர்: ஏனையோர் சங்கப் புலவரான கல்லாடர், கல்லாடம் பாடிய கல்லாடர், தொல்காப்பியச் சொல்லதிகார உரை செய்த கல்லாடர் என்போர்; இவரும் நக்கீரர் முதலான ஆசிரியர்கள் போல, கல்லாட தேவநாயனுர் என்று சொல்லப் பெற்றுள்ளார். இவரது பாடல் பதினெராந் திருமுறையுள் நம்பியாண்டார்

நம்பியால் தொகுக்கப் பெற்றிருந்தபோதிலும், அவர் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதிப் பாடலில், கபிலர், பரணர், நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல்புலவோர் என்ற வரிசையில் இவர் பெயரைச் சொல்லவில்லை. சங்கப் புலவர் வேறு, பதினோராந் திருமுறையாசிரியர் வேறு என்பது உண்மை. எனினும் நம்பி கூற்றைக்கொண்டு, கல்லாடர் மட்டும் பிற மூவர் சூழலில் வாழாது சற்றே பிற்பட்டு வாழ்ந்திருக்கக் கூடியவர் என்று கருதுகிறோம். இவர் வரலாற்றின் குறிப்புக்கள் எவையும் தெரியாது போயினும், இரு கருத்துக்கள் குறிப்பிட முடியும். கண்ணப்பருடைய பெயர் ஊர் முதலியன எவையும் இவர் குறிப்பிடாது போயினும், பூசை செய்த அந்தணர் பெயரைத் தெரிந்து, கோசரி என்று குறிப்பிடுகிறார். ஆதலால் இவரும் ஓர் அந்தணர் என்று நாம் ஊகிக்கலாம்.

இனி, கண்ணப்பர் வரலாறு திருக்காளத்தியில் நிகழ்ந்திருக்க, இவர் 'கானப்பேருறை கண்ணுதல் முடியிற் பூசை' என்று கூறுகிறார். பிற்கால ஆசிரியர் சிவபெருமானது அருட் செயல்களையும் பராக்கிரமச் செயல்களையும் குறிப்பிடும் போது தங்கள் தங்கள் வழிபடு தலத்தைச் சார்த்திச் சொல்வது மரபு. இவரும் அவ்வாறே கானப்பேர் என்ற பாண்டிநாட்டுத் தலத்தைச் சொல்கிறார். ஆதலால் இவர் பாண்டி நாட்டினர், கானப்பேரில் வாழ்ந்து கானப்பேருறை காளையை வழிபட்டு வந்தவர் என்பது பொருந்தக்கூடியது. (கானப்பேர் – காளையார் கோயில் என – இப்போது வழங்குவது.)

இவர் கல்லாடம் பாடிய ஆசிரியரினும் வேறானவர் என்று கூறுவதற்குத் தக்க காரணமும் உள்ளது. நம்பியாண்டார் நம்பி தமக்கு முன் தோன்றி இருந்த சைவப் பிரபந்தங்களையும், துதி நூல்களையும் தொகுத்துத் திருமுறைகளாகத் தனித் தனியே வகுத்து அமைத்தார்

பிரசித்தமாய் நன்கு கேள்வியுற்றிருந்த தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலியன திருமுறைகளாக்கப்பட்டன. அவை போலவே, பிரசித்தமாய்த் தெரியாமலிருந்த இசைப்பாடல் களும் இயல்பாடல்களும் ஒன்பதாந் திருமுறையாகவும், பதினேராந் திருமுறையாகவும் தொகுக்கப்பட்டன. அவ்வாறு தொகுக்கப்பட்டதே கல்லாடர் பாடிய திருக் கண்ணப்ப தேவர் திருமறம். அவர் காலத்தில் கல்லாட நூல் இருந்திருந்தாலும் அல்லது அதைத் திருமறம் பாடியவர் பாடினர் என்ற வழக்கிருந்தாலும், திருமறத்தைத் தொகுத் தவர் ஒரு பாடலைத் தொகுத்து மற்றென்றை விட்டிருக்க மாட்டார். ஆகவே, மற்றென்று அப்போது இல்லை என்பது பொருள். அன்றி, கல்லாடம் ஒரு கோவை நூல், அதைச் சேர்க்க வேண்டாம் என்று சிலர் கருதுவதுமுண்டு. இது பொருந்தாது. ஏனெனில் மாணிக்கவாசகர் பாடியதென்று கருதுகின்ற திருக்கோவையார் எட்டாம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது என்பது வழக்கு. அதுபோலவே, மதுரைச் சோமசுந்தரப் பெருமான் கல்லாடர் பாடல்களைக் கேட்டு நூறுமுறை முடி துளக்கினர் என்ற சிறப்பு வரலாறும் உண்டு. ஆதலால், இத்தகைய பெருமையுடைய இந்த நூலை நம்பி விலக்கியிருக்க நியாயமில்லை. ஆகவே, திருமறம் பாடிய கல்லாட தேவ நாயனர் ஒருவரே நம்பிக்கு முன் வாழ்ந்து நூல் செய்தார் என்றும், கல்லாடம் பாடியவர் நம்பிக்குப் பின்னே வாழ்ந்து கல்லாடம் செய்தார் என்றும், திருமறம் பாடிய ஆசிரியர் கல்லாடம் பாடிய ஆசிரியரைவிட வேருனவர் என்றும் நாம் முடிவு செய்யவேண்டும்.

**காலம்**

மேற்கூறியவற்றுல் இக்கல்லாட தேவநாயனர் காலமும் ஒரு வகையாகத் தெளிவுபெறும். சுமார் கி. பி. 1000–1040 இல் வாழ்ந்த நம்பி இவர் பாடலைத் தொகுத்திருக்கின்ற மையால் இவர் அக்காலத்துக்கு முற்பட்டவர் ஆகிருர்.

*அதாவது பத்தாம் நூற்றுண்டுக்கு உரியவர். ஏனைய நக்கீர தேவநாயனர், கபிலர், பரணர் ஆகியோரும் இதே நூற்றுண்டு எனக் குறிப்பிட்டோம். நக்கீர தேவர் (இருவருள் கயிலைபாதி அந்தாதி முதலியன பாடிய ஒருவர்) பத்தாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இருந்தவர் என்றும் குறிப்பிட்டோம்; இருந்த இடம் பாண்டிநாடு என்றும் குறிப்பிட்டோம். கல்லாட தேவரும் அதே சூழலில் வாழ்ந் திருக்கலாம். நக்கீரர் முதலியோர் ஆண்டில் முதியராய் இருந்தபோது, இவர் ஆண்டில் மிக்க இளையராய் இருந் திருத்தல் கூடும்.*

*கல்லாடம் பாடிய கல்லாடர், கல்லாட தேவ நாயனர், வழிவந்தவரா என்பது கருதத்தக்கது. இவர் பாடிய கல்லாடத்தில் பதினைந்தாம் பாடல் கண்ணப்பர் வரலாற்றை விளங்கக் கூறுகிறது. கண்ணப்பருடைய மிச்சிலுக்கு இன்னும் பெருமான் இச்சை செய்கின்றுர் என்று சுவைபடக் கூறுகின்றுர். பின் வருவன கல்லாட வரிகள் :*

**முன்ஒரு காலத்து, அடுகொலைக்கு அணைந்த**
**முகில்உருப் பெறும்ஓர் கொடுமரக் கிராதன்**
**அருமறைத் தாபதன் அமைத்திடு செம்மலை,**
**செருப்புடைத் தாளால்] விருப்புடன் தள்ளி,**
**வாய்எனும் இடத்தில் வரம்புஅற எடுத்த**
**அமுதுகடல் தள்ளும் மணிநீர் ஆட்டி,**
**பின்னல்விட்டு அமைத்த தன்தலை மயிர்அணை**
**திருமலர் விண்புக மணிமுடி நிறைத்து,**
**வெள்வாய் குதட்டிய விழுதுடைக் கருந்தடி**
**வைத்து அமையாமுன் மகிழ்ந்து அமுதுஉண்டு,அவன்**
**மிச்சிலுக்கு இன்னும் இச்சைசெய் பெருமான்.**

இங்கு வருகின்ற கிராதன், தாபதன் அமைத்திடு செம்மல், தாளால் விருப்புடன் தள்ளுதல், வாயெனும் குடம், மணிநீர், தன் தலைமயிர் அணைதிருமலர், வாய் குதட்டிய கருந்தடி ஆகிய இத்தனைக் கருத்துக்களும் திருமறத்திலும் காணப்படுகின்றன. சொற்கள் மட்டுமே வேறு. ஆதலால் பின்வந்த ஆசிரியர், முன்வந்த திருமறத்திலிருந்து தமக்கு வேண்டிய கருத்துக்களை மட்டும் எடுத்துக் கொண்டார் என்று கருதுதல் பிழையாகாது.

---

**குறிப்பு:** கல்லாடர் பற்றிய விரிவான விளக்கத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு பக்கம் 18-34இல் காண்க.

# பதினொராந் திருமுறை அட்டவணை

| எண் | ஆசிரியர் பெயர் | நூல் எண் | நூற் பெயர் | பதிக எண் | பாட்டுடைத் தலைவர் | பாடல் தொகை | அடி | காலம் நூற்றுண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | திருவாலவாயுடையார் | 1 | திருமுகப் பாசுரம் | 1 | சேரமான் பெருமாள் | 1 | 12 | 8 |
| 2 | காரைக்காலம்மையார் | 1 | திருவாலங்காட்டு மூத்த திருபபதிகம் 1 | 2 | திருவாலங்காட்டு இறைவர் | 11 | 44 | 5-6 |
| | | 2 | ,, ,, 2 | | ,, | 11 | 44 | ,, |
| | | 3 | திரு இரட்டை மணிமாலை | 3 | சிவபெருமான் | 20 | 80 | ,, |
| | | 4 | அற்புதத் திரு அந்தாதி | 4 | ,, | 101 | 404 | ,, |
| 3 | ஐயடிகள் காடவர்கோன் | 1 | க்ஷேத்திரத் திருவெண்பா | 5 | ,, | 24 | 96 | 8 |
| 4 | சேரமான்பெருமாள்நாயனுர் | 1 | பொன் வண்ணத்தந்தாதி | 6 | ,, | 101 | 404 | 8 |
| | | 2 | திருஆரூர் மும்மணிக்கோவை | 7 | ஆரூர் இறைவன் | 30 | 258 | ,, |
| | | 3 | திருக்கயிலாய ஞான உரை | 8 | கயிலாயத்து இறைவன் | 197 கண்ணி வெண்பா 1 | 398 | ,, |
| 5 | நக்கீரதேவ நாயனுர் | 1 | கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி | 9 | கயிலையும் காளத்தியும் | 100 | 400 | 10 |
| | | 2 | திருஈங்கோய் மலை எழுபது | 10 | ஈங்கோய் மலை | 70 | 280 | ,, |
| | | 3 | திருவலஞ்சுழி மும்மணிக்கோவை | 11 | திருவலஞ்சுழி இறைவன் | 15 | 89 | ,, |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 4 | திரு ஏழுகூற்றிருக்கை | 12 | சிவபெருமான் | 2 | 59 | ,, |
| | 5 | பெருந் தேவபாணி | 13 | ஆலவாய்ப் பெருமான் | 2 | 71 | ,, |
| | 6 | கோபப் பிரசாதம் | 14 | ,, | 1 | 100 | ,, |
| | 7 | கார் எட்டு | 15 | — | 8 | 32 | ,, |
| | 8 | போற்றிக் கலிவெண்பா | 16 | ,, | 1 | 90 | ,, |
| | 9 | திருக்கண்ணப்பதேவர் திருமறம் | 18 | — | 2 | 162 | ,, |
| 5அ. சங்ககால - நக்கீரர் | 10 | திருமுருகாற்றுப்படை | 17 | முருகன் | 1 | 317 | 2 |
| | | | | | 10 வெ | 40 | 10 |
| 6 கல்லாடதேவ நாயனர் | 1 | திருக்கண்ணப்பதேவர் திருமறம் | 19 | | 1 | 38 | 10 |
| 7 கபிலதேவ நாயனர் | 1 | மூத்தநாயனர் திரு இரட்டை மணிமாலை | 20 | விநாயகர் | 20 | 80 | ,, |
| | 2 | சிவபெருமான் திரு இரட்டை மணிமாலை | 21 | சிவபெருமான் | 37 | 148 | ,, |
| | 3 | சிவபெருமான் திரு அந்தாதி | 22 | சிவபெருமான் | 100 | 400 | 10 |
| 8 பரணதேவ நாயனர் | 1 | சிவபெருமான் திரு அந்தாதி | 23 | சிவபெருமான் | 101 | 404 | 10 |
| 9 இளம் பெருமானடிகள் | 1 | சிவபெருமான் திரு மும்மணிக் கோவை | 24 | சிவபெருமான் | 30 | 147 | 8 |
| 10 அதிராவடிகள் | 1 | மூத்தபிள்ளையார் ,, | 25 | விநாயகர் | 23 | 113 | 8 |
| 11 பட்டினத்துப் பிள்ளையார் | 1 | கோயில் நான்மணிமாலை | 26 | தில்லை | 40 | 521 | 10 |
| | 2 | திருக்கழுமல மும்மணிக்கோவை | 27 | சீகாழி | 12 | 154 | ,, |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | 3 | திருவிடைமருதூர் மும்மணிக் கோவை | 28 | இடைமருது | 30 | 608 | ,, |
| | | 4 | திரு ஏகம்பமுடையார் திரு அந்தாதி | 29 | ஏகம்பம் | 100 | 400 | ,, |
| | | 5 | திருவொற்றியூர் ஒருபா ஒருபது | 30 | ஒற்றியூர் | 10 | 232 | ,, |
| 12 | நம்பியாண்டார் நம்பி | 1 | விநாயகர் திரு இரட்டை மணிமாலை | 31 | திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார் | 20 | 80 | 11 |
| | | 2 | கோயில் திருப்பண்ணியர் விருத்தம் | 32 | தில்லை | 70 | 280 | ,, |
| | | 3 | திருத்தொண்டர் திரு அந்தாதி | 33 | அறுபத்துமூவர் | 90 | 360 | ,, |
| | | 4 | ஆளுடையபிள்ளையார் திரு அந்தாதி | 34 | சம்பந்தர் | 100 | 400 | ,, |
| | | 5 | ,, திருச்சண்பை விருத்தம் | 35 | சம்பந்தர் | 11 | 44 | ,, |
| | | 6 | ,, திருமும்மணிக்கோவை | 36 | சம்பந்தர் | 30 | 242 | ,, |
| | | 7 | ,, திருஉலா மாலை | 37 | சம்பந்தர் | 1 | 286 | ,, |
| | | 8 | ,, திருக்கலம்பகம் | 38 | சம்பந்தர் | 49 | 383 | ,, |
| | | 9 | ,, திருத்தொகை | 39 | சம்பந்தர் | 1 | 65 | ,, |
| | | 10 | திருநாவுக்கரசு தேவர் திரு ஏகாதசமாலை | 40 | அப்பர் | 11 | 96 | ,, |
| | | | | | | 1400 | 8452 | |

அத்தியாயம் 8

# சைவ இலக்கியம்-2

## முன்னுரை

முந்திய அத்தியாயத்தில் பதினேராந் திருமுறை ஆசிரியருள், சங்கப்புலவர் பெயராலேயே வழங்கப் பெற்ற நக்கீரர், கபிலர், பரணர், கல்லாடர் என்ற நால்வர் வரலாறுகளையும் அவர்கள் செய்த நூல்களையும் ஆராய்ந்தோம். அதே திருமுறை நூலாசிரியர்களுள், பத்தாம் நூற்றாண்டுக் காலத்துக்குரிய மற்றோர் ஆசிரியர் பட்டினத்தார், இவர் வரலாறு வேறு வகையில் மிகவும் நன்கு தெரிந்த தொன்றாகலின். இதை அங்கு ஆராயாமல் தனியே எடுத்து இங்குப் பேசுகிறோம்.

## பட்டினத்தடிகள்

பதினொராந் திருமுறையில் இவ்வாசிரியருக்கு வழங்குவது இந்தப் பெயராகும், எனினும், இவர், பட்டினத்தார், பட்டினத்தடிகள், திருவெண்காட்டடிகள், பட்டினத்துப் பிள்ளை என்பன போன்ற பல்வேறு தொடர்களாலும் வழங்கப் பெறுகின்றார். துறவு பூண்டிருந்தமையால் அல்லது அனைத்தையும் விட்டு மெய்யான உள்ளத் துறவு பூண்டிருந்தமையால் அடிகள்; ஒரு பாடலில் தம்மைத் திருவெண்காடன் என்று குறித்துள்ளமையால் திருவெண் காட்டடிகள்; புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினத்தில் பிறந்தமையால் பட்டினத்தார்; அது பெரிய பட்டணமாதலால் இவர் பட்டணத்தார் எனவும் சொல்வது உண்டு. பட்டினத்துப் பிள்ளையார் என்பது வழங்கும் வழக்கேயன்றி

இதற்கு எந்த ஆதாரமும் இல்லை. இங்கு இவர் பெயரைப் பட்டினத்தார், பட்டினத்தடிகள் என்றே நாம் கூறுவோம்.

சென்ற தலைமுறை வரையில் தமிழ் நாட்டில் எந்த மூலை முடுக்கிலும் எத்தகைய நிலையிலுள்ளவருக்கும், பட்டினத்தார் வரலாறும், அவர் பாடல்களில் சிலவும் நன்கு தெரிந்திருந்தன. பட்டினத்தார் பாடல்களாக வழங்கியவை, எளிய நடையில், ஆழமான வாழ்க்கைத் தத்துவக் கருத்துக்களை நெஞ்சில் நேரே தைக்கும் முறையில் சொல்வன ஆதலால், எல்லோருக்கும் அவற்றில் மிக்க ஈடுபாடு இருந்தது. இவ்வளவு உவப்பளிக்கும் பாடல்கள் இலக்கியத் துறையில் பாமர மக்கள் விரும்பியனவாக வேறு இல்லை. நீண்டகால ஈடுபாடு காரணமாக, பாடல் பாடிய பட்டினத்தார் வரலாற்றில் பலவகைக் கதைகளும் புனைந்து சேர்க்கப் பட்டன. அக்கதைகளுள் உண்மையான பழைய வரலாறு எது, புதியதாய்ப் புனைந்தவை எவை என்று காண முடியாதபடி ஒன்ருய்ப் பிணைந்துவிட்டன.

பதினொராந் திருமுறையை முதன் முதலில் கண்டு தொகுத்து அச்சிட்டவர், பட்டினத்தார் பிரபந்தங்கள் என ஐந்து பிரபந்தங்களைச் சேர்த்தார்; அவை கோயில் நான்மணி மாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருஏகம்பமுடையார் திருஅந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபது என்பன. (ஒன்பதாம் திருமுறைப் பாடல்கள் இன்னவை என்று தனிப்பாடல்கள் குறிப்பிடுவது போல, பதினொராந்திருமுறைப் பிரபந்தங்கள் இன்னவை என்று காட்டும் வரலாறுகளோ பாடல்களோ இல்லை.) இவையன்றி வேறு பாடல்களும் பிரபந்தங்களும் பட்டினத்தார் என்ற பெயராலேயே நெடுங்காலமாய் வழங்கி வருகின்றன. இவையும் சிறந்த இலக்கியச் சுவையும், பக்தியும், வாழ்க்கை அனுபவ வெளிப்பாடும் நிரம்பியுள்ளன. இப்பாடல்கள் பட்டினத்தார் பாடல் திரட்டு என்ற பெயரால்

பலரால் உரையோடும் அச்சிடப்பட்டு வருகின்றன. இந்நூலின் முகப்பில் எப்போதும் பட்டினத்தார் சரித்திரமொன்று விரிவாக எழுதப்பட்டிருக்கும், அன்றியும் இப் பாடல் திரட்டு, பதினெண்சித்தர் ஞானக்கோவை என்ற 19ஆம் நூற்றாண்டுத் தொகுப்பு நூலில், இரண்டாவது பிரபந்தமாக, சிவ வாக்கியர் பாடலையடுத்து அச்சிடப்பட்டு வருவதையும் காணலாம். இவ்விருவகை நூல்களும் அல்லாமல், பட்டினத்தார் ஞானம் என்ற பெயருடைய சில பாடல்களும் வேறு சிலவும் இவர் பெயராலேயே அச்சித்தர் கோவையுள் சேர்க்கப் பெற்றுள்ளன. மேலெழுந்த வாரியாக இவற்றைப் பார்த்தாலுங்கூட, இவையாவும் ஓரே ஆசிரியர் பாடியனவல்ல, வெவ்வேறு காலத்திலிருந்த பல ஆசிரியர் இவற்றைப் பாடினார்கள் என்பது நன்கு புலப்படும். எமது 14ஆம் நூற்றாண்டுத் தமிழிலக்கிய வரலாற்று நூலில், பட்டினத்தார் பாடல் திரட்டு என்ற பாடல்களைப் பாடிய ஆசிரியர் சித்தர் வரிசைக்குரியவர் என்று சம்பிரதாயப்படி கொண்டு, அவர் நூல்களை மட்டும் அங்கு ஆராய்ந்திருக்கிறோம். அதையொட்டி, இப்பாடல்களைப் பாடிய ஆசிரியர் மூவர் என்று யாம் கருதி, பின்வருவது போல அவர்கள் நூல்களைப் பாகுபாடு செய்கிறோம்.

## பட்டினத்தார் மூவர்

| எண் | ஆசிரியர் | நூல்கள் | காலம | பாடல் |
|---|---|---|---|---|
| 1 | திருமுறைப் பட்டினத்தார் | பதினொராந் திருமுறையில் கண்ட பிரபந்தங்கள் ஐந்து | 10ஆம் நூற்றுண்டின் தொடக்கம் | 196 |
| 2 | சித்தர் பட்டினத்தார் | பாடல் திரட்டில் கண்ட அகவல் 4, திருவேகம்ப மாலை, தலப்பாடல்கள், தனிப் பாடல்கள், உடற் கூற்று வண்ணம். | 14ஆம் நூற்றுண்டின் இறுதி | 195 |
| 3 | பிற்காலப் (போலிப்) பட்டினத்தார் | முறையீடு, புலம்பல், இரங்கல், பட்டினத்தார் ஞானம் | 17ஆம் நூற்றுண்டு | 246 |

இம்மூவருள் எல்லோரும் அறிந்த பட்டினத்தார் இரண்டாம்பட்டினத்தார். பொதுவாகக் காவிரிப்பூம்பட்டினம் தொடங்கித் திருவொற்றியூரில் சென்று முடிவது முழுவதும் அவருடைய வரலாறே. மூன்றாவது பட்டினத்தார் பாடல்கள் ஞானக்கோவையுள் சேர்ந்துள்ளனவேயன்றி, அவை எந்த அளவும் மக்களிடை வழங்கவில்லை. முதல் பட்டினத்தார் பாடல்கள் இலக்கியம் கற்ற சைவ மக்களிடையே நன்கு பயின்று வருவன. நூல்களுக்கிடையேயுள்ள வேறுபாடுகள் இப்படி யிருந்தாலும், ஆசிரியர் வரலாற்றைப் பொறுத்த வரையில் வழங்கிவருவது ஒரே வரலாறுதான்; அதுவும் சித்தர் பட்டினத்தாருக்கே பொருந்தக் கூடியது. நாம் இந்த அத்தியாயத்துள் ஆராயப் போவது முதல் பட்டினத்தார் வரலாறேயாகும். எனினும், அவருடைய வரலாற்றை நன்குணர்வதற்கு உதவியாயிருக்கும் பொருட்டு, வழங்கி வரும் வரலாற்றைச் சுருக்கிக் கூறுகிறோம்.

சோழநாட்டுப் புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினத்தில் திருவெண்காடர் என்பவர் பெரு வணிகர் மரபில் பிறந்து குபேரச் செல்வம் படைத்துப் பட்டினத்துப் பிள்ளை என்று பெயர் பெற்றிருந்தார். மணமாகி நெடுங்காலம் இல்லற வாழ்க்கை நடத்தி வந்தும், புத்திரப் பேறின்றிக் கவலை யுற்றிருந்தார். திருவிடைமருதூர்ப் பெருமானுன மருதவாணர் ஒரு குழந்தை வடிவெடுத்து, ஒரு வில்வ மரத்தடியில் இருக்க, மிக்க வறியவராயிருந்த ஓர் அந்தணரும் அவர் மனைவியும் இப்பிள்ளையைக் கண்டு எடுத்துச் சில நாள் சென்று, பட்டினத்தாரிடம் பொருளுக்காகக் கொடுத்துச் சென்றனர். இவர் இப்பிள்ளையை மருதவாணன் என்றே பெயரிட்டு மிக்க சிறப்போடு வளர்த்து வந்தார். பிள்ளைக்குப் பதினாறு வயது நிரம்பியது. ஒருநாள் இப்பிள்ளை 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்ற சொற்களை எழுதிய ஓர் ஓலை நறுக்கையும் காதற்ற ஊசியையும் ஒரு பெட்டியில்

வைத்துத் தந்தையாரிடம் தரும்படி தாயாரிடம் கொடுத்து மறைந்து விட்டார். பட்டினத்தார் இதை வந்து பார்த்த போது, இதுவே அவருக்கு குருவின் உபதேசம் போலாயிற்று. உடனே அவர் உண்மை ஞானம் தம்மிடம் விளங்கப்பெற்று, புதல்வராய்த் தம்மிடம் இருந்தவர் மருதப்பிரானே என்று உணர்ந்து, தம் அமைச்சராயிருந்த நாங்கூர்ச் சேந்தரை யழைத்துப் பொருள் அனைத்தையும் ஏழைகளுக்குக் கொடுத்து விடும்படி உத்தரவிட்டு, வீட்டை விட்டு வெளியேறி, துறவியாகிப் பிச்சை ஏற்றுக் காலம் கழிக்க லானுர். அந்த நிலையில் அவர் பல சோதனைகளுக்கு உள்ளானுர். பொருளை வினியோகம் செய்த சேந்தருக்கு அரசனுல் துன்பம் நேர்ந்தபோது திருவருள் துணைகொண்டு சேந்தரைக் காத்தார். ‘என் செயலாலாவது இனியா தொன்றும் இல்லை, இனித் தெய்வமே, உன் செயலே என்று உணரப் பெற்றேன்’ என்ற உணர்வோடு, இருவினையொப்பு நிகழ்ந்து, மல பரிபாகமும் கைகூடி, உடல் நீங்கும் காலத்தை எதிர்நோக்கியிருந்தார். தம் தாய் இறந்தபோது உடலை அடுக்கி ஞானக்கினியால் எரியச் செய்து கடன்களை முடித் தார். துளுவ நாட்டு மன்னனை ஆட்கொண்டபோது, அவன் பத்திரகிரி என்ற பெயரில் சீடனுய்த் துறவியாகி, திருவிடைமருதூரில் முத்தி பெற்றுன். இவர் பின் நாட்டில் பல இடங்களும் சுற்றித் திரிந்து முடிவில் திருவொற்றியூர் அடைந்து, அங்கு குழந்தைகளோடு குழந்தையாக விளையாடி யிருந்து, ஒருநாள், உடல் விடும் காலம் வரவே, சிவசாயுச்சிப் பேறடைந்தார்.

இதுவே சம்பிரதாயமாய் வழங்கி வருகின்ற பட்டினத் தார் வரலாறு. இதைப் புராணமாகவும் சரித்திரமாகவும் சென்ற நூற்றுண்டிலேயே பலர் எழுதியிருக்கிறுர்கள். ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிகிறது. இவ் வரலாற்றில் பட்டினத்தார் என்ற பெயரோடு வாழ்ந்த பல ஆசிரியர்களின்

*செய்திகள் மெய்யாகவும் புனைவாகவும் ஒன்றுய்ப் புனையப் பட்டுள்ளன. பெரும் பகுதி சித்தரான பட்டினத்தாருக் குரியன என்று குறிப்பிட்டோம். எப்பகுதிகள் முதல் பட்டினத்தாருக்குரியன என்று விளங்கவில்லை. தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரே பெயருடைய ஆசிரியர் பலர் நெடுகிலும் இருந்து வரக் காண்கிறோம். நக்கீர், கபிலர், கல்லாடர், அவ்வை, பேராசிரியர் போன்ற பண்டையாசிரியர் பெயர்களை எடுத்துக் காட்டாகச் சொல்லலாம். இந்த வரிசையில் பட்டினத்தார் பெயரும் சொல்லத்தக்கது. எனவே, இப்போது நாம் கருதுகின்ற திருமுறைப் பட்டினத்தாரைப் பொறுத்தவரையில், இக்கதைகளையெல்லாம் ஒதுக்கிவிட்டு, திருமுறைப் பிரபந்தங்களில் காணும் குறிப்புக்களை மட்டும் கொண்டு திருமுறைப் பட்டினத்தார் வரலாற்றைச் சற்றே அறிய முயல்வோம்.*

**ஆசிரியர்**

*இவரது இயற்பெயர் திருவெண்காடர் என்பதொன்று மட்டும் திட்டமாய்த் தெரிகிறது:*

**வரத்தினை ஈயும் மருதஅப் பா, மதி ஒன்றும் இல்லேன்,**
**சிரத்தினு மாய்என்றன் சிந்தையு ளாகிவெண் காடனென்னும்**
**தரத்தினு மாயது நின்னடியாம் தெய்வத் தாமரையே**

*என்ற திருவிடைமருதூர் மும்மணிக்கோவை இறுதிப் பாடல் தெரிவிப்பது, இவருடைய பெயரே என்று கருதலாம். இவர் திருவெண்காட்டில் வாழ்ந்தவர் போலும். இவ்வூர் காவிரிப் பூம்பட்டினத்துக்கு அயல்; ஆதலினால் அவ்வூர்ப் பட்டினத் தாரையும் இவரையும் ஒருவரே எனக் கருதிக் கதைகள் எழுவது எளிதாயிற்று. இவர் பாடலில் எங்குமே புகார் நகரம் பற்றிய குறிப்பு இல்லை. ('காதற்ற ஊசியைத் தந்து விட்டானென்றன் கைதனிலே' என்றும், பின் இருமுறை*

*'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்றும் இரண்டாம் பட்டினத்தார் குறிப்பிடுகிருர்.) இவர் மிக்க செல்வராய், உலக வாழ்வின் சிறப்பான போகங்கள் அனைத்திலும் நன்கு தோய்ந்து வாழ்ந்தவர். இதை இவருடைய சொற்களாலேயே நன்கறிகிறோம். "உலகத்து மாந்தர் பலர் அம்மையில் முத்தி பெறுவதற்காகத் தம்மைத் தாமே சாலவும் ஒறுத்திருக்கிருர்கள்.*

மலர்தலை உலகத்துப் பலபல மாக்கள்,
மக்களை மனைவியை ஒக்கலை ஒரீஇ,
மனையும் பிறவும் துறந்து, நினைவரும்
காடும் மலையும் புக்கு, கோடையில்
கைம்மேல் நிமிர்த்து, காலொன்று முடக்கி,
ஐவகை நெருப்பின் அழுவத்து நின்று,
மாரி நாளிலும் வார்பனி நாளிலும்
நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும்,
சடையைப் புனைந்தும் தலையைப் பறித்தும்,
உடையைத் துறந்தும் உண்ணு துழன்றும்,
காயும் கிழங்கும் காற்றுதிர் சருகும்
வாயுவும் நீரும் வந்தன அருந்தியும்,
களரிலும் கல்லிலும் கண்படை கொண்டும்,
தளர்வுறும் யாக்கையைத் தளர்வித்து, ஆங்கவர்
அம்மை முத்தி அடைவதற் காகத்
தம்மைத் தாமே சாலவும் ஒறுப்பர்;

*நாங்களும் முத்தியடைய விரும்பியும்கூட, எங்கள் உடலை இவ்வளவு துன்பத்துக்குள்ளாக்கவில்லை; உலக இன்பங்களனைத்தையும், ஐம்புலன்களும் ஆர அனுபவிக்கிறோம்':*

ஈங்கிவை செய்யாது, யாங்கள் எல்லாம்,
பழுதின் றுயர்ந்த எழுநிலை மாடத்தும்,
செந்தா துதிர்ந்த நந்தன வனத்தும்,
தென்றல் இயங்கும் முன்றில் அகத்தும்,
தண்டாச் சித்திர மண்டப மருங்கினும்,

பூவிரி தரங்க வாவிக் கரையிலும்,
மயிற்பெடை ஆலக் குயிற்றிய குன்றிலும்,
வேண்டுழி வேண்டுழி ஆண்டாண் டிட்ட
மருப்பின் இயன்ற வாளரி சுமந்த
விருப்புறு கட்டில் மீமிசைப் படுத்த
ஐவகை அமளி அணைமேல் பொங்கத்
தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்
பட்டினுள் பெய்த பதநுண் பஞ்சின்
நெட்டணை யருகாக் கொட்டைகள் பரப்பிப்
பாயல் மீமிசைப் பரிபுரம் மிழற்றச்
சாயல்அன் னத்தின் தளர்நடை பயிற்றிப்
பொற்றூ ரணத்தைச் சுற்றிய துகிலென
அம்மென் குறங்கின் நொம்மென் கலிங்கம்
கண்ணும் மனமும் கவற்றப் பண்வர,
இரங்குமணி மேகலை மருங்கிற் கிடப்ப,
ஆடர வல்குல் அரும்பெறல் நுசுப்பு
வாட வீங்கிய வனமுலை கதிர்ப்ப,
அணியியல் கமுகை அலங்கரித் ததுபோல்
மணியியல் ஆரம் கதிர்விரித் தொளிர்தர,
மணிவளை தாங்கும் அணிகெழு மென்தோள்
வரித்த சாந்தின் மிசைவிரித்து மீதிட்ட
உத்த ரியப்பட் டொருபால் ஒளிர்தர,
வள்ளை வாட்டிய ஒள்ளிரு காதொடு
பவளத் தருகாத் தவளம் நிரைத்தாங்கு,
ஒழுகி நீண்ட குமிழொன்று பதித்துக்
காலன் வேலும் காம பாணமும்
ஆல காலமும் அனைத்துமிட் டமைத்த
இரண்டு நாட்டமும் புரண்டுகடை மிளிர்தர,
மதியென மாசறு வதனம் விளங்க,
புதுவிரை அலங்கல் குழல்மிசைப் பொலியும்
அஞ்சொல் மடந்தையர் ஆகந் தோய்ந்தும்;
சின்னம் பரப்பிய பொன்னின் கலத்தில்
அறுசுவை அடிசில் வறிதினி தருந்தாது

ஆடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்,
பூசுவன பூசியும், புனைவன புனைந்தும்,
தூசின் நல்லன தொடையிற் சேர்த்தியும்,
ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்தும்,
மைந்தரும் ஒக்கலும் மகிழ மனமகிழ்ந்து
இவ்வகை இருந்தோம்.

*இவ்வாறு அவர் தாம் வாழ்கின்ற சுக போக வாழ்க்கையைக் குறிப்பிடுகின்றார். உண்மையிலேயே அவர் அப்படி வாழவில்லை, தம் கருத்தை விளக்குவதற்காக எடுத்துக்காட்டிய ஓர் கற்பனையான ஆடம்பர வாழ்க்கை என்றும் சிலர் சொல்வர். இது பொருந்தாது. இங்கு அவர் சுகபோக வாழ்க்கையின் தன்மைகளை விளக்கமாகச் சொல்வது, உண்மையாக இருந்தால்தான் சாத்தியமே யன்றி, கற்பனையாக இருந்தால் இவ்வளவு விரிவுகள் தோன்றமாட்டா. அல்லாமலும் அப்படிப்பட்ட ஒரு நிலையில் கருவி கரணங்கள் தோய்ந்திருந்தாலும், சிந்தை சிவனடி வழியே சென்று கொண்டிருந்தது என்று அவர் கூறுவது, உண்மையோடு பட்டதேயன்றிக் கற்பனையாகச் சொன்ன புனைந்துரை அன்று. இகவாழ்க்கையில் இவர் இல்லறத் தாரேயன்றி, இரண்டாம் பட்டினத்தார் போல, துறவியல்லர்:*

ஆயினும் அவ்வகை,
மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழிச் செலுத்தலின், அந்த
முத்தியும் இழந்திலம், முதல்வ, அத்திறம்
நின்னது பெருமை அன்றே?

*'தம்மைத் தாமே சாலவும் ஒறுத்தவர்கள் எந்த முத்தியைப் பெற்றார்களோ அந்த முத்தி எங்களுக்கும் இல்லாமல் போகாது. ஏனெனில், உடற் கரணங்கள் எவ்வாறு தொழிற்பட்ட போதிலும் கூட, உள்ளமானது*

எப்போதும் உனது திருவடியிலேயே தோய்ந்திருக்கிறது' என்று கூறுகிறார். இதற்கு ஓர் உதாரணமும் காட்டுகிறார். இருவர் ஆகாயத்தை நோக்கிக் கல் விட்டு எறிகிறார்கள். ஒருவன் வலிவு மிக்கவன், முயன்று வேகமாக எறிகிறான். மற்றவன் வலிமை இல்லாதவன், முயற்சியின்றி மெல்ல எறிகிறான். எப்படி எறிந்தாலும் இரண்டு கற்களும் மீண்டும் நிலத்தில் வந்து விழத் தவற மாட்டா. அதுபோல, தம்மை ஒறுத்தவர்களும், புலன்களால் இன்பம் துய்த்தவர்களும், இறைவனுடைய திருவைந்தெழுத்தைச் சொல்லிய காரணத்தால், முத்திப் பேறு பெறுவது உறுதி என்கிறார் :

**என்னெனின்,**
**வல்லான் ஒருவன் கைம்முயன்று எறியினும்,**
**மாட்டா ஒருவன் வாளா எறியினும்**
**நிலத்தின் வழாஅக் கல்லே போல,**
**நலத்தின் வழார், நின் நாமம்நவின் றோரே.**

இதை யொத்த செல்வப் பெருக்கினால் விளைந்த கருத்தமைதிகளை இவர் பாடல்கள் பிறவற்றிலும் பெருகக் காணலாம். இதனால் இவருடைய செல்வ நிலை உணரக் கிடக்கிறது என்று சொல்வது பிழையாகாது. 'மைந்தரும் ஒக்கலும் மனமகிழ்ந்து இருந்தோம்' என்றமையால், மனைவி மக்களோடு கூடிய நல்ல இல்லற வாழ்க்கையுடையவரா யிருந்தார் என்பது தெளிவு.

இவர் நாள் தவறாது சிவபூசை செய்யும் நியமம் உடையவர். பூசையை மிகப் பலவான இடங்களில் குறிப்பிடுகின்றார். பூசைக்குச் சிறப்பான மலர்கள் வேண்டும் என்பது இல்லை; நொச்சியாயினும் கரந்தையாயினும் போதும்; அவையும் கிடைக்காவிட்டால் வெறும் பச்சிலை கொண்டு துதித்தாலும் முத்தி கொடுப்பான். "பத்தியடியவர் பச்சிலை யிடினும் முத்தி கொடுத்து முன் நின்று அருளும்."

இவர் விதிப்படி ஆன்மார்த்த சிவபூசை செய்துவந்தார் என்று தெரிகிறது. மருதவாணனைப் பணிந்து வரம் பல பெற்றவர்கள் என்று எல்லாத் தெய்வங்களையுமே இவர் முறையாகச் சொல்லி வருகின்றார்: உமையாள் நங்கை, விநாயகர், குமரவேள், நெடுமால், நான்முகத் தொருவன், துர்க்கை, நாவின் கிழத்தி, பூவின் மடந்தை, உருத்திரர், இந்திரன், அயிராவதம், அருக்கர், சந்திரன், தீக்கடவுள், நிருதி, இயமன், சுருதிகள் நான்கு, வருணன், வாயு, குபேரன்; பின்னர் அட்டநாகம், அட்ட வசுக்கள், மூன்று கோடி முனிவர், வசிட்டன், கபிலன், அகத்தியன், தும்புரு, நாரதர். இங்கு விநாயகர் முதல் குபேரன்வரை உள்ள தெய்வங்கள் யாவும், ஓரளவிற்கு சிவபூசையில் ஆவரணங்களில் வைத்துப் பூசிக்கப்பெறும் பரிவார தேவதைகள் ஆவார். இவ்வாறு இத்தெய்வங்களைக் குறிப்பிடுகின்ற இவர், ஆகமங்கள் பெரிதும் ஆட்சியிலிருந்த சோழர் காலமாகிய பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்து சிவபூசை செய்யும் நியமமுடையவராயிருந்தார் என்பது பிழையாகாது.

சிவவாக்கிய தேவர் என்பவருடைய துறவைப் பெரிதும் போற்றிச் சொல்லுகிறார். சொல்லுமிடம் மாணிக்கவாசகரை அடுத்து, வரகுணனுக்கு முந்தியாதலால், இச்சிவவாக்கிய தேவர் ஒன்பதாம் நூற்றாண்டு என்று கருத இடமுண்டு. சிவவாக்கியர் பாடல் என்று பாடல் பாடிய சித்தர் 14ஆம் நூற்றாண்டினர் என்று கருதுகின்றோம்.[1] இவர் அவரினும் வேறானவர். ஆகவே, இவர் வரகுணன் போலச் சிவபக்திச் செல்வராய்ப் பிரசித்தமாய் வாழ்ந்த ஒரு பெரியார் என்று கருதத்தகும்; வேறு இவர் வரலாறு விளங்கவில்லை.

---

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டு பார்க்க.

இவர் இலக்கிய ஆராய்ச்சி மிக்கவர். கல்வி கேள்வி நிரம்பியவர். தமக்குமுன் தோன்றியிருந்த அம்மையார் பாசுரங்கள் தேவார திருவாசகங்கள் திருக்கோவையார் என்பவற்றை நன்கு பயின்றவர்; நால்வரையும் நன்கு போற்றுபவர். சண்டேசர் சிறுத்தொண்டர் செயல்களைக் குறிப்பிடுகின்ருர். விளக்கைத் தூண்டி எரியவிட்ட எலியை மகாபலிச் சக்கரவர்த்தியாகப் பிறப்பித்த வரலாற்றைப் போற்றிக் கூறுகிருர். திருவிடைமருதூரில் நீண்டகாலம் தங்கியிருந்தார். அப்போது அங்கு இரண்டாம் வரகுணபாண்டியர் பலமுறை ஏகநாயகரைத் தரிசிக்க வந்தார். பக்தி மேலீட்டிஞல் இவ்வரசர் செயற்கரிய தொண்டுகள் பல செய்தார். அவற்றைப் பட்டினத்தார் உடனிருந்து கண்டு, பின்னர் தாம் பாடிய அவ்வூர்ப் பிரபந்தத்தில் விரிவாகக் குறிப்பிட்டுப் பாடிஞர்.

தில்லைக் கூத்தப் பெருமானைச் சென்று வணங்கி நான்மணிமாலை பாடிஞர். சம்பந்தர் அவதாரத் தலமாகிய சீகாழியடைந்து வழிபட்டு, திருக் கழுமல மும்மணிக் கோவை பாடிஞர். பிறகு பல தலங்களும் தரிசித்தார் போலும். காஞ்சியடைந்து ஏகாம்பரநாதனை வழிபட்ட போது, மிகப் பலவான தலங்களைக் குறிப்பிட்டு, திரு ஏகம்பர் திருவந்தாதி பாடிஞர். திருவொற்றியூர் அடைந்து, அங்கு சிவபெருமான் மீது ஒற்றியூர் ஒருபா ஒருபஃது பாடியிருந்து, உரிய காலத்தில் முத்திப் பேறடைந்தார்.

## நூல்கள்

இவர் வரலாற்றில் நாம் இவர் பாடல்களைக் கொண்டு அறியக்கூடிய செய்திகள் இவ்வளவே. பாடல்களின் பொருட் போக்கிலிருந்து, முதலில் பாடிய பிரபந்தம் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை என்றும்; இறுதியில் பாடிய பிரபந்தம் திருவொற்றியூர் ஒருபா ஒருபது என்றும்

கருத முடியும். இவர் பாடிய ஐந்து பிரபந்தங்களிலும் அடங்கிய பாடல்கள் 192. இப்பாடல்கள் பொருட்பொலிவை ஆழ்ந்து ஆராயும் போது, இலக்கியச் சுவையிலும் பக்திப் பெருக்கிலும் சமய நுணுக்கத்திலும் இவருக்கு இணையாகப் பிறர் ஒருவரையும் சொல்லத் தோன்றவில்லை. பொதுவான சில கருத்துக்களைச் சொல்லி, பிறகு ஒவ்வொரு தனி நூலாக எடுத்து ஆராய்வோம்.

நீண்ட பாடல்களில் இவருக்கு விருப்பம் அதிகம். இத் திருமுறையில் பிறர் பாடியுள்ள ஆசிரியப்பாக்களையும் இவர் பாடியுள்ளவற்றையும் ஒப்புநோக்கினால் இது நன்கு விளங்கும். சேரமான் திருவாரூர் மும்மணிக் கோவையில் பாடியுள்ள ஆசிரியப் பாக்களில் அதிகம் 18 வரி; நக்கீர தேவர், இளம் பெருமானடிகள், அதிராவடிகள் ஆகியோர் பாடியவற்றில் 10, 8, 7 வரிகள்; ஆனால் பட்டினத்தாரோ 81 அடி வரை பாடியிருக்கிறார். தனிப் பாடலாக நீண்ட ஆசிரியப்பா பாடுவது உண்டு; ஆனால் மற்றொரு பிரபந்தத்தின் உறுப்பாக வரும் ஆசிரியப்பா அடிகளைப் பெருக்கிப் பாடுவது இவரது தனிச் சிறப்பு. அப்படியே நான்மணிமாலையில் இவர் பாடியுள்ள விருத்தங்களுள் பல, நீண்ட சந்த விருத்தங்கள்.

ஒரு பொருளை எடுத்து இவர் பாடும்போது, கருத்துக்கள் தொடர்பாய் அடுக்கடுக்காக வளர்ந்துகொண்டு போவதைக் காண்கிறோம். அவ்வளர்ச்சிக்கு உபகாரமாகச் சொற்கள் — தமிழும் வடமொழியும் — உடன் நின்று ஏவல் செய்கின்றன. எதுகைமோனையும் உரிய இடங்களில் நின்று ஒலிக்கின்றன. இத்தன்மைகளால் இவர் பாடலைப் படிக்கும்போது தனியான ஒரு சுவை எழுகின்றது. மொழி வளத்தின் முழு மலர்ச்சியையும் இவரிடத்தில் காண்கின்றோம். முயன்று செய்யாமல் இயல்பாக இவர் அமைக்கின்ற அமைப்பிலேயே பாட்டின்

பொருளாய் உள்ள உணர்ச்சி வேகம் பொருந்திய பாவம் முழுமையும் தானே வெளிப்படுகின்றது. ஒரு சிறு பாடலை உதாரணமாகக் காட்டலாம்.

**ஆனேறே போந்தால் அழிவுண்டே, அன்புடைய**
**நானேதான் வாழ்ந்திடினும் நன்றன்றே, - வானோங்கு**
**வாமாண் பொழில்தில்லை மன்றைப் பொலிவித்த**
**கோமானை இத்தெருவே கொண்டு ?**

இப்பாட்டின் கருத்து, தில்லை நடராசப்பெருமான் உலா வரும்போது பெருமான்மீது காதல்கொண்ட ஒரு பெண், அவரைச் சுமந்துவருகின்ற இடபத்தை நோக்கி, தானிருக்கும் வாசல்வழியாக அவரை அழைத்து வரும்படி வேண்டுவதாக உள்ளது. பாட்டினுடைய உணர்ச்சி பாவம், நைந்துபோன தலைவியின் உள்ளத்தில் தோன்றுகின்ற வரம்பு கடந்த சோகம். அது, காண்போராகிய நம் உள்ளத்திலும் கழி பேரிரக்கத்தைத் தோற்றுவிக்கிறது. அந்த இரக்கம் பாடலில் வருகின்ற ஏகாரங்களால் பிறந்து நிரம்புகின்றது. ஆனேறே என்று இயல்பாக விளிக்கின்ற விளியும், அதை அடுத்து வருகின்ற அழிவுண்டே, நானேதான், நன்றன்றே என்பவற்றோடு, இத்தெருவே என்பதும் சேர்ந்து இத்தனை ஏகாரங்களும், தலைவி உள்ளத்தில் உள்ள வேட்கையையும் நம்மிடத்தில் தோன்றுகின்ற இரக்க உணர்வையும் பளிங்கில் வைத்துக் காட்டுவதுபோல் காட்டுகின்றன. பாட்டின் பொருளில் பெருஞ் சிறப்பு எதுவுமில்லை. 'எம் சாலேகம் சார நட' என்று முத்தொள்ளாயிரத்தில் இதுபோலும் பாடல்கள் வருகின்றன. இங்கு அதே பொருளை இவர் அமைத்து முடிக்கின்ற ஏகாரம் என்ற ஓர் எழுத்துத் தனியே எடுத்து நிறுத்திக் காட்டுவது, இவருக்கு மொழி ஏவல் கேட்பதை உணர்த்தவல்ல ஓர் எடுத்துக்காட்டு. சிவ பெருமானை முன்னிலைப்படுத்தி இவர் கூறும்போது அடுக் கடுக்காகத் தொடர்களைப் பெய்வதில் விருப்பம் அதிகம்.

புகலி நாயக, இகல்விடைப் பாக,
அமைநாண் மென்தோள் உமையாள் கொழுந,
குன்று குனிவித்து வன்தோள் அவுணர்
மூவெயில் எரித்த சேவகத் தேவ,
இளநிலா முகிழ்க்கும் வளர்சடைக் கடவுள், நின்
நெற்றியில் சிறந்த ஒற்றை நாட்டத்துக்
காமனை விழித்த மாமுது தலைவ,
வானவர் அறியா ஆதி யானே

*என்பது கழுமலப் பாடல்;*

புண்ணிய, புராதன, புதுப்பூங் கொன்றைக்
கண்ணி வேய்ந்த கைலை நாயக,
காள கண்ட, கந்தனைப் பயந்த
வாளரி நெடுங்கண் மலையாள் கொழுந,
பூத நாத, பொருவிடைப் பாக,
வேத கீத, விண்ணோர் தலைவ,
முத்தி நாயக, மூவா முதல்வ!

*என்பது திருவிடைமருதூர்ப் பாடல்; அப்படியே இந் நூலின் 25ஆம் பாடலிலும் 'சுடர் விடு சூலப் படையினை' என்று தொடங்கி, 'அழல் விழிக் குறளினை' என்பது வரையில் 18 அடிகளில் சிவபெருமானை விளித்துக் கொண்டே போகிறார். ஒருபா ஒருபதில் பாடல் தோறும் இத் தன்மையைக் காணலாம். ஆசிரியப்பாவில் அடுக்கிச் சொல்வது எளிது; ஆனால் கட்டளைக் கலித்துறையிலும் இவ்வாறு இதை அடுக்கிக்கொண்டு போவதை ஏகம்ப முடையார் அந்தாதியில் காணலாம். இப்படி சொல்லிச் சொல்லி, சொல்லமுடியாது அயர்ந்து போகும் தன்மையை 'ஆயிரம் ஆயிரம்' என்று கூறுகின்ற ஒரு பாடலால் நன்கு உணர்த்துகின்றார்:*

அடியா யிரம், தொழில்ஆயின ஆயிரம், ஆயிரம்பேர்
முடியாயிரம், கண்கள் மூவாயிரம், முற்றும் நீறணிந்த

தொடிஆயிரங் கொண்ட தோள்இரண் டாயிரம்
என்று,நெஞ்சே !
படியாய் இராப்பகல், தென்மரு தாளியைப்
பற்றிக்கொண்டே.

இவருக்கு மிகவும் விருப்பமான ஒரு தொடர் 'மீமிசை' என்பது. எண்ணற்ற தடவைகள் இச்சொல்லைக் கூறுகிருர். கழுமல மும்மணிக்கோவை முதற் பாடலிலேயே மூன்று முறை இது வருகிறது.[1] (சித்தரான பட்டினத்தார் இத் தொடரை ஒருமுறை கூடச் சொல்லவில்லை. அது கொண்டே அவர் வேறு இவர் வேறு என்று திட்டமாய்ச் சொல்ல முடியும்.)

நயமாகப் பாடுகின்ற இவர் பல பழமொழிகளைக் குறிப் பிடுதல் இயல்பு. தாமே தளர்பவரைப் பாரம் ஏற்றுதல் தக்கதன்று. கற்புணையாகக் கடல் நீந்தினர் பிறர் உளரோ? உழப்பின் வாரா உறுதிகள் உளவோ? காலால் இட்ட வேலையைத் தலையால் செய்த என்ற பழஞ்சொல்லை இவர் பலமுறை சொல்லுகிருர்: 'தாளின் ஏவல் தலையின் இயற்றி' (கோயில் 24), 'கால்தலை ஏவல் என் நாய்த்தலை ஏற்று' (திருவிடை. 7).

வடமொழித் தொடர்களும் சொற்களும் இவருக்கு நன்கு ஏவல் செய்கின்றன. சிறைக் கருப்பாசயம், ஆரணம் தொடராப் பூரண புராண, ஏகநாயக, யோகநாயக சந்தன, சரள சண்பக வகுள நந்தன வனம், பூதநாத வேதகீத, முத்தி நாயக, திரிபுராந்தக, அகோசரம் என்பன முதலான தொடர் களைக் காண்க.

1 திருவொற்றியூர் ஒருபா ஒருஃபது முதற் பாடல் 5ஆம் அடி 'மின்னின் பிறக்கந் துன்னு நின்சடையே' என்று அச்சில் உள்ளது. 'மின்னியல் மீமிசைப் பிறக்கு நின் சடையே' என்று ஏட்டில் காணப் பட்டது; மீமிசை என்ற தொடரில் ஆசிரியருக்குள்ள விருப்பத்தைப் பார்க்கும்போது, ஏட்டுப் பாடமே சரியரன பாடம் என்று கருதத் தோன்றுகிறது.

*ஏகம்ப முடையார் அந்தாதி 47ஆம் பாட்டில் 'நடனம் பிரான் உகந்து உய்யக் கொண்டான்' என்று கூறுகிறுர். உய்யக் கொண்டார் என்ற தொடர் சிறப்பானது. வைணவத்தில் நாதமுனிகளின் மாணுக்கர் பெயர் உய்யக் கொண்டார் என்பது. இவர் கி.பி. 826–931 வரையில் வாழ்ந்தவர் என்பது வைணவகுருபரம்பரை கூறும் வரலாறு. இப்பெயர் சைவத்தில் நிரம்பப் பயில்கிறது. உய்யக் கொண்டார் வாழ்ந்த திருவரங்கத்துக்கு அருகில் உள்ள ஒரு பாடல் பெற்ற தலம் திருக்கற்குடி; இங்கு 941இல் செம்பியன் மாதேவியார் விளக்கு நிபந்தம் அமைத்தார். இக்கோவிலைக் கற்றளியாக எடுத்து இறைவனை 'உய்யக் கொண்ட நாயனுர்' என்று வழங்கினுர். இத்தலம் இன்று வரை உய்யக்கொண்டான்மலை என்று வழங்குகிறது. உய்யக் கொண்டான் என்பது இராசராசனுக்கு உரிய பெயரும் ஆகும். இச்செய்திகள், பட்டினத்தார் குறிப்பிட்ட தொடர் நன்கு பிரசாரம் எய்தி அதன்பால் மக்களுக்கு ஈடுபாடும் இருந்தது என்பதைத் தெரிவிக்கும். இராசராசன் பிரித்த வளநாடுகளில் ஒன்றின் பெயர் உய்யக்கொண்டார் வளநாடு என்பதும் இங்கு அறியத்தக்கது.*

*இனி பக்தித் துறையில் இவருடைய கருத்துக்களில் சிறப்பானது, இறைவனிடத்து உள்ளன்பே முக்கியம், புறக்கிரியை அத்துணை முக்கியமன்று என்பது.*

நொச்சி யாயினும் கரந்தையாயினும்
பச்சிலை இட்டுப் பரவும் தொண்டர்
கருவிடைப் புகாமற் காத்தருள் செய்யும்
திருவிடை மருத.

பத்தி யடியார் பச்சிலை யிடினும்
முத்தி கொடுக்க முன்னின் றருளும்.

என்னையும் அடிமை யாகக் கொண்டே
இட்டபச் சிலைகொண்டு ஒட்டி அறிவித்து

*என்று திருவிடைமருதூர் மும்மணிக்கோவையிலும், 'போதும் பெருவிடில் பச்சிலை உண்டு, புனல்உண்டு எங்கும், ஏதும் பெருவிடில் நெஞ்சுண்டு அன்றே' என்று திருக்கழுமல மும்மணிக்கோவையிலும் இவர் கூறியிருப்பது சிறப்புடையது. மிகப்பல இடங்களில் சிவபெருமானுடைய நடனத் திருக் கோலத்தில் ஈடுபட்டுப் பாடுகிருர். பின்வருவது பாதாதி கேச வருணனை (கோயில் 20):*

தெய்வ வேதியர் தில்லை மூதூர்
ஆடகப் பொதுவில் நாடகம் நவிற்றும்
கடவுட் கண்ணுதல் நடமுயன் றெடுத்த
பாதப் போதும், பாய்புலிப் பட்டும்,
மீதியாத் தசைத்த வெள்ளெயிற் றரவும்,
சேயுயர் அகலத் தாயிரங் குடுமி
மணிகிடந் திமைக்கும் ஒருபே ராரமும்,
அருள்பொதிந் தலர்ந்த திருவாய் மலரும்,
நெற்றியில் திகழ்ந்த ஒற்றை நாட்டமும்,
கங்கை வழங்கும் திங்கள் வேணியும்,
கண்ணிடைப் பொறித்து மனத்திடை அழுத்தியாங்கு
உள்மகிழ்ந் துரைக்க உறுதவம் செய்தனன்.

*தில்லையை மிகவும் சுவைத்து, தமக்குப் போற்றும் ஆற்றல் இல்லை என்றும் கூறுகிருர் :*

தில்லை மாநகர் போற்றி, தில்லையுட்
செம்பொன் அம்பலம் போற்றி, அம்பலத்து
ஆடும் நாடகம் போற்றி, என்ருங்கு
என்றும் போற்றினும், என்தனக்கு இறைவ!
ஆற்றல் இல்லை; ஆயினும்
போற்றி போற்றிநின் பொலம்பூ அடிக்கே!

*இறைவனை இவர் ஒன்று வேண்டுகின்ருர். 'என்னுடைய மனம் மயங்கி வேறு வழிப் படர்ந்தாலும் உன்னையே நினைக்கும் வரம் நீ அருள்வாயாக' :*

**இனிநனி இரப்பதொன் றுடையம்: மனம்மருண்டு**
**புன்மையின் நினைத்துப் புலன்வழிப் படரினும்,**
**நின்வயின் நினைந்தே மாகுதல், நின்வயின்**
**நினைக்குமா நினைக்கப் பெறுதல், அனைத்தொன்றும்**
**நீயே அருளல் வேண்டும்.**

*சிவ சின்னங்களைச் சிறப்பாகப் போற்றுவது இவருடைய இயல்பு. அஞ்செழுத்தை ஓராமல் இடைமருதர் பொற்பாதம் நண்ணமுடியாது என்று பல இடங்களில் கூறுகிருர். உருத்திர சாதனத்தைச் சிறப்பித்துக் கூறுகிருர். தமது பணியை இவர் தொகுத்துக் கூறுவது சிந்தித்தற்குரியது.*

**மொழிவதுன்**
**ஐந்தெழுத் தவைஎம் சிந்தையிற் கிடத்தி,**
**நனவே போல நாடொறும் பழகிக்**
**கனவிலும் நவிற்றும் காதலேம்; வினைகெடக்**
**கேட்பது நின்பெருங் கீர்த்தி; மீட்பது**
**நின்னெறி அல்லாப் புன்னெறி படர்ந்த**
**மதியில் நெஞ்சத்தை; வரைந்து நிதிஎன**
**அருத்தி செய்திடுவது உருத்திர சாதனம்;**
**காலையும் மாலையும் கால்பெயர்த் திடுவதுன்**
**ஆலயம் வலம்வரு தற்கே; சால்பினில்**
**கைகொடு குயிற்றுவது, ஐய, நின்னது**
**கோயில் பல்பணி குறித்தே; ஓயாது**
**உருகி நின்னினைந்து அருவி சோரக்**
**கண்ணிற் காண்பதுஎவ் வுலகினும் காண்பன**
**எல்லாம்,**
**நீயே யாகி நின்றதோர் நிலையே!**

*அது போல, மூன்று சின்னங்களையும் பின்வரும் ஒரு பாடலில் சுவைபடக் குறிப்பிடுகின்றுர்:*

**காணீர் கதியொன்றும், கல்லீர் எழுத்தஞ்சும், வல்லவண்ணம்**
**பேணீர் திருப்பணி, பேசீர் அவன்புகழ், ஆசைப்பட்டுப்**
**பூணீர் உருத்திர சாதனம், நீறெங்கும் பூசுகிலீர்;**
**வீணீர்! எளிதோ, மருதப் பிரான்கழல் மேவுதற்கே?**

ஆறு சமயங்கள் தமக்குள் எவ்வளவு மாறுபட்ட போதிலும் கூட, யாவும் உள்ளமே கோயிலாக இருக்கின்ற மருதப் பெருமான் ஒருவனையே புகலாகக் கொண்டு முடியும்.

இறைவன் புலன்களைக் கடந்தவன்; ஊன் கண்ணுக்கு ஒளித்த சோதி, செவிக்கு எட்டாத ஓசை, நாவை மறுத்த தேறல், நாசியைக் கடந்த நாற்றம் என்று தமக்கே உரிய அடுக்கு மொழிகளால் கூறுகிறார் :

**உளக்கணுக் கல்லாது ஊன்கணுக் கொளித்துத்**
**துளக்கற நிமிர்ந்த சோதித் தனிச்சுடர்,**
**எற்புத் துளையின் இருசெவிக் கெட்டாது**
**உறுப்பில்நின் றெழுதரும் உள்ளத் தோசை,**
**வைத்த நாவின் வழிமறுத் தகத்தே**
**தித்தித் தூறும் தெய்வத் தேறல்**
**துண்டத் துளையில் பண்டை வழியன்றி**
**அறிவில் நாறும் நறிய நாற்றம்–**
**ஏனைய தன்மையும் எய்தாது, எவற்றையும்**
**தானே ஆகி நின்ற தத்துவ!**

இறைவன் மனத்தை ஒருக்கும் ஒருக்கத்தின் உள்ளே முளைக்கின்ற ஒண்சுடர், அத்தனைக்கும் காரணன், அந்தக் காரணம் கடந்த கருப் பொருள்.

**அது, அவள், அவன் என நின்றமை யார்க்கும்**
**பொதுநிலை யான்என உணர்த்திய பொருளே**

என்று இவர் ஒருபா ஒருபதில் குறிப்பிடுவது சிறப்பாய்க் கருதத்தக்க ஒரு கருத்து. அவன் அவள் அது என்று இவர் எடுத்துக்கொடுக்கும் தொடர் சிறிது பிற்காலத்தில் சைவ சித்தாந்த மூல சாத்திரமாகிய சிவ ஞான போதம் செய்ய வந்த மெய்கண்டாருக்கு 'அவன் அவள் அது என அவை மூவினைமையின்' என்று முதல் சூத்திரத்துக்கு அடியெடுத்துக் கொடுத்ததுபோல் உள்ளது.

**கோயில் நான்மணிமாலை**

பட்டினத்தார் பிரபந்தங்களில் இந்த நூலே முதலாவதாக அமைக்கப்பட்டுள்ளது. கோயில் என்பது சிதம்பரம். இந்நூல் இத்தலத்து நடராசப் பெருமான் துதியாக வெண்பா, கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா என்ற முறையில் மாறி மாறி அந்தாதியாக மண்டலித்து வருமாறு பாடப்பெற்ற ஒரு பிரபந்தம். பட்டினத்தாருக்கு முன் நான்மணிமாலை யாரும் பாடியதில்லை. இவர் பாடிய இந்த நூலே இந்தப் பிரபந்த வகையில் முதல் நூலாகும். இதனுள் இவரது புலமைத்திறன், சைவ சமயப்பற்று, முதலிய யாவும் விளங்கக் காணலாம். 'பார்த்திபர் ஆவதில்......... அம்பலத்தான் தொண்டர்க் கேவல் செய்து பிச்சை கொண்டு வாழ்தல் களிப்புடைத்தே' (2) என்கின்றார். சிவ பெருமானுக்குரிய தசாங்கம் கூறுகின்றார் (4):

பெரும, நின்
தாதவிழ் கொன்றைத் தாரும், ஏதமில்
வீர வெள்விடைக் கொடியும், போரில்
தழங்கும் தமருகப் பறையும், முழங்கொலித்
தெய்வக் கங்கை ஆறும், பொய்தீர்
விரையாக் கலியெனும் ஆணையும், நிரைநிரை
ஆயிரம் வகுத்த மாயிரு மருப்பின்
வெண்ணிறச் செங்கண் வேழமும், பண்ணியல்
வைதிகப் புரவியும், வான நாடும்,
மையறு கனக மேருமால் வரையும்,
செய்வயல்
தில்லை யாகிய தொல்பெரும் பதியுமென்று
ஒருபதி ஞயிரந் திருநெடு நாமமும்
உரிமையிற் பாடி.

மாணிக்கவாசகர் தசாங்கத்துக்குத் தனியாக ஒரு பதிகம் பாடியிருப்பதோடு, கீர்த்தித் திரு அகவலின் இடையிலும்

ஒரு தசாங்கம் பாடியிருக்கின்றூர். அவருடைய வழியைப் பின்பற்றிப் பட்டினத்தாரும் தசாங்கம் பாடியிருப்பது அவர் காலத்துக்கு அடுத்த பத்தாம் நூற்ருண்டில் இவர் வாழ்ந்தார் என்று கருதுவதற்கு ஆதரவாய் உள்ளது. பத்தாம் நூற்ருண்டில் தோன்றிய பன்னிரு பாட்டியல் அறுபதுக்கு மேற்பட்ட பிரபந்தங்கள் குறிப்பிடுமிடத்து, தசாங்கம் என்ற பிரபந்தத்தைத் தனியாகக் குறிப்பிட்டதோடு (240), சின்னப் பூ என்ற மற்ருெரு பிரபந்தத்தையும் குறிப்பிடுகின்றது. பிற் கால நூல்களில் நீண்ட பாடல்களாய் வரும் அகப்பொரு ளமைதிகொண்ட உலா தூது போன்ற பிரபந்த வகைகளில் தசாங்கம் பாடுவது ஒரு மரபு. மாணிக்கவாசகர் ஓர் அகவலில் தசாங்கத்தை அமைத்ததைப் பின்பற்றி இவரும் இந் நான்மணிமாலை நான்காம் பாடலில் தசாங்கத்தை அமைத்திருக்கின்றூர். மேற்காட்டிய விடத்து, தசாங்கம் பத்துப் பொருள்களாய் இருக்க, இவர் பதினெரு பொருள்களைக் குறிப்பிடுவது தெரிகிறது. ஒருகால் இவர் கருத்தின்படி நாமம் என்பது மிகை போலும். மேலும் மாணிக்கவாசகர் குறிப்பிட்ட படை என்ற சின்னத்தை விட்டு இவர் வேழம் ஆணை என்பவற்றைச் சேர்த் திருக்கின்றூர். வேறு பலரும் இவ்வாறு யானையும், ஆணையும் பாடியது உண்டு. சிவபெருமானுடைய ஆணை விரையாக்கலி. இது பின்வந்த சோழ மன்னர்கள் நிறை கோலுக்கும் தெருவுக்கும் பெயராக அமைத்துக்கொண்டமை இங்கு அறியத் தக்கது. ஒன்று, முதல் இராசராசன் காலத்தில் திருப்புறம்பயத்தில் பொறித்த கல்வெட்டு. "ஸ்வஸ்திஸ்ரீ கோ ராஜராஜகேசரி வன்மற்கு யாண்டு ஆறுவது (கி. பி. 991). ஸ்ரீ திருப்புறம்பயமுடைய மகா தேவர்க்குத் திருமஞ்சன நீராடியருள ஸ்ரீ கண்டன் மதுராந்தகதேவரான ஸ்ரீ உத்தமசோழ தேவர்க்காக இத் தேவரைத் திரு வயிறு வாய்த்த உடைய பிராட்டியார் தந்த

வெள்ளிக் கலசம் ஒன்று அலகு நிலை நூற்று நாற்பத்து முக் கழஞ்சே முக்காலே இரண்டு மஞ்சாடி. இதுக்கு விரையாக் கலி யென்னும் நிறைகோலால் நிறை பதின்மூன்றெழுக்கை ஒரு பலம் பதின்கழஞ்சே காலாக இவ்வூர்க் கல்லால் விற்ற நிறை நூற்று நாற்பதின் கழஞ்சே முக்காலே மூன்று மஞ்சாடியும் அறுமா, இவை பன்மாகேஸ்வர ரக்ஷை." இரண்டாவது அதே திருப்புறம்பயத்தில் இவனுடைய மகன் முதல் இராசேந்திரன் காலத்தில் எழுந்த கல்வெட்டு (1018): "......தேவதானம் பரம்பில் விரையாக்கலிப் பெருந்தெருவில் பாடியோம்" என்று வருகிறது. மூன்ருவது குலோத்துங்க சோழன் காலத்தில் இதே ஊரில் எழுந்தது "......அமுது செய்விப்பார் திருவாணை திருவிரையாக்கலி இது பன் மாகேஸ்வர ரக்ஷை" என்று இங்கு இத்தொடர் அரசர் ஆணையாகவே சொல்லப்பட்டுள்ளது.[1] இம்மூன்றினுள் காலத்தால் முந்தியது இராசராசன் கல்வெட்டு (ஆண்டு 991). இவன் காலத்தேதான் திருமுறைகள் தேடித் தொகுத்து முறைப்படுத்தப்பட்டன. இவன் விருப்பத்துக்கிணங்கியே நம்பியாண்டார் நம்பி தனிப் பதிகங்களாயிருந்தவற்றைப் பதிஞெராந் திருமுறையில் தொகுத்தார். இவ்வாறு தொகுத்தவற்றுள் இப்பட்டினத்தார் பாடலும் ஒன்று. இவன் இவர் பாடல்களில் ஈடுபட்டு இத்திருவாணையை ஒரு சிறப்புத் தொடராகத் தான்எடுத்து வழக்குக்குக் கொண்டு வந்தான் என்று கருதுவதும் பொருத்தமே. எனவே, இக் காலத்துக்கு முன்னமே பட்டினத்தார் நூல் செய்திருந்தார் என்ருகிறது. ஆகவே இவர் காலம் பத்தாம் நூற்றுண்டின் தொடக்கம் என்று காணும் முடிவுக்கு இதுவும் ஒரு சான்ருகிறது.

பட்டினத்தார் சமயாசாரியர் கூறிய கருத்துக்களையும் தொடர்களையும் நன்கு அனுபவித்துப் பின்னும் பெருக்கி உரைப்பது அறிவுக்கு விருந்தாய் உள்ளது :

1 சதாசிவ பண்டாரத்தார் : தமிழ்ப் பொழில் 1935, ப. 403.

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
அழுது காமுற்று அரற்றுகின் றுரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே

*என்ற அப்பர் கருத்தை எடுத்து இவர்,*

உன் திருமணப் பந்தருள்,
அமரர் முன்புகுந் தறுகு சாத்திநின்
தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து
என்னையும் எழுத வேண்டுவன் (4)

*என்று பாடுதல் அறியத்தக்கது. பின் வந்த வலிவல மும்மணிக்கோவை என்ற நூலின் பெயர் தெரியாத ஆசிரியர்,*

நாயேன்
இழைத்த தீவினை யாவையும் பொறுத்து
நின்னடி யாருடை நெடுங் கணக்கின்
என்னையுங் கடைமுறை யெடுத்தெழு துவதே

*என்று கூறுவதும் காணலாம். யூதர் நாட்டில் இதுபோல வழங்கும் ஒரு கதை இங்கு அறியத்தக்கது. ஆதம் புதல்வனை ஆபு என்ற தலைவன் சிறந்த பக்திமான், உயிர்களிடத்து அன்பு நிறைந்தவன். ஒருநாள் கனவில் ஒரு தேவனைக் கண்டான். அவன் கையில் இறையடியார் பட்டியல் ஒன்று வைத்திருந்தான். அதில் தன் பெயர் காணப்படவில்லை என்று அறிந்து, 'உயிர்கள் மாட்டு அன்புடையவன் என்றுவது என் பெயரை எழுதிக் கொள்க' என்று இவன் வேண்டிக் கொண்டான். அதன்மேல் மறுநாள் அத்தேவன் வைத்திருந்த இறையடியார் பட்டியலில் ஆபுவின் பெயர் முதலாவதாகக் காணப்பட்டது என்பது வரலாறு.*

*திருமாலைக் குறித்து இவர் கூறும் ஒரு கருத்து சுவை யுடையது. திருமால் கடையுகம் சென்ற காலத்தில் கடலினுள்*

25

*நிலப்பரப்பு முழுமையும் ஆழ்ந்தது பொறுமல் அஞ்சேல் என்று மீன்வடிவெடுத்து ஏழுலகையும் கரையேற்றிக் கொண்டுவந்து சேர்த்தான். ஒருநாள் ஏழுகடலையும், ஏழுலகையும் குழைத்து உண்டான். ஒருநாள் மூவடிமண் கேட்டு ஈரடியால் எல்லா உலகையும் அளந்து விட்டான். அத்தகையவன் சிவபெருமான் திருவடியைக் காணவேண்டிக் கேழல் உரு எடுத்து மண்ணின் ஏழு அடுக்கையும் ஊழி ஊழி கீழுறக் கிளைத்தும் காண முடியவில்லை என்கிறார் :*

**கடையுகஞ் சென்ற காலத்து, நெடுநிலம்**
**ஆழிப் பரப்பில் ஆழ்வது பொறுஅது,**
**அஞ்சேல் என்று செஞ்சே லாகித்தன்**
**தெய்வ உதரத்துச் சிறுசெலுப் புரையில்**
**பௌவம் ஏழே பட்டது; பௌவத்தோடு**
**உலகு குழைத்தொரு நாஅள் உண்டதும்**
**உலக மூன்றும்; அளந்துழி, ஆங்கவன்**
**ஈரடி நிரம்பிற்றும் இலவே; தேரில்**
**உரைப்போர்க் கல்லது அவன்குறை வின்றே:**
**இனைய னாகிய தனிமுதல் வானவன்**
**கேழல் திருவுரு ஆகி, ஆழத்து**
**அடுக்கிய ஏழும் எடுத்தனன், எடுத்தெடுத்து**
**ஊழி ஊழி கீழுறக் கிளைத்தும்**
**காண்பதற் கரிய நின் கழலும்.**

*மற்றொரு பாடலில் (6),*

**அடியொன்று பாதளம் ஏழிற்கும் அப்புறம் பட்டதிப்பால்**
**முடியொன்று இவ் வண்டங்கள் எல்லாம் கடந்தது**

*என்று இவர் கூறுவது, 'அடிபேரில் பாதாளம் பேரும் அடிகள் – முடிபேரில் மாமுகடு பேரும்' என்ற அம்மையார் பாடல் கருத்தைக் கொண்டது. 'ஆளெனப் புதிதின் வந்து அடைந்திலம்' என்று இவர் கூறுவது, 'இடைக்கலமல்லேன் எழுபிறப்பும் உனக்கு ஆட்பட்டேன்' என்ற அப்பர்*

*திருவாக்கைக் கொண்டது. 16ஆம் பாட்டில் மனிதப் பிறவியை ஓர் மரக்கலமாக உருவகம் செய்து ‘அம்பல வாணனே, நின் அருள் எனும் நலத்தார் பூட்டித் திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே’ என்று இவர் வேண்டுவது சிறந்த இலக்கிய விருந்தாகும்.*

*இந்நூலின் இறுதிப் பாடல் 53 அடிகளில் இறைவனைப் போற்றி போற்றி என்று துதிப்பது. சிவபெருமானது பராக்கிரமச் செயல்களை இங்கு விரித்துச் சொல்கிறார்:*

தாதையை அரிந்த வேதியச் சிறுவற்குப்
பரிகலம் கொடுத்த திருவுளம் போற்றி

*என்ற வரிகளில் சண்டேசர் வரலாற்றையும்,*

நின்முதல் வழிபடத் தன்மகன் தடிந்த
தொண்டர் மனையில் உண்டல் போற்றி

*என்ற வரிகளில் சிறுத்தொண்டர் வரலாற்றையும்,*

வெண்ணெய் உண்ண எண்ணுபு வந்து
நந்தா விளக்கை நுந்துபு பெயர்த்த
தாவுபுல் எலிக்கு மூவுல காள
நொய்தினில் அளித்த கைவளம் போற்றி

*என்ற வரிகளில் எலியை மாபலிச் சக்கரவர்த்தியாகப் பிறப்பித்த வரலாற்றையும் குறிப்பிடுகிறார்.*

தம்மை மறந்து நின்னை நினைப்பவர்
செம்மை மனத்தினும் தில்லைமன் றினும்நடம்
ஆடும் அம்பல வாண

*என்ற வரிகள் உருக்கமான பக்திச் சுவை ததும்புவன.*

*இறைவனை நாயனர் என்று குறிப்பிடுகிறார். ‘எடுத்த பாதம்’ என்பது நயம் மிக்க ஒரு தொடர். இது பற்றி*

வேறிடத்திலும் விளங்கக் கூறியிருக்கிருேம். 'என் மனத்தே வந்து சந்திக்க' என்பது இங்கே பொருந்துதல் என்ற பொருள் உடையது. இப்பொருளில் இச்சொல்லை யெடுத்து அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில் பலமுறை பாடுகிருர்.

இந்நூலுள் 11 பாடல்கள் அகத்துறையாக உள்ளன. விருத்தங்களில் பெரும் பகுதி நெடிய சந்த விருத்தங்கள்.

**திருக்கழுமல மும்மணிக் கோவை**

இந்நூல் 30 பாடல் இருப்பதற்குப் பதிலாக பன்னிரண்டே பாடல்களோடு ஏடுகளில் காணப்படுகிறது என்றும், முதலில் அச்சிட்டவர்கள் பன்னிரண்டே அச்சிட்டனர் என்றும், பிற்காலத்தில் 18 பாடல்கள் சேர்த்து நூல் 30 ஆக்கப்பட்டது என்றும், இவ்வாறு சேர்க்கப்பட்ட பாடல்களில் மிகவும் பிற்காலத்துச் சொல்லும் பொருளும் காணப்படுகின்றன என்றும் ஆன்ருேர்[1] எழுதியுள்ளனர்.

மும்மணிக்கோவை என்பது ஆசிரியம், வெண்பா, கட்டளைக்கலித்துறை என்ற மூன்று பாடல்கள் மாறி மாறி அந்தாதியாக மண்டலித்து வருவன. இந்நூல் இறுதித் தொடர் இவ்வாறு மண்டலித்து வரவில்லை. ஆதலால் நூல் அபூர்த்தி என்று கருதுவதில் பிழை இல்லை.

முதற்பாடலில் கழுமலம் என்ற சீகாழித்தல வரலாற்றுக் கேற்ப, சம்பந்தர் 'தோடுடைய செவியன்' பாடியதை விளங்கக் குறிப்பிடுகின்ருர்:

**தாதையொடு வந்த வேதியச் சிறுவன்**
**தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த,**

---

1 சமாஜ இரண்டாம் பதிப்பு 1940, ம. பாலசுப்பிரமணிய முதலியார் குறிப்பு. முதலில் இப்பாடல்களை ஆனூர் சிங்காரவேலு முதலியார் பதிப்பித்தார். இப்பாடல்கள் யாம் பரிசோதித்த ஏட்டிலும் காணப்படவில்லை. இக்கட்டுரையில், 13–30 பாடல்களை ஆராயவில்லை.

'அன்னு யோ'வென் றழைப்ப,முன் னின்று
ஞான போனகத் தருள்அட்டிக் குழைத்த
ஆனந்த் திரளை அவன்வயின் அருள,
அந்தணன் முனிந்து 'தந்தார் யார்?' என,
'அவனைக் காட்டுவன் அப்ப, வானுர்
தோஒ டுடைய செவியன்' என்றும்
'பீஇ டுடைய பெம்மான்' என்றும்
கையில் சுட்டிக் காட்ட,
ஐய, நீ வெளிப்பட் டருளினை ஆங்கே.

*நுட்பமான கருத்துக்களை அலங்காரமாகச் சுவைபடத் தேர்ந்து எழுதுவதில் வல்ல இவர் அவ்வாறே இங்கும் எழுதுகிறுர் :*

கீழ்மையில் தொடர்ந்து கிடந்த என்சிந்தைப்
பாழறை உனக்குப் பள்ளியறை யாக்கிச்
சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவிசு
எந்தைநீ இருக்க இட்டனன் ..................
........................................ இமையக்
கொழுந்தையும் உடனே கொண்டிங்கு
எழுந்தரு ளத்தகும் எம்பெரு மானே.

*'யான் ஒரு தகுதியும் இல்லாதவனுயினும் எனது வழிபாட்டையும் ஏற்றுப் பிறப்பு இறப்பிலிருந்து காத்தல் நின்கடன்' என்று மிக்க நயமாகச் சொல்லுகிறுர் :*

இயன்றதோர் பொழுதின், இட்டது மலரா,
சொன்னது மந்திர மாக, என்னையும்
இடர்ப்பிறப்பு இறப்பெனும் இரண்டின்
கடற்ப டாவகை காத்தல்நின் கடனே.

*மலர் கிடைக்காவிட்டால், நொச்சியோ கரந்தையோ அல்லது வெறும் இலையோ சிவபிரான் வழிபாட்டுக்குப் போதுமானது எனப்பல இடங்களில் கூறும் இவ்வாசிரியர்,*

*இங்கு 'நான் வழிபடும் நேரம்தான் பொழுது; நான் இட்டது தான் மலர்; சொன்னதே மந்திரம்; அவற்றை ஏற்று என்னை நீ காப்பாயாக' என்று வேண்டுவதும் பொருத்தமாகவே உள்ளது; இங்கு இவர் கூறுவதன் கருத்து, உண்மையான அன்பு உள்ளத்தே இருக்குமாயின், மற்றவை குறைந்தால் பிழையாகாது என்பதாகும். திருவருள் நாட்டம் கருணையின் பெற்ற பிறகு இறைவன் ஒருவனே மெய், ஏனைய யாவும் பொய்யெனத் தோன்றின என்ற கருத்தை ஓர் உவமையால் அழகுபட எடுத்துக் காட்டுகிறார்:*

**எந்தைநின்**
**திருவருள் நாட்டம் கருணையின் பெறலும்,**
**யாவையும் எனக்குப் பொய்யெனத் தோன்றி,**
**மேவரும் நீயே மெய்யெனத் தோன்றினை,**
**ஓவியப் புலவன் சாயல்பெற எழுதிய**
**சிற்ப விகற்பம் எல்லாம், ஒன்றித்**
**தவிராது தடவினர் தமக்குச்**
**சுவராய்த் தோன்றும் துணிவுபோன் றனவே.**

*மிகையான பாடல்களில் சிறப்புடைய பாடல்களும் வரிகளும் உள்ளன; இவற்றுக்கு எடுத்துக்காட்டு பின்வருவது:*

**கண்டேன் புகலிக் கருத்தனைத்தன் மெய்ஞ்ஞான**
**வண்தேனுண் டேமகிழும் வண்டானேன் - பண்டே**
**அளியனுமா னேன்மனமெய் யார்பதம்வே றின்றிக்**
**குளிர்சிவா னந்தமிலங் கும்.**

*எனினும் இப்பாடல் பட்டினத்தார் வாக்கென்று கொள்ளுவ தற்கில்லை. பின்வரும் பாடல், மிகவும் பிற்காலத்தார் செய்த இடைச் செருகல் என்பதை நன்கு உணர்த்தும்:*

**பணம்அஞ் சரையிருக்கப் பாவையரைச் சும்மா**
**புணர்கின்றீர் என்று புகலப் – புணர்வார்க்**
**கரைக்காசு தந்தனமென் றூர்புகலி யார்மா**
**அரைக்காசென் றுளதற்கு மான்.**

## திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

*இது மூன்ருவது பிரபந்தம்; வழக்கம்போல் இதனுள் 30 பாடல்கள் உள்ளன. இந்நூலே பிறவற்றிலும் பார்க்க இலக்கிய உலகில் நன்கு தெரிந்தது; அதிகம் பயிலப் பெறுவது. இதன் பாடல்கள் பலவற்றை எடுத்து நூல்கள் என்ற தலைப்பிலும், சில கருத்துக்களை இறுதியில் வரும் காலம் என்ற தலைப்பிலும் சொல்லியிருக்கிருேம்.*

*இதன் முதல் பாடல் மிக்க சிறப்புப் பொருந்தியது; அர்த்தநாரீசுவர வடிவத்தைப் பாதாதிகேசமாக அழகுபடப் புனைந்து கூறுவது. திருவடி, திருவிடை, ஆகம், திருக்கரம், திருநெடு நாட்டம், திருமுடி என்ற ஆறு பகுதிகளாக அர்த்தநாரீசுவர வடிவத்தை வருணிக்கிருர். இவ்வளவு விரிவான வருணனை வேறெங்கும் சொல்லப்பட்டதில்லை.*

**தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்**<br>
**பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்**<br>
**சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்**<br>
**கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ**

*என்று மாணிக்கவாசகர் நான்கு வரிகளில் இத்திரு உருவத்தை அமைத்துக் காட்டுதல் அனைவரும் நன்கறிந்தது. ஆனல் இங்கு பட்டினத்தார் 74 வரி கொண்ட பாடலில் இத்திருவுருவத்தைக் கூறுகிருர்.*

*ஒருபால் திருவடியானது தெய்வத் தாமரையின் செந்நிறம் பெற்றுள்ளது. வீரக்கழலும் அதனிடத்தே ஒலி செய்கின்றது. அது மார்க்கண்டன் உயிரைக் கவரவந்த யமனது வலியை உதைத்துப் போக்கியது. அழல் உருவாய் வளர்ந்த சிவபெருமானை வணங்க அறியாது கையில் வலம்புரிச் சங்கம் ஏந்திய திருமால் பன்றி உருவெடுத்துத்*

*தமது வலிமையினுல் நிலத்தைத் தோண்டிச் சென்று காண முற்பட்டபோது, அவரால் காண முடியாமல் வளர்ந்து சென்றது. ஆனுல் அடியவர் அன்போடு மலர் இன்றிப் பச்சிலே இட்டு வழிபட்டாலும்கூட, அவருக்கு முத்தி கொடுத்து விளங்குவது, வலப்பால் திருவடி :*

தெய்வத் தாமரைச் செவ்வியின் மலர்ந்து,
வாடாப் புதுமலர்த் தோடெனச் சிவந்து,
சிலம்பும் கழலும் அலம்பப் புனேந்து,
காற்றின் ஆற்றல் மாற்றி, போற்ருது
வலம்புரி நெடுமால் ஏனமாகி நிலம்புக்கு
ஆற்றலின் அகழத் தோற்ருது நிமிர்ந்து,
பத்தி அடியவர் பச்சிலே இடினும்
முத்தி கொடுத்து முன்னின் றருளித்
திகழ்ந்துளது ஒருபால் திருவடி.

*இடப்பால் திருவடி, பஞ்சையும் அனிச்சத்தையும்விட மென்மையானது :*

அகஞ்சேந்து,
மறுவில் கற்பகத் துறுதளிர் வாங்கி,
நெய்யில் தோய்த்த செவ்வித் தாகி,
நூபுரம் கிடப்பினும் நொந்து, தேவர்
மடவரல் மகளிர் வணங்குபு வீழ்த்த
சின்னப் பன்மலர் தீண்டிடச் சிவந்து,
பஞ்சியும் அனிச்சமும் எஞ்ச எஞ்சாத்
திருவொடு பொலியும் ஒருபால் திருவடி.

*வலப்பால் திருவிடையில் புலித்தோலும் அரவுக்கச்சும், இடப்பால் செம்பட்டாடையும், மேகலேயும் :*

நீலப் புள்ளி வாளுகிர் வேங்கைத்
தோலின் கலிங்கம் மேல்விரித் தசைத்து,
நச்செயிற் றரவக் கச்சையாப் புறுத்துப்

பொலிந்துள தொருபால் திருவிடை; இலங்கொளி
அரத்த ஆடை விரித்து மீதுறீஇ
இரங்குமணி மேகலை ஒருங்குடன் சாத்திய
மருங்கிற் றுரும் ஒருபால் திருவிடை.

*திருவுடம்பில் வலப்பால், பாம்பும் ஆமையோடும் பன்றியின் கொம்பும் அக்கமணியும் பூணூலும் புனைந்து, வெண்ணீறு அணிந்த பவள வெற்பு எனத் திகழும். இடப்பால், கச்சும் முத்து வடமும் அணிந்து, செஞ்சாந்தும் குங்குமமும் எழுதி, ஏழுலகும் ஈன்றும் தளராத தனபாரம்:*

செங்கண் அர்வும் பைங்கண் ஆமையும்
கேழற் கோடும் வீழ்திரள் அக்கும்
நுடங்கு நூலும் இடங்கொண்டு புனைந்து
தவளநீ றணிந்ததோர் பவளவெற் பென்ன
ஒளியுடன் திகழும் ஒருபால் ஆகம்;
வாரும் வடமும் ஏர்பெறப் புனைந்து
செஞ்சாந் தணிந்து குங்குமம் எழுதிப்
பொற்ரு மரையின் முற்ரு முகிழ்என
உலகேழ் ஈன்றும் நிலையில் தளரா
முலையுடன் பொலியும் ஒருபால் ஆகம்.

*வலக்கரங்கள் சூலமும் மழுவும் தமருகமும் தாங்கியுள்ளன; இடக்கரங்கள் பந்தும் கிளியும் தாங்கியுள்ளன:*

அயில்வாய் அரவம் வயின்வயின் அணிந்து
மூவிலை வேலும் பூவாய் மழுவும்
தமருகப் பறையும் அமர்தரத் தாங்கிச்
சிறந்துள தொருபால் திருக்கரம்; செறிந்த
சூடகம் விளங்கிய ஆடகக் கழங்குடன்
நொம்மென் பந்தும் அம்மென் கிள்ளையும்
தரித்தே திகழும், ஒருபால் திருக்கரம்.

*வலக்கண் சூரியர் அக்கினி இருவரின் வெம்மையும் விரவியது. இடக்கண் மான் கண் போன்ற அழகுடைய*

*தாய் பாலிற் கிடந்த நீலம்போல உலகத்துக்கு அருள் செய்யும் கருணையுடையது :*

இரவியும் எரியும் விரவிய வெம்மையின்
ஒருபால் விளங்கும் திருநெடு நாட்டம்;
நவ்வி மானின் செவ்வித் தாகிப்
பாலிற் கிடந்த நீலம் போன்று
குண்டுநீர்க் குவளையின் குளிர்ந்து நிறம்பயின்று
எம்மனோர்க் கடுத்த வெம்மைநோய்க் கிரங்கி
உலகேழ் புரக்கும் ஒருபால் நாட்டம்.

*வலப்பால் திருமுடியானது மலர் அணிந்து நெருப்பெனப் பொலியும் சடாபாரம் உடையதாய் நான்முக அன்னம் காணமுடியாதது; இடப்பால் திருமுடியோ, தெய்வமகளிர் புனைந்த தெய்வமாலை தாங்கியது :*

நொச்சிப் பூவும் பச்சை மத்தமும்
கொன்றைப் போதும் மென்துணர்த் தும்பையும்
கங்கை யாறும் பைங்கண் தலையும்
அரவும் மதியமும் விரவித் தொடுத்த
சூடா மாலை சூடிப் பீடுகெழு
நெருப்பில் திரித்தனைய உருக்கிளர் சடிலமொடு
நான்முகம் கரந்த பால்நிற அன்னம்
காணு வண்ணம் கருத்தையும் கடந்து
சேண் இகந்துளதே ஒருபால் திருமுடி;
பேணிய
கடவுட் கற்பின் மடவரல் மகளிர்
கற்பக வனத்துப் பொற்பூ வாங்கிக்
கைவைத்துப் புனைந்த தெய்வ மாலை
நீலக் குழல்மிசை வளைஇ மேல்நிவந்து
வண்டும் தேனும் கிண்டுபு திளைப்பத்
திருவொடு பொலியும் ஒருபால் திருமுடி.

*இவ்வாறு அமைந்த மருதவாணருடைய அம்மையப்பர் திருக்கோலத்தை, மீண்டும் பிறவி இல்லாத வாழ்வுபெறும் பொருட்டு, பட்டினத்தார் வணங்குகிறார் :*

இனைய வண்ணத்து நினைவருங் காட்சி
இருவயின் உருவும் ஒருவயிற் றாகி,
வலப்பால் நாட்டம் இடப்பால் நோக்க,
வாணுதல் பாகம் நாணுதல் செய்ய,
வலப்பால் திருக்கரம் இடப்பால் வனமுலை
தைவந்து வருட, மெய்ம்மயிர் பொடித்தாங்கு
உலகம் ஏழும் பன்முறை ஈன்று
மருதிடங் கொண்ட ஒருதனிக் கடவுள் ! நின்
திருவடி பரவுதும் யாமே : நெடுநாள்
இறந்தும் பிறந்தும் இளைத்தனம், மறந்தும்
சிறைக்கருப் பாசயம் சேரா
மறித்தும் புகாஅ வாழ்வு பெறற் பொருட்டே.

*இங்கு பட்டினத்தார் திருவுருவ வருணனையாகக் கூறும் விளக்கங்களில் பல, சிற்ப சாத்திரங்களிலும் காணப்படுவது அறியத்தக்கது. வலக்கையில் சூலம், மழு, டமருகம் என்ற மூன்று ஆயுதங்களை இவர் கூறுகிறார். ஆறு கரங்களைக் காசியப சில்பம் முதலான சில்ப சாஸ்திரங்கள் கூறும்.*

*வாழ்க்கையில் ஒழுக்கமற்ற சில தன்மைகளை நன்கு விவரித்துக் கூறுகிறார். புன் மக்கள் உண்டியாசையால் கண்டவற்றையெல்லாம் விரும்புகிறார்கள்; சுவையாகச் சமைப்பதற்கான திட்டங்களைச் சமையல் செய்வோரிடம் சொல்லிச் சமைக்கச்செய்து அளவின்றி உண்கிறார்கள். விழுப்பத்தாலும் குலத்தாலும் ஒழுக்கத்தாலும் கல்வியாலும் சிறந்த பெரியோரை, சிறுவர்களை ஏவுவதைப்போல, வேலைகொள்ளுகிறார்கள். ஆன்றோரால் தங்களுக்கு நன் முறையில் மணம் செய்துவைக்கப்பெற்ற மனையாளைக் கைவிட்டுப் பொருட் பெண்டிரைத் தேடுகிறார்கள், அயல்*

மகளிரை விரும்புகிறார்கள். இரவலர் வருங்கால் அவர்களுக்கு உதவாது, பலமுறை நடந்து சோர்வுகொள்ளச் செய்கிறார்கள். இவ்வாறு இவர்கள் இகமும் பரமும் இழந்து செல்வமே பொருள் என்று எண்ணி வாழ்கிறார்கள். இவர்களும் மனிதரா என்று கேட்கிறார்.

'உழப்பின் வாரா உறுதிகள் உளவோ' என்ற பாடலில், புண்ணியப்பயிர் செய்வதையும் பாவப்பயிர் செய்வதையும் முற்றுருவகமாக விவரித்துப் பாடுகிறார். இரண்டு பயிர்களும் நெஞ்சமாகிய புனத்தில்தான் செய்யப்படுகின்றன. தம்மை யொத்தவர்கள் புண்ணியப் பயிர்செய்து கனியருந்திச் செம்மாந்திருக்கிறார்கள்; எப்படி? நெஞ்சம் என்னும் புனத்துள்ள வஞ்சக் கட்டையை வேரற அகழ்ந்து போக்கி, பின் நிலத்தைச் சமம்செய்து, அன்பு என்ற பாத்தி கோலி, மெய் என்ற எருவை விரித்து, பத்தி என்ற வித்தை இட்டு, நித்தலும் ஆர்வம் என்ற தெளிந்த நீரைப் பாய்ச்சி, அடங்காது துன்பம் செய்கின்ற பட்டி மாடுகளான ஐந்து பொறிகளுக்கு அஞ்சிச் சாந்த வேலி கோலிய பின், ஞானப் பெருமுளை குறைவின்றி முளைக்கிறது. கருணையாகிற இளந் தளிர் காட்டுகிறது; காமக்குரோதம் முதலான களைகளைக் களைந்து சேமப்படுத்தியபின் பயிர் ஓங்கிச் செம்மையாக வளர்ந்து மெய்ம் மயிர்ப்புளகம் முகிழ்க்கிறது; கண்ணீர் அரும்புகிறது; கடிமலராக மலர்கிறது; அதன்மேல் இது பையப்பையப் பழுத்துத் தீங்கனியாகக் கைவருகிறது. எத்தகைய கனி?

காள கண்டமும் கண்ணொரு மூன்றும்
தோளொரு நான்கும் சுடர்முகம் ஐந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவை யதனினும் உறுசுவை உடைத்தாய்க்
காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி.

*இக்கனியை இவரை ஒத்தவர்கள் இனிதருந்தி மகிழ்ச்சி யோடு இருப்பார்கள். ஆனால் வேறு சிலர் – சிவப் பணியிலே ஈடுபட்டு உழைக்காதவர்கள், புண்ணிய நெறியிலே செல்லாது பாவ நெறியிலே செல்லுபவர்கள், தாங்களும் கனி பெறுகிறார்கள். எப்படி? மனமெனும் புனத்தை வறும் பாழாக்கினார்கள். காமக்காடு மூடிற்று. தீமை செய் ஐம்புல வேடர் ஆறலைத்தார்கள். இன்பம் என்று எண்ணிய பேய்த்தேர் எட்டாது ஓடிற்று. அப்போது நல் வழிச் செல்லாத உணர்வு என்ற மான் வெருண்டு ஓடிற்று. இச்சையாகிய வித்தை விதைத்தார்கள். அது யான் (ஆணவம்) என்ற நச்சுமரமாக முளைத்துப் பொய் என்ற கிளைகளாக விரிந்து, பாவமாகிய பல்தழையைப் பரப்பிக் கொடுமை அரும்பிற்று; கடுமை மலர்ந்தது. அது மரணமாகப் பழுத்து, நரகில் கொண்டுபோய்த் தள்ளிற்று. இவ்வாறு இந்தப் பயிர்த் தொழில் தமக்கும் பிறர்க்கும் உதவாது இமைப்பில் கழிந்தது.*

*மற்றொரு பாடலில் யான் என்பது எது என்று தேடுகிறார். மயிர்த்தொகையா, தோலா, தோலில்பொதிந்த புண்ணா, உதிரமா, எலும்பா, மூளைவிழுதா, தசையா, நரம்பா, உடம்பிற்குள் பிரியாது ஒருக்கும் பிணியா என்று தேடி, "இன்னது யான் என்று அறியேன். என்னை ஏதினும் தேடினேன், யாதினும் காணேன். பின்னர் மருதவாண னுடைய திருவருள் கிடைத்தபின்,*

மாயப் படலம் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின், யானும்
நின்பெருந் தன்மையும் கண்டேன், காண்டலும்
என்னையும் கண்டேன், பிறரையும் கண்டேன்;
நின்னிலை அனைத்தையும் கண்டேன்; என்னே,
நின்னைக் காணா மாந்தர்
தன்னையும் காணாத் தன்மை யோரே."

மற்றேரிடத்தில், உலக வாழ்க்கையில் மக்கள் உழன்று துன்பப்படுதல், இறைவன் குற்றம் அன்று. அது பாவிகளான மக்களுடைய பாவமே; அறுசுவை அடிசில் இருக்கப் பசியால் ஒருவன் வருந்துதல் அடிசிலின் குற்றம் அன்று மணமுட்டிய தெளிவான நீர் இருக்க அவன் நீர்வேட்கை யோடிருப்பது நீரின் குற்றம் அன்று; அழகிய குளிர்ந்த சோலே இருக்க, அவன் வெயிலில் வருந்துதல் நிழலின் குற்ற மன்று : இவைபோல என்கிருர்.

இவ்வாசிரியர் தம் வருணனைத் திறனையும் கடவுளை வருணிப்பதிலேயே ஈடுபடுத்துகிருர். இப்பாடலிலேயே இதற்கும் தக்க உதாரணம் அமைந்துள்ளது. ஒரு பொருளை இவர் நினைத்த மாத்திரத்தில், அதன் சிறப்பு அத்தனையும் பெருக்கி உரைக்காமல் இருக்க இவரால் இயலவில்லை. சிவபெருமானை விடைப்பாக என்று விவரிக்க வந்தார், அந்த விடையின் பெருமையை நினைக்காமல் இருக்க முடியவில்லை; மால்விடை யல்லவா ?

**கயிலை நடந்தனைய உயர்நிலை நோன்தாள்**
**பிறைசெறிந் தன்ன இருகோட் டொருதிமில்**
**பால்நிறச் செங்கண் மால்விடைப் பாக.**

அடுத்து உமையாள் கொழுந என்று சொல்ல வருகிருர். அவ்விடத்தில் உமையாளுக்கு எவ்வளவு அடைகள் உண்டோ அவ்வளவும் சொல்லி முடிக்கிருர். படிப்போருக்கும் சுவை குன்றவில்லை :

**சிமையச் செங்கோட் டிமையச் செல்வன்**
**மணியெனப் பெற்ற அணியியல் அன்னம்,**
**வெள்ளைச் சிறுநகைக் கிள்ளைப் பிள்ளை,**
**குயிலெனப் பேசும் மயிலிளம் பேடை,**
**கதிரொளி நீலம் கமலத்து மலர்ந்தன**
**மதரரி நெடுங்கண் மானின் கன்று,**

வருமுலை தாங்கும் திருமார்பு வல்லி,
வையம் ஏழும் பன்முறை ஈன்ற
ஐய திருவயிற் றம்மைப் பிராட்டி,
மறப்பருஞ் செய்கை அறப்பெருஞ் செல்வி,
எமையா ளுடைய உமையாள் நங்கை,
கடவுட் கற்பின் மடவரல் கொழுந!

*அடுத்து விநாயகப் பெருமான் தந்தை, குமரன் தாதை:*

பவள மால்வரைப் பணைக்கை போந்தனைய
தழைசெவி எண்தோள் தலைவன் தந்தை;
பூவலர் குடுமிச் சேவலம் பதாகை
மலைதுளை படுத்த கொலைகெழு கூர்வேல்
அமரர்த் தாங்கும் குமரன் தாதை;
பொருதிடம் பொன்னி புண்ணியம் புரக்கும்
மருதிடங் கொண்ட மருத வாண!

*இந்த இயல்பை இவருடைய நூல்கள் அனைத்திலும் காணலாம். இறைவனை அப்பன் என்று சொல்வதில் இவருக்கு மிக்க விருப்பம். மருதஅப்பா என்று பலமுறை சொல்வார். திருவிடைமருதூருக்குச் சிறப்பான பூசத் தீர்த்தத்தைக் குறிப்பிடுகிறார். இதுவரை காட்டியவாறு இச்சிறு நூலில் உள்ள ஒவ்வொரு பாடலும் மிகச் சிறந்த கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டது. இந்நூல், மொழி ஆராய்வோருக்கு ஒரு சொற் கருவூலம்; இலக்கியம் மட்டும் கற்போருக்கு ஓர் அழகிய கற்பனை ஊற்று; பக்தர்களுக்குக் கிடைத்தற்கரிய அருள் பாசுரம்; சமய தத்துவங்களை ஆராய்வோருக்குச் சிறந்த சமய சாத்திரம். வாழ்க்கையில் துன்புற்றவர்களுக்குச் சிறந்த ஞான உபதேசம்; தீயவருக்குத் திருந்துவதற்கான வன்மையுடைய ஒரு தூண்டுகோல்; உய்தி இல்லை என்று அஞ்சுவோருக்கும் உய்தி காட்டும் பெரு விளக்கு.*

இலக்கண உரைகளில் திருமுறைப்பாடல் மேற்கோளாய் வருவது மிகவும் அருமை. ஆனல் அபூர்வமாய் இம்மும்மணிக் கோவையின் 15ஆம் பாடல் மருங்கணைதல் என்ற துறைக்கு மேற்கோளாகக் களவியற் காரிகை உரையில் எடுத்துத் தரப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது.

## திரு ஏகம்பமுடையார் திரு அந்தாதி

இது பட்டினத்தார் நூல்களில் நான்காவது. கட்டளைக் கலித்துறை அந்தாதியாக நூறு பாடல், காஞ்சி ஏகாம்பர நாதர் துதியாக உள்ளது. இதன் முதல் பாடல் கச்சி ஏகம்பனே [1] என்ற முடிபையுடையது, இந்நூலின் 99ஆம் பாடல் இங்கு கருதத்தக்கது.

**காட்டிவைத் தார்தம்மை யாம்கடிப் பூப்பெய்யக் காதல்வெள்ளம்**
**ஈட்டிவைத் தார்தொழும் ஏகம்பர் ஏதும் இலாதஎம்மைப்**
**பூட்டிவைத் தார்தமக் கன்பது பெற்றுப் பதிற்றுப்பத்துப்**
**பாட்டிவைத் தார்பர வித்தொழு தாமவர் பாதங்களே.**

ஏகம்பர் தம்மை இப்பதிற்றுப்பத்து பாடுவித்தார் என்று கூறுகிறுர். பதிற்றுப் பத்து என்பதை இங்கு நூறு பாடல் என்று மட்டுமே கருதவேண்டும். மற்று இதன் பாடல்கள் பத்துப் பாட்டுக்கள்தோறும் வெவ்வேறு யாப்பு அமைதியுடைய விருத்தப் பாடலால் அமைய வேண்டும் என்னும் இலக்கணம் இதற்குப் பொருந்தாது. ஆயினும் இங்கு ஒரு கருத்தைக் குறிப்பிடுதல் தகும். பதிற்றுப் பத்து என்றுல் பத்துப்பாட்டுத்தோறும் யாப்பு மாறுகிறது என்ற கருத்திலேயே இதுவரை கருதி வந்திருக்கிறேம். இக்கருத்தைவிட்டு, சுமார் பத்துப்பாட்டு

1 இம்முடிபை வைத்தே இரண்டாம் பட்டினத்தார் திரு ஏகம்ப மாலை என்ற பெயரில் 42 பாடல்கள் (14 நூ.) பாடினுர். இதே முடிபோடு சிவஞான வள்ளல் சிவாகமக் கச்சி மாலை என்ற பெயரில் 100 பாடல்கள் (15 நூ.) பாடியிருக்கிறுர்.

தோறும் பாட்டின் பொருளமைதி மாறுகிறது என்று நாம் கருதிப் பார்த்தால், பதிற்றுப் பத்து என்ற பெயர் ஓரளவு பொருந்துவது தெளிவாகும். ஆசிரியர் இந்நூலில் சுமார் பத்துப்பாடல்களுக்கு ஒருமுறை பாடல்களின் கருத்தை மாற்றுகிறார். சில இடங்கள் துதிப்பாடல்களாகவும் சில இடங்கள் தொடர்பாக அகத்துறைப் பாடல்களாகவும் ஆசிரியர் திட்டமாக அமைத்திருக்கிறார். இத்தன்மையினாலேயே பதிற்றுப் பத்து என்று இவர் குறிப்பிடுகிறார் என்று நாம் கருதமுடியும். இந்த முறையில் இந்நூல் பாடல்களின் கருத்தைச் சிறிது பார்ப்போம்.

*1 – 9* பாடல்கள்: இவை துதிப்பாடல்கள். தாம் ஏகம்பனுக்குத் தொண்டு பூண்ட நிலையையும் பணியாதவருடைய அறியாமையைக் கண்டு இகழ்தலையும், வேறொரு தேவரைப் பாடாத கவி நலத்தையும் இறைவன் அருளால் உலகம் நிலைபெற்ற தன்மையையும் கூறுகின்றார்.

*10 – 28*: இப்பாடல்கள் அகத்துறை: வேழம் வினாதல், கலை வினாதல், தலைவனை நகுதல், தாய்துயில் அறிதல், இரவுக்குறி, பகற்குறி, வறும்புனம் கண்டு மறுகல், மகட்பேச்சுரைத்தல் முதலான பல துறைகளில் தலைவன் தலைவி தோழி ஆகிய மூவர் கூற்றாகப் பாடல்கள் உள்ளன.

*29 – 37*: இவை துதியாகவும் இயல்மொழி வாழ்த்தாகவும் உள்ளன. கீழ் மக்களைச் சிறுமானுடர் என்பார். திருநீறே பொலிவு தருவது, மறையோதி அழல் ஓம்பினாலும் ஏகம்பரைத் தொழாதவர் வேட்டுவராவர், ஏகம்பன் அட்டமூர்த்த வடிவுடையவன் என்பன முதலான கருத்துக்கள் இங்குச் சொல்லப்படுகின்றன. அப்பர் சுவாமிகள்,

**அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோ யராய்**
**ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்**
**கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்ப ராகில்**
**அவர்கண்டீர் யாம்வணங்கும் கடவு ளாரே**

*என்று பாடிய கருத்தை இவர் ஒரு பாடலில் அப்படியே எடுத்து வைத்திருக்கிறார் :*

**படையால் உயிர்கொன்று தின்று பசுக்களைப் போலச்செல்லும்**
**நடையால் அறிவின்றி நாண்சிறி தின்றி நகுங்குலத்திற்**
**கடையாய்ப் பிறக்கினும் கச்சியுள் ஏகம்பத் தெங்களைஆள்**
**உடையான் கழற்கன்ப ரேல்அவர் யாவர்க்கும் உத்தமரே.**

*38 – 48 : இவற்றுள் முதல் ஏழு பாடல்கள் தொடர்ந்து அர்த்தநாரீசுவரக் கோலத்தின் வருணனை. இவ்வாசிரியருக்கு இக்கோலத்தில் மிக்க ஈடுபாடு என்பதைத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை முதல் பாடலில் கண்டோம். இங்கும், இப்பகுதியை அதற்கென்றே ஒதுக்கிக் கொண்டார். அங்கு ஒரே பாடலில் பாதாதி கேசமாக ஈருருவங்களையும் வருணித்தார். இங்கு கேசாதி பாதமாக வருணிக்கிறார்; ஏழு பாடல்களிலும் முறையே கேசமும், திருக்கண்ணும், திருச்செவியும், தோளும், மார்பும், வயிறும் இடையும், திருவடிக்கழலும், சிலம்பும் என்பன கூறப்பட்டுள்ளன. இவற்றோடு நான்கு பாடல்களில் சிவபிரானது நடனமும் சிவபராக்கிரமச் செயல்களும் போற்றப்பட்டுள்ளன.*

*49–54 : சிவபெருமான் பலியேற்றல்; இவருடைய திருவுருவ வருணனை பலியிட வந்த பெண்களின் நிலை என்பன இங்குச் சொல்லப்படுகின்றன.*

*55–65 : தலங்களின் பெயர் சொல்லித் துதித்தல். இங்கு 70 தலப்பெயர்கள் சொல்லப்பட்டன. இவற்றுள்*

*54 தலங்கள் பாடல் பெற்றவை, ஏனையவை பாடல் பெருதவை. அவற்றுட் சிறப்பானவை நியமம், பெரும்பேறு, புலிவலம், வில்வலம், காரிகரை என்பன. தலங்கள் தென் பாண்டிநாடு முதல் தொண்டைநாடு வரை உள்ளன. இரண்டு பாடல்களில் மலைகளாகவே சொல்லியிருக்கிருர்.*

*66–73: அகப்பொருளில் உடன்போக்கு என்ற துறைக்குரிய பாடல்களாய் உள்ளன. ஒரு பாடல் குறிப்பிடத் தக்கது. செவிலித்தாய் மகளையும் அவள் காதலனையும் தேடிச் செல்கிருள். எதிரே இளம் காதலர் இருவர் வருகிருர்கள். 'உம்மைப் போன்ற இருகாதலர் சென்றதை எதிரே கண்டீர்களா?' என்று செவிலி வினவுகிருள். அவளுக்கு விடையாக அக்காதலன், 'எதிரே ஒரு காளையைக்கண்டனம்; மற்றவரைக் குறித்து, இப்பெண்ணுேடு பேசுங்கள்' என்று அயல் நின்ற காதலியைக் காட்டுகிருன்.*

துணையொத்த கோவையும் போலெழில் பேதையும்
தோன்றலுமுன்
இணையொத்த கொங்கையொ டேஒத்த காதலொ டேகினரே,
அணையத்தர் ஏறெுத்த காளையைக் கண்டனம், மற்றவரேல்
பிணையொத்த நோக்குடைப் பெண்ணிவள் தன்னெடும்
பேசுமினே.

*இதே போன்ற ஒரு கருத்து திருக்கோவையாரிலும் வருகின்றது. அங்கு தலைவன் தன் காதலியை நோக்கி 'அன்னை சொல்லியது யாது? சொல்லுவாயாக' என்கிருன் (244):*

மீண்டார் எனஉவந் தேன்கண்டு நும்மை,இம் மேதகவே
பூண்டார் இருவர்முன் போயினரே?- புலி யூர்எனைநின்று
ஆண்டான் கருவரை ஆளியன் ஞானக்கண் டேன்,அயலே
தூண்டா விளக்கனை யாய்,என்னை யோஅன்னை சொல்லியதே.

கோவைப் பாடலுக்கும் பட்டினத்தார் பாடலுக்கும் உள்ள ஒற்றுமை நன்கு சுவைத்து இன்புறத்தக்கது.

78–85 : அகப்பொருளில் இடமணித் தென்றலும், தலைவியைக் கூட்டிச் சொல்லும் தலைவன் வழியில் உள்ள காட்சிகளைத் தலைவிக்குக் காட்டுதலும், திருக்காமக்கோட்டம், கச்சி அறச்சாலை, ஊரகம், பாடகம் என்ற திருமால் பதிகள் ஆகிய கச்சிச் சிறப்புக்களும் சொல்லப்பட்டுள்ளன. ஒரு பாடலில் உழவர் செயல்கள் நேரே காண்பதுபோல் சொல்லப்படுகின்றன. எழில் மிக்க சேற்றில் நெற்பயிர் நடுவோர் ஒலியும் பொன்மலைபோல் செந்நெற்போர் குவிப்போர் ஒலியும் கருப்பாலையின் ஒலியும் கடலொலியை ஒக்கும் என்று தலைவன் காட்டுகிருன் :

**கார்மிக்க கண்டத் தெழில்திரு ஏகம்பர் கச்சியின்வாய்**
**ஏர்மிக்க சேற்றெழில் நெல்நடு வோர்ஒலி, பொன்மலைபோல்**
**போர்மிக்க செந்நெல் குவிப்போர் ஒலி,கருப் பாலையொலி,**
**நீர்மிக்க மாக்கடலின் ஞெலியே ஒக்கும், நேரிழையே.**

இது இன்றைக்கும் பொருத்தமான நிலை. நடுவோர் ஒலியும் நெல் குவிப்போர் ஒலியும் ஆற்றுப் பாசனமுடைய சோழ நாட்டில் ஒரே காலத்தில் காண்பது அரிது. ஆனல் ஏரி வளமுடைய காஞ்சி நாட்டில் அது இன்றைக்கும் காணத் தக்க ஒரு காட்சி.

86 – 97 : அகத்துறைப் பாடல்கள். முதல் ஐந்து பாடல்கள் கார்ப்பருவம் கண்டு தலைவன் வருவான் என்று தோழி கூறுதலும், தேர்வரவு கூறுதலும் போன்ற துறைகள். இருபாடல்கள் ஏறு தழுவுதல் என்ற துறை.

98 – 100 : மீண்டும் இவை துதிப்பாடல்கள். தாம் இப் பதிற்றுப் பத்துப் பாடி இறைவன் பாதங்கள்

தொழுவதையும், தம் புன்சொல்லையும் வேதப்பொருள் போன்றது என்று, ஏகம்பர் துதியாதலால் மெய்த் தொண்டர் கொள்வதையும் கூறுகிறார்.

மேற்கூறியவற்றால் இவ்வந்தாதியின் பொருளமைதியும் தொடர்பும் விளங்கும். ஓரளவு துதியும் அகத்துறையும் மாறிமாறிப் பத்துப் பிரிவுகளாக இவர் அமைத்துள்ள காரணத்தால், தம் பாடலைப் பதிற்றுப் பத்து என்று சொல்லுகிறார் என்று கருதத் தோன்றுகிறது. பத்து என்ற எண்ணை அப்படியே கொள்ளாமல், கூடவும் குறையவும் இருக்கலாம் என்று கொண்டால், இக்கருத்து பொருந்துகிறது.

## திருஒற்றியூர் ஒருபா ஒருபஃது

ஒருபா ஒருபஃது என்பது பிரபந்த வகையில் ஒன்று; வெண்பாவிலேனும் அகவற்பாவிலேனும் பத்துப் பாடல் பாடுவது என்று பன்னிரு பாட்டியல் கூறும். வழக்கம் போலவே இதுவும் அந்தாதியாக மண்டலித்து வருவது. பட்டினத்தார் பிரபந்தங்களில் இது கடைசியானது; அகவற்பாவில் அமைந்தது. இவ்விலக்கணத்துக்கு இலக்கியமாகத் தோன்றிய பண்டைப் பிரபந்தம் இது வொன்றே. இது திருவொற்றியூர் என்ற பாடல் பெற்ற தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை ஒவ்வொரு பாடலிலும் முன்னிலைப் படுத்திப் போற்றுவது; இறைவனைப் புகழ்வதோடு இந்நூற் பாடல்கள் சமய உண்மைகளையும் அதிகம் பொருத்திப் பாடப் பெற்றவை.

முதல் பாடலில் இறைவனுடைய திருவுருவமே விசுவரூபமாக உள்ளது என்பதை விரித்துச் சொல்லுகிறார். இரண்டாம் பாடலில் சிவபெருமான் எல்லாச் சமயங்களுக்கும் அப்பாற்பட்ட முழுமுதற் பொருளாக உள்ளவன் என்று மிகவும் அழகுபடக் கூறுகிறார் :

அருவமும் உருவமும் ஆனுய் என்றும்,
திருவமர் மாலொடு திசைமுகன் என்றும்,
உளனே என்றும், இலனே என்றும்,
தளரான் என்றும், தளர்வோன் என்றும்,
ஆதி என்றும், அசோகினன் என்றும்,
போதியிற் பொலிந்த புராணன் என்றும்,
இன்னவை முதலாத் தாமறி அளவை.

'மக்கள் தாம் அறிந்த அளவு நூலின் தன்மையுள் மயங்கியிருக்கிறுர்கள். நீ அவருக்கு அது அதுவாக இருக்கிருய்' என்று கூறுகிறுர். பொதுவாகச் சிவபெருமானைத் 'திருமாலும் திசைமுகனும் ஆனுய்' என்று கூறுவது சைவ மரபு. ஆனல், அசோகினன் என்றும் போதியிற் பொலிந்த புராணன் என்றும் சொல்வது, உண்மையாகவே சமய வேற்றுமை கடந்த நிலை. இதனுல் இவர் யாவையும் ஒன்றுகக் காணும் காட்சிபெற்ற பெருஞானி என்பதை அறிகிறேம்.

மூன்றும் பாடலில், பராக்கிரமச் செயல்கள் சிலவற்றைச் சொல்கிறுர். நான்காம் பாடலில், 'எல்லாப் பொருள்களும் கடலின்கண் அலைகள் எழுந்து கடலிலேயே அடங்குவனபோல நின்னிடை எழுந்து அடங்குகின்றன[1]. ஆயினும் நீ விரவியும் வேருயும் நின்றனை' என்கிறுர்.

அடுத்த பாடலில் இறைவனுடைய இயல்பை உணரும் அருள் பெற்றவருக்கே பிறவி நீங்கும் என்று கூறுகிறுர்.

---

1 தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் தடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறந்திறந்து நிற்பவும் திரிபவும்
நின்னுளே யடங்குகின்ற நீர்மைநின்கண் நின்றதே

என்ற திருமழிசை ஆழ்வார் பாடலை ஒப்புநோக்குக.

*ஆறும் பாடல் இறைவனது திருவுருவத்தின் உண்மைத் தத்துவத்தை எடுத்து உணர்த்துகின்ற தன்மையில் அமைந்துள்ளது :*

தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி
ஆமதி யான்என அமைத்த வாறே;
ஆனுரு வாகிய ஆனேறு ஏறுதல்
இறைவன் யான்என இயற்று மாறே;
அதுஅவள் அவன்என நின்றமை யார்க்கும்
பொதுநிலை யானென உணர்த்திய பொருளே;
முக்கணன் என்பது முத்தீ வேள்வியில்
தொக்க தென்னிடை என்பதோர் சுருக்கே;
வேத மான்மறி ஏந்துதல் மற்றதன்
நாதன் நான்என நவிற்று மாறே;
மூவிலை ஒருதாள் சூலம் ஏந்துதல்
மூவரும் யான்என மொழிந்த வாறே;
எண்வகை மூர்த்தி என்பதிவ் வுலகினில்
உண்மை யான்என உணர்த்திய வாறே.

*“இந்த நிலையை மக்கள் உணராது தம்முள் இகலும்போது இது சிறுவர் செய்கைபோன்ற அறியாமை என்று கண்டு நீ முறுவலித்து இருக்கின்றாய்” என்று இவரே நகைச் சுவைபடக் கூறுகிறார். அடுத்த பாடலில், ‘இறைவனுடைய நிலைமை நினைக்குந்தோறும் மயக்குகின்றது. சொல்நிலை சுருங்கினால்தான் அவன் நிலை அறியமுடியும்’ என்கிறார். அடுத்த பாடல், உடலில் சிக்கிய உயிர்படும் துன்பத்தை எடுத்துக் கூறுகிறது. ஒன்பதாம் பாடலில் ‘உடலோடும் வாழ்க்கையோடும் உயிரைக் கட்டிய கட்டை, கட்டிய நீ அவிழ்க்கின் அல்லது யான் அவிழ்க்க அறியேன்’ என்கிறார். இறுதிப் பாடல் இறைவனைப் போற்றி என்று சொல்லிப் போற்றுகின்ற தன்மையில் அமைந்தது.*

இவ்வாறு இச் சிறு நூலை நாம் நோக்கும்போது இதனுள் பட்டினத்தாருடைய அருள் வாழ்க்கையையும் ஞான முதிர்வையும் எல்லாம் அவனே என்று உணர்ந்து அடங்கி நிற்கின்ற சாந்தி நிலையையும் நன்கு காண்கின்றோம். ஒரு பட்டினத்தார், பல தலங்கள் சுற்றித் திருவொற்றியூர் வந்து முத்திநிலையில் வாழ்ந்து சிவத்தோடு இரண்டறக் கலந்தார் என்று அறிகிறோம். இச் சிறு பிரபந்தத்தைப் பார்க்கும்போது இவரே அவ்வாறு வாழ்ந்து திருவொற்றி யூரில் வந்து உருகிய உள்ளத்தினராய், சித்தவிகாரக் கலக்கங்களெல்லாம் தெளிவு பெற்று, பாச வீடும் பெற்றார் என்று எண்ணத் தோன்றுகிறது. பட்டினத்தார் (14 நூ.) கதையில் சொல்லப்பட்ட பிற செய்திகள் யாவும் இரண்டாம் பட்டினத்தாருக்கே உரியன. திருவொற்றியூர் நிகழ்ச்சி யொன்றுமட்டும் முதல் பட்டினத்தாருக்கு உரியதாயிருக்கலாம்.

**வரகுணபாண்டியன்**

முதல் வரகுண பாண்டியன் மாணிக்கவாசக காலத்தவன் என்று சொன்னோம். அக்காலத்தில் தஞ்சையில் சோழர் அரசு நிலைபெறவில்லை. சோழநாடு வரகுண பாண்டியன் ஆட்சிக்கு உட்பட்டு இருந்தது. இவ்வரகுணன் கி. பி. 835 இல் இறந்தபோது அவன் மகன் சீவல்லபன் பட்டத்துக்கு வந்து கி. பி. 862 வரையில் அரசாண்டான். அவன் காலத்திலும் சோழநாட்டில் பெரும்பகுதி பாண்டியருக்கு உட்பட்டு இருந்தது. தெள்ளாறெறிந்த பல்லவமன்னன் நந்திவர்மனிடத்திலும் அவன் மகன் நிருபதுங்கனிடத்திலும் இவன் போர்களில் தோல்வியுற்றுத் தொண்டை நாட்டுப் பகுதியையும் சோழநாட்டு வட பகுதியையும் இழந்தான். அவனுடைய மகன் இரண்டாம் வரகுணன் 862இல் பட்டம் ஏற்று, 880 வரை அரசாண் டான். பல்லவர் கைப்பற்றிய "சோழநாட்டுப் பகுதியையும்

தொண்டைநாட்டையும் கைப்பற்றவேண்டும் என்று வரகுண பாண்டியன் எண்ணினான். அதற்கேற்ப அக்காலத்தில் சோழநாட்டில் ஒரு பகுதியை அரசாண்டு கொண்டிருந்த விசயாலய சோழனும் முதுமை யெய்தித் தளர்ச்சியுற்றிருந்தான். பாண்டிய வேந்தனும் தன் கருத்தை நிறைவேற்றிக்கொள்வதற்கு உரிய காலம் அதுவே என்று கருதி, கி. பி. 880ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பெரும் படையுடன் சோழநாட்டிற் புகுந்து, அம் மண்டலத்தில் காவிரியாற்றிற்கு வடக்கேயுள்ள மண்ணி நாட்டிலிருந்த இடவை என்ற நகரைக் கைப்பற்றினான். அந் நாட்களில் இளவரசனாயிருந்த ஆதித்த சோழன் இப் பாண்டியனை எதிர்த்துப் போர்புரிந்தும் வெற்றிபெற இயலவில்லை. எனவே, இடவை நகரும் அதைச் சூழ்ந்த நிலப்பரப்பும் வரகுணவர்மன் ஆட்சிக்குள்ளாயின. இவன் சோணாட்டு இடவைமீது படையெடுத்த செய்தி திண்டுக்கல்லுக்கண்மை யிலுள்ள இராமநாதபுரத்தில் காணப்படும் ஒருகல்வெட்டால் அறியப்படுகின்றது. இடவை நகரில் இவன் பாட்டன் முதல் வரகுணபாண்டியன் கட்டிய பாண்டியரது அரண்மனை இருந்த காரணம்பற்றி இவன் முதலில் அதன்மீது படை யெடுத்துச்சென்று அதனையும் அதனைச் சூழ்ந்த பகுதியையும் கைப்பற்றிக்கொண்டான் என்க"[1]. இவ்வாறு வரகுண பாண்டியன் இடவை நகர் அரண்மனையில் சிறிது காலம் தங்கியிருந்தான். அப்படி தங்கியிருந்தபோதுதான் தினமும் திருவிடைமருதூர் சென்று ஏகநாயகரை வழிபட்டுவந்தான்.

வரகுண பாண்டியர் மிகச்சிறந்த சிவபக்தர். அவருடைய பிரமகத்திப் பாவம் இத்தலத்தில் நீங்கிற்று என்று புராணங்கள் கூறும். திருவிடைமருதூர் ஏகநாயகரிடத்து இம் மன்னருக்கு ஈடுபாடு அதிகம். சுந்தரமூர்த்தி கூறுகின்ற

1 பாண்டியர் வரலாறு, சதாசிவ பண்டாரத்தார் 1966, பக்கம் 71-2. அவர் எழுதிய சோழர் வரலாறு முதற்பாகமும் காண்க.

நாயன்மார் செய்த செயற்கரிய திருத்தொண்டுகள் போல இவரும் இங்குப் பல தொண்டுகள் செய்திருக்கிருர். அவற்றைப் பட்டினத்தார் ஓரளவு அறிந்திருந்தமையால் ஒரு பாடலில் விரிவாகக் கூறுகிருர். கள்ளனுடைய மெய்யில் திருநீற்றைக் கண்டபோது, பாண்டியர் அவனுடைய விலங்கைத் தறித்து விடுதலே செய்தார். மயிலுக்குப் போர்வை கொடுத்த வள்ளல் போல, நரிகளின் ஊளையைக் கேட்டு இவை அரனைப் பாடின என்று கருதிக் குளிரி னின்றும் பாதுகாக்கப் போர்வை யளித்தார். நீரில் கிடந்த தவளைகளின் ஒலியைக் கேட்டு 'இவை ஈசனை ஏத்தி வேத பாராயணம் செய்தன' என்று எண்ணி அவற்றுக்குக் காசும் பொன்னும் கலந்து தூவினர். ஒருவன் சுவாமிக்கு வேண்டிய எண்ணெய்க்காக உலர்த்தியிருந்த எள்ளை எடுத்துத் தின்னக் கண்டு அவனைப் பிடித்து விசாரித்தபோது, அவன் பழமொழியில் சொல்வதுபோல, 'கோயில் எள்ளைத் தின்ருல் அடுத்த பிறவியிலும் இங்கு மாடாய்ப் பிறந்து உழைப்பேன்' என்ருன். கேட்ட அரசர், அத்தகைய பேறு தமக்கு வர வேண்டும் என்ற கருத்தில், அவன் வாயிலிருந்த எள்ளைத் தாம் வாங்கி உண்டார். திருவிடைமருதூர் வீதியில் உருண்டு கிடந்த ஒரு மனிதன் தலை எலும்பைக் கண்டு வணங்கி 'எம் தலையும் இவ்வாறு கிடக்கும் பேறு பெறுமாக' என்று அடுத்தடுத்து இரந்தார். கோயில் முற்றத்தில் நாயின் மலம் கிடப்பக் கண்டு, அதைத் தாமே எடுத்தெறிந்து சுத்தம் செய்தார். காய்த்துப் பழுத்திருந்த வேப்ப மரத்தி லிருந்து உதிர்ந்த வேப்பம் பழத்தின் உருண்டு நீண்ட வடிவம் இவருக்குச் சிவலிங்க வடிவை நினைவூட்டவே, அவ்வாறு காய்த்துப் பழுத்த வேம்புகளுக்கெல்லாம், அவை வெயிலில் காயாதவாறு விதானம் அமைத்தார். இத்தனைக்கும் மேலாக, தாம் விரும்பிய பொருளைச் சிவபெருமானுக்கு அளிக்கவேண்டும் என்பது உணர்ந்து, தமக்குப் பெரிதும் விருப்பமான காதல் மனைவியைச் சிவார்ப்பிதமாக அளித்தார்.

*இவ்வாறு வரகுண பாண்டியர் செய்த அரிய தொண்டுகள் எண்ணற்றவையாகும்.*

*வரகுண பாண்டியனைச் சிறப்பிக்கின்ற தனிப் பாடல்கள் உரைகளில் சில காணப்படுகின்றன. முதற்பாடல் எல்லா உரைகாரரும் மேற்கோள் காட்டும் பாடல், வழி எதுகைக்கு எடுத்துக்காட்டு :*

**மண்டலம் பண்டுண்ட திண்டேர் வரகுணன்**
**தொண்டியின்வாய்க்**
**கண்டலந் தண்துறைக் கண்டதொன் றுண்டு**
**கனமகரக்**
**குண்டலங் கெண்டை யிரண்டொடு தொண்டையும்**
**கொண்டொர்திங்கள்**
**மண்டலம் வண்டலம் பக்கொண்டல் தாழ**
**வருகின்றதே.**

*மற்றொரு பாடல், இடைச்சுரத்துக் கண்டோர் விலக்குதல் என்னும் துறைக்குரியது; களவியற் காரிகையுரையில் மட்டும் காணப்படுவது :*

**நாளை வரகுணர்கோன் நாங்கையிலே தங்கலாம்,**
**மீளும், அமரும், விடிந்துபோம், - நீளமுமோர்**
**அம்பிட் டெயுந்தூரம் அவ்வூர் : அயில்வேற்கட்**
**கொம்புக்குங் காலாறக் கொண்டு.**

## காலம்

*நம்பியாண்டார் நம்பி 11ஆம் திருமுறையுள் பட்டினத்து அடிகளுடைய ஐந்து பிரபந்தங்களைத் தொகுத்திருப்பதனால், அவருக்கு இவர் முற்பட்டவர் என்பது தெளிவு. நம்பியாண்டார் நம்பியின் காலம் கி.பி. 1000–1040 என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டது[1]. ஆகவே, பட்டினத்து*

---

1 எமது 11ஆம் நூற்றுண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு பார்க்க.

அடிகள், இவருக்கு முந்தியவர் ஆகிறுர். இனி, இவர் ‘ திருந்திய அன்பின் பெருந்துறைப் பிள்ளையும் ’ (திருவிடை மருதூர் மும்மணிக்கோவை – பாட்டு 28, வரி 31) என்று குறிப்பிடுவதால், பெருந்துறைப் பிள்ளையாகிய திருவாசகம் பாடிய மாணிக்கவாசகருக்கு இவர் பிற்பட்டவர் என்பது தெளிவாகிறது. மாணிக்கவாசகர் காலம் 9ஆம் நூற்றுண்டின் தொடக்கம் (முதல் வரகுண பாண்டியன் காலம்) என்பது பொதுவாக இக்கால அறிஞர் ஒப்புக்கொண்டது. எனவே, பட்டினத்தடிகள் காலம் 9ஆம் நூற்றுண்டின் தொடக்கத்துக்கும் 11ஆம் நூற்றுண்டின் தொடக்கத்துக்கும் இடைப்பட்ட பகுதி என்பது ஒப்புக்கொள்ளக் கூடியதே.

இனி மற்றொரு குறிப்பும் சொல்லத்தகும். திருவிடை மருதூரில் வழிபட்டுப் பேறு பெற்ற இரண்டாம் வரகுண பாண்டியனை வரகுண தேவர் என்று இவர் பெரிதும் போற்றிச் சொல்லியதை முன்னமே குறிப்பிட்டோம். இவ் வரகுண பாண்டியனுடைய செய்தற்கரிய செயல்கள் எட்டு இங்கு பெரிதும் விதந்து கூறப்பட்டுள்ளன. இவ்வாறு இவ்வளவு விரிவாக வரகுண பாண்டியன பக்திச் சிறப்பைப் பிற்காலத்தில் திருவிளையாடற் புராணம் முதலிய நூல்கள் பெருக்கிக் கூறிய போதிலும்கூட பட்டினத்தாருக்கு முன் வரகுண தேவர் வரலாற்றுச் செய்திகளை யாரும் குறிப்பிட்ட தில்லை. ஆதலால், காலத்தினுடைய பொருத்தம் நோக்கி, பட்டினத்தடிகள் இதை நேரே அறிந்திருந்தார் என்று கருதத் தோன்றுகிறது. இதன் பொருளாவது, வரகுண தேவர் வரலாற்றுள் இவ்வாறு அவர்தம் பக்திச் செயல்கள் நிகழ்ந்த காலத்தில் பட்டினத்தார் செல்வமிக்க இளைஞராய் வாழ்ந்திருக்கலாம்; வரகுண பாண்டியன் காலமானபோது பட்டினத்தார் வயதில் மிகவும் முதிர்ந்து, ஞானியாகித் திருவிடைமருதூரிலேயே தாங்கி ஏகநாயகர் மீதும் பிரபந்தம் பாடினர். அப்போது தாம் இளமையில் அறிந்த

வரகுணனுடைய சிவபத்திச் செயல்களை நினைவுகூர்ந்து அவற்றையெல்லாம் பாட்டில் விரித்துப் பாடினர் என்று கருதலாம். இதற்குச் சரித்திரச் சான்றும் துணைபுரிகிறது.

கி. பி. 792 முதல் 835 வரை ஆட்சி புரிந்தான், முதல் வரகுண பாண்டியன் என்பவன். திருக்கோவையார்ப் பாடலில் "வரகுணனும் தென்னவனேத்து சிற்றம்பலத்தான்" என்ற விடத்துக் குறிப்பிடப்பட்டுள்ள வரகுணன் முதலாம் வரகுணனே என்றும், இவன் காலத்தே தான் மாணிக்கவாசகர் வாழ்ந்தார் என்றும், அவர் வரலாற்றில் புராணக் கதைகள் கூறும் அரிமர்த்தன பாண்டியன் இவனே என்றும், ஆராய்ச்சியாளர் ஒருமுகமாகக் கூறுவர். எப்படியும் மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இவ்வரகுணன் காலத்தில் வாழ்ந்தார் என்பது உண்மையே. ஆனால் இவனே பட்டினத்தார் குறிப்பிடும் வரகுணன் என்று கருதுவது பொருந்தாது. வரகுணனுடைய சிவப்பணிகளைப் பட்டினத்தார் மிகவும் போற்றிக் கூறுகிறார் என்று முன்னமே காட்டினோம். கூறுகின்ற முறைமையால் அவர் நேரே இத்தன்மையைக் கண்டறிந்து அவற்றில் காணப்படும் தன்னை மறந்த நிலையில் ஈடுபட்டுப் பாடினர் என்று கருதவேண்டும். முன்பே நடந்திருந்த பழங் கதையை இவர் இவ்வாறு குறிப்பிடவில்லை. எத்தனையோ தொண்டர்கள் செயற்கரிய செயல்கள் எத்துணையோ செய்துள்ளனர். சமயாசாரியர் நால்வருமே செய்திருக்கிறார்கள். அவற்றையெல்லாம் பட்டினத்தார் 'வித்தகப் பாடல் முத்திறத்தடியரும், திருத்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்' என இரண்டே வரிகளில் முடித்துவிட்டார். மேலும், இவர் முதல் வரகுணன் காலத்தே வாழ்ந்து அவன் செய்த பணிகளை நேரில் உணர்ந்து இவ்வாறு பாடினர் என்பதும் பொருந்தாது. இவ்வாறு சொன்னால் இவர் அதே

வரகுணன் காலத்திலிருந்த மாணிக்கவாசகருக்குச் சமகாலத்தவரென்பது பொருளாகும். இது உண்மையுமல்ல; சம்பிரதாயத்துக்கு முரணுமாகும். உடன் காலத்தில் வாழ்ந்த நாயன்மார் பலருடைய வரலாறுகள் ஒன்ருகவே குறிப்பிடப்படுகின்றன. சம்பந்தரும் அப்பரும் ஒரு காலத்தில் வாழ்ந்தவர்கள், சிறுத்தொண்டரும் பிறரும் அதே காலத்தில் வாழ்ந்தார்கள் என்ற செய்திகளைப் புராணம் கூறுகிறது. அது போலவே, இன்னும் பின்ஞல் சுந்தரரும் சேரமானும் ஒரு காலத்து வாழ்ந்தார்கள்; கலிக்காமர், நரசிங்கமுனையரையர் போன்ருரும் அதே காலத்தினர் என்றும் நாம் அறிகிறேம். மாணிக்கவாசகரைப் பற்றி அப்படிப்பட்ட வரலாறு எதுவும் சொல்வதில்லை. பட்டினத்தார் உடன் காலத்தவர் என்ருல் வரலாறு ஏதேனும் குறிப்பிடவேண்டும். அவ்வாறு இல்லை. மேலும் பட்டினத்தார் குறிப்பிடுகின்ற முறையில் இது உடன் கால வரலாறு அன்று, பழைய வரலாறு என்றே தெரிகிறது. ஆதலால் பட்டினத்தார் குறிப்பிடுவது முதலாம் வரகுணஞ, இரண்டாம் வரகுணஞ என்பது முடிவு செய்ய வேண்டும். முதல் வரகுணன் சிற்றம்பலத்துப் பெருமானிடத்து மிக்க பக்தி பூண்டிருந்தான். அவனுடைய பேரனை இரண்டாம் வரகுணனும் சிவபெருமானிடத்து இன்னும் அதிகமான பக்தி பூண்டிருந்தான் என்று அறிகிறேம். இப்பக்திப் பெருக்கத்தாலேயே, நாயன்மார் செய்தது போன்ற அருஞ் செயல்களைச் செய்தார். நால்வரைக் குறிப்பிட்ட பின் பட்டினத்தார் சிவவாக்கிய தேவரைக் குறிப்பிடுகிருர். இங்கும் இரண்டே வரிகளில்

> அத்தகு செல்வத்து அவமதித் தருளிய
> சித்த மார்சிவ வாக்கிய தேவரும்

என்று சொல்லுகிருர். இச்சிவ வாக்கியர் பட்டினத்தாருக்கு நெடுங்காலம் முன்னமே வாழ்ந்தவர் என்று கருத வேண்டும்.

அடுத்து வரகுணன் என்று வரும்போதுதான் 22 வரிகளில் அவனுடைய பக்திச் சிறப்பையும், சிவத்தொண்டையும் விரித்து உரைக்கிருர். இதுகாறும் கூறியவற்ருல் பட்டினத்தார் போற்றுகின்ற வரகுணன், முதலாம் வரகுணன் அல்லன், அவன் பேரனுய் ஒன்பதாம் நூற்ருண்டின் இறுதிப் பகுதியில் வாழ்ந்து இடவை நகரிலே தங்கி வழிபட்ட இரண்டாம் வரகுணன் என்பது தெளிவாகும்.

இடவை நகருக்கும் திருவிடைமருதூருக்கும் எட்டு மைல் தூரம் இருக்கக்கூடும். இடவை நகரில் முதலாம் வரகுணன் கட்டிய அரண்மனை ஒன்றிருந்தது. அங்கே வரகுணன் தங்கியிருந்தான். அங்கிருந்து நாள் தோறும் திருவிடைமருதூருக்குச் சென்று வழிபட்டான் என்பதைப் பட்டினத்தார் குறிப்புக்களால் அறிகிரும். வரகுணன் செயல்கள் பலவற்றில், அரியன என்று தாம் கருதிய சிலவற்றையே பட்டினத்தார் குறிப்பிடுகிருர். இவை ஒரே நாளில் அல்லது ஒரே காலத்தில் நிகழ்ந்தன அல்ல; நெடுநாளைய வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவங்களாகும். இவ்வாறு வரகுணன் இடவையில் தங்கித் திருவிடை மருதூருக்கு செல்வதாஞல் இடவையிலிருந்து குதிரை மேல்தான் செல்லவேண்டும். குதிரைமீது செல்லும்போது பாதையைச் சூழ்ந்த இடம் நாட்டுப்புறமே, நகர் அன்று. பல இயற்கைக் காட்சிகளை அவன் கண்டு அனுபவித்திருக்க வேண்டும். இவ்வாறுள்ள இயற்கைச் சூழ்நிலையில் அவன் சென்றபோதுதான் நரியின் ஊளையைக் கேட்டிருக்க முடியும்; குவளைப் புனலில் தவளை அரற்றியதையும், மருத வட்டத்து ஒரு தனிக்கிடந்த மனிதன் தலையையும், காம்பு அவிழ்ந்து விழுந்த வேம்புகளையும், அத்தகைய ஒரு சூழலில்தான் கண்டிருக்க முடியும். இவை நகரத்தில் காண்பதற்கில்லை; பெரிய தலம் என்பது காரணமாகவும்,

அரசன் ஆளுகை என்ற காரணமாகவும், இக்காட்சிகள் நகரில் இருக்கவும் முடியாது, இருந்தாலும் விலக்கப் பட்டிருக்கும். ஆதலால், இவ்வரசன் நாள்தோறும் இடவையிலிருந்து திருவிடைமருதூர் வந்து ஏகநாயகரைத் தரிசித்தான்; தரிசிக்க வந்தபோது பலநிலைகளில் பலவிதமான சிவப்பணி செய்தான். சிவப் பணிகள் மும்மணிக்கோவையில் குறிப்பிட்டிருக்கக் கண்டோம்.

இவை யாவும் பொய் என்றும் அறிவுக்குப் பொருத்த மல்ல என்றும் புராணக் கதை என்றும் கருதி ஒதுக்க முயல்வது அறிவுடைமையாகாது. காலம் கி. பி. 880 என்பது நினைவிருக்க வேண்டும். கி. பி. 1870இல் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் சாமிநாத ஐயர் தமிழ்பயின்ற கதையைப் படித்தால் இது புராணக்கதையோ என்று ஐயம் எழுகிறது. நம்மில் யாரும் மீனாட்சிசுந்தரம் பிள்ளையைப் பார்க்காவிட்டாலும், பலர் ஐயர் அவர்களைப் பார்த்தும் பழகியும் இருப்பதால், அவர் கல்வி கற்றது புராணக் கதை அல்ல, உண்மைதான் என்று நம்புகிறோம். காலத்தில் ஆயிரம் ஆண்டு பின் நோக்கிச் சென்றால், அன்றைய நிகழ்ச்சிகள் இன்றைய நம்பிக்கைக்குச் சோதனையாக இருத்தல் உண்மை. அதனாலேயே அவை பொய்யாகிவிடமாட்டா. எனவே, வரகுண பாண்டியனுடைய பக்திச் செயல்களை எவ்வளவுதான் மிகைப் படுத்திச் சொல்லியிருந்த போதிலும்கூட, பட்டினத்தார் அவற்றுள் பெரும்பகுதியைத் தாம் நேரில் அறிந்திருந்தார் என்று கொள்வதே முறைமை. இலக்கியத்தை இலக்கியம், சமயம், சரித்திரம் என்ற மூன்று கண்ணோடும் இங்குப் பார்க்க வேண்டும். அப்போதுதான் வரகுண பாண்டியன் வாழ்ந்த சிவார்ப்பிதமான வாழ்க்கையும் அதைப் பட்டினத்தார் நேரில் கண்டு கேட்டு அறிந்தமையும் நன்கு புலப்படும்.

ஆதலால் 11ஆம் திருமுறைப் பட்டினத்தார் இரண்டாம் வரகுண பாண்டியன் காலத்தில் இளைஞராக வாழ்ந்து, பின்னால் அனைத்தையும் துறந்து சிவஞானியாக வளர்ந்து, திருவிடைமருதூர் மும்மணிக்கோவையைப் பாடினார் என்று நாம் கருதுகிறோம். இடவையில்[1] வரகுண பாண்டியன் வந்து தங்கியது கி. பி. 880 என்று அறிகிறோம். சரித்திரம், செய்திகள் நிலையில்லாமல் மாறிக்கொண்டிருப்பவை. இடவையில் விசயாலயனையும் அவன் இளம்புதல்வனை ஆதித்தனையும் வென்ற வரகுணன் அடுத்த காலத்தில் அதே ஆதித்தனிடத்தில் தோற்றுச் சோழநாட்டை விட்டே ஓடி விட்டான் என்று சரித்திரம் சொல்லுகிறது. இதையும் ஒருகால் பட்டினத்தடிகள் பார்த்திருக்கக் கூடும். இந்த அவலச்சுவையை நன்குணர்ந்து, அவர் திருவிடைமருதூர்ப் பிரபந்தம் பாடியபோது, வரகுணனைச் சிறப்பிக்கவென்றே பல வரிகள் இவ்வாறு பாடியிருக்கிறார் என்று கருதுகிறோம். ஆதலால் பட்டினத்தார் சிவஞானியாகி நூல் பாடிய காலம் கி. பி. 880க்குச் சில ஆண்டுகள் கழித்து 900 – 925 என்று கருதுகிறோம். சரித்திரம், சமயம் இரண்டும் சேர்ந்து இலக்கியத்துக்குச் சிறு வெளிச்சம் தருவதனால் இதை ஒருவாறு ஊகித்து அறிய முடிகிறது.

---

1 இவ இடவை இன்று இடையானூர் என்ற பெயரில் ஆடுதுறைக்கும் திருப்பனந்தாளுக்கும் இடையில் உள்ள கிராமப் பிரதேசமா யிருக்கலாம். இடவை அரண்மனை முதலியன 418 அன்றே அழிந்துபோயின,

அத்தியாயம் 9

# சைவ இலக்கியம் - 3

## ஒன்பதாந் திருமுறை

## முன்னுரை

### தொகை நூல்கள்

பல ஆசிரியர் எழுதிய பாடல்களைத் தொகுத்த நூல்களுக்குத் தொகை நூல் என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது[1] இலக்கணம், இலக்கியம், சமயம் ஆகிய எல்லாத் துறைகளிலும் தொகை நூல்கள் உள்ளன. இன்று கிடைக்காத புறப்பொருள் இலக்கணமாகிய பன்னிரு படலம் என்பது அகத்திய முனிவருடைய சீடர் பன்னிருவர் செய்த பன்னிரு படலங்களின் தொகுதி என்று பழம் பாடல் தெரிவிக்கும். பன்னிரு பாட்டியல் என்பது இப்போது கிடைக்கின்ற ஒரு பாட்டியல் நூல். இதில் 15 புலவர்களுடைய பாடல்கள் காணப்படுகின்றன. இவை இரண்டும் இலக்கணத்தில் எழுந்த தொகை நூல் ஆகும்.

இலக்கியத்தில் எட்டுத் தொகை, பத்துப்பாட்டு முதலியன தொகை நூல்களே. மேலும் இவற்றுள் நூல்களின் தொகுப்பான தொகை நூலும், தனிப் பாடல்களின் தொகுப்பான தொகை நூலும், உள்ளன. எட்டுத்தொகை எட்டு நூல்களின் தொகுப்பு ஆகும். அவற்றுள் ஒவ்வொன்றும் பல தனிப் பாடல்களின் தொகுப்பு ஆகும். பத்துப் பாட்டு

1 தொகை நூல் என்ற தொடரையும் கருத்தையும் முதன்முதல் வையாபுரிப்பிள்ளை வழங்கத் தலைப்பட்டார். புறத்திரட்டு முகவுரை பார்க்க.

பத்து நீண்ட தனிப்பாடலானான நூல்களின் தொகுப்பு. இவைஇரண்டும் சங்க காலத்துத் தொகை நூல்கள். பதினெண் கீழ்க்கணக்கினுள் நாலடியார் என்பது வையை ஆற்றில் இட்டுக் கிடைத்த பாடல்களின் தொகுப்பு ஆதலால் இதுவும் ஒரு தொகை நூல் என்றே கருதத்தக்கது. புறத் திரட்டு என்பது ஒரு பண்டையிலக்கியத் தொகைநூல். பிற் காலத்தில் தொகுக்கப் பெற்ற பல தனிப்பாடல் திரட்டுக்கள், தனிச்செய்யுள் சிந்தாமணி, பன்னூற்றிரட்டு, பெருந்தொகை போன்ற நூல்கள் யாவும் இலக்கியத் துறையில் எழுந்த தனிப்பாடல்களின் தொகை நூல்கள் ஆகும்.

சமயத்துறையில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்பதை ஒரு தொகுப்பாகக் கருதினேமானால், இதுவும் வைணவ சமயத்தில் எழுந்த பல தனி நூல்களைக் கொண்ட ஒரு சமயத் தொகை நூல் ஆகும். 15ஆம் நூற்றாண்டில் தத்துவராயர் தொகுத்த பெருந்திரட்டு, குறுந்திரட்டு என்ற இரண்டும், பின்னர் எழுந்த சங்கர நாராயணத் திரட்டு என்பதும், வேதாந்த சமயத் தொகை நூல்கள். 20ஆம் நூற்றாண்டில் தொகுக்கப் பட்ட சைவ மஞ்சரி என்பதும் சிவ புராணதி தோத்திர மஞ்சரி முதலிய பலவும் சைவ சமயத் தொகை நூல்கள். பத்தாயிரம் பாடல் கொண்ட வேதாந்த மனன சிந்தாமணியும் இந்த நூற்றாண்டின் பெரிய தொகை நூல் (திரட்டு).

## சைவத் தொகை நூல்கள்

இவ்வகைத் தொகைநூல்களாய்க் கருதுவதற்கு உரி யவை ஒன்பதாம் திருமுறையும் பதினொரு திருமுறையும். இவைசைவ சமயத்துறையில் தோத்திரமாயமைந்த தொகை நூல்களாகும். இவற்றை முறையே ஒன்பது ஆசிரியரும் பன்னிரு ஆசிரியரும் செய்தனர் என்பது வழக்கு. இவ் விரண்டையும் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பி; தொகுத்த

காலம் 11ஆம் நூற்றுண்டின் தொடக்க ஆண்டுகள், இராச ராசசோழ மன்னன் காலம்.

இவ்வாறு இவ்விரு சைவத் திருமுறைகளும் தொகுக்கப் பெறுவதற்கு ஒரு காரணமும் அமைந்திருந்தது. ஒருகால் சைவ மக்கள் நாம் கூறப்போகும் கருத்தை ஒப்புக்கொள்ள மனமில்லாது போயினுங்கூட, இக்கருத்துச் சிந்தித்துப் பார்க்கத் தகுந்தது. நம்பியாண்டார் நம்பி இவ்விரு திரு முறைகளையும் எப்படித் தொகுத்தார் என்பது அடுத்து விளக்கப் பெறுகிறது[1]. ஏன் தொகுத்தார் என்பதை மட்டும் சில சொற்களால் இங்குத் தெளிவுபடுத்தலாம்.

நம்பியாண்டார் நம்பி பதினெரு திருமுறைகளைத் தொகுத்தார். சம்பந்தர் அப்பர் சுந்தரர் — ஏழு திருமுறைகள். மாணிக்கவாசகர் பாடிய திருவாசகம் (அவர் பாடியதாகக் கருதப்பட்ட திருக்கோவையாருடன்) எட்டாந்திருமுறை. மன்னனுடைய வேண்டுகோளுக்கிணங்கி அவர் கிடைத்த திருவிசைப்பாக்களை ஒன்பது என்ற மற்ருெரு திருமுறை. யாகவும் பாகுபடுத்தினர். திருமூலர் திருமந்திரம் பத்தாந் திருமுறை. இவ்வாறு தொகுத்தமைக்கும் ஒரு காரணம் புலப்படுகிறது.

நம்பியாண்டார் நம்பி திருமுறைகளைத் தொகுத்த காலம் கி.பி. 1000 முதல் 1040க்குள் இருக்கலாம். சைவத்தில் இவர் திருமுறைகளைத் தொகுத்தமைபோல, இவருக்குச் சுமார் இரு நூற்றுண்டுகளுக்கு முன்னமே வைணவத்தில் நாதமுனிகள் என்ற ஆசிரியர் தோன்றி, நாலாயிரப் பிரபந்தங்களை வெளிப்படுத்தினர். ஆட்சி குன்றியிருந்த இப்பிரபந்தங்களை அவர் நேரே நம்மாழ்வார் அனுக் கிரகத்தால், அவர் சீடர் மதுரகவியின் சீடரான

1 எமது 11ஆம் நூற்றுண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு ஒன்பதாந் திருமுறை என்ற பகுதியையும் பார்க்க.

பராங்குசதாசர் காட்டிய வழியில் பெற்றார் என்பது வரலாறு. காலம் 9ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி. வழக்குக் குன்றியிருந்த பிரபந்தங்களை அவர் பெற்று, புதிதாகத் தமிழ் நாட்டிலுள்ள திருமால் ஆலயங்களிலும் வைணவரிடையிலும் பெருமளவு ஆட்சிக்கு வரும்படி செய்தார். தமிழ்மொழி மூலமாகத் திருமாலைப் போற்றுதலும், பாகவதர்கள் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து பாடுதலும் நாடெங்கும் பெருகிற்று. இராசராச மன்னன் ஆட்சி தொடங்கிச் சில ஆண்டுகள் வரையில் இந்த நிலை நாட்டில் நிலவிற்று. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எவ்வாறு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்கள் மறைந்து போயிருந்தனவோ அந்த நிலையில், சுமார் கி.பி. 1000ஐ ஒட்டி, சைவப் பாசுரங்களான தேவார திருவாசகங்கள் இருந்தன. இதன்பின் நம்பியாண்டார் நம்பி தோன்றினார். வைணவத்தில் நாதமுனிகள் செய்த பெருஞ்சேவையை இவர் சைவத்தில் செய்தார். அரசன் வேண்டுகோளாலும் இறைவன் அருளாலும், இவர் தேவாரங்களையெல்லாம் தேடித் தொகுத்து அமைத்து, இசையும் வகுக்கச் செய்து, நாடெங்கும் தேவார முழக்கம் பெருகும்படி செய்தார்.

அக்காலத்தில் சைவ மக்கள், தங்கள் முன்னே வைணவப் பாசுரங்கள் புதிய ஒளி பெற்று, எழுச்சியோடு மக்கள் வாழ்க்கையை வளம்படுத்திய நிலையைக் கண்டார்கள். தங்கள் சமயத்திலும் பாசுரங்கள் மூலமாக இத்தகைய வளம் பெருக வேண்டுமென்று விரும்பினார்கள். இவ்விருப்பமே, நம்பியாண்டார் நம்பி, தம் காலத்திலும் தமக்கு முன்னும் சைவபரமாக எழுந்துள்ள இசைப் பாடல்களையும் இயற் றமிழ்ப் பாடல்களையும் தேடித் தொகுக்கச் செய்தது. இவ்வாறு இவர் கொண்ட பெரு முயற்சிக்கு வைணவர் செய்திருந்த சாதனையே பெருந் தூண்டுகோலாக அமைந்தது என்று யாம் கருதுகிறோம். தேவார திருவாசகங்களான பெரு நூல்களை இவர் எட்டுத் திருமுறைகளைத் தொகுத்த

பின், பின்னும் சில திருமுறைத் தொகுப்புக்களைத் தொகுத்ததற்குக் காரணம் இதுவே. கிடைத்த சைவ நூல்களையெல்லாம் ஒன்று சேர்க்கவேண்டும் என்ற ஆவலால் விளைந்தனவே ஒன்பது பதினொன்று திருமுறைகள். ஒன்பது, இசைப் பாடலாதலால் எட்டுவரையுள்ள இசைப்பாடல்களோடு இதுவும் சேர்ந்து ஒன்பதாயிற்று. பதினொன்று பொதுவாக இயற்றமிழாதலால், ஒன்பதின்பின், இயற்றமிழ்ப் பெருநூலான திருமந்திரம் பத்தாகச் சேர்க்கப்பட்டு, ஏனைய தனி இயற்றமிழ்ப் பிரபந்தங்கள் பதினொன்று ஆகத் தொகுக்கப் பெற்றன. அரசன் வேண்டுகோளும் இறைவன் திருவருளும் பொல்லாப் பிள்ளையாரின் பேரருளுக்குப் பாத்திரமாயிருந்த நம்பியாண்டார் நம்பிக்குத் துணை செய்தன. இதுவே சைவத் திருமுறைகளில், ஒன்பது பதினொன்று என்ற இரு தொகை நூல்கள் உருவம் பெற்ற வரலாறு. இதைப் பின்னே விரிவாகக் கூறுகிறோம்.

## பன்னிரு திருமுறை - இயலும் இசையும்

| திருமுறை எண் | பெயர் | ஆசிரியர் | இயல்–இசை |
|---|---|---|---|
| 1, 2, 3. | தேவாரம் – திருக்கடைக்காப்பு | சம்பந்தர் | இசை |
| 4, 5, 6. | தேவாரம் | அப்பர் | இசை |
| 7. | தேவாரம் – திருப்பாட்டு | சுந்தரர் | இசை |
| 8. | திருவாசகம் | மாணிக்கவாசகர் | இசை |
| 9. | திருவிசைப்பா திருப்பல்லாண்டு | 9 பேர் | இசை |
| 10. | திருமந்திரம் | திருமூலர் | இயல் |
| 11. | பிரபந்தமாலை | 12 பேர் | இயல்[1] |
| 12. | திருத்தொண்டர் புராணம் | சேக்கிழார் | இயல் |

1 இவ்வியல் நூலுள், காரைக்காலம்மையின் திருவாலங்காட்டுப் பதிகம் இரண்டுமட்டும் இசை.

# ஒன்பதாந் திருமுறை

## வரலாறு

*தேவார திருவாசகம் முதல் பெரியபுராணம் இறுதியாகவுள்ள அருட்பாசுரங்கள் சைவத் திருமுறை எனப் பெயர் பெறும். தனித்தனிப் புத்தகங்களாக முறைப்படுத்தப் பட்டமையால் இவை திருமுறை எனப் பெயர் சூட்டப் பெற்றவை. கி. பி. 985-1014 வரை தஞ்சையில் ஆட்சி புரிந்த முதலாம் இராசராச மன்னன் தன்னிடத்தில் வந்த சிவனடியார் மூவர் முதலிகளான சம்பந்தர் அப்பர் சுந்தரர் என்போர் பாடிவைத்த தேவாரப் பதிகங்களில் தாங்கள் அறிந்த ஒவ்வொன்றை மட்டுமே ஓதிவரக் கேட்டான். கேட்டு அவற்றின் பக்திச்சுவையில் ஈடுபட்ட மன்னன், அவை முழுமையும் அறியவேண்டும் என்று விரும்பி, நாடெங்கும் தேடிப்பார்த்துக் கிடைக்காமையால் மனம் வருந்தியிருந்தான். அதுகாலை திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பி பொல்லாப் பிள்ளையாரின்*[1] *அருள்பெற்றிருந்தமை கேள்வியுற்று, அங்கு வந்து நம்பியை வேண்டி, அவர்மூலம் பொல்லாப் பிள்ளையாரால் தேவாரப் பதிகங்கள் இருந்த இடம் உணர்த்தப் பெற்று அங்கு அடைந்து அங்குக் கிடைத்த பதிகங்களைப் போற்றி எடுத்து நம்பியாலேயே ஏழு திருமுறைகளாக அவற்றை முறைப்படுத்துவித்தான். உமாபதி சிவாசாரியர் பாடிய திருமுறை கண்ட புராணம் இவ்வரலாற்றைத் தெளிவுபடக் கூறுகிறது.*

**பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகம் முந்நூற்று**
**எண்பத்து நான்கினால் இலங்குதிரு முறைமூன்று;**
**நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால்;**
**வண்பெற்ற முறைஒன்று நூற்றினால் வன்றொண்டர்.**

---

1 பொல்லாப் பிள்ளையார்- உளியால் செதுக்கிப் பொள்ளாதபடி தாமே தோன்றிய மூர்த்தி.

*இப்பாடல் தேவாரப் பதிகங்கள் வகுக்கப்பெற்ற முறை கூறுகிறது. சம்பந்தர் பதிகங்கள் 384–திருமுறைகள் முதல் மூன்று; அப்பர் பதிகங்கள் 307–திருமுறைகள் அடுத்த மூன்று; சுந்தரர் பதிகங்கள் 100–திருமுறை ஒன்று: ஆகத் திருமுறைகள் ஏழு. அடுத்த பாடல், எட்டு–ஒன்பது திருமுறைப் பதிகங்கள் வகுக்கப்பெற்ற அமைதியைக் கூறுகிறது:*

**ஆகவளர் திருமுறை ஏழ்; அருட்டிருவா சகமொன்று;**
**மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை ஒன்று; சிவ**
**போகமிகு மந்திரமாம் முறைஒன்று; புகழ்பெறவே**
**பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள்.**

*ஆக, முன் சொல்லியபடி தேவாரத் திருமுறைகள் ஏழு; திருவாசகம் ஒரு திருமுறை; திருவிசைப்பாமாலை முறையொன்று; திருமந்திரமொன்று: ஆகத் திருமுறைகள் பத்து என இப்பாடல் கூறுகிறது. இவ்வாறு வகுத்த பின்னர், 'திருமுகப்பாசுரம் முதலான பதிகங்களையும் ஒரு திருமுறையாகச் செய்க' என அரசன் வேண்ட, நம்பி அவற்றைப் பதினொராந் திருமுறையாகப் பண்ணினர் என்று அடுத்த பாடல் சொல்லுகிறது. இவ்வாறு பதினொரு திருமுறைகள் நம்பியால் வகுக்கப் பெற்றன. நம்பிக்குப் பின் 12ஆம் நூற்றாண்டில் சேக்கிழார் பெரிய புராணம் பாடிய போது, அக்காலத்திலிருந்த பெரியோர் இப்புராணத்தைப் பன்னிரண்டாம் திருமுறையாக வகுத்தார்கள் என்று சேக்கிழார் புராணம் (69) கூறுகிறது:*

**மூவ ரோதுதிரு முறைகள் ஏழு,திரு**
**வாதவூ ரர்முறை யொன்று,இசைப்**
**பாவ ரைந்த முறை யொன்று, மூவர்முறை**
**யொன்று, பாசுரம தாதியாக்**

கோவை செய்தமுறை யொன்று, சேவையர்
குலாதி நீதிமுறை யொன்றுடன்
பாவை பாகர்திரு வருள் சிறந்தமுறை
பன்னி ரண்டென வகுத்தபின்.

இதுவே பன்னிரு திருமுறைகள் வகுத்த வரலாறு. இவ் வரலாறுகளைக் கூறுகின்ற திருமுறை கண்ட புராணம், சேக்கிழார் புராணம் ஆகிய இரண்டையும் உமாபதி சிவா சாரியரே பாடினர் என்பது வரலாறு. இவர் காலம் கி. பி. 1300–1330 ஆகும். இவர் சேக்கிழார் காலத்துக்குச் சுமார் இருநூறு ஆண்டுகள் பின் வந்தவர்; ஆகவே காலத்தில், எவரையும் பார்க்க மிகவும் நெருங்கி வாழ்ந்தவர் என்பது தெளிவு. தேவாரத் திருமுறை கண்டெடுத்து வகுக்கப் பெற்ற தில்லைத் தலத்துக்கு இவர் உரியவர். ஆகவே இருவகையா லும் இவர் செய்திகளை நன்கு அறிந்தும் ஆராய்ந்தும் தம் நூல்களைச் செய்தார் என்பதில் ஐயமில்லை.[1]

உமாபதியார் ஆகமம் அறிந்த சிவாசாரியர் ஆனமையால், தேவாரப் பதிகங்களை ஏழாக வகுத்ததற்கும் பின் திருமுறைகள் பதினொன்று ஆக்கியதற்கும் ஓர் அமைதி காட்டுகிறார். நம முதலான மந்திரங்கள் ஏழு கோடி (ஏழு வகை முடிவுகளை உடையன) ஆதலினால் தேவாரத் திரு முறைகள் ஏழு ஆயின என்பதும், பின்னும் மந்திரங்கள் பதினொன்று (ஷடங்க மந்திரம் ஆறு, பஞ்சப் பிரம மந்திரம் ஐந்து ஆகப் பதினொன்று[2]) ஆதலினால், நான்கு திருமுறைகள் கூட்டிப் பதினொன்றாக ஆக்கினார் என்பதும் அவர் கூற்று.

---

1 இவ்வரலாறுகளின் விரிவை எமது 11ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு, நம்பியாண்டார் நம்பி என்ற பகுதியில் காண்க.

2 இப்பதினொன்றும் சங்கிதா மந்திரம் எனப்படும்; இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்திரம் ஆறும் ஷடங்கம். ஈசானம், தத் புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் ஐந்தும் பஞ்சப்பிரமம்.

மந்திரங்கள் எழுகோடி ஆதலினுல், மன்னுமவர்
இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்து;
பந்தமுறு மந்திரங்கள் பதிஞென்றும் ஆதலினுல்,
அந்தமுறை நான்கிஞெடு முறைபதிஞென் ருக்கிஞர்.

## ஓன்பதாம் திருமுறை

இவ்வகையான பன்னிரு திருமுறை தொகுத்த வரலாற்றுள் ஒன்பதாம் திருமுறையை மட்டும் இனி இங்கு ஆராய்வோம். இத்திருமுறை திருவிசைப்பா – திருப்பல்லாண்டு என்றே பெயர் பெறும். இது 28 திருவிசைப்பாப் பதிகங்களும் ஒரு திருப்பல்லாண்டுப் பதிகமும் கொண்டது. இசைப்பா என்றமையிஞலே இது தேவாரங்கள் போல இசைக்குரியது என்பது தெளிவு. இங்கு, தோத்திர அருட்பாசுரங்களை இயல் என்றும், இசை என்றும் பிரித்த பாகுபாடு நன்கு உணர்தற்பாலது. வைணவ நாலாயிரப்பிரபந்தங்களில் முதலாயிரம் இசைப்பா; மற்ற இரண்டு, பெரிய திருமொழியும் திருவாய் மொழியும் – இசைப்பாக்கள்; மற்ற ஓராயிரம் மட்டும் இயற்பா (இயற்றமிழ்). சைவத்திலும் அதுபோலவே முத்தமிழில் இயல் இசை என இரு தமிழ்ப் பிரிவுகளைக் கருதுவோமாஞல், தொகுப்பு நூல்களாயுள்ள ஒன்பது பதிஞென்று ஆகிய இரு திருமுறைகளில் ஒன்பது இசைப்பா, பதிஞென்று இயற்பா. பின்னும் பார்த்தால் ஒன்று முதல் ஒன்பது திருமுறை வரை இசைப்பா; பத்து முதல் பன்னிரண்டு வரை இயற்பா. (இடையில் திருக்கோவையார் மட்டும் இவ்விதிக்கு விலக்கு.) பதிஞெராந் திருமுறையில் சேர்க்கப்பெற்றுள்ள காரைக்காலம்மையார் பாடல்களுள் திருவாலங்காட்டுத் திருப்பதிகங்கள் இரண்டு மட்டுமே இசைக்குரியவை; அவற்றின் தலைப்பில் மூத்த திருப்பதிகங்கள் எனக் குறிக்கப் பெற்றிருக்கும். முற்காலத்தில் ஏடு எழுதிய சான்ருேர் இவ்விரு பதிகங்கள் மட்டும் இசைக்குரியனவாயிருந்தமையிஞலும், அம்மையார், சம்பந்தர்

ஆதியோருக்குக் காலத்தில் முற்பட்டவர் என்று கருதியமையினலும், அடங்கன் முறை ஏடு எழுதியபோது முதலில் இவ்விரு பதிகங்களையும் எழுதிப் பின்னரே 'தோடுடைய செவியன்' என்று சம்பந்தர் பதிகம் எழுதத் தொடங்கினர்கள். இதைப் பழைய அடங்கன்முறை ஏடுகள் அனைத்திலும் காணலாம். இந்த இயல்பினல் முன் காட்டிய திருமுறை இயல் இசை அமைதி பூரணமாய்ப் பொருந்துவது தெளிவாகும்.

முதற்காட்டிய திருமுறை கண்ட புராணப் பாடலில் 'மோகமெறி திருவிசைப்பா மாலை' என்று இத்திருமுறை கூறப் பெற்றுள்ளமை இதன் இசைத் தன்மையையும் இதனிடத்துச் சைவ மக்கள் கொண்டிருந்த ஈடுபாட்டையும் நன்கு புலப்படுத்தும். திருவிசைப்பா என்ற பெயருக்கு அதிக விளக்கம் தேவையில்லை. இசையில் அமைந்த பதிகங்களையுடைய நூல் என்றும், பரம்பொருளின் புகழை (இசையை) இசைக்கின்ற பா என்றுமே பொருள்கொள்ளத் தகுந்தது.

## ஆசிரியர்

இது ஒன்பதாம் திருமுறை என்பதுபோல, இதன் பதிகங்களைப் பாடிய அடியவரும் ஒன்பதின்மர் ஆகின்றனர். இவர்களுடைய பெயர்களையும், இவர்கள் அருளிச் செய்த பதிகங்களின் தொகையையும் பழம் பாடல்கள் முறையாகச் சொல்லுகின்றன.

**செம்பொன்மணி அம்பலத்து நிருத்த ஞர்க்குத்**
**திருவிசைப்பா உரைத்தவர்தம் திருப்பேர் சொல்லில்,**
**பம்புபுகழ் செறிதிருமா ளிகைமெய்த் தேவர்,**
**பரிவுடைய சேந்தனர், கருவூர்த் தேவர்,**

**நம்பிகா டவர்கோன்,நற் கண்டரா தித்தர்,**
**நன்குயர்வே ணாட்டடிகள், திருவாலி யமுதர்,**
**அம்புவியோர் புகழ்புருடோத் தமர்,சேதி ராயர்,**
**ஆகஇவர் ஒன்பதின்மர் தாமுறைகண் டடைவே.**

*திருவிசைப்பா பாடினோர் திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், பூந்துருத்தி நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலி அமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பதின்மர். இவர்கள் பாடிய பதிகத் தொகை :*

**அடைவுறுமா ளிகைத்தேவர் நான்கு; சேந்தர்**
**அன்புறுபல் லாண்டொன்றோடு இசைப்பா மூன்று;**
**திடமுடைய கருவூரர் பத்து; வீறிற்**
**சிறந்தகா டவர்இரண்டு; கண்டர்வே ணாடர்**
**படிபுகழ்ஒவ் வொன்று;திரு வாலிநான்கு;**
**பன்னுபுரு டோத்தமனார் இரண்டு;சேதி ராயர்**
**உடையதிருக் கடைக்காப்புஒன் றாக,இருபத் தொன்பான்;**
**ஓதுசெய்யுள் முந்நூற் றறுபதினோ டைந்தே.**

*இவர்களுள் அதிகமான பதிகங்கள் பாடியவர் கருவூர்த் தேவர்–10; நான்கு பதிகம் பாடியவர் திருமாளிகைத் தேவரும் திருவாலி அமுதனாரும்; சேந்தனாரும் திருவிசைப்பா மூன்றும் திருப்பல்லாண்டும் ஆக நான்கு பதிகம் பாடியவர்; இரண்டு பதிகம் பாடியோர் பூந்துருத்தி நம்பியும், புருடோத்தம நம்பியும். ஏனையோர் ஒவ்வொரு பதிகமே பாடியுள்ளனர்.*

**பாடல் தொகை**

*திருமுறைகள் பன்னிரண்டிலும் இதுவே அளவால் மிகவும் சிறியது. பாடல் தொகை கூறுகின்ற முன்காட்டிய பழம் பாடல்கள் 365 என்று கூறும். ஆனால் கிடைக்கின்ற*

பாடல்களின் தொகை 301 தான். கருவூர்த் தேவருடைய திருப்பூவணப் பதிகம் எட்டே பாடல் கொண்டது, பூந்துருத்தி நம்பி காடநம்பியின் திருவாரூர்ப் பதிகம் இரண்டே பாடல் கொண்டது. இவ்விரண்டிலும் முறையே இரண்டு எட்டுப் பாடல்கள் இறந்து போயின எனக் கருதக் கூடும். கிடைக்காத ஏனைய பாடல்கள் எப்பதிகங்களுக் குரியன, எவ்வாறு இறந்து போயின என்பதொன்றும் விளங்கவில்லை.

## திருவிசைப்பாவின் சிறப்பு – இசை

இவ்வொன்பதாந் திருமுறை அளவில் மிகச் சிறியதாயினும், பல சிறப்புக்கள் இதனிடத்தில் பொருந்தியுள்ளன. முதல் ஒன்பது திருமுறைகள் இசைப்பாக்களாயிருப்பினும், இது ஒன்றுக்கே இசைப்பா என்ற பெயர் அமைந்திருக்கிறது. அன்றியும், அடங்கன்முறை முழுவதிலும் காணப் படாத சாளரபாணி என்ற பண் இதில் மட்டுமே காணப் படுவது மற்றொரு சிறப்பு.

## பஞ்சபுராணம்

சிவாலயங்களில் நெடுநாளாக வழங்கிவருகின்ற ஒரு மரபு, பஞ்சபுராணம் பாடுதல்[1] என்ற மரபு. சிவாலயங் களில் பூசை முடிந்து நிவேதனம் ஆனபின், தேவாரம் பாடுவது மரபு. இதைப் பஞ்சபுராணம் பாடுதல் என்று இன்று சொல்லுகிறோம். திருப்பதிகம் விண்ணப்பித்தல் என்று சாசனங்களில் சொல்லப்பட்டதன் விரிவே இது. தலத் துக்குத் தேவாரப் பதிகம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் பஞ்ச புராணம் பாடுவது உண்டு. சிறப்பாக, திருமுறைக்கு ஒரு பாட்டு வீதம் ஓதுவதே முறை. அது இயலாதபோது

1 சைவ சித்தாந்த மகா சமாஜப் பொன்விழா மலர் 1965 - பஞ்ச புராணம் என்ற எமது கட்டுரை பார்க்க.

சுருக்கி ஐந்து பாடல் பாடுவது முறை. ஐந்தானமையால் பஞ்சபுராணம். இதனுள் புராணம் எதுவும் இல்லை, எல்லாம் திருமுறைப் பாடலே. பஞ்சபுராணம் என்பது ஐந்து பாடல். அவையாவன தேவாரப் பாடல் ஒன்று, திருவாசகப் பாடல் ஒன்று, திருவிசைப்பா ஒன்று, திருப் பல்லாண்டு ஒன்று, பெரிய புராணம் ஒன்று. 8250 பாடல் அடங்கிய மூவர் தேவாரத்துள் ஒரு பாடல், 656 பாடல் கொண்ட திருவாசகத்தில் ஒரு பாடல், 288 பாடல் உள்ள திருவிசைப்பாவுக்கு ஒரு பாடல், 13 பாடல்கொண்ட திருப் பல்லாண்டுக்கு ஒரு பாடல், 4280 பாடல்கொண்ட பெரிய புராணத்துக்கு ஒரு பாடல், ஆக ஐந்து. இவற்றுள் ஒன்பதாந் திருமுறைக்கு இரண்டு பாடல் பாடி வருவது இதற்கு அளித்துள்ள பெருஞ் சிறப்பு.

## திருப்பல்லாண்டு

சேந்தனுர் பாடிய திருப்பல்லாண்டு ஒன்பதாந் திருமுறையின் இறுதிப் பகுதி. சிவபெருமானுக்கு வேறு எங்கும் திருப்பல்லாண்டு பாடவில்லை. சேந்தனுர் இத் திருப்பல்லாண்டு பாடி நிலையை விட்டு அசையாதிருந்த தேர் ஓடுமாறு செய்தார் என்றும் அன்று சிவபெருமானுக்கு இவர் அளித்த களி அமுதே (அவிழ்) அதுமுதல் இன்றுவரை மார்கழித் திருவாதிரையில் சிவபெருமானுக்கு உவப்பான நிவேதனமாயிற்று என்றும், இதை நினைவுகூர்ந்தே இந்தத் தினத்தில் தமிழ்நாடெங்குமுள்ள சைவர் தங்கள் இல்லங் களில் களி நிவேதனம் செய்கிருர்கள் என்றும் வரலாறுகள் கூறும். இச் சேந்தனுர் நந்தன் குலத்தைச் சேர்ந்தவர் என்று நம்பியாண்டார் நம்பி நமக்கு உணர்த்துகிருர். வைண வத்தில் ‘அமலனுதிபிரான்’ என்று பத்துப் பாடல் பாடி அவர்களுடைய நித்தியானுசந்தானத்தில் இடம்பெற்ற திருப்பாணுழ்வார் தீண்டாத வகுப்பினர். சைவத்தில் நாயன்மாருள் மிகவும் புகழ்படைத்த ஒருவரான நந்தனும்

இந்த வகுப்பினர். ஆனால் அவர் பாடல் எதுவும் பாட வில்லை. அதே வகுப்பில் பிறந்த சேந்தனர் பாடல் பாடி, அதுவும் திருப்பல்லாண்டு பாடி திருமுறை ஆசிரியருள் ஒருவ ரானர். இவர் அளித்த களி மிக்க சிறப்படைந்துவிட்டது. இப்பல்லாண்டு பதின்மூன்றே பாடல். வைணவத்தில் திருப் பல்லாண்டு பாடிய ஆழ்வார் பெரியாழ்வார் ஆனர் என்ப தையும் வைணவ நாலாயிரப் பிரபந்தம் பல்லாண்டை வைத்தே தொடங்குகிறது என்பதையும் நாம் நினைவுகூர வேண்டும். "பல்லாண்டெனும் பதம் கடந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே" என்பது இதிலுள்ள ஒரு தொடர்.

இருப்பினும் ஒரு கருத்து இங்கு சொல்லத் தக்கது. உமாபதியார் திருமுறை கண்ட புராணத்துள் எந்த இடத்திலும் திருப் பல்லாண்டைக் குறிப்பிடவில்லை. ஆகவே நம்பியாண்டார் நம்பி திருப்பல்லாண்டைக் கோத்தார் என்பதற்கு வரலாற்று ஆதாரமில்லை. ஆயினும் திருவிசைப்பா மாலை என்ற தொடருக்குத் திருவிசைப் பாக்கள் திருப்பல்லாண்டு ஆகியவை கோத்த மாலை யென்று பொருள் பண்ணிக் கொண்டு, திருப் பல்லாண்டும் மூன்று திருவிசைப்பாப் பதிகம் பாடிய சேந்தனரால் பாடப் பெற்றது என்ற காரணத்தைக் கொண்டும், திருப் பல்லாண்டு பாடித் தேர் ஓடச் செய்தார் என்ற நிகழ்ச்சியின் சிறப்பைக் கொண்டும், திருப்பல்லாண்டையும் ஒன்பதாந் திருமுறையுள் சேர்த்துக் கூறுகின்ற மரபு ஏற்பட்டிருக் கிறது.

## பாடினோர்

அரசனும் ஆண்டியும் இங்கு பதிகம் பாடியுள்ளனர். சோழ சக்கரவர்த்தியான கண்டராதித்த தேவரும், தீண்டாத வகுப்பினரான சேந்தனரும் பதிகம் பாடிய சிறப்பு இத்திருமுறைக்கு உரியது.

### பாடப்பட்டோர்

திருமுறைப் பதிகங்கள் யாவும் சிவபிரானையே துதிப்பன. முருகன் விநாயகன் அடியவர் பற்றிய துதிப் பாசுரங்கள் பதினொராந் திருமுறையில்தான் காணப்படு கின்றன. ஆனால் இத்திருமுறையில் முருகன்மீது சேந்தனார் பாடிய திருவிசைப்பா ஒன்று இருப்பது சிறப்புடையது.

### தில்லைத் திருமுறை

இங்குள்ள 29 பதிகங்களில் 16 பதிகங்கள் தில்லைக்கு உரியன. இந்த இயல்பு, பெருமை பற்றி, தில்லைத் திருமுறை என்றே இத் திருமுறையைக் கூறவும் இடங் கொடுக்கிறது.

### தலங்கள்

இத்திருமுறையுள் சொல்லப்பட்ட தலங்கள் 14. இவற்றுள் தில்லையாகிய கோயிலுக்கு மட்டும் உள்ள பதிகங்கள் 16. ஏனைய 13 பதிகங்களும் 13 தலங்களுக்கு உரியன. சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி என்ற மூவரும் தங்கள் பதிகங்களில் ஒரு பதிகத்தைத் தில்லைக்கும், மற்றவற்றைத் தலத்துக்கு ஒரு பதிகமாகவும் பாடியிருக்கிறார்கள். பிற ஆசிரியர் அறுவரும், தில்லை ஒன்றையே பாடியிருக்கின்றனர். இவ்வாறு பாதிக்கு மேற் பட்ட பதிகங்கள் தில்லை ஒன்றுக்கே உரியன. ஆதலால், இத்திருமுறையே தில்லைத் திருமுறை என்றாலும் பொருந்தும். ஏனைய தலங்கள் பின்வருவன: வீழிமிழலை, ஆவடுதுறை, விடைக்கழி (சேந்தனார்); களந்தை ஆதித்தேச்சுரம், கீழ்க் கோட்டூர் மணியம்பலம், முகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், கங்கை கொண்ட சோழேச்சுரம், பூவணம், சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேச்சுரம், இடைமருதூர் (கருவூர்த்தேவர்); ஆரூர் (பூந்துருத்தி நம்பிகாட நம்பி).

**பண்கள்**

திருவிசைப்பா இசையில் அமைந்தது என்று தொடக்கத்தில் குறிப்பிட்டோம். இதனுள் பதிகம் ஒவ்வொன்றுக்கும் பண் குறிப்பிடப்பட்டுள்ளது. யார் பண் வகுத்தார், எப்போது என்பது விளங்கவில்லை. ஆயினும் ஒரு கருத்தைக் குறிப்பிடலாம். மூவர் பதிகங்களுக்கு இசையடைவு தெரிய வேண்டி நம்பியார், சம்பந்தருக்குப் பதிகங்களை யாழில் இட்டு வாசித்துச் சிறப்புப் பெற்றவரான திருநீலகண்ட யாழ்ப்பாணர் அவதாரத் தலமாகிய எருக்கத் தம்புலியூர் அடைந்து, 'அரனே இன்னிசை தந்தருள்' என இரக்கமுடன் குறை இரந்தார். இறைவன் 'அப்பாணனர் மரபில் வந்த ஒரு பெண்ணுக்கு இசை வகுக்கும் ஆற்றல் அளித்தோம்' என்று சொல்லக் கேட்டு, அவளைத் தில்லையம்பலத் திருமுன்பு அழைத்து வந்து இசை வகுத்துக் கொடுக்கப் பெற்றார். மூவர் அருட்பதிகங்களுக்கு அப்பெண் தந்த இசை எவ்வாறு வகுக்கப் பெற்றது என்பதைப் புராணம் விரிவாகப் பேசுகிறது. ஆனல், திருவிசைப்பாவை ஒன்பதாந் திருமுறையாக வகுத்த செய்தியைக் கூறிய போதிலும்கூட, அதற்கு இசையமைத்த விவரம் கூறவில்லை. திருமுறை கண்ட புராணம் எழுந்ததே, மூவர் தேவாரப் பதிகங்கள் கிடைத்த வரலாற்றைக் கூறும் பொருட்டு; ஏனைய திருமுறைகளைப் பொருள் நிறைவுக்காக கூறியதேயன்றி, இவை கூறுவது அதன் நோக்கமல்ல. ஆகவே, திருவிசைப்பாவுக்கு இசை வகுத்தார் யார் என்பது அப்புராணம் சொல்லவில்லை. அப்பெண்ணே இசை வகுத்துத் தந்திருக்கலாம்.

இங்குப் பயிலும் பண்கள் ஆறு. அவற்றுக்குரிய பதிகங்களைப் பின்வரும் பாடல் கூறுகிறது:

ஐந்துடன்நால் வரும்உரைத்த திருக்கடைக்காப் பிறபண்
அறையின்மா ளிகைத்தேவர் நான்கிலொன்று காந்தாரம்,
முந்துகரு வூரர்பத்தின் இரண்டுபுற நீர்மை,
மொழிந்திடுகாந் தாரமொன்று, காடவர்கோன் இரண்டின்
நந்தலில்சா ளரபாணி யொன்று, வேணாட் டடிகள்
நவின்றதொன்று புறநீர்மை, திருவாலி அமுதர்
பந்தமறச் சொல்நான்கி னொன்றுநட்ட ராகம்,
பகிர்ந்திடினென் றிந்தளம்மற் றெவையும்பஞ் சமமே.

*இப்பண்களில் பஞ்சமம் 21, காந்தாரம் 2, புறநீர்மை 3, நட்டராகம் 1, இந்தளம் 1, சாளரபாணி 1. இவற்றுள் முதல் ஐந்தும் தேவாரத்துள் காணப்படுவன. சாளரபாணிப்பண் தேவாரத்துள் காணப்படாதது. இதனால் நாம் அறிவது, தேவாரப் பண்களேயன்றி வேறு பலவான பண்கள் சாளர பாணிப்பண் பாடிய பூந்துருத்தி நம்பியின் காலம் வரையில் இருந்தன, இன்னும் ஒரு நூறு ஆண்டு கழித்து அடியார்க்கு நல்லார் காலத்திலும் இருந்தன, பின்னர் வழக்கு வீழ்ந்தன என்பதாகும்.*

*பண் அமைத்தார் யார் என்று தெரியாவிட்டாலும்கூட, திருவிசைப்பா ஆசிரியர் இருவர் தங்கள் பாடலிலேயே பண்ணின் பெயரை அமைத்துப் பாடியிருப்பதை இங்குக் குறிப்பிடலாம். கருவூர்த் தேவர் தாம் பாடிய திரைலோக்கிய சுந்தரப்பதிகம் இறுதிப் பாடலில் அதற்குரிய காந்தாரப் பண்ணையும், புருடோத்தம நம்பி தமது கோயில் திருப் பதிகத்தின் முதற் பாடலில் அதற்குரிய பஞ்சமப் பண்ணையும் பெயர் குறிப்பிட்டுப் பாடியிருக்கிறார்கள். தேவாரத்துள் பஞ்சமத்தை அப்பர் குறிப்பிடுகிறார். "பஞ்சமம் பாடி யாடும் தெள்ளியார் கள்ளந் தீர்ப்பார் திருச்செம்பொன் பள்ளியாரே" என்பது அவருடைய திரு நேரிசை. சம்பந்தர் திருவீழிமிழலை மேகராகக் குறிஞ்சியில் 'சேறுடு செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு சிவந்த வண்டு,*

வேருய உருவாகிச் செவ்வழி நற்பண்பாடும் மிழலையாமே' என்று பாடுகிருர். பின்னும் உதாரணங்கள் பல.

இப்பதிகங்களில் பாதாதிகேசமாகத் திருமாளிகைத் தேவரும், திருவாலியமுதனுரும் ஒவ்வொரு பதிகம் பாடியுள்ளனர். கருவூர்த் தேவருடைய கீழ்க்கோட்டூர் மணியம்பலம் திரைலோக்கிய சுந்தரப் பதிகங்களும் திருமாளிகைத் தேவர் 'உறவாகியயோகம்' என்ற கோயிற் பதிகமும் அகத்துறைப் பதிகங்கள். ஏனையவற்றுள் ஏழு பதிகங்கள் அகத்துறையாகவும் அந்தாதியாகவும் உள்ளன. இவற்றை அட்டவணையில் காணலாம்.

## திருவிசைப்பாத் தொகுப்பு

மன்னனும் நம்பியும் பத்துத் திருமுறைகளைத் தொகுத்தார்கள் என்று முற்காட்டிய புராணப் பாடல்கள் (பண்புற்ற, ஆகவளர்) குறிப்பிடுகின்றன. இவற்றை வைத்த பிறகு, மன்னர்பிரான் நம்பியை இறைஞ்சி, 'திருமுகப் பாசுரம் முதலா உள்ள பதிகங்களையும் ஒருமுறையாகச் செய்க' என்று வேண்டினர், அவரும் செய்தார் என்று அடுத்த பாடல் சொல்லுகிறது. இதனல் நாம் பெறுவது, பத்துத் திருமுறைகளையும் அவரே தொகுத்தார் என்பதாகும். பதினென்று அவராகத் தொகுக்கவில்லை, அரசன் வேண்டத் தொகுத்தார். இப்பதினென்றில், ஒன்பதும் பதினென்றும் தனிப்பதிகங்களின் தொகுப்பாகும். தேவாரங்களைத் தொகுத்தபோது, தொடர்ந்து தாமாகத் திருவிசைப்பா மாலையைத் தொகுத்தார். பத்தாம் திருமுறையோடு நிறுத்திக் கொண்டார். ஏன் இவ்வாறு செய்தார் என்பதற்கு ஒரு பொருத்தம் புலப்படுகிறது. பதினெராந் திருமுறை இயற்பாடல்கள்; ஆனல் ஒன்பதாம் திருமுறைப் பாடல்களோ இசைப் பாடல்களாகும். நம்பியாண்டார் நம்பி தேவாரம் தொகுத்தபோது, சமயாசாரியர் பாடல்களான

தேவார திருவாசகங்கள் அன்றி, தம் காலத்திலும் தம் காலத்திற்கு முன்பும் வேறு இசைப் பாடல்கள் இருந்தமை கண்டு, அவை இசைப்பாடல்களாய் இருந்தமையால் தேவாரத்தோடு ஒத்துப் போற்றத்தக்கன என்று கருதியும், ஆதரிப்பார் இன்றி அவை கைந்நெகிழுமாறு விடக் கூடாது என்று முடிவு செய்தும், தம் காலத்திலிருந்த அரசன் போன்ற மெய்யன்பர்களுடைய விருப்பத்திற்கிணங்கியும், திருவிசைப்பாமாலையைத் தொகுத்தார் என்று நாம் கருதுகிறேம்.

இதில் மற்றொரு கருத்து: திருவிசைப் பாக் கொண்ட தலங்கள் பதிஞன்கில், பாடல் பெற்ற தலங்கள் ஆறு போக ஏனைய எட்டும் தேவாரப் பாடல் பெருத தலங்கள். இவற்றுள் நான்கு சோழர் பரம்பரையினுல் கட்டப்பட்ட கோயில்கள்; களந்தை ஆதித்தேச்சுரம் ஒன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த ஆதித்தச் சோழனுலும், திரைலோக்கிய சுந்தரம் முதல் இராசராச சோழ மன்னனது மூன்ரும் மனைவியாகிய திரைலோக்கிய மாதேவியாலும் (சுமார் கி. பி. 1000), தஞ்சைப் பெருங்கோயில் இராசராச மன்னனுலும் (1008), கங்கை கொண்ட சோழேச்சுரம் இவனது மகன் முதல் இராசேந்திரனுலும் (1035) கட்டப் பெற்றவை ஆகும். அன்றியும் இந்நான்கு தலங்களும், நம்பியின் காலத்தில் வாழ்ந்து இராசராச மன்னனுலேயே பெரிதும் அபிமானிக்கப் பெற்றிருந்த கருவூர்த் தேவர் பதிகம் பாடிய சிறப்புடையவை. ஆகவே நம்பியாண்டார் நம்பி இசைப்பாக்களை ஒரு திருமுறையாகத் தொகுப்பதற்கு உடன் காலத்தனவாகிய இப்பொருத்தங்களும் இருந்தன.

மேலும், மிக்க எழுச்சியோடு வளர்ந்து வந்த சோழ மன்னர் காலத்தில் புதிதாக எழுந்து வந்த தலங்களுக்கும் அருட்பாசுரங்கள் என்ற பெயரில் சுவாமி திருமுன் பாடுவ

தற்கான பாசுரங்கள் இருக்குமானல் அந்தந்தப் பிரதேச மக்களுடைய சமய உணர்வு நிறைவு பெறுவதோடு, எழுச்சி யும் பெறும். இவைகளே நம்பி இவ்விசைப்பாக்களை ஒரு தனித் திருமுறையாகத் தொகுத்தற்குரிய காரணங்களாகத் தெரிகின்றன. இல்லையானல் முதல் எட்டுத் திருமுறைகளைச் சுமார் 1000 பாடல்கள் வீதமும், பத்தாம் திருமுறையை 3000 பாடல்களாகவும், (பின்னல் பதினெராந் திருமுறையை ஓராயிரத்து நானூறு பாடல்களாகவும்) தொகுத்த இவர், ஒன்பதாம் திருமுறையை மட்டும் மிகச் சுருங்கிய அளவில் இயன்ற 300 பாடல்களே கொண்டதாக முறைப் படுத்தியதற்கு ஓர் அமைதி காண்பதற்கில்லை. எனவே, இத்தலைப்பில் கூறியவற்றுல், திருவிசைப்பா மாலையானது, அக்கால அரசியல் நிலைமைக்கும் தன்னகத்தேயுள்ள இசைத் தன்மைக்கும் பொருந்த, ஒரு தனித் திருமுறை யாயிற்று என்பது நன்கு விளங்கும்.

## திருவிசைப்பாக் காலம்

மிகக் குறைந்த பாடல்களை உடைய இத்திருமுறையை நன்கு நோக்கும்போது, இப்பாடல்கள் யாவும் ஒரே காலத்தில் ஒரே சூழ்நிலையில் ஒரே ஆதரவில் தோன்றியன என்று கருதும்படி உள்ளன. எனவே, இந்த நிலை பற்றிய சில பொதுவான கருத்துக்களை இங்குச் சிறிது விளக்கிச் சொல்லலாம்.

தேவாரம் பாடிய ஆசிரியர் காலத்துக்குப்பின் சைவ மக்கள் தலந்தோறும் தங்கள் தலத்துக்குரிய தேவாரப் பதிகங்களைப் பாடி அங்கு எழுந்தருளிய சிவபெருமானை வழிபட்டு வந்தார்கள். நாடெங்கும் ஒரு பக்தி வெள்ளம் கரைபுரண்டு பொங்கித் ததும்பிப் பெருக்கெடுத்து ஓடிற்று. இந்த வெள்ளமானது சிவபக்தி உடையவர்களாய் வாழ்ந்த சோழமன்னரை, சங்க காலத்துக்குச் சுமார் 600 ஆண்டு

களுக்குப்பின், மீண்டும் அரியணையில் ஏற்றி நெடுநாள் அங்கேயே வைத்துக் காப்பாற்றியது என்றால் மிகையாகாது. இது வரலாற்று உண்மை: கி.பி. 845 இல் விசயாலயன் என்ற பெயரை உடைய சோழமன்னன் தஞ்சையிலிருந்து ஆட்சிபுரிந்த முத்தரையர் என்ற குறுநில மன்னரை அங்கிருந்து வெருட்டி, மீண்டும் அங்குச்சோழர் ஆதிக்கத்தை நிலைநாட்டினான். 'தொண்ணூற்றாறு புண் சுமந்தவன்' என்று பிற்காலத்து உலாப் பிரபந்தங்கள் இவனைச் சிறப்பிப்பது, இவனது வீரம் எத்தகையது, எத்துணைப் போர்கள் இவன் செய்திருக்கிறான் என்பதை நன்கு புலப்படுத்தும். இவன் காலம் முதல், சோழர் ஆட்சி வளர்ந்தது. அதன் ஆதரவில் சைவமும் தமிழும் தழைத்தோங்கின. இந்த வளர்ச்சியே பத்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்திலும் பேரரசனாகிய இராசராச மன்னன் நம்பியாண்டார் நம்பியைத் துணைகொண்டு, தொகுக்கப் பெறாமலும் கிடைக்கப் பெறாமலும் இருந்த தேவாரப் பதிகங்களைத் தேடித் தொகுத்து வெளிப்படுத்தும்படி செய்தது. இக்காலம் சைவத்துக்கு மட்டுமல்லாமல், தமிழுக்கும் ஒப்பற்றதொரு பொற்காலம். இராசராச மன்னனும் அவன் பின்வந்த கங்கைகொண்ட சோழனாகிய இராசேந்திர சோழனும் தமிழ் வழங்கிய நிலமெல்லாம் ஒரு குடையின் கீழ்க் கொண்டு வந்தனர். சேரர் பாண்டியர் அனைவரும் ஒடுங்கி விட்டனர். சோழர் படை கங்கை நதி வரையில் சென்றது. கடல் கடந்து சென்று ஈழம் நக்கவாரம் நாகநாடு ஸ்ரீவிஜயம் (சுமாத்ரா) கடாரம் (இன்றைய மலேஷியா இந்தோனேஷியா) முதலான எல்லா நாடுகளையும் சோழர் குடையின்கீழ்க் கொண்டுவந்து, அங்கெல்லாம் தமிழர் நாகரிகத்தையும் சைவசமயத்தையும் பரப்பியது இவர்களே. இந்தப் பொற்காலத்தில் தாய்நாட்டில் ஊற்றெடுத்த புதிய தேனே திருவிசைப்பா என்ற தெய்வ இசைத்தேன்.

சோழர் பரம்பரையில் கண்டராதித்தர் என்ற ஒரு சிவ ஞானி தோன்றினர். இவர் வரலாறு வேறிடத்து விரிவாகக் கூறப்படுகிறது. இவர் காலமே திருவிசைப்பாத் தொடக்க காலம் என்று கருதுகிறோம். விசயாலய சோழனது புதல்வனாகிய ஆதித்த சோழன் பல சிவாலயங்களைக் கட்டியவன். அவன் 'காவிரியின் இரு கரையும் கோயிலாகவே எழுப்பிவிட்டான்' என்று, வடமொழியில் அமைந்த அவனுடைய பிரசஸ்தி ஒன்று கூறுகிறது.[1] அவன் தன் பேரால் கட்டிய களந்தை ஆதித்தேச்சுரத்துக்கு அடுத்த நூற்றாண்டில் கருவூர்த்தேவர் திருவிசைப்பாப் பாடினர் என்பது இங்கு நினைவுகூரத்தக்கது. அவன் புதல்வனாகிய முதல் பராந்தகசோழன் தில்லையம்பலத்தைப் பொன்வேய்ந்த பெருஞ் சிறப்புடையவன். இப் பராந்தகன் புதல்வரே சிவஞானியாகிய கண்டராதித்தர்.

பராந்தகனுடைய மூத்த புதல்வன் இராசாதித்தன் என்பவன், இளவரசாக இருந்தான். அவனுடைய இளவலாக, அரச பதவிக்கு வரும் வாய்ப்பே இல்லாது வாழ்ந்த கண்டராதித்தர், தந்தையினுடைய சிவாலயத் திருப்பணியில் பெரும் பங்குகொண்டார் என்று கருத வேண்டும். போர்கள் மிகுந்திருந்த காலத்தில் சக்கரவர்த்தி யான பராந்தக மன்னர் தம் தலைநகரான தஞ்சையைவிட்டுத் தில்லையில் தொடர்ந்து நெடுநாள் தங்கியிருக்கமுடியாது.

---

1 அன்பில் செப்பேடு, சுலோகம் 13; சோமசுந்தர தேசிகர் பின் வருமாறு இதை மொழிபெயர்த்திருக்கிறார் :

கண்மூடாக் கடலின்திரை நுனியிலிருந்து
தவழவாங்கே களிறு சிந்துங்
கன்னமத மூற்றெடுத்துக் காலொடுசென்று
கலக்குங்கா விரிப்புற மெல்லாம்
வண்ணமுற ஆலயம்பல பதாகையென
மணிகணடற் கமைத்தனன், கல்லாற்
புண்ணியமே யுருவாய வொளிமகுடன்
வென்றிபுனை பூர்வா தித்தனே.

தில்லையம்பலம் பொன்வேய்ந்த காலத்தில் தந்தையின் சார்பில் இவர் தில்லையில் தங்கி அத் திருப்பணியை மேற்பார்வை செய்துவந்தார் என்று நாம் யூகிக்கலாம். இளவரசனாகிய இராசாதித்தன் தலைநகராகிய தஞ்சையில் இருந்து அரசியல் துறையில் பழகிவந்தான். நடராசப் பெருமானிடத்துப் பக்தியும் திருமுறைகளில் தோய்வும் கொண்டு, அரச பரம்பரையில் தோன்றி, தில்லையில் பெரிதும் ஈடுபாடுகொண்டிருந்த இவரை அக்காலத்தில் நாட்டில் சிவபக்திச் செல்வர்களாக விளங்கிய அனைவரும் விரும்பிக் காணவந்தது இயல்பே. போரில் இராசாதித்தன் இறந்துபோகவே, இவர் இளவரசாகி, பின் அடுத்த மூன்று ஆண்டுகளில் தந்தையும் காலமாகவே, அரச பதவி ஏற்றார். பட்டமேற்றதற்கு முற்பட்ட காலத்தில் திருமாளிகைத் தேவர், சேந்தனார், வேணாட்டடிகள், திருவாலி அமுதனார், ஆகிய அடியார்கள் இவரால் போற்றப்பெற்றார்கள். வேணாட்டுக் குறுநில மன்னராய்த் தில்லையில் ஈடுபாடு கொண்டிருந்த வேணாட்டடிகள் இவரிடம் நட்புப் பூண்டு தில்லையில் சிலகாலம் வாழ்ந்திருத்தல் இயல்பே.

இனி, சேந்தனார் வரலாற்றில் ஒரு சோழ மன்னன் பெருமானுடைய நடனத் திருச் சிலம்போசையைக் கேட்டு வந்தான் என்ற செய்தி சொல்லப்படுகின்றது. இது வெறும் கதையன்று. ஓரளவு ஒப்பக்கூடியதே என்பதை அடுத்து வரும் அவ் வரலாற்றில் விளக்கியிருக்கிறோம். பலவகைத் தொடர்புகளாலும் அச் சோழ மன்னன் இக் கண்டராதித்தரே என்று முடிவு செய்யலாம். பின்னும் 'நீறணி பவளக்குன்றம்' என்ற திருமாளிகைத் தேவர் பாடல் தொடரை அடிப்படையாக வைத்து அவரும் இக் காலத்துக்கு உரியவராவார் என்பதை அடுத்துக் காட்டியிருக்கிறோம். ஆதலால் இங்குக் குறிப்பிட்ட சில திருவிசைப் பாக்காரர் கண்டராதித்தரால் போற்றப் பெற்று வாழ்ந்த

வர்கள் என்று கொள்வதில் எந்தப் பொருத்தக் குறைவு மில்லை.

கண்டராதித்தர் நான்கு ஆண்டுகளே அரியணையில் வீற்றிருந்தார். அவர் தொடக்கி வைத்த நற்பணிகளெல்லாம் அவருடைய தேவியாகிய செம்பியன் மாதேவியரால் தொடர்ந்து நிறைவேற்றப் பெற்றன. இவர் கண்டராதித்தர் பட்டத்துக்கு வருமுன்னமே பராந்தக சோழன் ஆட்சி புரிந்த காலத்தில் திருநற்குடிக் கோயிலுக்கு விளக்கெரிக்க நிபந்த மொன்றளித்தார். அப்போது இவருக்கு வயது இருபது இருக்கலாம். இராச ராசனுடைய பதினாறும் ஆட்சி ஆண்டில் (கி. பி. 1001) இவர் காலமானார் என்று தெரிகிறது. ஆகவே, எண்பது ஆண்டுகள் இவர் வாழ்ந்து பல சோழ மன்னர்களை அரியணைமேல் இருத்தி மகிழ்ந்திருக்கிறார். இவர் காலத்தில் ஆட்சிபுரிந்த சோழர்: முதல் பராந்தகன், அவனுடைய புதல்வரும் இவருடைய கணவருமாகிய கண்டராதித்தர், அவருடைய தம்பியாகிய அரிஞ்சய சோழன், அவனுடைய புதல்வனாகிய இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தரசோழன், பின்னர் செம்பியன் மாதேவியாரது புதல்வனான மதுராந்தக உத்தம சோழன், பின்னர் சுந்தர சோழன் புதல்வனான பெருங்கீர்த்தி வாய்ந்த முதலாம் இராச ராச சோழன் ஆகிய சோழ மன்னர் அறுவர் காலங் களில் இவர் வாழ்ந்து தமது கணவருடைய சிவப்பணியையும் சிவபக்திச் செல்வத்தையும் வளர்த்து இருக்கிறார். அவற்றை விரித்தால் அது தனி நூலாகவே ஆகும். அன்றியும், இராச ராசன் புதல்வனாகிய முதலாம் இராசேந்திரன் 1012இல் பட்ட மேற்றான். அவனைக் குழந்தைப் பருவத்தில் வளர்த்து பக்தியும் வீரமும் ஒருங்கே இணைந்த இளைஞனாக்கிய பெருமை செம்பியன் மாதேவியாருக்கு உண்டு. அவன் கட்டிய கங்கைகொண்ட சோழேச்சுரத்துக்குச் சாந்திவிழா நடை பெற்றது 1035இல். அப்போது கருவூர்த் தேவர் இருந்து

அத் தலத்துக்குத் திருவிசைப்பாப் பாடினர். இதுவே திருவிசைப்பாக்களின் காலத்துள் கடைசி ஆகும்.

இதற்குத் தொடக்கக் காலம் கண்டராதித்தருடைய இளமைப் பருவம்; உத்தேசம் 940 என்று கொள்ளலாம். ஆகவே 940 முதல் 1040 வரை உள்ள காலத்தைத் திருவிசைப்பாக் காலம் என்று கூறுகிருேம். இதன் தொடக்கக் காலத்தில் கண்டராதித்தர் இறந்துவிட்டார் (957). செம்பியன் மாதேவியார் 1001இல் இறந்தார். ஆனல் 1040 வரையில் ஆட்சிபுரிந்த இராச ராசனும் இராசேந்திரனும் இம்மாதேவியார் வளர்த்து எடுத்த பிள்ளைகள் என்று முன்னமே காட்டினேம். ஆதலால் இந்த நூறு ஆண்டுக் காலத்தைச் செம்பியன் மாதேவியாரின் செல்வாக்குக் காலம் அல்லது சிவப்பணிக் காலம் என்றும், திருவிசைப்பாக் காலம் என்பது செம்பியன் மாதேவியார் காலமே[1] என்றும் கூறுவது பிழையாகாது. திருவிசைப்பா ஆசிரியர்களுடைய கால எல்லையும் இதற்கேற்ப இக்காலத்துக்குப் பொருந்தவே உள்ளது.

| | | |
|---|---|---|
| 1. | கண்டராதித்தர் 940 – 957. காலம். செம்பியன் மாதேவியார்காலம் 940 – 1001 | திருமாளிகைத் தேவர், சேந்தனர், கண்டராதித்தர், வேணுட்டடிகள், திரு + வாலி அமுதனர் ஆகிய ஐவர். |
| 2. | இராசராசன், 1000 – 1040 இராசேந்திரன் காலம். | பூந்துருத்தி நம்பிகாடநம்பி, புருடோத்தம நம்பி, சேதிராயர், கருவூர்த்தேவர் ஆகிய நால்வர். |

1 செம்பியன் மாதேவியார் என்ற எமது ஆங்கிலக் கட்டுரை காண்க. ஆங்கிலச் சைவசித்தாந்தம் தொகுதி 5, இதழ் 1: ஜனவரி—மார்ச்சு 1970.

திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் காலமும் பிற்கூறிய இரு மன்னர்களின் காலமாகிய 1000 – 1040[1] ஆகும்.

திருவிசைப்பா பாடப்பெற்ற தலங்களைக் குறித்துத் தொடக்கத்தில் சில சொற்கள் கூறினோம். பின்னும் சில கருத்துக்களை உணர்ந்தால் செம்பியன் மாதேவியாரின் காலப் பொருத்தம் நன்கு விளங்கும். திருவிசைப்பா பெற்ற பதினாறு தலங்களில் திருப்பூவணம் ஒன்று பாண்டி நாட்டுப் பாடல் பெற்ற தலம் ஆகும். ஏனைய யாவும் சோழ நாட்டுத்தலங்கள். அவற்றுள்ளும் திருப்பூவணம் உள்பட ஆறு தலங்கள் தேவாரப் பதிகம் பெற்றவை (பூவணம், வீழிமிழலை, ஆவடுதுறை, இடைமருதூர், ஆரூர், தில்லை). ஏனையவற்றுள் திருவிடைக்கழி சிறப்பான ஒரு பழைய தலம். குராப்பள்ளித் துஞ்சிய திருமாவளவன் என்று சொல்வதில் வரும் குராப்பள்ளி இவ்வூர் என்று ஆன்றோர் கருதுவர். சோழர் எழுப்பிய புதிய சிறப்புக் கோயில் களான நான்கு முன்னமே சுட்டப்பெற்றன (களந்தை, திரைலோக்கியம், தஞ்சை, கங்கைகொண்ட சோழேச்சுரம்). இவை நான்குக்கும், வேறு வகையில் விளக்கமில்லாத கீழ்க்கோட்டூர் மணியம்பலம் திருமுகத்தலை திருச்சாட்டியக் குடி என்ற மூன்றுக்கும் கருவூர்த்தேவர் திருவிசைப்பாப் பாடியது குறிப்பிடத்தக்கது. பின் சொன்ன மூன்று தலங்களும் சோழ நாட்டின் தென்கிழக்குப் பகுதியில் உள்ளன. தலங்கள் இன்று நல்ல நிலைமையில் இருந்தும், அவை பற்றிய பிற விளக்கம் கிடைக்கவில்லை. இவை ஆரூருக்கு அப்பால் களந்தைப் பிரதேசத்தில் உள்ளன. கருவூர்த்தேவர் இங்கு நெடுங்காலம் தங்கி இருந்தார் போலும்.

---

1 இங்குக் குறிப்பிட்ட கால எல்லை, ஆயுட்காலமன்று, ஆட்சி அல்லது வியாபகக் காலம்.

ஆசிரியர்களுள், திருமாளிகைத் தேவர், சேந்தனார், கண்டராதித்தர், கருவூர்த் தேவர் நீங்கலாக ஏனையோர், வரலாற்றினால் விளங்காதவர்கள். ஒருகால் இவர்களில் பலர், வேணாட்டடிகள் திருவாலி அமுதனார் போன்றவர்கள், கண்டராதித்தர் காலத்தில் வாழ்ந்து அவர் சென்ற நெறியிலே தாங்களும் சென்று பதிகம் பாடியிருக்கலாம். அல்லது அவருடைய மனைவியும், சிவபக்திச் செல்வத்தால் சிறந்தவரும், நீண்டகால ஆயுளோடு இருந்து சிவபெருமான் பணியிலேயே தம் காலத்தைச் செலவிட்டவருமாகிய செம்பியன் மாதேவியரால் தூண்டப்பெற்று இத்திருவிசைப் பாக்கள் பாடியிருக்கலாம். இவர்களைப் பற்றிய விளக்கம் நமக்குக் கிடைக்கவில்லை. எல்லாக் கல்வெட்டுக்களும் படியெடுத்தாகவில்லை; படியெடுத்தவை வெளியிட்டாகவும் இல்லை. ஆகவே எல்லாம் படியெடுத்து எல்லாம் வெளியிட்டாகின்ற நிலையில் இத்துறையில் இன்னும் விளக்கம் கிடைத்தல் கூடும்.

இவ்வத்தியாயத்துள் முதற்காட்டியபடி திருமாளிகைத் தேவர் சேந்தனார் கண்டராதித்தர் வேணாட்டடிகள் திருவாலியமுதனார் ஆகிய ஐவர் வரலாறுகளே சொல்லப்படும். ஏனைய நால்வரான கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காட நம்பி, புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகிய நால்வர் வரலாறுகள் பதினொராம் நூற்றுண்டுக்குரியவை.

## பட்டினத்தார் திருவிசைப்பா

திருவிசைப்பா ஆசிரியர் ஒன்பதின்மர் என்று குறிப்பிட்டோம். அதன் மேலும், பட்டினத்துப் பிள்ளையார் என்று ஒரு பெயர் பத்தாவதாகச் சொல்லப்பட்டுள்ளது. இது பற்றியும் இங்குச் சில சொற்கள் கூறுவோம்.

திருவெண்காட்டுப் புராணத்தைப் பதிப்பித்த துரைசாமிப் பிள்ளை (1905) பட்டினத்துப் பிள்ளையார்

*திருவிசைப்பா என்று பெயர் கொடுத்துப் பின்வரும் இரு பாடல்களையும் பதிப்பித்திருக்கிறார். அவர் இங்குப் பதிப்பித்துள்ள திருவெண்காட்டுத் தேவாரப் பதிகங்களில் 1,11 என்று எண் கொடுத்து முதலும் கடையும் அச்சிட்டிருக்க, இவ்விரண்டை மட்டும் 1–2 என்ற எண் கொடுத்து அச்சிட்டிருக்கக் காணலாம்:*

உண்டதே உண்டும் உடுத்ததே உடுத்தும்,
அடுத்தடுத் துரைத்ததே உரைத்தும்,
கண்டதே கண்டுங் கேட்டதே கேட்டும்,
கழிந்தன, கடவநா ளெல்லாம் !
விண்டதா மரைமேல் அன்னம்வீற் றிருக்கும்
விழாவரு வீதிவெண் காடா !
அண்டரே காண அம்பலத் தாடும்
ஐயனே, உய்யுமா றருளே.

கோடிய மனத்தால் வாக்கினல் செயலால்
கொடியஐம் புலன்களால், அடியேன்
தேடிய பாவம் நரகமுங் கொள்ளா,
செய்தவம் புரியினுந் தீரா,
வீடிய பிரமர் சிரமெலாங் கவர்ந்த
விழாவரு வீதிவெண் காடா !
ஆடிய பாதா, அம்பலத் தாடும்
ஐயனே, உய்யுமா றருளே.

*இதனல் உள்ளவை பத்துப் பாடல்களல்ல, இரண்டு பாடல்களே என்பது தெளிவு. பட்டினத்தடிகள் புராணமுடையார், பட்டினத்தார் பாடல்கள் யாவும் திருவிசைப்பா என்றே வழங்கினர். (பட்டினத்தடிகள் அடங்கன்முறை என்றொரு தொகுதி ஏடுகளில் காணப்படுகிறது.[1]) திருவெண்காட்டு அடிகள் சரித்திரமுடையார் திருவெண்காட்டுத்*

1 சித்தாந்தம் 1969 நவம்பர், அடங்கன்முறை என்ற எமது கட்டுரை பார்க்க.

திருவிசைப்பா என்று, 'பூதமும் கரணம்' 'யாவரே இருந்தும்' 'உண்டதே உண்டும்' என மூன்று பாடல்கள் காட்டினர். மூன்றும் பாடல் மேலே காட்டப்பட்ட முதற் பாடல். இப் பட்டினத்தார் திருவிசைப்பா என்பது, திருமுறை கண்ட புராணத்துள்ளோ, திருவிசைப்பா ஆசிரியர் தலப் பதிகம், பண் அடைவு கூறும் பாடல்களிலோ சொல்லப்படவில்லை. எனினும் இதற்கு ஒரு தோற்றுவாய் குறிப்பிட முடியும்.

**சீரார்மா ளிகைத்தேவர் கருவூர்த் தேவர்**
**திகழ்நம்பி கண்டரா தித்த தேவர்**
**பாரார்வே ணுட்டுத்திரு வடிகள்முது வாலி**
**பரமபுருடோத்தமர்பண் பயில்சேது ராயர்**
**ஏராரும் இளம்பெருமா னடிகள் சேந்தர்**
**எனும்புகழ் அதிராவடிகள் இவரோ டின்னம்**
**பேராருங் கல்லாடர் பட்டினத்துப் பிள்ளை**
**பெருகுதிரு விசைப்பாவைப் பண்ணி ஞரே**

என்ற ஒரு பாடல் சில ஏடுகளில் காணப்படுகிறது. (இது ஒரு பொய்க்கதை கட்டும் பாடல்; ஆனல் இதை ஆறுமுக நாவலரும் எடுத்துக் காட்டியுள்ளார்.)

இப்பாடலில் திருவிசைப்பா ஆசிரியர் ஒன்பதின்மரும் சொல்லப்பட்டுள்ளனர். ஆனல் இவர்களோடு இளம்பெரு மானடிகள், அதிராவடிகள், கல்லாடர், பட்டினத்துப் பிள்ளை என்ற நால்வரும் திருவிசைப்பா செய்தவராகச் சொல்லப் பட்டுள்ளனர். இது பிழையே. திருவிசைப்பாவைப் பொறுத்த வரையில் குழப்பமில்லை. பதிஞெராந் திருமுறைக்குத்தான் இன்று வரை எந்த வரையறையும் கிடைக்கவில்லை. பிற்காலத்து ஏடெழுதினே ரொருவர், தாம் அறிந்த நூல்களனைத்தையும் திருவிசைப்பா என்று தொகுத்தெழுதி வைத்துக் கொண்டார் என்று மட்டுமே இப்பாடலைக் கருதலாம். இங்குப் பட்டினத்துப் பிள்ளை திருவிசைப்பாப் பண்ணினர் என்று வருந்தொடர், திருவெண் காட்டுத் 'திருவிசைப்பா' தோன்ற இடங் கொடுத்தது

போலும். உண்மையில் அப்படியொரு திருவிசைப்பா இல்லை. பட்டினத்தார் பெயர் திருவெண்காடர் ஆதலால் அவர் பெயரில் திருவெண்காட்டுத் திருவிசைப்பா தோற்றுவிக்கப் பட்டது போலும். அப்படியொரு பதிகம் இன்று இல்லை.

இவ்விடத்து ஒரு செய்தி குறிப்பிடத்தகும். முன் குறிப் பிட்ட திருவெண்காட்டுப் புராணப் பதிப்பில் பட்டினத்துப் பிள்ளை துதி என்று ஒரு பாடல் பாயிரப் பகுதியில் 14ஆம் பாடலாக அச்சிடப்பட்டுள்ளது:

**தம்மகத்திற் செல்வமெலாம் பொய்யென் றெண்ணிச்**
**சத்தியமெய்ப் பொருளுணர்ந்து தவத்தோர் போற்றச்**
**செம்மலுக்குத் திருவிசைப்பா இசைத்துத் தெய்வ**
**சிகாமணியாம் திருவாரூர்ச் செல்வ னூர்க்கு**
**மும்மணிக்கோ வையும் பகர்ந்து திருவெண் காட்டின்**
**முதல்வர்க்கு மகபூசை முடித்தோர் நாகப்**
**பைம்மணித்தார் காவிரிப்பூம் பட்டி னத்துப்**
**பட்டினத்துப் பிள்ளைபதம் பரவு வோமே.**

திருவிசைப்பா இசைத்தது இங்குச் சொல்லப்பட்டுள்ளது. ஆனால் திருவாரூர் மும்மணிக்கோவை இவர் பாடினர் என்று சொல்லியிருப்பதும் பிழை; இவர் திருவிடைமருதூருக்கும் திருக்கழுமலத்துக்கும் மும்மணிக்கோவை பாடினரே யன்றி, ஆரூருக்குப் பாடவில்லை. மேலும் இப்பட்டினத்தடிகள் துதி அச்சுப் புத்தகத்தில் உள்ளதே தவிர ஏடுகளில் காணப்பட வில்லை. திருவாரூர் மும்மணிக்கோவை பாடியவர் சேரமான் பெருமாள் (பதினொராந் திருமுறை).

கிடைத்த திருவெண்காட்டுத் திருவிசைப்பாவின் நடையைப் பார்க்கும் போது, இது திருமுறைப் பட்டினத் தாரும் செய்திருக்க முடியாது, பின்னர் 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சித்தரான இரண்டாம் பட்டினத்தாரும் செய்திருக்க முடியாது என்பது தெளிவு. இது பிற்காலத்தெழுந்த போலிப் பாடலாகும்.

# திருவிசைப்பா அட்டவணை

| ஆசிரியர் எண் | பதிக எண் | ஆசிரியர் பெயர் | பதிகம் | தலம் | பாடல் பெயர் | பாடல் தொகை | பண் | சிறப்பு | காலம் நூற்றாண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | திருமாளிகைத் தேவர் | 1 | கோயில் | ஒளிவளர் விளக்கு | 11 | பஞ்சமம் | | 10 |
| | 2 | | 2 | கோயில் | உயர்கொடியாடை | 11 | பஞ்சமம் | பாதாதிகேசம் | |
| | 3 | | 3 | கோயில் * | உறவாகிய யோகம் | 12 | பஞ்சமம் | அகத்துறை | |
| | 4 | | 4 | கோயில் | இணங்கிலா ஈசன் | 11 | காந்தாரம் | பழிப்பு | |
| 2 | 5 | சேந்தனார் | 1 | வீழிமிழலை | ஏகநாயகனை | 12 | பஞ்சமம் | | 10 |
| | 6 | | 2 | ஆவடுதுறை | பொய்யாத வேதியர் | 11 | பஞ்சமம் | அந்தாதி அகத்துறை | |
| | 7 | | 3 | திருவிடைக்கழி | மாலுலாமனம் | 11 | பஞ்சமம் | அந்தாதி அகத்துறை | |
| 3 | 8 | கருவூர்த்தேவர் | 1 | கோயில் | கணம்விரிகுடுமி | 11 | புறநீர்மை | | 11 |
| | 9 | | 2 | களந்தை ஆதித்தேச்சுரம் | கலைகள் தம் பொருளும் | 10 | புறநீர்மை | | |
| | 10 | | 3 | கீழ்க்கோட்டூர் மணியம்பலம் | தனிரொளி மணி | 11 | பஞ்சமம் | அகத்துறை | |
| | 11 | | 4 | முகத்தலை | புவனநாயகனே | 10 | பஞ்சமம் | | |
| | 12 | | 5 | திரைலோக்கிய சுந்தரம் | நீரோங்கி | 11 | காந்தாரம் | அகத்துறை | |
| | 13 | | 6 | கங்கைகொண்ட சோழேச்சுரம் | அன்னமாய் | 11 | பஞ்சமம் | | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 14 | | 7 | பூவணம் | திருவருள்புரிந்து | 8 | பஞ்சமம் | | |
| | 15 | | 8 | சாட்டியக்குடி | பெரியவாகருணை | 10 | பஞ்சமம் | | |
| | 16 | | 9 | தஞ்சை இராச ராசேச்சுரம் | உலகெலாம் தொழ | 11 | பஞ்சமம் | | |
| | 17 | | 10 | இடைமருதூர் | வெய்யசெஞ்சோதி | 10 | பஞ்சமம் | | |
| 4 | 18 | பூந்துருத்தி நம்பிகாட நம்பி | 1 | ஆரூர் | கைக்குவான் | 2 | பஞ்சமம் | | 11 |
| | 19 | | 2 | கோயில் | முத்துவயிர | 10 | சாளரபாணி | | |
| 5 | 20 | கண்டராதித்தர் | 1 | கோயில் | மின்னுருவம் | 10 | பஞ்சமம் | | 10 |
| 6 | 21 | வேணாட்டடிகள் | 1 | கோயில் | துச்சானசெய் | 10 | புறநீர்மை | | 10 |
| 7 | 22 | திருவாலி அமுதனார் | 1 | கோயில் | மையல் மாது | 11 | பஞ்சமம் | பாதாதிகேசம் | 10 |
| | 23 | | 2 | கோயில் | பவளமால்வரை | 10 | நட்டராகம் | அகத்துறை அந்தாதி | |
| | 24 | | 3 | கோயில் | அல்லாய்ப்பகலாய் | 11 | இந்தளம் | நடனக் காட்சி | |
| | 25 | | 4 | கோயில் | கோலமலர் | 10 | பஞ்சமம் | அகத்துறை அந்தாதி | |
| 8 | 26 | புருடோத்தம நம்பி | 1 | கோயில் | வாரணிநறு | 11 | பஞ்சமம் | அகத்துறை அந்தாதி | 11 |
| | 27 | | 2 | கோயில் | வானவர்கள் | 11 | பஞ்சமம் | அகத்துறை அந்தாதி | |
| 9 | 28 | சேதிராயர் | 1 | கோயில் | சேலுலாம்வயல் | 10 | பஞ்சமம் | அகத்துறை அந்தாதி | 11 |

## திருப்பல்லாண்டு

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2 | 29 | சேந்தனார் | 1 | கோயில் | மன்னுகதில்லை | 13 | பஞ்சமம் | | 10 |

* கோயிலும் மகேந்திரமும்,

# திருமாளிகைத் தேவர்

**வரலாறு**

*திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்களுள் முதல் ஆசிரியர் திருமாளிகைத் தேவர். இவர் பாடிய பதிகங்கள் ஒன்பதாம் திருமுறையின் தொடக்கத்தில் அமைக்கப்பட்டுள்ளன. பொதுவாக இத்திருமுறை ஆசிரியர் வரலாறு முதலியன எங்கும் சொல்லப் பெறவில்லை. ஆயினும், இவர் வரலாறு என்ற பெயரால் பல வகையான கதைகள் புனையப் பெற்றுள்ளன. அவை யாவும் உண்மை வரலாற்றை அறிவதற்கோ, ஆராய்ச்சிக்கோ, உதவுவனவாக இல்லை. இவர் தில்லையிலே வழிபட்டிருந்து அங்கே தமக்குத்திருமடம் கட்டிக்கொண்டு வாழ்ந்து உரிய காலத்தில் முத்தி பெற்றுர் என்று மட்டுமே கருதமுடியும். இவர் தாம் வாழ்வதற்குத் தில்லையில் அமைத்த இல்லம் பெருமாளிகையாக இருந்தமையால் மாளிகை மடம் எனப்பட்டது போலும். இவர்தம் இயற்பெயர் தெரியவில்லை. மாளிகை அமைத்தமையால் திருமாளிகைத் தேவர் எனப்பட்டார். தேவர் என்ற பெயரின் இறுதிச்சொல் இவர் பிராமணரல்லர் என்பதைக் காட்டும். அங்கு இவருக்குப்பின் பரம்பரையாக ஆசிரியர் இருந்து வந்தனர். அந்தப் பரம்பரையில் வந்த ஒரு வெண்காட முனியின் மாணுக்கரான விநாயக முனிவர் தம்மையாட் கொண்டார் என்று பெரும்பற்றப்புலியூர் நம்பி தாம் பாடிய திருவிளையாடற் புராணத்தில் கூறுகின்றுர் :*

**வரந்தருந் தொல்லைத் தில்லை மாளிகை மடத்து மன்னும்**
**அருந்தவ முனிவெண் காடன் அருள்விநா யகன்ம னத்தாற்**
**பரிந்தெனை யாண்டு கொண்ட படர்சடைக் கடவுள் நீதி**
**திருத்திய பரம ஞான சிவனடி சென்னி சேர்ப்பாம்.**

*திருவிடைமருதூரில் சிவாலயத்தில் பணி செய்யும் ஆதிசைவர் பரியேறும் பெரியோர், தெய்வப் படிமப்பாதம்*

வைத்தோர், மாணிக்கக் கூத்தர், சைவராயர், குருராயர் என ஐந்து பிரிவினர் என்றும், இவர்களுள் சைவராயர் என்ற பிரிவில் உதித்தவர் திருமாளிகைத் தேவர் என்றும், இவ் வகையார் வசித்த இல்லத்துக்குத் திருமாளிகை என்று பெயர் என்றும் அறிஞர்[1] கூறியுள்ள இக்கூற்றுகளுக்கு ஆதாரம் இல்லை. மேலும், இவ்வகையான பிரிவு தமிழ்ச் சைவ மரபிலோ இலக்கிய மரபிலோ எங்கும் கண்டதில்லை.

திருமூலர் காவிரிக்கரையை அடைந்து அங்கு ஓர் இடையன் உடலுள் புகுந்து யோக சமாதியில் அமர்ந்து மூவாயிரம் திருமந்திரப் பாடல் பாடினர் என்பது பெரிய புராணம் கூறும் வரலாறு. வாழ்க்கைச் சம்பவங்கள் காரணமாகத் திருமூலரை ஒரு சித்தர் என்று பின்வந்தோர் கருதினர். இவ்வூருக்கு அமைந்த ஒரு பெயராகிய நவகோடி சித்தபுரம் என்பது காணத்தக்கது. இவற்றால், திருமாளிகைத் தேவர், கருவூர்த் தேவர் முதலியோர் வரலாறுகளும் இவ்வூருடன் பொருத்திச் சொல்லப்பட்டன. திருமாளிகைத் தேவருக்கு இவ்வூரில் ஒரு கோயிலும் ஏற்பட்டது. அதையொட்டி இவரைப் பற்றிய அற்புதக் கதைகளும் பெருகிவிட்டன. பெருகிய காலத்தில் தொட்டிக் கலை சுப்பிரமணிய முனிவர் வாழ்ந்து அவற்றையெல்லாம் தொகுத்து ஒரு பாடலில் பாடினர் (கி. பி. 1800). இம் முனிவர் திருவாவடுதுறை ஆதீனப் பரம்பரையில் சீடராக வந்தவர். ஆதலால் அங்குக் கோயில் அமைக்கப்பெற்றிருந்த காரணத்தால் முனிவர் திருமாளிகைத் தேவரைக் குறித்துத் தோத்திர பஞ்சகம் என்ற ஐந்து பாடல்களும் மூன்று தனிப் பாடல்களும் பாடினர். திருவாவடுதுறை மடத்தில் தங்கிய தம்பிரான்களில் யாருக்கேனும் குறையிருந்தால் அக் குறையைத் திருமாளிகைத் தேவர் சந்நிதியில் சொல்லி முறையிட்டால் அக்குறை நீங்கும் என்ற ஒரு நம்பிக்கை

1 சோமசுந்தர தேசிகர்.

*உண்டு. அதை முனிவர் நாலாம் பாடலில் குறிப்பிட்டுப் பாடுகிருர்.*

*இனி இம்முனிவர் கூறியபடி இவர் செய்த அற்புதச் செயல்களை இங்கே குறிப்பிடுவோம். இவருக்கு அட்டமா சித்திகள் கைவந்திருந்தன. அதன் பயனுய் இவர் எல்லா அற்புதச் செயல்களும் செய்ய முடிந்தது :*

**குடங்கர்விசும் பிடைநிறுவிக் குணபநடந் திடவியக்கிக்**
**கொடிஞ்சிப் பொற்றேர்**
**வடங்கழற்றி யோட்டிமதில் நந்திகளை வரவழைத்து**
**வரைநன் காட்டின்**
**உடம்பினெழு புகைமாற்றிக் கொங்கணர்பாத் திரஞ்சுவற்றி**
**உணவ தாய்வெந்**
**திடும்பயறு முளைசெய்தெமக் கருள்திருமா ளிகைத்தேவர்**
**இணைத்தாள் போற்றி.**

*இப்பாடலில் குறிப்பிடப்பட்ட வரலாறுகள் பின்வருவன: ஒரு சமயம் இவர் சிவபூசை செய்யும்பொருட்டு கையில் பூக்குடலையும் நீரும் ஏந்திவரும் வழியில், எதிரே சிலர் மயானத்தை நோக்கி ஒரு பிணத்தைச் சுமந்துகொண்டு வந்தனர். கண்ட இவர் பூசைப் பொருள்கள் தூய்மை குன்ருமல் இருக்கும் பொருட்டு, பூக்குடலையை ஆகாயத்தில் வீசி எறிந்து தம்து தவ வலிமையால் அப்படியே நிற்கும்படி செய்தார்; அங்கு அப்பிணம் உயிர் பெற்றெழுந்து மயானம் வரையில் நடந்து சென்று அங்கே மீண்டும் பிணமாகி விடுமாறும் செய்தார். மற்ருெரு சமயம் திருவீழிமிழலையில் தேர் ஓடவில்லை. ஊரார் இவரிடம் விண்ணப்பித்தபோது இவர் சென்று தேர்வடத்தைக் கழற்றிவிட்டுத் தேர் தானே ஓடி நிலையை அடையும்படி செய்தார். தவ வலிமையால் அழகிய ஒளி மிக்க உடம்பு இவருக்கு வாய்த்திருந்தது. அதுபற்றி, இவரைக்கண்ட மாதர் அனைவரும் இவர் அழகில்*

ஈடுபட்டு இவரையே காமுற்றிருந்தனர். இவர் எண்ணமே அவர்கள் மனத்தில் எப்போதும் நிலவி இருந்தமையால், அவர்கள் பெற்ற பிள்ளைகள் அனைவரும் இவரைப் போன்ற உருவம் பெற்றிருந்தார்கள். கண்ட அப்பெண்களுடைய நாயகர் தங்கள் மனைவிமாரையும் குறை கூறி, இவரையும் கூடா ஒழுக்கம் உடையவர் என்று பழித்தனர். உண்மையில் இவர் ஒரு பாவமும் அறிந்தவரல்லர். இச்செய்தி அரசன் காதில் விழ, அவன் இவரை அழைத்தான். அவ்வரசன் நரசிங்கன் என்ற பெயரையுடையவன். இவர் வராமையால் கட்டிக் கொணருமாறு சேவகரை அனுப்பினான். சென்ற சேவகர் இவரைக் கண்டபோது அறிவு மயங்கித் தங்களையே ஒருவரையொருவர் கயிற்றால் கட்டிக்கொண்டு அரசனிடம் வந்தனர். பார்த்த அரசன் கோபமடைந்து இவரை வெட்டிக் கொணருமாறு பின்னும் சில சேவகரை அனுப்பினான். அவர்கள் சென்று இவரைக் கண்டபோது, முன்போல் அறிவு மயங்கி ஒருவரையொருவர் வெட்டிக்கொண்டுவந்து நின்றனர். அரசன் பெருங் கோபமடைந்து இவரை அடக்குவதற்காகத் தன் சேனையோடு புறப்பட்டான். இதை யறிந்த இவர் திருவருளை வேண்டி, தமது தவ வலிமையால் கோயில் மதில்மேலுள்ள இடபங்களை உயிர் பெற்றெழச் செய்து அவற்றால் நரசிங்கனுடைய படைகள் தோற்றோடுமாறு செய்தார். நரசிங்கன் படைகளோடு வந்து தங்கிய இடமே இன்றைய நரசிங்கன்பேட்டை என்று இக் கதைக்கு ஓர் ஆதாரமும் காட்டுவர்.

கொங்கண சித்தர் வரலாறு தமிழ் நாட்டில் பலவாறாகச் சொல்லப்படுகிறது. இவர் தம் தவ வலிமையால் கொக்கை எரித்ததும் வள்ளுவர் மனைவி வாசுகியாரிடம் பங்கப் பட்டதும் எல்லோரும் அறிந்த செய்திகள். அவருடைய கமண்டலத்தில் இருந்த நீர் ஒரு காலத்திலும் வற்றாது. இதுபற்றி அவருக்கிருந்த இறுமாப்பை அகற்ற வேண்டி,

*திருமாளிகைத் தேவர் அந்நீர் வற்றும்படி செய்தார். மற்றொரு சமயம் இவர் சுடுகாட்டோரம் உள்ள சாலையில் சென்றுகொண்டிருந்தபோது அங்கு எரிந்துகொண்டிருந்த பிணத்திலிருந்து வந்த பிணப்புகையால் தமக்கு அருவருப்பு நேராவண்ணம் அப்புகையை நறும்புகையாக மாற்றினர். பின்னொரு சமயம் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டபோது, தமக்கு சிவநிவேதனப் பிரசாதமாக வந்த பயிற்றம் பருப்புச் சுண்டலை வயலில் விதைத்து முளைக்கச் செய்து விளைந்த விளைவைக்கொண்டு பஞ்சத்தை ஓரளவு போக்க உதவினர்.*

*இவ்வாறு இவர் செய்ததாக வழங்கும் அற்புதங்கள் பல. இவை யாவும், சந்தர்ப்பம் நோக்கி நவகோடி சித்தபுரம் என்ற பெயருக்குப் பொருத்தமாக, வழங்கிய பல்வேறு கதைகளை ஒரு சித்தருக்குப் பொருத்திக் காட்டும் முயற்சி என்று கருதவேண்டும். பலரைக் குறித்துப் பல இடங்களில் பல காலங்களில் எழுந்த அற்புதக் கதைகள் இவர் மேலேற்றப்பட்டன. இவ்வாறு செவியாறலாக வந்த கதைகளுக்குச் சுப்பிரமணிய முனிவர் தம் பாடல் மூலம் நிலைத்த உருவம் கொடுத்து விட்டார். இவற்றுள் எப் பகுதியும் உண்மை என்று கொள்வதற்கு இல்லை. மேலும், முற்காட்டிய இரண்டாம் பாடலில் இவரை 'போகநாத சித்தர் பதம் பூசிக்கும் புனிதர்' என்று முனிவர் கூறுகிறார்.*

**பொருவிலதாம் போகநாத சித்தர்பதம் பூசிக்கும்**
**புனிதர் நாளும்**
**மருவுபதி யதிசயங்கள் வாக்காலும் மனத்தாலும்**
**மதிக்கொ ணுதாய்**
**இருளகன்ற பானுவென எண்திசையும் பணிந்துய்ய**
**இன்பா யோங்கி**
**அருளுருவாய்த் துறைசைவரு மொருதிருமா ளிகைத்தேவை**
**அகத்துள் வைப்பாம்.**

*இவர் சித்தர் போகருடைய மாணக்கர் என்பதற்கு இப் பாடல் ஆதாரமாயிற்றுப் போலும். போகர் போன்ற சித்தர் பலர், வைத்தியம் சோதிடம் முதலான துறைகளில் புகழ் பெற்று விளங்கி வந்திருக்கின்றனர். அவர்களில் யாரும் தமிழ் இலக்கியத் துறைக்கு வந்ததில்லை[1]. அந்த மரபில் ஒரு திருமாளிகைத் தேவர் சித்தராய் வாழ்ந்தார், முன்காட்டியபடி பல அற்புத நிகழ்சிகளை நிகழ்த்தினர் என்று கருதினலும் பிழையில்லை. அப்படியொருவர் இருந்தால் அவர் வேறு, திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர் வேறு.*

*திருமூலர் திருமந்திரத்தில் ஒரு பாடலில் திருமாளிகைத் தேவர் பெயர் வருவதை எடுத்துக்காட்டி, அப்பாடல் பிற் காலத்தாருடைய இடைச் செருகலாயிருத்தல் கூடும் என்று வெள்ளைவாரணனர் குறிப்பிட்டு இருக்கிருர்[2]:*

**கலந்தருள் காலாங்கர் தம்பால் அகோரர்**
**நலந்தரு மாளிகைத் தேவர் நாதாந்தர்**
**புலங்கொள் பரமானந்தர் போகதேவர்**
**நிலந்திகழ் மூவர் நிராமயத் தோரே** (102).

*இப்பாடல் குருமட வரலாறு என்ற திருமந்திரப் பகுதியில் இரண்டாம் பாடல். சேக்கிழார் பாடிய பெரிய புராணமே திருமூலர் வரலாற்றுக்கு ஆதாரம். அங்கு குருமடமோ, இவருடைய பரம்பரையா பற்றிய எந்த வரலாறும் கூறப் படவில்லை. ஆதலால் இவை யாவும் பிற்காலத்தில் பாடிச் சேர்த்தவை என்றே கொள்ளத்தக்கன. அன்றியும் திருமூலர் தம்மையே 'மூவர் நிராமயத்தோரே' என்று குறிப்பிட்டுக் கொள்ளார். ஆதலால் இக்கூற்றுப் பிற்சேர்க்கை என்பது தெளிவு.*

---

1 இலக்கியத் துறையில் புகழ்பெற்ற சித்தர் வரலாறுகளை எமது 14, 15 நூற்றுண்டுகளின் தமிழ் இலக்கிய வரலாறுகளிற் காணலாம்.

2 பன்னிரு திருமுறை வரலாறு, இரண்டாம் பகுதி பக்கம் 354.

இனி முடிவாக நாம் பார்க்கும்போது, திருமாளிகைத் தேவர் என்பவர் ஒரு சித்தராகக் கருதப்பட்டார்; மேற்கூறிய சித்தர் கதைகள் அவர் மேல் ஏற்றப்பட்டன; அவர் பெயரைக் குறிப்பிடும் பாடல் திருமந்திரத்தில் பிற் காலத்தில் நுழைக்கப்பட்டது; திருமூலர் சமாதிகொண்ட தலத்தில் அவருக்கும் ஒரு சமாதி படைக்கப்பட்டது என்று அறிகிறோம்.

சித்தரான திருமாளிகைத் தேவருக்குக் கோயில் முதலியன ஏற்பட்ட பிறகு, பூசாக்கிரமங்களும் ஏற்பட்டன. இச்சித்தர் தம் தவ வலிமையால், தமது பூசைக் காரியங் களுக்கு இரண்டு கைகள் போதவில்லை என்று எண்ணிப் பின்னும் இரு கைகளும் படைத்துக் கொண்டார்; நான்கு கைகளோடு கூடிய சிலை அவருக்கு அங்கு அமைக்கப் பட்டிருக்கிறது. திருவாவடுதுறை மடம் 16ஆம் நூற்றாண்டில் நிறுவப்பெற்றது. அதன் பின்னரே திருமாளிகைத் தேவ சித்தர் கதைகள் பெருகின, சம்பிரதாயங்கள் எழுந்தன. திருவாவடுதுறைக் கோயிலில் எழுந்தருளிய சிவபெருமா னுக்கு ஆராதனை முடிந்த பின், திருமாளிகைத் தேவர் கோயில் பூசை நடக்கும், அதன் பின்னரே மடத்தில் பகல் உணவும் மாகேசுவர பூசையும் நடப்பது ஒரு சம்பிரதாயம் என்று மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஒரு பாடலில் எடுத்துக் காட்டுகிறார்:

**பேசு புகழ்ச்சுப் பிரமணிய தேசிக,பொன்**
**வீசு கழற்கடியேன் விண்ணப்பம்: - நேசம்**
**வருதிரு மாளிகைத்தே வன்பூசை யாயே**
**கருதுபந்தி யாதல்வழக் கம்.**

இச்சித்தர் வேறு, திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர் வேறு; நம் ஆசிரியர் தில்லையை விட்டுத் திருவீழிமிழலைக்கோ திருவாவடுதுறைக்கோ வந்தவரல்லர்.

திருவிசைப்பாப் பாடிய முதலிரு ஆசிரியர்களான திருமாளிகைத் தேவரும், சேந்தனரும் ஒரே ஆசிரியராக இருக்கலாம் என்ற ஓர் ஐயத்தை மு. இராகவையங்கார் தெரிவித்தார்.[1] அவர் கூறிய கருத்துக்கள் பின்வருவன: இராசராச சோழனது திருவீழிமிழலைக் கல்வெட்டு ஒன்று சிவஞானியும் திருமாளிகைத் தேவர் என்று வழங்கப்பட்டவருமாகிய செயந்தன் என்பவர் அக்கோயிலுக்கு நந்தா விளக்கொன்று வைத்தார் என்று சொல்லுகிறது. ஜயந்தன் என்ற வடசொல் தமிழில் சேந்தன் என்று திரியும். ஆகவே அக்கல்வெட்டில் கண்ட ஜயந்தன் சேந்தனராகலாம்; இவர் சிவஞானி என்று சிறப்பிக்கப் பெறுதலாலும் இவ்வாறு கொள்ளத் தக்கது. திருமாளிகைத் தேவருடைய தில்லைத் திருவிசைப்பாப்பதிகங்கள் நான்கின் இறுதிப் பாடல்களிலும் அவர் பெயர் குறிப்பிடப்படவில்லை. ஆனல் அடுத்து அமைந்துள்ள சேந்தனர் திருவிசைப்பாப் பதிகங்கள் மூன்றில் மூன்றும் பதிகத்தின் இறுதிப் பாடலில் அவர் தம் பெயரைக் குறிப்பிடுகிறர். இருவர் பதிகங்களையும் சேர்த்துப் பார்த்தால் மொத்தம் ஏழு பதிகங்கள். ஏழாம் பதிகத்தின் இறுதியில் தான் சேந்தன் என்னும் பெயர் வருகின்றது. ஆகவே ஏழு பதிகங்களும் திருமாளிகைத் தேவராகிய சேந்தனரால் பாடப் பெற்றன என்று நாம் கருதலாம் – என்பது அவர் கருத்து. இதைக் கொள்ளாமைக்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவது ஜயந்தன் சேந்தன் என்று திரியலாம். ஆயினும் சேந்தன் என்பது வேறு தனித்தமிழ்ச்சொல், சிவப்பு, செம்மை என்ற சொற்களிலிருந்து சேந்தன் என்ற தமிழ்ச் சொல் பிறந்து இருக்கலாம். முருகனைச் செவ்வேள் என்பது மரபு. கண் சிவந்தன என்ற கருத்து கண் சேந்தன என்று பண்டை நூல்களில் வருவதால், சேந்தவன் சேந்தன் என்று இச்சொல் உருவம் பெற்றிருக்கலாம். அடுத்து திருவிசைப்பா ஆசிரியர் ஒன்பதின்மர் என்பதே பண்டைய வழக்கு; இருவரும் ஒருவரே என்று கொண்டால் அவ்வழக்கு முரணுகிறது.

1 சாசனத தமிழக்கவி சரிதம், பக்கம் 35-36.

இது பொருந்தாது. அன்றியும் எல்லா ஆசிரியர்களும் திருக்கடைக்காப்புப் பாடுவதில்லை, திருமாளிகைத் தேவர் தம்மை மிக்க பணிவோடு மூர்க்கனேன் என்றும் சிவப் பெருந்தொண்டர் தொண்டனேன் என்றும் குறிப்பிட்டுக் கொள்கிறாரேயன்றித் தம் பெயரைக் குறிப்பிட விரும்பு பவராகத் தெரியவில்லை. தம் சொற்களைப் புன்மொழிகள் என்றும் புன்சொல் என்றுமே குறிப்பிடுகிறார். முதற்பதிகத்தில் எல்லாப் பாடல்களின் முடிவிலும் தம்மைத் தொண்டனேன் என்று குறிப்பிடுகிறார். சேந்தனார் தம்முடைய சொல்லைக்கொண்டு 'திருக்குராநிழற்கீழ் நின்ற ஒளியை ஏத்துவார் கேட்பார் இடர் கெடும்' என்கிறார். இச்சொற்கள் ஒருநாளும் திருமாளிகைத் தேவருக்கு உரியன ஆகா. கல்வெட்டினால் நாம் அறிவது அக்கோயிலில் இராச ராச சோழன் காலத்தில் விளக்கு வைத்தவர் செயந்தன் என்ற இயற்பெயர் உடையவர் (ஒரு கால் திருமாளிகைத் தேவர் பரம்பரையில் வந்தவர்) என்பது மட்டுமே ஆகும்.

திருமாளிகைத் தேவர் என்ற பெயரைத் தாங்கினோர் பலர் இருந்திருக்கின்றனர். மூன்றாம் குலோத்துங்கனுடைய ஆட்சியில் (கி பி. 1181) மற்றொருவர் திருமாளிகைத் தேவர் பெயரைத் தாங்கி அரசியல் தலைவராக வாழ்ந்தார் என்பதை அறிகிறோம்.

மற்றொரு வரலாற்றையும் இங்குச் சொல்வது பொருந்தும். தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் என்பவர் 18 – 19 நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர்; பழைய கதைகளுக்கு அவர்தம் பாடலில் ஓர் உருவம் கொடுத்தார் என்று குறிப்பிட்டோம். மறைஞான சம்பந்தர் என்ற சைவ நூலாசிரியர் 14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சிதம்பரத்தில் பிரசித்தமாய் வாழ்ந்தவர். இவர் காலத்தில் பெரும் பெற்றப் புலியூர் நம்பி குறிப்பிடுகின்ற மாளிகை

மடம் சிறப்பாய் இருந்ததுபோலும். மறை ஞானசம்பந்தர் திருமாளிகைத் தேவருக்குத் தம் சிறுநூல்கள் பலவற்றில் வணக்கம் சொல்லுகிருர். இதனல் அவர் காலத்தில் மாளிகை மடம் சிறப்புடையதாய் இருந்தது, அதன் தலைவர் ஒருவர் இருந்து, அவரிடமும் மறை ஞானசம்பந்தர் பயின்றிருக்க வேண்டும் என்று சொல்லத் தோன்றுகிறது. பிற்காலத்து ஆசிரியர் குருவணக்கம் சொல்லும்போது, தமக்கு உபதேசித்த ஆசிரியர் பரம்பரையின் குரு முதல்வருக்கு வணக்கம் சொல்வது ஒரு மரபு. சென்ற நூற்ருண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்த மகாவித்துவான் மீனட்சிசுந்தரம் பிள்ளை திருவாவடுதுறை ஆதீன குரு முதல்வராய் 16ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த நமசிவாய மூர்த்திக்குத் தம் நூல்கள் பலவற்றில் வணக்கம் சொல்கிருர். இந்த மரபின்படி மறைஞானசம்பந்தர் திருமாளிகைத் தேவருக்குச் சொல்லும் குருவணக்கப் பாடல்களில் இரண்டை இங்கே தருகிறேம்.

**மாளிகைத் தேவன் முதல்மதுர வாக்கினர்தம்**
**தாளிணை வைப் பாம்எம் தலை.**

**மதுரகவி மாளிகைத்தே வன்முதலோர் பாதப்**
**புதுமலர்எம் சென்னியில்வைப் போம்.**

இவ்விரண்டு பாடல்களிலும் ஆசிரியர் மதுரகவி திருமாளிகைத் தேவர் என்று பாடுகிருர். இது இவருக்குத் திருமாளிகைத் தேவர் பாடலில் இருந்த ஈடுபாட்டைப் புலப்படுத்துகிறது. இவரும் சிறந்த சைவப் புலவர் ஆனமையால், கவிதையில் உள்ள ஈடுபாடு திருமாளிகைத் தேவரை மதுரகவி என்று சொல்லச் செய்கிறது. திருமாளிகைத் தேவருடைய திருவிசைப்பாவைப் பயின்றவர் இவ்வடைமொழி பொருந்துவதே என்று ஒப்புக் கொள்வர். மறை ஞானசம்பந்தர் இவ்வாறு கவிதையின் சிறப்பைக் கூறுகிருரேயன்றி, திருமாளிகைத் தேவர்

செய்ததாக ஓர் அற்புதச் செயலைக் கூடக் குறிப்பிடவில்லை. இதன்பொருள், அவர் காலத்தில் அவ்வற்புதங்களைப் பற்றிய கதைகள் தோன்றவில்லை என்பதாகும். திருமாளிகைத் தேவருக்கு 900 ஆண்டுகள் பிற்பட்டு வாழ்ந்த தொட்டிக் கலைச் சுப்பிரமணிய முனிவர் கூற்றைவிட, 600 ஆண்டுகளே பிற்பட்டு வாழ்ந்த மறை ஞானசம்பந்தர் காலத்தில் பொய்க் கதைகள் குறைவாகவே இருக்கும் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்வர்.

**பாடல்**

திருமாளிகைத் தேவர் பாடிய பதிகங்கள் நான்கு; இவை நான்கும் தில்லைக்குரியன. முதல் மூன்று பதிகங் களும் பஞ்சமப்பண் என்றும், நான்காம் பதிகம் காந்தாரப் பண் என்றும் பழம்பாடல் கூறும்.[1] இவற்றின் மொத்தப் பாடல் 45. இப்பதிகங்கள் தொடக்கத் தொடரை வைத்து வழங்குவது மரபு – ஒளிவளர் விளக்கு, உயர்கொடியாடை, உறவாகிய யோகம், இணங்கிலாவீசன் என.

திருமாளிகைத் தேவர் காலத்தில் சைவ சமயத்தில் வடமொழிப் பயிற்சி அதிகமாய் இருந்தது. அதன் விளைவாய், தமிழில் நூல் செய்தோர் எல்லோருமே, செய்த நூலின் தன்மைக்கு ஏற்ப, வடசொற்களை வேறுபாடு கருதாது நிரம்பப் பெய்திருந்தார்கள். இவருடைய பாடல் களிலும் அப்படியே வடசொற்களும் தொடர்களும் மிகப்பல காணலாம். சசிகண்ட சிகண்டா சாமகண்டா, காலகாலா காமநாசா, புவனபோகமே, குமர விநாயக சனக, மகேந்திரநாத, நாதாந்தத்து அரையா என்ற தொடர்களைக் குறிப்பிடலாம்.

எல்லாப் பகுதிகளிலும் சமணம் முதலிய பிற சமயங்களைக் குறிப்பிடுகிறார். சமண் புத்தர் பொய்கள்

1 நான்குமே பஞ்சமப் பண் என்ற குறிப்பு ஏட்டில் காணப்படுகிறது.

கண்டாயை, புத்தராதிப் பொக்கரை, செதுமதிச் சமணும் தேரரும் சேராச் செல்வச் சிற்றம்பலக் கூத்தா என்பன காண்க. அக் காலத்தில் சமணரும் புத்தரும் ஆதிக்கம் பெற்றிருந்தனர் என்பது இதன் பொருளன்று; முந்தைய சிவனடியார் பழித்த காரணத்தினால் இவரும் பழித்தார் என்றே கருதவேண்டும். பௌத்தம் எந்தக் காலத்திலுமே வலிமையுடையதாய் இருந்ததில்லை. இவர்காலத்தில் சமணம் வலி அழிந்து நீண்ட நாளாயிற்று.

வடமொழியைப்பற்றி இவர் கூறும் ஒரு கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கது. 'அசிக்க ஆரியங்கள் ஓதும் ஆதரை ... காணு கண்' என்று கூறுகின்றார். ஆரியம் வட சொல், வடநூல்வழி. இவர் வடசொற்களை அதிகம் பெய் திருந்த போதிலும்கூட, வடநூலே கதி என்று இருப்பவர் களைக் கண்டு இவ்வாறு பழிக்கிறார் என்றே நாம் சொல்ல வேண்டும். ஆதர் என்ற சொல்லுக்கு இங்கு இருவகையாலும் பொருள் சொல்லலாம்: எளிதாகச் சொல்லத்தக்கது அறிவில் லாதவர் என்பது; ஆதன் என்பது அருகனைக் குறிப்பிடும் ஒருசொல்; ஆகவே வடசொல்லே அதிகம் பயின்றுவந்த சமணசமயத்தாரைப் பழித்து இவ்வாறு குறிப்பிட்டார் என்றும் கருதலாம்போலும்.

ஓர் ஒப்புமையை இங்கே எடுத்துக்காட்டத் தோன்று கிறது. பதின்மூன்றும் நூற்றாண்டில் வாழ்ந்த வைணவ ஆசிரியர் சிலர், வடமொழியே கதி என்று இருந்தவரைப் பழித்து, சமஸ்கிருத முரணர்[1] என்று கூறுவதை வைணவ சமய நூல்களில் பார்க்கிறோம். அவர்கள் வடமொழியில் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தபோதிலும்கூட, இது அளவு கடந்துபோகும்போது, அவர்களே அந்த நிலையைக் குறை கூறுகின்றார்கள்.

1 இதன் விளக்கத்தை எமது தமிழ்இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு பக்கம் 307இல் காண்க.

இனி இவர் பதிகங்களை ஆராயலாம். முதற்பதிகம் ஒளிவளர் விளக்கே' என்று தொடங்குவது. இதன் பாடல்கள் யாவும் விளம்புமா விளம்பே, பணியுமா பணியே, கருதுமா கருதே, நினையுமா நினையே என்பனபோன்ற தொடர்களைக்கொண்டு முடிவன. இம் முடிவுகள் சிறந்த சைவ சித்தாந்த முடிவான கருத்தை விளக்குவன. அதாவது இறைவனது தன்மையை ஆன்மா அறியமாட்டாது, அறிவித்தாலும் பூரணமாய் அறியமாட்டாது, ஆதலால் இறைவன் உயிரோடு ஒன்றி நின்று உயிர் அறியும் பொருட்டுத் தான்அறிகிருன். இந்த நிலையைத்தான் இப் பதிகத்தில் உள்ள ஒவ்வொரு பாடலும் சொல்லுகிறது. சிவஞான சுவாமிகள் சிவஞானபோதச் சிற்றுரையில் இத் தொடர்களை மேற்கோள் காட்டி இப் பொருளை நன்கு விளக்குகிருர்: "உயிர் ஒன்றனையறிதல் முதல்வன் உடனின்றறிதலையின்றி அறிவித்தல் மாத்திரையான் அமையாது என்பது, தொண்டனேன் நினையுமா நினையே, விரும்புமா விரும்பே, தொடருமா தொடரே, நுகருமா நுகரே என்றிவ்வாறு முத்திநிலைபற்றியோதிய திருவாக்குக் களானும் அறிக" என்பது அவர் கூற்று. இக் கூற்றின் விளக்கம்போலப் பாடல்கள் அமைந்துள்ளன. மூன்றும் பாடலில்

நற்பெரும் பொருளாய் உரைகலந் துன்னை
என்னுடை நாவினுல் நவில்வான்
அற்பனென் உள்ளத்து அளவிலா உன்னைத்
தந்தபொன் னம்பலத் தாடீ

என்று இவர் கூறுவது முற்கூறிய கருத்தை ஆசிரியரே விளக்கி உரைப்பதாகும். 'நன்முறையில் உன்னை நான் துதிக்கும்பொருட்டு அற்பனுகிய எனது உள்ளத்தில் மகத்தான நீ உன்னை எழுந்தருளியிருக்கச் செய்த அம்பலவனே' என்கிருர். அதாவது நான் நவிலவில்லை,

என்னுடைய நாவிலே நீ இருந்து நவில்கின்ருய் என்பது கருத்து. இதையே ஒன்பதாம் பாடலில், 'எவர்க்கும் தொடர்வரியாயைத் தொண்டனேன் தொடருமா தொடரே' என்று உணர்த்துகிருர். சரப உருவாய் வந்து இரணியன் மார்பு கீண்ட நரசிங்கமூர்த்திக்கு அருள்புரிந்த வள்ளலே என்று போற்றுகின்ருர். தம் பாடலை 'மூர்க்கனேன் மொழிந்த புன் மொழிகள்' என்கிருர். வேறு சிலர்போல இவர் ஓரிடத்தும் தம் பெயரைக் குறிப்பிடவில்லை.

இரண்டாம் பதிகம் 'உயர் கொடி ஆடை' என்று தொடங்குவது. பாடல்கள் பாதாதிகேச முறையில் துதிப்பனவாக உள்ளன. சேவடி, சிலம்பு, கணைக்கால், குறங்கு, நிதம்பம், திருவயிற்றுந்தி, உதரம், பவளவாய், மலர்முகம், செஞ்சடை என்ற உறுப்புக்களைச் சொல்லித் துதிக்கிறது. ஒவ்வொரு பாடலும் பெரும்பற்றப்புலியூர்ச் சிற்றம்பலக் கூத்தா என்று சொல்வது. இறைவனுக்குச் சகஸ்ரநாம அர்ச்சனை, லட்சார்ச்சனை செய்வதை, 'பேர்கள் ஆயிரம் நூருயிரம் பிதற்றும் பெற்றி' என்ற சொற்களால் இவர் குறிப்பிடுகிருர் என்று கருதலாம். இறைவன் சென்னியில் கொக்கிறகும் கொன்றையும் துன்றுகின்றன என்கிருர். இறுதிப் பாடலில் 'தவப்பெருந் தொண்டர் தொண்டனேன்' என்றுமட்டும் தம்மைக் குறிப்பிடுகின்ருர்.

மூன்ரும் பதிகம் 'உறவாகிய யோகம்' என்பது. இது அகத்துறையில் அமைந்து, தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கலைத் தாய் கூறும் கூற்ருக அமைந்துள்ளது. பாடல்கள் 'குலாத் தில்லை யம்பலக் கூத்தனையே' என்ற முடிவையுடையன. அம்பலக் கூத்தனை, மகேந்திர மாமலை போல் இருந்தவனே என்று தலைவி கூறுவதாக எல்லாப் பாடல்களும் கூறும். மகேந்திர மலையில் சிவபெருமான் வேடுருவாகி அருச்சுனனுக்காக எழுந்தருளி வந்து பன்றி

யெய்து அருள்புரிந்த பெருங்கருணைத் திறத்தை முதல் ஏழு பாடல்களும் குறிப்பிடும். இவற்றோடு திருவாசகத்துள் குலாப்பத்தும் திருவார்த்தையும் ஒப்பிடத்தக்கன. குலாப் பத்துப் பாடல்கள் யாவும் 'குலாத் தில்லையாண்டானைக் கொண்டன்றே' என்ற முடிபையுடையன. குலா என்பது குலாவுதல் மகிழ்தல் என்னும் பொருளுடையது. திருவார்த்தையில் இரு பாடல்களில் மகேந்திரமலையையும் அங்குப் பெருமான் வேடுருவாகி வந்த செய்தியையும் மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார். மகேந்திரமலை யாது என்ற விளக்கம் இன்னும் கிடைக்கவில்லை. இப்பதிகம் பாடல் தோறும் மகேந்திரத்தையும் குறிப்பிடுகிறது. ஆதலின் இதன் தலைப்பு மகேந்திரமும் தில்லையும் என்று அமைக்கலாம் போலும். தேவாரத்தில் இவ்வாறு சில பதிகங்கள் உள்ளன.

'திருநீறிடாவுருத் தீண்டேன்' என்று தலைவி கூற்றாக ஒரு பாடல் கூறுகிறது; ஒரு பாடல் திருநீற்றையும் ஐந்தெழுத்தையும் கூறுகிறது. அம்பலக் கூத்தனை 'நீதி வேதாந்தக் குறியே' என்றும், 'நாதாந்தத் தரையா என்பார்க்கு நாதாந்தப் பதம் கொடுப்பாய்' என்றும் கூறுகிறார்.

நான்காம் பதிகம் 'இணங்கிலா ஈசன்' என்ற தொடக்கமுடையது. மற்றவை எழுசீர் விருத்தங்களா யுள்ளன; இதுமட்டும் அறுசீர் விருத்தம். இப்பதிகப் பாடல்களின் முதல் இருவரிகளில் தில்லைவாணனைக் கூறி, அவனுடன் இணங்காதவரைக் "காணு கண், வாய் பேசாது அப்பேய்களோடே' என்று கூறுகிறார். பின் இருவரிகளும் பழிப்பாகவே உள்ளன. பழிப்பதற்காக, தமிழில் உள்ள வசவுச் சொற்கள் அனைத்தையுமே ஆசிரியர் இங்குப் பயன்படுத்திவிட்டார் என்று சொல்லலாம். இறுதிப் பாட்டில் 'இறப்பொடு பிறப்பினுக்கே இனியராய் மீண்டும்

*மீண்டும் பிறப்பர்' என்று கூறுவது சுவையாய் உள்ளது. (பொதுவாக இவ்வரிகளில் உள்ள வசவைப் பார்க்கும் போது, முதல் மூன்று பதிகங்களையும் பாடிய திருமாளிகைத் தேவர் இவற்றைப் பாடியிருக்க முடியுமா என்ற ஐயம்கூட நமக்கு எழலாம்.)*

*திருமாளிகைத் தேவர் பாடல்களுக்கு எடுத்துக் காட்டாகப் பின்வரும் பாடல்களைக் காட்டலாம்:*

ஒளிவளர் விளக்கே, உலப்பிலா ஒன்றே,
    உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே,
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே,
    சித்தத்துள் தித்திக்கும் தேனே,
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே,
    அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந்தாயைத்
    தொண்டனேன் விளம்புமா விளம்பே.

உற்ருய் என்னும், உன்னையன்றி மற்ருென்று
    உணரேன் என்னும், உணர்வுகள் கலக்கப்
பெற்ருய ஐந்தெழுத்தும் பிதற்றிப் பிணிதீர்
    வெண்ணீறிடப் பெற்றேன் என்னும்,
சுற்ருய சோதி மகேந்திரம் சூழ
    மனத்திருள் வாங்கிச் சூழாத நெஞ்சிற்
குற்ருய் என்னும், குணக்குன்றே என்னும் -
    குலாத் தில்லை அம்பலக் கூத்தனையே.

**காலம்**

*முதலாம் இராசராச மன்னன் காலத்தில் தஞ்சைப் பெருங்கோயிலுக்குத் தொண்டு செய்வதற்காக வீடு கட்டிக் கொடுத்துக் குடியேற்றிய தளிச்சேரிப் பெண்டுகளில் ஒருத்தி பெயர் 'நீறணி பவளக் குன்றம்' என்பது. இப்பெயர்*

*திருமாளிகைத் தேவர் திருவிசைப்பாவிலிருந்து எடுத்த தாகும். இவரது முதற்பதிகத்தின் ஆரும் பாடல் 'நீறணி பவளக்குன்றமே' என்று தொடங்குவது ஆதலால், இவர் பாடல் இராசராசன் காலத்துக்கு முற்பட்டது என்பது தெளிவு. தொடக்கத்தில் கூறியபடி கண்டராதித்த மன்னரால் தில்லைக் கூத்தப் பெருமானிடம் ஆற்றுப்படுத்தப்பட்டு அப் பெருமான் மீது பதிகம் பாடிய சைவப் புலவர் பலருள் திருமாளிகைத் தேவரும் ஒருவர் என்ற கருத்து இராசராசன் சாசனப்படியும் பொருந்துவதாகும். மேலும், இவர்தம் பதிகங்களின் பொருளமைப்பு, அகத்துறை, பேய்கள் என்று கடிதல், குலாத்தில்லை மகேந்திரர் முதலான சொற்களின் குறிப்பு போன்றவற்றை ஆராயும் போது, இவர் காலம் ஒன்பதாம் நூற்றுண்டின் பின்னரே ஆகும் என்பது நன்கு தெரிகின்றது. ஆதலால் இவர் காலம் கண்டராதித்தர் காலமாகிய கி. பி. 950–57 ஆகவோ, அதற்குச் சற்று முன்னதாகவோ இருக்கலாம் என்று கருதுகிறோம். பலர் பல்வேறு விதமாய்க் குறிப்பிட்டிருந்த போதிலும், திருவிசைப்பா முழுமையும் ஒரு தொகுப்பாய்க் காலத்தோடு பொருத்தி நோக்கும்போது, இவர் காலம் 940–950 ஆகவே பொருந்துவது என்பது நன்கு விளங்கும்.*

## சேந்தனர்

*சைவ அடியவர் வரலாற்றில் சேந்தனர் பற்றிய வரலாறுகள் மிகப் பல. பொதுவாக, சேந்தனர் ஒருவர் வாழ்ந்தார் என்று மட்டும் கருதி எல்லா வரலாறுகளையும் இவ்வொருவருக்கே ஏற்றிச் சொல்லுகின்ற நிலையை ஆராய்ச்சி நூல்களில் காண்கிறோம். இங்கு இவ்வரலாறுகளில் உள்ள சிக்கலை விளக்கிச் சேந்தனர் யார் என்பதை ஒருவாறு வரையறை செய்ய முயல்வோம்.*

*சேந்தன் என்ற பெயர் தமிழில் அதிகம் பயில்கின்ற பெயர். மதுரையில் அரசாண்ட ஒரு பாண்டி மன்னன் பெயர் சடையவர்மன் செழியன் சேந்தன் (625–40); இவன் சம்பந்தரால் திருத்திப் பணி கொள்ளப் பெற்ற நின்ற சீர் நெடுமாறனுடைய தந்தை; வேள்விக்குடிச் செப்பேட்டில், 'சிலைத்தடக்கைக் கொலைக் களிற்றுச் செழியன் வானவன் செங்கோற் சேந்தன்' எனச் சிறப்பிக்கப் பெற்றவன். மற்ருெரு சேந்தன் திவாகரம் செய்த திவாகரரை ஆதரித்தவன். இவன் அம்பர்கிழான் அருவந்தைச் சேந்தன் எனப்படுபவன். யாப்பருங்கலவிருத்தி மேற்கோளாய் வரும் 'இன்னமிழ்தம் ஊட்டி' என்ற செய்யுள் குறிப்பிடும் தென்னம்பைச் சேந்தன் என்பானும், வீரசோழிய மேற் கோளாய் வரும் 'எழில் தரு ஞாயிற்று' என்ற செய்யுள் குறிப்பிடும் வேந்தன் சேந்தனும் இவனே போலும். மற்ருெரு சேந்தன் வீரசோழியம் பாடிய புலவர் பொன்பற்றி புத்த மித்திரனுக்கு முன்னவனாய், அதே பொன்பற்றி என்ற ஊரில் தொண்டைமானுடைய சேனபதியாகி, சிங்களத் தரையனையும் சேரனையும் வென்று விளங்கிய பொன்பற்றி காவலன் சேந்தன் என்பவன். இவன் ஓங்கவேண்டும் என்பதற்காகப் புத்த தேவரைப் போற்றுகின்ற சிறப்பான கலிப்பா ஒன்று வீரசோழிய உரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. இம்மூவரும், திருவிசைப்பா பாடினேர் அல்லர். அடுத்துக் கருதத் தக்கவர்கள் வேறு இருசேந்தனர்: இவர்கள் நாங்கூர்ச் சேந்தனர், செப்புறைச் சேந்தனர் என்போர்.*

**நாங்கூர்ச் சேந்தர்**

*இவர் திருவிசைப்பாப் பாடவில்லையாயினும், பொது வாகச் சேந்தனர் பற்றிய வரலாறுகளில் காணும் குழப்பங் களைத் தெளிவுபடுத்தும் பொருட்டு இவர் வரலாற்றை இங்குச் சொல்வது அவசியமாகிறது. இந்தச் சேந்தனர்*

பட்டினத்தடிகள் துறவு பூணுமுன் பெருஞ்செல்வராய் வாழ்ந்த நிலையில் அவரிடம் அமைச்சராய் இருந்தவர். பட்டினத்தார் துறவு பூண்டு செல்வம் அனைத்தையும் தருமம் செய்துவிடுமாறு இவருக்குக் கட்டளையிட்டுப் போய்விட்டார். அவ்வாறே இவர் செய்தார். இதை ஒப்புக் கொள்ளாத அரசன் சேந்தனாரைச் சிறையிட்டான். சேந்தனாருடைய மனைவி மக்கள் வருந்திப் பட்டினத்தடிகளிடம் சென்று அரசன் செயலைக் கூறி முறையிட்டனர். அடிகள் :

**மத்தளை தயிருண்டானும் மலர்மிசை மன்னினானும்**
**நித்தமுந் தேடிக் காணா நிமலனே யமல மூர்த்தி**
**செய்த்தளைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்தனிட்ட**
**கைத்தளை நீக்கி என்முன் காட்டுவெண் காட்டுளானே**

என்ற பாடலைப் பாடினார். சிவபெருமானுடைய ஆணைப்படி விநாயகர் சேந்தனாருடைய விலங்கை நீக்கி அவரைச் சிறையிலிருந்து விடுதலை செய்தார். அதன்மேல் சேந்தனார் அடிகளைக் கண்டு பணிய, அவர் நாள்தோறும் சிவனடியாருக்கு உணவளித்து அதன்பின் தாம் உண்டு வாழும்படி உபதேசித்து, வேறிடம் சென்றுவிட்டார். சேந்தனாரும் அவ்விதமே செய்து கொண்டு சிவபக்தி மிக்கவராய் நீண்ட நாள் வாழ்ந்து பின்னர் உரிய காலத்தில் முத்தி அடைந்தார். இதுவே நாங்கூர்ச் சேந்தர் வரலாறு. இவரது ஊர் நாங்கூர் என்பதை அடிகள் பாடல் உணர்த்துகிறது. இவருடைய காலம் இரண்டாம் பட்டினத்தாரின் காலமாகிய 14ஆம் நூற்றாண்டு ஆகும். ஆனால் வரலாறுகள் தெளிவாக விளக்கம் பெறாத காரணத்தால், பிற்காலத்தார் திருவிசைப்பாப் பாடிய சேந்தனாரும் இவரே என்று கருதி, அவர் வரலாற்றையும் தெரிந்த அளவு இவர் வரலாற்றோடு ஒன்றாக்கிவிட்டார்கள். இதற்குக் காரணம் பட்டினத்தார் வெவ்வேறான இருவர் என்ற தெளிவு இல்லாமற்போனமை. இனி, திருவிசைப்பாச் சேந்தனாரைக் கூறலாம்.

## திருவிசைப்பாச் சேந்தர்

இவரைக் குறித்த செய்திகள் சில கிடைக்கின்றன. இவர் திருவிசைப்பா ஆசிரியர்களுள் இரண்டாமவர். திருவீழிமிழலை, திருஆவடுதுறை, திருவிடைக்கழி ஆகிய தலங்களுக்குத் திருவிசைப்பாவும், தில்லைக்குத் திருப் பல்லாண்டும் பாடியிருக்கிறார். திருவிடைக்கழிப் பதிகம் பதினெராம் பாடலில் 'செழுந்திரட் சோதி செப்புறைச் சேந்தன்' என்றும், திருப்பல்லாண்டு இறுதிப் பாடலில் 'சிவன் சீரடியார் அடிநாய் செப்புறை அந்தமில் ஆனந்தச் சேந்தன்' என்றும் கூறுகிறார். இவர் ஊராகிய செப்புறை என்பது எங்குள்ளது என்பது இக்காலத்தில் விளங்க வில்லை; செப்புறை குடிப்பெயர் என்றும் சிலர் சொல்வர்.

இந்த அடியவர் நந்தனர் குலத்தில் பிறந்தவர். இவர் பரம ஏழையாக வாழ்ந்து, நாள்தோறும் தம் கையில் கிடைத்த அன்னத்தை எதிர்ப்பட்ட ஒரு சிவனடி யாருக்குப் பிச்சையாக இட்டு, எஞ்சியதைக் குடும்பத்தோடு உண்டுவந்தார். சோறு சமைக்க இவரிடம் அரிசி கிடைப்ப தில்லை. நாள்தோறும் விறகு வெட்டி விற்று அதன் விலையைக்கொண்டு வாழ்க்கை நடத்தியமையால், இவருக்கு அரிசி வாங்குவதற்குப் போதிய காசு கிடைத்ததில்லை. ஆகவே மலிந்த பண்டமாகிய பிற தானியங்களைப் பெற்று அவற்றை மாவாக்கிக் கூழ் சமைத்துக் களியாக்கி உண்டு வந்தார். பலநாள் இவ்வாறு நடந்தபோது, இவருடைய அன்பின் திறத்தை உலகத்தாருக்கு அறிவுறுத்த எண்ணிய நடராசப் பெருமான், ஒருநாள் தாமே சிவனடியார் வேடந் தாங்கி இவர் இல்லத்துக்குச் சென்றார். அது மழைக் காலம்; விறகுவெட்டிச் சுமந்து சென்று விற்கமுடியாத பருவம் ஆதலால், சேந்தர் பெற்ற மாவும் செய்த கூழும் மிகவும் குறைவு. எனினும், முகமலர்ச்சியோடு, வந்த அடியவரை நன்கு உபசரித்துக் களியமுது ஊட்டினர்.

சிவனடியார் களியை உண்டு, எஞ்சிய பகுதியை சேந்தனுடைய கந்தை ஒன்றில் முடிந்து, அடுத்த வேளைக்கு இதுவேண்டும், 'இந்த மழையில் வேறிடத்தில் எனக்கு உணவு கிடைப்பது அரிது' என்று சொல்லி எடுத்துக் கொண்டு போய்விட்டார்.

அக்காலத்தில் சோழநாட்டில் ஆட்சிபுரிந்த சோழ மன்னன், தான் நாள்தோறும் செய்துவந்த சிவபூசையில் நடராசப் பெருமானுடைய திருவருளால், பூசை நிறைவைப் பெருமான் ஏற்றதற்கு அறிகுறியாக அவருடைய பாதச் சிலம்போசை கேட்பதை நியமமாகக் கொண்டிருந்தான். ஒருநாள் அவன் இரவு முழுவதும் காத்திருந்தும் சிலம்பொலி கேட்கவில்லை. வருத்தத்தோடு துயின்ற மன்னனது கனவில் பெருமான் தோன்றி, 'அரசே, கவலற்க சேந்தனது களியமுதை உண்ண நாம் சென்றமையால் உனது வழிபாட்டிற்கு வரவில்லை' எனச் சொல்லியதாக அவன் கனவில் கேட்டான். பொழுது புலர்ந்த பின் அரசன் தான் கண்ட கனவைத் தில்லைவாழந்தணர் முதலானோருக்குச் சொல்லி, வழிபடும் பொருட்டு நடராசப் பெருமான் திருமுன்பு செல்லுதலும், அங்கு பெருமான் உரைத்தபடி அவர் உண்ட களியமுது சிந்திக் கிடக்க அனைவரும் கண்டனர். மிக்க அதிசயமுற்று எல்லோரும் சேந்தனாரைக் காண விருப்புற்றனர்: ஆனால் தெரியவில்லை.

அச்சமயம் மார்கழித் திருவாதிரை விழா. அன்று தேர் நிலையை விட்டுக் கிளம்பவில்லை. அரசனும் பரிவாரங் களும் எவ்வளவு முயன்றும் பயனில்லை. அப்போது ஓர் அசரீரி, "சேந்தா, நீ பல்லாண்டு பாடினால் தேர் ஓடும்" என்று எழுந்தது. கூட்டத்துள் வடம் பிடித்திருந்த சேந்தர் திருவருளின் திறத்தை எண்ணி வியந்து, "மன்னுக தில்லை வளர்க நம்பத்தர்கள்" என்று தொடங்கித் திருப்பல்லாண்டு

பாடினர். தேர் அசைந்து உரிய நேரத்தில் வீதியெல்லாம் ஓடி நிலைக்கு வந்தது. அப்போதுதான் சேந்தனர் யார் என்பதை அரசனும் மக்களும் உணர்ந்து, அவருடைய அன்பின் சிறப்பை எண்ணிப் போற்றினர்கள்.

பின்னர்ச் சேந்தனர் தம்முடைய பக்தியில் திளைத்து அடியாரைப் பேணி வந்து, திருவீழிமிழலை, திருவாவடுதுறை ஆகிய தலங்களில் சென்று வணங்கியபோது சிவபெருமான் மீது திருவிசைப்பாவும், பின்னர் திருவிடைக்கழி சென்று அங்குக் குராநிழல் அமர்ந்த முருகப் பெருமானுக்குச் சிறப்பாக ஒரு திருவிசைப்பாத் திருப்பதிகமும் பாடினர். இதுவே திருவிசைப்பா ஆசிரியரான சேந்தனரின் வரலாறு. தில்லையில் இவர் தேர் நடக்கச் செய்த நிகழ்ச்சி நிகழ்ந் தமையால், இவர் ஊராகிய செப்புறை என்பது தில்லைக்கு அருகே இருந்திருத்தல் கூடும்,

இவர் வரலாற்று உண்மைக்கு, அடுத்த காலத்தில் இரு சான்றுகள் கிடைக்கின்றன. 11ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பி, நந்தன் குலத்துதித்த சேந்தனர் சிவபக்தியில் மிகுந்தவராய் பழைய அவிழைத் துணியில் கட்டிச் சிவபெருமானுக்கு அளித்தார் என்றும், அது பெருமானுக்கு அமிழ்தம் போன்று உவப்பாயிற்று என்றும் பாடுகிருர் :

பூந்தண் பொழில்சூழ் புலியூர்ப்
  பொலிசெம்பொன் அம்பலத்து
வேந்தன் தனக்கன்றி ஆட்செய்வ
  தென்னே, விரிதுணிமேல்
ஆந்தண் பழைய அவிழை அன் -
  பாகிய பண்டைப் பறைச்
சேந்தன் கொடுக்க, அதுவும்
  திருவமிர் தாகியதே

*என்பது நம்பி பாடிய திருப்பண்ணியர் விருத்தம் 26ஆம் பாடல். அடுத்த 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்து திருக்களிற்றுப்படியார் பாடிய உய்யவந்த தேவநாயனார்,*

**அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை**
**அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க - அவிழ்ந்த சடை**
**வேந்தனுர்க் கின்னமுதே மாயிற்றே, மெய்யன்பிற்**
**சேந்தனுர் செய்த செயல்**

*என்ற பாடலில் சேந்தனுர் களி அவிழை[1] ஊட்டிய வரலாற்றை மிக அவிழ்ந்த சொற்களால் கூறுகிறுர். அவிழ் என்ற சொல்லை ஆறுமுறை இப்பாடலில் இவர் உபயோகித்திருப்பது நெகிழ்ந்து அவிழ்ந்த இவருடைய மனப்பண்பைக் காட்டுகிறது. இன்னும் பிற்காலத்தில் 18ஆம் நூற்றுண்டில் திருப்பாதிரிப்புலியூரில் சிவஞான சுவாமிகளுக்குச் சமுத்தி கொடுத்து அவர் பாடிய பாடலில், சேந்தன் இட்ட தவிட்டமுதத்தைப் பெருமான் உண்ட செய்தியை நயம்படக் கூறுகிறுர். தவிட்டமுதம் என்பது, உமி நீக்கவேண்டியிராத கம்பு போன்ற நெல் அல்லாத பிற தானியத்தால் ஆன களியாகும்:*

**வரையேல் தவிட்டமுதம் சேந்தனிட உண்டனை,**
**வல்லின மென்றுலும்**
**உரையேற விட்ட முதலாகுமோ, எனைச்சித்தென்**
**றுரைக்கி லென்னும்?**

---

**1 இப்பாடலின் பழைய பொழிப்புரை 'நைந்து குழிந்த சீலையிலே நழுவக்கட்டி அருவருக்கத்தக்க சோற்றை' என்று கூறி, முடிவில் "இக் கதையை ஐதிகத்தால் கேட்டறிக" என்று எழுதுகிறது, உரையின் காலம் 16ஆம் நூற்றுண்டாயிருக்கலாம். அப்போதே சேந்தனின் கதை ஐதிகமாகிவிட்டது.**

நரையேற விட்ட முதனாளவனைக் கொண்டு
நறும்புலிசை மேவும்
கரையேற விட்டமுதல்வா, உன்னை யன்றியுமோர்
கதியுண் டாமோ?

*இவற்றால் சேந்தனருடைய அன்பின் விளைந்த அருஞ்செயல் நன்கு உணரப்படும். இவருடைய குலத்தைக் குறிப்பிட்டு நம்பி கூறியிருப்பதனால் இவர் பட்டினத்தடிகளிடம் நிதி நிர்வாகமுடைய அமைச்சராய் இருந்தவர் அல்லர் என்பதும் நன்கு தெளியப்படும்.*

*பட்டினத்தார் சிவஞானியானபின், சாதியுணர்வு கடந்த பெரியவரானர் என்பது தெளிவு. ஆனல், அவர் பெருஞ் செல்வராய் வாழ்ந்தபோது, சாதியுணர்வு இல்லாதிருந்தவ ரல்லர். இவரிடம் அச்சமயம் 'பறைச்சேந்தர்' அமைச்சரா யிருந்திருத்தல் இயலாததொன்று. அன்றியும் பதினொராந் திருமுறைப் பட்டினத்தார் வேறு, பாடற்றிரட்டுப் பாடிய பட்டினத்தார் வேறு (14ஆம் நூற்றாண்டு) என்று வேறிடங் களில் தெளிவாக்கியிருக்கிறோம்.*

**பாடல்**

*சேந்தனர் திருவிசைப்பாப் பதிகங்கள் மூன்றும் தில்லைக்குத் திருப்பல்லாண்டு ஒன்றும் பாடியிருக்கிறார். இவற்றின் மொத்தப் பாடல்கள் 47. திருவிசைப்பாவில் இவருடைய மூன்றும் பதிகத்தின் இறுதியிலும் திருப் பல்லாண்டின் இறுதிப் பாடலிலும் செப்புறைச் சேந்தன் என்று தம்முடைய பெயரைக் குறிப்பிட்டுள்ளார். எல்லாப் பதிகங்களும் பஞ்சமப் பண்ணில் அமைந்துள்ளன. இவருக்குத் தமிழும் வடமொழியும் மிக்க எளிதாய்ப் பணி செய்கின்றன. ஆதி அமரர் புராணன், ஏகநாயகன், கருணலயன், கனககற்பகம், சசிகுலா மவுலி, தருணேந்து*

சேகரன், புரகால காம புராந்தகன், புராண சிந்தாமணி முதலான தொடர்களைக் காண்க. பாடல்கள் யாவும் மிக்க இனிமையாயும் சொல் நயமும் நெகிழ்ச்சியும் பொருந்தியன வாயும் உள்ளன. அகத்துறையாகப் பாடுவதிலும், பல செய்திகளை உள்ளமைத்துப் பாடுவதிலும், இவருக்கு விருப்பம் அதிகம். முந்தை வரலாற்றையும் ஆங்காங்கு நன்கு அமைத்துப் பாடுகிறார்.

**திருவீழிமிழலை:** இதனுள் கோயில் 'விண்ணிழி செழுங்கோயில்' என்ற வரலாற்றைக் குறிப்பிடுகின்றார். அப்பருக்கும் சம்பந்தருக்கும் படிக்காசு அருளிய செய்தியை இறுதிப் பாடலில் சொல்கிறார். இந்நகர் அரிசிலின் கரையில் அமைந்தது என்பார். இங்கு ஐந்நூற்றுவர் அந்தணர் ஏத்துகின்றனர் என்று வரலாற்றை உட்கொண்டு சொல்கிறார். தில்லை மூவாயிரவர், சீகாழி நானூற்றுவர், பெருந்துறை முந்நூற்றுவர் என்பது போல, இத் தலத்தில் ஐந்நூற்றுவர் என்பது மரபு. திருஞான சம்பந்தர் 'திக்கெலாம் புகழும் திருநெல்வேலி' என்றும் அப்பர் 'திக்கெலாம் புகழ்த் திருவாரூர்' என்றும் குறிப் பிட்டதை இவர் மனத்தில் கொண்டு, இங்கு 'திக்கெலாம் நிறைந்த புகழ்த்திரு வீழிமிழலையான்' என்று இரண்டு முறை கூறுகிறார். பெருமானைத் தான்தோன்றி நம்பி என்பார். தல வரலாற்றில் திருமண வரலாறு சொல்லப்படும்; அதை உட்கொண்டு இவர் உமை மணவாளன் என்கிறார். இறைவனை 'வீழி மிழலையுள் விளங்கு வெண்பளிங்கு' என்பார். இறைவனுடைய அடியார் திருவடிப் பொடியை அணிந்தேன் என்று பலமுறை சொல்கின்றார். 'பவள மால்வரை' என்று இவர் எடுத்துக் கொடுத்த தொடரைத் திருவாலியமுதனார் தமது இரண்டாம் பதிகத்தின் தொடக்க மாக வைத்துப் பாடுகிறார். 'ஆயிரம் தாமரையானும் ஆயிரம் சேவடியானும்' என்று அப்பர் சுவாமிகள் ஆயிரம் என்று

கூறிய கருத்தை உட்கொண்டு 'ஆயிரம் கமலம், ஞாயிறு ஆயிரம் முக்கண்முக கரசரணத் தோண்' என்று ஒரு பாடல் பாடியதன்றி, எண்ணில் பல்கோடி என்றே ஒரு பாடல் பாடியிருக்கிருர்.

**எண்ணில் பல்கோடி சேவடி முடிகள்,**
**எண்ணில் பல்கோடி திண்தோள்கள்,**
**எண்ணில் பல்கோடி திருவுரு, நாமம்,**
**ஏர்கொள்முக் கண், முகம், இயல்பும்;**
**எண்ணில் பல்கோடி எல்லைக்கப் பாலாய்**
**நின்றைஞ்னூற் றந்தணர் ஏத்தும்**
**எண்ணில் பல்கோடி குணத்தர் ஏர்வீழி**
**இவர் நம்மை ஆளுடை யாரே.**

தக்கயாக சங்காரத்தைக் கூறிய ஒரு பாடலில் கருடனுடைய செருக்கை யடக்கிய மற்ருேர் அரிய செய்தியையும் குறிப்பிடுகிருர்.

**திரு ஆவடுதுறை :** இது அகத்துறையாக மண்டலித்து வரும் ஓர் அந்தாதிப் பதிகம். ஊரின் பெயர் சாந்தை சாத்தனூர் என்றும், கோயிலின் பெயர் ஆவடுதுறை என்றும் பாடுகிருர். ஆவடுதுறை நம்பி, மணவாள நம்பி என்று சொல்வார். பதிகம், தலைவி நிலை கண்டு தாய் இரங்குவதாக உள்ளது. "முனிகோடி கோடியாம் மூர்த்தியும்" என்ற தொடர் நவகோடி சித்தபுரம் என்ற இத்தலப் பெயரைக் குறிப்பது போலும். இதன் இறுதிப் பாடலில் உள்ள பாலும் அமுதமும், சேலும் கயலும் திளைக்கும் என்னும் தொடர்களை இவரே தமது திருப்பல்லாண்டின் எட்டாம் பாடலில் அமைத்துப் பாடியிருக்கிருர். இங்கு வரும் தருணேந்து சேகரன் என்ற தொடர் பற்றிப் பின்பு குறிப்பிடுவோம்.

**திருவிடைக்கழி:** இப்பதிகம் தனிச் சிறப்புடையது. இது இத் தலத்தின் தல விருட்சமான குராமரத்தினடியில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் மீது பாடப்பெற்றது ஆகும். இதுவும் அகத் துறையில் மண்டலித்து வரும் அந்தாதியாக உள்ளது. தலைவி நிலைகண்டு தாய் இரங்குவது. இங்கு முருகனுடைய பல பெயர்களையும் குறிப்பிடுகிறார். மலை மகள் மகன், குமரவேள், வள்ளி மணாளன், சேந்தன், அழகன், யானைக்கும் குழகன், கோழிக் கொடியோன், சேனை காப்பவன், சுப்பிரமண்ணியன், சூர்தடிந்தோன், கணபதி இளங்கிளை, கங்கைச் சிறுவன், வேலன், மால்மருகன், முருகவேள், அறுமுகத்தமுது என்று சொல்லி, தொகைமிகு நாமத்தவன் என்று முடிக்கிறார். 'துடியிடை மடல் தொடங்கினள் ஆயினும் தன் அணி முடித்தொங்கல் புற இதழ் ஆகிலும் அருளான்' என்று தாய் கூறுவது மிக்க நயமாக உள்ளது. முதற் பதிகத்தில்கூட சேந்தன் தாதை என்று குறிப்பிடுவது, முருகனிடத்தில் இவருக்குள்ள ஈடுபாட்டைப் புலப்படுத்துகிறது. பதினொராந் திருமுறையில்தான் முருகனைக் குறித்த பிரபந்தம் உள்ளதே தவிர, பத்துத் திருமுறைகள் வரையில் இவ்வொரு பிரபந்தமே சிவபிரானையன்றி வேறுதெய்வத்தைக் குறிப்பிட்டுப் புகழ்வது.

இப் பதிகம் பத்தாம் பாடலில் திருப்பிடவூர் என்ற தலத்தைக் குறிப்பிடுகிறார். அவ்வூர் திருவிடைக்கழிக் கருகில் இருந்து ஆற்றுவெள்ளத்தால் அழிந்தது என்றும் அங்கிருந்த மூர்த்தி வடிவங்களை இவ்வூர் ஆலயத்தில் கொண்டுவந்து வைத்துவிட்டனர் என்றும் சொல்வர். 'கோயில் மல்கு நன்குன்றப் பொழில்வளர் மகிழ் திருப்பிடவூர் மருண்ட மான்விழியார்க்கு அருள்செயாவிடுமே' என்று, பிடவூரில் வாழ்ந்து முருகனிடத்துக் காதல் கொண்ட மங்கையருக்கு அவன் அருள் செய்வான் என்ற ஓர் உறுதிப்பாட்டைத் தாய் குறிப்பிடுகிறாள்.

திருவிடைக்கழியைப் பாடிய விடத்துப் பிடவூரையும் குறிப்பிடுதல் சேந்தனருக்குப் பிடவூரோடு வாழ்க்கைத் தொடர்பு உண்டென்று கருதத் தோன்றுகிறது. தில்லைத் தொடர்பினல் இவர் ஊராகிய செப்புறை[1] தில்லைக்கருகில் இருக்கலாமென்று குறிப்பிட்டோம்; இது தில்லை பிடவூர் ஆகிய இரண்டில் ஒன்றுக்கு அருகில் இருக்கலாம் போலும். பிடவூரானது பிடையூர் (பொடையூர்) என்று இப்போது வழங்குகிறது. பிடவூர், பெரிய புராணத்தில் சொல்லப் பட்டுள்ளது. கயிலையில் சிவசந்நிதியில் சேரமான் பெருமாள் விண்ணப்பம் செய்த திருக்கைலாய ஞான உலாவை மாசாத்தனர் கேட்டு நிலவுலகில் பிடவூரில் வெளிப்படுத்தினர் என்பது அங்குச் சொல்லப்பட்ட செய்தி.

## திருப் பல்லாண்டு

காலத்துக்கு அப்பாற்பட்டவனை, ஆதியும் அந்தமும் இல்லாதவனையுள்ள முழுமுதற் பொருளை ஓர் ஆலயத்தில் திருவுருக்கொண்டெழுந்தருளிய பெருமானை வழிபடுங் காலத்து, உலகத்து மக்கள் தாம் விரும்பியனவெல்லாம் அவனுக்குக் கொடுத்து மகிழ்வதுபோல, தாங்கள் நீடு வாழவேண்டும் என்ற விருப்பத்தால் அவனையே 'நீடு வாழ்க' என்று வாழ்த்தி வந்திருக்கிறார்கள். 'வாழ்த்து வதும் தாம் வாழ்வான்' என்ற மாணிக்கவாசகர் பாடல் இங்கு ஒருபுடை கருதத்தக்கது. நீடு வாழ்க என்று வாழ்த்துவது, பல்லாண்டு பாடுவதென்று பெயர் பெற்றிருக் கிறது. அகப்பொருளில் பிரிந்து சென்ற தோழியர் தலைவியை மீண்டும் வந்து கூடும்போது, 'போற்றும்

1 11ஆம் பாடல் செப்புறையைக் குறிப்பிடுகிறது. செப்புறை என்ற சொல்லுக்குப் பதில் சிலர் செப்புதல் என்றும் அச்சிட்டிருக் கிறார்கள்; செழும்புனல் என்றும் ஒரு பாடபேதம் ஏடுகளில் காணப் படுகிறது. எனினும், திருப்பல்லாண்டின் இறுதிப் பாடலையும் நோக்க, செப்புறை என்பதே பாடமாதல் வேண்டும்.

பல்லாண்டும் கூறுவர்' என்று இறையனூர் களவியல் கூறுகிறது. பல்லாண்டு பாடுவதைத் திருவாரூர்ப் பதிகத்தில் அப்பர் சுவாமிகள் குறிப்பிடுகிறுர்:

**......... தழலாய நம்பானைப்**
**பாடுவார் பணிவார் பல்லாண் டிசை**
**கூறு பத்தர்கள் சித்தத் துள்புக்குத்**
**தேடிக் கண்டுகொண்டேன் திருவாரூர் அம்மானே**

(4-20-10) என்பது காணத்தக்கது. இங்குப் பத்தர்கள் பல்லாண்டிசை கூறுவர் என்று குறிப்பிட்ட போதிலும், தனியான பல்லாண்டுப் பாடல் இருந்ததா என்பது தெரியவில்லை.

அடுத்த காலத்தில் வைணவ சமயத்தில் வந்த பெரியாழ்வார் பல்லாண்டு பாடிய செய்தி நன்கறிந்த தொன்று. உலாவந்த திருமாலைப் பார்த்து, உலகத்தார் கண்ணேறு படக்கூடாதென்ற கருத்தோடு அவர் திருப் பல்லாண்டு பாடினூர். இது 12 பாடல்கள் உடையது. பெரியாழ்வார் பாடிய இப்பிரபந்தம் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்துள் முதற்பகுதியாக அமைக்கப் பெற்றுள்ளமை அதன் பெருஞ்சிறப்பை நன்கு புலப்படுத்தும். இது வைணவ நித்தியானுசந்தானத்திலும் ஒரு பகுதியாகும். இதன் பாடல்களின் முடிவு பல்லாண்டே பல்லாண்டு கூறுமினே எனப் பலவகையாக அமைந்துள்ளது. இதனுள் சரித நிகழ்ச்சி பெற்ற மதுரையும் ஆசிரியர் ஊராகிய வில்லிபுத்தூரும் குறிப்பிடப் பட்டுள்ளனவே அன்றி, வேறு தலக்குறிப்பு இல்லை.

அடுத்துத் தோன்றியது சிவபரமாகச் சேந்தனூர் பாடிய திருப்பல்லாண்டு. இது தில்லைக் கென்றே பாடப் பட்டது. வரலாற்றை முன்னே கூறினேம். பாடல்

தொகை 13. மன்னுகதில்லை என்று தலப்பெயரோடு இது தொடங்குகிறது.

பிற்காலத்தில் தத்துவராயர் தமது ஆசிரியர்மீது இரு பல்லாண்டுகள் பாடினர். இவை அவருடைய பாடு துறையில் அடங்கியுள்ளன. பாடல்கள் முறையே 5, 15. முதல் பகுதி பல்லாண்டோத வாரீர் என்பதை மகுடமாக உடையது. இரண்டாம் பகுதி ஐந்தடியாய் ஈற்றடியின் மிக்கு வந்த கலித்தாழிசையாய் அமைந்துள்ளது.

இனி சேந்தனர் பல்லாண்டை ஆராயுமிடத்து, பல செய்திகளை அங்குக் காண்கிறோம். 'சிவன் சீரடியார் அடிநாய் செப்புறை ஆனந்தச் சேந்தன்' என்று இவர் கூறுவது இவருடைய பணிவையும் பக்குவ முதிர் வையும் நன்கு புலப்படுத்தும். 'அந்தமில் ஆனந்தச் சேந்தன்' என்பது அளவில்லாத ஆனந்தம் பெற்ற சேந்தன் என்று பொருள் பெற்றாலுங்கூட, தமிழ் மரபையொட்டி ஆனந்தன் மகன் சேந்தன் என்ற ஒரு தொடர்பையும் புலப்படுத்தக் கூடியதுபோல் தோன்றுகிறது.

காலங்கடந்த இறைவனுக்குத் தாம் பல்லாண்டு கூறுதல் எவ்வாறு பொருந்தும் என்ற கேள்விக்குச் சேந்தனர்,

**சில்லாண்டிற் சிதையும் சிலதேவர் சிறுநெறி சேராமே**
**வில்லாண்ட கனகத்திரள் மேருவிடங்கன் விடைப்பாகன்**
**பல்லாண் டெனும்பதம் கடந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே**

என்று தாமே விடை கூறுகிறார். 'பொன்னின்செய் மண்டபம்' என்று இவர் பாடியிருப்பது பராந்தக சோழன் பொன்வேய்ந்த செய்தியை நினைந்து பாடியதாகும். பதினேராம் பாடலில் 'திருவாரூரின் மழவிடையாற்கு வழிவழியாளாய் மணம் செய்குடிப் பிறந்த பழ அடியார்'

*என்பது, இறைவனுல் அடிமை ஓலை காட்டி ஒரு மணத்தை நிறுத்தித் தடுத்தாட்கொள்ளப்பட்டு, மீண்டும் இருமணம் கொண்டருளிய நம்பியாரூரரைக் குறிக்கும் என்பர். ஆரூரரைக் குறிப்பிட்டமை போலவே, மாணிக்கவாசகரை நினைக்குமாறு அவர் பாடலை எடுத்து அமைத்திருக்கவும் காண்கிறேம். திருவாசகத் திருப்பூவல்லியில்,*

**எந்தை யெந்தாய் சுற்ற மற்று மெல்லாம் என்னுடைய**
**பந்தமறுத்தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்**

*என்றுள்ள வரிகளை இவர் நன்குணர்ந்து,*

**எந்தை எந்தாய் சுற்றம்முற்றும்**
**எமக்கமுதாம் எம்பிரான் என்றென்று**
**சிந்தை செய்யுஞ் சிவன்சீர் அடியார்**

*என்று அமைத்துப் பாடியிருப்பது குறிப்பிடத்தகும். இங்கு சீர் அடியார் என்பது மாணிக்கவாசகரை மனத்துட் கொண்டது என்று ஆன்றேர் சொல்லியுள்ளனர். இங்ஙனமாக, திருவீழிமிழலைத் திருவிசைப் பாவில் அப்பரையும் சம்பந்தரையும் பெருமக்கள் என்று குறிப்பிட்டவர், இங்கு நம்பியாரூரையும் திருவாதவூரரையும் குறிப்பிட்டதை நோக்கும்போது, இவர் நால்வர் என்ற சமயாசாரியர் மரபைத் தமது காலத்திலேயே நன்கு விளக்கம்பெற உணர்ந்திருக்கிறர் என்று தெரிகிறது.*

*இப்பாடல் திருவாதிரை விழாவில் பாடப்பட்டது என்பதற்கும், எல்லோரும் கூடியிருந்த சமயத்தில் இவர் பாடினர் என்ற வரலாறுகளுக்கும் இவர் பாடலே சான்றகும்:*

**ஆரார் வந்தார், அமரர் குழாத்தில்**
**அணியுடை ஆதிரை நாள்?**
**நாராயணனெடு நான்முகன் அங்கி**
**இரவியும் இந்திரனும்,**

தேரார் வீதியில் தேவர் குழாங்கள்
திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும்
பல்லாண்டு கூறுதுமே.

*உபமன்னியுவுக்குப் பாற்கடல் ஈந்தது, மாலுக்குச் சக்கரம் ஈந்தது, சண்டிக்கு அருளியது ஆகிய செய்திகளைக் குறிப்பிடுகிறார். சண்டேசருக்கு அருள் செய்த திறத்தைப் பாதகத்துக்குப் பொற்கோயில், போனகம், மணிமுடி, தாமம், தொண்டர்க்கு நாயகம் என ஐந்து வகைப் பரிசு வைத்தான் என்று இவர் மிக்க நயம்படக் கூறுகின்றார்:*

தாதையைத் தாளற வீசிய சண்டிக்கிவ்
அண்டத் தொடுமுடனே
பூதலத் தோரும் வணங்கப் பொற்கோயிலும்
போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும் நாமமும்
தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

*சிவபெருமான் திருமேனியில் காணும் திருநீறு பத்தர்களுக்கு எவ்வாறு இன்பம் செய்யும் என்பதைச் சேந்தனார் அகத்துறையில் ஓர் உவமை எடுத்துக் காட்டிக் கூறுகிறார். சிவஞான போதச் சிற்றுரையில் இப்பாடலை எடுத்துத் தந்து சிவஞானசுவாமி பின்வருமாறு விளக்கம் தருகிறார்:*

*"காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறு போல, மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரையின் வசீகரித்து இன்பஞ் செய்தல் பற்றித் திருவேடத்தையும் சிவாலயத்தையும் என்று உபசரித்தார்.*

அது 'சேலுங் கயலுந் திளேக்கும் கண்ணர் இளங் கொங்கையிற் செங்குங்குமம்—போலும், பொடியணி மார்பிலங்குமென்று புண்ணியர் போற்றிசைப்ப' என்னுந் திருவாக்கானுமறிக" என அவர் கூறும் விளக்கம் இங்குக் கருதற்குரியதாகும்.

பிற்காலத்தில் இராசராசன் இராசேந்திர சோழன் முதலியோர் ஆட்சியில், சோழர் கப்பற்படை கடல்கடந்து சென்று கீழ்த்திசையில் உள்ள சீயம் முதலிய நாடுகளே யெல்லாம் வென்று அங்குச் சைவசமயத்தையும் தமிழர் நாகரிகத்தையும் பரப்பிற்று. சீயம் மன்னர் முடிசூட்டும் விழாவில் தமிழ்ப் பல்லாண்டு பாடும் வழக்கம் அப்போது ஏற்பட்டது. 'மன்னுக தில்லே' என்ற தொடக்கமுடைய சேந்தனர் பல்லாண்டை அங்குப் பாடி வந்தார்கள். சீயத்தாருக்குத் தமிழ் அன்னிய மொழியாதலால், சொல்லின் வடிவம் சிதைந்து, பல்லாண்டு பாடுதல் என்பது 'லாண்டு பாடுதல்' என்ற பெயரில் இன்னும் வழக்கில் உள்ளது என்று அறிகிறேம். இந்த லாண்டும் 'மன்னுக தில்லே' என்றே தொடங்குகிறது. திருப்பல்லாண்டில் இரண்டாம் பாடல், சிவபெருமான் பெயரையும் சொல்லவில்லே, அவருக்குரிய நீலகண்டம் திருநீறு முதலிய அடையாளம் எதையும் சொல்லவில்லே, ஈசன் என்றுமட்டுமே குறிப் பிடுகிறது என்ற பொதுநோக்கு அறிந்து மகிழத்தக்கது :

மிண்டு மனத்தவர் போமின்கள், மெய்யடி -
யார்கள் விரைந்து வம்மின்,
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி ஈசற்குஆட்
செய்ம்மின், குழாம்பு குந்து :
அண்டங் கடந்த பொருள்,அள வில்லதோர்
ஆனந்த வெள்ளப் பொருள்,
பண்டும் இன்றும்என்றும் உள்ளபொருள் - என்றே
பல்லாண்டு கூறுதுமே.

**காலம்**

சேந்தனாருடைய காலம் நன்கு உறுதி செய்யப்படவில்லை. நாங்கூர்ச் சேந்தனாரும், திருவிசைப்பாச் சேந்தரும் ஒருவரே என்ற கருத்து முன்னமே நிலவியதால், சேந்தனார் காலம் பட்டினத்தடிகள் காலமே என்றும், இரண்டாம் வரகுணனைத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் பாடிய பட்டினத்தடிகள் காலம் வரகுணன் காலமாகிய 9ஆம் நூற்றாண்டுக்கு அடுத்த 10ஆம் நூற்றாண்டாகுமென்றும், இதுவே சேந்தனார் காலமுமாகுமென்றும் ஆராய்ச்சியாளர் கூறி இருக்கிறார்கள். ஆனால் இரு வேறு பட்டினத்தார் இரு வேறு காலங்களில் வாழ்ந்தார்களென்றும், திருவிசைப்பாப் பாடிய சேந்தனார் பட்டினத்தார் வாழ்க்கையில் தொடர்பு கொள்ளவில்லையென்றும் நாம் நிறுவியிருக்கின்றமையால், அக்கருத்துக்களைக் கொள்ளமுடியவில்லை. சேந்தனார் காலத்தை மீண்டும் தனியே ஆய்ந்து வரையறை செய்வது அவசியமாகிறது.

கண்டராதித்தர் காலத்திலும் பின்னர் அவருடைய தேவி செம்பியன் மாதேவியார் காலத்திலும் ஒரு பெரிய பக்தி வெள்ளம் தோன்றிச் சோழ அரசர் பரம்பரையிலும், சோழ நாட்டு மக்களிடையேயும் நெடிது பரவிற்று என்று தொடக்கத்தில் விளக்கமாகக் கூறியிருக்கிறோம். இப்பொழுது இச்சேந்தனார் பற்றி நம்பியாண்டார் நம்பியும், உய்யவந்த தேவரும் கூறும் சொற்களை வைத்துச் சேந்தனார் வரலாற்றை ஏற்றுக் கொள்வோமாயின் அவர் களிநிவேதனம் செய்ததையும் பல்லாண்டு பாடியதையும் உண்மைச் சம்பவங்களாகக் கொள்ளவேண்டும். அக்காலத்தில் ஒரு சோழ மன்னன் இருந்து நடராசப் பெருமானை வழிபாடு செய்த காலத்துத் திருச்சிலம்பொலியைக் கேட்டான் என்று வரலாறு கூறுகிறது.

திருச்சிலம்போசை ஒலி வழியே சென்று நிருத்தனைக் கும்பிடுகின்ற நிலையை, திருஉந்தியாரில் திருவியலூர் உய்ய வந்த தேவரும், திருக்களிற்றுப்படியாரில் திருக்கடவூர் உய்ய வந்த தேவரும் பாடியிருக்கிருர்கள்.

அன்றியும், எட்டாம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் இருந்த சேரமான் பெருமாள் தம் பூசையின் இறுதியில் நடனத் திருச் சிலம்போசையைக் கேட்டார் என்றும், ஒருநாள் அதை நிறுத்திச் சிவபெருமான் அவருக்குச் சுந்தரரைப் பற்றி அறிவித்து அவர் சுந்தரரிடம் நட்புப்பூணச் செய்தார் என்றும், பெரிய புராணம் கூறுகிறது. ஆகவே சிலம்போசை கேட்டல் என்பது வெறும் கதை மட்டுமன்று.

இதை ஒட்டிய சரித்திர சம்பவமொன்றையும் இவ் விடத்துக் குறிப்பிடலாம். பூசலார் தம் மனத்தால் திரு நின்ற ஊரில் கோயில் கட்டிக்கொண்டிருந்தபோது, காஞ்சியில் இராசசிம்மன் என்ற பல்லவ மன்னன் மிகப் பெரிய கயிலாய நாதர்கோயில் கட்டிக்கொண்டிருந்தான். அவன் கோயிலுக்குக் குடமுழுக்கு நாள் ஏற்பாடு செய்த அன்று சிவபெருமான் அவன் கனவில் தோன்றி, "நாம் இன்று பூசலாருடைய கோயிலுக்கு எழுந்தருளுகின்றோம்" என்று சொன்னார் என்பது பெரிய புராணச் சரித்திரம். ஆனால், உடன் காலத்திலேயே இராசசிம்மன் இவ்வாறு வானில் எழுந்த ஒலியைக் கேட்டான் என்று அவன் கட்டிய காஞ்சிக் கயிலாயநாதர் கோயிலில் அவன் காலத்தில் பொறிக்கப்பட்ட சாசனம் ஒன்று கூறுகிறது. உடன் காலத்துச் சாசனம் என்ருல் எல்லோரும் நம்புவார்கள்; பெரிய புராண வரலாறு என்ருல் அவ்வளவு நம்பிக்கை எழாது என்ற காரணத்தால் இதைக் குறிப்பிட்டோம்.

இங்ஙனமாக, பல சந்தர்ப்பங்களில் பலர் இறைவன் திருவுள்ளத்தைப் பல வழிகளில் உணர்ந்திருக்கின்றனர்

என்பது உண்மையே. இங்குச் சேந்தனுரிடத்து நடராசப் பெருமான் களி உண்ணச் சென்ற செய்தியை ஒரு சோழ மன்னர் நடராசப் பெருமான் மூலமே உணர்ந்தார். இவ்வாறு உணரும் தகுதி, சந்தர்ப்பங்களை யெல்லாம் நோக்குங்கால் கண்டராதித்தருக்கே இருந்தது என்றும், இவர் காலத்திலே சேந்தனுர் வாழ்ந்து திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் பாடினுர் என்றும் கருதுகின்றேரும்.

இவர் சோழமன்னர்; இளவரசாகத் தில்லையில் இருந்தவர், பின்னுல் தில்லைப் பெருமானுக்குப் பதிகமும் பாடியவர்; ஆதலால் இக்கருத்து பொருத்தமுடையதே.

இதுகாறும் கூறியவற்ருல், திருவிசைப்பா – திருப் பல்லாண்டு பாடியவராகிய முதற் சேந்தனுர் கண்டராதித்தர் காலத்தில் வாழ்ந்து தம் பதிகங்களைப் பாடினுர் என்பது தெளிவாகிறது. இவர் பாடிய காலம் 950ஐ ஒட்டியிருக்கலாம். "'திருவாவடுதுறை இறைவனைப் பாடிய திருப்பதிகத்தில் நம்பியாரூரர் 'இந்துசேகரனே' என்ருர். நம் சேந்தனுர் அதனைத் தருணம் (இளமை) என்ற ஓர் அடை கொடுத்து இளம்பிறை சூடி என்று பொருள் படுமாறு ஆவடு தண்துறைத் தருணேந்து சேகரன் என்னும் என்று பாடினுர்'' என்று முந்தையோர் குறிப்பிட்டுள்ளனர்[1]. சேந்தனுர் பாடிய ஆவடுதுறைத் திருவிசைப்பாவில் மூன்ரும் பாடலின் இறுதியாகவும் நான்காம் பாடலின் தொடக்க மாகவும், இத்தொடர் அப்படியே வருகிறது.

கண்டராதித்தர் கல்வெட்டொன்றில் 'கவிவிசயன் தருணேந்து சேகரனேன்' என்ற தொடர் காணப்படுகிறது. இது ஒருவன் பெயராக இங்கு வந்துள்ளது. தருணேந்து சேகர பட்டர், தருணேந்து சேகர பண்டிதர் என்ற

1 ஔவை. துரைசாமிப்பிள்ளை, சைவ இலக்கிய வரலாறு, அண்ணுமலைப் பல்கலைக் கழகம் 1958, பக்கம் 390.

பெயர்களும் சாசனங்களில் காணப்படுகின்றன. ஆதலால் சேந்தனார் கண்டராதித்தருக்கு முற்பட்டவர் என்று அறிஞர் கருதுவர். ஆனால், இத்தொடர் அப்பர் தேவாரத்துள்ளும் வருகிறது: திருவாரூர்த் திருத்தாண்டகம் (6. 30. 6):

**சங்கரன்காண் சக்கரம்மாற்கு அருள்செய் தான்காண்**
**தருணேந்து சேகரன்காண் தலைவன் தான்காண்**

என்று கூறுகிறது. ஆதலால் இத்தொடரைச் சேந்தனார் படைக்கவில்லை, சுந்தரர் வழிகாட்டவுமில்லை என்பது தெளிவு. கல்வெட்டானது சேந்தனார் திருவிசைப்பாவி லிருந்தே எடுத்தது என்பது பொருந்தாமை வெளிப்படை. ஆதலால் சேந்தனார் கண்டராதித்தருக்கு முற்பட்டவர் என்பதற்கு இது ஆதாரமாகாது; கல்வெட்டுக்கு ஆதாரம் அப்பர் தொடரேயாகும். எனவே, முன் கூறிய கால வரையறை (950) இதனால் மாறுபடாது.

## கண்டராதித்தர்

திருவிசைப்பாப் பாடிய அடியவருள் இவர் ஐந்தாமவர். இவர் பாடியது 'மின்னாருருவம்' என்று தொடங்குகின்ற தில்லைத் திருப்பதிகம் ஒன்றே.

### வரலாறு

கண்டராதித்தர் வரலாறு தமிழ் நாட்டின் சரித்திரத்தில் நன்கு அறியப்பட்ட வரலாறாகும். இவர் 950–57 ஆகிய காலத்தில் முடிமன்னராய்த் தஞ்சையிலிருந்து சோழ நாட்டை ஆண்டவர். இவருடைய தந்தை மிகவும் பிரசித்தியோடு வாழ்ந்து, பல போர்களை வென்று, சிவ பக்தராகவும் விளங்கிய முதற் பராந்தக சோழ மன்னர். இவர் 46 ஆண்டுகள் அரசாட்சி புரிந்தார். இவர் காலத்தில் சோழ அரசு எல்லாத் துறைகளிலும் விரிவடைந்தது.

பாண்டி நாட்டிலும், ஈழ நாட்டிலும் இவர் செய்த போர்கள் மிக்க பிரசித்தி பெற்றவை. இவருடைய மூத்த புதல்வன் இராசாதித்தன். இவன் தன் தந்தை காலத்தில் வடக்கிலிருந்து வந்து சோழநாட்டுப் படைகளைத் தாக்கிய சாளுக்கியரைத் தடை செய்யும் பொருட்டுப் பெருஞ்சேனையோடு திருக்கோவலூர்ப் பகுதியை ஆட்சி செய்து வருமாறு நிறுத்தி வைக்கப்பட்டிருந்தான். பராந்தகருடைய மூன்றும் புதல்வனை அரிஞ்சயனும் தன் படையோடு இராசாதித்தனுக்கு உதவியாகத் திருக்கோவலூரில் இருந்ததுண்டு. ஒரு சமயம் இராசாதித்தன், சாளுக்கியர்தம் பெருஞ்சேனையை எதிர்த்துப் போர் புரிந்த இடத்து, யானை மேலிருந்து பகைவர் அம்பு தைத்து இறந்தான். (இது நடந்தது 949இல்.) இது காரணம் பற்றி இராசாதித்தனுக்கு 'யானைமேல் துஞ்சின தேவர்' என்று பிற்காலத்தில் பெயர் வழங்கலாயிற்று. இளவரசனை இவன் இறந்தபின், அடுத்த ஆண்டில் (950) தமது அடுத்த புதல்வராகிய கண்டராதித்தரைப் பராந்தக சோழர் இளவரசாக்கினர். சில நாளில் பராந்தகர் இறக்கவே, 953இல் கண்டராதித்தர் முடிசூடி அரசரானர்.

கண்டர் என்பது சோழருக்குரிய பொதுப்பெயர்; பிற்காலத்தில் இது இரண்டாம் இராசராசனுக்குரிய சிறப்புப் பெயராயிற்று. அப்படியே ஆதித்தன் என்பதும் சூரியன் என்று பொருள்படுமாதலால், சூரிய குலத்தாராகிய சோழருக்குப் பொதுப் பெயராக இருந்து, பின்னர் தனியாகவும் பிற சொற்களோடு சேர்ந்தும் சிறப்புப் பெயராக ஆயிற்று. ஆதித்தன், இராசாதித்தன், கண்டராதித்தன், ஆதித்த கரிகாலன் என்பன இவ்வாறு எழுந்த சோழர் பெயர்கள்.

கண்டராதித்தர் இளமையிலிருந்தே சிவ பக்திச் செல்வம் மிகுந்திருந்தார். ஒருகால் தில்லையம்பலத்தைத் தம்

தந்தை பொன்வேய்ந்த போது, அதை மேற்பார்வையிடும் வேலை ஒப்புவிக்கப்பட்டு, அதன் விளைவாக இவருடைய பக்தி பின்னும் பெருகியது எனலாம். முதலில் தாம் அரியணை ஏறும் வாய்ப்பே இல்லாமல் வாழ்ந்து, பின்னர் தமையன் இறந்தமையால் இவர் இளவரசாகும் நிலையும், பின் அரச ராகும் நிலையும் வந்தன. இவர் காலத்தில் பராந்தகர் ஆட்சியில் பரந்திருந்த நாட்டின் விரிவும் சிறப்பும் குன்றி யிருந்தன. சோழ நாடு மட்டுமே இவருக்கு உட்பட்டிருந்தது. அதன் நாற்புற எல்லைகளில் இவர் தந்தைக்கு உட்பட்டி ருந்த பல பகுதிகள் இவருக்கு உட்படவில்லை. பாண்டி நாட்டை மீண்டும் வசப்படுத்த இவர் எண்ணியும், அவ் வெண்ணம் கைகூடவில்லை.

இவர் சிவபக்தியில் விளைந்தது ‘மின்னூர் உருவம் மேல் விளங்க’ என்ற கோயில் திருவிசைப்பாப்பதிகம். சிவபிரான் திருவடியே தமக்குப்புகல் என்ற நினைவை ஒவ்வொரு பாடலிலும் புலப்படுத்துகிறூர். இவர் சிவபக்திச் செல்வராய் இருந்ததோடு, பொது மக்கள் வாழ்வுக்கு நன்மையும் பிற சமய வளர்ச்சிக்கு உதவியும் செய்தார் என்று அறிகிறோம். திருமழபாடிக்கு அருகே பிராமணர்களைக் குடியேற்றிக் கண்டராதித்த சதுர்வேதிமங்கலம் என்ற ஒரு புதிய ஊரை அமைத்தார்; நீர் வளம் இல்லாத பகுதியில் ஒரு பேரேரி கட்டிக் ‘கண்டராதித்தப் பேரேரி’ எனப் பெயரிட்டார். இவை இவர் செய்த பொது நன்மைக்கான சேவைகள்.

முற்கூறிய கண்டராதித்த சதுர்வேதி மங்கலத்தில் கண்டராதித்த விண்ணகரம் என்ற ஒரு திருமால் கோட்டம் எடுப்பித்தார். தென்னூர்க்காடு மாவட்டத்தில் பள்ளிச் சந்தல் என்ற ஊரில் கண்டராதித்தப் பெரும்பள்ளி என்ற சமணர் கோயில் ஒன்றும் இவரால் அமைக்கப்பட்டது போலும். இவை இவருடைய சமயப் பொறையைக் காட்டும்.

இந்த விரிந்த மனப்பான்மை சோழ மன்னர் அனைவரிடமுமே காணப்பட்ட பொது இயல்பாகும்.

கண்டராதித்தருடைய முதல் மனைவி வீரநாராயணி என்பாள். அவள் இளமையிலேயே இறந்து போக, பின்னர் இவர் மழவரையர் மகளார் செம்பியன் மாதேவியாரை மணந்தார். 935க்கு முன் இம்மணம் நடைபெற்றிருக்கலாம். கண்டராதித்தராலும், செம்பியன் மாதேவியாராலுமே திருவிசைப்பா வளமாகிய ஒன்பதாம் திருமுறை எழுந்தது என்பதை இவ்வத்தியாயத் தொடக்கத்தில் விரிவாகக் கூறினோம். கண்டராதித்தர் இறந்த பின், இவர் மனைவியார் நீண்டகாலம் வாழ்ந்து சோழ மன்னர் பலரைப் பலதலை முறைகள் சிவபெருமான் திருப்பணியிலேயே செலுத்தினார் என்பது வரலாறு அறிந்த செய்தி.

இவருக்கு மும்முடிச் சோழர் என்ற ஒரு பெயரும் உண்டு. இவருடைய முடிவு திட்டமாகத் தெரியவில்லை. சிதம்பரம் தாலுக்கா உடையார்குடிக் கல்வெட்டு ஒன்று இவரை 'மேற்கு எழுந்தருளின தேவர்' என்று குறிப்பிடு கின்றது. இத்தொடரின் பொருள் விளங்கவில்லை. சிலர், இவர் மேற்கே நடந்த போரில் இறந்தார் என்றும், சிவ ஞானச் செல்வராகிய இவரைப் போரில் மடிந்தார் என்று சொல்ல மனமில்லாமல் மேற்கு எழுந்தருளினார் என்று கல்வெட்டுக் கூறிற்று என்றும் கூறுகின்றனர். இவர் மேற்கு நோக்கிச் சென்று துறவு மேற்கொண்டு மறைந்துவிட்டார் என்பது சிலர் கூற்று. அதற்கேற்ப, பங்களூர் ஜில்லாவில் ஒரு கல்வெட்டு சிவஞான கண்டராதித்தர் என்று கூறுகின்றது. அங்கேயே ஒரு படைத்தலைவன் மழலூர்க் கோயிலில் கண்டராதித்த விடங் கரையும் உமாபரமேசுவரியாரையும் எழுந்தருவித்து இவர்கள் வழிபாட்டுக்கு நிபந்தமளித்தான் என்றும் தெரிகிறது.

மேலும், மைசூர் நாட்டில் நந்தி என்ற ஊரிலுள்ள கோயிலில் வைக்கப்பட்டுள்ள ஒரு சோழ அரசர் படிமமும் திருநல்லத்தில் செம்பியன் மாதேவியார் அமைத்துள்ள கண்டராதித்தர் உருவமும் ஒத்திருக்கின்றன என்று சொல்லுவர். ஒத்திருக்கும் காரணத்தால் அப்படிமமும் கண்டராதித்தர் படிமமே என்று கருதுவர். இக்குறிப்புக்கள் கண்டராதித்தர் மேற்கு நாட்டுக்கு எழுந்தருளியமை உண்மையே என்று சான்று பகருகின்றன [1].

உண்மை எதுவாயினும் 957க்குப் பிறகு கண்டராதித்தர் பற்றிய செய்தி எதுவுமில்லை. அவ்வாண்டில் சிறுபிள்ளையாயிருந்த அவருடைய மகன் மதுராந்தகன் 970-இல் உத்தமசோழன் என்ற பெயரோடு பட்டம் எய்தினன் என்பது வரலாறு. 15 ஆண்டுகள் அரசுபுரிந்த பின் 985இல் இறந்தான். அடுத்த மன்னன் இராசராசன். உத்தமசோழன் புதல்வனுகிய மதுராந்தக கண்டராதித்தன் இராசராசன் காலத்தில் கோயில்களை மேற்பார்க்கும் அரண்மனை அதிகாரியாக இருந்துவந்தான். மதுராந்தகக் கண்டராதித்தனை இரண்டாம் கண்டராதித்தன் என்றும், இவனே திருவிசைப்பாப் பாடிய கண்டராதித்தர் என்றும் சிலர் கருதுவர். திருவிசைப்பாப் பாடியவர் தம்மைச் சோழ வேந்தன், தஞ்சையர் கோன் என்று குறிப்பிடுகிருர். இவர் முடிமன்னராய் இருந்தார் என்பதில் கருத்து

1 மற்ருெரு கருத்தும கூறக் கேட்டிருக்கிருேம். அக்காலத்தில் அராபிய நாட்டிற்கும் தமிழ் நாட்டிற்கும் நெருங்கிய நீண்ட தொடர்பிருந்தது. அங்கு மக்காவில் மக்கீச்சுரம் என்ற கோயிலைக் கட்டிக்கொண்டு ஏரா்ளமான தமிழ் மக்கள் வாழ்ந்தார்கள். கண்டராதித்தர் துறவியாகி, அங்கே சென்றுவிட்டார்; இதுவே மேற்கு எழுந்தருளினுர் என்பதன் பொருளும், என்று சிலர் சொல்வர். சேரமான் பெருமாள் மாணிக்கவாசகர் காலம் முதல் தமிழ் நாட்டிற்கும் அரபு நாட்டிற்கும் சமயத் தொடர்பு இருந்தது என்றும், அங்குள்ள மெக்காவே மக்கீச்சுரம் என்றும், அந்த நெறியிலேயே பக்தி மிக்கவராகிய கண்டராதித்தர் அங்கே சென்ருர் என்றும் ஆன்ருேர் சொல்லக் கேட்டிருக்கிருேம்.

வேற்றுமை இல்லை. ஆனால் இரண்டாம் கண்டராதித்தன் முடிபுனைய வில்லை, அரசனாகவில்லை என்பது வரலாற்று உண்மை. ஆகவே இவனே திருவிசைப்பாப் பாடியிருக்கலாம் என்பது பிழையான கூற்று.

## பாடல்

இவர் பாடிய பதிகம் திருவிசைப்பாத் தொகுதியில் 20ஆம் பதிகமாக உள்ளது. பஞ்சமப் பண் (ஓர் ஏட்டுப் பிரதியில் சாளர பாணம் என்று எழுதப்பட்டுள்ளது). எல்லாப் பாடல்களிலும், "தில்லை மல்கு செம்பொன் அம்பலத்துள் ஒளிவான் சுடரே உன்னை நாயேன் உறுவதும் என்று கொலோ?" என்று கேட்பது போலவே பாடுகிறார். சிவஞான கண்டராதித்தர் என்று சாசனம் கூறுவது இக்கருத்துக்குப் பொருத்தமாக உள்ளது. ஆறும் பாடலில் "கார்மிடற்றெம் கண்டனாரைக் காண்பதும் என்று கொலோ?" என்று இவர் இரங்குமிடத்து, தொனியால் தம் பெயராகிய கண்டர் – ஆதித்தர் என்பதைப் புலப் படுத்துவதுபோல் உள்ளது. இறுதிப்பாடல் பல சுருதி தம்மைச் சோழ வேந்தன், தஞ்சையர் கோன் கண்டராதித்தன் என்றும், தம் பாடலை, "ஆரா இன்சொல் அருந்தமிழ்ப் பாடல்" என்றும் சொல்கிறார்.

நடராசப் பெருமானை 'அம்பலத்தாடி' என்கிறார். வண்டு தென்னா வென்றும் தெத்தே என்றும் பாடும், தில்லை அந்தணாளர் மூவாயிரவர், அம்பலத்தின் முன்னே 'கங்கை காதலனே அருள்' என்று மால் வரங்கிடக்கிறான், பதஞ்சலிக்கு ஆட்சிதந்தான், மலையொத்த இலங்கை வேந்தன் இருபது தோளும் இறச்செய்து அவனுக்கே வாளோடு நாள் கொடுத்தான் – என்பன இவர் கூறும் செய்திகள் சில. தம் தந்தையாகிய பராந்தக சோழர்

*தில்லையம்பலத்தைப் பொன்வேய்ந்த செய்தியை விளக்கமாகக் குறிப்பிடுகிறுர் :*

வெங்கோல் வேந்தன் தென்னன் நாடும்
ஈழமுங் கொண்டதிறல்
செங்கோற் சோழன் கோழி வேந்தன்
செம்பியன் பொன்னணிந்த
அங்கோல் வளையார் பாடி யாடும்
அணிதில்லை அம்பலத்துள்
எங்கோன் ஈசன் எம்மிறையை
என்றுகொல் எய்துவதே ?

*முதற்பராந்தகர் பாண்டிய மன்னனையும் ஈழ நாட்டு மன்னனையும் வெற்றி கொண்ட பெருவீரம் படைத்தவர். தில்லையம்பலத்தைப் பொன்வேய்ந்தது, வீரத்தோடு இணைந்திருந்த அவரது பக்திச் சிறப்பையும் காட்டுகிறது. இவற்றுலேயே புதல்வரான கண்டராதித்தரும் சிவபக்திச் செல்வராய்த் திருவிசைப்பாப் பாடும் பக்குவம் பெற்றுர். முன் குறிப்பிட்டபடி ஒரு கால் இவர் தந்தை பொன் வேய்ந்த காலத்துத் தில்லையிலேயே தங்கி நடராசப் பெருமானிடத்தில் ஈடுபட்டிருந்து, பின்னல் முடிசூடிக் கொண்டபிறகு தில்லைக்குச்செல்லமுடியாது பெருமானிடத்து இவ்வாறு விண்ணப்பித்தார் போலும். பின் வருவது இப்பதிகப் பாடல்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்:*

களிவா னுலகிற் கங்கை நங்கை
காதலனே, அருள்என்று
ஒளிமால் முன்னே வரம்கிடக்க,
உன்னடி யார்க்கருளும்
தெளிவா ரமுதே! தில்லை மல்கு
செம்பொனின் அம்பலத்துள்
ஒளிவான் சுடரே! உன்னை நாயேன்
உறுவதும் என்றுகொலோ ?

எனினும், இங்கு ஒரு கருத்தைச் சுட்டிச் சொல்வது பொருத்தமாயிருக்கும். இவர் பாடிய பதிகத்தின் ஒவ்வொரு பாடலின் முடிபும் தொகுப்பாய் இங்குக் கருதத் தக்கது. ‘தில்லை யம்பலத்தின் என்னுரமுதை எங்கள் கோவை என்று கொல் எய்துவதே’; உன்றன் கூத்துக் காணக் கூடுவதென்று கொலோ; உன்றன் ஆடல் காண அணைவதும் என்று கொலோ; கூடுவது என்று கொலோ; உன்னை நாயேன் உறுவதும் என்று கொலோ; கண்டனுரைக் காண்பதும் என்று கொலோ; மறிபொற் கையினனைக் காண்பதும் என்று கொலோ; எம்மிறையை என்று கொல் எய்துவதே; கொன்றை மாலையானைக் காண்பதும் என்று கொலோ; கண்டராதித்தன் அருந்தமிழ் மாலை வல்லார் பேராவுலகிற் பேரின்பம் எய்துவரே— என்பன. பத்துப் பாடல்களின் முடிவுகளிலும் என்று உன்னைக் காண்பேன், எய்துவேன், உன் கூத்தை என்று காண்பேன் என ஏங்குகிறார். ஏன்? இவர் அம்பலம் பொன்வேய்ந்த திருப்பணியை மேற்பார்வை செய்து கொண்டு தினமும் கூத்துத் தரிசனம் செய்தவராயிற்றே?

இதற்கு ஒரே விடைதான் உண்டு. தில்லைத் திருப்பணியை மேற்பார்வை செய்த காலத்தில் பிறரை நடராசப் பெருமானிடத்தில் ஆற்றுப்படுத்திப் பதிகம் பாடச் செய்தார்; தாம் பாடவில்லை; தாம் சிவபக்திச் செல்வராய் மட்டும் வாழ்ந்தார். பின்னர், தமையன் இறக்கவும், தாம் இளவரசராகித் தஞ்சையில் அரசரோடு வாழும் நிலை ஏற்பட்டது; மூன்று ஆண்டுகளில் (953) தந்தையும் இறந்தார். தாம் தஞ்சையில் முடி சூடிக் கொண்டார். சோழ ஆட்சியை விட்டு முன்போல் தில்லையிலேயே வந்து தங்கி எந்த நேரமும் பெருமானைத் துதித்துக் கொண்டிருக்க முடியவில்லை. காரணம் அரசின் நிலைமை. சோழ அரசில் அப்போது போரும் குழப்பங்களும் மிகுந்திருந்தபடியால், மன்னர் தலைநகரை விட்டு

வெளியே போய்த் தங்குவது இயல்வதொன்றன்று. ஆகவே தான் கண்டராதித்தர் தம் மனத்திலெழுந்த ஏக்கம் முழுவதை யும் கொட்டி இவ்வாறு, ' தில்லைச் செம்பொன் அம்பலத்து ஆடுகின்ற காரார் மிடற்று எம் கண்டனுரைக் காண்பதும் என்று கொலோ? ' என்று பாடுகிருர். அவர் ஆட்சியிலிருந்த நான்கு ஆண்டுக் காலமும் அவர் தில்லை சென்று கூத்தப் பெருமானைத் தரிசிக்கும் வாய்ப்பே கிடைக்கவில்லை என்று கருதவேண்டும்.

இதுகாறும் நாம் கூறியவற்றைத் தொகுத்துச் சொல் வோம். கண்டராதித்தர் தம் தந்தை பராந்தக சோழர் தில்லையைப் பொன் வேய்ந்த காலத்து ஆங்குத் தங்கி மேற் பார்வை செய்தார். இதனுல் பக்தி உணர்வு பெருகி அங்கு வந்த அடியார் பலரை நடராசப் பெருமான் மீது இசைபாடச் செய்தார். திருமாளிகைத் தேவர், வேணுட்டடிகள், திருவாலி அமுதனுர் இவ்வாறு பாடினுர்கள். இவரே வழக்கமாய்த் தாம் கேட்கும் நடராசப் பெருமானுடைய திருச்சிலம்போசை கிடைக்காதபோது வருந்தி, சேந்தனுரையும் அவரது களி நிவேதனத்தையும் காணப் பெற்றுர். அச்சமயம் பல்லாண்டும் சேந்தனுரால் பாடப்பெற்றது. பின்னர் தந்தை இறக்கவே இவர் அரசராகி, தினமும் பெருமான் நடனத்தைக் காணும் பேறு இழந்தமை குறித்து வருந்தி மீண்டும் காண்ப தெப்போது என்று ஒரு திருவிசைப்பாப் பாடினுர். இவர் சிவபதம் அடைந்தபின் இவரது மனைவியாரான செம்பியன் மாதேவியார் கணவன் வழி நின்று கருவூர்த் தேவர், பூந்துருத்தி நம்பி, புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகி யோரையும் தில்லையில் ஆற்றுப்படுத்தித் திருவிசைப்பாப் பாடச் செய்தார். திருவிசைப்பாத் திருப்பல்லாண்டு ஆகிய ஒன்பதாம் திருமுறையானது கண்டராதித்தர், அவர் மனைவி செம்பியன் மாதேவியார் ஆகிய இருவர் தூண்டுகோலால் தான் தோன்றிற்று; தோன்றிய காலம் 940 – 1040 ஆகிய

நூறு ஆண்டுக் காலமே என்ற பொருள்கள் இதுவரை சொல்லப்பட்டன.

**காலம்**

செம்பியன் மாதேவியார் மணம்செய்து சோழர் குடியில் புகுந்தவுடன் திருக்கற்குடியீசருக்கு ஒரு விளக்குக்காக தொண்ணூறு ஆடுகள் நிபந்தமளித்தார் : 940இல்; பராந்தக சோழர் காலம்; திருமணம் சுமார் 935இல் நடைபெற்றிருக்கலாம். செம்பியன் மாதேவியார் இறந்தது இராசராசனது ஆட்சி யாண்டு 16இல் – 1001. தேவியார் காலம் (920 – 1001 ஆகும். கண்டராதித்தர் காலம் 900 – 957) ஆகும்.

கண்டராதித்தர் இளவரசுப் பட்டம் சூட்டப் பெற்றது 950இல். தந்தை 953இல் இறக்க இவர் அவ்வாண்டிலேயே அரசராய் முடிசூடிக்கொண்டு நான்கு ஆண்டுகளே ஆட்சி புரிந்தார் (953 – 957). இதுவே இவர் திருவிசைப்பாப் பாடிய காலம்.

## வேணாட்டடிகள்

ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்களில் இவர் ஆறுமவர். இவர் பாடிய பாடல், பத்துப் பாடல் கொண்ட தில்லைப் பதிகம் ஒன்றே.

**வரலாறு**

வேணாடு (வேள்நாடு) என்பது தென் திருவாங்கூர்ப் பகுதியாகும்; சேரநாட்டிற்கும் தென் பாண்டி நாட்டிற்கும் இடையிலுள்ளது. இப்பகுதி செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நாடுகளில் ஒன்று. பிற்காலத்தில் (12ஆம் நூற்றாண்டு) இந்நாட்டை ஆண்ட மன்னர் வேணாட்டடிகள் என்று சாசனங்களில் சொல்லப் பெறுகின்றனர். அடிகள் என்ற சொல்,

துறவிகளையும் பின்னர் அரசரையும் குறிப்பிட வழங்கிய ஒரு சொல்லாகும். இளங்கோவடிகள் என்ற பெயரும், பெருமானடிகள் முதலான சாசனப் பெயர்களும், இவ்விரு வகைக்கும் எடுத்துக் காட்டாகும். நம்மாசிரியர் இந்த வேணுட்டு அரச குடும்பத்தில் பிறந்து நடராசப் பெருமானை இசைப் பாக்களால் துதித்த சிறப்புடையவர். இவர் போலச் சிவபெருமானைப் பாடிய அரசர், பல்லவரான ஐயடிகள் காடவர்கோனும், சேரரான சேரமான் பெருமாளும், சோழ சக்கரவர்த்தியாக இருந்த கண்டராதித்தரும் ஆவர்; பாண்டி மன்னர் யாரும் திருமுறைப் பாடல் பாடியதாக வரலாறு இல்லை.

இவரைக் குறித்த வரலாறு எதுவும் விளங்கவில்லை. நான்காம் பாடலில் "என்னை நோயோடு பிணி நலிய இருக்கின்ற அதனுலே" என்று இவர் கூறுவதனுல் உண்மையிலேயே இவர் உடலில் ஒரு பிணி இருந்து, அது தீர்க்க வேண்டி இங்கு வந்து இறைவனை வேண்டினுரோ என்றும் எண்ண இடந்தருகிறது.

பிற ஆசிரியர் பலர் கூறுகின்றது போல இவர் இறுதிப் பாடலில் தம் பெயரைச் சொல்லவில்லை. 'பத்தரடித் தொண்டன்' என்றே தம்மைக் குறிப்பிடுகிருர். இதனுல் இவருடைய உள்ளப் பண்பு நன்கு விளங்குகின்றது. எல்லாப் பாடல்களிலுமே இவர் மிக்க உருக்கத்தோடு இறைவனை வேண்டுகின்ருர். இவருக்கு முன்னிருந்த சேர நாட்டு மன்னரான சேரமான்பெருமாள் போல இவரும் இறைவனிடத்து மிக்க அன்பும் அடியாரிடத்துப் பணிவும் நிரம்ப உடையவர் என்று கருத இடமுண்டு.

**பாடல்**

இவர் பாடிய பதிகம் புறநீர்மைப் பண்ணில் அமைந்தது. எல்லாப் பாடல்களும் "திருத்தில்லை நடம்

பயிலும் நம்பானே" என்பதை மகுடமாக உடையன. இறைவனிடத்து நேர் முகமாக உரையாடுவது போலப் பாடல்களைப் பாடியிருக்கிறார். 'நடம் பயிலும் பெருமானே, புதியவர்களுடைய பணியை உகந்து பழைய அடியவனாகிய என்னைக் கைவிடுகின்றாய். எனக்கு எந்த விதச் சார்வும் இல்லை. என்னை மிகவும் நீ சோதிக்கின்றாய். ஒருவருக்குக் கருணையும் மற்றவருக்கு மறமும் காட்டுகின்றாய். உன் திருவடியை நான் வந்து பொருந்தும் நாள் என்று?' என்பதே இவர் பாடிய பாடல்களின் தொகுப்பான கருத்தாகும்.

மூன்றாம் பாடலில் சிவபிரானது அருட்சக்தியை 'எனையுடையாள்' என்று குறிப்பிட்டு, சிவபெருமான் அருள் பாலிக்க இசையானாயினும், எனையுடையாளும் உரையாடாள் (கருணை செய்யாள்) என்று இவர் கூறுவது புதுமையாக உள்ளது.

இவருடைய பாடல்களில் பழமொழிகள் அதிகம் பயில்கின்றன. 'தம்பானை சாய்ப்பற்றார் என்னும் முது சொல்' (பழமொழி) என்றே இவரும் குறிப்பிடுகிறார். பின்வருவன சில பழமொழிகள்; ஆளுகப்பார் துச்சான செய்திடினும் பொறுப்பார், சிறு கதலி இலை வேம்பும் கைச்சாலும் கறி கொள்வர், தம்பானை சாய்ப் பற்றார், பொசியாதோ கீழ்க் கொம்பு நிறை குளம், கன்று பிரி கற்றாப் போல் கதறு வித்தி, இடுவது புல் ஓர் எருதுக்கு ஒன்றினுக்கு வை இடுதல் நடு இதுவோ – என்பன காண்க. இவர் பாடல்களில் அருஞ் சொற்கள் பல வழங்குகின்றன. துச்சு (தாழ்வு), கைச்சாலும், பேழ்கணித்தல் (அலமருதல்), என்பித்தாய் (என்று சொல்வித்தாய்), மிட வயிறு (மிடாப் போன்ற வயிறு) என்ற சொற்கள் காண்க. பேழ்கணித்தல் என்ற சொல் தேவார திருவாசகங்களில் அருகி வழங்கு

*கின்றது. மிடா என்ற சொல் சிந்தாமணியில் வருகிறது; மிடவயிறு — மிடாப்போன்ற வயிறு. தமிழ் நாட்டின் ஒரு மூலையில் ஒதுங்கின பகுதிக்கு உரியவர் ஆதலால், இவர் பாடலில் அருஞ் சொற்கள் வந்துள்ளன போலும்; இவை இவர் பகுதிக்கு மட்டும் உரியனவா என்பது கருதத்தக்கது.*

*விநாயகரைப் "படுமதமும் மிட வயிறும் உடைய களிறு" என்பார். அகத்தியனுக்கு ஓத்துரைத்தது, மால் அயன் காணுமை என்ற வரலாறுகள் கூறுகின்றுர்:*

**வாளாமால் அயன்வீழ்ந்து காண்பரிய மாண்பிதனைத்**
**தோளாரக் கையாரத் துணையாரத் தொழுதாலும்,**
**ஆளோ, நீ உடையதுவும், அடியேன்உன் தாள்சேரும்**
**நாளேதோ? திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே!**

*இறுதிப் பாடலில் இவர் வேண்டுவது குறிப்பிடத்தக்கது. "தில்லைக் கூத்தனே, நீ அருளில்லையானுல் இவ்வுடல் நீங்கி யேனும் உனது திருவடியை அடைவேன், உன்னுல் தடுக்க இயலாது" என்று கூறுகிறுர்:*

**பாவார்ந்த தமிழ்மாலை பத்தரடித் தொண்டன்எடுத்து**
**ஓவாதே அழைக்கின்றுன் என்றருளின் நன்றுமிக:**
**தேவே,தென் திருத்தில்லைக் கூத்தாடி, நாயடியேன்**
**சாவாயும் நினைக்காண்டல் இனியுனக்குத் தடுப்பரிதே.**

*இவருடைய பாடல்களாகக் கிடைத்திருப்பது தில்லைப் பதிகம் ஒன்றே. வேறு பதிகங்களும் இவர் பாடியிருத்தல் கூடும்: தெரியவில்லை.*

**காலம்**

*அரச பரம்பரையில் வந்த இவர் (இவ்வத்தியாயத் தொடக்கத்தில் குறிப்பிட்டது போல) தில்லைப் பெருமானைப் பாடியதற்கு ஒரு பக்தி வெள்ளத் தொடர்பு உண்டு. அதுவே கண்டராதித்தருடைய தொடர்பு. கி. பி. 940 – 1040 என்ற*

கால எல்லைக்குள் திருவிசைப்பாப் பதிகங்கள் அனைத்தும் பாடப்பெற்றன என்ற குறிப்பு தொடக்கத்தில் சொல்லப் பட்டது. இந்தப் பாடல்களுக்குத் தோற்றுவாயாக இருந்தோர் கண்டராதித்தரும் அவருடைய தேவியாகிய செம்பியன் மாதேவியாரும் ஆவர். இவ்விருவருடைய தொடர்பினால் தில்லைக்கூத்தப் பெருமானிடத்து ஆற்றுப் படுத்தப்பெற்று இசைப்பாப் பாடிய ஆசிரியர்களுள் இவரும் ஒருவர் என்று கருதுகிறோம். அத்தொடர்பு பற்றி இவர் காலம் பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி ஆகும்.

## திருவாலி அமுதனர்

திருவிசைப்பாப் பாடியவர்களுள் இவர் ஏழாமவர். இவர் தில்லைத் திருப்பதிகங்களாக நான்கு பதிகங்கள் பாடி யுள்ளார். வேறு இவர் பாடியனவாகக் கிடைக்கவில்லை.

**வரலாறு**

இவ்வாசிரியர் மயிலாடுதுறை (மயிலை) என்னும் மாயூரத்தில் ஒரு வைணவக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர் என்று கருதலாம். தம்முடைய பதிகங்களின் இறுதிப் பாடல்களில் இவர் ‘மயிலையர் மன்னவன்’ என்றும், ‘அறை செந்நெல் வான் கரும்பின் அணி ஆலைகள் சூழ் மயிலை மறைவல ஆலி’ என்று தம்மைக் குறிப்பிடுவதனாலும், இவருடைய பெயரினாலும் இவ்வாறு கருதுகிறோம். ஆலி நாடு என்பது திருமங்கையாழ்வார் வரலாற்றால் சிறப்புப் பெற்றது; சம்பந்தர் தலமாகிய சீகாழியிலிருந்து ஆறு மைல் தூரத்தில் உள்ளது. இந்நாட்டின் தலைநகர் திருவாலி என்பது. இது இன்று திருவாலி – திருநகரி என்று வழங்குகிறது. அமுதன் என்பது திருமாலின் பெயர். திருவாலி அமுதனருக்கு வைணவப் பெயர் அமைந்திருப்பது போலவே, மற்றொரு திருவிசைப்பா ஆசிரியரான புருடோத்தம

நம்பிக்கும் அமைந்திருக்கிறது. திருவாலி அமுதன் பெயரைத் தாங்கிய இவர், பிற்காலத்தில் சைவராக வாழ்ந்து நடராசப் பெருமான்மேல் பதிகம் பாடினுர் போலும். இவர் தம்மை மறைவல திருவாலி என்றும், தூநான் மறையான் அமுதவாலி என்றும் சொல்வதால், வேதியர் மரபில் வந்தவர் என்றும், நான்மறைகளும் வல்லவர் என்றும் அறிகிறோம்.

### பாடல்

இவர் பாடிய நான்கு பதிகங்களில், முதல் பதிகம் தில்லையம்பலத்தானைப் பாதாதி கேசமாகத் துதிப்பது. மூன்ரும் பதிகம், பெருமான் ஆடும் நடனத்தை வருணிப்பது. மற்ற இரண்டும் அந்தாதியாய் அகத்துறையில் அமைந்தவை; இவை முறையே நட்டராகப் பண்ணிலும், இந்தளப் பண்ணிலும் உள்ளன. மற்ற இரண்டும் பஞ்சமப் பண்.

முதல் பதிகம் பாதாதிகேசம். பாதம், கழல், சிலம்பு, கிண்கிணி, பொன்நூல், கச்சு, திருவயிறு, உந்திவான்சுழி, விடங்கொள் கண்டம், காதும் தோடும், திருமுகமும் நெற்றி நாட்டமும், பிறையுடைய சென்னி ஆகிய உறுப்புக்களைத் துதிக்கின்ருர். இவற்றுள் முதல் பதிகம் 1, 2, 3, 5, 6 ஆகிய பாடல்கள் 'சிந்தை உள்ளிடம் கொண்டனவே' என்ற தொடரை மகுடமாக உடையன. இப்பதிகமும் அகத் துறைப் பதிகம் என்று கருதத் தக்கது. உமாதேவி காணக் கூத்து ஆடுதல், யானையை உரித்து உமையை அஞ்சுவித்தல், பாம்பணையானும் பிரமனும் அருள் என்று தொழுதல், புரம் எரித்தல் ஆகிய செய்திகள் இங்குச் சொல்லப்பட்டுள்ளன. பத்தாம் பாடலில் சிவபெருமான் சென்னியில் அகத்தி மொட்டொடு மத்தமும் சூடியிருக்கிருர் என்று இவர் சொல்கிருர்; அகத்தி சூடிய செய்தி சம்பந்தர் திருத்துருத்தித் தேவாரத்தில் (2529) 'அடுத்தடுத்து அகத்தியோடு வன்னி கொன்றை கூவிளம்–தொடுத்து உடன் சடைப் பெய்தாய்'

என்று அருமையாய்க் காணப்படுகிறது. வேறிடத்தில் இதைக் காணுதல் அரிது. முதல் பதிகத்தின் யாப்பமைதி விளக்கமாயில்லே. இதன் பாடல்களில் முதலடியும் மூன்ருமடியும் எழுசீராயும், இரண்டாமடியும் நான்காமடியும் ஐஞ்சீராயும் இருப்பன போலும்.

இரண்டாம் பதிகம்[1] தில்லேத் திருநடம் கண்டு பெருமானிடம் மனத்தைச் செலுத்திய தலேவி கூற்ருக அமைந்துள்ளது. மன்மதனுல் தான் படும் துன்பமும், தன் உடலில் விளேந்துள்ள மெய்ப்பாடுகளும், அவள் விளக்கி உரைக்கிருள். சிலந்திக்கு அரசு ஈந்தது, மார்க்கண்டனுக்காகக் காலனே உதைத்தது ஆகிய வரலாறுகள் சொல்லப்பட்டுள்ளன. பெரும் பற்றப் புலியூர் என்ற தலப் பெயரும் இங்குச் சொல்லப்படுகிறது. தம்மை ஏற்றுக் கொள்ளும்படி இறைவனேத் தலேவி வேண்டுவதாயுள்ள பாடல் சிறப்புடையது :

**அறிவும் மிக்கநல் நாணமும் நிறைமையும்**
**ஆசையும் இங்குள்ள**
**உறவும் பெற்றநற் ருயொடு தந்தையும்**
**உடன்பிறந் தவரோடும்**
**பிறிய விட்டுனே அடைந்தனன் ஏன்றுகொள்,**
**பெரும்பற்றப் புலியூரின்**
**மறைகள் நான்குங்கொண்டந்தணர் ஏத்த,நன்**
**மாநடம் மகிழ்வானே !**

மூன்ரும் பதிகம் பெருமானுடைய நடனத்தைச் சிறப்பித்துப் பாடுவது. இப்பதிகம் காரைக்கால்அம்மையார் திருவாலங்காட்டில் பாடிய இரண்டாம் பதிகத்தை ஒத்தது.

---

1 இதன் இறுதிப் பாடலில் 'காதலித்த இனேயவள் மொழியாக' என்றே பலரும் பாடங் கொண்டுள்ளனர். நாலாம் பதிகத்தின் இறுதிப் பாடலில் 'இனேயாள் மொழி' என்றே இருப்பதால், இங்கும் இனேயவள் மொழியாக என்றே இருத்தற்குரியது.

அப்பதிகமானது பேய்கள் சூழ இறைவன் மயானத்தில் ஆடும் ஆடலை விரித்துப் பாடியதாகும். ஆனல் அமுதனர் பாடிய பதிகம் அவ்வாறு இன்றித் தில்லையில் மறையோரும் வானேரும் ஏத்த ஆடுகின்ற ஆட்டத்தை வருணிக்கிறது. தில்லையில் வழிபடும் அந்தணரைப் 'பல்லாயிரம் பதஞ்சலிகள்' என்று கூறுகிருர். சிற்றம்பலத்தில் தென்னன் தமிழும் இசையும் கலந்துள்ளது. பெருமான் வலக்கை கவித்து நின்று ஆடுகிருன். வெள்ளாறு ஆகிய நிவா நதியின் கரையில் தில்லை உள்ளது. மாலோடு அயனும் வணங்கி நிற்கிருர்கள். சமணும் சாக்கியரும் அடையாத சிற்றம்பலம் – என்பன இவர் கூறும் சில கருத்துக்கள். 'அடிகள் அவரை ஆரூர் நம்பிஅவர்கள் இசைபாட' என்கிருர். ஆரூர் நம்பி அவர்கள் என்ற தொடரை நம்பியாரூரர் முதலாயினேர் என்று பொருள் கொள்ள வேண்டும் போலும்; இல்லையாயின் இவரை மட்டும் குறிப்பிடுவதில் பொருள் இல்லை. இப்பதிகத்தின் இறுதிநான்கு பாடல்களில் சம்பந்தர் பதிக அமைப்பைப் போல, இராவணனை அடர்த்தது, மாலும் அயனும் தேடியது, சமணும் சாக்கியரும் வழி பட்டது, தம் பாடல் பாடுவதன் பயன் ஆகிய சொல்லிப் பாடுவது குறிப்பிடத் தக்கது.

நான்காம் பதிகம் 'இறைவனை ஏத்துகின்ற இளையாள் மொழி இன்தமிழ்' என்று இறுதிப் பாடலில் குறிப்பிடுவதாலும், முதற் பாடலில் 'கொவ்வை வாய்க் கொடி யேரிடையீர்' என்று தோழியரை விளித்துச் சொல்வதாலும், எட்டாம் பாடலில் 'சேர்வன் கொலோ அன்னைமீர் திகழும் மலர்ப் பாதங்களை, ஆர்வங் கொளத் தழுவி அணிந்து என் முலைக்கு அணிய' என்று சொல்வதாலும், இதுவும் அகத்துறைப் பதிகம் என்றே கருதவேண்டும். பிற பாடல்கள் இறைவனுடைய அருளை வேண்டுகின்ற அடியவருடைய கூற்றுகவே உள்ளன.

*பெண்ணின் கூற்ருகக் கொள்வதும் பொருந்தும். சிற்றம் பலத்து இறையைக் காண வேண்டும், அவனடியைச் சேர வேண்டும் என்பதே பாடலின் கருத்து.*

*இவர் பாடல்களுக்கு எடுத்துக்காட்டாகப் பின் வரும் பாடல் காண்க:*

**காண்பதுயான் என்றுகொல் கதிர்மாமணி யைக்கனலை**
**ஆண்பெண் அருவுருவென் றறிதற்கரி தாயவனைச்**
**சேண்பணை மாளிகைசூழ் தில்லைமாநகர்ச் சிற்றம்பலம்**
**மாண்புடை மாநடஞ்செய் மறையோன்மலர்ப் பாதங்களே.**

**காலம்**

*தொடக்கத்தில் பொதுவாகக் கூறிய கால அமைதி இவருக்கும் பொருந்தும். அதாவது, 10ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த சிவஞானியான கண்டராதித்தர் காலத்தில் அவரால் போற்றப் பெற்று வாழ்ந்து நூல் செய்த பலருள் இவரும் ஒருவர். தில்லை நடராசப் பெருமானிடத்துப் பெரிதும் ஈடுபட்டு வாழ்ந்த அவ்வரசர் புலமை வாய்ந்த அடியவர் அனைவரையும் அப் பெருமானிடத்தே ஆற்றுப்படுத்திப் பதிகம் பாடச் செய்தார். இவரும் அவ்வாறே பதிகம் பாடினர்.*

*இக்கால அமைதிக்கு மற்றொரு சான்றும் இவர் பாடலிலிருந்து கிடைக்கிறது. மூன்ரும் பதிகத்தின் ஐந்தாம் பாடல் இங்குக் கருதத்தக்கது.*

**ஓமப் புகையும் அகிலின் புகையும் உயர்ந்து முகில்தோயத்**
**தீமெய்த் தொழிலார் மறையோர் மல்கு சிற்றம் பலந்தன்னுள்**
**வாமத் தொழிலார் எடுத்த பாதம் மழலைச் சிலம்பார்க்கத்**
**தீமெய்ச் சடைமேல் திங்கள் சூடித் தேவன் ஆடுமே.**

*தூக்கிய திருவடியை 'எடுத்த பாதம்' என்றும், அதன் கண் அணிந்த சிலம்பை 'மழலைச் சிலம்பு' என்றும் இவர்*

பாடுகிறார். சைவ சமயத்தில் குஞ்சித்த சேவடியே முத்தி யின்பமாகிய பேரானந்தப் பெருவாழ்வு தருவது என்பது சாத்திரக் கருத்து. 'இனித்தமுடைய எடுத்த பொற்பாதம்' என்றும், 'ஆட எடுத்திட்ட பாத மன்றோ நம்மை ஆட் கொண்டதே' என்றும் அப்பர் சுவாமிகள் பாடியிருப்பது காணத்தக்கது. பதினொராந் திருமுறையில், பட்டினத்தார் பாடிய கோயில் நான்மணி மாலை, (பாடல் 12, அடி 38) 'எடுத்த பாதமும் தடுத்த செங்கையும்' என்று கூறுவதும் நோக்கத்தக்கது. இங்கு அமுதனார் அந்த நெறியைப் பின்பற்றி, எடுத்த பாதம் என்று சொன்னார். முதலாம் இராசராச மன்னனுடைய 29ஆம் ஆட்சியாண்டில் (1014) எழுந்த சாசனம், திருப்பதிகம் விண்ணப்பம் செய்வோருள் எடுத்த பாதமான ஈசுவர சிவன், எடுத்த பாதப் பிச்சனை உருத்திர சிவன், மழலைச் சிலம்பன் பூர்வ சிவன், எடுத்த பாதமான தர்மசிவன் என்ற பெயர்களும் தளிச்சேரிப் பெண்டுகளில் எடுத்த பாதம், மழலைச் சிலம்பு என்ற பெயர்களும் காணப்படுகின்றன. இத்தொடர்கள் திருவாலி அமுதனார் பாடலிலிருந்து எடுத்துச் சூட்டப் பெற்றமை நன்கு தெரிகிறது. 1014இல் திருப்பதிகம் பாடியவரும் தளிப்பெண்டும் 15–20 வயதுடையவராயிருந்தனர் என்று கொள்ளலாம். அங்ஙனமாயின் இவர்கள் பிறந்தது 1000க்கு முந்தியிருக்கும். திருவிசைப்பாப் பலகால் பாடப் பெற்று அதில் தோய்ந்தவர்களே தம்மக்களுக்கு இப்பெயர்களை எடுத்து இடுதல் இயல்பு. இதற்கு ஓர் ஐம்பது ஆண்டுக் காலம் ஆகும் என்றாலும்கூட பாடல் தோன்றிய காலம் 950 என்றாகும். எனவே, திருவாலி அமுதனார் காலம் இக்காலம்: அதாவது கண்டராதித்தர் இளவரசராகவும், அரசராகவும் விளங்கிய காலம் என்று சொல்வது நன்கு பொருந்தும்.

## அத்தியாயம் 10

# வைணவ இலக்கியம்

## முன்னுரை

வைணவ சமய வரலாற்றிலும் இலக்கிய வரலாற்றிலும் ஒன்பதாம் நூற்றாண்டு முக்கிய இடம் பெறுகிறது. அந் நூற்றாண்டில் நம்மாழ்வார் திருப்புளியின்கீழ் அவதாரம் செய்து மதுரகவியை ஆட்கொண்டு திருவாய்மொழி பாடிப் பரமபதம் சென்றார். வீரநாராயணபுரத்தில் பிறந்த நாத முனிகள் ஒருநாள் தம்மூர்ப் பெருமாள் மன்னார் சந்நிதியில் சில வைணவர் வந்து 'ஆரா அமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே' என்ற பாசுரத்தைச் சேவித்து முடிவில், 'ஓர் ஆயிரத்துள் இப்பத்தும்' என்று சொல்லக் கேட்டபோது, இப்பாசுரங்கள் ஆயிரம் இருந்தன என்பது அறிந்து, அவர்களை வினவி அறிய முடியாமல், நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூர் சென்று, அங்கு மதுரகவி சீடரான பராங்குசதாசரை வணங்கி, அவர் கூறியபடி 'கண்ணிநுண் சிறுத் தாம்பு' என்னும் மதுரகவியின் பாசுரங்களைப் பன்னீராயிரம் உரு அனுசந்திக்கவே, அதன் மேல் நம்மாழ்வாரால் திருவாய்மொழி மட்டுமன்றி நாலாயிரப் பிரபந்தம் முழுமையும் பிரசாதிக்கப் பெற்றார் என்பது வரலாறு. இவ்வாறாக, திருவாய்மொழி தோன்றிய பெருமை மட்டுமன்றி, நாலாயிரப் பாசுரங்களும் லுப்தமாகப் போய்ப் பின் நாதமுனிகளால் மீண்டும் பெற்றுப் பரவச் செய்ததும், நாதமுனிகள் தொடக்கமான வைணவ ஆசாரிய பரம்பரையைப் பெற்றதுமாகிய பெருமை இந்த ஒன்பதாம் நூற்றாண்டுக்கு உண்டு.

முதல் ஆழ்வார் தொடங்கி நம்மாழ்வார் மதுரகவி இறுதியாக, நான்கு நூற்றாண்டுகள் வைணவ இலக்கிய மரபு தமிழ் மொழியில் அருட்பாசுர நெறியாகத் தொடர்ந்து வளர்ந்து வந்திருக்கிறது. ஆனால் ஒன்பதாம் நூற்றாண்டின் பின் இத்தொடர்பு அற்றது. பின் மூன்று நூற்றாண்டுகள் வரையில் வைணவர் தமிழில் எந்த நூலும் செய்யவில்லை. நாதமுனிகள் ஓர் ஆசாரிய மரபுக்குத் தலைவராக அமர்ந்து சமயத்தை வளர்த்தார். இவருக்குப் பின் வைணவ மத ஸ்தாபகர் என்று சொல்லப்படுகின்ற இராமானுசர் வரையில் எல்லா ஆசிரியர்களும் சமயத்தை வளர்ப்பதையும், அதன் பொருட்டு வடமொழியில் சமய சித்தாந்த நூல் எழுதுவதையும் பிரதானமாய்க் கருதினர்களேயன்றி, தமிழில் எந்த நூலோ, உரையோ எழுதவில்லை. இதுவே வைணவ இலக்கிய நிலை. எந்தத் தமிழ் நூலும் பத்தாம் நூற்றாண்டில் வைணவத் துறையில் எழவில்லை. எனினும், வரலாற்றினுடைய தொடர்பு கருதி, இந்த நூற்றாண்டிலும் பின்வந்த இரு நூற்றாண்டுகளிலும், முக்கியமான வைணவ ஆசாரியர் சிலர் வரலாற்றைச் சுருக்கி உரைத்துக்கொண்டு போகிறோம்.

நாதமுனிகள் காலம் தொடங்கி மணவாள மாமுனி காலம் வரையில், ஆசாரியர் பலர் நாலாயிரப் பிரபந்தங்களைப் போற்றியும் ஆழ்வார்களைப் போற்றியும் சில தனிப்பாடல்கள் பாடியிருந்தார்கள். இலக்கியங்களுக்கு இவ்வாறு அமைந்த பாடல்களைச் சிறப்புப் பாயிரம் என்று சொல்வதுபோல, இப்பாடல்களை வைணவர் ‘தனியன்’ என்று சொல்வார்கள். இவ்வாறு தனியன் பாடினோர் தொகை சுமார் நாற்பது இருக்கக்கூடும். இவர்களில் சிலர் நன்கு பெயர் தெரிந்த ஆசாரியர்; வேறு நூல் செய்யாவிட்டாலும், இவர்கள் பெயர் விளக்கமாய்த் தெரிந்த பெயர். உதாரணம்: உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி. பின்னும் சிலர் சிறப்பான

வடமொழி அல்லது மணிப்பிரவாள நூல் செய்தவர்கள். உதாரணம்: திருக்குருகைப்பிரான். வேறு பலர் எந்த நூலும் செய்யாதவர்களாய், வரலாற்று விளக்கமும் இல்லாதவர்களாய், ஒரே ஒரு தனியன் செய்த காரணத்தினால் மட்டும் அறியப்படுகின்றவர்கள். இவர்களில் இந்நூற்றுண்டுக்குரியோர் சிலரைப் பற்றிப் பின்னே கூறுகிறோம்.

சில ஆசிரியர் ஒவ்வொரு தனியன் பாடல் பாடினார் என்று சொல்லும்போது, உண்மையாக அவர் பாடினரா அல்லது வேறு பிரசித்தமான ஆசிரியர் பாடிப் பழங் காலத்திலேயே குறித்த ஆசிரியர் பெயரால் வழங்கப் பெற்றதா என்ற ஐயம் எழுவதுண்டு. இதைத் திட்டமாகச் சொல்வதற்கு இல்லை. எனினும், குறித்த ஆசிரியரே பாடினார் என்று கருதுவதில் இழுக்கில்லை. இவ்வாசிரியர் தங்களை மறந்து பாசுரங்களில் ஈடுபட்டவர்கள். அவ் வீடுபாட்டின் பயனாக ஓர் ஆசிரியர் தாம் கற்ற ஒரு நூலின் சிறப்பை உணர்ந்து அதைப் புகழ்ந்து முதலில் ஒரு பாடல் பாடியது நடக்கக்கூடியதே. பின்வந்த ஆசிரியர் ஒவ்வொருவரும் தாம் பயின்ற நூலுக்கு ஒரு தனியன் இருக்கட்டுமே என்று முறையாகப் பாடி வைத்திருக்கலாம். இவ்வாறு ஒவ்வொரு பிரபந்தத்துக்கும் ஒரு தனியன் அல்லது பல பாடல்கள் எழுந்திருத்தல் இயல்பே. இவ்வாசிரியர் அனைவரும் சிறந்த சமயப் புலமையுடையவர்கள் என்பதில் ஐயமில்லை. இவர்கள் மூலத்தை உணர்வது போதும் என்று அமைந்து, புதுநூல் செய்ய முன் வரவில்லை என்றே நாம் கருதவேண்டும்.

## உய்யக்கொண்டார்

இவர் திருவெள்ளறையில் அவதரித்து நாதமுனிகள் சீடராய் இருந்தார். ஒரு சமயம் நாதமுனிகள் இவரைப் பார்த்து, 'நீர் யோக ரகசியங்களைக் கற்றுப் பழகிவாரும்'

என்று சொல்ல, இவர், 'எனக்கு இப்போது வேண்டிய தில்லே; இவ்வுடல் முடிகின்ற காலத்திலே பார்த்துக் கொள்ளலாம்' என்று சொல்லிவிட்டார். பின்னர் நாத முனிகள் இவருக்குச் சாஸ்திரங்களையும் திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்களையும் உபதேசம் செய்தார். "நம் புதல்வரான ஈசுவர முனிக்கு ஒரு குமாரன் பிறக்கப் போகிருன். அவனுக்கு யமுனைத் துறைவன் என்று பெயர் வையும். உரிய காலத்தில் அவனுக்கு ரகசியக் கிரந்தங்களை யெல்லாம் உபதேசம் செய்யும்' என்று சொல்லி, நாத முனிகள் காலம் சென்ருர். உய்யக்கொண்டாரிடத்தில் சீடராய் இருந்தவர்களில் மணக்கால் நம்பி முக்கியமானவர். இவர் தமது அந்திம காலத்தில் நம்பியை அழைத்து, "ஈசுவர முனியின் புதல்வருக்கு நாதமுனியின் கட்டளைப்படி ரகசியார்த்தங்களை உபதேசிக்கும் பேறு எனக்குக் கிடைக்க வில்லை. நீராவது அதை நிறைவேற்றும்" என்று சொல்லித் திருநாடு அலங்கரித்தார்.

ஆண்டாள் பாடிய திருப்பாவைக்குரிய இரு தனியன் களும் உய்யக்கொண்டார் செய்தவை என்று ஆன்ருேர் வழங்குவர் :

**அன்ன வயல்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்**
**பன்னு திருப்பாவை பல்பதியம் - இன்னிசையால்**
**பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை**
**சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.**

**சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே, தொல்பாவை**
**பாடி யருளவல்ல பல்வளையாய், - நாடிநீ**
**வேங்கடவற் கென்னை விதியென்ற இம்மாற்றம்**
**நாங்கடவா வண்ணமே நல்கு.**

# மணக்கால் நம்பி

மணக்கால் என்ற ஊரிலே பிறந்தவரான இந்த நம்பி உய்யக்கொண்டாரின் சீடராய் அவரிடம் சகல சமய நூல்களையும் கற்றார். இவர் மிக்க ஆசாரிய பக்தி உள்ளவர். உய்யக்கொண்டாருடைய மனைவி ஆண்டாள். அவள் இறந்துபோன பிறகு, உய்யக்கொண்டாரே அக் குடும்ப பாரத்தை நிர்வகித்து வந்தார். அப்போது ஒரு சமயம், மணக்கால் நம்பி, ஆசாரியருடைய பெண் குழந்தைகள் இருவரையும் ஆற்றில் நீராடச் செய்து திரும்ப அழைத்து வந்தபோது, வழியில் ஒரு வாய்க்கால் சேருக இருந்தது. அதைக் கண்டு சேற்றில் இறங்க முடியாமல் அப் பெண் குழந்தைகள் திகைத்து நிற்க, இவர் அவ் வாய்க்காலின் குறுக்கே படியாய்க் கிடந்து அவர்கள் தம் முதுகிலே அடியிட்டு வாய்க்காலைக் கடந்து வரும்படி செய்தார் என்று ஒரு வரலாறு இவருடைய குரு பக்தியைக் காட்டும் பொருட்டுச் சொல்வதுண்டு. உய்யக்கொண்டார் காலமான பிறகு, நாதமுனிகள் புதல்வரான ஈசுவர முனிகளுக்கு ஒரு குழந்தை பிறந்தான். மணக்கால் நம்பி அங்கு வந்து உரிய சடங்குகளை எல்லாம் நடத்தி, யமுனைத் துறைவன் என்ற பெயரையும் சூட்டினார். இக்குழந்தையே ஆளவந்தார் என்று பிற்காலத்தில் பிரசித்தமாய் விளங்கிய ஆசாரியர். முறையாகக் கற்று வளர்ந்து இளம்பிள்ளையாகிப் பெருஞ் செல்வத்தில் மூழ்கி, திருவருளால் கிடைத்த பேரறிவின் விளக்கத்தால், அவர் தமக்கு ஒருவரும் ஈடில்லை என்று ஆடம்பரமான அரச போகத்தில் தோய்ந்திருந்தார். மணக்கால் நம்பி, பலகால் அவரைப் பார்க்க முயன்றும், அவர் மாளிகையில் அதிகக் கட்டுக்காவல் இருந்தமையாலே, முடியவில்லை. சமையல் அறையை அடைந்து, அவர் விரும்பி அமுது செய்யும் கறியமுது தூதுவளை என்று தெரிந்து, ஆறு மாத காலம் தூதுவளை பறித்து மடைப்

பள்ளிக்குக் கொடுத்து வந்தார். பின் திடீரென்று நான்கு நாள் நிறுத்திவிட்டார். ஆளவந்தார் தூதுவளை இல்லாத காரணம் விசாரித்தறிந்து, பின் இவர் வந்தவுடன் இவரை அழைத்து வரச்சொல்ல, இவர் சென்றூர்.

அவரும் இவரை அமரச்செய்து, "நீர் இத்தனைநாள் நமக்கு இந்தத் தூதுவளை கொண்டுவந்து இடுவது எதற்காக? உமக்குப் பொருள் வேண்டுமா?" என்று கேட்டார்.

அப்போது நம்பி, "பூர்வர்கள் தேடின பொருள் எம் கையில் நிரம்ப இருக்கிறது. அந்தப் பொருளை உமக்குக் காட்டுமளவும், எம் கையிலுள்ள பொருள் அத்தனையும் நீர் பெறுமளவும், நித்தியம் நாம் உம்மிடம் வரும்படி வாயில் தடை செய்யாமலிருக்க உத்தரவிடும், அது போதும்" என்றூர்.

அப்படியே ஆளவந்தாரும் செய்ய, அதுமுதல் இவர் அவருக்குத் தினம் கொஞ்சமாகக் கீதை உபதேசம் பண்ணினூர். பிறகு ரகசியக் கிரந்தங்களையும் உபதேசித்துத் திருவரங்கப் பெருமாளிடம் ஈடுபடுத்தினூர். அதன்பின் மணக்கால் நம்பி பலருக்கு உபதேசம் செய்துகொண்டு இருந்துவிட்டு உரிய காலத்தில் திரு நாட்டுக்கு எழுந்தருளினூர்.

குலசேகராழ்வார் பாசுரங்களாகிய பெருமாள் திருமொழிக்கு மணக்கால் நம்பிகள் இரு தனியன் பாடினூர் என்பது வழக்கு. அப்பாடல்கள் பின்வருவன:

**இன்னமுதம் ஊட்டுகேன், இங்கேவா பைங்கிளியே,**
**தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் – பொன்னஞ்**
**சிலைசேர் நுதலியர்வேள், சேரலர்கோன், எங்கள்**
**குலசேகரன் என்றே கூறு,**

ஆரம் கெடப்பர னன்பர்கொள் ளாரென்று அவர்களுக்கே
வாரம் கொடுகுடப் பாம்பில்கை யிட்டவன், மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோல்கொல்லி காவலன், வில்லவர்
சேரன் குலசேக ரன்,முடி வேந்தர் சிகாமணியே. [கோன்

## குருகை காவலப்பன்

*இவர் நாதமுனிகள் சீடராய் அவருடைய சீபாதத்து முதலிகள் கூட்டத்துக்குத் தலைவராய் இருந்தார். நாதமுனிகள் தம் அந்திம காலத்தில் 'நீர் யோக ரகசியத்தை அப்பியசியும்' என்று சொல்லி இவருக்கு அட்டாங்க யோகக் கிரமத்தை அருளிச் செய்தார். இவரும் அப்படியே யோகம் பயின்றிருந்த காலத்து, நாதமுனிகள் தமக்குப் பின், தம் புதல்வர் ஈசுவர முனிகளுக்குப் பிறக்கப்போகும் ஆண்குழந்தைக்கு அவற்றை உபதேசிக்கும்படி கட்டளை யிட்டு, உரிய காலத்தில் பரமபதம் அடைந்தார். பின்னர் அக்குழந்தை பிறந்து யமுனைத் துறைவர் என்று பெயர் சூட்டப்பெற்றுச் சிறப்பாய் விளங்கிவரும் நாளில், மணக்கால் நம்பி அவருக்கு ரகசியக் கிரந்தங்களை யெல்லாம் உபதேசித்து, "யோக ரகசியங்களை நீர் குருகை காவலப்பனிடம் கேட்டறியும்" என்று சொல்லிவிட்டுச் சிலநாளிருந்து பரமபதம் அடைந்தார். அதன்மேல் யமுனைத் துறைவர் தம் சீடர்களோடு குருகை காவலப்பன் யோகத்தில் எழுந்தருளியிருந்த வீரநாராயண புரத்துக்கு வந்தார். அவருக்குச் சமாதி பங்கம் பண்ண ஒண்ணாது என்று கருதி, அங்கு தும்முதல் இருமுதல் அடியோசைப் படுத்துதல் செய்யாது மௌனமாகச் சுவர்ப் புறத்தே பின்னே தெரியாமல் நின்றார்.*

*அப்பனும் யோகத்திலே எழுந்தருளியிருக்கிறவர் பின் திரும்பிப் பார்த்து, "இங்கே சொட்டைக் குலத்திலே ஆரேனும் வந்தார் உண்டோ?" என்று கேட்டார்.*

அப்போது யமுனைத் துறைவர் (இவர் சொட்டைக் குலம்) தெரியும்படி வந்து, "அடியேன் யமுனைத்துறைவன் விடைகொண்டு இருக்கிறேன்" என்று சொல்லி வணங்கி, "அடியேன் இவ்வாறு மறைந்து நின்றதைத் தேவரீர் கண்டது எவ்வாறு?" என்று கேட்டார்.

அப்பன் சொன்னுர்: "அடியேனும் தானுமாய் அனுபவியா நின்ருல், பெரிய பிராட்டியார் திருமுலைத் தடத்தாலே நெருக்கி அணைத்தாலும், அவள் முகங்கூடப் பாராத சர்வேசுவரன் என் தோள்களை அமுக்கி நாலு மூன்றுதரம் சுவர்ப்புறத்தே எட்டிப் பார்த்தான். இப்படி இவன் பார்க்கும்போது சொட்டைக் குலத்தில் உள்ளார் ஆரேனும் வந்தார் உண்டாக வேணும் என்று இருந்தேன் காணும்" என்ருர்.

அதன்மேல் ஆளவந்தார், அடியேனுக்கு இந்த யோக ரகசியக் கிரமத்தை அருளிச் செய்ய வேண்டுமென்று காலில் விழுந்து கிடக்க, அவர் "வருகிற தை மாதத்திலே இன்ன சமயம் நாம் பரமபதம் செல்வோம். அதற்கு முன்னை வரவேண்டும்" என்று சொல்லி ஒரு திருமுகம் எழுதிக் கொடுத்தார். அப்படியே ஆளவந்தாரும் அதைப் பெற்றுக்கொண்டு திருக்கச்சி சென்றிருந்து சில நாளில் அங்கிருந்து திருவரங்கம் சேவிக்கச் சென்றுவிட்டார். ஒரு நாள் அங்கு அப்பன் திருமுகத்தை எடுத்துப் பார்த்தபோது, அன்று அப்பன் பரமபதம் செல்லும் நாளாக இருந்தது. இவ்வாறு அப்பன் ஆளவந்தாருக்கு யோக ரகசியம் உபதேசிக்காமலே பரமபதம் சென்றுவிட்டார்.

பேயாழ்வாருடைய மூன்ருந்திருவந்தாதிக்குரிய தனியன் இவர் அருளிச் செய்தது என்பர்:

சீராரும் மாடத் திருக்கோவ லூரதனுள்
காரார் கருமுகிலைக் காணப்புக்கு, - ஓராத்
திருக்கண்டேன் என்றுரைத்த சீரான் கழலே,
உரைக்கண்டாய் நெஞ்சே யுகந்து.

## ஈசுவர முனி

*இவர் நாதமுனிகளுடைய புதல்வர், ஆளவந்தாருடைய தந்தை. நாதமுனிகள் தாம் காலமாகும் போது, இவருக்குப் புதல்வராய்ப் பிறக்கப் போகும் குழந்தைக்குக் கூறுமாறு யோகக்கிரமத்தைக் குருகை காவலப்பனுக்கும், ரகசியக் கிரந்தங்களை உய்யக் கொண்டாருக்கும் உபதேசித்துவிட்டுக் காலமானார். எனவே, அவர் தம்முடைய உபதேசங்களைப் பெற இவர் தகுதியில்லாதவர் என்று கருதினர் போலும். இவர் நம்மாழ்வாருடைய திருவாய் மொழிக்கு அருளிச் செய்த தனியன் :*

திருவழுதி நாடென்றும் தென்குருகூர் என்றும்,
மருவினிய வண்பொருநல் என்றும், - அருமறைகள்
அந்தாதி செய்தான் அடியிணையே, எப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சே தெளிந்து.

## திருக் கண்ணமங்கையாண்டான்

*இவர் நாதமுனிகளுடைய சீடர்களில் ஒருவர். பின்வரும் நாச்சியார் திருமொழித் தனியன் இவர் செய்தது :*

அல்லிநாள் தாமரைமேல் ஆரணங்கின் இன்துணைவி,
மல்லிநாடு ஆண்ட மடமயில், - மெல்லியலாள்,
ஆயர்குல வேந்தன் ஆகத்தாள், தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு.

*இவருடைய வரலாறு குரு பரம்பரை ஆறாயிரப்படியில் சொல்லப்படவில்லை. பன்னீராயிரப்படி இதைச் சொல்லு கிறது. இவர் நாத முனிகளின் சகோதரி புதல்வர். அந்தச்*

சகோதரி வாழ்க்கைப்பட்டிருந்தது திருக்கண்ணமங்கை. அவ்வூரில் இவர் நிரம்பிய செல்வத்துக்கு அதிபதியாய் இருந்தார். தம் மாதுலரை அடுத்து உபதேசம் பெற்று அவர் காலத்துக்குப் பின் தம்மூரில் தங்கி, பக்தவத்சலப் பெருமாளுக்குத் துளசிமாலை கைங்கரியம் செய்து வந்தார். ஒரு நாள் பெருமாள் சந்நிதிக்கு எதிரே வேடர் இருவர் தங்கள் நாய்களோடு வர, அந்த நாய்களில் சண்டையிட்டு ஒரு நாய் சாக, அதன் விளைவாய் வந்த கலகத்தால் வேடர் இருவரும் ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு இறந்தனர். பல்லக்கில் வந்த ஆண்டான், இதை விசாரித்தறிந்து, "நாய்க்காக இவர்கள் உயிர் விட்டார்கள் என்றால், நாம் பெருமாளுக்கு எவ்வாறு தொண்டு பூணவேண்டும்!" என்று உணர்ந்து, பல்லக்கிலிருந்து குதித்து, அது முதல் காலால் நடப்பதை விட்டுக் கை கால்களால் தவழ்ந்து சந்நிதிக்குச் சென்று, உடை துறந்து, பசுவைப் போல் நீரில் விழுந்து எழுந்து நீரை வாயால் பருகி வகுள மரத்தினடியில் மௌனியாய் இருந்து வந்தார். திருமண்ணும் பிரசாதமும் பெருமாள் பிரசாதித்தார். உலகத்தார் பார்த்து அதிசயிக்கும்படி இவர் இவ்வாறு இருக்கையில், சில காலம் செல்ல ஒருநாள் பெருமாள் இவருக்கு மேல் வீடு தருவதாகச் சொல்ல, மக்கள் திரளாகக் கூடினர்கள். ஒரு பெரிய சோதி தோன்ற, அதில் ஆண்டான் மட்டும் உடலோடு மறைந்து விட்டார். இந்த வரலாற்றை ஸ்ரீபட்டர் நஞ்சீயருக்கு அருளிச் செய்தார்.

## ஆளவந்தார்

இவர், முன் வரலாறுகளில் கூறியபடி நாதமுனிகள் பேரரும், ஈசுவர முனிகள் குமாரரும் ஆவர். மணக்கால் நம்பிக்குப் பிறகு ஆசாரியஸ்தானம் பெற்றவர். யமுனைத் துறைவன் என்பது பிள்ளைத் திருநாமம். இவர் இளம்

பிள்ளையாக இருந்தபோது, அரசனிடமிருந்து இவருடைய ஆசிரியரான மகாபாஷ்ய பட்டருக்குத் தச பந்தத்துக்கு உத்தரவு வந்தது. அது ஆஸ்தான வித்துவானாகிய ஆக்கியாழ்வான் என்பவனுக்குக் கப்பம் கட்டவேண்டும் என்ற உத்தரவு. அதை இவர் கிழித்தெறிந்தார். செய்தி அறிந்த அரசன் இவரை அழைக்க, இவர் போக மறுத்தார். பிறகு அவன் சிவிகை அனுப்ப, இவர் சிவிகையில் அமர்ந்து சென்றார். அங்கு அரசன் முன்னிலையில் இவருக்கும் ஆக்கியாழ்வானுக்கும் இடையில் வாதப்போர் நிகழ்ந்தது. இதைக்காண வந்திருந்த அரசன் மனைவி ஆளவந்தாருடைய குழந்தை அழகில் ஈடுபட்டு, இவர் தோற்க மாட்டார் என்று சபதம் கூற, அரசன் "ஆக்கியாழ்வான் தோற்றானாகில், யமுனைத்துறைவனுக்குப் பாதிநாட்டைக் கொடுத்து விடுகிறேன்" என்று கூறினான். இவர்களுடைய வாதப் போர் வேடிக்கையாகவே தொடங்கிற்று. ஆக்கியாழ்வான், "நீர் எது சொன்னாலும் மறுக்கிறேன். மறுக்க முடியா விட்டால் நான் தோற்றவன்" என்றான். அப்படியே சம்மதித்து ஆளவந்தார், "உமது தாய் புத்திரவதி, இந்த அரசன் தர்மவான், அரச பத்தினி பதிவிரதை" என்ற மூன்று வார்த்தைகளைச் சொல்ல, வித்துவான் இவற்றுள் ஒன்றையேனும் மறுக்க முடியவில்லை. பின் அரச பத்தினி வேண்டுகோளுக்கு இணங்கி இவர் மூன்று சொற்களுக்கும் தாமே மறுப்புச் சொன்னார். ஆக்கியாழ்வான் வாதத்தில் காலங்கழிப்பவன், ஆதலால் சற்புத்திரன் அல்லன், சற்புத்திரனைப் பெறாத தாய் மலடியே. தர்மசாலி அல்லாத ஆக்கியாழ்வானை வித்துவானாக வைத்திருக்கின்ற அரசனும் தர்மவான் அல்லன். நாயகன் சொல்லை மீறி ஆக்கியாழ்வான் தோற்பான் என்று சொன்ன பத்தினியும் பதிவிரதை இல்லை-என்று காட்டினார். கேட்டிருந்த அரசி ஓடி வந்து குழந்தை ஆகிய ஆளவந்தாரைக் கட்டித் தழுவித் தூக்கிக் கொண்டாள். பின் தத்துவ வாதத்திலும் ஆக்கியாழ்வான்

தோற்றான். அரசன் தன் சபதப்படி இவருக்குப் பாதி நாட்டைப் பிரித்துக் கொடுத்தான். இவ்வாறு இவர் அரச போகத்தில் தோய்ந்திருந்த சமயத்தில்தான் மணக்கால் நம்பி இவரிடம் வந்து "உமது பாட்டனார் உம்மிடம் ஒப்புவிப்பதற்காக எம்மிடம் விட்டு வைத்த சொத்து" என்று சொல்லி இவரைத் திருவரங்கநாதன் சந்நிதிக்கு அழைத்துச் சென்று அரங்கநாதனாகிய சொத்தை இவரிடம் ஒப்புவித்தார். பின்னர் இவர் மணக்கால் நம்பி கூறியபடி யோக ரகசியங்களை அறியவேண்டிக் குருகை காவலப்பன் இடம் சென்றார். பிற்காலத்தில் தமக்கு அடுத்தபடி ஸ்ரீ வைஷ்ணவ தரிசனம் நிர்வகிக்க வல்லவர் இராமானுசராகிய இளையாழ்வார் என்று உணர்ந்து, அவர் இருந்த காஞ்சிக்குச் சென்று அவருக்குத் தெரியாமல் அவரைப் பார்த்து மகிழ்ந்தார். பின்னர்த் திருவரங்கம் திரும்பி இருந்த காலத்தில் தம்முடைய முடிவு நாள் நெருங்கியதை அறிந்து இராமானுசரை அழைத்து வரும்படி பெரிய நம்பியை அனுப்பினார். ஆனால் அவர் வருவதற்குள் இவர் உடலில் நோவு சாத்திச் சில நாளில் திருநாட்டிற்கு எழுந்தருளி விட்டார்.

ஆளவந்தார், நாதமுனிகளிடமிருந்து உய்யக்கொண்டார் மணக்கால் நம்பி மூலமாகவும், குருகை காவலப்பன் மூலமாகவும் வைணவ சமய தத்துவங்களை உபதேசிக்கப் பெற்றார். இவருக்குப் பிள்ளைகள் நால்வர். சீடர்கள் பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, மாறனேர் நம்பி, பெரிய திருமலை நம்பி, திருமாலையாண்டான், திருக்கச்சி நம்பி முதலிய பலர். இவர்கள் மூலமாக வைணவ சமய தத்துவங்களை இராமானுசர் உபதேசிக்கப் பெற்றார். இவ்வாறாக, வைணவ சம்பிரதாயம் தொடர்பாக நம்மாழ்வார் இடமிருந்து வந்து கொண்டிருக்கிறது என்பது வைணவர்

*கருத்து. இத்தொடர்பை உணர்வதற்காகவே இந்த ஆசாரியர்களது வரலாற்றைச் சிறிது சொன்னோம்.*

*ஆளவந்தார் செய்த நூல்கள் எட்டு. யாவும் வடமொழி. இவற்றுள் சித்தி த்ரயம் என்ற மூன்று நூல்களும், கீதார்த்த சங்கிரகம் என்ற நூலும் இராமானுசர் செய்த ஸ்ரீ பாஷ்யத்துக்கும் கீதா பாஷ்யத்துக்கும் ஆதாரமாக அமைந்தவை. சில நூல்கள் தோத்திரம்; சில கண்டனம்.*

## வங்கிபுரத்தாய்ச்சி

*இவர் மணக்கால் நம்பியின் சீடர்களில் ஒருவர். கலிப் பாட்டாக ஒரு நீண்ட பாடலில் ஆழ்வார்களைக் குறிப்பிட்டு, திருமால் தலங்கள் நூற்றெட்டையும் கூறுகிறார். மணவாள மாமுனி பாடிய நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி என்பது இதனினும் வேறானது; காலத்தால் பிந்தியது.*[1]

கடலலைகள் தோற்றும் கடும்பிறவி வெள்ளத்
தொடரலைகள் தோன்றிநில் லாதே - மடநெஞ்சே!
ஆழ்வார்கள் பாயிரத்தால் அலங்கரித்த மால்பதிகள்
மூவாறு முப்பத்து மூன்று

*என்பது அதன் தொடக்கப் பாடல். நூலானது,*

செய்யசுட ராழியான் சேவடிக்குச் சொன்மாலை
சூட்டிய பொய்கையார் நாரணற்கு ஞானச்
சுடர்விளக் கேற்றிய ஞானமொழி பூதத்தார்
என்னுழி வண்ணன்பால் திருக்கண்ட பேயாழ்வார்
கோதில் பட்டர்பிரான் குளிர்புதுவை மன்னன்
விஷ்ணு சித்தன்புகழ் வில்லிபுத் தூர்க்கோன்
கோதை நற்றமிழ் மகிழ்மாறன் சடகோபன்

1 ஆதாரம்: தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையக் குறிப்பு, தொகுதி 2, பக்கம் 238-9.

கொல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக்கோன் குலசேகரன்

என்று தொடங்கி, பின்வருமாறு முடிகிறது:

முன்னும் இராமனுய்த் தானே பின்னும்
இராமனுய்த் தாமோ தரனுய்க் கற்கியும்,

ஆனுன் தன்னைக் கண்ணபுரத்
தடிகள் கலியன் உரைசெய்யத்
தேனு ரும்சொற் றமிழ்மாலை
செய்யப் பாவம் நில்லாவே.

ஆர்வங்கி புரத்தாச்சி ஆழ்வார்கள் பாசுரத்தால்
சேருந் திருப்பதிகள் நூற்றெட்டும்—சீராய்
உரைப்பார் உரைசொல்வார் ஒருவார்உண் மகிழ்வார்
தரைப்பால் தமக்குச் சரண்.

இறுதிப் பாடல் நூலாசிரியர் வங்கிபுரத்தாய்ச்சி என்று பெயரைக் குறிப்பிடுகிறது.

ஆழியான் பதிநூற் றெட்டும் ஓதுவார்
அன்று செய்வினை அன்றே அகலுமே.

இந்நூலின் பெயர், நூற்றெட்டுத் திருப்பதிக் கோவை.

**காலம்**

நாதமுனிகள் 10ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் பரமபதம் அடைந்தார். ஆளவந்தார் 11ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் பரமபதம் அடைந்தார். எனவே இவ் வாசிரியர் அனைவரும் 10ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தோர் என்பது பொருந்தும்.

## அத்தியாயம் 11

# சைன இலக்கியம்

## முன்னுரை

சைன சமயத்தார் தமிழில் செய்த நூல்கள் பல. கி.பி. மூன்ரும் நூற்ருண்டில் தமிழ் நாட்டில் புகுந்த களப்பிரரால் சைனம் இங்கு நுழைந்து அரசியல் ஆதிக்கம் பெற்றுத் தமிழ் மக்கள் மொழிக்கும் பண்பாட்டிற்கும் பேரிடர் விளைவித்தது: அக்காலத்திலும், பின் சைனம் வீழ்ச்சியடைந்து வைதிக சமயம் மீண்டும் ஓங்கிய காலத்திலும், சைனப் புலவர் பலர் தமிழில் நூல் செய்தார்கள். இந்த இருபதாம் நூற்ருண்டில் புலவர் சிலர் சைனர் தமிழை வளர்த்தார்கள் என்று பெரிதும் புகழ்ந்தும், வைதிக சமயங்களைத் தாழ்த்தியும் எழுதியிருக்கிருர்கள். இது காலத்தின் கோலம். தொல்காப்பியர், திருக்குறளாசிரியர், இளங்கோ[1] வடிகள் ஆகியோர் சைனர் என்று எழுதினேரும் உளர். இவர் கூற்றுக்களெல்லாம் ஆராயாது அப்படியே கொள்வதற்கில்லை. எனினும், சைனர் தமிழ் நூல்கள் பல செய்தது உண்மை. காப்பியம், இலக்கணம், நீதிநூல், உரைகள் என்பனவாகப் பல துறை நூல்கள் அவர்கள் செய்திருந்தார்கள். சில நூற்ருண்டுகளில் நூல்கள் பலவாயும் சில நூற்ருண்டுகளில் மிகக் குறைந்தும் இருக்கக் காண்கிறேம். இது இயற்கை. இந்த முறையில் பார்க்கும் போது, பத்தாம் நூற்ருண்டில் சைன இலக்கியங்கள் பல இருந்தன என்பது தெரிகிறது. அவற்றுள் மிக்க சிறப்புடையது, சூளாமணி;

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்ருண்டு பக்கம் 9-12, 13ஆம் நூற்ருண்டு பக்கம் 361-3 பார்க்க.

சிறு காப்பியம் எனப் பலர் இதைக் குறிப்பிட்ட போதிலும், அக்கால இலக்கணப்படி இது ஒரு பேரிலக்கியம் என்பதில் ஐயமில்லே. அடுத்துச் சொல்லத் தக்கது சைன சமயத் தத்துவம் போதிப்பதற் கெழுந்த நீலகேசியாகும். நாரத சரிதை என்ற புராண நூல் சைனப் பெரியார் வரலாறு கூறும் காவியமென்று கருதத் தக்கது. ஆனல் அந்நூல் இறந்து போயிற்று. அமிர்தபதி என்பதும் ஒரு சைன காவியம் போலும்; அந்நூலும் இறந்து போயிற்று. திருக்குறளுக்கு மணக்குடவர் செய்தவுரை ஒரு சைனர் செய்த நூலாகும். சினேந்திரமாலே என்பது இக்காலத்தே செய்யப்பட்ட ஒரு சோதிட நூல் என்று கருதுகிறேம். இவற்றுள் அமிர்தபதி யையும் நாரத சரிதையையும் இங்கு ஆராய்கிறேம். ஏனைய நூல்கள் முன் அத்தியாயங்களில் சொல்லப்பட்டன. சினேந்திர மாலே பிறவகை நூல்கள் என்ற அத்தியாயத்தில் ஆராயப் பெறும்.

## அமிர்தபதி

யாப்பருங்கல விருத்தியுரைகாரர் இந்நூற் பெயரைக் குறிப்பிட்டு,[1] இதன் தொடக்க வரியையும் எடுத்துத் தருகிறர். "சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி, அமிர்தபதி என்றிவற்றின் முதற்பாட்டு வண்ணத்தான் வருவன; அவற்றில் நேரசை முதலாய்வரின் ஓரடி பதினைந் தெழுத்தாம். பிங்கல கேசியின் முதற்பாட்டு இரண்டாமடி ஓரெழுத்து மிகுத்துப் புரிக்காகப் புணர்த்தார். அல்லன வெல்லாம் ஒக்கும்" என்றெழுதி, சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி என்ற நூற்பாடல்களின் முதற் கடவுள் வாழ்த்துப் பாடல்களே முறையே தந்தபின், "குற்றங்கள் மூன்றும் இலனுய்க் குணங்கட்கிடனுய்" என்ற ஒரு வரியை

1 அமிர்தபதி என்பது ஒரு வித்தியாதர நகரின் பெயர் என்று சூளாமணி குறிப்பிடும் (320).

மட்டும் எடுத்துக் காட்டுகிருர். பாடல்களின் தொடர்பினல் இது அமிர்தபதியின் கடவுள் வாழ்த்துப் பாடலின் முதல் வரி என்பது வெளிப்படை. இவ்வரியின் பொருளமைதியால் இது அருகத் தோத்திரம் என்பதும், இது பற்றி இந்நூலும் ஒரு சைன நூல் என்பதும் அறியலாம். விருத்தி கூறுகின்ற ஏனைய நூல்கள் காப்பியமாதலால், இதுவும் காப்பியமாகும்.

இக் காப்பியம் யாது, செய்தார் யார், வரலாறு என்ன, நூற்பொருள் என்ன என்று ஒரு சிறிதும் அறிய வழியில்லை. யாப்பருங்கல விருத்திக் குறிப்புத் தவிர, வேறு எவரும் இந்நூற் பெயரைக் குறிப்பிட்டதில்லை. வையாபுரிப் பிள்ளை அவர்கள் அமிர்தபதி என்ற சொல் அமிர்தமதி யாகும் என்று எழுதியிருக்கிருர். "குறிப்பிட்ட நூல்களில் மற்றைய நான்கும் காவியமாக இருத்தலின் இவ் அமிர்த பதியும் காவியம் என்றே நாம் கொள்ளுதல் வேண்டும். மேலும், இது ஒரு சைன காவியம் என்றும் நாம் கருதலாம். பெயரை நோக்கிய அளவில் இது வடமொழிச் சார்பு பற்றியது எனவும் ஊகித்தல் கூடும். அமிர்தபதி என்பது கதாநாயகன் பெயராகவேனும், அல்லது கதாநாயகியின் பெயராகவேனும் இருத்தல் கூடும் எனவும் நாம் கொள்ளலாம். இப்பெயருள்ள நாயக நாயகிகள் வட மொழி நூல்களில் எங்கேனும் வந்துளரா என்று நாம் நோக்குதல் வேண்டும். வடமொழியில் மிகவும் புகழ்வாய்ந்த ஆசிரியர்களுள் ஒருவர் சோமதேவர். இவர் யாசஸ் திலக சம்பு என்ற காவியத்தையும் நீதி வாக்கியாமிர்தம் என்ற அர்த்த சாஸ்திர நூலையும் இயற்றியுள்ளார். யாசஸ் திலக காவியத்தைச் சாலிவாகன சகம் 889இல் (அதாவது கி. பி. 967இல்) தாம் இயற்றியதாக இவரே கூறியுள்ளார். இக்காவியத்தில் வரும் ஒரு முக்கிய பாத்திரம் அமிர்தமதி என்பது. தமிழில் ஏட்டுப் பிரதிகளில் மகரத்தைப் பகர மெனத் தவருகப் படித்துக் கொள்ளுதற்கு இடமுண்டு.

ஆகவே, யாப்பருங்கல உரையிற் காணும் அமிர்தபதி என்பது, இக்காவியத்தில் வரும் அமிர்தமதியாக இருத்தற்குப் பெரிதும் இயைபு உண்டு. மேற்கூறிய ஊகங்களெல்லாம் நன்கு பொருந்துகின்றன. காவியத்தின் தலைவியாய் அமைதற்குரிய தகுதி அமிர்தமதிக்கு உளதா என்று வினவலாம். யாசஸ்திலக சம்புவின் கதையை வாசித்தால் அத்தகுதி அமிர்தமதிக்குப் பெரிதும் உண்டு என்று நன்கு புலப்படும்." [1]

இக்கூற்று ஏற்கத் தக்கதாகத் தோன்றவில்லை. அமிர்தமதியின் கதையைக் கூறும் ஒரு நூல் யசோதர காவியம் என்ற பெயரால் தமிழில் தனியே செய்யுளாகப் பாடப்பட்டு வழங்குகிறது. அதன் கதைப் போக்கு மிக்க கீழ்த்தரமானது [2]. அக் கதாநாயகியின் கதை முன்னமே புனையப்பெற்றிருந்தது என்று கருதுவது பொருத்தமாகாது. அமிர்தபதி, சிந்தாமணியோடொத்த சிறப்புடைய காவியமாய் இருக்கவேண்டுமானால், அமிர்தமதியின் கதையாய் இருக்கமுடியாது. அன்றியும், இராமாயண பாரதம் போன்ற இதிகாசங்கள் தவிர, மற்றைய வரலாறுகளை ஒருவர் பாடியிருந்தால் பின்னால் வேறொருவர் பாடுவது வழக்கமில்லை. யசோதர காவியம் பாடியவர், அமிர்தமதியின் கதை முன்னமே சிறந்த காவியமாய்ப் பாடப் பெற்றிருந்தால் அதையே தாம் பின்னர்ப் பாட எண்ணியிருக்க மாட்டார். ஆதலால் அமிர்தபதி வேறு காவியம் என்றே கருதவேண்டும். பிள்ளையவர்கள் கூற்றுப் பொருந்தாது என்றே தோற்றுகிறது. நூல் பற்றிய வேறு செய்தி எதுவும் இல்லை.

---

1 காவியகாலம், வையாபுரிப் பிள்ளை 1957, பக்கம் 334-5.

2 எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு, பக்கம் 372 - 389 பார்க்க.

# நாரத சரிதை

இது புறத்திரட்டில் பெயர் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு நூல். வேறு வகையில் இந்நூலின் பெயர் எங்கும் தெரிந்திலது. ஸ்ரீ புராணத்தில் நாரதன் பர்வதன் என்ற இருவர் சரித்திரம் கூறப்பட்டுள்ளது. அவ்விருவருள் நாரதன் என்பவன் சரிதத்தை இந்நூல் புனைந்து புராண மாகக் கூறுவதாகலாம் என்பது அறிஞர் கருத்து. முந்திய நூல்போல, இந்த நூல் பற்றியும் வேறு எந்த விவரமும் தெரிந்திலது. நாரதன் ஓர் அரசன் என்றும், அவன் இறுதியில் துறவு பூண்டான் என்றும், பிற்காலத்து அரிச்சந்திர புராணம் முதலியன கூறுவதுபோல இந்நூலும் கூறியிருக்கலாம். ('அரிச்சந்திர சரித்திரம்' என்றே அந்நூல் முதலில் பதிப்பிக்கப்பட்டது.) அரசனுடைய சிறப்பையும் அவனுடைய நகரத்தையும் பின்வரும் இரு பாடல்களும் கூறுகின்றன:

வல்லென்ற சொல்லும் புகழ்வாய்மை வழீஇய சொல்லும்
இல்லென்ற சொல்லும் இலனுகலின் யாவர் மாட்டும்
சொல்லுங் குறையின் மையிற்சோரரும் இன்மை யாலே
கொல்லென்ற சொல்லும் உரைகற்றிலன் கொற்றவேலான்.

மன்னன்மேவு கோயில்மேரு மானமற்றிம் மண்ணெலாம்
என்னலாய ஊரிடத் திலங்குமாளி கைக்குலம்
பொன்னின்மேரு வின்புறம் பொருப்புநேர வப்புறம்
துன்னுநேமி வெற்பையென்பர் சூழ்மதிற் பரப்பையே.

இவற்றால் இந்த நூல் நகரப்படலம் முதலிய பகுதிகள் உடைய ஓர் அரசன் வரலாறு என்று கருதுவது பிழை ஆகாது. பெண்களை அதிகம் பழித்துப் பாடுதல் சைனப் புலவர் இயல்பு. அதன் கீழ்த்தர நிலையை யசோதர காவியத்தில் காண்கிறோம். இந்த நூலிலும் அதுபோல ஒரு பாடல் கிடைக்கிறது:

வெவ்விடம் அமுதென விளங்குங் கண்ணினர்க்கு
எவ்விடம் உடம்பினில் இழிக்கத் தக்கன -
அவ்விடம் ஆடவர்க் கமிர்த மாதலால்,
உய்விடம் யாதினி, உரைக்கற் பாலையே.

ஆனால், இந்தப் பாட்டு கீழ்த்தரமாயின்றிச் சுவையுடைய தாய் இருக்கிறது. இது இந்நூலின் சிறப்புப் போலும். மேலும், புறத்திரட்டு ஆசிரியர் தாம் கண்ட நூல்களில் சுவையுடைய பாடல்களையே தேர்ந்தெடுத்துத் தொகுத்தார் என்பது அவருக்குரிய சிறப்பு.

துறவு என்ற அதிகாரத்தில் பின்வரும் இரு பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன :

அருந்திய குறையில் துன்பம் ஆங்கவை நிறையில் துன்பம்,
பொருந்துநோய் பொறுத்தல் துன்பம், பொருந்திய போகத் [துன்பம்,
மருந்தினுக் குளுற்றல் துன்பம், மற்றவை யருந்தல் துன்பம்,
இருந்தவா றிருத்தல் துன்பம், யார் கொலோ துன்ப மில்லார்?

வாழ்கின்றும் மக்களுநம் வழிநின்று ரெனவுள்ளந்
தாழ்கின்றார் தாழ்கில்லார் தமநில்லா வானக்கால்
ஆழ்கின்ற குழிநோக்கி ஆதார மொன்றின்றி
வீழ்கின்றார் மெய்யதா மெய்தாங்க வல்லரோ ?

இவற்றுள் முதல் பாடலில் உலக வாழ்க்கையே துன்பமய மானது என்பதை இவ்வாசிரியர் மிகவும் சுவைபடக் கூறுகிறார். துறவை வலியுறுத்துகின்ற இவ்விரு பாடல்களையும் கொண்டு, சிந்தாமணி போல இந்நூற் கதா நாயகனும் துறவு பூண்டு முத்தி பெறுகிறான் என முடியும் என்றும், ஆகவே இதுவும் அதுபோல ஒரு சைன காவியம் என்றும், வையாபுரிப் பிள்ளை கூறுவர்.

புறத்திரட்டில் கண்ட பின்வரும் பாடல் (பொது மகளிர்) யாப்பருங்கல விருத்தியிலும் நேமிநாதஉரையிலும் மிகையெண்நிரனிறைக்கு உதாரணமாகத் தரப்பட்டுள்ளது:

ஆசை யல்குற் பெரியாரை அருளும் இடையுஞ் சிறியாரைக்
கூசு மொழியும் புருவமும் குடில மாகி யிருப்பாரை
வாசக் குழலும் மலர்க்கண்ணும் மனமுங் கரிய மடவாரைப்
பூசல் பெருக்க வல்லாரைப் பொருந்தல், வாழி மடநெஞ்சே!

இப்பாடலைப் பார்க்கும்போது, இது ஒருபொருள்மேல் மூன்று அடுக்கி வந்த தாழிசை போன்ற பாடல்களில் ஒன்றாக இருக்கலாமோ என்று ஐயம் எழுகின்றது. இத்தகைய பாடல்கள் வேறு பலவும் இந்நூலில் இருந்திருக்கலாம். யாப்பருங்கல விருத்தி மேற்கோளால் இந்நூல் அவ்வுரையின் காலமாகிய 11ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்று தெரிகிறது. எனவே, பல சைன நூல்கள் தோன்றிய 10ஆம் நூற்றாண்டே இதன் காலம் என்று கருதுகிறோம்.

இனி, புறத்திரட்டில் காட்டப்பட்டுள்ள பிற பாடல்கள் பின் வருவன:

பெற்றவை பெற்றுழி யருந்திப் பின்னரும்
மற்றுமோ ரிடவயின் வயிறு தானிறைத்து
இற்றைநாள் கழிந்தனம் என்று கண்படூஉம்
ஒற்றைமா மதிக்குடை அரசும் உண்டரோ.

புழுமலக் குடருள் மூழ்கிப் புலால்கமழ் வாயிற் றேய்த்து
விழுமவை குழவியென்றும், விளங்கிய காளை யென்றும்,
பழுநிய பிறவு மாகிப் பல்பெயர் தரித்த பொல்லாக்
குழுவினை யின்ப மாகக் கொள்வரோ குருடு தீர்ந்தார்?

## பிங்கல சரிதை, வாமன சரிதை

நவநீதப் பாட்டியல் 66ஆம் கலித்துறை உரையில், "செய்வித்தானாற் பெயர்பெற்றன பிங்கல சரிதை, வாமன

சரிதை" என்று உரைகாரர் எழுதுகிருர். இதனுல் பிங்கலன் சரிதம் கூறும் நூலும், வாமனன் சரிதம் கூறும் நூலும் இருந்தமை தெரிகின்றது. ஆனுல் இத்தொடர் அத்துணைப் பொருத்த முடையதென்று தோன்றவில்லை. செய்வித்தோனுற் பெயர்பெற்றன சாதவாகனம் இளந்திரையம் என்று இறையனுர் அகப் பொருளுரை கூறும். இதுவே நன்னூலிலும் சொல்லப்பட்டது. ஆனுல் இவ்விரு நூல்களும் இன்று இல்லை. நூற்பொருள் என்னவென்பதும் தெரியாது. பிங்கலன் சரிதையும், வாமனன் சரிதையும், பிங்கலனுலும், வாமனனுலும் செய்விக்கப் பெற்றன எனின், சரிதை என்ற பெயர் பொருந்துமென்று தோன்றவில்லை. சரிதை என்றுல் அவரவர் சரிதம் கூறுவது என்று பொருளாகும். இதன்படி, பிங்கலன் பிங்கல சரிதை செய்வித்தான், வாமனன் வாமன சரிதை செய்வித்தான் என்பது பொருள்; இதற்குத் தெளிவில்லை.

இரண்டும், பிங்கலன், வாமனன் என்போர் சரிதம் கூறுவன போலும். வாமனன் (வாமன்) ஒருகால் அருகன் என்று பொருளாகலாம்: தெரியவில்லை. இதுபற்றிய குறிப்பு எதுவும் பிற இடங்களில் வழங்கவில்லை.

அத்தியாயம் 12

# பிரபந்த இலக்கியம்

## முன்னுரை

இன்று கிடைக்கின்ற பாட்டியல் இலக்கண நூல்களில் மிகவும் பழமையானதாகக் கருதப்படுவது, பன்னிரு பாட்டியல் என்று முன் ஓர் அத்தியாயத்தில் கூறினோம். இது 75 பிரபந்தங்களின் இலக்கணத்தை உரைக்கிறது; ஆனால் பிரபந்தம் என்ற சொல்லைச் சொல்லவில்லை; பாவினம் என்றே சொல்லுகிறது. பிரபந்தம் என்ற வட சொல்லுக்கு, தொடர்பாகச் செய்யப்பட்டது என்பதே பொருள். பேரிலக்கியங்கள் அல்லது தொடர்நிலைச் செய்யுள்கள் அல்லாதனவாய், ஒரு பொருள் குறித்துச் செய்யப்பட்ட ஒரு நெடும்பாட்டுக்கு அல்லது பாடல் தொகுதிக்குப் பிரபந்தம் என்ற பெயரை இப்போது வழங்குகிறோம்[1]. 17ஆம் நூற்றாண்டில் படிக்காசுப் புலவர் தாம் பாடிய சிவந்தெழுந்த பல்லவராயன் உலா என்ற நூலில் 96 பிரபந்தங்கள் என்று முதன்முதலில் குறிப்பிடுகின்றார்.[2] பிரபந்தம் என்ற பெயரும் 96 என்ற வரையறையும் புதியனவேயன்றி, பிரபந்தப் பாட்டு புதியதன்று.

நாயன்மார் ஆழ்வார் போன்ற பெரியார் மிகப் பழங் காலத்திலேயே பல வகையான பிரபந்தங்கள் பாடியிருக்கிறார்கள். இங்கு நாம் பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய பிரபந்தங்களை மட்டும் சிறிது ஆராய்வோம். சைவ இலக்கியங்கள் மூன்று அத்தியாயங்களில் ஆராயப்பட்டன.

---

1 எமது பிற நூற்றாண்டு வரலாறுகள் அனைத்திலும் ஏற்ற அளவு பிரபந் இலக்கியம் பற்றிய குறிப்புக்கள் சொல்லப்பட்டுள்ளன.

2 எமது 16ஆம் நூற்றாண்டு வரலாறு பிரபந்த மரபியல் பார்க்க.

வைணவ இலக்கியம் இக்காலத்தில் எதுவும் எழவில்லை என்று குறிப்பிட்டோம். நாம் ஆராய்ந்த சைவ நூல்களை எடுத்துக் கொண்டால், 11ஆம் திருமுறையே 'பிரபந்த மாலை' என்று பிற்காலத்தில் வழங்கியதாக அறிகிறோம். ஏடுகளில் இப்பெயரை அமைத்தவர் யாராயிருப்பினும், அவர் 11ஆம் திருமுறை நூல் ஒவ்வொன்றையும் பிரபந்தம் என்றே கருதினர் போலும். நாம் கருதியவற்றில் அந்தாதி, மும்மணிக்கோவை, இரட்டை மணிமாலை, நான்மணி மாலை, ஒருபா ஒருபது, எழுபது, எட்டு ஆகிய பிரபந்த வகைகள் அடங்கியுள்ளன. இங்குக் கருதிய 11ஆம் திருமுறை ஆசிரியர் அனைவருமே பிரபந்தம் பாடியிருக்கிறார்கள். மறம் என்ற பெயரால் இரண்டு பிரபந்தங்களை ஆராய்ந்தோம். இரண்டும் கண்ணப்ப நாயனாருடைய செய்தற்கரிய செயலை மறம் என்று வியந்துரைப்பன. பிரபந்த இலக்கணத்தில் கூறிய மறம் வேறு; அது மகட்பால் வேண்டிய தூதன் உரைத்த மொழி கேட்டுக் குறுநில மறவன் சினந்து உரைப்பது. இதை ஆசிரியர்கள் கலம்பக உறுப்பாக அமைத்துள்ளனர்.

நாம் ஆராய்ந்த 9ஆம் திருமுறைப் பாசுரங்கள் யாவும் பொதுவாகப் பதிகம் என்ற பிரபந்த வகையில் அடங்கும். சில, பாதாதி கேசம் என்பதாகவும் கொள்ளத் தகும்; பல்லாண்டுப் பாட்டொன்றும் அங்கு உள்ளது.

இத்திருமுறைகள் நீங்கலாக, இந்நூற்றாண்டுப் பகுதியில் தனிப் பிரபந்தமாக நாம் அறிவது சிராமலை அந்தாதி ஒன்றே. பிற்காலத்தில் பிரபந்தங்கள் பொதுவாகத் தெய்வத்தைப் புகழும் நூல்களாக அமைந்திருக்கக் காண்கிறோம். ஏழாம் நூற்றாண்டிலிருந்து பாண்டிக் கோவை, நந்திக் கலம்பகம், பரணிப் பிரபந்தங்கள், சோழர் உலாக்கள் என்ற முறையில், தலைவரைப் புகழ்ந்த நூல்கள் 13ஆம் நூற்றாண்டு வரையில் எழுந்திருக்கக் காண்கிறோம். ஆனால்

அப்படி சிறப்பான நூல்கள் 8–10 நூற்றுண்டுகளுக்கு உரியனவாக ஏவையும் கிடைக்கவில்லை. இவ்வுண்மை பின்னும் ஊன்றி ஆராயத் தகுந்தது.

இந்தப் பத்தாம் நூற்றுண்டுக்கு உரியதாக நமக்குக் கிடைக்கின்ற தனியான ஒரு பிரபந்தம் சிராமலை அந்தாதி; இதுவும் தெய்வத்தைத் துதிக்கும் பாடல். ஏடாகவோ நூலாகவோ எங்கும் கிடைக்கவில்லை: கல்வெட்டாகவே கிடைத்தது என்றுல் இது பெரும் வியப்புக்கு இடமான பொருள். இந்த நூலேயே இவ்வத்தியாயத்தில் ஆராய்கிறேம்.

## வேம்பையர் கோன் நாராயணன் - சிராமலை யந்தாதி

இவர் திருச்சிராமலை அந்தாதி என்ற ஒரு நூல் பாடியவர்; அந்த அந்தாதி கல்வெட்டின் மூலம் அறிய வந்ததாகும். இவ்வாறு கல்வெட்டின் மூலம் பிரதி செய்யப் பட்டுக் கிடைத்த சிறப்புடைய இரு முழு நூல்கள் ஞானசம்பந்தருடைய திருவிடைவாய்த் தேவாரப் பதிகமும், இந்தச் சிராமலை அந்தாதியும். அத்தேவாரப் பதிகமானது தஞ்சை ஜில்லாவிலுள்ள திருவிடைவாய் என்ற தலத்துச் சிவாலயத்தில் பொறிக்கப்பட்டிருந்து பிரதி செய்யப்பட்டு, சமீப காலத்தில் வெளி வந்தது. அக்கல்வெட்டு பன்னிரண்டாம் நூற்றுண்டில் பொறிக்கப்பட்டது; கல் வெட்டு இலாகா அறிக்கையில் 1913ஆம் ஆண்டு முதன்முதல் வெளியிடப்பட்டது. அது திருஞானசம்பந்தர் இத்தலத் துக்குப் பாடிய தேவாரம் போலும். சம்பந்தர் பாடிய தேவாரப் பதிகங்கள் 384 என்பது திருமுறை கண்ட புராணம் கூறும் செய்தி; ஆனல் சம்பந்தர் திருமுறைகளில் உள்ள மொத்தப் பதிகங்கள் 383 தான். ஒருகால் கல்வெட்டின் மூலம் கிடைத்த திருவிடைவாய்ப் பதிகம் 384ஆம் பதிகமாயிருக்கலாம்.

*இத்தன்மையுடையது சிராமலை அந்தாதி. இது திருச்சிராமலைக் குன்றின்மேல் பல்லவ மன்னன் மகேந்திர வர்மன் அமைத்த குடைவரைக் கோயில் மதிலில் பொறிக்கப்பட்டு, கல்வெட்டு இலாகாவினரால் 1888இல் படி செய்து 1923இல் வெளியிடப்பட்டது. அக்கல்வெட்டையன்றி வேறு வகையில் இந்த நூலோ இதன் வரலாருே தெரிந்ததில்லை. பின்வரும் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் இக்கல்வெட்டு ஆதாரத்தின் மேலேயே சொல்லப்படுகின்றன.*[1]

## ஆசிரியர்

*இந்நூலைப் பாடிய ஆசிரியர் வேம்பையர் கோன் நாராயணன் என்று வழங்குகின்றவர். இவர் ஊர் வேம்பை என்பது. நூலின் இறுதியில் பாயிரமாக இரு செய்யுட்கள் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. அவை இவ்வாசிரியரைக் சில செய்திகளை குறித்துத் தெரிவிக்கின்றன.*

**மற்பந்த மார்வன் மணியன் மகன்மதில் வேம்பையர்கோன்**
**நற்பந்த மார்தமிழ் நாரா யணன்நம் சிராமலைமேற்**
**கற்பந்தல் நீழலில் வைத்த கலித்துறை நூறுங்கற்பார்**
**பொற்பந்த நீழல் அரன்திருப் பாதம் பொருந்துவரே.**

**மாட மதுரை மணலூர் மதில்வேம்பை**
**கோடமர் சேய்ஞ்ஞலூர் குண்டூரிந் - நீடிய**
**நற்பதிக்கோன் நாரா யணன்நம் சிராமலைமேற்**
**கற்பதித்தான் சொன்ன கவி.**

*இவ்விரு பாடல்களால் சில செய்திகள் தெரிகின்றன. நூற்பாடல்கள் அந்தாதித்து முடிந்தபின், மற்பந்த மார்வன் என்ற பாடல் ஆசிரியர் பெயராலே வந்த பலசுருதி என்று*

---

[1] இந்நூல் பொழிப்புரை, விளக்கவுரைகளோடு மு. இராகவையங்கார் அவர்களால் 1953ஆம் ஆண்டில் அழகாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

கொள்ளலாம். 'நம் சிராமலை' என்பதனால், இச்சிறப்புப் பாயிர வெண்பாப் பாடியவர் அக்காலத்தில் சிராமலையில் வாழ்ந்த ஒரு பெரியவர் அல்லது ஆலய நிர்வாக முடைய வராய்க் கருதத் தக்கவர். பாடியவர் வேம்பை நாராயணன். இவர் மணியன் என்பவருடைய புதல்வர் என்று தெரிகிறது. மேலும் 'கற்பந்தல் நீழலில் வைத்த கலித்துறை நூறும்' என்று சொல்லுவதனால், அவர் காலத்திலேயே இப் பாடல்கள் குகையில் கல்லில் பொறித்து வைக்கப்பட்டன என்று அறிகிறோம். (கற்பந்தல் – கல்லாலான மண்டபம்.)

இவர் நூலின் 90ஆம் பாடலில் தம்மைக் குறித்துச் சொல்லுகிறார்:

**தேறுசொல் லார்தமிழ்த் தென்வேம் பையரண்ணல் [செங்குவளை**
**நாறுமல் லாகத்து நாரா யணன்பண்டை நான்மறையும்**
**ஏறும்வல் லோனைச் சிராமலை யாளியை யீங்குரைத்த**
**நூறும் வல்லோர் தம்மை நோக்கவல் லார்க்கென்றும் நோயில்லையே.**

இதனுள் 'தென் வேம்பையரண்ணல் செங்குவளை – நாறுமல்லாகத்து நாராயணன்' என்றவிடத்து இவர் ஊரும் பெயரும் குலமும் சொல்லப்பட்டுள்ளன. குவளை மலர் வணிகருக்குரியது என்பது இலக்கிய மரபு. செங்குவளை நாறும் என்றமையால் இவர் வணிகர் என்பது தெளிவு. இவர், வெண்பாப் பாடல் சொல்லுகிறபடி, 'மாட மதுரை மணலூர் மதுரை வேம்பைகோடு அமர் சேய்ஞலூர் குண்டூர் இந்நீடிய நற்பதிக்கோன்' ஆதலால், இத்தனை இடங்களிலும் வாணிகத் தொழிலை நடத்தி வந்தார் என்று தெரிகிறது. மதுரை பாண்டிநாடு; மணலூரும் வேம்பையும் சேய்ஞலூரும் சோழ நாட்டிலுள்ளன. குண்டூர் என்பது சேர நாட்டில் இப்போது கொண்டூர் என வழங்குகிற ஊர் என்பர்.

*அன்றியும் இவர் தம் நூலுள் குறிப்பிடுகின்ற ஊர்கள் கற்குடி, ஒற்றியூர், தில்லை, (திருஇடை) மருதூர்[1] என்பனவே. வணிகத் தொழில் முறையால் இவ்வூர்கள் இவருக்குப் பழக்கமாயிருந்தன போலும்.*

**நிற்கும் துயர்கொண் டிருக்கும் பொழுதின்றி நெஞ்சனுங்கித்**
**தெற்கும் வடக்கும் திரிந்தே வருந்திச் சிராமலைமேற்**
**பொற்குன்ற னைக்கண்டு கொண்டேன், இனிப்புறம் போகலொட்டேன்,**
**கற்குன் றனையநெஞ் சிற்செல்வ ராலில்லை, காரியமே**

*என்ற பாடல் இவர் வணிகத்தின் பொருட்டுத் தெற்கும் வடக்கும் அலைந்தமையைக் காட்டும். (அல்லது தெற்கும் வடக்கும் திரிந்தேன் என்று, வழக்குச் சொல்லெனவே கொள்வது மொன்று.)*

*முதற் பாடலில், உலகம் மடந்தை, நூல் உறந்தைப் பதி (உறையூர்), திலகம் சிராமலை, பொன்னி (காவேரி) பிரான் கழத்திற் கொண்ட வெள்வடம் என்று கூறுகிருர். இக்கூற்று இவர் சோழ நாட்டினர் என்பதை வலியுறுத்துகிறது: ஆதலால் வேம்பை என்பதும் சோழ நாட்டு வேம்பத்தூராதல் வேண்டும். பாண்டி நாட்டு வேம்பத்தூரில் அனேகப் புலவர்கள் இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் தோன்றி யிருந்தாலும், இவர்கள் அனைவரும் பிராமணரே.*

---

1 மருதாடமாநதாய் என்பது கல்வெட்டுப் பாடம் (75). கல்வெட்டு, பிழை மிக மலிந்தது. ஆதலால் பல இடங்கள் ஊகித்தறிந்தது போல, இங்கும் ஐயங்காரவர்கள் மருதோடமர்ந்தாய் என்று பாடங்கொண்டார். துரைசாமிப்பிள்ளை 'மருதாடு என்ற ஊர் - இது அச்சிறு பாக்கத்துக்கும் வந்தவாசிக்கும் இடையிலுள்ள ஓர் அழகிய ஊர்' என்று குறித்திருக்கிருர். இலக்கியத்துள் எவ்விடத்தும் பயிலாத இவ்வூரை நாராயணன் குறித்தார் என்று கருதுவதில் எவ்விதப் பொருத்தமும் இல்லை. மருதோடு என்பதே பாடமாகவும், இது மருதாகிய இடைமருதைக் குறிப்பதாகவும் கொள்வதே முறை. (மருதூரமர்ந்தாய் என்றும் இருக்கலாம்.)

இவர் வணிகர், அவ்வூரினர், சோழ நாட்டினர் என்று கருத இது இடங்கொடுக்கிறது. சோழநாட்டு வேம்பையில் பிறந்த இவர் தெற்கும் வடக்கும் தொழில் முறையால் திரிந்து பொருளீட்டியும், மகப்பேறின்றி வருந்திச் சிராமலை வழிபட்டு, பெருமான் அருளால் புதல்வரைப் பெற்று, பெருமான் தமக்குச் செய்த அருளை வியந்து, தமிழ்ப் புலமையினாலும் பக்தியினாலும் நன்றிப் பெருக்கினாலும் இவ்வந்தாதியைப் பாடினார் என்று கருதக் கூடும்.

அருள்செய்வ தும்படை யேன், மெய்ம்மை
யே, அடியே னுக்கிம்மைப்
பொருள்செய் துதவும் புதல்வரைத்
தந்தென்பொல் லாதசொல்லால்
மருள்செய்த மாலைகொண் டானை, வண்
டாருஞ் சிராமலைவாய்
இருள்செய்த கண்டனை யே, தொண்டர்
காள், வந் திறைஞ்சுமினே

என்ற பாடல் (88) இந்த நிலையை நன்குணர்த்துகிறது.

### நூல்

சிராமலையந்தாதி மண்டலித்து வரும் அந்தாதியாக 102 கட்டளைக் கலித்துறைப் பாடல்களைக் கொண்டது. இதற்குக் காப்புச் செய்யுள் இல்லை. காரைக்காலம்மையார் வெண்பா அந்தாதிக்கும் சேரமான் பொன்வண்ணத்து அந்தாதிக்கும் காப்புச் செய்யுள் இல்லை; பிற்கால நூல்களுக்கே காப்புச் செய்யுள் பாடும் வழக்கம் ஏற்பட்டது. இனி, இச் செய்யுட்கள் கல்லில் வெட்டியிருந்து கிடைத்தமையால், பிழைகள் மிகுந்திருக்கின்றன. கல்லில் வெட்டினானது கல்விக் குறைவால் எழுத்துப் பிழைகள் மிகவும் அதிகம்; தவிர, ஆயிரம் ஆண்டுகள் கழிந்து போனபடியால், கல் சில இடங்களில் பொரிந்து போய், எழுத்துக்கள் சிதைந்து

விட்டன. இக் காரணங்களால் 56, 57, 71, 72, 73 ஆகிய பாடல்களின் வடிவம் அறிய முடியவில்லை. வடிவம் தெரிந்த பாடல்கள் சிலவற்றிலும் சில சொற்களை நிரப்ப முடியவில்லை.

நூலாசிரியர் அனைவருக்கு முரிய பணிவோடு, 'சொல்லும் பொருளும் சுவையும் பயனும்இல எனினும், சிராமலைமேல் கனை கழலின் குணம் பாரித்த என் கவி எனக்கு அமிர்தாம்' (81) என்கிருர். தம்மைக் குறிப்பிடும் போது 'தொடரிடை யாத்த ஞமலியைப் போலிருந்தேன்; இச் சுற்றத் திடலிடை யாப்பவிழ்த்து என்னைப் பணிகொள்' என்பார் (94); தம்மை இவர் இவ்வாறு தாழ்த்திக் கொள்வது வெளிப்படை; ஆயினும் ஞமலியைச் சங்கிலியால் யாத்து வைக்கும் இன்றைய நாகரிக வழக்கத்தை அவர் அன்று குறிப்பிடுவது ஓர் அரிய செய்தி; இலக்கியத்துள் மிக அருமையாக, புறநானூற்றுப் பாடலில் (74) வருவது ; வேறெங்கும் காண்பது அரிது.

சிராமலையைப் பொன்மலை என்றும், திருமலை என்றும் பல பாடல்களில் சிறப்பிக்கிருர். சிராமலை வருணனை சில பாடல்களில் உள்ளது; உள்ள கருத்து மிகவும் சிறப்புடையது. நூல் இறுதியிலுள்ள ஒரு பாடல் (101) சுவைத்து இன்புறத் தக்கது. வானரம், யோகியர் உரைக்கும் மந்திரங் களைக் கற்றுத் தன் மந்திக் குரைக்கும் என்கிருர்.

**ஓக்கிய கையோ டொருக்கிய உள்ளத்து யோகியர்தம்**
**வாக்குயர் மந்திரம் வானரங் கற்றுமந் திக்குரைக்கும்**
**தேக்குயர் சாரற் சிராமலைக் கூத்தன்,செம் பொற்கழல்மேல்**
**ஆக்கிய சிந்தை யடியர்க் கென்னே,இன் றரியனவே.**

இது சம்பந்தர் திருவீழிமிழலை மேகராகக் குறிஞ்சிப் பாடலோடு ஒப்பு நோக்கத் தக்கது (1416):

**பாரிசையும் பண்டிதர்கள் பன்னுளும் பயின்ருேதும்**
**ஓசை கேட்டு**
**வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருள்சொல்லும்**
**மிழலை யாமே.**

*அடியார் வரலாறுகளில் இவர் குறிப்பிடுவது கண்ணப்பர் வரலாறு ஒன்றே; 'செம் மனத்துக் கண்ணப்பனுக்கருள் செய்த சிராமலையான்' (37) என்கிறார். தில்லை மூவாயிர வரைக் குறிப்பிடுகிறார் :*

**கொடிக்கட் டியமணி மாளிகைத் தில்லையுட் கொற்றமன்னர்**
**முடிக்கட் டியமுகை சேர்கழல்மூவா யிரவர் முன்னின்று**
**அடிக்கட் டியகழ லார்க்கநின் றம்பலத் தாடுமையர்**
**வடிக்கட் டியபொழில் வான்தோய் சிராமலை மாணிக்கமே.**

*'தில்லையுள் கொற்ற மன்னர் முடிகட்டிய முகை சேர் கழல் மூவாயிரவர்' என்பது ஒருகால், சிவபக்திச் செல்வ ராயிருந்த சோழ மன்னருக்குத் தில்லை மூவாயிரவர் முடி சூட்டும் உரிமை பெற்றிருந்தார் என்பது பிற்காலத்தில் சேக்கிழார் கூற்றுவ நாயனார் புராணத்தில் கூறுவதை நினை வூட்டலாம் :*

**தில்லை வாழந்தணர் தம்மை வேண்ட அவரும் செம்பியர்தம்**
**தொல்லை நீடும் குல முதலோர்க்கன்றிச் சூட்டோம் முடிஎன்று**
**நல்கார்.**

*அந்தாதிப் பாடல், மூவாயிரவர் மன்னன் முடியில் கழல் சூட்டுவர் என்று உபசாரமாகக் கூறுகிறது போலும் (15) :*

**மெல்லிய செந்தமிழ் மாலைக்கு மெய்ப்பொருள் வேண்டுமெனச்**
**சொல்லிய கோவிற் கருள்செய் தவன், சுழ லும்முகிலை**
**வல்லிய மால்களி றென்றுதன் வாளுகி ராற்கதுவச்**
**செல்லிழி சாரற் சிராமலை மேய திருவடியே**

*என்ற பாடலில், 'இறையனார் களவியலுக்கு உரை (மெய்ப் பொருள்) உருத்திர சன்மர் மூலமாக விளங்கச் செய்தார்' என்று இராகவையங்கார் எழுதியுள்ளார். இது பொருந்தக்*

கூடிய பொருளே; சம்பந்தர் பதிகத்துக்குத் திருவாவடுதுறையில் பொற்கிழி வழங்கினார் என்று சொல்வதெல்லாம் மெய்ப்பொருள் என்ற கருத்துக்கு ஒவ்வாது. இப்பாடலில் 'திருவடியே' என்று கூறுவது நோக்கத் தக்கது. 'அருள் செய்தான் சிராமலை மேய திருவடி' என்று கூறுகிறார். இறைவனைத் திருவடி என்றே கூறுவதைச் சம்பந்தர் தேவாரத்துள்ளும் காணலாம்: 'சிறுத்தொண்டன் செங்காட்டங்குடிமேய—திருவடி தன் திருவருளே பெறலாமே' (3477) என வருவது காண்க. இறைவன் என்று கொள்ளாது திருவடி என்று கொள்ளுதலும் ஒன்று. 'உறைவாய் சிராமலையுள்ளும் என் சிந்தையுள்ளும் என்றும்' என இவர் பாடுவது (20), 'சிறைவான் புனல் தில்லை யம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான்' என்ற திருக்கோவையார் (20) அடியைக் கொண்டது.

நடராசப் பெருமானின் குஞ்சித்த சேவடியில் இவருக்கு ஈடுபாடு அதிகம் போலும்:

இடங்கொண்ட வேலையும் ஏழ்மலை யும்திசை யானையெட்டும்
படங்கொண்ட நாகஞ் சுமந்தஇப் பாரும் பதறுங்கொலோ,
திடங்கொண்ட சாரற் சிராமலைக் கூத்தன்செம் பொற்கழல்சேர்
நடங்கொண்ட சேவடி குஞ்சித் தருள்செய்த நாளகத்தே?

என்று (87) இவர் பாடுவது,

அடிபேரிற் பாதாளம் பேரும், அடிகள்
முடிபேரின் மாமுகடு பேரும், - கடகம்
மறிந்தாடு கைபேரில் வான்திசைகள் பேரும்,
அறிந்தாடும் ஆற்று தரங்கு

என்ற அம்மையார் திருவெண்பாவை நினைவூட்டுகிறது.

*இவ்வாசிரியர் சிவபக்தி மிக்கவர் என்பதும், சைவ சமயத் தத்துவங்களை உணர்ந்தவர் என்பதும், பாடல் தோறும் நன்கு புலப்படுத்துகின்றார். பிட்சாடனர் வடிவத்தில் இவருக்கு மிக்க ஈடுபாடு; நான்கு பாடல்கள் அவர் சம்பந்தமாகப் பாடியிருக்கிறார். சிவபெருமானை ‘சிராமலை வாரியின் மூரித் தெய்வக் களிறே’ என்று விளிக்கிறார்; ‘சிராமலை மேய சிவக்கொழுந்து’ என்கிறார். சிறு தெய்வங்களின் சிறுநெறி சேரலாகாது என்று ஆன்றோர் கூறிய கருத்தை, ‘கடைத்தேவரைத் தொழுமோ, வினையேன் கரதலமே’ என்று பாடுகிறார். உடலால் சரியைத் தொண்டு புரியவேண்டும் என்கிறார். (3) ஐம்புலன்களையும் உடல் அனுபவத்துக்காக இயங்கும் நிலையை விட்டு மீட்டு, உயிர் தழைப்பதற்காகப் பொன்மலையாளும் இறைவனிடத்து ஈடுபடுத்த வேண்டும் என்று கூறுகிறார் (100):*

**கண்டன கேட்டன உற்றன காமர் அறுசுவையால்**
**உண்டன மோந்தன ஐம்பொறி யுள்ள உயிர்தழைப்பக்**
**கண்டன கேட்டன உற்றன காமர் அறுசுவையால்**
**உண்டன மோந்தன பொன்மலை யாளையர்க் கோக்கினவே.**

*உலகத்தாருக்கு உபதேசமாக இவர் கூறிய இரு பாடல்கள் மிக்க சிறப்புடையன. மெய்யினால் செய்யத் தக்க தொண்டையும், மனத்தினால் அன்பு பூண்டு வாழும் நிலையையும், நன்கு உணர்த்துகிறார் (39, 40):*

காலால் வலஞ்செய்து, கையால்
தொழுது,கண் ணாரக்கண்டு
மேலா னவருடன் வீற்றிருப்
பான்எண்ணில், மெய்ப்புலவீர் !
சேலார் கழனிச் சிராமலை
மேயசெம் பொற்சுடரைப்
பாலால் நறுநெய்யொ டாடியைப்
பாடிப் பணிமின்களே.

**பணிமின்கள் பாதம், பகர்மின்கள்**
**நாமங்கள், பாரகத்தீர் !**
**தணிமின்கள் சீற்றம், தவிர்மின்கள்**
**பொய்ம்மை, தவம்புகுநாள்**
**கணிமின்கள் : ஏனற் கிளிகடி**
**மாதர்தங் கைவிசைத்த**
**மணிமின்கள் போலொளிர் வான்தோய்**
**சிராப்பள்ளி வள்ளலுக்கே.**

*நூறு பாடல் கொண்ட துதி நூலில், எல்லா ஆசிரியர்களும் அகத்துறைப் பாடல்களைப் பாடுதல் ஒரு மரபு. இவரும் இவ்வாறு அகத்துறைப் பாடல்கள் பாடியிருக்கிறார்; அவற்றின் தொகை 40. மேலும் அகத்துறையேயன்றி, மோக பரவச முற்றோர் சிலர் நிலையையும் இவர் கூறுகிறார். தளிச்சேரிப் பெண் ஒருத்தியின் மோகநிலை (22), மற்றொரு தளிச்சேரிப் பெண்டின் பேரழகில் ஈடுபட்ட ஒரு காமுகன் கூற்று (45), சிராமலைத் தாழ் பொழில்வாய் பந்து விளையாடும் பாவைமீது மோகங்கொண்ட ஒரு தவமுனிவன் நிலை (89) என்பன குறிப்பிடத் தக்கன; இவையொத்த பாடல்கள் முற்காலத்தில் தனிப்பாடல்களாகக் காணப்படுமேயன்றி, இலக்கியங்களிற் காணப்படுதல் அரிது. நோய் முதலியன நீங்க வேண்டி வேலனுக்குப் பலியிட்டுக் கடன் நேர்தல் பண்டைய இலக்கிய வழக்கு. சில சமயம் சாத்தனுக்குக் கடன் நேர்வதும் சொல்லப்படும். இந் நூலில் சாத்தனுக்குக் கடன் நேர்தலை வெறி விலக்கு என்னும் துறைக்குரிய பாடலில் குறிப்பிடுகிறார் (6).*

*இவ்வந்தாதியின் முதற்பாடல், உறையூர் நகரம் என்றும் சிராப்பள்ளிக் குன்று அதன் அயலது என்றும் இருந்த பண்டைய நிலையைச் சுட்டுகின்றது; சேனாவரையர் இப்படியே கூறுகின்றார். சுந்தர பாண்டியன் 13ஆம்*

நூற்றாண்டில் உறையூரை அழித்தான் என்பது சாசனச் செய்தி. அதன் பின்னரே உறையூருக்கு இருந்த முதன்மை நீங்கிச் சிராப்பள்ளி முதன்மை பெறலாயிற்று.

அரிய சொல்லாட்சிகள் சில இச்சிறு நூலில் காணப் படுகின்றன. ஒருக்கிய உள்ளம் – ஒருமித்த உள்ளம், தாரியர் – முறையர், காரி – கறுப்பு, திடும்பல் – அடங்காமை, மெய்ம்மை – மெய்யின் தன்மை, வலிமை. மோழைப்பெரும் பொய் – என்பன காண்க[1].

## காலம்

குடைவரைக் கோயில்களை அமைத்தவர்கள் பல்லவ மன்னர். ஏழாம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த மகேந்திர வர்மன், நரசிம்மவர்மன், பின்னர் இராசசிம்மன் முதலியோர் பல இடங்களில் குடைவரைக் கோயில்கள் எழுப்பினர். பிரசித்தமானது, மாமல்லபுரத்துக் கோயில். திருச்சிராப் பள்ளிக் குன்றில் அமைத்த குகைக்கோயிலும் அத்தகையது. அதன் மண்டபங்கள் ஒன்றில் இவ்வந்தாதி வெட்டப்பட்டு உள்ளது. இவ்வாசிரியர் காலத்தை அறிவதற்கு நேர்முக மான ஆதாரங்கள் இல்லை. எனினும், இவர் வரைவித்துள்ள எழுத்தமைதி கொண்டு, நூலின் காலம் 9ஆம் நூற்றாண்டு என்றும், 'தேவாரம் பாடிய நால்களைப் பற்றியேனும் திருவாதவூர் அடிகளையேனும் இதன் ஆசிரியர் தம் பாடல்

1 31ஆம் பாடலில் இங்குத்தேன் அங்குத்தார் என்பர் என்ற தொடர்கள் அச்சிடப்பட்டுள்ளன. இச்சொற்கள் இங்குற்றேன் அங்குற்றார் என்பவற்றின் திரிபுகள் என்று இராகவையங்காரும் துரைசாமிப் பிள்ளையும் எழுதியிருக்கிறார்கள். இது அவசியமில்லை என்று தோன்று கிறது. பாடல்களைக் கல்லில் பொறித்தவன் தமிழ்ப் படிப்பு இல்லாதவன்; நிரம்பப் பிழை செய்திருக்கிறான். இங்குற்றேன் அங்குற்றார் என்று திருத்தமாக இருந்த மூல பாடத்தை இவன் இவ்வாறு பிழையாகப் பொறித்தான் என்றே கொள்ள வேண்டும். அன்றியும், ஓலை ஏடுகளில் கூட, செம்மையாய் எழுதுபவர்களும், றகரத்துக்குத் தகரம் எழுதி யிருப்பதை ஏட்டுச்சுவடி ஆராய்ச்சியுடையவர் நன்கறிவர்.

ஒன்றிலும் குறித்திலாமையால், அவர் தம் திருப்பதிகங்களும், வரலாறுகளும் தமிழ்நாட்டில் பரவுவதற்கு முன், அஃதாவது 10ஆம் நூற்றுண்டுக்குமுன், இவர் வாழ்ந்தவர்' என்பது மு. இராகவையங்கார் குறிப்பு. திருக்கோவையார் வரியொன்று முன்னே காட்டப்பட்டது; அதன் சொற்களை நாராயணன் அப்படியே எடுத்து வைத்துக்கொண்டிருக்கிருர். ஆகவே, இவர் திருக்கோவையாருக்கு ஒரு நூற்றுண்டுக்குப் பிற்பட்டு வாழ்ந்தவர் என்று கருதலாம். திருக்கோவையாரின் காலம் 9ஆம் நூற்றுண்டு. ஆதலால் இந்நூலாசிரியர் அடுத்த 10ஆம் நூற்றுண்டினராய் இருக்கலாம். மேலும், ஐயங்கார் அவர்களின் கருத்துப்படியே சமயாசாரியர் கருத்துக்கள் அதிகம் பரவுவதற்கு முன் இந்த நூல் செய்யப்பட்டது என்றுல், அவற்றைப் பரவச் செய்த நம்பியாண்டார் நம்பிக்கு முற்பட்ட காலம் என்று ஆகிறது. நம்பி இராசராச மன்னன் காலத்துப் பிற்பாதியில் வாழ்ந்தவர்; அதாவது 11ஆம் நூற்றுண்டின் தொடக்கம். இதற்குள் சிராமலை அந்தாதி செய்யப்பட்டது; ஆகவே இதன் காலம் 10-ஆம் நூற்றுண்டு என்பது பொருந்துவதே.

'இந்நூற்குள் நுழைந்து பாட்டுக்களின் உள்ளீடாய் நின்று உந்திய தொன்னூற் கருத்துக்களை நோக்குமிடத்துப் பட்டினத்தடிகளின் கருத்துக்களிற் சில காணப்படுவது பற்றி, இவ்வந்தாதி கி. பி. பத்தாம் நூற்றுண்டில் தோன்றியிருக்கலாம் என்று கோடற்கு இடம் உண்டாகிறது' என்பது துரைசாமிப் பிள்ளை எழுதியுள்ள குறிப்பு.

**பதியிலம் நாடிலம் பைம்பொற் குடைபெறப் பண்டுசெய்த**
**விதியிலம் வேறு நிதியும் இலம்வியன் கங்கையென்னும்**
**நதியிலங் குஞ்சடை நாதன் சிராமலை நண்ணவெண்ணும்**
**மதியிலம், வாழ்வா னிருத்துமென் ளுேநம் மனக்கருத்தே**

என்ற பாடலைத் தந்து (55), 'இவ்வாசிரியரது காலத்துச் சோழ நாட்டு அரசநிலை சீர்கேடு அடைந்திருந்தது என்பதை இப்பாடல் குறிப்பிடுவது போலத் தோன்றுகின்றது' என்பது இராகவையங்கார் குறிப்பு. இது அவ்வளவு பொருந்துவதாகத் தோன்றுவதில்லை. ஆசிரியர், உள்ளம் சோர்ந்த நிலைமையில் இவ்வாறு பாடுகின்றார் என்று கருத வேண்டுமேயன்றி, உண்மையாகவே பதியையும், நாட்டையும் குடையையும் கருத வேண்டியதில்லை. இவர் காலமாகிய 10ஆம் நூற்றாண்டில் சோழ ஏகாதிபத்தியம் விரைவாக முன்னேறி வந்ததேயன்றி, எந்தக் குழப்பமும் இருந்ததில்லை.

## அத்தியாயம் 13

# பிற வகை இலக்கியம்

## முன்னுரை

இதுவரை இந்த நூற்றுண்டில் எழுந்த இலக்கணங்களும், அவற்றின் உரைகளும் சைவ நூல்களும் ஆராய்ந்தோம். அத் தலைப்புக்களுள் அடங்காத சில நூல்களையும் அவை பற்றிய குறிப்புக்களையும் இனிப் பார்ப்போம்.

பண்டைக் காலத்தில் நூல் எழுதினோர் அனைவரும் எந்தப் பொருளையும் பாட்டாகவே எழுதினுர்கள். இதற்கு முக்கிய காரணம் பாட்டை மனத்தில் வைத்திருப்பது எளிது: பாடிக் கொண்டே இருக்கலாம். உரைநடையாயின், ஏட்டில் எழுதுவதும் காப்பாற்றி வைப்பதும் கடினம். ஏட்டைப் புரட்டி ஒரு பொருளைத் தேடுவது பின்னும் கடினம். ஆகவே நூல் செய்தவர்களும், தாம் நன்ருக ஆராய்ந்து மனத்தில் வைத்துள்ள ஒரு சிறப்பான பொருளைப் பிறருக்கு உணர்த்த வேண்டும் என்று எண்ணியவர்களும், பாட்டாகப் பாடி ஏட்டில் எழுதி வைத்தார்கள். பண்டை இலக்கியம் முழுமையும் செய்யுளாகவே அமைந்ததற்கு இதுவே காரணம். அக்காலத்தில் அச்செழுத்துமில்லை, அச்சிடுவதற்குக் காகிதமும் இல்லையல்லவா? இதுபற்றியே இலக்கண நூல்களையும், சமய நூல்களையும் பாட்டாகப் பாடி வைத்தார்கள். இவை மட்டுமன்றி, எல்லாத் துறையிலும் பாட்டுக்கள் ஏற்பட்டன. இப்பாட்டுக்கள் எல்லாமே ஒரு தரமான இலக்கியச் சுவை பொருந்தி யிருத்தல் இயலாது. அவரவருடைய கல்வி அறிவுக்குத் தக்கபடி இந்த நூல்கள் அமைந்திருந்தன.

இவற்றுள் இலக்கியச் சுவை உடையனவும் உண்டு; இலக்கணத்திலும் யாப்பமைதியிலும் சொல்லிலும் பிழை பட்டனவும் உண்டு. இருப்பினும், இலக்கிய வரலாறு, கால ஆராய்ச்சி, சொல் ஆராய்ச்சி, பொருள் ஆராய்ச்சி முதலிய வற்றுள் ஈடுபட்டுள்ளோருக்கு, இவை யாவும் – செந்தமிழ் நடையிலுள்ளனவும் பிழைபட்ட நடையிலுள்ளனவும் – பெரிதும் பயன்படுவனவாகும். இதுபற்றியே காலம் தெரிந்த வரையில் இவ்வகை நூல்களை நூற்றாண்டு தோறும் ஆராய்ந்திருக்கிறோம். இவ்வாறு ஆராய்ந்த நூல்களை ஒரு தொகுப்பாகப் பின்னே அட்டவணைப் படுத்தித் தருகிறோம்.

இவ்வத்தியாயத்துள் ஆராயும் நூல்களை, தருக்க நூல், சோதிட நூல், வேறுவகை நூல்கள், சாசனப் பாடல், தனிப்பாடல் என்று பாகுபடுத்திக் கொள்ள முடியும். யாப்பருங்கல விருத்தியுரையில் பெயர் குறிப்பிட்ட பிங்கலகேசி காலகேசி முதலியன தருக்க நூல்களாகும். அங்குக் காணப்பட்ட திரையக்காணமும், சிலப்பதிகார அரும்பதவுரைகாரர் குறிப்பிடும் பாடல் அடங்கிய சினேந்திர மாலையும் சோதிட நூல்களாகும். இவற்றுள், சினேந்திரமாலை யொன்றுதான் இன்று கிடைக்கிறது; ஏனைய யாவுமே கிடைக்கவில்லை. வேறுவகை நூலாக, யாப்பருங்கல விருத்தி குறிப்பிடும் தேசிகமாலையையும் இங்குக் கருதுகிறோம்.

அடுத்துக் கருதற்குரியவை சாசனத்தின்மூலம் தெரிய வருபவை. சோழ மன்னர் கோயில் முதலியவற்றுக்குத் தானம் செய்த காலத்து, அதைக் கோயில் சுவரில் கல்லில் பொறித்து வைத்தார்கள். இப்படிப் பொறித்தபோது, பொறித்த காலத்தை இன்ன அரசருடைய இத்தனையாவது ஆட்சி ஆண்டு என்பதைத் தவறாமல் குறிப்பிட்டார்கள். அரசர்களேயன்றி படைத்தலைவரும் பிறரும் தானம் செய்ததுண்டு. அப்போதும் இவ்வாறு அரசனுடைய

ஆட்சியாண்டைக் குறிப்பிட்டுச் சாசனம் பொறிக்கப்பட்டது. அரசனைக் குறிப்பிட்டபோது, அவனுடைய பாரம்பரியமும் போர் வெற்றிகளும் குறிப்பிடப்படும். இக் குறிப்புக்களே அக்காலத்து மன்னர் சரித்திர வரலாற்றை அறிவதற்கு இன்று பெருந்துணையாக உதவின. சோழர் பாண்டியர் பல்லவர் வரலாறுகள், இவ்வாறு பொறித்த கல்வெட்டுக்களின் மூலமே தொடர்புபடுத்தி இன்று அறியப்பட்டுள்ளன. கல் வெட்டுக்கள் இல்லாவிட்டால் தமிழ்நாட்டின் இடைக் கால வரலாற்றை அறிய வழியே இல்லை. கல்வெட்டில் அரசன் புகழைச் சொல்லும் பகுதி மெய்க்கீர்த்தி எனப் படும். கி. பி. 996இல், இராசராச மன்னனுடைய மெய்க் கீர்த்தி முதல் முதலாகக் கல்லில் பொறிக்கப் பட்டது. இது சுருங்கிய அளவிலமைந்த பாட்டு. பின்னல் இது மிகவும் விரிந்து, 250 அடிகள் வரையிலும் நீண்டு சென்றிருக்கிறது. இம் முதல் மெய்க்கீர்த்தியை இங்குக் காண்கிறோம்.

இம் மெய்க்கீர்த்தியையன்றி, சாசனத்துட் பொறிக்கப் பட்ட வேறு பாடல்கள் சிலவற்றையும் இங்குக் காண்போம்.

தனிப் பாடல்கள் எக்காலத்துமே சுவையுடையவை. இந்நூற்றாண்டில் எழுந்த, தனிப்பாடல்கள் பல கிடைக்க வில்லை. எனினும், சுந்தர சோழனையும் அவன் மகனையும் புகழும் பாடல்கள் சில, உரைகளில் காணப்படுகின்றன. அவற்றையும் இங்குப் பார்ப்போம்.

## தருக்க நூல்கள்

இயல், இசை, நாடகம் என்ற மூன்றும் மிகப் பழங் காலத்தில் முத்தமிழ் என்று சொல்லப்பட்டன. அவற்றுள் இசை, நாடகம் என்ற இரண்டுக்கும் உரிய பண்டை இலக்கியங்கள் முழுமையுமே இறந்து போயின. இயல் பகுதியில், இடைக்காலத்தில், அதாவது தேவாரம்,

நாலாயிரப் பிரபந்தக் காலத்தை அடுத்து, சமயத்துறையில் அதிகமான நூல்கள் செய்யப் பெற்றிருந்தன. திருஞான சம்பந்தர் சமணர் ஆதிக்கத்தை ஒழித்த பிறகு, ஆங்காங்கு அவர்கள் தங்கள் பள்ளிகளுள் புகுந்து ஒடுங்கி விட்டார்கள். அவ்வாறு ஒடுங்கிய காலத்துத்தான் அவர்கள் அனேக நூல் செய்தார்கள். சிந்தாமணி, சூளாமணி, நீலகேசி முதலான இலக்கியங்களும், இலக்கணங்களும், சமய நூல்களும், இப்பள்ளிகளின் தனிமையிலும் பாதுகாப்பிலும் எழுந்தன. இத் தனிமையின் பண்பை இந்த நூல்கள் எல்லாவற்றிலும் காணலாம்.

ஒடுங்கிய சைனர் தங்கள் சமயத்துறையில் அதிக கவனம் செலுத்தினர்கள். காப்பியங்களில் சமயத்தை அதிகம் வலியுறுத்தினர்கள். சமய வாதத்துக்கென்றே பல நூல்கள் செய்தார்கள். அவற்றுள் இப்போது நன்கு தெரிந்து வெளியாகியுள்ள நூல் நீலகேசியாகும். பிற் காலத்தில் நல்ல உரை செய்யப்பெற்ற காரணத்தால் இது இன்றும் நின்று நிலவுகிறது. நிலவாத நூல்கள் பின்னும் பல. அவற்றை யாப்பருங்கல விருத்தியுரைகாரர் குறிப் பிடுகிருர். அவரும் சைனர் ஆதலால், தம் சமய நூல்களைச் சிறப்பித்துக் கூறுகிருர் என்று கருத வேண்டும். இவ்வாறு கூறப்பெற்ற நூல்கள் பிங்கலகேசி, அஞ்சனகேசி, காலகேசி, தத்துவதரிசனம் என்பன.

" தளைசீர் வண்ணமாமாறு சொன்ன இலக்கணமும் தளைசீர் வண்ணம் எனப்படும், உபசார வழக்கினல், குண்டல நீல பிங்கல கேசிகளது தோற்றமும், தொழிலும் சொன்ன விலக்கணச் செய்யுட்களும் பிரித்து வேருருபசாரத்திஞற் குண்டலகேசி, நீலகேசி, பிங்கலகேசி என்னும் பெயர் பெற்ருற்போல எனக் கொள்க." தோற்றமும், தொழிலும் என்று சொன்னமை ஒரு பொருளை உணர்த்துகிறது.

குண்டலமாகச் சுருண்டிருந்த கேசமுடையவள் குண்டலகேசி. நீல நிறக் கேசமுடையவள் நீலகேசி. அப்படியே பிங்கல நிறக் கேசமுடையவள் பிங்கலகேசி; பிங்கலம் பொன்னிறம். அஞ்சனகேசி கருநிறக் கூந்தல் உடையவள். காலகேசி என்பது காளகேசி என்றிருக்க வேண்டும்; காளம் - கருமை நிறம். இவை யாவும் நீலகேசியின் தன்மையை ஒட்டித் தருக்க நூல்களாகவே இருந்திருக்கும். விருத்தியுரைகாரர் அப்படியே குறிப்பிடுகிறார்.

"தருக்கமாவன ஏகாந்த வாதமும் அநேகாந்த வாதமும் என்பன. அவை குண்டலம், நீலம், பிங்கலம், அஞ்சனம், தத்துவ தரிசனம், காலகேசி முதலிய செய்யுள்களுள்ளும், சாங்கியம் முதலிய ஆறு தரிசனங்களுக்குள்ளுங் காண்க." தத்துவ தரிசனம் என்பது மற்றக் கேசி நூல்கள் போல ஒரு தருக்க நூல் போலும். மற்றும் ஓரிடத்தில் விருத்தி யுரைகாரர் ஒரு பிங்கலகேசிப் பாட்டைக் குறிப்பிடுகிறார்: 'பிங்கல கேசியின் முதற் பாட்டு இரண்டாமடி ஓரெழுத்து மிகுத்துப் புரிக்காகப் புணர்த்தார்.'

குண்டலகேசி பௌத்தநூல் என்றும் சைன சமயத் தினர் அதன் வாதத்தை மறுத்து நீலகேசி செய்தார் என்றும் அறிகிறோம். இவ்விரு நூல்களும் இரண்டாம் அத்தியா யத்தில் ஆராய்ந்திருக்கிறோம். ஏனைய, எது பௌத்தம் எது சைனம் என்பது விளங்கவில்லை. இவற்றுள் நீலகேசி ஒன்றுமே முழுமையும் உள்ளது. மற்றவை கிடைக்கவில்லை. இந்த நூல்கள் 8 – 10 ஆகிய நூற்றாண்டுகளில் தோன்றின என்பது தெளிவு. நூல்கள் கிடைக்காமையால் காலம் அறிய முடியவில்லை. எனினும் கருத்து நிறைவுக்காக இவற்றின் பெயரை மட்டும் ஒரு சேரத் தந்திருக்கிறோம்.

யாப்பருங்கல விருத்தியுரைகாரர் வக்கிரகிரந்தம் என ஒரு நூற்பிரிவைக் குறிப்பிடுகிறார். இது வக்காணிக்

*கிரந்தமாயிருக்கலாம்; வக்காணித்தல் – வாதம் செய்தல். எனவே, இது தருக்க நூற்பிரிவாயிருத்தல் கூடும்.*

## சோதிட நூல்கள்

*11ஆம் நூற்ருண்டில் யாப்பருங்கலத்துக்கு விருத்தியுரை எழுதிய ஆசிரியர் சோதிடம், சகுன சாத்திரம், மந்திரவாதம், மருத்துவ நூல், சாமுத்திரிக சாத்திரம், நில நூல், ஆயுத நூல், ஆருட நூல், கணித நூல், அருங்கல நூல் முதலிலான பலவகை நூல்களைக் குறிப்பிடுகிருர்.*[1] *இத்துறைகளில் இவருக்கு முன் நூல்கள் எழுந்திருந்தன வென்று இதனுல் நாம் அறியலாம். ஆனுல் இப்படிப் பல நூல்கள் கிடைக்கவில்லை. சோதிடத் துறையில் மட்டும் சினேந்திர மாலை என்ற நூல் கிடைக்கிறது. திரையக் காணம் என்ற ஒரு நூல் பற்றிய சில குறிப்புக்கள் கிடைக்கின்றன. இவ்விரண்டையும் இங்குக் கவனிப்போம்.*

## சினேந்திரமாலை

*இது 'உபேந்திராசாரியர் என்னும் சைனமா முனிவர் செய்தது' என்று அச்சிடப்பட்டுள்ளது. சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் மேற்கோளாகத் தரும் ஒரு பாடல் இந்நூலில் உள்ளது. அதுபற்றியே இந் நூலை இந்த நூற்ருண்டில் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்கிறேம்.*

### ஆசிரியர்

*இவர் பற்றிய வரலாறு தெரியவில்லை. இந் நூலின் முதல் மூன்று பாடல்கள் பின் வருவன:*

---

1 எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்ருண்டு, முகவுரை 8ஆம் பக்கம பார்க்க.

**ஆழிசூழ் வையத்தும் அண்டத்தும் அப்புறத்தும்**
**ஊழிசூழ் பொய்கடந்த உம்பரிலும் - வாழியவென்று**
**எண்ணரியான் ஏத்தரியான் ஈண்டொழியா எவ்வுயிர்க்கும்**
**தண்ணளியான் பாதம் சரண்.**

*இப்பாடல் பொது முறையாகக் கடவுள் வணக்கம் கூறுகிறதேயன்றி, அருகன் பற்றிய குறிப்பெதுவும் இதில் இல்லை.*

**கேவலிய ஞானத்தின் கேள்வி வழியொழுகி**
**மூவுலகு மெஞ்ஞான்றும் முற்றுணர்ந்த - நாவலர்தம்**
**பாதம் சரணுகப் பாத்தொடுப்பன் பன்னூலின்**
**வேதத்துள் மெய்ப்பொருளை யான்.**

**இறப்பு நிகழ்வெதிர்வென் றிம்மூன்று காலத்**
**திறப்பிற் சுபாசுபங்கள் தேர்ந்து - திறப்படுப்பன்,**
**சேலனைய கண்மடவாய்! சீரார் சினேந்திர**
**மாலையெனும் பேரிதனுள் வைத்து.**

*கேவலிய ஞானம் என்ற தொடராலும், சினேந்திர மாலை என்ற நூற் பெயராலுமே இந் நூலின் ஆசிரியர் சைனர் என்பது உணரப்படும்; மற்றப்படி இவர் தம் நூலில் தம் மதச் சார்பு புலப்படாதவாறே செய்துள்ளார்.*

### நூல்

*இந் நூல் 464 வெண்பாக்களாலானது. இவை பாயிரப் பகுதி 9 பாடலும் மற்றவை 23 காண்டங்களுமாக உள்ளன. பாயிரம், முறையே அருக சரணம் 1. அவை யடக்கம் 2, சினேந்திர மாலை என்னும் நூற் பெயர் 3, நூற்கு அதிகாரி 4 - 6, நூற் பொருள் 7 - 9 என்பன கூறுகிறது. பாயிரப் பகுதியின் பின் காண்டப் பொழிப்பு என்ற பகுதி 80 செய்யுட்கள். இவை கோள்களின் உதயம், நட்பு, பகை., திக்கு, பால், வடிவு முதலான பலவகைப் பொருள்களைக்*

கூறுகின்றன. அடுத்து ஆரூட சக்கரம் 6 பாடல்கள், பிறகு நூல் தொடங்குகிறது.

காண்டப் பொருள் பின் வருவதாகும்; தாது, மூலம், சீவன், நட்டமுட்டி சிந்தனை (இழந்த பொருளை அல்லது புதை பொருளைக் காணும் வழி), நலந்தீங்கு, பிணி, மரணம், உண்டி, கனா, குணம், மங்கலம், காமம், மகப்பேறு, சரிகை, சல்லியம், (பூமிக்குக் கீழுள்ள பொருளைக் காணும் ஆரூடம்), கீழ்நீர், படைவரவு, யாத்திரை, ஆற்று நீர் வரவு, மழை வரவு, அஃகமலிவு, மரக்கல வரவு, மாநிமித்தம் என்பன. சில காண்டங்களின் தொடக்கப் பாடலில் இவர், 'முதுணர்ந்தோர் நூலின் முறை தெரிந்து யான் எடுத்து உரைக்கிறேன்' என்கிறார்.

பண்டைய செய்யுள் நூல்களை நான்கு வகையாகப் பாகுபடுத்தலாம். 1. இலக்கியம்: காப்பியம், நீதி நூல், பிரபந்தம் யாவும் இதனுள் அடங்கும். 2. இலக்கணம்: ஐந்திலக்கணமும் இதனுள் அடங்கும். 3. சமயம்: சைவம் வைணவம், வேதாந்தம், சைனம், பௌத்தம் யாவும். 4. பிற துறை: சோதிடம், வைத்தியம், மாந்திரீகம், கணக், கணிதம் முதலான யாவும். சமயத் துறையில் எல்லாச் சைவ நூல்களும் சிறந்த தமிழ் நடையில் இயன்றவை. மூலசூத்திர நூல்களெல்லாம் சைவத்தில் தமிழில் ஏற்பட்டுள்ளன. வைணவத்தில் நாலாயிரப் பிரபந்தம் நீங்கலாக, சப்த காதை, விஞ்ஞான சாரம், பிரமேயசாரம், தேசிகப் பிரபந்தம் என்ற சிறு நூல்கள் தவிர, சிறப்பான ஞானநூல் எதுவுமே தமிழில் செய்யப் பெறவில்லை. சைனத்தில் சில நூல்கள் உள்ளன. வேதாந்தத் துறையில் பல நூல்கள் நல்ல நடையில் உள்ளன. பௌத்தத்தில் மணிமேகலை தவிர, எதுவுமே இல்லை. ஆனால் பொதுவாக இப்போதுள்ள ஒரு கருத்து: பண்டைக் காலத்தில் சோதிடம், வைத்தியம்

முதலான துறைகளில் நூல்கள் செய்தோர் அனைவரும் சிறப்பான இலக்கண அறிவு பெறாதவர்கள் என்பதாகும். இக்கருத்தானது, பிற்கால வேதாந்த நூல்களையும் கேளப்பா சொல்லப்பா என்று தொடங்குகின்ற வைத்திய நூல்களையும் கொண்டே எழுந்துள்ளது. இக்கருத்து பிழை என்பதைச் சினேந்திர மாலை நன்கு உணர்த்துகிறது. இந்நூற்பாடல்கள் மிகவும் நல்ல நடையில் இயன்றுள்ளன. செய்யுளிலக்கணம் பிழையாமல் ஆங்காங்கு அழகிய சொற்றொடர்களை அமைத்து நூலைச் செய்திருக்கிறார் ஆசிரியர். பாடல் தோறும், நாள், கோள், கிழமை, ராசி முதலியன வர வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தும், தளை தட்டாது நேரிசை வெண்பா அமைய வேண்டிய கட்டுப்பாடு இருந்தும், இவர் இவ்வாறு பாடியிருப்பது மிகவும் சிறப்பு. பல வகையான புதிய சொல்லாட்சிகள் இவரிடம் காணப்படுகின்றன. உதாரணம் எழுச்சி என்ற சொல்லை எங்குமே ஏட்சி அல்லது எட்சி என்று இவர் எழுதுகிறார். பல பாடல்கள் மகடூஉ முன்னிலையாக உள்ளன. 'சேலனைய கண்மடவாய்' என்ற தொடர் பலமுறை வருகிறது; இவ்வாறு பாடுவது சைனருக்கு ஓர் இயல்பு என்பது முன்னமே விளக்கப்பட்டது.

நூற்பொருளை நோக்கும் போது, இது வாழ்க்கையின் பல பகுதிகளையும் நன்கு தழுவியிருப்பது புலப்படும். பிற்காலத்தில் இலக்கண இலக்கியம் சமயம் என்ற துறைகள் அன்றிப் பிற துறைகளிலும் நூல்கள் எழத் தொடங்கின என்பதற்குச் சினேந்திர மாலையும், அடுத்த நூற்றாண்டில் கணிநூலும், சிறந்த எடுத்துக்காட்டுக்களாகும்.

சினேந்திரன் - அருகன்; 'எண்வகைக் கன்மங்களையும் சயித்தவன்' என்பர் அடியார்க்கு நல்லார். (சிலப்பதிகார வுரை, 10 : 177.)

**காலம்**

சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையுரையில் அரும் பதவுரை யாசிரியர், 'வட்டப்பாலை வருமாறு' என்றெழுதி, அதன்கீழ் மூன்று வெண்பாக்களைத் தருகிறார். முதல் வெண்பா பின்வருவது:

**ஆழியும் ஆரும்போற் கீறிச் சிறுதிசைக்கண்**
**ஊழின் ஓரோவொன் றுடன்கீறிச் - சூழ**
**வெருதாதிக் கீழ்த்திசைக்கொண் டீராறும் எண்ணிக்**
**கருதி நிலக்கயிற்றைக் காண்.**

இப்பாடல் மட்டும் சினேந்திரமாலையில் ஆரூட சக்கரம் பகுதியில் முதல் பாடலாகக் காணப்படுகிறது. இதே பாடலைச் சிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியரும் எடுத்துக் காட்டுகிறார். அரும்பதவுரைகாரர் காலம் 11ஆம் நூற்றாண்டாதலால், அவர் மேற்கோள் காட்டுகின்ற இந் நூல் ஒரு நூறு ஆண்டு முற்பட்டதாயிருக்கலாம்; 10ஆம் நூற்றாண்டாகும் என்று கருதுகிறோம்.

மற்றொரு கருத்தும் சொல்லத்தக்கது. படை வரவு, மரக்கல வரவு என்ற பகுதிகள் சொல்லப்பட்டுள்ளமையால் படைகளும் மரக்கலங்களும் அதிகம் வழங்கிய காலத்தில் இந்நூல் செய்யப்பட்டதென்று கருதுதல் பிழையாகாது. முதல் இராசராசன் இராசேந்திரன் காலங்களில் சோழரது கப்பற்படை கடல் கடந்து சென்று கடாரம் முதலான பிற நாடுகளை அடிப்படுத்திற்று. எனவே, படையும் மரக்கலமும் பற்றித் தனி நூற்பகுதிகளை அமைத்துள்ள இந்த ஆசிரியர், இச்சோழ மன்னர் மிக்க சிறப்போடு ஆண்ட காலத்தவர் என்று கருதுதல் பொருந்துவதே. ஆதலால் அரும்பத வுரையாசிரியருடைய குறிப்பினால், இவர் 11ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் என்று அறியும்போது, இவர்

காலம் பத்தாம் நூற்றூண்டின் இறுதிப்பகுதி என்று நூற் பொருளாலும் கொள்வது பொருந்துவதே.

### உரை

இந்நூலுக்குப் பழமையாகவே ஓர் உரை உண்டு. நூலில் குழூஉக்குறிகள் பலவாதலால், அவற்றைத் தெரிந்து எழுதுகின்ற பழைய உரை இல்லையானுல், இன்று பொருள் காண்பது அருமை. உரை செய்தார் யார், காலம் யாது என்பன விளங்கவில்லை. எங்குமே இவ்வுரை சுருக்க வுரையாயும் கருத்தைச் சுட்டிச் சொல்வதாயும் உள்ளது. சில இடங்களில் மட்டும் விரிவாகப் பொருள் விவரிக்கிறது. இவர் ஆரூடப் பாடல்கள் ஆறுக்கும் 104 சக்கரங்கள் கீறிக் காட்டியிருக்கிறுர். மேலும், நூலுக்கு அவசியம் என்று தாம் கருதியவற்றைக் கூறுகின்ற ஓர் ஆசிரிய விருத்தம் புதிதாய்ப் பாடிச் சேர்த்து, அதற்கான சக்கரங்கள் 122ம் கீறிச் சேர்த்திருக்கிறுர்.

### பதிப்பு

"உபேந்திராசாரியர் என்னும் சைன மாமுனிவர் செய்தருளிய சினேந்திர மாலை மூலமும் உரையும் – தஞ்சை தி. சாமிநாத சோதிடர் பார்வை"; சென்னை இரத்தின நாயகர் வெளியீடு; பல ஆண்டுகள்.

## திரையக் காணம்

இப்பெயருடைய நூலொன்றை யாப்பருங்கல விருத்தி யுரைகாரர் எடுத்துக் காட்டுகிறுர். ஒழிபியலில் நிரல் நிறைக்குப் பல பிரிவுகளைச் சொல்லுகிறுர். அவற்றுள் சோதிட நூல் பற்றிய பாடல்களையும் காட்டுகிறுர். இவற்றைச் சோதிட வல்லார் ஆராய்ந்தால் பெரும் பயன் உடையதாய் இருக்கும்.

செய்யோன் செழும்புகரோன் தெள்ளியோன் தேய்கதிரோன்
வெய்யோன் புதன்வெளியோன் வென்றிசெய்
- பொய்யாப்பொன்
சொல்லாச் சனிகாரி தேவர்கோன் மந்திரியே
இல்காற் கிறைவரா வார்.

சேய்புகர் மால்மதி யாளுமுன் ஞளினேக்
காய்கதிர் மால்பகர் சேயிடை நாளினே
மாசறு பொன்சனி காரிபொன் ஞங்கடை
யாசறு நாள்களே யஞ்சக ஓணே.

*இது பன்னிரண்டு பொருணிறுவி ஒழிந்தவற்றை ஆதியுங் கடையுங் கொள்ளாது ஓரிராசிக்கும் காலுக்கும் இறைவர் என்று பேர் குறியாது சொன்ஞராயினும் மேட முதலாகிய இராசியென்று மேடத்தின் முதற்காலும், முதஞளின் முதற் காலும் என்று உய்த்துணர வைத்தமையான் உய்த்துணர் நிரனிறை. அஞ்சகம் ஒரு நாளுக்கு நாலு காலாக வொட்டிக் கொள்க.*

பூமன் தெறுகதிரோன் பொன்காரி யொண்புகரோன்
வாமப் புதன்வெளியோன் மாமந்தன் - சோமன்சேய்
சந்திரனே செவ்வாய் சதமகன்றன் மந்திரியே
யந்திரையக் காணமாள் வார்.

ஆடரிவி லாதிநடு வந்தமுறை
சேயிரவி யம்பொனியலும்
சேடிசுற வேறுசனி வெள்ளிபுத
னள்ளுமெறி தேள்வலவன்மீ
ஞேடுமுயல் திங்களிஞெ டங்கிகுரு
வுண்டலுணர் தண்டு துலேநீர்
மூடுகுட மோடுபுகர் காரிபுத
னேரிதனே யுண்ஞு முறையே.

இவையும் உய்த்துணர் நிரனிறை. இவ்விரண்டும் திரையக் காணம் ஓரிராசி மும்மூன்றாக ஓட்டிக் கொள்க.''

இதுபற்றிச் சில சொற்கள் கூறத்தகும். திரையக் காணம் என்ற சொல்லின் திருத்தமான வடிவம் திரேக்காணம். இது ஓரிராசியில் மூன்றின் ஒருபாகம் என்ற சோதிட நூல் கூறும். மும்மூன்றாக ஓட்டிக்கொள்க என்று சொல்வது முழு இராசியைப் பெறுவதற்காகப்போலும். இப்பெயருடைய நூல் ஒன்று இருந்தது என்று கருதலாம். கடைசி இரண்டு பாடல்களையும் இந்நூலுக்குரியனவாக உரைகாரர் கூறுகிறார். முதல் இரண்டு பாடல்களிலும் பின் இரு பாடல்களிலும் வெண்பா ஒன்றையும் சந்தவிருத்தம் ஒன்றையும் காட்டுகிறார். முன்னிரு பாடல்களிலும் விளக்கிச் சொல்லி அடுத்த இரண்டையும் விளக்காமல் இவையும் உய்த்துணர் நிரல் நிறை என்றெழுதுகிறார். எழுதும் முறையினால் நான்கு பாடல்களுமே திரையக்காணம் என்று கருதுகிறோம். இரண்டு வெண்பாப் பாடல்களிலும் தேவர்கோன் மந்திரியே, சதமகன் தன் மந்திரியே என்று வருவதும் காணத்தக்கதே. மூன்றாம் பாடலில் திரையக் காணம் என்று வருவதும் திரேக் காணம் என்று இருத்தற்குரியது. சந்தப் பாடல்கள் இரண்டும் அழகாக உள்ளன. இங்கு இராசி, கிழமை, கோள் என்ற மூன்றையும் சோதிட நூலுக்குப் பொருந்த அமைத்து, இவர் பாடியிருப்பது பெரிதும் வியக்கத்தக்கதே. இந்நூல் பற்றி வேறு எச்செய்தியும் தெரிந்திலது.

வீரசோழிய உரைகாரரான பெருந்தேவனார் பெரும் பகுதி யாப்பருங்கல விருத்தி மேற்கோள் பாடல்களை எடுத்துத் தருகிறார். பின் வருவன அவர் காட்டும் ஒரு சோதிட நூற்பாடல்கள். இவை விருத்தியுரையினுள் காட்டப்பெறவில்லை. திரையக்காணத்தை விருத்தி காட்டு வதால், இப்பாடல்களும் இன்றி விவாத திரையக் காணத்துக் குரியனவாகலாம் :

செவ்வாய் புகர்புந்தி திங்கட் கதிர்புந்தி
செவ்வாய்பொன் காரிசனி மந்த்ரிசெவ்வாய் - வெவ்வாயும்
மேடமுதல் ஈராறு வீட்டுக் கிறையென்று
நீடாய்ந்து சொன்ஞர் நிலத்து.

மன்னுதனுச் சோதி மகரமீ னம்செவ்வாய்
பன்னுமிவற் ரேடொன்றிப் பார்திகழ்ந்த - நின்னுடைய
ஊனமிலா வாண்முகமாய் ஒண்மதியொன் றுண்டாகில்
ஏனமதி தன்ஞலிங் கென் ?

## தேசிக மாலே

*இப்பெயருடைய நூலொன்றை யாப்பருங்கல விருத்தி யுரையாசிரியரும் குணசாகரரும் குறிப்பிடுகிருர்கள். "பன் மணிமாலேயும், மும்மணிக் கோவையும், உதயணன் கதையும், தேசிக மாலேயும் முதலாகவுடைய தொடர்நிலேச் செய்யுட் களும் அந்தாதியாய் வந்தவாறு கண்டு கொள்க' என்பது விருத்தி. மும்மணிக்கோவைகள் பல உள்ளன, (11ஆம் திருமுறை). பன்மணி மாலே என்ற நூல் இல்லே. (17ஆம் நூற்ருண்டு நூலே இன்று உள்ளது.) மற்று, தேசிகமாலேயும் இன்று இல்லே. அது அந்தாதியாய் வந்த தொடர்நிலேச் செய்யுள் என்று இப்போது அறிகிருேம்.*

*யாப்பருங்கலக் காரிகையுரையில், குணசாகரர் தேசிக மாலேயை மறுபடியும் குறிப்பிடுகிருர். 'ஏழடியின் மிக்க பஃருெடை வெண்பாக்களே யாப்பருங்கல விருத்தியுள்ளும் தேசிக மாலே முதலியவற்றுள்ளும் கண்டு கொள்க' என்று அவர் எழுதுகிருர். இதஞல் தேசிகமாலே பஃருெடை வெண் பாக்களேயும் கொண்டது என்றும், இவ்வுரைகாரர்களுக்கு முந்திய காலத்தில் இது நன்கு தெரிந்த ஒரு நூலா யிருந்தது என்றும் நாம் அறிகிருேம். நூல் இப்பொழுது இல்லே; பஃருெடை வெண்பாக்களேக் கொண்ட நூல் எதுவும் இல்லே.*

இவ்விரு உரைகாரரும் இந்நூலைக் குறிப்பிடுவதால், இது இவர்களுக்கு முந்திய 10ஆம் நூற்றாண்டுக் காலத்துக்கு உரியது என்று கருதி இங்கே இக் குறிப்பைத் தந்திருக்கிறோம்.

## சாசனப் பாடல்கள்

அரசர்களாலும் அவர்களுடைய அதிகாரிகளாலும் பொறிக்கப்பட்ட சாசனங்களில் பல சமயப் பாடல்கள் காணப்படுகின்றன. பிரபந்த இலக்கியம் என்ற அத்தியாயத்தில் சிராமலை அந்தாதி என்ற நூலே இவ்வாறு மலைக்கோயில் கல்வெட்டிலிருந்து பிரதி செய்யப் பட்டது என்பதைக் கண்டோம். அப்படியே ஏழாம் நூற்றாண்டில் திருவிடைவாய் என்ற தலத்தில் இவ்வாறு கோயிலில் பொறிக்கப் பட்டிருந்த சம்பந்தர் பதிகமொன்று கிடைத்தது. இவை போக, தனிப் பாடல்களாகவும் தொடர்ந்த பாடல்களாகவும் சில கிடைத்தன. நாம் இங்கு ஆராயும் பத்தாம் நூற்றாண்டில் இவ்வாறு கிடைப்பன மிகச் சிலவே, மெய்க்கீர்த்தி என்ற தலைப்பில் கல்வெட்டிலிருந்து கிடைத்த இராசராச மன்னன் மெய்க்கீர்த்தியை முன்னமே குறிப்பிட்டோம். வேறு தனிப் பாடல்களாகக் கிடைப்பன பின்வருவன.

### அரும்பாக்கம்

கி. பி. 996; ஊரின் எல்லையைக் குறிப்பிடுவது.

இறைவன் அரும்பாக்கம் எல்லைக் கற்குட்டம்
முறைசேர் கோவில் முழைசுனை - பிறைநுதலாய்!
வெண்மாறங் கெல்லைமேல்பால் கறடவடவாறு கீழ்பால்
கண்ணத்தம் பாடியாம் காண்.

(இப் பாடல் யாப்பிலக்கணப்படி அமையவில்லை.)

**திண்டீச்சுர மண்டபம்**

*அதே காலம், புத்தன் இராசசிங்கன் என்பவன் இக் கோயில் முன் மண்டபம் கட்டிய வரலாறு :*

**சீராரும் தென்கிடங்கில் திண்டீச் சுரத்தானுக்கு**
**ஏராரும் கல்மண் டபமெடுத்தான் - பாராரும்**
**பொன்னனை பூமகள்சேர் புத்தன் இராசசிங்கன்**
**என்னனை ஆறையா ரேறு.**

*'இவ்வூர்க் கடம்புழான் புத்தன் இராசசிங்கன் அக முடையாள் கண்ணன் அருஞ்சிகைப் பிராட்டி வைத்த நந்தா விளக்கு இரண்டினுக்கு விட்ட சாவா மூவாப் பேராடு நூற்றெண்பது' என்பது மற்ரெரு சாசனம்.*

**குகாநாதசுவாமி கோயில்**

*கன்னியாகுமரியருகே இராசராசன் கட்டிய இராச ராசேச்சுரம் என்ற பழம் பெயருடைய கோயில். இங்கு அமைச்சன் மங்கலக்கால் ஐயனம்பி என்பவன் தண்ணீர்ப் பந்தல் அமைத்ததைப் பாடல்கள் கூறுகின்றன :*

**தெண்டிரைநீர்த் தென்குமரி மாநகர்த்தண் ணீர்ப்பந்தல்**
**எண்டிசையும் ஏத்த இனிதமைத்தான் - விண்டயரும்**
**ஐந்தெரிய லான்ஐய னம்பி அடல்வலவன்**
**மந்திரிதென் மங்கலக்கால மன்.**

**மானமிக்க வேலையன் மங்கலக்கால் தென்குமரி**
**தானமைத்த பந்தலில்தண் ணீரட்டத் - தேனிரைத்த**
**மைத்தங்கு சோலை மணற்குடியி லேவைத்தான்**
**நித்தம் பதிஞழி நெல்.**

## பிடவூர் வேளார் தந்தை

இப்பெயர் கொண்ட புலவர் ஒருவர் இருந்து திருமால் மீது ஒரு பதிகம் பாடினுர் என்று சாசனங்களால் அறிகிறேம். முதலாம் இராசராச சோழனது பத்தாம் ஆட்சியாண்டில் (கி. பி. 995) தொண்டை நாட்டுத் திருமாற்பேறு என்ற திருமலாபுரம் என்னும் இக்காலப் பெயருடைய ஊரில் உள்ள சாசனம் ஒன்று இதைக் கூறுகிறது. குளக்கொடையான் அருள்நிலை ஸ்ரீ கிருஷ்ணன் மூவேந்தர் பிடவூர் வேளார் என்ற பெயர்பெற்ற ஒரு தலைவர் தம் தந்தை அக்கோயிலில் கோயில்கொண்ட கோவிந்தப்பாடி யாழ்வார் என்ற பெயருடைய திருமாலுக்குப் பாடிய 'கோலநற் குழல்' என்ற பதிகத்தைத் தினமும் கோயிலில் ஓதும்படி நிபந்தம் அளித்தார் என்பது சாசனம். இந்த வேளார் ஒரு சோழ அதிகாரி. பிடவூர் வேள் மரபினர். முடியுடை வேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளர் என்று நச்சினர்க்கினியர் கூறுகிருர். குளக்கொடையார் என்பது கார்காத்த வேளாள கோத்திரப் பெயர். இத் திருமாற் பேறு – மங்களாசாசனம் பெருத தலம். நாயன்மாரால் பாடப் பெருத சில சிவ ஸ்தலத்துக்குப் பண்டைக் காலத்திலேயே அடியவர் பலர் பதிகம் பாடியிருக்கிருர்கள். திருமால் ஆலயத்தில் இவ்வாறு பாடியது அருமை. இப்பதிகம் ஒரு சிறப்பான பதிகம் என்பதில் ஐயமில்லை; ஆனுல் இன்று கிடைக்கவில்லை.

இவர் மகன் நிபந்தம் அமைத்த காலம் 995 ஆதலால் இப் புலவர் காலம் 10ஆம் நூற்றுண்டென்பது தெளிவு,

## மெய்க்கீர்த்தி

பேரரசனது மெய்ப் புகழை எடுத்துக் கூறுவது மெய்க்கீர்த்தி. பொதுவாக இது சோழ மன்னருடைய சாசனங்களின் தொடக்கத்தில் அரசனுடைய இத்தனை யாவது ஆட்சியாண்டு என்று கூறுமிடத்து அமைக்கப்

*பெறும். சிறப்பாக அவனுடைய போர் வெற்றிகளையும் வரலாற்றையும் முறையாகக் கூறி, அவ்வரசன் தன் தேவியோடு வீற்றிருந்து நீடு வாழ்க எனக் கூறி, பிறகே சாசனம் எழுந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடும். பத்தாம் நூற்றுண்டில் ஆராயப்பெற்ற பன்னிரு பாட்டியல் என்ற முதல் பாட்டியல், மெய்க்கீர்த்தி பற்றி இரு நூற்பாக்களைத் தருகிறது:*

**சீர்நான் காகி இரண்டடித் தொடையாய்,**
**வேந்தன் மெய்ப்புக ழெல்லாம் சொல்லியும்,**
**அந்தத் தவன்வர லாறு சொல்லியும்,**
**அவளுடன் வாழ்கெனச் சொல்லியும், மற்றவன்**
**இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்**
**திறம்பட உரைப்பது சீர்மெய்க் கீர்த்தி.**
**நிலைபெறு சீர்மெய்க் கீர்த்தியின் அந்தம்**
**உரையாய் முடியும் என உரைத்தனரே.**

*இதையே பின் வந்த வச்சணந்தி மாலை, 'தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற் சீரடியால் – எழிலரசர் செய்தி இசைப்பர்' (57) என்று சுருக்கிச் சொல்கிறது.*

*சோழ மன்னர் பரம்பரையில் மெய்க்கீர்த்தியோடு சாசனங்களைப் பொறிக்கும் வழக்கம் நெடுநாள் இருந்ததில்லை. முதல் இராசராசனுடைய எட்டாம் ஆண்டில்தான் மெய்க்கீர்த்தி காணப்படுகிறது (கி. பி. 993). இதன்கண் வமிச பாரம்பரியம் விதந்து ஓதப்படவில்லை; ஏனைய பகுதிகள் உள்ளன. எனினும் இது மிகவும் சுருக்கமாகவே உள்ளது. இன்னும் பின் வந்த மெய்க்கீர்த்திகள் வமிச பரம்பரையை மிகவும் விரித்துக் கூறியுள்ளன. வீர ராசேந்திரன் மெய்க்கீர்த்தி யொன்று 224 அடிகள் கொண்டது. மெய்க்கீர்த்தி பொதுவாக அகவலோசையும் கலி ஓசையுமே அமையச் செய்யப்பெறும்.*

*இராசராசன் ; மெய்க்கீர்த்தி பின்வருவது 14 அடிகளை கொண்டது :*

திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி
வேங்கை நாடும் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலை நாடும் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழில் சிங்களர் ஈழமுண் டலமும்
இரட்ட பாடி யேழரை யிலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீ ராயிரமும்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
எழில்வள ரூழியுள் எல்லா யாண்டும்
தொழுதக விளங்கும் யாண்டே, செழியரைத்
தேசுகொள் கோ ராசகேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராசராச தேவர்க்கு யாண்டு.

## தனிப் பாடல்கள்

*இலக்கிய ஆராய்ச்சியில் பல சமயம் பெரும் சுவை தருவன தனிப் பாடல்கள். நூலாசிரியர்களும் உரையாசிரியர்களும் மக்களும் சுவை மிக்க பழம் பாடல்களை நன்கு போற்றி வந்திருக்கிறூர்கள். சொற் சுவையும் பொருட் சுவையும் மிக்கனவாகிய இரட்டையர் பாடல்களும் காளமேகம் பாடல்களும் கற்றூரும் மற்றூரும் நினைவில் வைத்துச் சொல்லி வந்து பின்னர்த் தொகுக்கப்பெற்ற பாடல்களேயாகும். இவ்வாறு காலந்தோறும் நன்கறியப் பட்ட பாடல்களுள் பல, உரையாசிரியர்களால் மிகவும் போற்றித் தங்கள் உரைகளுள் பொதிந்து வைக்கப் பட்டுள்ளன. யாப்பருங்கல விருத்தியுரைகாரர் வீரசோழிய*

உரைகாரரான பெருந்தேவனுர், தொல்காப்பிய உரைகாரர்கள், சிலப்பதிகார உரைகாரர்கள் போன்ருேர் இத்துறையில் பெருஞ்சேவை செய்திருக்கிருர்கள். எடுத்துக்காட்டாக ஒன்று சொல்லலாம். அடியார்க்கு நல்லார் உரையில்லையானுல், முத்தமிழினுள், இசைத் தமிழும் நாடகத் தமிழும் எவ்வளவு விரிவாக வளர்ந்திருந்தன என்பதை அறிவதற்கு வழியே இல்லை.

இவ்வாறு நோக்கும்போது, உரையாசிரியர்கள் தரும் மேற்கோள் பாடல்கள் முன் இருந்து பின் இறந்துபோன நூல்களைப்பற்றி அறியவும், முன் இருந்த இலக்கிய நிலையை அறியவும் பெருந் துணையா யுள்ளன. எனினும், அத்தகைய பாடல்கள் பலவற்றின் காலம் திட்டமாய்த் தெரியாமையால், அவை இன்ன நூற்ருண்டுக்குத்தான் உரியவை என்று வரையறை செய்து குறிப்பிட இயலவில்லை. இருப்பினும், அவ்வாறு காலம் தெரியவந்த ஒரு நீண்ட பாடலை மட்டும் இங்குக் குறிப்பிடுவோம்.

**சுந்தரச் சோழன்**

இராசகேசரி சுந்தரச் சோழன் என்பவன் 957–970 இல் ஆட்சி புரிந்தான்; இரண்டாம் பராந்தகன் என்றும் சொல்லப் பெறுபவன், இராச ராச மன்னனுடைய தந்தை. சோழ மன்னர் பொதுவாகக் கறுப்பு நிற முடையவர்கள்; இவன் மட்டும் சிவப்பு நிறமாயிருந்தமையால் சுந்தரச் சோழன் எனப்பட்டான். இவனைப் போற்றும் நீண்ட கலிப் பாடலொன்று, யாப்பருங்கல உரையிலும் வீரசோழிய உரையிலும் தரப்பட்டுள்ளது. பாடலானது, 'பழையாறை மன்னர் சுந்தரச் சோழனுடைய வண்மையும் வனப்பும் திண்மையும் உலகிற் சிறந்து வாழ்க' என்று போதி நிழலிலமர்ந்த புத்தனைப்

*பரவுகிறது. இப்பாடல் தனிப் பாடலா, வேறு நூலில் உள்ளதா என்பது விளங்கவில்லை. இதைச் செய்தவர் புத்த சமயத்தில் சிறந்த பக்தர் என்பது தெரிகிறது. சுந்தரச்சோழர் வாழவேண்டும் என்று இவர் தம் தெய்வத்தை வணங்குவதால் அரசனிடம் எவ்வளவு பக்தி கொண்டவர் என்பது விளங்கும். இதனோடு, மன்னனுடைய பரந்த சமய நோக்கத்தையும் இது நன்கு புலப்படுத்துகிறது :*

மண்வாழும் பல்லுயிரும் வான்வாழும் இமையவரும்
கண்வாழ மாநாகர் கிளையனைத்துங் களிகூர,
அந்தரதுந் துபிஇயங்க, அமரர்கள் நடமாட,
இந்திரர்பூ மழைபொழிய, இமையவர்சா மரையிரட்ட,
முத்தநெடுங் குடைநிழற்கீழ் மூரியர சரியணைமேல்
மெய்த்தவர்கள் போற்றிசைப்ப வீற்றிருந்த ஒருபெரியோய் ;

*தரவு.*

எறும்புகடை அயன்முதலா எண்ணிறந்த வென்றுரைக்கப்
பிறந்திறந்த யோனிதொறும் பிரியாது சூழ்போகி,
எவ்வுடம்பில் எவ்வுயிர்க்கும் யாதொன்றால் இடரெய்தின்
அவ்வுடம்பின் உயிர்க்குயிராய் அருள்பொழியுந் திருவுள்ளம்;

அறங்கூறும் உலகனைத்தும் குளிர்வளர்க்கு மழைமுழக்கின்
திறங்கூற வரைகதிரும் செழுங்கமலம் நனிநாண,
ஒருமைக்கண் ஈரொன்பான் உரைவிரிப்ப உணர்பொருளால்
அருமைக்கண் மலைவின்றி அடைந்ததுநின் திருவார்த்தை;

இருட்பார விளைநீக்கி எவ்வுயிர்க்கும் காவலென
அருட்பாரந் தனிசுமந்த அன்றுமுதல் இன்றளவும்
மதுவொன்று மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும்
பொதுவின்றி நினக்குரித்தோ புண்ணியநின் திருமேனி.

*இவை மூன்றுந் தாழிசை.*

ஆருயிர்க ளனைத்தினையுங் காப்பதற்கே அருள்பூண்டாய்
ஓருயிர்க்கே உடம்பளித்தால் ஒப்புரவிங் கென்னாகும்?
தாமநறுங் குழன்மழைக்கட் டளிரியலார் தம்முன்னர்க்
காமனையே முனைந்துலைத்தாற் கண்ணோட்டம் யாதாங்கொல்?

அம்போதரங்கம் பேரெண்.

போரரக்க ரோரைவர்க் கறவமிழ்தம் பொழிந்தனையே;
ஆரமிழ்த மணிநாகர் குலமுய்ய அருளினையே;
வார்சிறைப்புள் ளரையற்கும் வாய்மைநெறி பகர்ந்தனையே;
பார்மிசை யீரைந்தும் பாவின்றிப் பயிற்றினையே!

சிற்றெண்.

அருளாழி நயந்தோய் நீஇ; அறவாழி பயந்தோய் நீஇ;
மருளாழி துரந்தோய் நீஇ; மறையாழி புரந்தோய் நீஇ;
மாதவரின் மாதவ னீஇ; வானவருள் வானவ னீஇ;
போதனரிற் போதன னீஇ; புண்ணியருட் புண்ணிய னீஇ;

ஆதி நீஇ; அமல னீஇ; அயனு நீஇ; அரியு நீஇ;
சோதி னீஇ; நாத னீஇ; துறைவ னீஇ; இறைவ னீஇ;
அருளு நீஇ; பொருளு நீஇ; அறிவ னீஇ; அனகனீஇ;
தெருளு நீஇ; திருவு நீஇ; செறிவு நீஇ; செம்மல் நீக;

இடையெண்.

எனவா, அங்கு

தனிச்சொல்

பவளச் செழுஞ்சுடர் மரகதப் பாசடைப்
பசும்பொன் மாச்சினை விசும்பகம் புதைக்கும்
போதியந் திருநிழற் புனித! நிற் பரவுதும்:
நந்திபுரி மன்னர் சுந்தரச் சோழர்
மேதகு வண்மையும் வனப்பும்
திண்மையும் உலகிற் சிறந்து வாழ்கெனவே.

சுரிதகம்.

*இப்பாடல் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவுக்குக் காட்டு. மற்றொரு பாடலும் வீரசோழிய உரையில் காணப் படுகிறது :*

**இந்திரன் ஏறக் கரியளித்தோர்பரி ஏழளித்தார்**
**செந்திரு மேனித் தினகரற், சிவனூர் மணத்துப்**
**பைந்துகி லேறப் பல் லக்களித் தார்பழை யாறைநகர்ச்**
**சுந்தரச் சோழரை யாவரொப் பார்கள்இத் தொன்னிலத்தே.**

*பொதுவாக அரசரைக் குறிப்பிடுமிடத்துப் படர்க்கை யொருமையிலே சொல்வது இலக்கிய மரபு; இப் பாடல்களில் படர்க்கைப் பன்மையில் குறிப்பிட்டிருப்பது கருதத்தக்கது.*

# இலக்கியமல்லாத பண்டைப் பிறவகை நூல்கள் அட்டவணை

| எண் | நூற் பெயர் | ஆசிரியர் | பொருள் | பாடல் தொகை | விளக்கம் | காலம் நூ. |
|---|---|---|---|---|---|---|
| 1 | திரையக்காணம் * | — | சோதிடம் | — | நூல் இல்லை : யா. வி. குறிப்பு | 10 |
| 2 | சினேந்திர மாலை | உபேந்திராசாரியர் | ஆருடம் | 464 | பழைய உரை உண்டு சிலப்பதிகார அரும்பத வுரைக் குறிப்பு | 10 |
| 3 | கனு நூல் | பொன்னவன் | கனு | 30 | அடியார்க்கு நல்லார் குறிப்பு | 11 |
| 4 | ஓவிய நூல் * | — | ஓவியம் | — | நூல் இல்லை. அடியார்க்கு நல்லார் | 11 |
| 5 | சூடாமணி உள்ள முடையான் | திருக்கோட்டியூர் நம்பி | சோதிடம் | 446 | பழைய உரை; காலக் குறிப்பு உண்டு | 12 |
| 6 | சித்தராருடம் | — | விஷ நூல் | 312 | நச்சினார்க்கினியர் குறிப்பு | 13 |
| 7 | சரசோதி மாலை | போசராசர் | சோதிடம் | | காலக் குறிப்பு உண்டு | 14 |
| 8 | கணக்கதிகாரம் | காரி | கணக்கு | | பாடல், விளக்கம், உரை | 15 |
| 9 | வைத்திய நூல்கள் மிகவும் பல | தேரையர் | வைத்தியம் | | | 15 |
| 10 | கொக்கோகம் | வரதுங்கராம பாண்டியர் | காம நூல் | | உரை உண்டு | 16 |
| 11 | கஜவிதி நூல் † | பாலகரிஷி | யானை நோய் | 55 | | 16? |
| 12 | அசுவ வைத்தியம் † | கொற்கை-குணராசசூரியன் | குதிரை நோய் | 20 | உரையுடன். அபூர்த்தி | 17 |
| 13 | சாதக சிந்தாமணி | தில்லைநாயகன் | சோதிடம் | | | 17 |
| 14 | மனையடி சாஸ்திரம் | மயன் ? | மனைச்சிற்பம் | 300 | பாடல் உரை விளக்கம் | 18 |

* இக்குறியிட்ட நூல்கள் இன்று இல்லை. † இக்குறியிட்ட நூல்கள் அச்சாகவில்லை.

அத்தியாயம் 14

# உரை நடை

## முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாறு முழுமையுமே செய்யுள் நூல்களின் வரலாருக இருக்கிறது. இருபதாம் நூற்ருண்டில்தான், உரைநடை என்னும் வசனமும் இலக்கியமாகும் என்ற கருத்து புலவரிடையில் ஏற்கப்பட்ட கருத்தாகி யிருக்கிறது; இதற்கு முக்கிய காரணம், உலக நாடுகளின் தொடர்பும், வாழ்க்கை நெறிகள் வளர்ந்து போகும் வேகமும், எல்லோருக்கும் முன்னேற்றம் என்ற சமுதாய உணர்வும், எழுத்தறிவு பெருக வேண்டும் என்ற முயற்கியுமாகும். இந்த நூற்ருண்டில் எல்லாம் எழுதப் பெறுகிறது; அழகுடையது இல்லாதது, மெய் பொய், ஆசாரம் துராசாரம், அறிவுக்கு விருந்து அறிவுக்குப் புறம்பு – ஆகிய எல்லாம் எவ்வித வேறுபாடும் இல்லாமல் எழுத்து வடிவம் பெறுகிறது.

ஆனல் சென்ற நூற்ருண்டு வரையில்கூட, நிலைமை இவ்வாறில்லை. அழகையும் அறிவையும் அனுபவித்தபோது, அறிஞர் அவற்றை அழகான சொல் வடிவத்தில் அமைத்து, தாங்கள் நினைத்துப் பார்ப்பதற்கும் பிறருக்கு உணர்த்துவதற்கும் அவற்றை இடமாய்க் கொண்டார்கள். அழகும் அறிவும் பொருந்தாதவற்றை அவர்கள் நிலைத்த பொருளாய்க் கொள்ளவில்லை. நிலைத்த பொருளையே அவர்கள் எழுதி வைத்தார்கள். நிலையில்லாத பொருளை அவர்கள் எழுதி வைக்க எண்ணியதில்லை. கவிதை அழகனுபவத்துக்கும் அறிவுக்குமென்றே ஏற்பட்டது. இலக்கியமல்லாத பல

துறை நூல்களையும் முந்தையோர் செய்யுளாகப் புனைந்து வைத்ததன் கருத்து, அறிவின் பெருக்கமே.

பண்டைக் காலத்தில் கற்ற பொருள்கள் யாவும் எப்போதுமே மனத்தில் நிற்கவைக்குமாறு கற்றோர் பழகியிருந்தார்கள். கற்ற பொருள் மனத்தில் நிற்கவைப்பதற்குச் சிறந்த சாதனம் பாட்டு. பாட்டானது, தன்னிடத்து அமைந்த சொற்செட்டினாலும், சந்த அமைப்பினாலும், ஓசை நயத்தாலும், எதுகை மோனைத் தொடையாலும் கற்றவர்கள் மனத்தில் மறந்துபோகாமல் நின்றது. பாட்டுக்கு ஒரு வடிவம் உண்டு. இத்தனைத் தன்மைகளும் சேர்ந்து பாட்டை மறக்க முடியாத ஓர் ஓவியமாக எப்போதுமே கண்முன்னே நிறுத்தியிருந்தன. இதுகாரணம் பற்றித்தான் புலவர்கள் எதையும் பாட்டாகப் பாடினார்கள். இதற்கு ஒரு நல்ல உதாரணம் சொல்வதானால் நிகண்டைச் சொல்லலாம். நிகண்டின் பொருள் அகராதியாகும். சொல்லின் பொருள் அனைத்தையும் ஒன்றாகத் திரட்டி மனத்தில் மனப்பாடம் செய்துவைத்திருப்பது எவராலுமே முடியாத காரியம். ஆனால் அத்தனைப் பொருள்களையும் சேர்த்துத் தொடை நயமுடைய ஒரு பாட்டாகச் செய்துவைத்தால், அதை மனப்பாடம் செய்வது அனைவருக்கும் இயலக்கூடிய ஒரு காரியமே.

அன்றியும், நூல்களின் யாப்பும் காலந்தோறும் மாறிக் கொண்டு வருவது மனப்பாடம் செய்தல் என்ற இந்தக் கருத்துக்கு ஓரளவு துணை செய்வதாகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழ் மக்கள் தொகை குறைவு. கற்றோர் தொகை குறைவு. அவர்கள் செய்திருந்த நூலும் குறைவு. அக்கால நூல்கள் ஆசிரியப்பாவில் செய்யப் பெற்றிருந்தன. ஆசிரியப்பாவில் மனப்பாடம் செய்வதற்கான சாதனங்கள் குறைவு. காலம் செல்லச் செல்ல மக்கள் தொகை பெருகிற்று. கற்றோர் தொகையும் பெருகிற்று.

நூல்களும் பெருகின. நூல்களின் யாப்பும், ஆசிரியப்பாவிலிருந்து வெண்பா என்றும், கட்டளைக் கலித்துறை என்றும் நெகிழ்ந்து நெகிழ்ந்து சென்று, இறுதியில் விருத்தப் பாவில் போய் நின்றது. விருத்தப் பாவில் நெகிழ்ச்சியும், குழைவும், சந்தமும், வின்னியாசங்களும் அதிகம். இவை யாவும் மனப்பாடத்திற்குப் பெருந்துணை செய்தன. இந்த வளர்ச்சியை நிகண்டு, பாட்டியல், உவமானம் போன்ற தமிழ் இலக்கணப் பிரிவுகளில் நன்கு காணலாம்.

மற்ருெரு முக்கியமான அம்சம், எடுத்த பொருளைச் சொல்லும் முறை. பாட்டில் கருத்தைச் சொற்செட்டோடு அழகுபடுத்திப் புனைந்துரையாகவும் சுருக்கியும் விரித்தும் சுவைபடச் சொல்ல முடியும். எத்தனை முறை திருப்பித் திருப்பிச் சொன்னுலும் சோர்வு உண்டாகாது. ஆனல் வசனம் என்கின்ற உரைநடையானது இத்தன்மைகளில் ஒன்றையும் பெறவில்லை. அழகுபடுத்திச் சொல்வது இங்கு ஓரளவுதான் பொருந்தும். கற்பனைக்கு இங்கு இடம் மிகவும் குறைவு. கவிதைக்கு வடிவம் உண்டு. வசனத்திற்கு வடிவம் இல்லை. வடிவமுள்ளது மனத்தில் நிற்குமே தவிர, வடிவமில்லாதது மனதில் நிற்காது.

இத்தனைக் காரணங்களால் ஆதி நூல்கள் யாவும் கவிதையில் செய்யப்பட்டிருந்தன. அன்றியும், அக்காலத்தில் ஆழமான படிப்பு அதிகம். பிற்காலத்தில் படிப்பு விரிவடைந்த போது ஆழமும் அகலமும் குறைந்து போயின; நுனிப்புல் மேய்கிற நிலையில், கவிதை சுருங்கி உரைநடை பெருகத் தலைப்பட்டது.

மற்ருெரு காரணம் முக்கியமானது: இடைக் காலத்தில் அச்சுத் தொழில் இல்லை; காகிதம் இல்லை. நூல் எழுதிஞேர் தாம் ஓர் ஏட்டில் எழுதினர். அது சாதாரணப் பனை ஓலை

ஏடு; அல்லது சீதாளப் பனை ஏலை ஏடு. இதில் எழுத் தாணியால் திருத்தமாக எழுதுவதென்பது மிகவும் அழகான ஒரு கலைத் தொழில்; என்றாலும்கூட, மிகவும் கடினமான வேலை. மரத்திலிருந்து பக்குவமான ஓலையைத் தேர்ந் தெடுத்து வகிர்ந்து வெற்றேடாகத் தொகுத்துக் கொள்ளுதல் — அதுவே முயன்று செய்ய வேண்டிய ஓர் வேலை. ஏட்டில் எழுதுவதென்பது கடினம் என்பதுபோலவே, பார்த்து எழுதி வைத்துக் கொள்வதும் கடினமான வேலை. பலருக்குப் பல நூல்கள் தேவை என்றால், ஒவ்வொன்றையும் ஏடு ஏடாகப் பார்த்துக் கையால் எழுதிக் கொள்ளத்தான் வேண்டும். ஆகவே, எழுதுவதில் சிக்கனம் ஏற்படுவதற்காகச் சொற் செட்டை வேண்டி நூல்கள் பாட்டாகவே அமைந்திருந்தன. ஓர் ஆசிரியரிடம் பயின்ற மாணுக்கர் தங்களுக்கு வேண்டிய நூல்களைத் தாங்களே பார்த்து எழுதிக் கொண்டார்கள். ஆகவே நூல் என்பது அக்காலத்தில் மிகவும் அருமையாய்ப் போற்றி மிகவும் பாதுகாக்க வேண்டிய ஒரு பொருளாய் இருந்தது.

சுமார் பதினேழாம் நூற்றாண்டில் வேற்று மக்களின் கலப்பு தமிழ் நாட்டில் அரசியல் காரணமாக ஏற்பட்ட போது, கூடவே காகிதமும் அச்சுத் தொழிலும் புகுந்தன. மெல்லிய காகிதத்தில் இறகு பேனுவால் மசியைத் தொட்டு எழுதுவது எளிதாக இருந்தது. அச்சு முறையினால் ஒன்றைத் நூறுகப் பெருக்குவதும் எளிதாய் இருந்தது. ஆதலால், மனப்பாடம் செய்வது என்ற நிர்ப்பந்தம் மெல்லக் குறைய ஆரம்பித்தது. மனப் பாடத்திற்குத் துணையாக — பாட்டாகச் செய்ய வேண்டும் என்ற அவசியம் குறைய ஆரம்பித்தது. அழகும், அறிவும் ஒருபுறம் ஒதுங்க, முன்கூறியபடி பலவகைப் பொருள்களும் எழுத்து வடிவம் பெறலாயின. இதுவே உரை நடை பெருகுவதற்கான சூழ்நிலை ஆகும்.

இவ்வாறு சொல்லியதால், பண்டைக் காலத்தில் உரை நடை இல்லை என்பது பொருளாகாது. மக்கள் நாவில் எழுந்த நடையெல்லாம் உரைநடைதான். பேசிய பேச்செல்லாம் உரைநடைதான். ஆனுல் இவை அந்த முறையிலேயே எழுதி வைக்கப்பெறவில்லை.

இனி, தமிழ் இலக்கிய வரிசையைப் பார்ப்போமானுல், உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்ற ஓர் அமைப்பைக் காண்கிறேம். இங்குச் செய்யுள் என்பது ஒரு நூல். இந்நூலுள் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் பயின்றன: அதாவது பெரும் பகுதி பாட்டும், சிறு பகுதி உரைநடையும் இந்த நூலுள் கலந்து வந்தன என்பது பொருளாகும். நன்கு தெரிந்த மூன்று நூல்களை இங்குக் குறிப்பிடுவோம். முதலாவது சிலப்பதிகாரம். இது ஓர் உரையிடையிட்ட பாட்டிடைச் செய்யுள். இதில் வரும் உரைப் பகுதி மிகவும் குறைவு. அந்த உரையும், கவிஞர் முயன்று செய்கின்ற செய்யுளோசை பெற்ற உரைப்பகுதியே அன்றி, உண்மையாகவே மக்கள் நாவில் வழங்கிய உரைநடை அன்று. இரண்டாவது தகடூர் யாத்திரை. இந்த நூலும் உரைநடையைக் கொண்டிருந்தது என்று பண்டைய உரைகளால் அறிகிறேம். இந்த நூல் இல்லாமையால் இதுபற்றி ஆராய்ந்து சொல்ல முடியவில்லை. மூன்ருவது பாரத வெண்பா. இது பாட்டும் உரையும் சமஅளவு கலந்துள்ளதென்று கூறமுடியும். இங்கு, பாட்டானது பாத்திரங்களின் கூற்ருகவும், உரையானது வருணனைப் பகுதியாகவும், வரலாற்றுப் பகுதியாகவும் உள்ளன. இந்த உரைக்குப் பாட்டோடு ஒத்த பெருமை உரியது. இந்த உரை ஓரளவு பேச்சு வழக்காய் இருப்பதோடு, பாரதக் கதை என்ற தன்மையை ஒட்டி வடசொற்கள் அதிகம் பெய்யப்பெற்றும் இருக்கிறது. இருப்பினும், அதை அக்காலத்து வழங்கிய பேச்சு வழக்குக்கு

அல்லது கதை சொல்லுகின்ற வழக்குக்கு எடுத்துக்காட்டாக நாம் கருதமுடியும். முதற்பாட்டுக்கும் அடுத்த பாட்டுக்கும் இடையில் உள்ள வரலாற்றுத் தொடர்பைக் கூறுவதாக அமைந்திருக்கின்ற இந்த உரைப்பகுதி பெரும்பான்மையும் மிகவும் நீளமான ஒரே வாக்கியமாக அமைந்திருக்கிறது. இந்த நூலும் இன்று முழுமையும் கிடைக்கவில்லை. ஒரு சிறிய பகுதிதான் கிடைக்கிறது.

இவற்றை அடுத்து ஒரு நூலைக் குறிப்பிட வேண்டும்: அது சீவசம்போதனை என்ற சைன சமய நூல். வெண்பாவும் உரைநடையும் கலந்தது. இந்த உரைநடை பாட்டைவிட நீளமானது. இங்கு வடமொழிக் கலப்பு மிகவும் அதிகம். இருப்பினும் பொருட்போக்கு மிக்க சுவையுடையது. இதுபோலவே பதினைந்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட தனி உரைநடை நூலாகிய ஸ்ரீபுராணம் என்பது ஒரு சிறப்பான சைன சமய நூல். முழுமையும் உரைநடையில் அமைந்த முதல் நூல் என்று இதைச் சொல்வது பொருந்தும். இது மணிப்பிரவாள நடை. தமிழும் வடமொழியும் சமமாகக் கலந்து வடமொழி விகற்பங்களும் பொருந்திய தமிழ்ச் சொற்களை உடையதாய் இது செய்யப்பட்டுள்ளது.

இங்கு மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட வைஷ்ணவ சமய நூல்களைக் குறிப்பிட வேண்டும். பன்னிரண்டாம் நூற்றாண்டில் திருக்குருகைப்பிரான் எழுதிய திருவாய்மொழி ஆறாயிரப்படி தொடங்கி, வைணவ ஆசாரியரும் சீடரும் எண்ணற்ற நாலாயிரப் பிரபந்த உரைகளும் சமய நூல்களும் எழுதியிருக்கிறார்கள். அவற்றை எடுத்துப் பெயர் சொல்வதென்றாலும் இங்கு இடம் போதாது.

இங்கு இனி இந்த நூற்றாண்டில் தோன்றிய உரை நடையைச் சுட்டிச் செல்வோம். பத்தாம் நூற்றாண்டில் எழுந்த உரைநடை நூல்கள் இரண்டே. முதலாவது இறையனார்

களவியலுக்கு நக்கீரர் எழுதிய உரை. இது முன் செய்யப் பட்டிருந்த போதிலும்கூட, பத்தாம் நூற்றுண்டில்தான் எழுத்து வடிவத்தில் குறிக்கப்பட்டது என்று கருதுகிறேம். மற்றது, திருக்குறளுக்கு முதன்முதல் மணக்குடவர் செய்த உரையாகும். இவ்விரண்டு உரைகளேயன்றி வேறு எந்த இலக்கண உரையோ, இலக்கிய உரையோ முந்திய நூற்றுண்டுகளில் எழவில்லை; இந்த நூற்றுண்டிலும் செய்யப்பெறவில்லை. உரைநடைக்கு எடுத்துக்காட்டாகச் சொல்வதற்கு வேறெந்த உரையோ தனி நூலோ இல்லை. ஆத்திரையன் பேராசிரியன் தொல்காப்பியப் பொதுப் பாயிரம் செய்து உரையும் எழுதினர் என்று ஒரு வழக்குண்டு. அந்த உரையும் இக்காலத்தே செய்யப்பட்டது. இவற்றைக் குறித்து அடுத்துச் சில சொற்கள் சொல்லலாம்.

## இறையனர் களவியல் உரை

இது தனியே ஆறும் அத்தியாயத்தில் விரிவாய் ஆராயப் பெற்றுள்ளது. இவ்வுரை எழுதப் பட்டுள்ளது உரைநடையே யாயினும், செம்மையான செய்யுளோசை பெற்றுத் தமிழ்மொழியின் அழகெல்லாம் விளங்கப் புலப் படுத்தி நிற்பது. இதனுள் தனித்த இரு தன்மைகள் தெளி வாகத் தெரியும். ஒன்று வருணனைப் பகுதி – இதில் செய்யுளோசையும் இருக்கும். இது எதுகை மோனையும் அமைந்து, தமிழ் மொழியினிடத்தே ஒரு காதல் மயக் கத்தையே தோற்றுவிக்க வல்லது. இயற்கையின் எழில் நலமும் செயற்கை அணி நலமும் சொல்லின் செல்வமும் ஒருங்கு இழைந்து, தமிழிலக்கியப் பரப்பில் வேறெங்கும் காண்பதற்கரிய காட்சியாக அவ்வருணனை அமைகிறது: "அவள் தன்னைக் காணுமல் தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண், மஞ்ழக் கொண்டலுள் மின்னுப் புக்கு ஒளித்தாற்போல, ஒரு தழைப் பொதும்பரிடை மறைந்து நிற்கும் என்பது. அங்ஙனம் நிற்பத் தலைமகளும் தன்

குழற்கற்றைப் பொறையும் கோதையும் துயல்வரக், கொடியிடை நடுவுதளரப், பரவை அல்குல் துகில் அசையப், பைம்பொற்றோடு மின்னுப் படைப்ப, அரவ வண்டறையும் தாமரை அகவிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி மேற் செம்பொற் சிலம்பு அரற்ற, அன்னம்போல மென்மெல ஒதுங்கிக் காமவல்லிக் கொடியும் கற்பகக் கொழுந்தும் நடப்பதென நடந்து சென்று, அப்பனிவரைச் சாரல் அருகினது ஒரு மணியருவி மருங்கு ஓலுறுத்தப் பளிங்கு விளிம்பு அடுத்த நீலப் பைஞ்சுனை மருங்கினதோர் மரகதச் சிலா வட்டத்தயல் மாணிக்கச் சதுரப் பாறைமேல், தாது தவிசு படுத்த மாதவிப் பந்தர்ப் போது வேய்ந்த பூநாறு கொழுநிழல் இருந்தாள். இருந்தாளாகத் தாதும் தளிரும் போதும் மேதக்கனவற்றால் குறுங்கண்ணியும், நெடுங்கோதையும், விரவுத்தழையும், சூட்டுக்கத்திகையும், மோட்டு வலயமும், பிறவும் ஆகப்புனைந்து, வண்டும் தேனும் புடைமருட்ட, அடியுறையென ஏந்திப் பிரிந்த ஆயம்பெயர்ந்து எய்திப் போற்றும் பல்லாண்டும் கூறி நின்றார். நிற்ப, அவளும் தாரகை நடுவண் தண்மதி போல்வதோர் பொலிவினளாய்க் காட்டினாள். காட்டினாளைக் கண்டு, 'இவளை யான் எய்தினேன்! எய்தியது உண்டேல் கனவே போலும்! நனவேயாயினும் இவள் எனக்கு எய்துதற்கு அரியளாம்' என ஆற்றானாயினன்."

இதனோடு, இந்நூல் ஆறும் அத்தியாயத்துள், இறையனார் அகப்பொருள் உரைநடை என்ற பகுதியில் காட்டிய "கற்கந்தும்", "யாங்ஙனம் நிற்குமோ எனின்" என்ற தொடக்கமுடைய பகுதிகளையும் சேர்த்துக்கொள்க (பக்கம் 258 – 9).

இனி இரண்டாவது, இவர் வரலாறுபோலச் சொல்லிக் கொண்டு போகும் பகுதி. இங்கு, கலையும் அழகும்

தொடைநயமும் இருப்பினும், எதுகை மோனைத் தன்மையும் செய்யுளோசையும் செறிந்திருக்கும். நடை, நாடகம் போன்ற பொருளின்மேற் செல்வதால், அணிபெறுதலுக்கு இடமில்லை; விரைவும் தெளிவுபடுத்தலுமே நோக்கமாய்க் கொண்டு நடை செல்லுகிறது: "எம்பெருமாட்டி, நினக்கு இவ்வேறுபாடு எற்றினாயிற்று என்னும். என்ற விடத்து, இஃது எனக்குப் பட்டது, இன்னவிடத்து ஒரு ஞான்று நீயும் ஆயமும் தழையும் கண்ணியும் கோடற்கு என்னிற் சிறிது நீங்கினாயாக, ஈங்கு நின்றேன் ஒரு மணிச்சுனை கண்டேன்; அம்மணிச்சுனை தான் ஆம்பலே குவளையே நெய்தலே தாமரையே என்றிப் பூக்களால் மயங்கி மேதக்கது கண்டு, வேட்கையான் ஆடுவான் இழிந்தேன்; இழுக்கிக் குட்டம் புக்கேன்; புக்குத், 'தோழியோ!' என, நீ கேளாயாயினாய்; ஆக, ஒரு தோன்றல் வந்து தோன்றி எனது துயர் நீக்குதற்காகத் தன் கை நீட்டினான்; நீட்ட, யானும் மலக்கத்தான் நின் கையெனப் பற்றினேன்; பற்ற, வாங்கிக் கரைமேல் நிறீஇ நீங்கினான்; நீ அன்று கவலுதியெனச் சொல்லேன் ஆயினேன்; நீ எவ்வெல்லைக் கண்ணுங் கைவிடாதாய் அஞ்ஞான்று கைவிடுவாயாயிற்று விதியாகாது எனிற் பிறிதொன்றாவது கொல்லோ எனக் கலங்கி வேறு பட்டேன்' என்று தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நிற்கும், பின்னைத் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும், மேற்சொன்னவாற்றான் என்பது."

இதனோடு முன்காட்டிய இடத்தில் "தலைமகன் வண்டிற்கு உரைப்பானாய்" என்றும், "அச்சொற் கேட்டலும்" என்றும் வரும் பகுதிகளையும் (பக்கம் 260 – 1) காண்க.

**ஆத்திரையன் பேராசிரியன்**

உரை மிகச் சிறு பகுதியாதலால் இதுபற்றி எதுவும் சொல்வதற்கில்லை. பின்வரும் எடுத்துக் காட்டு குறிப்பிடத்

தக்கது: "கற்கப்படு மாசிரியர் நால்வரெனவும், கற்கப்படா வாசிரியர் நால்வரெனவும், அவர் தாம், மலை, நிலம், பூ, துலாக் கோல், கழற்குடம், மடற்பனை, முடத்தெங்கு, குண்டிகைப் பருத்தியெனு மிவற்றோடொப்பரெனவுங் காட்டி இலக்கணங் கூறுவாருமுளர். அவருள், கற்கப்படாதார் ஆசிரியரெனப் படார். என்னை? அவர் நூற்குபகாரப்படாமையினென்பது. கற்கப்படாத மாணுக்கருமவ்வாறே ஆராயப்படாரென்பது. இனிக் கற்கப்படுமாசிரியரும் இந்நால்வகையான் வரை யறுக்கப்படார். என்னை? எட்டுவகை நுதலிய அவையகத் தானு மென்றோதினமையானும் மற்று அவர்க்கின்றியமையாக் குணம் பலவாகலானுமென்பது. இனிக் கற்பிக்கப்படு மாணுக்கனுமவ்வாறே வரையறையின்மையின் இத்துணைப் பகுதியரென வரையறுக்கப்படாரென்பது கொள்க என்றாராகலின். ஈவோன்றன்மையென்புழி ஒருமை கூறியாறு போல ஈண்டும் ஒருமைகூற அமைவதனைப் பல்பெருஞ் சிறப்பின் நல்லாசிரியரெனச் சிறப்பித்துப் பன்மை கூறிய தென்னையெனின், ஓதப்பட்ட இலக்கண முழுதும் உடையாரைத் தலையாயினரெனவும் நல்லாசிரியர் மூவகைப் படுவரென்றற்குப் பல்பெருஞ் சிறப்பினல்லாசிரியரென்பது கொள்வோன்றன்மை யென்றாற்போல வாராதோவெனின், ஒருமை கூற அமைவதனை மாணுக்கரெனச் சிறப்பித்துப் பன்மை கூறுபவாகலான் அவர்க்கு மவ்வாறே தலையிடை கடையென மூன்று பகுதியுங் கொள்க."

## மணக்குடவர் – திருக்குறள் உரை

பின்வரும் பகுதி இல்லற வியலின் அவதாரிகையாகும்:

"இல்லறமாவது இல்லின்கணிருந்து தான முதலாயின செய்தல். அது கூறிய அதிகாரமிருபதினும், இல்வாழ்வான் வாழுந் திறம் ஓரதிகாரத்தானும் அதற்குத் துணையான மனைவி யிலக்கணம் ஓரதிகாரத்தானும் கூறி, அதன் பின்

இல்லறப் பகுதியான பிரமசரியங் காருகத்த மென்னும் இரண்டினுள்ளும் பிரமசரியத்திற்கு ஆதாரமாகிய புதல்வரைப் பெறுதல் ஓரதிகாரத்தாற் கூறிக் காருகத்த விலக்கணங் கூறுவார், நல்கூர்ந்தார், நல்குரவினீங்கினர், செல்வர், வள்ளியோரென்னும் நால்வரினும், அன்புடைமை முதலாக ஒழுக்கமுடைமை யீறாக நல்கூர்ந்தாராற் செய்யப் படுவன வேழும், பிறனில் விழையாமை முதலாகத் தீவினையச்சம் ஈறாக இவரால் தவிரப்படுவன வேழும், பதினன்கதிகாரத்தாற் கூறி, இவற்றோடுங்கூட ஒப்புர வறிதல் நல்குரவினீங்கினராற் செய்யப்படுமென்று கூறி, இவற்றோடுங்கூட ஈதல் செல்வராற் செய்யப்படுமாறு கூறி, இவற்றோடுங் கூடப்புகழ் வள்ளியோராற் செய்யப்படுமென்று கூறினராகக் கொள்ளப்படும். இவ்வறம் முற்படக் கூறியது : துறவறத்தினின்றாரையும் ஓம்புதல் இல்வாழ்வான் கண்ண தாதலான்... இல்வாழ்க்கையாவது இல்லின்கண் இருந்து வாழ்வார் வாழுந் திறன் கூறுதல்... தானமாகிய இல்லறம் செய்யுமவன் தவத்தின்பாற் பட்ட விரதங் கொண்டு ஒழுகாநின்ற பிரமசாரிக்கும், தவமேற்கொண்டொழுகாநின்ற வானப்பிரத்தன் சந்நியாசிகளுக்கும், தத்தம் நிலைகுலையாமல் உணவு முதலாயின கொடுத்துப் பாதுகாத்தலின், அவர்க்கு நல்லுலகின்கண் செல்லும் நெறியிலேநின்றவொரு துணை யென்று கூறியவாறாயிற்று. துணை யென்றது இடையூறு வாராமல் உய்த்து விடுவாரை.''

இவரது நடை மிகவும் எளிமையானது. காரண காரியத் தொடர்பு கொண்டது. மூலம் நன்கு விளங்குவதற்கு வேண்டிய கருத்தை மட்டுமே சொல்வது. நடையலங்காரம் சிறிதும் செய்து கொள்ளாதது. மூலநூலாசிரியரின் கருத்தை நன்கு உணர்ந்து விளக்குவது.

## கல்வெட்டுக்கள்

விசயாலய சோழன் தஞ்சையில் 845இல் சோழஅரசை நிறுவினன். அவன் மகன் ஆதித்த சோழன் காலம் முதல் கோயில்களில் சோழ மன்னர் சாசனங்கள் பொறிக்கப் பட்டன. இவன் சாசனங்களில் விரிவு எதுவுமில்லை. (காலம் 871 – 907). இவனுடைய மகனை முதலாம் பராந்தகன் தொடங்கி இராசராசன் வரையில், நாம் இங்குக் கருதும் பத்தாம் நூற்றுண்டில் ஆட்சி புரிந்த மன்னராவார். இவர்கள் கல்வெட்டுக்களில் எடுத்துக்காட்டாகச் சில பகுதிகளைக் கீழே தருகிறோம்.

### பராந்தக சோழன் (907 – 953)

ஸ்வஸ்திஸ்ரீ மதுரை கொண்ட கோப்பரகேசரி பன்மற்கு யாண்டு இருபத்தொன்பதாவது முனைப்பாடி நாட்டுத் திருநாவலூர்த் திருவகத்தீச்வரத்து மஹா தேவர்க்குப் பிள்ளையார் இராஜாதித்த தேவர்க்கு பன்மருந் திடும் சேநன் கோயில் ஒரு நந்தா விளக்கினுக்கு வைத்த சாவா மூவாப் பேராடு நூறு. இது பன்மாகேச்வர ரக்ஷை. இது கண்டுகாப்பார் அடி என் தலைமேலன. அற மறவேல், அறமல்லது துணையில்லை.

(காப்பார் என்ற இடத்தில் காத்தார், இரக்ஷிப்பார் என்றும், இறுதியில் அறம் வெல்க என்றும் சில சாசனங் களில் காணப்படும்.)

### கண்டராதித்த தேவர் (950 – 957)

ஸ்வஸ்திஸ்ரீ மதுரை கொண்ட கோ இராஜகேசரி பன்மற்குயாண்டு 8ஆவது புலியூர்க்கோட்டத்து வெளிச்சேரி மஹாஸபையோம். எம்மூர்ப்ப்ரும்ம தானத்தே கூட்டம் குறை வறக்கூடியிருந்து விற்கின்ற நிலம்...இவ்வூர்த்தண்டீச்வரத்து மஹாதேவர்க்கு சந்திராதித்தவல் ஒரு நந்தா விளக்கெரிப்

பதற்கும் இக்கோயிலில் யாங்கள் ஸ்ரீகோயில் எடுப்பித்துப் பிரதிஷ்டை செய்வித்த கணபதியார்க்கு உச்சியம்போது இருநாழி யரிசியால் திருவமுது காட்டுவதாகவும் கொடுத்தோம். இவர்கள் கொடுத்த இப்பூமி கொண்டு இ ந் ந ந் தா விளக்கெரிப்பதாகவும் கணபதியார்க்குத் திருவமுது காட்டிக்கொள்வதாகவும் இப்பூமி கொண்டோம். திருத்தண்டீச்வரத்துத் திருவுண்ணாழிகை உடைய சிவப் பிராமணன் கெங்காதர சிவனும் அமிர்தரஞ்சன சிவனும் பொன்மலை சிவனும் இவ்வனையோம் இப்பணி சந்திராதித்தவல் முட்டாமை செய்வோமானோம். முட்டின் படிஇரட்டி செய்வோமானோம். இத்தர்மம் ரக்ஷிப்பார் எண்பதின்கணப் பெருமக்களும் அன்ருழ் கோவும் பன்மாகேச்வரரும்.

**உத்தம சோழன்** (*970–985*)

ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி வர்மரான உத்தம சோழ தேவர்க்கு யாண்டு பதினன்காவது மழவரையர் மகளார் ஸ்ரீ கண்டராதித்த பெருமாள் தேவியார் செம்பியன் மாதேவியார் பக்கல் புழற் கோட்டத்து அம்பத்தூர் நாட்டு அம்பத்தூர் சபையோம் பொன் எண்பதின் கழஞ்சு கொண்டு இறை இழிச்சி வைச்ச நிலம் குழி ஒன்பதினயிரத்து முந்நூறும் நம் பிராட்டியார் செம்பியன் மாதேவியார்க்கு இறை இழிச்சி விற்றுக் கொடுத்தோம் அம்பத்தூர் சபையோம். இந்நிலங்கொண்டு திருமுல்லைவாயில் உடைய மாதேவர்க்கு நிசதம் நாழி எண்ணெய் அட்டக்கடவகை. அட்டுமிடத்துத் கூதன்ட்டமுடையான் வண்ணக்கனை வயன சுந்தரன் இந்நிலத்து எங்கள் ஏரியில் தலைநீரும் கடைநீரும் பாய்ச்சிக் கொள்ளக்கடவகைவும் இந்நிலத்தில், மேனேக்கிய மரமும் கீழ் நோக்கிய கிணறும் அனுபவிக்கப் பெறுவராகவும், இந்நிலத்தடி யாதொன்றும் பேசப்பெருதோமாகவும் இப்பரிசு விற்றுக் கொடுத்தோம் அம்பத்தூர் மஹா

சபையோம். இவர்கள் பணியால் இவ்வூர் மத்தியஸ்தன் கண்டத்தடிகளென். இவை என் எழுத்து. இது பன்மாஹேஸ்வர ரக்ஷை.

## ஆதித்த கரிகாலன்

(சுந்தரச் சோழனுடைய மூத்த புதல்வன், இராசராசனுக்கு முன்னேன். பட்டத்துக்கு வராமலே 949இல் இறந்துபோனன்).

ஸ்வஸ்தி ஸ்ரீ பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி வர்மருக்கு யாண்டு நான்காவது திருவிடைமருதூரில் ஸ்ரீ மூலஸ்தானத்தில் பெருமானடிகளுக்கு ஆரியக் கூத்தாட ஸ்ரீ கார்யம் ஆராய்கின்ற அதிகாரிகள் சிற்றிங்கண் உடையான் கோயில் மயிலை ஆன பராந்தக மூவேந்த வேளாரும் திறைமூர் ஸபையாரும் திருவிடைமருதூரில் நகரத்தாரும் தேவ கன்னிகளும் நாடக சாலையில் இருந்து கித்தி மறைக்காடன் ஆன திருவேளை அறைசாக்கைக்கு நிவந்தம் செய்துகொடுக்க என்று ஏவலால் இத்தேவர் தேவதானம் விளங்குடி நிலத்தில் பனைச்சேரி பத்து உள்பட நிலம் வேலியும் இவ்வாண்டின் எதிரா மாண்டு முதல் இந்நிலங் கொண்டு தைப்பூசத் திருநாளில் ஒரு கூத்தாடுவதாகவும் நிருத்தம் ஆடின பிற்றைநாள் தொடங்கி மூன்று கூத்தாடுவதாகவும் வைகாசி திருவாதிரையின் பிற்றைநாள் தொடங்கி மூன்று கூத்தாடுவதாகவும் ஆக இந்தக் கூத்து ஏழும் இங்கு ஆடுவதாகவும் பண்டாரத்தை பதினற் கல நெல் கொற்று பெறுவதாகவும் இந்நெல் அழிவில் அடைப்படி நெல்லும் கொற்றும் இரட்டி அவ்வாண்டையின்.

## பார்த்திவேந்திரவர்மன்

(இவன் தொண்டை நாட்டில் சிற்றரசனயிருந்தவன் என்பது சதாசிவ பண்டாரத்தார் கருத்து. இவன் ஆதித்த கரிகாலனே என்பது நீலகண்ட சாஸ்திரியார் கருத்து.)

ஸ்வஸ்தி ஸ்ரீ கோப் பார்த்திவேந்திரவர்மர்க்கு யாண்டு 8ஆவது ஆமூர்க் கோட்டத்துப் படுவூர் நாட்டுத் தேவ தானம் திருவிடவெந்தை ஸ்ரீ வராஹதேவற்கு இக் கோட்டத்து தங்கூற்றிட தலசயனப் புறமாகிய தையூர் ஆனிகிழானேன் நம்பன் மஞ்சனன உகவாரிப் பேரையன் சந்தராதித்தவல் நிற்க வைத்த திரு நந்தா்விளக்கு ஒன்றி னுக்கு விட்ட ஆடு சாவா மூவாப் பேராடு தொண்ணூற்று மூன்று. இவ்வாடு தொண்ணூற்று மூன்றுங் கைக் கொண்டு நிசதம் உழக்கு நெய் அட்டக் கடவேனேன். திருவிடவெந்தை இருக்கும் மன்றுடி, விளக்கன் கடநாடனென் இத்திருநந்தா விளக்குக் கடுங்கணையன். இத் திருநந்தா விளக்குக் கடைக்கண்டு செலுத்துவிக்கக் கடவேம் திருவிடவெந்தை ஸபையோம். இத்தர்மத்துக்கு அஹிதம் செய்தார் கங்கையிடை குமரியிடை எழுநூற்றுக் காதமும் செய்தார் செய்த பாவத்தில் படுவோமானோம். இத்தர்மம் ரக்ஷிப்பார் ஸ்ரீ பாதம் என் தலைமேலன.

## இராசராச சோழன் – I (985 – 1014)

ஸ்வஸ்தி ஸ்ரீ சாலை கலமறுத்த கோராஜராஜ கேசரீ பன்மற்கு யாண்டு பதினொன்றுவது; ஊற்றுக் காட்டுக் கோட்டத்துத் தன்கூற்று ஸ்ரீ உத்தமசோழ சதுர்வேதி மங்கலத்து ஸ்ரீ உத்தம சோழேச்வரத்தாள்வார்க்கு ஸ்ரீ கண்டராதித்த தேவி நம் பிராட்டியார் பராந்தகன் மாதேவடிகளாரான செம்பியன் மாதேவியார் கண்டன் மதுராந்தக தேவரான ஸ்ரீ உத்தமசோழ தேவரைத் திரு வயிறு வாய்த்த உடைய பிராட்டியார் யாண்டு பத்தாவதில் அமுது செயக் கொடுத்த செப்புத்தளிகை அலகு நிலைப்படி நாற்பத்தேழு பலமும் ஸ்ரீ பலி எழுந்தருள செப்புப் பலித்தாலம் அலகு நிலைப்படி ஐம்பத்தொன்பது பலமும் இவ்வூர் வெள்ளிக்கோல் காஞ்சீபுரத்து நின்றுநெடொக்கும் கோலால் எடுக்கப் போந்த நிறை செப்புத்தளிகை

தொண்ணூற்றுப் பலமும் ஸ்ரீ பலி செப்புப் பலித்தாலம் நூற்றுப்பலமும் யாண்டு பனிரண்டாவதில் தேவர்க்கு அமுதுசெய்யக் கொடுத்த செப்புப் பரிகலம் ஒன்று. இதுவே பிராட்டியார் தேவர் செப்புப் பரிகலமும் விளக்கு களும் பூமியும் நிவந்தம் செய்து கல்லில் வெட்டுவிக்க வென்று ஸ்ரீமுகம் அருளிச் செய்துவர ஸ்ரீமுகம் கண்டு ப்ரஸாதப் பட்டு ஸபையோம் வாரியமிட்டு ஸ்ரீமுகப்படியே கல்லில் வெட்டுவிக்கவென்று பணிக்க கல்லில் வெட்டின பரிசாவது.

# சில குறிப்புக்கள்

பின்னே தரப்பட்ட குறிப்புக்களை உரிய பக்கத்தில் உரிய இடத்தில் பொருத்தி வாசித்துக் கொள்க.

பக்கம் 40: சூளாமணி என்ற பெயர் அமைந்த நூல்கள்: இரங்கேச வெண்பா என்ற ஒரு நீதி நூல் நீதி சூடாமணி என்றும் வழங்கப் பெறும் (17 நூ). பல் பொருட் சூடாமணி, உசித சூடாமணி என்பன, சூடாமணி என்ற பெயரையே அமைத்துக் கொண்ட வேறு நிகண்டுகள் (18 நூ.).

பக்கம் 46: இவர் கூறுகின்ற முரசு மதில் புனல் கொடி பூ துறை – மும்மூன்று என்பதற்கு விளக்கமில்லை.

பக்கம் 70: வட சொற்களை, ரகரம் முதலியன இல்லாமலே விலக்கிப் பிராகிருத மொழி (பாகதம்) வழங்கும். இங்குக் காட்டிய பெயர்கள் எல்லாம் பிராகிருதம் வழியாகத் தமிழில் வந்தவையாகும்.

பக்கம் 78: முலை என்றும் அல்குல் என்றும் எல்லோருமே வருணிக்கிறார்கள். இங்கு நாம் சுட்டிக் காட்டுவது, துறவிகளான இவ்வாசிரியர் சொல்வது.

பக்கம் 110: 'முத்தாரம்' என்று தொடங்கும் பாடலில் பின்னிரு வரிகளின் யாப்பமைதி திருத்தமாயில்லை.

பக்கம் 167: இலக்கண வளர்ச்சி பற்றிய ஒரு குறிப்பு இங்குச் சொல்லத் தக்கது. யாப்பருங்கல விருத்தி ஒழிபியலில் உரைகாரர் பிராணிகளின் ஆண் பெயர், பெண் பெயர், இளமைக்கெய்திய பெயர் என்று 24 பெயர்களைத்

தந்து, பின் ஆசிரியன் தன்மையை விளக்கும் ஒரு நூற்பாவைச் சொல்லி, "இவற்றின் வலிவறிந்து வந்துழிக் காண்க; இடைச் சொல்லும் உரிச் சொல்லும், தொல்காப்பியம், தக்காணியம், அவிநயம், நல்லாறன்மொழிவரி முதலியவற்றுட் காண்க" என்றெழுதுகிறார். இங்குக் கூறிய நான்கு நூல்களுள், தொல்காப்பியம் நன்கு தெரிந்தது. அவிநயமென்பது அவிநயனார் செய்தது, இறந்து போன நூல்; எழுத்து, சொல், யாப்பு, பாட்டியல் என்ற பகுதிகள் இதனுள் இருந்தமை தெரிகிறது. நல்லாறன் மொழிவரியை இவ்விருத்திகாரர் வேறிடங்களிலும் காட்டுகிறார். அதுவும் யாப்பதிகாரம் வரை கூறுகின்ற நூல் என்று அங்குள்ள மேற்கோள் பாடல்களால் தெரிகிறது. தக்காணியத்தைப் பற்றி வேறெதுவும் தெரியவில்லை. எனினும், வடமொழி நூல்களில் காணப்படும் ஒரு கருத்து சிந்திக்கத் தக்கது. அணியிலக்கணம் (அலங்கார சாஸ்திரம்) பற்றிய பரத சாஸ்திரப் பகுதியில் உரையாசிரியர் பிறமொழி அணியிலக்கணங்கள் அனைத்தையும் குறிப்பிடுகிறார். தமிழைக் குறிப்பிடவில்லை. ஆனால் தாக்ஷிணாத்யம் என்று ஒரு நூலைக் குறிப்பிடுகிறார். இது என்ன மொழி என்று அவர் சொல்லவில்லை. ஒருகால் இங்குக் காட்டிய தக்காணியம் என்ற நூலாயிருக்கலாமோ என்று ஐயப்பட இடமுண்டு. அங்ஙனமாயின் இந்நூல் பரதருடைய சாத்திரத்துக்கு முற்பட்டதாகும். பரதர் நூல் தொல்காப்பியத்தின் பின் வந்தது என்றும் சொல்வர். அங்ஙனமாயின் தக்காணியம் தொல்காப்பியத்துக்கு உடன்கால நூலாகலாம்.; ஆகவே மற்ற அவிநயம் நல்லாறன் மொழிவரி இரண்டும் தொல்காப்பியத்தின் உடன் கால நூலாதல் கூடும்.

பக்கம் **190:** அகத்தியர் பெயரை வருவித்து அவர் இவ்வாறு சொன்னார் என்று காட்டுவதை, இங்குள்ளது போல, 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய பிரபந்த

மரபியலிலும், சிதம்பரப் பாட்டியலிலும் காண்கிறோம். இத்தொடர்பையும் வேறு பல செய்திகளையும் கொண்டு, 8 – 9 நூற்றாண்டுகளில் அகத்தியர் என்று பெயர் புனைந்து கொண்ட ஒரு புலவர் இருந்து ஒரு பாட்டியல் நூல் செய்தார் என்பது தெரிகிறது.

பக்கம் **202 :** நிருபதுங்க வர்மன் : இவன் போர்க் களத்துக்கு வரவில்லை. இவன் மகனான அபராசித வர்மனே பல்லவர் படைகளைத் தலைமை வகித்து நடத்தித் திருப்புறம்பயப் போரில் வெற்றி பெற்றான்.

பக்கம் **218 :** அலிப்பால் : இது பேடி என்று பொருளாகாது ; வடமொழியில் நபும்சகலிங்கம் என்று சொல்வது போல அஃறிணையைக் குறிக்கும். (ஆங்கிலத்தில் நியூடர் ஜெண்டர்). ‘பெண் ஆண் அலி எனும் பெற்றியன்’ என்று மாணிக்கவாசகர் கூறுவதும், ‘அது அவள், அவன், என நின்றமை’ என்று பட்டினத்தார் கூறுவதும் இதுவே.

பக்கம் **225 :** பல்சந்த மாலை : 14ஆம் நூற்றாண்டில் ஒரு முகம்மதியத் தலைவன் மீது அகப் பொருள் நூலொன்று இப்பெயரில் பாடப் பெற்றுள்ளது. பாட்டியல் இலக்கணம் கூறியது போன்ற வேறு பிரபந்த நூல் இல்லை. (எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டு பக்கம் 330–5.)

பக்கம் **231 :** பன்னிரு பாட்டியல் : இது கூறும் பல பொருள்கள் புதுமையாகவும், சுவையுடையனவாகவும் உள்ளன. வேந்தர் முடிசூடிய பின் பிள்ளைப் பாட்டுப் பெறார் என்பது ஒன்று :

> **தொன்னில வேந்தர் சுடர்முடி சூடிய**
> **பின்னர்ப் பெறுஅர் பிள்ளைப் பாட்டே. 177**

இதே பிரபந்தம் பற்றி, ஆண்மகவுக்கும், பெண் மகவுக்கும், உவமை கூறத்தக்க பொருள்களாக ஆறு பொருள்களைக்

கூறுகிருர். 'இளங்கதிர்த் திங்கள் எல்லார்க்கும் உரித்தே' என்றும் சொல்கிருர். (191 – 193). இவை ஒருகால் உவமான சங்கிரகம் போன்ற நூல்கள் பிற்காலத்தில் எழுவதற்கு மூலமாயிருந்திருக்கவும் கூடும்.

பக்கம் **239:** 'அரசனுடைய கவற்சி ஞானத்திடைய தாகலான், யாம் அதனைத் தீர்க்கற் பாலம்' என்று பெருமான் கூறியிருப்பது ஒரு சிறப்புடையது. இங்குக் கருதப்படும் பொருள், அகப்பொருள் (அதுவும் களவியல்). இது ஞானத்திடையது என்று கூறிய கூற்றே, பிற் காலத்தில் திருக்கோவையாருக்குப் பேரின்பப் பொருள் கூறும் முயற்சியைத் தூண்டிவிட்டது என்று கருதவேண்டும்.

பக்கம் **239–241 :** யாப்பதிகாரம்: "எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும், யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப் பட்டுக் கொணர்ந்து, பொருளதிகாரம் வல்லாரைத் தலைப் பட்டிலேம் என்று வந்தார்" என்று கூறுகிறது. தொல் காப்பியத்தில் பழகிய நமக்கு, எழுத்து, சொல், பொருள் என்ற பாதையில் நினைவு செல்கிறது. ஆனல் யாப்பருங்கல விருத்தியில் மேற்கோளாய்க் காட்டப்பட்டுள்ள நூற் பாக்களை நுணுகி ஆராயும்போது, அவிநயம், நல்லாறன் மொழிவரி முதலான நூல்களில் யாப்பதிகாரம் என்ரேர் அதிகாரம் இருந்திருக்கும் என்றும், அதனுள் ஒருகால் செய்யுளியலும் பாட்டியலும் அடங்கியிருந்தனவென்றும் குறிப்புக்கள் கிடைக்கின்றன. ஆகவே, களவியலுரை யாப்பதிகாரம் என்று குறிப்பிடுவது, இல்லாத ஒன்றல்ல, இருந்த ஓர் இலக்கணப் பகுதியையே.

பக்கம் **275**: கூத்தநூலார் என்று அடியார்க்கு நல்லார் இருமுறை குறிப்பிடுகிருர். இரண்டிடத்திலும் கூத்தநூலார் கூலம் பதினெண்வகைத்து எனக் கூறுவதாகக் காட்டுகிருர்; ஓரிடத்தில் 'பதினெண் கூலமும் உழவர்க்கு

மிகுக' என்று ஒரு நூற்பா வரியையும் அவர் கூற்றுகத் தருகிறார். மற்றோரிடத்தில், மதிவாணனர் நாடகத் தமிழ் நூல் என்று அவர் தரும் 13 வரிகொண்ட ஆசிரியப்பாவினுள் இவ்வரியும் காணப்படுகிறது. இதனால் கூத்தநூலாரும் நாடகத் தமிழ்நூலாரும் ஒருவரே, அவர் மதிவாணனர் என்று தெரிகிறது. உரைச்சிறப்புப் பாயிரத்துள் அடியார்க்கு நல்லார் தாம் சிலப்பதிகாரம் உரை எழுத ஆதாரமாய்க் கொண்ட ஐந்து நூல்களைக் குறிப்பிடுகிறார் :

"இனித் தேவவிருடியாகிய குறுமுனிபாற் கேட்ட மாணக்கர் பன்னிருவருட் சிகண்டியென்னும் அருந்தவ முனி, இடைச் சங்கத்து அநாகுலனென்னும் தெய்வப் பாண்டியன் தேரோடு விசும்பு செல்வோன் திலோத்தமை யென்னுந் தெய்வமகளைக் கண்டு தேரிற் கூடின விடத்துச் சனித்தானைத் தேவரும் முனிவரும் சரியா நிற்கத் தோன்றினமையிற் சாரகுமாரனென அப்பெயர் பெற்ற குமரன் இசையறிதற்குச் செய்த **இசை நுணுக்கமும்,** பாரசவ முனிவரில் யாமளேந்திரர் செய்த **இந்திர காளியமும்,** அறிவனர் செய்த **பஞ்ச மரபும்,** ஆதிவாயிலார் செய்த **பரதசேனாபதியமும்,** கடைச்சங்கமிரீஇய பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன் மதிவாணனர் செய்த முதனூல்களிலுள்ள வசைக் கூத்திற்கு மறுதலையாகிய புகழ்க்கூத்தியன்ற மதிவாணர் **நாடகத் தமிழ் நூலும்** என இவ்வைந்தும் இந் நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்களன்றேனும் ஒருபுடை யொப்புமை கொண்டு முடித்தலைக் கருதிற்று இவ்வுரை யெனக் கொள்க."

1968இல், தமிழ்நாடு, இந்தியா - சங்கீத நாடக சங்கங்களின் உதவிகொண்டு 'சாத்தனர் செய்த கூத்தநூல்' என ஒரு நூல் அச்சிடப்பட்டுள்ளது; 318 சூத்திரம், ச. து. சுப்பிரமணிய யோகியாரின் விளக்கவுரை உடையது. இது சுவை நூல், தொகை நூல், விரி நூல், கலை நூல்,

கரண நூல், தாள நூல், இசை நூல், அவை நூல், கண் நூல் என ஒன்பது பகுதிகளையுடையதென்றும், முதல் இரு பகுதிகளே உரை எழுதப்பட்டு வெளியாகின்றனவென்றும் அங்குக் குறிப்பு உள்ளது. இச்சாத்தனூர் பற்றிய விளக்கம் இல்லை. சிலப்பதிகாரத்தில் (இன்றுள்ளபடி) குறிப்பிடும் சாத்தனூர் மணிமேகலை செய்தவர். அவருக்குக் கூத்தநூல் தொடர்பு இருப்பதாக வரலாறு இல்லை. எனவே, இக் கூத்த நூல், அடியார்க்குநல்லார் காட்டும் நூலினின்றும் வேறானது போலும். இது தனியான ஆராய்ச்சிக்குரிய பொருளாதலின், இங்கு ஆராயவில்லை.

பக்கம் **307 :** திருமுருகாற்றுப்படை—நக்கீரர் 'பழமுதிர் சோலைமலை கிழவோனே' என்று பாடி முடித்தபோது, முருகன் தன்னைக் கிழவோன் என்று அவர் கூறியதற்காகக் கோபித்து, அருள்புரியவில்லை என்றும், பின்னர் அவர் 'குன்றமெறிந்தாய்' என்று பாடத் தொடங்கி அதில் 'என்றும் இளையாய், அழகியாய்' என்று கூறவும், முருகன் மகிழ்ந்து அருள் செய்தான் என்றும் வழங்கிய ஒரு புனைந்துரையான வரலாற்றை நம்பி திருவிளையாடல் கூறுகிறது : 44 : 27 – 8.

பக்கம் **278 – 9**: பாண்டிக்கோவை : பல பாண்டியர்மீது பாடப்பட்ட பல கோவைப் பாடல்களிலிருந்து தேர்ந்தெடுத்த செய்யுட்களைக் கொண்டது, ஆகவேதான் ஒரே துறைக்கு இதில் பல பாடல்கள் உள்ளன என்ற ஒரு கருத்தும் தெரிவிக்கப்பட்டுள்ளது. இக்கருத்துப் பிழையானது. பாண்டிக்கோவையைச் சொல்கின்ற களவியற் காரிகையோ இலக்கண விளக்கமோ, அது ஒரு திரட்டு என்று பொருள் படச் சொல்லவில்லை. யாவும் அரிகேசரி நெல்வேலி வென்ற சீர் நெடுமாறனையே புகழ்வன. இக்கருத்துப் பற்றிய விரிவான விளக்கம் எமது ஏழாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் சொல்லப்பெறும்.

*பக்கம்* **328:** *திருமுருகாற்றுப் படையும் நெடுநல் வாடையும் ஒரே நக்கீரர் பாடினர், அவரே எட்டுத்தொகை நூல்களில் அவர் பெயரால் வழங்கும் பாடல்கள் அனைத்தையும் பாடினர் என்பது எமது கருத்து; இக்கருத்துப்படவே இங்குள்ள ஆராய்ச்சியைச் சொல்லியிருக்கிறேம். மிகவும் பிற்காலத்தில் நக்கீரர் பாடிய விநாயகரகவல் என்றெல்லாம் நூல்கள் அச்சிடப்பட்டுள்ளன. அந்த விநாயகரகவலுக்கும் இங்குக் கூறப்பெற்றுள்ள அத்தனை நக்கீரர்களுக்கும் சம்பந்தமில்லை.*

*பக்கம்* **351:** *பரண தேவர் பாடல்கள் இன்னேசை யுடையனவாய்ச் சுவை மிகுந்திருக்கும். எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடல்கள் காண்க:*

பேச்சுப் பெருகுவதென் ; பெண்ஆண் அலிஎன்று
பேச்சுக் கடந்த பெருவெளியைப் - பேச்சுக்கு
உரையானை, ஊனுக் குயிரானை, ஒன்றற்கு
உரியானை, நன் னெஞ்சே, உற்று.

உருவு பலகொண் டொருவராய் நின்ருர்
உருவு பலவாம் ஒருவர் - உருவு
பலவல்ல ஒன்றல்ல பைஞ்ஞீலி மேயார்
பலவல்ல ஒன்ருப் பகர்.

*எளிமையான சிலேடைக்கு, பின்வருவது ஓர் எடுத்துக் காட்டு:*

இடமாய எவ்வுயிர்க்கும் ஏகம்பம் மேயார்
இடமானர்க் கீந்த இறைவர் - இடமாய
ஈங்கோய் மலையார் எழிலார் சிராமலையார்
ஈங்கோய் மலையார் எமை.

செல்லுமளவில் செலுத்துமின் சிந்தையை' என்ற திருமந்திரப் பாடல் தொடரை 'செல்லுமளவும் சிதையாமற் சிந்திமின்' என்று இவர் எடுத்தமைக்கிருர்.

பக்கம் **383:** தசாங்கத்தில் நாமம் என்பதையே முதல் அங்கமாக மாணிக்கவாசகர் பாடியிருக்கிருர்.

பக்கம் **384:** திருவிரையாக்கலி: இங்குக் குறிப்பிட்டனவேயன்றி, விரையாக்கலிப் பெருந்தெருவு, திருவிரையாக்கலி திருக்கண்ணப்ப தேவர் சீபாதம் என்ற வழக்குக்களும் இருந்திருக்கின்றன.

பக்கம் **390:** திருக்கழுமல மும்மணிக் கோவையின் மிகைப்பாடல்கள், வேதம் போன்ற கோபுரம், சிவாகமம் போன்ற மேடை, சைவ சித்தாந்தத் தெய்வ ஆகமம் பகர்ந்த வாயன் என்றெல்லாம் விரிவாகக் கூறுகின்றன. இக்கூற்றுக்களே பிந்திய பாடல்கள் இடைச் செருகல் என்று கருத இடங்கொடுப்பன. அப்படியே இங்கு மாயை மாமாயையாய பேய் என்றுள்ள தொடர்; மாமாயை — மாயேயம்; இது மிகவும் பின் வந்த கருத்து; சிவப் பிரகாசத்தில் காணப்படுவது.

பக்கம் **405:** நக்கீரர் பாடல், பட்டினத்தார் பாடல் முதலியவற்றைத் தொண்டைமண்டல சதகப் பாடலொன்று (91) குறிப்பிடுகிறது:

**தருவுற்ற காளத்தி கச்சியந் தாதியும், தண்டமிழ்தேர்**
**திருவொற்றி யூரிற் குறுந்தொகை தானும், திரைகடலைப்**
**பொருவுற்ற கச்சி மலிதே ரெனமுன் புகல்கவியும்,**
**மருவுற்ற கூந்தல்மின்னே, உண்டுகாண், தொண்டை**
**மண்டலமே.**

காளத்தி — கயிலை பாதி காளத்தி பாதி யந்தாதி, நக்கீரர் பாடியது. கச்சியந்தாதியும் திருவொற்றியூரிற் குறுந்தொகை தானும் — திருவேகம்ப முடையார் திருவந்தாதியும் திரு ஒற்றியூர் ஒருபா ஒரு பஃதும்; இவ் வொருபா ஒருபஃது திரு வொற்றியூர்த் தொகை என்று

ஏடுகளில் காணப்படுகிறது, இப்பெயரோடு அச்சிடப்பட்டும் உள்ளது. கச்சிமலிதேர் என்னும் கவி :

**மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்**
**ஒலியும் பெருமையும் ஒக்கும்; - மலிதேரான்**
**கச்சி படுவ கடல்படா; கச்சி**
**கடல்படுவ எல்லாம் படும்.**

*இப்பாடல் பழைய உரைகள் அனைத்திலும் மேற்கோளாய்க் காட்டப்பட்டுள்ளது. காட்டும் உரைகளில் காலத்தால் முந்தியது யாப்பருங்கல விருத்தி (11ஆம் நூற்றாண்டு) எனவே, இப்பாடல் இதற்கு முந்தியது. நக்கீரர் நூல், பட்டினத்தார் நூல்கள் இப்பாடல் எல்லாம் ஒரே காலமாயும், அக்காலம் பத்தாம் நூற்றாண்டாயும் இருத்தல் இச்சதகப் பாடலால் பொருந்தக் கூடியதே.*

*பக்கம்* **499.** *(திருவாலி)* **அமுதன் :** *நம்மாழ்வார் பாசுரம் 'ஆரா அமுதே' என்று தொடங்குகிறது. ஆராவமுதன் பொதுவாகத் திருமால் பெயராகும். எனினும், திருவேதிகுடியில் அப்பர் 'ஆரா அமுதினைக் குடைந்தாடுதுமே' என்று பதிகம் முழுமையும் பாடுகிறார். 'அத்தன், ஆனந்தன், அமுதன் என்று அள்ளூறித் தித்திக்கப் பேசுவாய்' என்ற இடத்து மாணிக்கவாசகர் அமுதன் என்ற பெயரைச் சிவபெருமான் பெயராகவே குறிப்பிடுகிறார். இருப்பினும், திருவாலி என்ற ஊர்த் தொடர்பை ஒட்டியும், இன்றுவரை நிலவும் பெருவாரி வழக்குப் பற்றியும், அமுதன் என்பது திருமாலின் பெயர் என்றே குறிப்பிடுகிறோம்.*

*பக்கம்* **528 :** *பிரபந்தங்கள் : வருக்கக் கோவை முதலியவற்றில் பாடல்களின் முதலெழுத்துக்களை அகர வரிசையில் அமைப்பது ஓர் இலக்கணம். இதை அப்பர் சுவாமிகளுடைய சித்தத்தொகைத் திருக் குறுந்தொகைப் பதிகத்தில் காண்கிறோம்.*

பிற்சேர்க்கை 2.

# இன்னிலை பற்றிய குறிப்பு

*பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் யாவை என்று ஒரு பழைய வெண்பா கூறுகிறது :*

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப் –
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோடு ஏலாதி என்பவே –
கைந்நிலையு மாம்கீழ்க் கணக்கு.

*இப்பாடலில் இன்னிலை – கைந்நிலை என்ற சொற்கள் சிறு குழப்பத்தை உண்டுபண்ணியிருக்கின்றன. கைந்நிலை என்பது, அறுபது வெண்பாக்கள் கொண்ட ஒரு சிறு அகப்பொருள் நூல். இது, சிதைந்துபோன ஓர் ஏட்டுச் சுவடிகொண்டு பி. வை. அனந்தராமையரால் 1931இல் பதிப்பிக்கப் பெற்றது. ஐந்திணைக்கும், திணைக்குப் பன்னிரு பாடல்களாக உள்ளது. நூல் செய்தார் மாறோக்கத்து முள்ளிநாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங்காடனார். இந்த நூல் இருந்ததே தெரியாமையால், செல்வக்கேசவராய முதலியார் உள்ளிட்ட தமிழ் அறிஞர் சிலர், 'இன்னிலைய' என்பதை 'இன்னிலை சொல்' என்று பாடங்கொண்டு, இன்னிலை என்ற பெயரால் ஒரு நூல் உண்டென்றும், அது பதினெண்கீழ்க் கணக்கினுள் ஒன்றென்றும் கருதி வந்தார்கள். (இப்போது யாரும் அப்படி கருதமாட்டார்கள் என்று நம்புகிறோம்.) யாப்பருங்கல விருத்தியுரையில் காணப்படும் மூன்று வரியுடைய ஒரு பாடல், இன்னிலை என்ற பெயரோடு வெளியாகியுள்ள நூலில் காணப்படுகிறது. விருத்தியின் காலம் 11ஆம் நூற்றாண்டு. ஆகவே, அப் பாடலின் காலம் கீழ் எல்லை 10ஆம் நூற்றாண்டாக*

இருத்தல் கூடும் என்று கருதி, இன்னிலை என்ற நூலையே இங்கு ஆராய்கிறோம்: இவ்வொன்றே இவ் வரலாற்று நூலில் இத்தலைப்பு அமைந்ததற்குரிய பொருத்தம். யாப்பருங்கல விருத்திப் பாடல் பின்வருவது :

**உடைமையராச் சென்றக்கால் ஊரெல்லாம் சுற்றம்;**
**உடைமைக்கோல் இன்றங்குச் சென்றக்கால், சுற்றம்**
**உடையவரும் வேறு படும்[1].**

இச் செய்யுள் விருத்தியுரையில் காட்டப்பட்டுள்ள அமைப்பு முறையால், இது ஓர் அவ்வையார் பாடல் என்றே சொல்லக் கிடக்கிறது. ஆனால் இதே வரிகள் 'உடைமையரு திட்டல் உறுதுணையாம் யாண்டும்' என்ற முதல் வரியொன்று பெய்யப் பெற்று, இன்னிலை என்று முன் குறிப்பிட்ட நூலின் 12ஆம் பாடலாக அச்சிடப்பட்டுள்ளது.

இனி, இன்னிலை என்று பெயர் சூட்டி அச்சிடப்பட்ட நூலைக் குறித்துச் சில சொற்கள் கூறவேண்டும். இது, "பொய்கையார் செய்த இன்னிலை" என்ற பெயரோடு 1917இல் (பிங்கல வருஷம்) வ. உ. சிதம்பரம் பிள்ளை எழுதிய விருத்தியுரையுடன் அச்சிடப்பட்டது. இது கடவுள் வாழ்த்தாக ஆசிரியப்பா வொன்றும், நூலாக 45 வெண்பாக்களும் உடையது, அறப்பால், பொருட்பால், இன்பப்பால், வீட்டுப்பால் (இல்லியல் – துறவியல்) என்ற பகுதிகளைக் கொண்டது. பிள்ளையவர்கள் இதற்கு அநுவயம், பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விசேடவுரை என்ற பகுதிகள் எழுதி மிகவும் அழகாகப் பதிப்பித்து இருக்கிறார்; அன்றியும், முன்னுரை 14 பக்கம், ஆசிரியர் வரலாறு 11 பக்கம், உரைப்பாயிரம் 4 பக்கம், அரும்பத அகராதி, மேற்கோளகராதி என்பனவும் சேர்த்திருக்கிறார்.

1 பவானந்தம் பிள்ளை பதிப்பு 1917, பக்கம் 351.

இந்நூலை இயற்றியவர் "தெய்வ அருளும் செந்தமிழ் ஞானமும் சிறக்கப் பெற்ற ஆழ்வார் பன்னிருவருள் ஒருவராகிய பொய்கையாழ்வார்" என்கிறார்; பொய்கையார் பலரையும் ஆராய்ந்து, ஆழ்வாரே இந்நூல் செய்தார் என்பது இவர் முடிவு. இந்நூலைத் தொகுத்தவர் மதுரை ஆசிரியர் என்றும், கடவுள் வாழ்த்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்றும் சொல்லப்பட்டுள்ளது. சங்க இலக்கியம் என்று சொல்லப் பெறுபவை, எட்டுத் தொகையும் பத்துப் பாட்டுமே. பத்துப்பாட்டு, நீண்ட பத்துத் தனிப் பாடல்கள்; எட்டுத் தொகை என்பது தனித் தனியாகத் தொகுத்த எட்டுத் தொகை நூல்கள்; இவை ஒவ்வொன்றுக்கும் பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடினார் என்றும், ஒவ்வொன்றையும் வெவ்வேறு ஆசிரியர் பிற்காலத்தில் தொகுத்தார்கள் என்றும் வரலாறு உண்டு. பதினெண்கீழ்க் கணக்கு என்ற பெயரில் வழங்கும் பதினெட்டு நூல்களும் சங்க நூல்களல்ல, சற்றுப் பிற் காலத்தவை என்ற கருத்து இப்போது அறிஞரால் ஒப்புக் கொள்ளப்பட்ட கருத்து. இவை ஒவ்வொன்றும் ஒரு தனி நூல்; நாலடியார் தவிர மற்ற யாவும் ஒரே புலவர் செய்தது. ஆகவே, இதற்குத் தொகுத்தவர் மற்றொருவர் என்று சொல்வதில் பொருள் இல்லை; அப்படி எந்த வரலாறும் இல்லை. அதுபோலவே, அந்தந்த நூலின் ஆசிரியர் கடவுள் வாழ்த்துப் பாடினாரேயன்றி, வேறொருவரான பெருந்தேவனார் வந்து கடவுள் வாழ்த்துப் பாடி வைத்தார் என்பது பொருந்தாத கூற்று; அவ்விதமான வரலாறும் இல்லை. ஆகவே இன்னிலை ஒரு கீழ்க்கணக்கு நூலாயிருக்குமானால், அதற்கு ஒருவர் கடவுள் வாழ்த்துப் பாடிக் கொடுத்தவர், மற்றொருவர் அதைத் தொகுத்தவர் என்பது, மரபுக்கு மாறுபடுகின்ற பொருளற்றதொரு போலிக்கூற்றாகும்.

அடுத்து, நூலின் பாடல்களைக் குறித்துச் சில சொல்லலாம். ஏழு பாடல்களைக் குறிப்பிட்டு அவை பண்டை

உரையாசிரியர்களால் மேற்கோளாகத் தரப்பட்டவை என்று சிதம்பரம்பிள்ளை காட்டியிருக்கிருர் :

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | துணையென்ப | தொல். இளம். களவியல் | | 23 |
| 2, | ஐங்குரவரோம்பல் | ,, ,, | கற்பியல் | 5 |
| 3. | தோற்ருரே | ,, ,, | ,, | 12 |
| 4. | ஒத்த உரிமை | ,, ,, | ,, | 12 |
| 5. | ஐம்புலத்தோர் | ,, ,, | ,, | 12 |
| 6. | திரைத்தவிரிக்கில் | ,, பேராசிரியர் | செய்யுளியல் | 113 |
| | ,, | ,, நச்சிஞர்க்கினியர் | | 113 |
| 7. | உடைமையருதீட்டல் | யாப்ப. விருத்தியுரை | | 93 |

இவற்றுள் ஏழாவது குறிப்பு தொடக்கத்தில் சுட்டப்பட்டது. ஆரும் பாடல் திரைத்த விரிக்கில் என்பது பேராசிரியர் நச்சிஞர்க்கினியர் இருவராலும் பூதத்தார் அவையடக்கு என்று காட்டப்பட்டதேயன்றி, இன்னிலை என்ற பெயர் எங்கும் சொல்லப்படவில்லை.

இனி, முதல் ஐந்து பாடல்கள்–தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணத்தில் குறித்த இடங்களில் உள்ளன என்று சிதம்பரம் பிள்ளை காட்டியிருக்கிருர் ; ஆஞல் அவரே பதிப்பித்த பொருளதிகார இளம்பூரண உரையில் அவ்வைந்தில் ஒன்று கூடக் காணப் பெறவில்லை. ஏன் என்பது நியாயமான கேள்வி.

இன்னிலையின் ஏட்டுப் பிரதியென்று ஒன்றைச் சிதம்பரம் பிள்ளையிடம் கொடுத்து அச்சிடச் செய்தவர் த.மு. சொர்ணம் பிள்ளை என்று அவரே முன்னுரையில் சொல்லியிருக்கிருர். இது நடந்தது 1917. பின்னர், சிதம்பரம் பிள்ளை சிறை வாசம் முடித்து, வெளிவந்த பின், 1936இல், தொல்காப்பியப் பொருளதிகாரம் பின்னேழு இயல்களையும் இளம்பூரணர்

உரையோடு அச்சிட்டார். "இதனை வெளியிடுவதற்குக் கிடைத்த கடிதப் பிரதிகளில் ஒன்று காலம் சென்ற த. மு. சொர்ணம் பிள்ளையவர்களுக்குரியதாகும்; அவர்கள் பிரதி செய்யும் பொழுது உரையில் இல்லாத பல சொற்றொடர்களை இடையிடையே பெய்திருக்கிறார்கள் என்று பல காரணங்களால் ஊகிக்கக்கூடியதாயிருக்கிறது" என்பது சிதம்பரம் பிள்ளை குறிப்பு. எனவே, சொர்ணம் பிள்ளை 'இன்னிலைப் பாடல்' என்ற மேற்சொல்லிய (1-5) பாடல்களையும் தம்முடைய இளம்பூரணக் காகிதப் பிரதியில் சேர்த்து எழுதி வைத்திருந்தார். அதை ஆராய்ந்த போது உண்மையிலேயே அப்பாடல்கள் இன்னிலை என்ற ஒரு நூலுக்கு உரியன என்று கருதி, சிதம்பரம் பிள்ளை இன்னிலையை அச்சிட்டு அப்பாடல்கள் இளம்பூரணருரை மேற்கோள் என்றும் குறிப்பிட்டார்; பின்னால் இவரே இளம்பூரணம் அச்சிட்ட போது, அப்பாடல்கள் உரைக்கு உரியன அல்ல, அவை சொர்ணம் பிள்ளை கைச்சரக்கு என்று தெளிந்து, அவற்றைக் களைந்து இளம்பூரணம் பதிப்பித்தார் என்று நாம் அறிகிறோம். இதன் முடிவாவது, இன்னிலை முழுவதுமே சொர்ணம் பிள்ளையார் கைச்சரக்கு, இப்படியொரு நூல் முன்னமே யிருந்ததில்லை என்பது. பொய்கையார் என்ற ஆசிரியர் பெயரும், கடவுள் வாழ்த்துக்காகப் பாரதம் பாடிய பெருந்தேவனார் பெயரும், தொகுத்தார் என்று மதுரையாசிரியர் பெயரும், சொர்ணம் பிள்ளையால் கற்பனையாகவே சொல்லப்பட்டன. ஏமாந்து போய்த்தான் சிதம்பரம் பிள்ளை இதற்கு விரிவுரை எழுதி, ஆராய்ச்சி நிகழ்த்தி, ஆசிரியர் யாரென்று நிறுவி, நூலின் காலம் திருக்குறளுக்கு முற்பட்டது என்றும் தெரிவிக்கிறார். சொர்ணம் பிள்ளையின் திறமையை நாம் பெரிதும் பாராட்டவே செய்கிறோம்.

இன்னிலையின். சொல்லையும் பொருளையும் ஆராய்ந்து, எங்ஙனம் அது தமிழ் மரபுக்கே முரணுயுள்ளது என்றும்,

அது பதினெண்கீழ்க் கணக்கு நூலன்று என்றும் வையாபுரிப் பிள்ளை நன்கு நிறுவியுள்ளார்[1]. எனவே, அந்த நூல் இந்த இருபதாம் நூற்றூண்டின் தொடக்க ஆண்டுகளில் ஒருவர் புதிதாய்ப் புனைந்து பழமை போலத் தோன்றுமாறு செய்த வித்தையாகும். அதிலுள்ள இரண்டு பாடல்கள் மட்டும் பழம் பாடல்களானமையாலும், இளம்பூரணர் மேற்கோள் என்ற கால எல்லையாலும், அவ்வாராய்ச்சியை இங்கு எடுத்துக் கொண்டோம்.

---

1 திரிகடுகம் சிறுபஞ்ச மூலம் பழைய உரை. சென்னை பல்கலைக்கழகம் 1944, வையாபுரிப் பிள்ளை பதிப்பு முகவுரை பக்கம் 3-6.

பிற்சேர்க்கை 3.

## சோழ அரசர் பரம்பரை : 9 - 10 நூற்றாண்டுகள்

இந்நூலில் சொல்லப்பட்டுள்ள சோழ மன்னர் பற்றிய செய்திகளை நன்குணரும் பொருட்டு, தஞ்சையில் சோழர் பேரரசை நிறுவிய விசயாலய சோழன் முதல், பெரும் சக்கரவர்த்தியான முதலாம் இராசராசன் வரையிலுள்ள சோழ அரசர் பரம்பரையை ஓர் அட்டவணையாகத் தருகிறோம்.

1. பரகேசரி விசயாலய சோழன் 845 – 881
   - 2. இராசகேசரி ஆதித்த சோழன் 871 – 907
     - 3. பரகேசரி பராந்தக சோழன் I 907 – 953
       - ‡ இராசாதித்தன்
       - 4. இராசகேசரி கண்டராதித்தன் 950 – 957
         - 7. பரகேசரி உத்தம சோழன் 970 – 985
       - 5. பரகேசரி அரிஞ்சயன் 957
         - 6. இராசகேசரிபராந்தகன் II என்னும் சுந்தரச்சோழன் 957 – 970
           - ‡ பரகேசரி ஆதித்தகரிகாலன்
           - குந்தவை I
           - 8. இராசகேசரி இராசராசன் I 985 – 1014
             - 9. பரகேசரி இராசேந்திரன் I (கங்கைகொண்டசோழன்) 1012 – 1114
             - குந்தவை II
     - ‡ கன்னரதேவன்

1–9 எண்கள் ஆட்சி புரிந்த மன்னரைக் குறிப்பிடும். ‡ முடிசூடவில்லை.

# ஆதார நூல்கள்

**அத்தியாயம்** 1: பக்கம் 98. சீவக சிந்தாமணி மூலம், சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பு 1941.

2. பக்கம் 128. தொல்காப்பியம் புறத்திணை இயல் உரை, நச்சினார்க்கினியம், இளம்பூரணம். சித்தியார்பர பக்கம், ஞானப்பிரகாசர் உரை. நன்னூல் மயிலைநாதர் உரை.

3. பக்கம் 163. திருவள்ளுவ மாலை; பல பதிப்புக்கள்.

4. பக்கம் 207. இலக்கியமணி மாலை, வையாபுரிப் பிள்ளை 1954.

5. பக்கம் 234.

6. பக்கம் 284. தொல்காப்பியப் பொதுப்பாயிரம், உரை: சதாசிவ பண்டாரத்தார், 1923.

7. பதினோராந் திருமுறை, சுப்பராயச் செட்டியார் பதிப்பு 1868. ஆறுமுக நாவலர் பதிப்பு 1922. சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பு 1933, 1940, காசி மடத்துப் பதிப்பு 1963. சைவ சமய நெறி, ஆறுமுக நாவலர் பதிப்பு. திரு.வி.உலகநாத முதலியார் மணிவிழா மலர் 1941. பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பகுதி க.வெள்ளைவாரணனர் 1969.

8. பதினோராந் திருமுறை, ஷை. பதினெண்சித்தர் ஞானக் கோவை.

9. ஒன்பதாந் திருமுறை, சமாஜப் பதிப்பு; காசி மடத்து உரைப் பதிப்பு 1964. சைவ இலக்கிய வரலாறு, ஔவை. துரைசாமிப் பிள்ளை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1958.

10. குருபரம்பரைப் பிரபாவம்–ஆறுயிரப்படி, பின்பழகிய பெருமாள் ஜீயர் 1878. ஷெ பன்னீராயிரப்படி 1926.

11. யாப்பருங்கல விருத்தியுரை, பவானந்தம் பிள்ளை பதிப்பு 1917, 1929. நவநீதப் பாட்டியலுரை கலாக்ஷேத்திரப் பதிப்பு 1944 புறத்திரட்டு வையாபுரிப் பிள்ளைப் பதிப்பு 1936.

12. திரிசிராமலையந்தாதி, மு. இராகவையங்கார் பதிப்பு, தருமபுரம் 1953.

13. சினேந்திரமாலை, இரத்தின நாயகர் பதிப்பு. சாசன தமிழ்க்கவி சரிதம், மு. இராகவையங்கார் 1957.

# ஆசிரியர் பெயர் கால அட்டவணை

| ஆசிரியர் | நூல் | | காலம் | பக்கம் |
|---|---|---|---|---|
| அமிர்தபதியுடையார் | அமிர்தபதி | | 950 | 520 |
| ஆத்திரையன் பேராசிரியன் | தொல்காப்பியப் பொதுப்பாயிரம் உரை | | 950 | 287 |
| ஆளவந்தார் | வடமொழி நூல்கள் | | 918—1023 | 514 |
| ஈசுவரமுனி | தனியன் | மணக்கால் நம்பி முதலியோர் | 860— 950 | 513 |
| உபேந்திராசாரியர் | சினேந்திர மாலை | | 950 | 547 |
| உய்யக்கொண்டார் | தனியன் | மணக்கால் நம்பி | 826— 931 | 507 |
| கண்டராதித்தர் | தில்லைத் திருவிசைப்பா | திருவாலியமுதனார், வேணாட்டடிகள் | 950— 957 | 486 |
| கபிலர் | இரட்டைமணிமாலைகள், அந்தாதி | | 900— 925 | 349 |
| கல்லாடர் | திருக் கண்ணப்பர் திருமறம் | | 925— 950 | 351 |
| குண்டலகேசியாசிரியர் | | | 900— 950 | 101 |
| குருகை காவலப்பன் | தனியன் | ஆளவந்தார் | 850— 940 | 511 |
| சேந்தனார் | திருவிசைப்பா திருப்பல்லாண்டு | கண்டராதித்தர் | 920— 960 | 466 |
| திருக்கண்ணமங்கையாண்டான் | தனியன் | | 850— 930 | 513 |
| திருமாளிகைத் தேவர் | திருவிசைப்பா 4 பதிகம் | கண்டராதித்தர் | 940 | 450 |
| திருவாலியமுதனார் | ,, ,, | ,, | 950 | 499 |
| திரையக்காணமுடையார் | | | 950 | 552 |
| தேசிகமாலையுடையார் | | | 950 | 555 |

| | | | | |
|---|---|---|---|---|
| தோலாமொழித் தேவர் | சூளாமணி | கார்வெட்டியரையன் | 925— 950 | 37 |
| நக்கீரதேவ நாயனார் | பதினொராந் திருமுறைப் பிரபந்தங்கள் ஒன்பது | | 900— 925 | 298 |
| நாராயணன், வேம்பை | சிராமலையந்தாதி | | 950 | 529 |
| நாரதசரிதையுடையார் | — | — | 950 | 523 |
| நீலகண்டனார் | இறையனார் களவியலுரை எழுதிவைத்தவர் | | 950 | 237 |
| நீலகேசியுடையார் | நீலகேசி | — | 950—1000 | 111 |
| பட்டினத்தார் | | வரகுணன் II காலம் இறுதி | 900— 925 | 362 |
| *பரணதேவ நாயனார்* | சிவபெருமான் திருஅந்தாதி | | 900— 925 | 349 |
| பன்னிருபாட்டியல் தொகுத்தார் | | | 985—1000 | 214 |
| பிங்கல சரிதையுடையார் | | | 950 | 525 |
| பிங்கலர் | பிங்கல நிகண்டு | | 900— 925 | 175 |
| பிடவூர் வேளார் தந்தை | கோல நற்குழல் பதிகம் | *இராசராசன்* I | 995 | 558 |
| பெரும்பொருள் விளக்கம் | | | 950 | 129 |
| மணக்கால் நம்பி | *தனியன்* | | 850— 940 | 509 |
| மணக்குடவர் | திருக்குறள் உரை | | 950—1000 | 146 |
| வங்கிபுரத்தாய்ச்சி | திருப்பதிக்கோவை | — | 950 | 517 |
| வாமனசரிதையுடையார் | | | 950 | 525 |
| வேணாட்டடிகள் | திருவிசைப்பா | கண்டராதித்தர் | 950 | 495 |

# ஆசிரியர் கால ஒப்புமை அட்டவணை

| காலம் | இலக்கியம் இலக்கண உரை | சைவம் | வைணவம் | சைனம் பிற |
|---|---|---|---|---|
| 900 | பிங்கலர் | நக்கீர தேவர்<br>கபில தேவர்<br>பரண தேவர்<br>பட்டினத்தார் | உய்யக்கொண்டார்<br>மணக்கால் நம்பி<br>குருகைகாவலப்பன்<br>திருக்கண்ண மங்கையாண்டாள் | குண்டலகேசி |
| 925 | தோலா மொழித் தேவர் | கல்லாட தேவர் | ஈசுவரமுனி | அமிர்தபதி<br>நாரத சரிதை |
| | நீலகண்டனார் | திருமாளிகைத் தேவர் | | |
| 950 | ஆத்திரையன் பேராசிரியன் | கண்ட ராதித்தர் | வங்கிபுரத்தாய்ச்சி | வேம்பத்தூர் நாராயணன் |
| | | சேந்தனார் | | நீலகேசி |
| | பெரும்பொருள் விளக்க முடையார் | வேனாட்டடிகள்<br>திருவாலி யமுதனார் | | |
| | மணக்குடவர் | | | பிங்கல சரிதை<br>வாமன சரிதை |
| 975 | பன்னிரு பாட்டிய லுடையார் | | ஆளவந்தார் | உபேந்திராசாரியர்<br>திரையக் காணம்<br>தேசிக மாலை |
| 1000 | | | | பிடவூர் வேளார் தந்தை |

# சொல்லும் பொருளும்

# மேற்கோள் செய்யுள் அகராதி

# பொருள் அகராதி

# சிறப்புப் பெயர் அகராதி

---

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 35 | 6 | காப்பியம் என்று | காப்பியம் |
| 51 | 24 | கருகிறேமே | கருதுகிறேமே |
| 66 | 2 | பக்கம் ? | பக்கம் 64 |
| 102 | 8 | நீலநேசி | நீலகேசி |
| 104 | 18 | வேரிக்கழ்தார் | வேரிக்கமழ்தார் |
| 105 | 15 | மறிய | மறிப |
| 107 | 28 | பர்தரு | பர்த்ரு |
| 121 | 8 | நடந்தாள் | நடந்தான் |
| 123 | 13 | குறைவுகைகளை | குறைவுகளை |
| 125 | 24 | அந்தணண் | அந்தணன் |
| 169 | 25 | வளர்ச்சியை வளர்ச்சியை | வளர்ச்சியை |
| 173 | 21 | வளராலாயிற்று | வளரலாயிற்று |
| 177 | 23 | பரபு | மரபு |
| 178 | 3 | திவாகருடைய | திவாகரருடைய |
| 181 | 1 | இலக்கிகணம் | இலக்கணம் |
| 182 | 28 | சேதி | சோதி |
| 185 | 16 | ஏற்பட்டதல்லை | ஏற்பட்டதில்லை |
| | 30 | மாப்பெயர் | மரப்பெயர் |
| 187 | 17 | போதவகை | போகவகை |
| 210 | 23 | நூல்கன் | நூல்கள் |
| 246 | 5 | இரிஇ | இரீஇ |
| 283 | 6 | கராய்சின | காய்சின |

| | | | |
|---|---|---|---|
| 284 | 4 | செங்கந்தள் | செங்காந்தள் |
| 285 287 | 1 | ஆத்திரையின் | ஆத்திரையன் |
| 306 | 24 | நம்பித் | நம்பி |
| 307 | 5 | பாண்டியனென் | பாண்டியன் |
| 320 | கடைசி | ஐயறவொன் | ஐயுறவொன் |
| 345 | 6 | என | என்ற |
| 346 | 29 | அந்தாள் மடைத்து அடுத்தஞைபம் | அந்தார் மகுடத்து அடுத்த பைம் |
| 348 | 8 | படங்கள் | பாடங்கள் |
| 413 | 26 | திருத்திய | திருந்திய |
| 417 | கடைசி | முதலியன 418 | முதலியன |
| 471 | 1 | வைச | சைவ |
| 480 | 13 | செய்யுந் | செய்யுஞ் |
| | 19 | நம்பியாரரூரையும் | நம்பியாரூரரையும் |
| 519 | 5 | களப்பிரரால் | களப்பிரரால்[1] |
| | 14 | இளங்கோ[1] | இளங்கோ |
| 521 522 | 24 26 7 | யாசஸ்திலக | யசஸ்திலக |
| 529 | 5 | உரியதாாக | உரியதாக |
| 542 | 4 | இலக்கணங்களும் | இலக்கிய இலக்கணங்களும் |
| 554 | 30 | இன்றிவிவாத | இன்றில்லாத |
| 564 | 6 | தினகரற், | தினகரற்குச் |
| 578 | 26 | கூதன்ட்டமுடையான் | தன்கூட்டமுடையான் |
| 590 | 20 | அள்ளுரித் | அள்ளுறித் |



இலக்கிய வரலாற்று நூலில்
இலக்கிய இலக்கண ஆராய்ச்சி மட்டுமே
கொள்ள வேண்டும்,
சமய சாத்திரங்களை விலக்க வேண்டும்
என்று கருதுவோரும் உளர்.
சுருங்கிய ஆராய்ச்சிக்கு
இது ஒருகால் பொருந்துவதாகும்.
விரிந்த நூற்பரப்பைக் கருதும்போது,
எல்லா நூல்களையும்
கொள்ளவே வேண்டியிருக்கின்றது.
அன்றியும்,
தமிழ் இலக்கியத்திலும்,
இதுபோல்
வடமொழி இலக்கியத்திலும்,
சமய நூல், இலக்கிய நூல் என்ற பாகுபாடு
இருபதாம் நூற்றாண்டு வரை இல்லை;
எல்லாமே இலக்கியமாய்க்
கருதப்பெற்று வந்திருக்கின்றன.
ஆதலால்
இவ்வாராய்ச்சி நூலில்
இயன்றவரை
எல்லாமே கொள்ளப்பட்டுள்ளன.



The PARKAR